# விவேகபோதினி

ஓர் சிறந்த மாதாந்தத்
தமிழ்ப் பத்திரிகை





"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.

தொகுதி 3




1910-ம் ௵ ஜூலை௴—1911-ம் ௵ ஜூன்௴

*1910—11*

சென்னை
ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனியாரவர்களால்
"கார்டியன் அச்சுக்கூடத்தில்" பதிப்பிக்கப்பட்டது.



[விலை ரூபாய் 4

# அட்டவணை

## அடிக் குறிப்புகள்



## சித்திரப்படங்களின் அட்டவணை

# The "Viveka Bodhini"

## An Illustrated High Class Popular Tamil Monthly

**(Annual Subscription:—Inland Rs. 3—Foreign Rs. 4-8-0)**

**Has a large list of able & eminent contributors**

## PRESS & PUBLIC OPINIONS

**The Hon'ble Mr. P. S. Sivasawmy Aiyar, C.S.I., C.I.E., Member of the Executive Council, Madras:**—** The articles are written in an *easy, readable style* and deal with *a variety of interesting subjects.* Its usefulness and cheapness, will, I hope, commend it to the Tamil public and secure popularity.

**The Hon'ble Mr. T. V. Seshagiri Aiyar, B.A., B L.**—My daughters have been reading regularly copies of the Viveka Bodhini; they tell me that it is *one of the best Tamil Magazines they have come across.* The journal is written *in good Tamil* and *in easy style.*

**The late Dewan Bahadur R. Ragoonatha Row Avergal, C.S.I.** * * * It is written in *good easy Tamil* and deals with subjects of *importance and usefulness* to the general public.

**K. V. Subbaiya Aiyar, Esq., M.A., L.T. M.R.A.S., (Lond.) of the Presidency College Madras.**—I have very great pleasure in testifying to the *high literary excellence* of your *valuable* Journal. The articles in this Journal are all written in *very simple and idiomatic style and deal with a variety of highly interesting and instructive subjects and I know of no other Journal that is at once so cheap and so good as your Viveka Bodhini.*

**The late Rao Bahadur L. C. Williams Pillai Avergal, B.A., Retired Inspector of Schools.,** * * The "Viveka Bodhini," is a *very readable journal full of interesting matter written in chaste Tamil.* As a means of disseminating valuable information on various subjects among the masses, it deserves the liberal support of the educated public.

**Mr. Rao Bahadur C. Nagoji Rao, Avl., B A., Retired Inspector of Schools.** * * I have glanced through several numbers of the *Viveka Bodhini* and found them *interesting* and *instructive.*

**M. R. Rv. Rao Sahib T. Ramakrishna Pillai Avl., B.A., F. M.U., Chief Examiner in Tamil to the University, Madras.*** I have gone through some of the issues of *that excellent Magazine* the "Viveka Bodhini." I have much pleasure in adding my word of praise for the services rendered by the conductors. The articles are *well written.*

**M. S. H. Thompson, Esq., B.A., Assistant Inspector of Schools:**—* * I have looked through this *interesting magazine.* The Magazine is written in *simple,* but *good Tamil.*

**M. R. Ry. A. Rajaram Aiyar Avl., B.A., Principal, The Madura College, Madura:**—* * *The style, is stimple, chaste and elegant.* Students of College and High School classes who have to tackle the subject of **Vernacular Composition,** *ought to find the Viveka Bodhini of material assistance to them.*

சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதர்பிரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய வே. சாமிநாதய்யரவர்கள் :—*நீதிகளைக் கற்பிக்கும் சிறு கதைகளும், புதிய நாடகங்களும், சில மொழிபெயர்ப்புகளும், தற்காலத்திற்கேற்ற நாகரீக விஷயங்களும் இப்பத்திரிகையில் மிக எளியநடையில் எழுதப்பெற்றிருக்கின்றன; சிறுவர்களும் பெண்பாலரும் இதனால் பல விஷயங்களையும் வருத்தமின்றித் தெரிந்துகொள்ளலாம்.*

**M. R. Ry. I. Srinivasa Aiyar., Avl B.A., Principal, Hindu College, Tinnevelly.**—* * * Is a very interesting Journal containing readable articles *on a variety of useful subjects.* The *easy style* in which the articles are written must commend itself to a wide circle of readers.

**M. R. Ry. T. V. Sivakumara Sastrial Avl., B. A., L. T., Assistant Inspector of Schools:**—The articles *are very instructive and embrace a variety of useful topics.* You deserve to be specially complimented upon the *articles on scientific subjects* that you are making available to the general public.

**M. R. Ry. T. S. Subramania Aiyar Avl., M. A., L. T., Lecturer, Teachers' College, Saidapet.**— * * *Your journal is now the best, the cheapest and the most ably conducted Tamil mothly* in our midst. * *

**M. R. Ry S. V. Rangasawami Aiyangar Avl., B. A., Vice Principal, Zamorin's College, Calicut** * * * **Viveka Bodhini** is in my opinion the best of the Tamil Monthlies we have to-day. Other journals one may leave unread; but **Viveka Bodhini** I do think never.

---

## *சந்தாதார்க்கு அறிவிப்பு*

அச்சாபீஸ் மாறுதலால், நமது 'விவேக போதினி' ஆபீஸையும், திருவல்லிக்கேணிக்கே மாற்றி யிருக்கிறோம். பத்திரிகை, வழக்கம்போல குறித்த காலத்தில் வெளிவர வேண்டிய முயற்சி எடுத்துக்கொள்ளத் தவறோம். சந்தா நேயர்கள், இனி எழுதும் கடிதங்களையும், புஸ்தக ஆர்டர்களையும், மானேஜர், "விவேக போதினி" திருவல்லிக்கேணி, மதராஸ், என்று எழுதக் கோருகிறோம். சந்தாதார்களுக்கு புத்தகங்கள் குறைந்த விலைக்குக் கொடுப்பதுடன், ஆர்டர்கள் காலதாமதப்படாமல் அனுப்பவும் ஏற்பாடு செய்திருக்கிறோம்.

*மானேஜர்.*

# விவேக போதினி

“ எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.” —— திருவள்ளுவர்

தொகுதி V } பரீதாபி௵ ஆனிமீ ௳ 1912-௵ ஜூலைமீ { பகுதி 1.

## ஜீவன் முக்தன்
### THE LIVING DEADMAN

ஜீவன்முக்தன் ஒருவனையே விஷய ஸந்தர்ப்பங்களுக்கேற்ப பகவத்கீதையில் பலவாறு வர்ணிக்கப்பட்டிருக்கின்றது என்று தெரியவந்திருக்கும், இனி ஜீவன்முக்தர்கள் லக்ஷணத்தை நேரிட வர்ணிக்கும் சாஸ்திரங்களிலிருந்து எடுத்து வெளிப்படுத்துவோம்.

ஜீவன்முக்தி என்பது ஒருவித அனுபவம் ஜீவன்முக்தர் லக்ஷணம் என்பது இவ்வனுபவ முடையோர் நடத்தை என்பதாகும். ஆகவே இம்முடிவான அனுபவமுடையவர்கள் நடத்தை இவ்வாறிருக்கும் என்பது தெரியவரும். ஆனல் இங்குக் கூறப்படும் நடத்தை உடையவர்கள் ஜீவன்முக்தர்களாக விருக்கவேண்டும் என்று உறுதியாகக் கூறமுடியாது. புகையுள்ள விடத்தில் நெருப்புண்டாயினும் நெருப்புள்ளவிடத்தில் புகையுண்டு என்னலாமா? ஒருவனுக்கு ஜீவன்முக்தி நிலை வந்துவிட்டதா என்று பிறர் அறிய இந்த லக்ஷணங்களைக் கண்ட உடன் நெருங்கிக் கொஞ்ச காலம் பழகிப் பார்த்தால்தான் தெரியவரும். ஆகையால் இவைகள் வெளிக்குறிகள். இவைகளில் சிற்சில உட்குறிகளாகவும் இருக்கும். ஆனல் இவைகள் பிறர் அறிந்து உபயோகிக்கக்கூடியவைகள் அல்ல; ஒவ்வொருவனும் தானே ஆராய்ந்து திடப்படுத்திக் கொள்ள உபயோகப்படுத்தலாம்.

ஜீவன்முக்தர்கள் தாம் தெளியும் முன்னம் வழக்கமாயிருந்த தங்கள் வர்ணாச்ரம கர்மாதிகள் எவ்வளவு கடினமாயினும் பலருக்கு உபகாரமாகச் செய்தே வருவர். இவர்களுக்குக் காமமாதிகள் வந்தாலும் கணத்தில் போம்: மனதில் பற்ரு: தாமரை இலைத் தண்ணீர் போல ஜகத்தொடுங்கூடி வாழ்வார்: சாதாரண ஜனங்களைப்போலவும், பித்தர் போலவும் காண்பிப்பர். இவர்கள் வியவஹாரங்கள் இவர்கள் கர்மங்களுக்கு எற்ப அநேகவிதமாக விருக்கும். இவ்வாறு இருக்கையில் சென்றதும் கருதார், நாளை வருவதும் நினையார், கிடைத்ததைக்கொண்டு தேறியிருப்பர். எந்த அத்புதத்தைக் கண்டும் ஆச்சர்யம் என்ற நிலைக்கு ஈடுபடார். எல்லாவற்றிற்கும் மாரு ஸாக்ஷியாகவே எப்பொழுதும் நிரதிசய ஆனந்த நிலையிலிருப்பர். இம்மாதிரி கைவல்ய நவநீதம் என்ற நூலில் ஜீவன் முக்தர் வர்ணிக்கப்பட்டிருக்கிருர். ஜீவன்முக்தர் நடையுடை பாவனைகளைப் பட்டணத்துப் பிள்ளையார் பின்வருமாறு வர்ணிக்கிருர்.

பேய்போல் திரிந்து, பிணம்போல் கிடந்து,
பிச்சைஎல்லாம்
நாய்போல் அருந்தி, நரிபோ லுழன்று, நன்
மங்கையரைத்
தாய்போல் கருதி, தமர்போலனைவர்க்கும்,
தாழ்மைசொல்லிச்
சேய்போ லிருப்பர் கண்டீர் உண்மைஞானம்
தெளிந்தவரே.

ஜீவன்முக்தர்கள் பாலர், உன்மத்தர், பிசாசுகள் போல விருப்பார்கள் என்று உபநிஷத்துக்களில்,கூறப்பட்டிருக்கிறது. மனப்பரிசுத்தம், ஆச்சர்யாதி ப்ரமாத நிலைகளுக்கு இடங்கொடுக்கா திருத்தல் ஆகிய இவைகளில் பாலர்கள் போலவம்,தேஹ விஷயங்களில் ஒருவித அச்சாரத்தை வெளி விஷயங்கள் மத்தியில் இருக்குபோது வேறு எங்கேயோ மனப்போக்குடையவர்கள் போன்ற பார்வை இவைகளில் பித்தர்போலவும், விஷய ப்ரக்ஞையின்றி இடும் சப்தங்கள், கவனமில்லாததால் பயங்கரமான பொதுத்தோற்றம் ஆகிய இவைகளில் பிசாசுகள் போலவும் இருப்டர். ஆகவே இங்கு ஒருவன் ஜீவபாவம் நீங்கி நின்ருல் எவ்வாறிருப்பன் என்பது விளங்கும். மேலும் இவர்களைத் தவத்திலும், குணத்திலும், அருளிலும், அன்பிலும், இருளறு சொல்லிலும் காணமுடியும். அதை (பரம நிலையை) நினைத்தும் அதை உரைப்பதுமே ஞானிகளுக்கான நீதி. ஆனல் இக்குணங்களை மேற்கொண்டொழுகுபவரை ஜீவன்முக்தர்கள் என்று மேல் முகாந்திரங்களின்றி மதிக்க விடயில்லை. அநேக முகாந்திரத்தால் ஜீவன்முக்தர்கள் குணம் சில தாமஸ ஆத்மாக்களிடமும் காணப்படலாம். நெருங்கிப் பழகினல்தான் இது விளங்கும். பின்னர் ஜீவன்முக்தர் பாகுபாட்டை எடுத்து விளக்குவோம்.



விவேக போதினி

தொ 5.] பரீதாபிஸ ஆனிமீ [பகுதி 1

## விக்கிரஹ ரஹஸ்யம்

### THE INNER MEANING OF IMAGES

### 8. அனந்த கிருஷ்ணன்

கிருஷ்ணன் பால்ய ரூபமாக ஆராதிக்கப்படுவதோடும்கூட யௌவன புருஷனுகவும் ஆராதிக்கப்படுகிறுர். இந்த அவஸரத்தின் சிறப்புத் தோன்ற இந்த விக்கிரஹத்திற்கு அனந்த கிருஷ்ணன் என்று பெயரிட்டிருக்கிறோம். இந்த விக்கிரஹத்தை ஆராதிக்குங்கால் தேர்ந்த மனத்தில் ஊறும் ரஹஸ்யார்த்தங்களை ஒருவாறு வெளியிடுவோம்.

அனந்த கிருஷ்ணன் லீலைகளைக் கவனிக்குங்கால் அவைகள் வேதரஹஸ்யங்களையும் முடிவுகளையும் பூர்ணமாக அடக்கியுள்ளனவாக விருக்கும். இவைகள் ஐந்துவிதமாகக் காணப்படும். அவையாவன பரோபகார லீலைகள், கிருஹஸ்த லீலைகள், ஆசார்ய லீலைகள், ஈசுவர லீலைகள், அநதர்யாமி லீலைகள் ஆகிய இவைகளே. இவைகளுக்கு முறையே துஷ்டநிக்கிரஹ சிஷ்ட பரிபாலன விஷயங்கள், 16108-ஸ்திரீகளை விவாஹம் செய்துகொண்டு நித்ய ப்ரஹ்மசாரியாக விருத்தல், கீதாசார்யன் உத்தவர் குரு ஆகிய நிலமைகள், விச்வரூபம் காட்டுதல், திரௌபதீ மான ஸம்ரக்ஷணம், பாரதயுத்தம் நடத்திய விதம் முதலியவைகளே. இவைகள் சிறப்பையும் உட்கருத்தையும் விசாரிக்கப் புகுவோம்.

பரோபகார லீலைகளிலிருந்து பொதுவாகத் துஷ்டர்களும் நிர்கதியாக விடப்படவில்லை என்பது வெளிவரும். சிசுபாலன் கம்ஸன் முதலியோர் இறக்க வேண்டியது அவசியமாயினும் முடிவில் அவர்களும் மேலான பதவி பெற்றனர். ஆகவே பயம், துவேஷம் முதலிய எக்குணங்களாலாயினும் பரம்பொருள் ஞாபகம் ஒருவனுக்கு நிலைத்திருக்குமாயின் அவன் நிக்கிரஹத்தாலோ அனுக்கிரஹத்தாலோ பகவத் கிருபைக்கு ஆளாவான் என்பதாயிற்று. துஷ்ட நிக்கிரஹமும் ஒருவிதமான அனுக்கிரஹம் என்பதாகும். இதனல் சிஷ்டர்கள் நேரே பலனையும், துஷ்டர் நாளடைவில் சீர்திருத்தமாகிய பலனையும் அடைவார்கள். இந்த லீலைகள் விஷயம் பொதுவாகப் பால்ய லீலைகளில் உள்ள பரோபகார விஷயம் போன்றதே. அங்கு விளையாட்டாக இது நடந்துவிடும். இங்கோ தகுந்த ஆலோசனையோடு அவை ஸாவதானமாக நடைபெறும். இதில்தான் சற்று வேற்றுமை காணப்படுவது.

கிருஹஸ்தலீலைகள் சற்றேறக்குறைய பகவான் நிலையிலிருந்து பார்க்கையில் கோபிகைகளுடன் நடந்த ஜாரலீலை போலவிருக்கும். கோபிகைகளைப்போலவே இங்கும் 16108 ஸ்திரீகளும் பகவத் பக்தர்களே. இவர்கள் பகவானைப் புருஷனுகவே கொண்டு பத்தினிகளாகித் திருப்தி பெற்றனர். கோபிகைகளோ முதலில் பகவான் தமக்குப் புருஷனுக வேண்டுமென்று மதித்தபோதிலும் முடிவில் இந்த சிற்றின்ப ஆசை மோக்ஷ ஆசையாக மாறி பிரிவால் திடப்பட்டு நேரே பரமபத ஸாதனமாகி விட்டது. அவர்கள் சற்றேறக்குறைய ஸந்யாஸிகளையும், இவர்கள் கிருஹஸ்த பக்தர்களையும் உணர்த்துகின்றனர். இவர்களுள் 8 பெயர்கள் பட்டமஹிஷிகள் : பகவானது அஷ்ட ஐசுவர்யங்களை உணர்த்துகின்றனர். மிகுந்த 16100 ஸ்திரீகளும் நரகாஸுரன் சிறையிலடைபட்டு வருந்தியவர்கள். பூமிக்கும் தமக்கும் பிறந்து கொடியவனுகி வளர்ந்த நரகாஸுரனைக் கொன்று, இந்த ஸ்திரீகளை அவர்கள் கருத்துக்கிணங்கி விவாஹம் செய்துகொண்டார் பகவான். பிரபஞ்ச விஷயமாக ஏற்படும் ஆசையால் கட்டுண்டு பகவத் பக்தியைக் கடைப்பிடித்தும் கஷ்ட நிலையிலிருந்து பின்னர் ஆசைக்கட்டுவிட்டு பகவத் பராதீனர்களாகி சாந்தி யடையும் பெரியோர்களை இங்கு ஸ்திரீகளாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. நாரதர் சென்று ஒவ்வொரு ஸ்திரீ வீட்டிலும் பார்க்கையில், அந்தந்த ஸமயங்களில் கிரஹஸ்தன் நடத்த வேண்டியவைகளை ஒருவிதப் பற்றுமின்றிப் பகவான் செய்துகொண்டிருந்ததாகப் பாகவதம் கூறும். இதனுலேயே பரமஞானிகளிடம் ஒருவித ஏற்றத் தாழ்வு

மின்றிப் பரமாத்மா எல்லோரோடும் கலந்துநின்று அங்கங்கு அவரவர்கள் நன்மைக்கு வேண்டியவைகளைச் செய்து தாம் தாக்கற்று நிற்கிறார் என்று விளங்கும். இம்மாதிரி பகவான் இருக்கிறார் என்பது தேர்ந்த ஞானிகளுக்குத்தான் விளங்கும் என்பதை நாரதர் பார்வைக்கு இது வெளிப்பட்டது என்பது விளக்கும். குசேலருக்கு இவர் செய்த மரியாதையே இதற்கு உதாரணம். இந்த லீலையிலும் கோபி லீலையிலும் பகவான் ஸ்திரீகள் மத்தியில் தாக்கற்று நின்று செய்ய வேண்டியவைகளை எவ்வாறு தயங்காது செய்து முடித்தாரோ அவ்வாறு ஒவ்வொரு கிருஹஸ்தனும் தன் பெண்சாதி விஷயத்தில் இருந்துவிட்டால், அதுவே 'நான் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி' என்ற விருத்தியை வளர்த்து மேலான பதவி வரும்படி செய்யும். இவ்வாறின்றிப்பகவான் அநேக ஸ்திரீகளோடு இருந்தாரே என்று எண்ணி, அவருடைய நித்திய பிரஹ்மசரியமாகிய பற்றற்ற நிலையில் தன் பெண்சாதியோடுகூட இருக்கமுடியாத இக்காலத்திய மேதாவிகள் வெறும் சிற்றின்ப ஆசையால் ஸம்ஸார பாரம் உறைக்காமல் ஸுகம் மாத்திரம் கிடைக்கப் பிறர் ஸ்திரீகள், வேசையர்கள் முதலியவர்கள் மேல் துர்ஆசைகொண்டு கெட்டலைகின்றனர். இவர் தமது நிலையை வேதாந்த பரமாகவும், கிருஷ்ணன் நடத்தை மூலமாகவும், தகுந்த நடை என்று வற்புறுத்தி மதிமோசம் போகின்றனர். முற்கூறியவைகளிலிருந்து இவர்களுக்குத் துர் நடத்தையால் ஏற்படக்கூடிய பாபமும், தெய்வமிகழ்வதால் உண்டாகும் பெரும் பாவமும் ஒன்று சேர்ந்துவந்து இவர்களை அதோகதியை அடையும்படி செய்துவிடும் என்பது நன்கு வெளியாகும். ஆதலால் இந்தக் கிருஹஸ்த லீலையிலிருந்து ஒருவித ஆசையோடு தம்மிடம் வரும் பக்தர்களுக்குப் பகவான் தம் நிலைவழுவாது அந்த ஆசையைப் பூர்த்திசெய்து மேன்மை அடையும்படி செய்வர் என்பது தெரியவரும்.

இனி ஆசார்ய லீலைகளை எடுத்துக்கொள்வோம் மூன்று அவஸரத்தில் பகவான் இம்மாதிரி லீலைகளை நடத்தியிருக்கிறார். அவையாவன: பகவத் கீதை உபதேசம், அநுகீதை உபதேசம், உத்தவர் உபதேசம் ஆகிய இவைகளே. இம்மாதிரி அவஸரங்களின் உட்கருத்தைப் பகவானே அர்ச்சுனனுக்கு உத்தர கீதையில் நன்கு வெளியிடுகிறார். இந்த உத்தர கீதையில் மூன்று பாகம் உண்டு. அவையாவன: ப்ராஹ்மணர் உபதேசம், ப்ராஹ்மண ஸ்திரீ புருஷ ஸம்வாதம், குருசிஷ்ய ஸம்வாதம் ஆகிய இவைகளே. இவைகளுள் தாம் துவாரகையிலிருக்குங்கால் முன்பாகம் நடந்தது என்ன, அர்ச்சுனன் ப்ராஹ்மண ஸ்திரீபுருஷர்கள், குருசிஷ்யர்கள் எங்குள்ளவர்கள் என்று கேட்டான். இதற்கு விடையாகப் பகவான், 'புருஷன், குரு ஆகிய இவர்கள் நானே, ஸ்திரீசிஷ்யன் ஆகிய இவர்கள் என் மனதே' என்று கூறி தமது ஆசார்ய நிலையின் ரஹஸ்யத்தை வெளியிடுகிறார். ஆகவே ஒவ்வொரு மனிதனுள்ளும் புத்தியில் பிரகாசிக்கும் பரம்பொருளையே ஆசார்ய லீலை செய்யும் கிருஷ்ணனாகவும், ஒவ்வொருவரது வைராக்கியம் நிறைந்த மனமே அர்ச்சுனன் உத்தவராகிய சிஷ்யர்கள் என்றும் இதிலிருந்து வெளிவருகின்றது. ஆகவே தமது ஆசார்ய லீலைகள் மூலமாக ஒவ்வொருவனுள்ளும் புத்தி மனத்திற்கு உபதேசம் செய்ய அவனவன் ஜீவன்முக்தி நிலையை அடையும் அருமையான வழி குறிக்கப்படுகின்றது. இந்த ரஹஸ்யத்தை விஸ்தாரமாக வெளிப்படுத்தும் கடஉபநிஷத் வாக்கியம் ஒன்று உண்டு. 'ஜீவனே (மனமே) ரதிகன், தேஹமே ரதம், புத்தியே ஸாரதி, விருத்திகளே கடிவாளங்கள், இந்திரியங்களே குதிரைகள், விஷயங்களே பாதைகள், என்பதுதான் இந்த வாக்கியம். இதன்படி நோக்கில் மற்றைய ஆசார்யலீலைகள் எல்லாவற்றின் உட்பொருள் விளங்கியபோதிலும், கீதாசார்ய லீலையின் உட்பொருளுக்கு இது மிகப் பொருத்தமாக உள்ளது. இங்குதான் ஆசாரியன் ஸாரதியாகவும் சிஷ்யன் ரதிகனாகவும் அமைந்திருப்பது. உபதேசம் செய்யும் இடம் குருக்ஷேத்திரபூமி, அதாவது உண்டாகப்படும் இடம், அதாவது மனத்தின் காரியமான பிரபஞ்சம். இது முதலில் ஸுககரமாகத் தோன்றியபோதிலும் விசாரணையால் துக்ககரமாகத் தோன்றும். குருக்ஷேத்திரம் யுத்தபூமியாகுங்கால் அதில்உபதேசம் தொடங்குகின்றது என்பதுவிசாரணையால் பிரபஞ்சம் துக்கபூர்ணம் என்று காணுங்கால்தான் புத்தி தெளிந்து மனதிற்கு உபதேசம் செய்யத் தொடங்குவது என்ற கருத்தை அடக்கியுள்ளது. இப்பொருத்தங்களை உற்றுநோக்கில் முன் எடுத்துக் காட்டிய கட உபநிஷத் வாக்கியத்தை உருவகப்படுத்தி நன்கு விளக்கவே பகவான் கீதாசார்ய லீலையை விளையாடிக் காட்டி

னரோ என்று எண்ணவேண்டி வருகிறது. ஆகவே இந்த ஆசார்ய லீலைகளை நன்கு உணர்ந்து ஒவ்வொருவனும் தன்னுள் ஆசார்யன் உதிக்க வேண்டிய முயற்சிகள் செய்யவேண்டுவதுதான் பகவானைப் பார்த்தஸாரதிரூபமாக ஆராதிப்பதன் நோக்கம் என்பது வெளியாகும். இந்த ஆசார்ய உதயமாகிவிட்டால் பின்னர் :—

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே!

என்று கூறப்படும் பரமநிலைதானே கைகூடிவிட யுத்தபூமிக்கு நிகரான பிரபஞ்சத்தில் தாக்கற்று நிற்றலாகிய ஜயம் வந்து தானே நம்மைச் சேரும்.

ஈச்வர லீலைகளில்தான் கிருஷ்ணன் தாமே ஸர்வசக்திமானான ஈச்வரன் என்று நேரிட பக்தர்களுக்குக் காட்டுவது. இவைகள் மூன்று அவஸரத்தில் காட்டப்பட்டன. முதலாவது துர்யோதனனிடம் தூது நடந்த காலத்தில் பகவானை அவன் கட்டிப்பிடித்துச் சிறையிலிட சதியாலோசனை செய்து ஸபையில் கட்டிவிடத் தொடங்க அங்கு விச்வரூபத்தைக் காட்டினார். இரண்டாவது பகவத்கீதோபதேசத்தின் அங்கமாக அர்ச்சுனனுக்குத் திவ்யப்பார்வைகொடுத்து (11-ம் அத்யாயத்தில்) தமது விச்வரூபம் காட்டி வேதரஹஸ்யம் வெளியிட்டார். மூன்றாவது பாரத யுத்தம்முடிந்தபின் தர்மபுத்திரர் அச்வமேதயாகத்திற்கு முன்னர் பகவான் அனுகீதை உபதேசம் செய்து துவாரகை நோக்கித் திரும்புகையில் எதிர்ப்பட்ட உத்தங்கர் கோபத்தை மாற்ற விச்வரூபம் காட்டினார். இவைகளால் தம்மிடமேபிரபஞ்சம் எல்லாம் அடங்கியிருக்கிறது, தாமே ஸர்வேச்வரன் என்பதை பகவான்வெளியிட்டார். இப்படிச் செய்தும் பீஷ்மார்ச்சுனாதிகள் தெளிந்தனரே ஒழிய துர்யோதனாதிகளுக்கு இது பெரும் ஜாலமாகத் தோன்றிவிட சீர்திருந்த இடமில்லாமல் போய்விட்டது. ஆகவே மூர்க்கனைப் பகவானே நேரிட வந்தாலும் திருத்த முடியாது அவன் பகவத்தண்டனை மூலமாகவே தெளிய வேண்டும் என்பதை இல்லீலைகள் குறிக்கும். மேலும் பகவான் வாய்திறந்து ஸகல அண்டங்களையும் உள்ளே காட்டி யசோதையைப் பிரமிக்கும்படி செய்த இரண்டு பால்ய லீலைகளையும் இந்தப் பாகத்தோடு சேர்க்கலாம்

இனி கடைசியான அந்தர்யாமி லீலைகளை எடுத்துக் கொள்ளுவோம். பிரபஞ்சத்துள் எங்கும் மறைந்து நின்று பகவான் தம் ஸந்நிதான விசேஷத்தால் எல்லாவற்றையும் சேஷ்டிக்கும்படி செய்கிறார் என்ற ரஹஸ்யம் இவைகளிலிருந்து நன்கு வெளியாகும். துச்சாஸன் ஸபைநடுவில் புடவையைப் பிடித்திழுக்கத் தன்னால் கூடியவரையில் தடுத்து முடியாமல் இரு கைகளையும் சிரமேல் தூக்கி 'ஹா கிருஷ்ணா! த்வாரகாவாஸா!! எல்லாம் உன்செயல்! என்னால் ஆவதொன்றுமில்லை! நீயே கதி'!! என்று கதறிய திரௌபதிக்கு மறைந்து நின்று எண்ணரும் புடவைகள் அளித்து மான ஸம்ரக்ஷணம் செய்த பகவான் லீலையும்; அகாலத்தில் விருந்தாக வந்த துர்வாஸர் அவர் சிஷ்யர்கள் எல்லோருக்கும் பூரண திருப்திவரும்படி ஒரு கீரையையும் பருக்கையையும் தீர்த்தத்துடன் உட்கொண்ட லீலையும்; தம் ஸந்நிதான மாத்திரத்தில் பாரத யுத்தம் நடக்கும்படி செய்து வைத்த லீலையும் நேரிட அரசனாக விராது ராஜ்யம் நடத்திய லீலையுமே, இந்தமாதிரி லீலைகளுக்கு உதாரணம். இங்கெல்லாம் பகவான் தோன்றாமலாவது அல்லது வெறும் ஸந்நிதான மாத்திரமாகவாவது இருப்பார். இவைகளை உற்று நோக்குங்கால் பிரபஞ்சம் முழுவதும் பிறந்து நடைபெற்று அழிவதும், இடையில் ஜீவர்கள் மொத்துண்டு திருந்தி விருத்தியடைவதும் ஆகிய இவைகள் கடவுள் முன்னிலையில் காந்தச்சிலைமுன் சேஷ்டிக்கும் ஊசிகள் ஆட்டம்போல நடைபெறுகின்றன என்ற விரிந்த எண்ணம் யாருக்குத்தான் வாராது ?

ஆகவே அனந்த கிருஷ்ண ஆராதனத்தில் இவ்வைந்துவித லீலைகள் மனத்திலூறிக்கொண்டே இருத்தல் வேண்டும். வேதாகமங்களில் காட்டியபடி கடவுள் லக்ஷணங்கள் முற்றிலும் அமைந்து கிடக்கும் வஸ்துவைப் புருஷனாகஆராதிக்க வேண்டுமாகில் கிருஷ்ணன் ஒருவனையே பின்பற்றல் வேண்டும். மணியுள் கயிறுபோலத் துவந்துவங்களும் மாறுபாடுகளும் நிறைந்த பிரபஞ்சத்துள் ஊடுருவிச் செல்லும் பரம்பொருளை ஒருவாறு தியானத்திற்குக் கொண்டுவந்து ஆராதிக்கவேண்டுமாகில் கிருஷ்ண ஆராதனத்தால்தான் செய்ய முடியும். இதுபற்றியே ஒரு மஹான் கிருஷ்ண பரமாத்மாவிடம் பின்வருமாறு ஈடுபடுகிறார். 'பிரபஞ்சமாகிய நாடகத்திலிருக்கும் வெளிப்படையான விரோதாம்சங்கள், தோஷங்கள், முதலியவற்றையும் விடாது

நடித்து யாரும் மறவாத வண்ணம் காட்டி, அவைகளின் உள்ளே தாமே கபட நாடக ஸூத்ரதாரியாக விருப்பதை வெளிப்படுத்தியவராயும், தாமே தஸ்கராணும்பதி (கள்வர் தலைவன்) ஆக இருப்பவராயும், பிரேமை கருணை முதலியவைகளுக்கு நிலையமாக விருந்தபோதிலும் தாமே ஸகல விரோதம் சண்டை முதலியவைகளுக்கு இவ்வாறு காரணமாக இருப்பது என்பதை வெளியிடுபவராயும், ஸகல வேதார்த்தங்களையும் வெளிப்படுத்தும் திறனுடையவராயும், ஸகல ஸ்திரீகளும் மிகுந்த ஆனந்தத்துடன் கூறத் தக்கதாக உள்ள பால்ய லீலைகளை உடைய அற்புதக் குழந்தையாயும், உபநிஷத்துக்கள் வெளியிடும் அற்புத விஷயங்களைத் தெரிவிக்கும் சேஷ்டைகளைக் கோபிகள், ராதை முதலியவர்களோடு செய்த அத்புத புருஷனுயும், உலகத்தையே நிலை நிறுத்தும்படியான சட்டங்களை வெளிப்படுத்திய அமைச்சராயும், ஸந்நிதான மாத்திரத்தில் எல்லா விஷயங்களையும் நியாயப்படி நடக்கும்படி செய்யும் அத்புத வீரராயும், உலகத்தில் உள்ள ஸகல வேதங்களது ஸாரத்தையும் சுருக்கமாகக் கொஞ்ச நாழிகையில் எடுத்துரைத்த பரம குருவாகியும், 16008 ஸ்திரீகளோடு கூடியிருக்கும் நித்ய ப்ருஹ்மசாரியாயும், நாரதரை ஒரு நொடியில் மாயையில் கட்டுப்பட்டுத் தவிக்கும்படி செய்த சூதான ஸ்நேஹிதராயும், ஸதா வேணுகானம், நடனம், விளையாட்டு ஆகிய இவைகளையே நிச்சிந்தையாகச் செய்துகொண்டிருக்கும் கோபாலனுயும், கற்பனாரஸம் ஸம்பவ விசித்திரம், ஆழ்ந்த உட்கருத்து ஆகிய இவைகள் விஷயத்தில் தனக்குத் தானே நிகர் என்று சொல்லும்படியான திவ்யசரித்திரத்தை உடையவராயும், பூர்ணவதாரமாயும் உள்ள கிருஷ்ண பரமாத்மாவைக் கடவுளெனக் கருதித் துதிக்காதிருப்பவரும் உண்டோ?' என்று வியந்து கூறியிருக்கிறார் அம்மஹான். இக்கருத்தை உள்ளடக்கியே வாஸுதேவ சப்தத்திற்கு அமிருதபிந்து உபநிஷத்தில் பின்வரும் பொருள் குறிப்பாகக் கூறப்படுகின்றது.

सर्वभूताधिवासंयद् भूतेषु च वसत्यपि ।
सर्वानुग्रहकत्वेन तदस्म्यहं वासुदेवः ॥

அதாவது 'எல்லா பூதங்களுக்கும் வாஸவிடமாகி அவைகளில் வஸித்துக்கொண்டு எல்லாவற்றையும் காக்கும் வாஸுதேவன் எவனே அவனே நான்' என்பதாயிற்று. ஆதலால்தான் 'பல பிறவியின் முடிவில் ஞானி 'எல்லாம் வாஸுதேவனென்று என்னை அடைகிறான். அவன் கிடைப்பது மிக அருமை' என்று பகவான் கீதையில் கூறுகிறார். இவ்வளவு சிறப்பான அனந்த கிருஷ்ண விக்கிரஹத்தை முற்கூறிய உட்கருத்துகளுடன் பொருத்தி சுத்த மனதுடன் ஆராதித்தால் நம்முள் கிருஷ்ண பரமாத்மா உதிக்க, அவரொடு இரண்டறக் கலக்கும் நிலையாகிய பரம்பதம் கைகூடிவிடும் என்பது கூறாமலே விளங்க இடமுண்டு.

---

ஒரு ஸமயம் ப்ராஹ்மண ஸமாஜச் சிறுவர்கள் சிலர் என்னிடம் வந்து, "நாங்கள் ஜனக மஹாராஜாவைப் போல் பற்றின்றி நரி உலக வாழ்க்கையில் இருக்கின்றோம்" என்றார்கள். அதற்கு நான், அப்படிச் சொல்வது சுலபமே. செய்வதுதான் கஷ்டம், என்றேன். ஜனக மஹாராஜனைப்போல் இல்லறத்திலேயே இருந்துகொண்டு களங்கமுறாதிருத்தல் வெகு கடினமே. அத்தகைய ஜனகனும் ஆதியில் என்னென்ன கடுந்தவங்கள் புரியவில்லை! ஆகையால் நீங்களும் அத்துணைக் கஷ்டங்களைப் படவேண்டுமென்று நான் சொல்லவரவில்லை ஆனால் நீங்கள் சொற்ப ஸாதனத்தினாலாவது பழகி, சில காலமாவது சாந்தமான பிரதேசத்திலே, ஏகாந்தமாயிருக்கவேண்டும், ஞானம் பக்தி எனும் செல்வங்களைப் பெற்ற பிறகு ஜெகத்திற் பிரவேசியுங்கள். பாலையசைவற் றமைதியாயிருக்கும்படி விட்டு விட்டால் நல்ல தயிர் உண்டாகின்றது. பாண்டத்தை அசைக்கவாவது மாற்றவாவது செய்தால் தயிர் கெட்டுப்போகின்றது. ஜனங்கள் பற்றற்றிருந்தமையால் விதேஹன் (தேஹமற்றவன்) என்று பேர் பெற்று இத்தேகத்தை வைத்துக்கொண்டே வீடு பெற்றதினால் ஜீவன் முக்தனுய் வாழ்ந்தான். தேக புத்தியை யொழிப்பது மஹா கஷ்டம். உண்மையாகவே அவன் ஒரு மஹா வீரன் அவன் ஞானம், கர்மமென்னும் இருவகைக் கத்திகளையும் வெகு லாகவமாய்க் கையாடினன்.

ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்ஸர்

## ஸ்ரீமான் பொ. பாண்டித்துரைத்தேவர் அவர்கள் சரித்திரம்

## PANDITHURAI THEVER (A LIFE SKETCH)

அமிழ்தினும் இனிய நம் தமிழ்மொழியான து ஆதரிப்போரின்றித் தளர்ச்சி யடைந்திருக்கும் இக்காலத்தில், அதன் வளர்ச்சியையே பெரு நோக்கமாகக் கொண்டு, அவ்வளர்ச்சிக் கேற்ற முயற்சி செய்வதில் கண்ணுங் கருத்துமாய் இருந்துவரும் தமிழ்ப் பாஷாபிமானிகள் மிகச் சிலரேயாகும். அவர்களுக்கெல்லாம் முதல்வராவார் சென்ற பத்து வருஷங்களாக மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் அக்கிராசனாதிபதியாய் விளங்கி இப்போது காலஞ்சென்ற ஸ்ரீமாந் பொ. பாண்டித் துரைத் தேவர் அவர்கள் என்பது தமிழுலகம் முழுதும் அறிந்த விஷயம். அவரது பிரிவாற்ருது நூற்றுக்கணக்கான தமிழ்ப்புலவர்கள் உள்ள முடைந்து, மிக உருக்கமுறப் பாடியுள்ள ஆயிரக்கணக்கான இரங்கற் பாக்களே (சாமகவிகள்) அவரது புலமைக்கும் பெருமைக்கும் போதிய அறிகுறியாகும். இப்பெரியாரைப்பற்றிய விவரங்களை 'நம் போதினி' நேசர்கள் படித்தறிந்து தமிழபிமான முள்ளவர்கள் ஆதல் வேண்டி, சற்று விரிவாக அவரது வாழ்க்கைச் சரிதத்தைக் கீழே தருகின்ருேம்.

நம் தேவரவர்கள் செந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே, இராமநாதபுரம் என்னும் "பொன்னுடர் தொழுஞ்சேது நன்னுடு புரந்தளிக்கப் போந்த"* சேதுபதிகளது மரபிலே தோன்றியவர். சேதுபதிகள் பரம்பரையாகவே தமிழ்ப்புலவர்களுக்குப் பெரும் பொருளுதவி, அவர்களை யாதரித்து வந்த பெருந்தகை யாளர்கள்.

இச்சேதுபதிகள் வம்சத்திலே, இப்போது அரசாண்டு வரும் ஸ்ரீமான் இராஜேச சேதுபதியவர்களுக்குப் பாட்டனருடைய ஆட்சியில், அவரது சகோதரரும், அறிவு, ஆற்றல் முதலிய வற்றிற் சிறந்தவரும் ஆகிய பொன்னுசாமித்தேவர் என்பவர் இராமநாதபுரம் ஜமீன் மானேஜராயிருந்து வந்தார். இவர்கள்தாம், நம் பாண்டித்துரைத் தேவரவர்களது தந்தையார். இவர்களது மேற்பார்வையில் இராமநாதபுரம் ஜமீன் மிகச் சிறப்புற்றுச் செழித்தோங்கியது. இவர்கள் இராமநாதபுரம் சமஸ்தானத்துக்குச் செய்த நன்மைகளுக்குக் கைம்மாருகப் பாலவனத்தம் என்னும் பட்டணம் இவர்களுக்குப் பரிசாக அளிக்கப்பெற்றது. அதுமுதல் இவர்கள் பாலவனத்தம் ஜமீன்தார் ஆயினர். இன்னும், இவர் உலகியலை நன்கு அறிந்திருந்ததுடன் எடுத்த கருமத்திற்கு எவ்வளவு இடையூறு வரினும், மனந்தளராது முயன்று, அதனை இனிது முடிக்கும் ஆற்றல் வாய்ந்திருந்தனர். அதுபற்றியன்ருே இவர் அக்காலத்து மதுரை ஜில்லா போர்டுக்கு உப அக்கிராசனாதிபதியாய் இருந்து மதுரை ஜில்லா முழுவதற்கும் பல நன்மைகளைச் செய்தனர்.

பொன்னுசாமித்தேவர் அவர்களது, காரிய நிருவாக சக்தி இவ்வளவு சிறப்புடையதெனினும், அவர்களுடைய தமிழ்ப்புலமையும், தமிழபிமானமும், இதனினும் பலமடங்கு ஏற்றம் வாய்ந்தன. இவர் திருக்குறள் (பரிமேலழகருரையுடன்), திருக்கோவையார்,(பேராசியருரையுடன்) தர்க்கசங்கிரகம், அன்னம்பட்டீயம், சேதுபுராணம் முதலிய நூல்களை, யாழ்ப்பாணத்து நல்லூர் மஹாவித்வான் ஆறுமுக நாவலர் அவர்களைக் கொண்டு, முதல் முதல் அச்சிற் பதிப்பித்தனர். அன்றியும், பற்பல சந்தர்ப்பங்களிற் பற்பல புலவர்கள் பாடிய தனிப்பாடல்களை ஒருங்கு திரட்டிச் சந்திரசேகர கவிராஜ பண்டிதர் அவர்கள் உதவியால் 'தனிப்பாடற்றிரட்டு' என்னும் அரிய நூலை வெளியிட்டனர். மற்றும் இலக்கியம், இலக்கணம், சங்கீதம் முதலியவற்றில் தேர்ச்சியுள்ள பண்டிதர்களுக்கு மிக்க பொருளுதவி செய்தும் தமிழ் மொழியை ஆதரித்து வந்த அருங்குணமுள்ளவர்; திருவாவடுதுறை யாதீனத்து மஹாவித்வான் திரிசிரபுரம் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையவர்கள், இவர்களது வள்ளன்மை (பெருங்கொடை) யைக் குறித்து வியந்து,

"இலனென்னு மெவ்வ மெனுந்திருக் குறட்குப்
பலர்பல விதமாப் பகர்ந்தபே ருரையுள்
இரப்பவன் இரக்கப் படுவோ னுகச்
சுரக்குங் கொடையே சொல்லின் முதற்ருல்;
அக்கொடை யிவன்பால் அமைந்த தியல்பென்
றெக்கொடை வள்ளலும் இயம்பப் பொலிவோன்"

எனப் பாடியிருப்பதனல், இவரது உதார குணம் எத்தன்மையது என்பது எல்லார்க்கும் எளிதில் இனிது விளங்கும்.

* இம்மேற்கோள் ஸ்ரீமான் பாண்டித்துரைத்தேவரவர்கள், ஸ்ரீமான் பாஸ்கர சேதுபதியவர்கள்மீது பாடிய சாமகவிகளொன்றனில் கண்டது.



மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைவர் ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவர்.

இத்தகைய செல்வச்சிறப்பும், கல்விச்சிறப்பும் வாய்ந்த பொன்னுசாமித்தேவர்கட்குச், சற்றேறக்குறைய நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன், தமிழுலகம் மேனுளிற் செய்தவத்தின் விளைவாய், நம் பாண்டித்துரைத்தேவர் அவர்கள் மூன்றும் புதல்வராகப் பிறந்தனர். குழந்தைப் பருவந்தொட்டே, நம் தேவரவர்கள் தமது (மறவர்) குலத்துக்குரிய, வன்மை முதலிய 'மற'க் குணங்கள் அமையப்பெருது, அன்பு அமைதி, பொறுமை முதலிய 'சாத்விக' குணங்களே உடையவராய் விளங்கி வந்தனர். தந்தையாரது வீரம், காரிய நிருவாக சக்தி இவற்றைப் பெரும்பாலும், முறையே இவர் அண்ணன்மாரிருவரும் கொள்ள, அவரது சாத்விக குணங்களை நம் தேவரவர்கள் கொண்டனர் என இம்மூன்று சகோதரர்களுடனும் நன்கு பழகியுள்ளவர்கள் கூறுவது வழக்கம்.

நம் தேவரது இளம் பிராயத்திலேயே, தந்தை பொன்னுசாமித்தேவர் சிவலோகம் சேர்ந்தனரேனும், இளமைந்தர் தம் கல்விக்குரிய ஏற்பாடு ஒன்றும் குறைவு பெருது நடந்து வந்தது. தேவரவர்களும் இயற்கையிலேயே நுண்ணுணர் உடையாதலோடு * "செவி வாயாக நெஞ்சு களனுக, கேட்டவை விடாதுளத் தமைத்து" வந்ததனல் விரைவில்சிறந்த கல்விமானுய் விளங்கினுர். இவர்க்குத் தமிழ் பயிற்றிய ஆசிரியர் அஷ்டாவதானம் முத்துசாமி ஐயங்கார் ஆவர். நம் தேவரவர்கள் சைவசித்தாந்த சாஸ்திரத்திலுள்ள நுணுக்கங்கள் பலவற்றையும், சைவசமய நூற் புலமையிற் கைவந்தவரும், மிக்க நுண்ணறிவாளரும் ஆகிய திருவாவடுதுறை யாதீனத்துப் பழநி குமாரசாமித் தம்பிரானவர்களிடம கற்றுத் தேர்ந்தனர்.

இளம் பிராயத்திலேயே இவரது தமிழ்ப் படிப்பு மிகச் சிறந்திருந்தது என்பது இவர் பதினுன்காம் வயதிலேயே, கம்பராமாயணத்திலுள்ள கருத்துவிசேஷங்களை நயம்பட விரித்துரைத்துப் பிரசங்கஞ் செய்யும் ஆற்றல் அமைந்திருந்தனர் என்பதனல் எல்லாரும் எளிதில் அறிந்து கொள்ளலாம். இவ்விஷயத்தைக் குறித்தே, மதுரைக் காலேஜ் தமிழ்ப்பண்டிதரும், மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்களுள் ஒருவரும், ஸ்ரீ பாண்டிதுரைத் தேவருடன் நீண்ட காலம் பழகியவரும் ஆகிய பிரம்மஸ்ரீ ம. கோபால கிருஷ்ண ஐயர் அவர்கள் தாம் தேவரவர்கள்மீதி யற்றிய சாமகவி யொன்றில்,

"இளமையிற்செந் தமிழ்சைவ சித்தாந்த
மாதியெலா மினிது தேர்ந்து
வளமைமிகு கம்பரா மாயண நுட்
பங்களெல்லாம் வயதீ ரேழில்
தெளிவுபெறப் பலர்மகிழப் பிரசங்கஞ்
செய்திறநற் றிறமை வாய்ந்து
'விளையுமிரி னியல்முளையில் விளங்கு' மெனு
முதுமொழியை மெய்ப்பித் தாயே."

என்று பாடியிருக்கிறுர்.

பாண்டித்துரைத்தேவர் அவர்கள், பொன்னுசாமித்தேவர்க்கு மூன்ருவது புதல்வரென முன்னர்க் கூறினேம். தமையன்மாரிருவரும் அகால மரணத்துக்குள்ளாகவே, ஜமீன் பட்டத்துக்குப் பாத்யதையும் நம் தேவரவர்கட்கே கிடைத்தது.

இவ்வாறு கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் சேரப்பெற்ற நம் தேவரவர்கள், பற்பல வழிகளில் தமிழ் மொழியை ஆதரிப்பாராயினர். தாமே ஆசிரியராய் இருந்து, தமதாசிரியரின் குமாரராகிய, பிரம்மஸ்ரீ மு. இராகவையங்கார்க்கும், பிறர்க்கும் தமிழ் பயிற்றினர். இந்த இராகவையங்கார் அவர்கள் மதுரைச் 'செந்தமிழ்'ப் பத்திராசிரியரா யிருந்து வந்ததுடன், இக்காலத்துப் பிரபல தமிழ் வித்வான்களுள் ஒருவராவர். தேவரது மற்றை மாணுக்கர்களிற் சிலர், எட்டையபுரம் சமஸ்தான வித்வானுயும், பாலவனத்தம் அரண்மனை வித்வானும், மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசியும் ஆக இக்காலத்து விளங்குகின்றனர்.

இப்படித் தாமே தமிழ் பயிற்றி வந்ததுடன், தமிழ்ப்புலவர்களையும், சங்கீத வித்வான்களையும், சம்ஸ்கிருத பண்டிதர்களையும், பொருளுதவி செய்து ஆதரித்து வந்தனர். இங்கிலீஷ் படிக்கும் மாணுக்கரில், மதுரையிலுள்ள ஏழைப்பிள்ளைகள் பலர்க்குப் பள்ளிக்கூடச் சம்பளத்திற்காகவும், பரீக்ஷைக்குப் பணங்கட்டுவதற்காகவும் இவர் பொருளுதவி செய்துள்ளதை நாம் நேரில் பார்த்தறிந்திருக்கிறேம்.

இன்னும் இவர் பல நூல்களில் உள்ள சிறந்த விஷயங்களை யாவரும் எளிதில் உணரும் பொருட்டு, 'பன்னூற்றிரட்டு,' என்னும் அரிய தொகை நூலை வெளியிட்டுத் தமிழுலகுக்கும் பேருதவி புரிந்தனர். இந்நூல், இதிகாசம், புராணம், காவியம், நீதி நூல் முதலிய வாகிய ஐம்பத்து

* நன்னூல், பொதுப்பாயிரம்.

மூன்று சிறந்த தமிழ்நூல்களினின்றும் தெரிந்தெடுக்கப்பட்ட 1647 செய்யுட்களை யுடையது. மஹாமஹோபாத்தியாயர் பிரஹ்மஸ்ரீ, உ. வே. சாமிநாதையர் அவர்கள் இந்நூற்கு நீண்டதோர் சிறப்புப்பாயிரம் பாடியிருப்பதனாலும், இதிலிருந்து சில பாகங்கள் மெட்ரிகுலேஷன், பி. ஏ. இப்பரீட்சைகளுக்குப் பாடமாய் ஏற்பட்டிருக்கிறதனாலும், இந்நூலின் சிறப்பு இனிது விளங்கும். இதுபற்றியே

"இன்னூற் றிரட்டிதனுக் கேதுநிக ரின்றெனவே
பன்னூற் றிரட்டொன்று பாலித்தான்—நன்னூல்கட்கு
ஈண்டித் துரையே இடமெனயா வந்தேர்ந்த
பாண்டித் துரையாம் பதி."

என இந்நூலையும், நூலாசிரியரையும் குறித்துச் சிறப்பாகப் பிரஹ்மஸ்ரீ உ. வே. வை. மு. சடகோப ராமாநுஜாசாரியர் அவர்கள் பாடியிருக்கிறார்கள்.

இவர், இவ்வளவு சிறப்பான 'பன்னூற்றிரட்டை' வெளியிட்டதுமன்றித் தாமே, தாம் சைவ சமயத்தின் மாட்டு வைத்துள்ள பற்றுக்கறிகுறியாக, "சிவஞானமுனிவர் இரட்டை மணிமாலை" என்னும் அரிய செய்யுள் நூலை யியற்றி யிருக்கிறார். மதுரை வித்வான் இராமசாமிப்பிள்ளையவர்களைக்கொண்டு சிவஞான சுவாமிகள் பிரபந்தத்திரட்டையும் வெளியிட்டுள்ளார். மற்றும் மஹாமஹோபாத்யாயர் பிரம்ஹஸ்ரீ உ. வே. சாமிநாதைய்யரவர்கள் ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகிய தமிழ்மகள் அணிமேகலைபோலும் மணிமேகலை என்னும் அரிய நூலையும், புறப்பொருள் வெண்பா மாலையையும் பதிப்பித்தற்கு இவரே பொருளுதவி செய்தனர்.

இவ்வளவு அரிய, பெரிய காரியங்களெல்லாம் பெரும்பாலும் 1902-ம் வருஷத்தில் மதுரைத் தமிழ்ச்சங்க ஸ்தாபனம் ஆவதற்கு முன்னேயே, அதாவது, அவரது முப்பத்தைந்தாம் வயதுக்கு முன்னரே நிகழ்ந்தனவாகும். இனி அச்சங்க ஸ்தாபன விஷயமாகச் சிறிது கூறுவோம்.

காலஞ்சென்ற இராமநாதபுரம் அரசராகிய ஸ்ரீமான் பாஸ்கரசேதுபதியவர்கள் நம் தேவரவர்கட்கு ஒருமுறையில் தம்பியாதல்வேண்டும். இவ்விரு சகோதாரும் ஒருவர்மீதொருவர் மிக்க பெருமதிப்பு வைத்திருந்தனர். பாஸ்கர சேதுபதியவர்களது தமிழபிமானமும் நாடறிந்த விஷயம். இவ்விருவரும், இக்காலத்திய தமிழின் நிலைமையைக் குறித்துச் சிந்தித்து,

*"பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை
போட்டிலே தவழ்ந்த"

தமிழ்க் குழந்தையானது சிறப்புடன் வளரவேண்டுமானால், முற்காலத்தில் தென்னவர்களாகிய பாண்டியர்களுடைய ஆதரவில் மூன்று தமிழ்ச்சங்கங்கள் நின்று நிலவியவாறு, இப்போது ஒரு சங்கம் இருக்கவேண்டுமென்று உணர்ந்துகொண்டனர். "† தண்டமிழ் இருந்திடிற் சங்கஞ் சேர்ந்திடும்" என்பது உண்மையன்றோ? அவ்வாறே இப்போதுள்ள சங்கத்தினை இருவரும் சேர்ந்து 1902 ஆம் வருஷம் மதுரையில் ஸ்தாபித்தனர். சங்கத்தின் ஸ்தாபன விஷயமாக இவ்விருவரும் காட்டிய ஊக்கத்திற்கும் பட்ட சிரமத்துக்கும் அளவேயில்லை.

இப்படி சங்கம் ஏற்பட்ட கொஞ்சகாலத்துக்குள், திடீரென்று சேதுபதியார் இளம் வயதிற் (சுமார் 33 இருக்கலாம்) தேகவியோக மடைந்ததனால், தேவரவர்கட்கு வருத்தத்தை உண்டாக்கியது. தம் தம்பியார் பிரிவாற்றாது, நம் தேவரவர்கள் மனங்கலங்கி யிருந்த நிலையில் பாடிய இரங்கற்பாக்களிலிருந்து ஒரு செய்யுளைக் கீழே வரைகின்றோம். அது ஒன்றே அவர்களது சகோதர வாஞ்சையையும், சாகித்ய சக்தியை நிலைநாட்டற்குப் போதும். அச்செய்யுள் வருமாறு:—

என்னுவி யுளங்குளிர அண்ணா! என்
றன்பொடினி யெனையார் செல்வார்?
மன்னா! மன்னா!! மன்னா!!! எனயாரை
யானினிமேல் மதித்துச் சொல்வேன்?
பொன்னுடர் தொழுஞ்சேது நன்னாடு
புரந்தளிக்கப் போந்தநீ வேறு
எந்நாடு சென்றனையோ? எங்கள்குல
மணிவிளக்கே! இயம்பிடியே.

சேதுபதியார் காலமானதுமுதல் தமிழ்ச் சங்கப் பொறுப்பு முழுதும், தேவரவர்களே பார்க்க வேண்டியதாயிற்று. சங்கத் தலைவராய்த் தாம் இருந்துகொண்டு சங்கத்துக்கு நிதி தேடுவதிலும், பழைய ஏட்டுப்பிரதிகளைச் சேர்ப்பதிலும், அவற்றைப் பரிசோதிப்பதிலும், மாணாக்கர்கட்கு வேறுவேறு பரீட்சை வைத்துப் பரிசு அளிப்பதிலும், அச்சு எந்திரம் முதலிய சம்பாதித்து,

*வில்லிபாரதத்திற்கு வரந்தருவார் இயற்றிய சிறப்புப்பாயிரம்; பொருப்பு பொதியமலை.

† விவேக சிந்தாமணியிலுள்ள தனிப்பாடல்.

அரிய நூல்களைச் சங்கப்பிரசுரங்களாக வெளியிடுவதிலும், இவைபோன்ற பிற செயல்களிலும் மிக்க ஊக்கத்துடன் உழைத்து வந்தார்.

"மெய்வருத்தம் பாரார் ; பசிநோக்கார் ; கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னர்."

என்னும் நீதிநெறி விளக்கச் செய்யுளுக்கு இவர்களை யோர் உதாரணமாகக் காட்டுவது பொருத்தமுடையதேயாகும்.

இத்துணை வேலைகளையும், தமது ஜமீன் சம்பந்தமான வேலைகளையும் இடையறாது மேற்பார்த்து வந்த நமது தேவரவர்கட்கு ஒய்வுநேரம் எப்படிக் கிடைக்குமோ, நமக்குத் தெரியாது. அடிக்கடி 'செந்தமிழ்' என்னும் தமது தமிழ்ச்சங்கப் பத்திரிகையின்கண்ணே, நூலாராய்ச்சி விஷயமாகவும், சரித்திர விஷயமாகவும் பல அரிய விஷயங்களைக் குறித்து, மிகநுட்பமான கருத்து நயம் வாய்க்க வியாசங்கள் வரைந்து வந்தார். இவர் இங்ஙனம் கம்பராமாயணச்செய்யுள் சிலவற்றிற்கு எழுதி விடுத்த விளக்கவுரையும், தமிழ்ப்பழஞ் சரிதம் என்னும் விஷயமும், கற்றோரனைவரும் காமுறற் பாலவாய்ச் சிறந்து விளங்குகின்றன.

அன்றியும் சங்கம் நிறுவுவதற்கு முன்னரே இவரால் வெளியிடப்பட்ட பன்னூற்றிரட்டு என்னும் நூலை, இவர் நூற்றுக்கணக்கான புதிய செய்யுட்களைச் சேர்த்துத் திருத்தமாக இரண்டாம் பதிப்புச் செய்து, சங்கப்பிரசுரமாக அதனை வெளியேற்றினர். சைவர்களுக்குப் பெரிதும் பயன்படுமாறு, சைவசித்தாந்த நூல்கள் பலவற்றிலிருந்து, சிறந்த செய்யுட்களைத் தேர்ந்தெடுத்து 'சைவமஞ்சரி' யென்னும் பேரால் ஒரு தொகைநூல் வெளியிட்டனர். இங்ஙனமே, பல தோத்திரச் செய்யுட்களைத் திரட்டி, 'தோத்திரத் திரட்டு' என்பதொன்றும் பதிப்பித்திருக்கிறார். இவரால் பதிப்பிக்கப்பட்ட இத்தொகைநூல்கள் மூன்றும் தமிழ் கற்போர்களுக்குப் பேருதவியாயிருக்கின்றன.

இன்னும் இவர், வியாசம், செய்யுள் ஆகிய இவற்றை வரைவதில் மாத்திரம் வல்லமையுள்ள சிலர் போலாகாது, வித்வான்கள் பலர் கூடிய பெரிய சபையில், திருத்தமாக இனிய குரலுடன் நெடுநேரம், கேட்போர் மகிழும்படி பிரசங்கம் புரியும் ஆற்றல் வாய்ந்தவர். இவரது பிரசங்கங்கள், கற்பனை நயமும், சொற்பொருள் நயமும் கலந்து கேட்கக் கேட்கத் தெவிட்டாதிருக்கும். இவர் சைவசமய விஷயமாகவும், தமிழ்ப்பெருமை விஷயமாகவும், சென்னை, சேலம், தஞ்சை, நாகபட்டினம், சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி முதலிய இடங்களிற் பிரசங்கம் செய்திருக்கிறார். இவர்களது தமிழ்ப் பாஷாபிமானம், இவ்வளவு சிறப்புடையதாகலின், அதை இதுவரையில் சற்று விரிவாகக் கூறினோம். மற்றைச் சிறப்புகளைப் பற்றிச் சிறிது கூறுவோம்.

இவர்கள், இக்காலத்தினியல்புக்கேற்ப ஆங்கிலமும் தெரிந்தவர். ஆங்கில பாஷையினிடத்தும், ஆங்கில அரசாங்கத்தாரிடத்தும் மிக்க அபிமானமுடையவர். ஆங்கில ஆராய்ச்சி நூல்களின் போக்கைத் தழுவி காலஞ்சென்ற பிர்ஹ்மஸ்ரீ வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பி. ஏ. அவர்கள் இயற்றிய "தமிழ் மொழியின் வரலாறு" (The History of Tamil Literature) என்னும் அரிய நூலை, அரங்கேற்றுதற்குக் கூடிய சபையில், இவர்களே சபாநாயகராக விருந்து, அந்நூலைச் சிறப்பித்துக் கூறியதனால், "புதியன புகுதல்" பாஷை வளர்ச்சி யுறுவதற்கு ஒரு காரணமாகும் என்பது இவர்க்கு உடன்பாடு எனல் வெளிப்படை.

இவர், சிறப்புப்பற்றித் தமிழ்க்கல்வியைப் பெரிதும் ஆதரித்து வந்தனரென்றாலும், பொதுக் கல்வியிடத்தில் இவர்க்கு அபிமானங் குறையவில்லை. ஆங்கிலம் படிக்கும் பல ஏழைமாணாக்கர்கட்கிவர் பொருளுதவி செய்து வந்தது முன்னரே கூறப்பட்டது. இராமநாதபுரத்தில், பாண்டியன் ஸகண்டரி வித்தியாசாலை (The Pandian Secondary School) ஒன்றேற்படுத்தி, அதற்கு வேண்டிய பொருளுதவி முழுதும் தாமே புரிந்து வந்தனர். அது இரண்டொரு வருஷங்களில் ஒரு சிறந்த ஹைஸ்கூலாய்விடும் நிலைமையில் இருக்கிறது. இதுவன்றியும், மதுரைக் காலேஜிக்குப் பணம் கொடுத்திருப்பதனாலும், மதுரைத் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்திருக்கும் சேதுபதி செந்தமிழ்க்கலாசாலையில், மாணாக்கர்கட்குத் தமிழுடன், ஆங்கிலம், வடமொழி முதலிய பயிற்சி வர வேண்டுமென்னுங் கொள்கை கொண்டிருந்ததனாலும், இவர் பொதுவாகக் கல்வியிடத்து வைத்திருந்த அபிமானம் யாவராலும் எளிதில் இனிதுணரப்படும்.

நம் தமிழ் நாட்டில் பெரும்பாலும் செல்வ மிக்கவர்கள் கல்வி யில்லாதவர்களாய் இருக்கிறார்கள். கல்வி மிக்கவர்கள் செல்வ மில்லாம லிருக்கிறார்கள். தொன்றுதொட்டுத் தமிழ் நாட்டில் இப்படிக் கல்வியும், செல்வமும் ஒன்றோடொன்று முரண்பட்டு இருந்ததென்பது

"இருவேறு உலகத் தியற்கை; திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு"

என்னுந் திருக்குறளாலும், மற்றும் சில தமிழ்ப் பாக்களாலும் அறியப்படும். இவ் "வுலகத்தியற்கை"க்கு மாறாக மட்டற்ற கல்விப்பொருளும், செல்வப்பொருளும், கலந்துறைவதற் கிடனாயிருந்தமையால், திருத்தக்க தேவர், சீவகசிந்தாமணியிற் சச்சந்தனென்னும் அரசனைக் குறித்து

"நாவீற் றிருந்தபுல மாமக ளோடு நன்பொற்
பூவீற் றிருந்ததிரு மாமகள் புல்ல நாளும்
பாவீற் றிருந்தகலை பாராச் சென்ற கேள்விக்
கோ"

எனக் கூறியது, நம் பாண்டித் துரைத்தேவர் அவர்கட்கும் பெரிதும் பொருத்த முடைத்து என்பது சொல்லாமலே அமையும்.

இவ்வளவு சிறப்புடைய ஒருவரைத் தமிழ்நாடு இழக்க நேர்ந்தது, தமிழர்தந் துர்ப்பாக்கியமே யன்றி வேறன்று. இவர் தலைமை பூண்டிருந்த தமிழ்ச் சங்கமும் இவரது சுவீகார புத்திரனது ஆக்ஞையும் இவர்க்குப் பின்னும், இனிதோங்குமாறு, இறைவன் திருவருள் சுரப்பானாக.

வே. முத்துஸாமி ஐயன், பி. ஏ. எல். டி.

---

## நமது சந்தா நேயர்களுக்கு

**சந்தா நேயர்கள் கடிதம் எழுதும்போதும் சந்தாத்தொகை அனுப்பும்போதும் தமது விலாஸத்துக் கெதிரேயிருக்கும் நம்பரைக் குறிப்பிட்டு எழுதக் கேட்டுக் கொள்ளுகிறோம். நம்பரைக் குறிப்பிடாத பக்ஷத்தில் வீண் காலதாமதமாகும்.**

**மானேஜர்**

## தெய்வப்புலமை நக்கீரனார்

### NAKKIRA THE DIVINE BARD

பாவிற்சிறந்த பாவலர்களையும் நாவிற்சிறந்த நாவலர்களையும் நம் செந்தமிழ் நாடு பண்டைக் காலத்தில் பெற்றிருந்ததாயினும் கவின்பெறக் கவிகள் கட்டும் கவிவாணர்களையும் இலக்கிய இலக்கண ஆராய்ச்சி அமைந்த அறிவாளர்களையும் அது அக்காலத்தில் அடைந்திருந்ததாயினும், அவர்களுடைய சரித்திரங்களை விவரமாயும் விளக்கமாயும், பின்னோரான நாம் அறிந்துகொள்ளும்படி, முன்னோர்களால் ஏதும் எழுதி வைக்கப்படாமையால் முற்காலத்து மூதறிவாளர்களைப்பற்றிப் பிற்காலத்துப் பேரறிவாளர்களுங் கூட ஏதும் நிச்சயித்துரைக்க முடியாமல் தயங்கும் தற்காலத்தில் கடைச்சங்கப் புலவர்களுள் முதல்வரான நக்கீரரைப்பற்றி நாம் எழுத முற்படுவதானது, கருங்கல்லிலிருந்து நார் உரிக்க முயல்வோன் ஒருவனுடைய முயற்சியினை ஒக்குமேயன்றி வேறில்லை. ஆனாலும், காலம் என்னும் காரிருளில், மறைந்துபோன அப்பெரியாரின் சரித்திரம் அவருடைய நூல்களாகிய விளக்கத்தைக்கொண்டு சிறிது விளக்கப்படுதல் கூடுமாதலால், ஒன்றுமே அறிய முடியாமலிருப்பதிலும் சிறிதாவது அறிந்துகொள்ளுதல் நலமென்பதைக் கருதி சில விஷயங்கள் அவரைப்பற்றி எழுதுவதற்குத் துணிந்தோம்.

மதுரைக் கடைச்சங்கத்திலிருந்து தமிழாராய்ந்த நாற்பத்தொன்பது புலவன்மார்களுள் நக்கீரர் என்பவர் ஒருவராவர். இவர் பிறந்த ஊர் மதுரை யென்பதும், இவருடைய தந்தையார் கணித சாஸ்திரத்தில் மிக வல்லவர் என்பதும். அதனால் அவருக்குக் கணக்காயனார் எனனுங் காரணப்பெயர் வாய்ந்ததென்பதும், அவருடைய புதல்வரான நக்கீரனார் "இறையனார் அகப்பொருள்" என்னும் அகப்பொருள் நூலுக்கு உரைக் கண்டார் என்பதும் இறையனார் அகப்பொருளுக்குப் பாயிர உரை செய்த முசிறியாசிரியர் நீலகண்டனார் கூறுவது கொண்டு இனிதறியப் படுகின்றன.

இவர் இயற்றிய நூல்களுள் பத்துப்பாட்டுள் ஒன்றான "திருமுருகாற்றுப்படை" என்பது இக்காலத்தில் பிரபலமாய் எல்லோராலும் பயிலப் பட்டும் போற்றப்பட்டும் வருகின்றது. இவரால்

உரை காணப்பட்ட "இறையனர் அகப்பொருள்" சங்கத்தமிழ் நூலாராய்ச்சி நிறைவுடைய பண்டிதர்கள் சிலரால் மாத்திரம் பயிலப்பட்டுப் பெரும்பாலரால் புறக்கணிக்கப்பட்டு வருகின்றது. "இறையனர் அகப்பொருள்" என்னும் பெயர் கூட கேள்விப்படாத தமிழ் வித்துவான்களும் இக்காலத்தில் உளர்! ஆ! நம் தமிழ் மக்கள் பண்டைத் தமிழ் நூல்களை ஆதரிக்கின்ற திறம் என்னே, என்னே! இவ்விரண்டு பெருநூல்களைத் தவிரத் தனிப்பாடல்களாகவும் நக்கீரனர் சில இயற்றி யிருக்கின்ருர். அவற்றுள் தெய்வப் புலமைத் திருவள்ளுவனரின் தெய்வத்திருக்குறள் நூலை மிகப் பாராட்டி,

"தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண் [குறளால்
ஆனஅற முதலா வந்நான்கும் - ஏனோர்க்கு
ஊழி னுரைத்தாற்கும் ஒண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னற்று மற்று"

என்று பாடிய செய்யுளும் ஒன்ருகும். இது திருவள்ளுவ மாலையில் ஏழாவது பாடலாகச்சேர்க்கப் பட்டிருக்கின்றது. கடைச்சங்கத்தி லிருந்து தமிழாராய்ந்த புலவர்களுள் "கீரர்" என்னும் பெயருடையார் பலர் இருந்தார்களென்று திருவள்ளுவ மாலையினல் புலப்படுகின்றமையின், ஏனையோருக்கும் இவருக்கும் வித்தியாசம் தெரியும்பொருட்டு இவர் நக்கீரர் என்று அழைக்கப் பட்டனர் என்று தெரிகிறது. வேறு இருவர் "மோசி கீரனர்" "தேனீக்குடிக் கீரனர்" என்னும் பெயருடையர் ஆவர். மேல் குறிப்பிட்ட ஒரு செய்யுளைத் தவிரக் "கண்ணப்ப தேவர் திருமறம்" என்னும் அகவற்பா ஒன்றும் இவர் அருளிச்செய்திருக்கின்ருர். அது சொல்லழகும் பொருளழகும் நிரம்ப வாய்ந்ததாய், கண்ணப்ப நாயனருடைய பக்தியை விளக்குவதாய் மிளிர்கின்றது. இதனைத்தவிர "விநாயகர் அகவல்" ஒன்றும் இவர் இயற்றி யிருக்கின்ருர் என்று சொல்லப்படுகின்றது.

"சீர்தரு மூலச் செழுஞ்சுடர் விளக்கே
கார்நிற மேனிக் கற்பகக் களிறே
அல்லல் வினையை யறுத்திடு ஞான
வல்லபை தன்னை மருவிய மார்பா"

என்று ஆரம்பித்து,

"விக்கின விநாயகா தேவே ஓம்
அரகர சண்முக பவனே ஓம்
சிவசிவ மகாதேவ சம்போ ஓம்"

என்று முடிகின்ற இந்த அகவற்பா நக்கீரனரால் இயற்றப்பட்டதென்று சொல்லப்படுகின்றது. ஆனல் சிற்சில காரணங்களால் அந்த அகவல் ஆசிரியர் நக்கீரனரால் இயற்றப்பட்ட தன்றென்றும், பிற்காலத்தார் யாரோ அப்பாவினை இயற்றி அவர் பெயராற் கட்டிவிட்டார்களென்றும் முடிவு செய்ய வேண்டியிருக்கின்றது. ஏனெனில், அந்த அகவலின் இடையில்,

"அருண கிரியா ரௌவை போலக்
கருத்து மிகுந்து கவிமழை பொழிய
வாக்குக் கெட்டா வாழ்வை யளித்து
நோக்கரு ஞான நோக்கு மளித்து
இல்லற வாழ்க்கை இடையூ றகற்றி"

என்று சில அடிகள் வருகின்றன.

இந்த அடிகளில் திருப்புகழ் பாடிப் பெரும் புகழ் பெற்ற அருணகிரி நாதரைப்பற்றிய பிரஸ்தாபம் வருகிறதென்பது இவ்வடிகளின் முதல் அடியை நோக்குவார்க்கு இனிது விளங்கும். அருணகிரிநாதர் பிற்காலத்துப் புலவர் என்பதும், அவருடைய காலம் இரண்டொரு நூற்ருண்டுகளுக்கு முன்னராய்த்தான் இருத்தல் வேண்டுமென்பதும் தமிழ் நூற்சரித்திர ஆராய்ச்சிக்காரர்களின் கொள்கை. தவிர, திருப்புகழ் பாடல்போன்ற பாடல்கள் பண்டைக்காலப் புலவர்களால் பாடப்படவில்லை என்பதற்குப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, ஐங்குறுநூறு முதலிய சங்க இலக்கியங்களிலும், சிந்தாமணி மணிமேகலை முதலிய பஞ்ச காவியங்களிலும் அம்மாதிரியான பாடல்கள் காணப்படாமையே போதிய சான்ருகும். ஆனல் நக்கீரர் காலமோ மிகப் பழமையானது. மதுரைக் கடைச்சங்கம் கிறிஸ்து பிறந்த முதல் நூற்ருண்டிற்குப் பிறகு இருந்ததில்லை என்பது பிரபல பண்டிதர்களின் ஆராய்ச்சியால் முடிவு கட்டப்பட்ட முடிவாதலாலும், ஆசிரியர் நக்கீரனர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவராதலாலும், அவருடைய காலம் இன்றைக்குப் பதினெட்டு அல்லது பத்தொன்பது நூற்ருண்டுக்கு மேற்பட்டதாகும். ஆகவே இரண்டொரு நூற்ருண்டுகளுக்கு முன்னரிருந்த அருணகிரியாரைப்பற்றி ஆயிரத்தெண்ணூறு

வருடங்களுக்கு முன்னிருந்த நக்கீரனர் பிரஸ்தா பித்தார் என்று கூறுவது, சுத்த அசம்பாவித மான கூற்றாகும். இதுவேயுமின்றி நக்கீரனர் பாடியதாகச் சொல்லப்படும் விநாயகர் அகவலை யும், அவரால் இயற்றப்பட்ட ஏனைய பாக்களை யும் ஒப்பிட்டு நோக்கும்போது அதற்கும் மற்ற வைகளுக்கும் சொற்போக்கிலும் பாக்களின் அமைப்பிலும் வித்தியாசம் பெரிதும் காணப்படு கிறது. ஆகவே, "விநாயகர் அகவல்" நக்கீரனரால் இயற்றப்பட்ட தன்றென்றும், பிற்காலத்தார் யாரோ அதனை இயற்றி அவர் பெயரால் அதனை அமைத்தார்கள் என்றும் கொள்ளுதலே பொருத் தமுடையதாகும்.

இனி, இவருடைய பெரும் புலமையைப் பற்றியும், யாராயிருப்பினும் குற்றம் கண்ட விடத்துக் கண்டிக்கும் தைரியம் இவருக்குண் டென்பதைப் பற்றியும் சொல்லப்படும் ஒரு வர லாறு உண்டு. அதனைக் கூறுகின்றோம் :—

பாண்டிய மன்னனுடைய மனைவி ஒருநாள் ஸ்நானம் செய்துவிட்டு அரண்மனை மேன்மாடி யில் தன் கூந்தலை உலர்த்திக்கொண்டு நின்றாள். அச்சமயம் பாண்டிய மன்னன் அங்கே சென் றான். ஒருபோதும் முகர்ந்தறியாத நறுமணம் அவ்விடத்தில் வீசிற்று. சுற்றுப்புறங்களில் வாசனை வீசக்கூடிய பதார்த்தங்கள் எவையும் இல்லாமையாலும், தன் மனைவியின் கூந்தலி லும் மலர்கள் சூடப்படாமையாலும் அவ் வாசனை எங்கிருந்து வந்ததென்பதை அறிந்து கொள்ள அவனால் முடியவில்லை. தன் மனைவி யின் கூந்தல்வாசனைதானோவென்றும், அப்படி யானால் அவ்வாசனை இயற்கையோ செயற் கையோ வென்றும், ஒரு ஐயம் அவனுக்கு நிகழ்ந் தது. ஆனாலும், அதனை ஒருவருக்கும் தெரி விக்காமல், தன் மனத்திலுள்ளதை அறிந்து வெளியிடும் புலவர்க்குப் பொன்னளிப்பதாய் உரைத்து ஒரு பொன்முடிப்பை அரண்மனை வாயிலிற் கட்டித் தொங்கவிட்டு, யார் தன் உள் ளக்கருத்தை உள்ளபடியே உரைக்கின்றார் களோ அவர்கள் அப்பொன் முடிப்பை அவிழ்த் துக்கொண்டு போகலாமென்று உத்தரவு செய் திருந்தான். மதுரை ஆலவாயில் அவிர் சடைக் கடவுளான ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானின் அர்ச்சகரான தருமி என்னும் பெயருடைய அந்தணோத்தமர் வறுமையால் வாடி வருந்திய படியால், தாம் மன்னன் கருத்தை வெளியிட் டால் பொன்முடிப்பு தனக்குக் கிடைக்குமென் றும், கிடைக்கவே தமது வறுமை வறுமையா கும் என்றும் கருதி ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமா னிடத்துத் தம் எண்ணத்தைத் தெரிவித்து வேண்டினர். வெண்ணீருஞ் செஞ்சடையும் கருங் கண்டமுமுடைய அண்ணலார், தருமியின் வேண்டுகோளுக்கு இரங்கிப் பின்வரும் திருப்பா சுரத்தை அருளிச்செய்து, அதனை மன்ன னிடம் காண்பிவிக்கும்படி பணித்தார். அப் பாசுரம் வருமாறு:—

" கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியல் செறியயிற் றெரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீயறியும் பூவே "

இத்திருமுகப் பாசுரத்தினை தருமி மன்ன னிடம் கொண்டுபோய்க் காட்டினர். மன்னவன் சங்கப்புலவரிடம் அதனைக் காட்டும்படி ஆக்கியா பித்தான். தருமி என்னும் அந்தணர் அவ்விதமே கொண்டுபோய்க் காட்டவும், சங்கத்திலிருந்த மற்றப் புலவர்கள் எல்லோரும் அப்பாவில் குற்ற மில்லை என்று கூறினர்கள். ஆனல் நக்கீரரோ செய்யுளில் சொற்குற்றம் இல்லாவிடினும் பொ ருட்குற்றம் இருக்கின்றது என்று வாதித்தார். கடவுள் அருளிய திருப்பாசுரத்தில் குற்றம் இருக்கிறதென்று அவர் கூறவே அந்தணனுக்கு மிகுந்த வருத்தம் உண்டாயிற்று. உடனே அவர் ஆலவாய் அமர்ந்த அவிர்சடைக் கடவுளிடம் சென்று முறையிட்டார். சிவபெருமான் ஒரு புலவரைப்போல் திருவுருக்கொண்டு சங்கத்திற் குச் சென்று " நீர் இப்பாவினில் யாது குற்றங் கண்டீர் ? " என்று நக்கீரரை வினவினர்.

" உம்முடைய செய்யுளில் சொற்குற்றம் இல்லை ; ஆனல் பொருட்குற்றம் உளது. அதா வது மன்னன் மனைவியின் கூந்தல் இயற்கை மணம் உடையது என்று அப்பாவில் கூறுகின் றீர். ஸ்திரீகளின் கூந்தலுக்குச் செயற்கை மணமே ஒழிய இயற்கை வாசனை இல்லை. இல் லாததொன்றை உண்டுபோல் கூறியதுதான் குற் றம் " என்று நக்கீரர் பதில் கூறினர்.

" அப்படியானல நீர் வழிபடும் ஞானப்பூங் கோதையாகிய உமாமகேச்வரியின் கூந்தலும் செயற்கை மணமுடையது தானே ? " என்று புலவன் வேடம் பூண்ட சிவபிரான் கேட்டார்.

"ஆம்; அதிற் சந்தேகமில்லை!" என்று மீண்டும் தமது கொள்கையையே வற்புறுத்தி உரைத்தார் ஆசிரியர் நக்கீரனுர்.

இறைவன் தமது நெற்றிக்கண்ணைச் சிறிது திறந்து காட்டினுர்.

அப்போதும் நக்கீரர் "முக்கண் படைத்தவனுனுலும் குற்றம் குற்றமே" என்று தைரியத்தோடு நக்கீரர் வாதித்தார்.

ஆனுலும் இறைவனுடைய நெற்றிக்கண்ணினின்று எழுந்த அக்கினிச்சுவாலை நக்கீரனைப் பற்றி வருத்தவும் அவர் வெப்பம் தாங்கமுடியாமல் பொய்கையில் வீழ்ந்திட்டார்.

புலவர் வேடம் கொண்டு வந்தவர் சிவபெருமான் என்றும், "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் திருப்பாசுரம் அவரால் அருளிச்செய்யப்பட்டதென்றும், அதில் குற்றம் காணப்புகுந்தது தம்முடைய அறியாமையாலும் அகம்பாவத்தினுலும் நேர்ந்ததென்றும் நக்கீரர் பிறகு தெளிந்து, தம்முடைய குற்றத்தை மன்னிக்கும்படி இறைவனைப் பணிந்து "திருவெழுகூற்றிருக்கை" என்பதை இயற்றினுர்.

"சிறியேன் சொன்ன அறிவில் வாசகம்
வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும்
வெறிகமழ் கொன்றையொடுவெண்ணிலவணிந்து
கீதம் பாடிய அண்ணல்
பாதஞ் சென்னியுட் பரவுவன் பணிந்தே"

என்று "திருவெழுகூற்றிருக்கை"யில் வருவது கொண்டும்,

"பத்தியு நீயே முத்தியு நீயே
சொலற்கருந் தன்மைத் தொல்லோய் நீயேதனுற்
கூட லாலவாய்க் குழக னுவது
அறியா தருந்தமிழ் படித்தன னடியே
னீண்டிய சிறப்பி னிணையடிக் கீழ்நின்று
வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே"

என்று பெருந்தேவபாணியில் வருவது கொண்டும் இவ்வுண்மை அறியப்படும்.

இதிலிருந்து நாம் அறியக்கூடியது என்னவென்றுல், பண்டைக்காலத்தில் தமிழ்ச் சங்கத்திலிருந்து தமிழாராய்ந்த புலவர்களுள் நக்கீரர் அஞ்சா நெஞ்சும், உண்மையை வெளியிடப் பின்வாங்காத தைரியமும் படைத்திருந்தார் என்பதுதான்.

இனி, இவரால் பாடப்பெற்ற திருமுருகாற்றுப்படையைப் பற்றியும், இவரால் உரைசெய்யப்பட்ட இறையனுர் அகப்பொருளைப்பற்றியும் இரண்டொரு விஷயங்களைக் கூறிவிட்டு, இவ்விஷயத்தை முடித்து விடுகின்றும்.

ஆசிரியர் நக்கீரனுர் இத்திருமுருகாற்றுப்படை பாடியதற்குக் காரணம் ஒன்று சொல்லப்படுகிறது. அது பின்வருமாறு:—

நக்கீரர் ஒருசமயம் இந்தியாவின் வடதிசை நோக்கிப் பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது, இமயமலைச்சாரலில் ஒரு பெருங் காட்டினுள் செல்லும்படியான சந்தர்ப்பம் அவருக்கு நேர்ந்தது. அங்கே ஒரு தடாகத்தைக் கண்டு நீராடி சிவபூசை செய்துகொண்டிருக்கையில் தெய்வத்தன்மை பொருந்திய ஒரு ஆலமரத்தினின்று ஒரு பழுப்பு அவருக்கு முன்னிலையில் பாதி நீரிலும் மறுபாதி நீர்க்கரையிலுமாக விழுந்தது. நீரிலே விழுந்த பாதி மீன் வடிவமும், கரையிலே விழுந்த பாதி பறவை வடிவமும் அடைந்து இருபக்கத்திலும் இழுக்க, அதனை நக்கீரர் கவனித்தார். இதனுல் அவருடைய சிவபூசைக்குப் பங்கம் விளைந்தது. உடனே ஒரு பெரிய பூதம் தோன்றி அவரைத் தூக்கிக்கொண்டுபோய் ஒரு பெரிய மலைக்குகையில் அடைத்துவிட்டு நீராடச் சென்றது. இதற்கு முன்னும் இப்படியே சிவபூசையில் வழுவினுர் 999 பேர்களை அப்பூதம் எடுத்துக்கொண்டு போய் அக்குகையினுள் அடைத்து வைத்திருந்தது. ஆனுல் ஆயிரம் பேர் சேர்ந்த பின்பே அவர்களை உண்பது என்பது அப்பூதத்தின் கொள்கை யாதலால் இதுவரையில் 999 பேர்களுக்கும் அது நல்லுணவு முதலியன அளித்துக் காப்பாற்றி வந்தது. ஆனுல் நக்கீரரோடு ஆயிரம் பேர் ஆனபடியால் இனி அது எல்லோரையும் தின்றுவிடும் என்னும் அச்சம் அக்குகையில் அடைபட்டிருந்தவர்களுக்கு உண்டாயிற்று. அவர்கள் எல்லோரும் நக்கீரரிடத்தில் இவ்விஷயத்தை முறையிடவே, அவர் முருகக்கடவுளை நினைந்து இத்திருமுருகாற்றுப் படையைப் பாடினுர். அதன்மேல் முருகக்கடவுள் அப்பூதத்தின் கையினின்றும் இவ்வாயிரம்பேரையும் விடுவித்தார். இதுதான் திருமுருகாற்றுப் படையை நக்கீரர் பாடியதற்குக் காரணமாகக் கூறப்படும் வரலாறு. இத்திருமுருகாற்றுப் படையின் மாட்சிமையைப்பற்றி இங்கே கூறப்புகுந்தால் விஷயம் விரியுமாதலால், சமயம் நேரும்போது அதனைப் பற்றித் தனியாக எழுதுவாம்.

இனி, இறையனாரகப் பொருள் என்பது அன்பு, குணம், முதலிய எல்லாவற்றுள்ளுஞ் சிறந்த ஓர் ஆண்மகனும் மடமகளும் தம்மிற்றாமே தனியாய்ச் சந்தித்து ஒன்று படும்போது அவர்களுடைய மனத்திலே நிகழும் பலவகையான நிகழ்ச்சியையும் படிப்படியாகக் கூறிக்கொண்டு போகும் ஒரு இலக்கண நூலாகும். அகத்தில் தோன்றும் நிகழ்ச்சிகளைக் கூறுவதால் 'அகப்பொருள்' என்றும், மதுரை சோமசுந்தரக் கடவுளின் அருளால் இந்நூல் அகப்பட்டமையால் 'இறையனார் அகப்பொருள்' என்றும் இது பெயர் பெறுவதாயிற்று.

> "பன்னீ ராண்டு பாண்டிநன் னாடு
> மழைவளங் கரப்ப மன்னுயிர் மடிந்தது"

என்று சீத்தலைச் சாத்தனார் ஐம்பெரும் காப்பியத்துள் ஒன்றான மணிமேகலையுள் குறிப்பிட்டபடி பாண்டிநாடு பன்னிரண்டு வருஷம் பஞ்சத்தால் பீடிக்கப் பட்டபோது, சங்கமிருந்து தமிழாராய்ந்த புலவரெல்லாம் தத்தம் நாடு நோக்கிச் சென்று அது கழிந்தபின் மீண்டும் மதுரையை வந்தடைந்தார்கள். அப்படி வந்தவர்களுள் ஒருவரேனும் பொருள் அதிகார ஆராய்ச்சி யுடையவர்களா யில்லாமற்போனது பாண்டிய மன்னனை உக்கிரப்பெருவழுதிக்கு மிகுந்த கவலையை உண்டாக்கிற்று. அவன் இறைவனை நோக்கிக் குறையிரந்து நின்றான். மதுரை சோமசுந்தரக் கடவுளின் பீடத்திற்குக்கீழ் செப்புத் தகட்டிலே பொறிக்கப்பட்ட அறுபது சூத்திரங்கள் காணப்பட்டன. அவைகளைக் கோவில் பூசகர் மன்னனிடம் காட்டவும் அவை பொருளதிகாரமாயிருப்பதை மன்னன் கண்டு மகிழ்ந்து புலவர்களை அதற்கு உரை செய்யும்படி ஆக்கியாபித்தான். அப்படியே அவர்கள் உரையியற்ற, நக்கீரருடைய உரையே மற்றவர்களுடைய உரையைவிடச் சிறந்ததா யிருந்தது. இதனைப்பற்றி இன்னுங் கூறப்புகின் விஷயம் வளர்ந்துபோம்.

ஆதலால் ஆசிரியர் நக்கீரரைப்பற்றி இதுகாறுங் கூறிய இரண்டொரு குறிப்புகளுடன் இந்த விஷயத்தை முடிக்கின்றோம்.

நாகை - ஸி. கோபால கிருஷ்ணன்.

# ஆத்திசூடி விளக்கம்

## MORAL SAYINGS EXPLAINED

### 18. இடம்பட வீடிடேல்

வேண்டிய அளவுக்கு மிஞ்சி அதிக இடம் இருக்கும்படி நீ வீட்டைக் கட்டாதே, என்பது இதன் பொருள். இக்கருத்தையே 'சிறுகக் கட்டிப் பெருக வாழு' என்ற பழமொழி விவரித்துக் கூறும். அதாவது வீட்டை அவசியமான விடங்களிருக்கும்படி கட்டிப் பின்னர் அது போதாது என்று தோன்றும்படியான சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்துவா என்பதாகும். இவ்வாறின்றிப் பெரிதாக வீட்டைக் கட்டிவிட்டு அதை வைத்து ஆளக்கூடாத நிலையை அடைந்து தவிக்கலாகாது என்பது இதன் கருத்து.

ஸாதாரணமாக ஒரு வீட்டைக் கட்டினால் அதைப் பெருக்கி மெழுகி இரவில் நன்றாக விளக்கிட்டு வைத்துக்கொண்டிருப்பதே நலம். இவ்வாறு செய்யமுடியாத நிலையில் ஒருவனிருக்க அவன் இத்தகைய பெரிய வீட்டைக்கட்டலாகாது. அவ்வாறு கட்டும்படி நேர்ந்து விட்டால் தகுந்த விலைக்கு அதை விற்றுவிட்டு சிறுகக் கட்ட முயலவேண்டும். அவ்வாறு செய்யாதிருந்துவிட்டால் பிறருக்குக் குடிக்கூலிக்கு விட்டு வியாபாரம் செய்யத் தொடங்கிவிட வேண்டும். வருபவன் வீட்டின்மேல் அக்கரையாக விருப்பான் என்பது என்ன? மேலும் அவன் மாதவாடகை சரியாகக்கொடுத்து வருவான் என்பது என்ன நிச்சயம்? வீட்டின் விலை வரவர குறையாது என்பது என்ன நிச்சயம்? ஆகவே இவைகள் எல்லாம் சேர்ந்து நம்மை வீண் கவலைக்கு ஆளாக்கிவிடும். வியவஹாரம் முற்றினால் அதிலேயே மனம் ஊறிக்கொண்டிருக்குமே ஒழிய வாழ்க்கை நோக்கத்தைக் கவனிக்கக் காலமில்லாமலே போய்விடும்.

நல்ல உந்நத பதவியில் இருப்பவர்கள் விஸ்தாரமாக வீடு கட்டினால் என்ன குற்றம் என்ற சங்கைபிறக்கும். அவர்களுக்குக்கூட இந்நீதி வாக்கியம் பொருந்துமோ? இவர்களுக்கும் ஒருவாறு பொருந்தும். இவர்கள் பதவிக்கு ஏற்ப பெரிய வீடு வேண்டியது அவசியமாக விருக்கலாம். அதற்கு எவ்வளவு பெரிய வீடுவேண்டுமோ அவ்வளவுதான் கட்டவேண்டும். மேலும் கூடிய வரையில் குறைந்த பணச்செலவில், எளிதில்

தகுந்தபடி விலைபோகும்படி வீட்டைக் கட்டி விட வேண்டும். இப்படியின்றி நமக்குத்தான் பத விவந்துவிட்டது பணம் வந்துவிட்டது என்று பெரும் பொருள் செலவிட்டு மனம் போன படியே பெரிய வீட்டைக் கட்டி ஒரு கனவான் பெருஞ் செலவுக்காரனுக இருந்துவிட்டால், அவன் தலை சாய்ந்ததும் அவன் பிள்ளைகள் பாடு கஷ்டம்தான். கனவான் பிள்ளை நற் குணங்கள் வாய்ந்தவனுக விருந்தாலும் இருக்க லாம், ஆனால் அவனைப்போலக் கனவானுக இருக்கவேண்டியது அவசியமில்லை. பெரிய வீட் டில் இருந்து நிர்வஹிக்க அவனால் முடியாமல் போகும். அவன் வேறு சிறு வீடுபார்க்க வேண்டி வரும். முன்னர் ஸாதாரண ஜனங்களுக்கு வரும் என்று எடுத்துக்காட்டிய மனச்சஞ்சலம் எல்லாம் வந்து சேர்ந்து இவனை வீண்கவலைக்கு உள்ளாக் கும். ஆகவே கனவான்களும் பெரிய வீடுகட்டு வதில் தகுந்த ஆலோசனை செய்து கட்டி வேறு இடத்தில் சிறுவீடு ஒன்றும் கட்டி தயாராக வைத்திருக்கவேண்டும். ஒரு பெரிய தோட்டத் தில் இவர்கள் வீடுகட்டும்படி நேர்ந்தால் கூடிய வரையில் சிறிய வீடாகவே தகுந்தபடி கட்டி மற் றைய பாகங்களில் பயிரிடுதல் முதலிவைகளுக்கு இடங்கொடுத்து விடவேண்டும். அவ்வாறின்றி இடங்கொண்டமட்டும் வீடு கட்டிவிட்டால் அவ னுக்கும் அவன் ஸந்ததிகளுக்கும் வீண் கஷ்டம் வியவஹாராதிகள் உண்டாகிப் பெருந் துக்கத் திற்குக் காரணமாகும். ஆகவே கனவான்களும் கண்டபடி வீட்டைக் கட்டிவிடக்கூடாது.

வீடு கட்டுவது மிகக் கஷ்டமான தொழில். அதில் ஒரு உத்தேசத்துடன் தொடங்கினல் முடியும் முன் எண்ணிய தொகைக்குமேல் அதி கத்தொகை இழுத்துவிடும் என்பது எல்லோரும் அறிந்த விஷயமே. அதனால்தான் 'வீட்டைக்கட் டிப்பார், கல்யாணத்தை செய்துபார்' என்ற பழ மொழி ஒன்று நம்முள் வழங்கி வருகிறது. ஒரு வனுக்குப் பொருள் வந்துவிட்டால் அதை வீடுகட்டும் விதத்தில்தான் அவன் காட்டுவது வழக்கம். ஒருகோடி ரூபாய்க்கு ஒரு பொன் கலசம் வீட்டில் வைப்பது என்று பட்டணத்துப் பிள்ளை காலம் முதல் வழக்கமாக விருக்கிறது. வீட்டின் ஒழுங்கைக்கண்டு அதன் சொந்தக்கா ரன் திரவியம் குணம் முதலியவைகளை ஒருவாறு அளவிடலாம். ஆகவே பொருளைச் செலவழித்து பிறர் மெச்ச ஸுகமனுபவிக்கும் விஷயங்களில் வீடுகட்டி வாழ்வது ஒரு முக்கியமாக விதம். ஆத லால் இந்த விஷயத்தை ஒரு நீதிவாக்கியத்துள் ஔவை சேர்த்தாள்.

இந்நீதிவாக்கியத்துள் இதுவரையில்கூறியதை விட ஆழ்ந்த கருத்து ஒன்று அடங்கியிருக் கிறது. பொருள் செலவிட்டு ஸுகிப்பதில் வீடு கட்டி வாழ்வது ஒன்ருதலால் வீடு என்ற பதம் இங்கு பொருளால் வரக்கூடிய உலக இன்பங்களுக்கு உபலக்ஷணமாக வுள்ளது. ஆகவே இந்நீதிவாக்கியத்திற்கு, வீண்சஞ்சலத் திற்கு இடனுகும்படி பொருளைச் செலவிட்டு உலக இன்பங்களில் அழுந்தாதே. பெரும் வீடு கட்டல், நாடகம் பார்த்தல், கூத்தடித்தல், பெரும்விருந்திடல் முதலிய உலகஸுகம்,கீர்த்தி முதலிய நிலையாதவைகளுக்கிடனுக இருப்பவை களில், உனக்குக் கிடைத்த பணத்தை அதிக மாகச் செலவிடாதே என்பது இதில் புதைந்த பொருள். பின்னைப் பொருளை எவ்வாறு செல விடவேண்டும்? பிறர் துயரம் நீக்கல், பொதுநன் மைக்குழைத்தல், தானம், தர்மம், கடவுள் வழி பாடு முதலிய மாருப் பலனைக் கொடுக்கக்கூடிய வழிகளில்பணத்தைப்பெரும்பாலும் செலவிட்டு, வாழ்க்கை ஸுகத்திற்கு அவசியமாக வேண்டிய வீடு முதலியவைகளில் சிறுபான்மை சுருக்கிச் செலவிடவேண்டும். இதுதான் அறிவுடையோர் நெறி. இக்கருத்தையே,

நித்தியமாம் வீட்டுநெறியிலிடம் பாடல்லாற்
பொய்த்த வின்ப வீட்டில் பொருளடையா—தத்தம்
நடையறியும் புன்னைவன நாதனே பூமி
யிடையிடம் படவீடி டேல்.

என்ற ஆத்திசூடி வெண்பா அடக்கியுள்ளது.

அனுவசியமாகப் புதிய ஸபை ஒன்று கட்டி துர்யோதனுதியர் பாண்டவர்களை வந்து பார்த் துப்போகும்படி அழைத்தனர். அங்கு வந்த தும் மாயச்சூதைத் தொடங்கி வீண் விரோ தம் உண்டாக்கி முடிவில் மஹாபாரத யுத்தம் விளையும்படி செய்து எல்லோரும் மாண்டனர். உலக இன்பங்களை ஸம்பாதிப்பதிலேயே பொரு ளைச்செலவிட்டு ஓயா வியவஹாரம் கவலை முதலி யவைகளுக்கு ஆளாகித் தத்தளிப்பவர் இக்காலத் தில் கோடானுகோடிப் பெயர்கள் உண்டு. இவை கள் எல்லாம் இந்நீதி வாக்கியப்படி நடக்காதத னுல் வரும் கேடு இன்னது என்பதை நன்கு விளக்குகின்றன.

### 9. இணக்கமறிந்திணங்கு

சிநேஹத்திற்குரிய நற்குண நற்செய்கைகள் ஒருவனிடம் இருக்கின்றனவா என்று ஆராய்ந்து பின்னர் அவனோடு சிநேஹம் செய் என்பது இதன் பொருள். இதன் பொருள் ஒருவாறு 'சேரிடமறிந்துசேர்' என்ற ஆத்திசூடி வாக்கியத்தில் அடங்கி இருக்கிறது. முன்னதில் சிநேஹிதனது குணத்தையும், பின்னதில் அவன் நிலை குணம் முதலிய அவனோடு ஸம்பந்தப்பட்டவைகளை எல்லாவற்றையும் ஆராயவேண்டும் என்பதாயிற்று. இவ்வாறிணங்காவிடில் வருங்கேடு 'நல்லிணக்கமல்லது அல்லற்படுத்தும்' என்ற கொன்றைவேந்தன் வாக்கியத்தில் அமைந்து கிடக்கிறது.

இதனால் ஸத்ஸங்கமே செய்யவேண்டும் என்பதாயிற்று. [இந்த இடத்தில் விவேக போதினி 3-ம் தொகுதி பக்கம் 105-இல் இருக்கும் ஸத்ஸங்க விஷயமான குறிப்பை வாசிக்கவும்.]

நல்லோரிணக்க மல்லது வேறுவித இணக்கம் ஏற்பட்டால் பெருங்கேடு உண்டாகும். நல்லோரிணக்கம் இல்லாமல் கெட்டவர்களோடு சேர்ந்திருந்த நல்லவர்கள் பட்ட பாடுகளை ராமாயண மஹாபாரதத்தில் காணலாம். அவர்கள் பெயர்களை கூறிய உடன் எல்லாம் நன்கு விளங்கிவிடும். அவையாவன, விபீஷணர், கர்ணன், பீஷ்மர், விதுரர் என்பவைகளே. இதில் விதுரர் தவிர மற்றவர்கள் மிக வருத்தத்திற்கும் பழிச்சொற்களுக்கும் ஆளாயினர். விபீஷணர் எவ்வளவு நல்லவராயினும் ராவணனோடு சேர்ந்திருந்துவிட்டு ராமர்பக்கம் வந்து ராவணன் ரஹஸ்யங்களை வெளியிட்டு அவனுக்குக் கேடு விளைத்தார். இதைவிட அவர் உயிரை மாய்த்துக் கொண்டிருந்தால் மேன்மையாக விருக்கும். நம்பிக்கை துரோகிக்கு இக்காலத்தில் விபீஷணன் என்ற பெயர் வந்துவிட்டது. தகுந்த ஸமயத்தில் தீயோரிணக்கம் விட்டு மேல் எதிரிக்கு அனுகூலம் செய்ததனால்தான் விபீஷணருக்கு இப்பழி வந்தது. கர்ணன் விபீஷணரைப்பார்க்கினும் மேன்மையாக நடந்துகொண்ட போதிலும் தீயோரிணக்கத்தால் கொடியவனாகிவிட்டான். துஷ்ட சதுஷ்டயர் (துர்யோதனன், துச்சாஸன், சகுனி, கர்ணன்) என்று மஹாபாரதத்தில் கூறப்படும் கூட்டத்தாருள் சேர்ந்தவனாகிவிட்டான் கர்ணன். அவன் கொடை உண்ட வீட்டிற்கு இரண்டகமின்மை ஆகிய நற்குணங்கள் யாவும் அவன் கொடுங்குணங்களுக்கு முன் ஒளி யிழந்துவிடுகின்றன. பீஷ்மர் இவர்களை எல்லாம்விட மேன்மையாக நடந்தவர். விபீஷணரைப்போல துரோகியாகாமலும், கர்ணனைப்போலக் கெட்டுவிடாமலும், பாண்டவர் இணக்கம் மாறாமலும் இருந்தார். ஆனால் துர்யோதனனிடமே வெகுகாலம் இணங்கியிருந்துவிட்டபடியால் தர்ம ஸங்கட ஸமயங்களில் புத்திக்கலக்கமும், மனம் ஓரிடமிருக்க தேஹத்தை எதிரிகளுக்கு உபயோகப்படும்படியான கஷ்ட நிலைக்கு அவர் வரவேண்டியதாயிற்று. விதுரர் நடத்தையே இக்கூட்டத்தார் நடத்தையுள் மிகச் சிறந்தது. முற்கூறிய மூவருக்கும் உள்ள குற்றம் குறை ஒன்றும் இவர் நடத்தையில்இல்லை. கொடியவர் மத்தியில் இருக்கவேண்டி யிருந்தபோதிலும் இவருக்கு நல்லோரிணக்கம் வெளிப்படையாக விருந்தபடியால் கொடியவர்கள் தம்முள் ஒருவராக இவரை மதிக்கவில்லை. வாழ்நாள் முழுவதும் அவர்களை விட்டு ஒதுங்கியே இருந்து முடிவில் பிரிந்துபோய், சோற்றுக்கடனை உத்தேசித்து பாண்டவர்கள் பக்கமும் சேராமலிருந்துவிட்டார். ஆகவே நல்லோர்களுக்குக் கெட்டவர் இணக்கம் ஏற்பட்டுவிட்டால் என்ன பாடுபடவேண்டியதாகிறது. நேர்மையாக நடக்க முடியாமல் போய்விடும். கூடியவரை இருபுறத்தையும் ஸரித்தட்டிக்கொண்டுதான் போகவேண்டிவரும். இதில் பெரும் தர்ம ஸங்கடங்கள் வந்து மனதைச் சின்னபின்னப் படுத்திவிடும். இதனால்தான் 'அற்ப ஸஹவாஸம் ப்ராண ஸங்கடம்' என்று பெரியோர் கூறுவர்.

நல்லோரிணக்கத்திலோ இம்மாதிரியான கஷ்டங்கள் ஒன்றுமில்லை. அவர்களிடம் ஸத்யமும் நேர்மையும் குடிகொண்டிருப்பதால் தர்மஸங்கட நிலைகள் வரமாட்டா. கெட்ட குணத்தில் ஒருவித வெறுப்பு இருப்பதால் நாம் வழிதப்பும்பொழுது நம்மைக் கூசாது கண்டித்து நேர்வழி திருப்புவர். மஹாபாரதத்தில் பாண்டவர்களுடன் சிநேஹம் செய்தவர்கள் ஸுகமாக விருந்ததை நோக்கினால் இந்நிலை நன்கு விளங்கும். நல்லோர் தொழிலும் அவர் வாக்கும்சேர்ந்து நம்மைச் சீர்திருத்தி மேன்மைப்படுத்தும். நல்லோரிடம் சிநேஹித்து ஆபத்து நீங்கி ஸுகித்ததற்கும் கெட்டவர்களோடு சேர்ந்து கஷ்டப்பட்டதற்கும் வேண்டிய கதைகள் பஞ்சதந்திரத்தில் உள. அவைகளுள்

# இராஜாங்க முறை

## பிரதமக் கொள்கைகள்

## MORALS AND CIVICS : ELEMENTARY PRINCIPLES

### போர்த்துக்கேசிய ஸகோதரர்கள்

### PORTUGUESE BROTHERS

பதினாறுவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் போர்த்துகேசிய கப்பல்கள் இந்தியாவில் உள்ள செழிப்பான ஸ்தானமாகிய கோவா என்ற ஊருக்கு வரத்தலைப்பட்டன. அவ்விதம் கோவாவுக்குச் சென்ற கப்பல்களுள் ஒன்றில் ஏறக்குறைய பன்னீராயிரம் ஜனங்கள் இருந்தார்கள். அவர்கள் கப்பல் யாத்திரை செய்ய ஆரம்பித்த காலத்தில் அவர்களுக்கு இடையூறு ஒன்றுமில்லை. ஆனால் ஆப்பிரிக்கா கண்டத்தின் தெற்கேயுள்ள முனையாகிய "நன்னம்பிக்கை முனை" என்றுவழங்கும்(Cape of Good Hope) முனையைக் கடந்து வடகிழக்காக இந்தியாவை நோக்கிச் செல்லும்போது அவர்களுடைய கப்பல் ஓர் பாறையில் மோதி உடைந்தது. தண்ணீர் கப்பலுக்குள் வர ஆரம்பித்தது. வெகு சீக்கிரத்தில் கப்பல் அமிழ்ந்து விடுமென்றே அனைவரும் யோசித்தார்கள். அச்சமயத்தில் பெரிய கப்பலின் ஓரத்தில் கட்டி தொங்கவிட்டிருக்கும் சிறு படகு ஒன்றைக் கப்பலோட்டும் தலைவன் ஸமுத்திரத்தில் எறிந்து அதில் கொஞ்சம் உணவு பதார்த்தங்களையும் போட்டு தானும் தன்னோடு இன்னும் பத்தொன்பது பேரும் அதில் இறங்கி நின்று வேறு யாராவது அதில் வந்து அதனையும் அமிழச் செய்வார்களென்று எண்ணி தங்கள் கையில் கத்தியை எடுத்துக் கொண்டு ஒருவரும் அந்தப்படகுக்குள் வாராதபடி தடுத்தார்கள். இவ்விதமாக அவர்கள் இந்திய மஹா ஸமுத்திரத்தில் பிரயாணம் செல்லும் போது அவர்களுக்கு நல்ல தண்ணீர்கூட கிடையாது. சில நாளைக்கெல்லாம் அந்தக் கப்பல் மூழ்கிப் போயிற்று.

ஆனால் சிறு படகிற் சென்றவர்களோ நான்கு நாள் இப்படியும் அப்படியும் சென்றார்கள். கப்பல் தலைவன் நோயால் பீடிக்கப்பட்டு இறந்தான். தலைவன் இறந்ததால் அந்தப் படகில் குழப்பம் உண்டாயிற்று. ஒவ்வொருவனும் மற்றவரை அதிகாரம் செய்ய தலைப்பட்டான். எல்லாரும் அதிகாரம் செலுத்த முயன்றார்களே ஒழிய ஒருவராவது பின் சொல்வதைக் கேட்டு கீழ்ப்படிந்து நடக்கவில்லை. கடைசியில் அவர்கள் தங்களுக்குள்ளேயே ஒருவனைத் தலைவனாக நியமித்து அவன் சொல்லியபடியே கேட்கவேண்டுமென்று தீர்மானித்தார்கள். இவ்விதமாகத் தலைவனாக நியமிக்கப்பெற்றவன் ஓர் உபாயம் செய்தான். படகில் இருந்த ஆகாரம் சில நாளைக்குத்தான் காணுமென்று அவன் படகிலுள்ளவர்கள் பெயரை எழுதிய சீட்டுகளைக் குலுக்கி நான்காவதாக வரும் ஒவ்வொருவனையும் ஸமுத்திரத்தில் தள்ளிவிட வேண்டுமென்று சொன்னான். இப்போது படகில் இருந்தவர்கள் மொத்தம் பத்தொன்பது பேர்தான். அவர்களுள் ஒருவன் ஸந்யாசி. இன்னொருவன் தச்சன். அந்தியகாலத்தில் நன்மார்க்க வார்த்தைகளைச் சொல்லித் தேற்றுவதற்கு ஸந்யாசி வேண்டியிருந்தது. படகை அப்போதைக்கப்போது பழுது பார்த்து வேலைசெய்ய தச்சன் அவசியமாக வேண்டியவனாதலால், அவ்விருவரையும் நீக்கிவிட்டார்கள். புதிதாக நியமனமான படகுத்தலைவன் வயது முதிர்ந்தவனாகவும் உபயோக முள்ளவனாகவும் இருந்தமையால் அவனையும் நீக்கிவிட்டு மற்ற பதினாறு மனிதர்களுள் நான்கு பேரை ஸமுத்திரத்தில் தள்ளிவிடுவதாக யோசித்தார்கள்.

அவ்வாறு தேர்ந்தெடுக்கப் பெற்றவர்களுள் முதல் மூன்றுபேரும் தங்கள் மதாசாரத்துக்குத் தக்கவாறு சில சடங்குகளை முடித்துவிட்டு ஸமுத்திரத்தில் குதித்தார்கள். ஆனால் நான்காவதாகிய போர்த்துகேசியனுடைய தம்பியும் அந்த படகிலேயே இருந்தான். மூத்தவனைப் படகிலுள்ளவர்கள் ஸமுத்திரத்தில் தள்ள எத்தனித்த போது, இளையவன் கண்ணில் நீர் ஆறாய்ப் பெருக தமையனைத் தழுவி அவனுக்காகத் தான் உயிர் விடுவதாகக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். தமையனுக்கு மனைவியும் மக்களு மிருந்தன. அன்றியும் குடும்பத்தில் மூன்று ஸகோதரிகள் அவனால் போஷிக்கப்பெற்று வந்தார்கள். இளையவனுக்கு விவாஹமே ஆகவில்லை, ஆதலால் இளையோன் தான் இறப்பதே தகுதியென்றும் அதனால் வேறொருவருக்கும் கஷ்டமில்லை யென்றும் சொல்லி இறக்கத் துணிந்தான். ஆனால் மூத்தவனோ தன்தம்பியின் அன்புக்கு மனமுருகி தனக்காக அவன் இறக்கக்கூடாதென்று வாதாடினான். இளையவன் பிடிவாதமாகத் தானே இறப்பதாகச் சொல்லி மூத்தவன் பாதத்தில் வீழ்ந்து

அவன் காலைக் கெட்டியாகக் கட்டிக்கொண்டான். ஆதலால் அவர்களிருவரையும் விலக்க முடியவில்லை. அவர்கள் இவ்வாறு சிறிது நேரம் மன்றுடினார்கள். மூத்தவன், தம்பியை நோக்கி "நீயே என் சொத்து முழுமையும் அடைந்து என் ஸகோதரிகளேயும், மனைவி, மக்களையும் காப்பாற்று" என்று வற்புறுத்தினன். ஆனால் அவன் என்ன சொல்லியும் இளையவன் கேட்கவில்லை. கடைசியில் இளையவன் பிடிவாதம் செய்து தானே இறப்பதாகச் சொன்னமையால் படகிலுள்ளவர்கள் அவனை சமுத்திரத்தில் தள்ளிவிட்டார்கள்.

அவனுக்கு நன்றாக நீந்தத் தெரியும் ஆதலால் அவன் சீக்கிரத்தில் நீந்தி வந்து படகின் ஓரத்தை ஒரு கையாற் பிடித்தான். அப்போது ஒரு மாலுமி அந்தக் கையை ஓர் கத்தியால் வெட்டினன். பிறகு ஒருவாறு ஸமாளித்துக்கொண்டு அவன் மற்றொரு கையாற் படகைப் பிடித்தான். அந்தக் கையையும் மாலுமி கத்தியால் வெட்டி வீழ்த்தினன். இரத்தம் பெருகிக்கொண்டிருந்த இரண்டு முட்டிக்கைகளையும் உயரத் தூக்கிக் கொண்டு அவன் மறுபடியும் காலால் உதைத்து நீந்திக்கொண்டு தண்ணீரில் மூழ்கிவிடாமல் ஸமாளித்துக்கொண்டு வந்தான். அவன் இவ்வாறு பரிதாபமான நிலையிலிருந்ததையும், அவன் ஸகோதரனிடத்தில் வைத்திருந்த வாஞ்சையையும் கண்டு, படகிலிருந்தவர்கள் பச்சாத்தாபப்பட்டு "அவன் ஒருவன்தானே, அவனைக் காப்பாற்றிவிடுவோம்" என்று ஒரே மனதோடு கூவினர்கள். பிறகு அவனைத் தண்ணீரிலிருந்து படகின் மேலேற்றிக்கொண்டு அவன் கைப்புண்ணுக்கு அந்த ஸமயத்தில் எவ்வளவு சிகிச்சை செய்யக்கூடுமோ அவ்வளவு சிகிச்சை செய்தார்கள். அன்றிரவு முழுமையும் படகைச் செலுத்திக்கொண்டே போய், மறுநாள் உதயத்தில் ஓர் நிலத்தைக் கண்டார்கள். அது ஆபிரிக்கா தேசத்தில் போர்த்துகேசியர் குடியேறிய வேறொரு நாட்டுக்குச் சமீபத்தில் உள்ள மோஜாம்பீக் மலையெனத் தெரிந்துகொண்டார்கள். அங்கேயே அவர்கள் சில தினங்கள் தங்கியிருந்து லிஸ்பன் நகரத்திலிருந்து வந்ததொரு கப்பலில்ஏறி கோவா என்ற ஊருக்கு க்ஷேமமாய் வந்து சேர்ந்தார்கள்.

அவ்வூரில் லின்ஸ்காடன் என்ற புலவர் ஒருவர், இருகையும் இழந்த அந்தப் போர்த்துகேசியனேயும் அவன் தமையனையும் தான் நேராகவே கண்டதாகவும், அன்றிரவே அவர்களோடு சேர்ந்து உண்டதாகவும், அந்த ஸகோதரர் மூலமாகவும், மற்ற மாலுமிகள் மூலமாகவும், மேற்கூறியபடி நடந்த விருத்தாந்தங்களைத் தான் நேரே கேட்டதாகவும் எழுதியிருக்கிறார்.

## கிழவனும், ஒருகட்டு கழிகளும்.

ஒரு கிழவனுக்கு அநேக குழந்தைகள் இருந்தார்கள். அவர்கள் ஒருவரோடொருவர் அடிக்கடி சண்டை போட்டுக்கொண்டிருந்தார்கள். கிழவன் அவர்களைச் சமாதானம் செய்ய எவ்வளவோ முயன்றும் பயன்படவில்லை. ஆதலால் அவன் ஒரு யுக்தி செய்தான். தன் பிள்ளைகளைத் தன் முன்னே அழைத்து ஒரு கட்டு கழிகளைக் கொண்டுவரச் சொன்னன். பிறகு ஒவ்வொருவரையும் தனித்தனியே அழைத்து அந்தக் கட்டைப்பிரயாசைப்பட்டாகிலும் உடைக்க முடியுமா என்று பார்க்கச் சொன்னன். எவ்வளவு முயன்றும் அவர்களால் அது முடியவில்லை.

பிறகு அந்தக்கட்டு கழிகளையும் அவிழ்த்து ஒவ்வொரு பிள்ளையிடத்திலும் ஒவ்வொரு கழியைக் கொடுத்து அதை உடைக்கச் சொன்னன். அவர்கள் வெகு சுலபமாய் உடைத்தார்கள். தகப்பன் அந்த மூடப்பிள்ளைகளைப் பார்த்து "சேர்ந்து வாழ்தல் வலிமை என்பதை நீங்கள் கவனியுங்கள். சேர்ந்திருக்கும்பொழுது கழிகளை உடைக்க முடியவில்லை. ஆனால் அவற்றைத் தனித்தனியே பிறித்தபோது உடைத்துவிட்டீர்கள். இதைக்கொண்டு நீங்கள் சண்டை போடக்கூடாதென்பதும், ஒருவரோடொருவர், சிநேகமாக இருக்கவேண்டுமென்பதும் அப்படியிருந்தால், உங்களுக்கு ஒருவராலும் தீங்கு ஒன்றும் செய்யமுடியாது என்பதையும் கவனியுங்கள்" என்றான். பிள்ளைகள் தமது தகப்பன் சொன்ன சிறந்த புத்தியை மறவாமலிருந்தார்கள்.

குடும்பத்தில் ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய கடமைகள்:—

சகோதரர்களும், சகோதரிகளும் தம்மாலியன்றவரையில் குடும்பத்தின் க்ஷேமத்தை உத்தேசித்தே ஒவ்வொரு காரியத்தையும் செய்ய வேண்டும். தகப்பன் தாய், செய்யவேண்டி இருக்கிற கடினமான தொழில்களில் சகோதரர்கள் அவர்களுக்கு உதவிசெய்ய சகோதரிகள் குடும்ப விஷயங்களைக் கவனித்து பிறகு தாம் இல்லற தருமத்தை நடத்த சக்தியுள்ளவர்களாகிறார்கள்.

சில துக்க சமயங்களில், குடும்பத்தில் மூத்த பிள்ளையும், மூத்த பெண்ணும் தமக்கென்று ஏற்பட்ட சில முக்கிய காரியங்களைச் செய்ய நேரும். நமது வாழ்நாளில் நல்ல விஷயங்களும் கெட்ட விஷயங்களும் நடக்கும். ஆனால் கெட்டவை நடக்கும்போது நாம் எவ்வாறு இருக்க வேண்டுமென்பதை நாம் நன்றாக அறிந்திருக்க வேண்டும். ஏனென்றால், அப்போது செய்யும் காரியங்கள்தான் முக்கிய கடமைகளாகும். தகப்பன் இறந்துபோனாலும் அல்லது மிகக் காயலாக வாக இருந்தாலும், மூத்த குமாரன் தன் தாயார் சொற்படிகேட்டுக் குடும்பபாரத்தை வகிக்கவேண்டும். அம்மாதிரியே தாயாருக்கு ஓர் ஆபத்து நேர்ந்தால், மூத்த குமாரி குடும்ப விஷயங்களைக் கவனிக்கவேண்டும். எந்தக் குடும்பத்திலும் அதிலுள்ளஜனங்கள் தமக்குள் விசுவாசமாக இருந்தாலன்றிக் குடும்பம் சந்தோஷமாக இராது. இதை நாம் ஏற்கனவே சொல்லியிருக்கிறோம். இனி எத்தனை முறை சொன்னாலும் சொல்லலாம். ஏனெனில், இவ்விஷயம் மிகவும் முக்கியமானது. சில வீடுகளில் தமயனும் தம்பியும் சொத்துக்காக ஆசைப்பட்டு அக்கிரமமாகச் சண்டை செய்கிறார்கள். அதாவது அவர்களுக்குள், அற்ப குணமும் சுயநலமும், பொறாமையும், அச்சமயம் குடி கொள்ளுகிறது. குழந்தைகளே! உங்களுக்கு இப்படிப்பட்ட விஷயங்கள் இதுவரையில் தெரியாமலிருந்தாலும், இப்போது அவற்றைப்பற்றி யோசித்துப் பாருங்கள். கொஞ்சம் ரூபாய் அதிகமாய் இருப்பதால் உண்டாகும் ஆனந்தம் மேலா, அல்லது, சிறு பிராயம் முதல் நீ நேசித்து வந்த சகோதரன் சகோதரி மனதைச் சந்தோஷமாக வைப்பதில் உண்டாகும் ஆனந்தம் மேலா ?

இப்பொழுதே இதைப்பற்றி யோசித்து இன்னும் நீங்கள் வாசிக்கப் போகும் புஸ்தகங்களில் சொல்லப்படும் அரிய விஷயங்களையும் மனதிற் கொண்டு, தக்க குணசிரேஷ்டர்கள் எவ்வெக் காலங்களில் எவ்விதம் நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதையும் அறிந்து, அவர்கள் போன வழியே உறுதியெனநினைத்து ஒவ்வொருகாரியத்தையும் செய்யுங்கள்.முடிவாக இப்போது நீங்கள் எப்படி நன்றியுள்ள குழந்தைகளாக இருக்கிறீர்களோ, அப்படியே ஆயுள் உள்ள அளவும், பிரிய சகோதரர்களாக உமது வாழ்நாட்களைச் செலுத்துங்கள். C. S. சுந்தரம் அய்யர் பி.ஏ., எல்.டி.

# சக்திதத்வ போதினி

## PHYSICS PRIMER

## ஒளியின் போக்குமாற்றம்

## Refraction of Light

ஒளி ஊடுருவிச் செல்லா? இருண்ட வஸ்துகளில் விழுங்கால் இவ்வாறு பிரதிபலித்து அற்புதத் தோற்றங்களை உண்டாக்குகிறது என்பதை முன்னரே விஸ்தரித்தாகிவிட்டது. இனி ஒளி ஊடுருவிச் செல்லக்கூடிய வஸ்துக்களுள் எவ்வாறு செல்லும் என்பதைப்பற்றிச் சற்று விசாரிப்போம்.



பரிசோதனைக்கு எளிதில் ஸஹாயமாயும், ஸாதாரணமாக அகப்படக்கூடியதாயும் உள்ள ஒளியை ஊடுருவவிடும் வஸ்துக்கள்,கண்ணாடியும் தண்ணீருமே. ஒரு பாத்திரத்தை எடுத்து அடியில் கல் முதலியன வைத்துச் சரித்து நிறுத்தி ஸூர்யன் ஒளி ஸரியாக எதிர்அடிப் பாகத்தில் விழ, அடித்தட்டு முழுமையும் நிழலுள் மறையும்படி வைத்துவிடுவோம். பின்னர்உள்ளே தண்ணீரை விடுவோம். உடனே நிழலுள் மறைந்திருந்த அடிபாகத்தில் கொஞ்சதூரம் ஒளி

சென்று தாக்கும். இதனாலே பாத்திர நுனியில் தட்டி நேராகப் பாத்திரத்தின் எதிர் அடிபக்கத்திற்குப் போகும் ஒளி தண்ணீர் விட்டதும் போக்குமாறி அடிபாகத்தில் கொஞ்சதூரம்வரையில் பிரகாசத்துள்ளாக்கியது என்பது விளங்கும். ஒளிபடும் பாத்திர நுனியிலிருந்து தண்ணீர் மட்டத்திற்கு ஒரு நேர்கோணக்கோடு இழுத்து. அதைத் தண்ணீருள் நீட்டிவிட்டால்; ஒளி, தண்ணீருள் போகுங்கால் இந்த நேர்கோட்டிற்கு அருகாமையில் நகர்ந்துவிட்டது என்று தெரியவரும்.



இதுபோலவே தண்ணீருள்ளிருந்து வெளியே வரும் ஒளியின் போக்கைப்பற்றி விசாரிப்போம். ஒரு பாத்திரத்துள் ஒரு ரூபாயை வைத்து, அதை அப்பாத்திரத்தின் நுனி சரியாக மறைக்கும்படியாகவும் சற்று உயர்ந்து நோக்கில் ரூபாய் தெரியும்படியாகவும் உள்ள இடத்தில் நின்று தரையில் அங்கு கோடிழுத்து விடுவோம். பின்னர் ரூபாய் அசையாதவண்ணம் ஜாக்கிரதையுடன் மெதுவாகத் தண்ணீரைப் பாத்திரத்துள் விடுவோம். பாத்திரம் நிறைந்ததும் முன்னின்ற விடத்தில் நின்று நோக்குவோம். ரூபாய் நன்றாகத் தெரியும். கொஞ்ச தூரம் பாத்திரத்தை விட்டு விலகிப்போகும் வரையிலும் ரூபாய் தெரிந்துகொண்டேயிருக்கும். மேலும் ரூபாய் உயர்ந்தும் காணப்படும். இதிலிருந்து முன்னர்



பாத்திர நுனியில் தட்டிக்கொண்டு ரூபாயிலிருந்து வந்த ஒளியும் அதன் அருகிலுள்ள ஒளியும் சற்று தாழ்த்தப்பட்டு நமது கண்ணுள் விழவேண்டும் என்று அறிந்துகொள்ளலாம். இவ்வொளி படும் தண்ணீர்மட்டத்தில் ஒரு நேர்கோணக்கோடு கிழித்துத் தண்ணீருள் நீட்டினால் தண்ணீருள்ளிருந்த ஒளியின் வழியைவிட வெளியே உள்ள வழி நேர்கோணக்கோட்டை விட்டு விலகியிருக்கிறது என்பது தெரியவரும்.



ஆகவே (1) ஊடுருவிப்போகவிடும் வஸ்துக்கள் வழியாக ஒளி போகுங்கால் போக்குமாற்றம் ஏற்படுகிறது. (2) ஒளிவஸ்துவிலிருந்து அடர்த்தி அதிகமான வஸ்துவுள் போகுங்கால் அதனுடன் ஸம்பந்தப்பட இடைமட்டத்தின் நேர்கோணகோட்டைநோக்கி நெருங்கியும் அடர்த்தி குறைந்த வஸ்துவுள்ளே போகுங்கால் இடைமட்ட நேர்கோணகோட்டைவிட்டு விலகியும் ஒளிவழி ஏற்படுகின்றது (3) வரும் ஒளியும் போகும் ஒளியும்

இடைமட்ட நேர்கோடும் ஒரே மட்டத்திலிருக்கின்றன என்றும் வெளியாகும்.

ஆனால் வஸ்துக்கள் உயர்ந்து காணப்படுவதற்குக்காரணம் யாது என்ற சங்கை நிற்கும். போக்கு மாறிய ஒளி நமது கண்ணில் பட்டதும், அது எங்கிருந்து வந்தபோதிலும், மாறியவழிக்கு நேரே வஸ்து இருப்பதாகக் காட்டும் (கண்ணாடியுள் தெரியும் ப்ரதிபிம்பத்திற்கும் காரணம் இம்மாதிரிதான்.) வஸ்துவை நேரே மேலே இருந்து நோக்கில் அதேஇடத்தில்தான் உயர்ந்துதெரியும். ஆகவே ஒதுங்கி நோக்கில் நேர் மேலே கிளம்பும். கோடும், மாறிய ஒளிவழியின் ஒழுங்கும் சேரும் பாகத்தில் வஸ்து தெரிவதால் வஸ்து உயர்ந்து காணப்படும். இக்காரணம் பற்றித்தான், தெளிவான நீரமைந்த ஓடை முதலியவைகளில் அடிபாகம் உயர்ந்து காண, ஆழமே இல்லாதது போன்ற மயக்கத்தை உண்டாக்கும். அங்கு இறங்கிவிட்டால் நமக்கு நிலைக்காமலும் போய்விடலாம்.

ஒரு தடியை தண்ணீருள் தோய்த்தால், தோய்ந்த பாகம் தண்ணீருள் ஒடிந்துவிட்டதாகத் தோற்றும். இதற்கும் இந்தப் போக்குமாற்றம் தான் காரணம். தோய்ந்த பாகத்திலிருக்கும் ஒவ்வொருவிடமும் அங்கங்கிருந்து எழும் ஒளியின் போக்கு மாற்றத்தால் உயர்ந்து காணப்படும். மேலேவரவா, ஏற்றம் தகுந்தபடி குறையத் தோய்ந்த பாகம் முழுவதும் மேலே உயர்ந்துவிட்டதுபோலக் காணப்பட அது ஒடிந்துவிட்டது போலக் காணப்படும். தடியை நேராகத் தண்ணீரில் தோய்த்துவிட்டால், தடி ஒடிந்தது போலக் காணப்படாது குறுகிவிட்டதுபோலக் காணப்படும். தோய்ந்த ஒவ்வொரு பாகமும் நேரே மேலே உயர்த்தப்பட, வளையாது குறுகி மாத்திரம் தோற்றுகிறது. ஒளியின் போக்கு மாற்றத்தால் ஏற்படும் விரிவின் பேதத்தினால் தான் வானம் உச்சியில் தணிந்தும் பக்கங்களில் போகப்போக அகன்றும் காணப்படுகின்றது. உச்சியிலிருந்து வாயுவாலும், தூசிகளாலும் பிரதிபலித்து வரும் ஒளி, நேர வருவதால் தூரக் குறுக்கமும், பக்கங்களிலிருந்து வருவன அதிகச் சாய்ந்துவர விரிவும் காணப்படும்.

அடர்த்திஅதிகமான வஸ்துவுள்ளிருக்கும்ஒளிவிடும் பொருள்களிலிருந்து வெளிப்படும் ஒளி எல்லாம் ஊடுருவி அடர்த்தி குறைந்த வஸ்துவுள் போவதில்லை. ஒரு மிக அகன்ற கண்ணாடிப் பாத்திரத்தில் ஒரு காசையிட்டு மேலே தண்ணீரை அதிகமாயில்லாது விட்டு நமது கண்ணிடமிருந்து மெதுவாகப் பாத்திரத்தை ஒதுக்கிக் கொண்டே போவோம். நமது பக்கம் இருக்கும் பாத்திர பாகத்தைத் தண்ணீர்மட்டம் வரையில் ஏதாவது இருண்ட வஸ்துவால் மூடிவிடுவோம். கொஞ்ச தூரம் போகிறவரை காசு தெரியும். பின்னர் மறைந்துவிடும். பாத்திரம் கண்ணாடியாதலால் நுனி மறைப்பது என்று கூறவிடமில்லை, மேல்மட்டம் கண்ணுக்குத் தெரிவதால் அதில் காசினிடமிருந்து வந்து தாக்கும் ஒளிபோக்கு மாறித் திரும்பிநமது கண்ணுருபுகவில்லை என்றுதான் கொள்ளவேண்டும். அடர்த்தியான வஸ்துவிலிருந்து வரும் ஒளி ஒரு சரிவுக்கு மேல்பட்டால் அது ஊடுருவிப் போக்கு மாறி மேலே போவதில்லை என்பது தெரிய வருகிறது.



ஆனால் இவ்வொளிகளின் கதி என்ன என்ற சங்கை பிறக்கும். இதை அறிய காசு மறைந்ததும் இடை மறைப்பை சற்று இறக்கிவிட்டு முழுவதையும் மேலே உயர்த்துவோம். அல்லது நமது கண்ணைக் கீழே தாழ்த்துவோம். ஒரு மட்டத்திற்கு மேல் போனதும், காசு கண்ணாடியில் பிரதிபிம்பமாகத் தெரிவதுபோலத் தண்ணீர்மட்டத்திற்கு மேலே தெரியும் ஆகவே முற்கூறிய வரம்பு கிடந்து சாய்ந்த ஒளிகள் தண்ணீர் மட்டத்தில் ப்ரதிபலிக்கின்றனவே ஒழிய ஊடுருவிப் போவதில்லை. இதற்கே **பூரண அந்தர்ப்ரதிபலனம்** என்று பெயர். ஒவ்வொரு அடர்ந்த வஸ்துவுக்கும் இம்மாதிரி வெவ்வேறான ஒருசரிவு வரம்பு ஒன்று உண்டு.

இதற்கு வரம்புச்சரிவு என்று பெயர். இம்மாதிரியான வரம்புச்சரிவுகள் ஸாதாரண வாயுமண்டலத்தில் ஸூர்யவெப்பம், சுற்றுமுள்ள குளிர்ச்சி முதலியவைகளால் ஏற்படுவதால்தான், கானல் நீரும், அதன் ரூபாந்திரங்களும் ஏற்படுகின்றன. கானல் நீரும் அதன் ரூபாந்தரங்களும் என்ற வியாஸத்தைப் பார்க்க விவேக போதினி தொகுதி I, பகுதி 9 பக்கம். 271)

இம்மாதிரியே கண்ணாடியுள்ளும் ஒளிபோக்கு மாறிப்போவதை எளிதில் சோதனை செய்து உணரலாம். சிறுபெட்டி போன்ற உருவுடைய கண்ணாடிக்கட்டியை எடுத்து அச்சுவரிகளிருக்கும் புஸ்தகத்தின் மேல் வைத்தால் கண்ணாடியுள்ளிருக்கும் ஒருவரியின்பாகம்உயர்ந்தும் இடம் மாறியும் காணப்படும். அந்தவரி நடுவில் பெயர்ந்து ஒருபுறம் நீங்கிவிட்டதாகத் தோன்றும். முதலில் ஒருபுறமிருந்து கண்ணாடிக் கட்டியில் புகும் ஒளிபாகம் அந்தவிடத்தின் நேர்கோணக் கோட்டை நோக்கி வளைகிறது, எதிர்புறமும் அந்தச் சரிவு மாறாது வந்து தாக்க, அங்கு மறுபடி எதிர்ப்புறமாக நேர்கோணக்கோட்டைவிட்டு விலகிச் சரிந்து, முன்வந்த ஒழுங்குபோலவே வேறிடத்திலிருந்துகிளம்பும்.முன்போன வழியே போகாவிடினும், அதே சரிவுடன் இது வெளி வரும்.

மூன்றுபட்டைக் கண்ணாடிகளின் வழியாகப் போகும் ஒளியைப்பற்றி விசாரிப்போம். போக்கு மாற்றம் ஒழுங்குப்படி ஒளி ஒரு பட்டையில் விழுந்து மறுபட்டைகளில் ஒன்றின் வழியாக வெளி ஏறுங்கால் எப்பொழுதும் பருமன் அதிகமான பாகத்தை நோக்கியும், பட்டை சேர்க்கைப் புறம் விட்டுவிலகியும் போகும். இதனால் ஒளி



விடும் வஸ்துவின் போலி ப்ரதிபிம்பம் பட்டை சேரும் பாகத்தை நோக்கி நகர்ந்து காணப்படும். இதனுள்போகும் ஒளியில் வர்ணமாறுபாடுகளும் காணப்படும். இதைப் பின்னர் எடுத்து விவரிப்போம்.

முப்பட்டைக் கண்ணாடிகளுள் இரண்டுபட்டை நேர்கோணமாகியும் ஸமமாகியும் அமைந்திருந்தால் பூர்ண அந்தர்ப்ரதிபலனம் ஏற்படும். இதனால் இம்மாதிரியான மூன்றுபட்டைக் கண்ணாடியைச் சில யந்திரங்களில் முகம் பார்க்கும் கண்ணாடிக்குப் பதிலாக உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது. ஸமப்பட்டைகளுள் ஒன்றில் ஒளி நேராக விழும்படிப் பிடித்தால் போக்குமாற்றம் ஒழுங்குப்படி மாறாமல் நேராக இவ்வொளி போய்



மூன்றாவது சரிவுப்பட்டையின் உட்புறம் தாக்கிவிடும். அங்குப் போகுங்கால் அந்தப்பட்டை நேர்கோணக்கோட்டுக்கும் ஒளிக்கும் உள்ளசரிவு கண்ணாடிக்கு உள்ள வரம்புச் சரிவுக்கு மேற்பட்டிருக்கும். ஆதலால் இவ்வொளி அப்பட்டை வழி ஊடுருவிப்போகாது அங்குபூர்ண அந்தர்ப்ரதிபலனமாகி இரண்டாம் ஸமப்பட்டையில் நேராகத்தாக்கி நேராக வெளி ஏறிவிடும். ஆகவே முதல் பட்டையைநேர் கீழ்மேலாகப் பிடித்து முற்கூறிய சோதனையைச் செய்தால், வெளிவரும் ஒளி தரையில் வந்துவிழும். இனிப் போக்கு மாற்றம் ஸம்பந்தமான விசித்திரக் கண்ணாடிகளைப் பற்றிப் பின்னர் விரிப்போம்.

---

9. இணக்கமறிந்திணங்கு

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

ஸுக்ரீவஸல்லாபமும் மித்ரபேதமுமே இவைகளுக்கு முறையே உதாரணங்கள்.

விக்ரமாதித்யன் தட்டானுடன் சேர்ந்து பட்டபாட்டை ஆத்திசூடி வெண்பாவில் குறிக்கப்பட்டிருக்கிறது.

> செய்யபுகம் விக்ரமா தித்தன் ஒரு தட்டாரப்
> பைய லுறவுபற்றிப் பட்டதனல்—வையம்
> மணக்குஞ் சீர்புன்னை வனநாதா நீயும்
> இணக்க மறிந்திணங்கு.

# நியாயமஞ்சரி

## POPULAR MAXIMS EXPLAINED

### 45. कूपमण्डूकन्यायः

కూపమణ్డూక న్యాయః

கூபமண்டூக நியாயம்

கிணற்றுத் தவளை நியாயம் இதுதான் 'கிணற்றுத்தவளைக்கு நாட்டு வளப்பம் ஏன் ?' என்ற பழமொழி ஒன்று உண்டு. கிணற்றுத் தவளை என்னும், தொடருக்கு தான் ஸம்பந்தப்பட்ட சிறு விஷயங்களைத் தவிர மற்றைய வெளி விஷய ஞானம் கொஞ்சமேனும் இல்லா நாட்டுப்புறத்தான் என்று பொருள். இவனுக்கு நாட்டு வளப்பம் ஏன் என்றால் இவனுக்கு வெளிநாட்டின் செழிப்பு முதலியவைகளை விசாரிக்க காரணம் என்ன, அதாவது இவன் அவைகளைக் கவனிக்கவேமாட்டான்: தன்னதே தனக்குப் பெரிதாகவிருக்கும் என்பதாயிற்று. இதிலிருந்து இந்த நியாயம் உபயோகப்படும்விதம் விளங்கும்.

இந்நியாய சம்பந்தமான கதைகூட ஒன்று உண்டு. ஒரு நாள் சமுத்திரத்தில் வசித்து வந்த தவளை ஒன்று, ஒரு கிணற்றிற்கு வந்து அங்கிருந்த தன் தோழனான தவளையைக் கண்டது. 'நீ எங்கிருந்து வருகிறாய்?' என்று அது கேட்க 'நான் கடலிலிருந்து வருகிறேன்' என்றது கடற்றவளை. 'கடல் எப்படி இருக்கும்?' என்ற கேள்வி பிறக்க, கடற்றவளை 'கடல் மிகப் பெரிய நீர்நிலை. அதற்கு எதிர்க்கரையே தெரியாது. . அது பரப்பில் ஒப்புயர்வற்றது' என்று வர்ணித்தது. 'என் கிணற்றைவிடப் பெரிய நீர்நிலை ஏது? நீ கூறுவது வெறும்புரட்டு' என்று கண்டித்தது கிணற்றுத் தவளை. கடற்றவளை எவ்வளவுதான் நயமாகப் பேசி 'பாராத விஷயங்களைப்பற்றி அவஸரமாகத் தமது அபிப்பிராயங்களை வெளியிடவேகூடாது. வெளியிட்டாலும் பார்க்கிறவரையில் அதைக் கடைப்பிடிக்காது தள்ளி வைத்திருக்க வேண்டும். அவ்வாறின்றிக் குரங்குப் பிடியாகத் தன் முதல் அபிப்பிராயமே ஸரி என்று பிடிவாதம் பிடிப்பது மூர்க்கத்தனம்'' என்று கூறியபோதிலும், தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதித்தது கிணற்றுத்தவளை. அதன் அறியாமையையும் முரட்டுத்தனத்தையும் கண்டு நகைத்துப் பரிஹாஸம் செய்துவிட்டு ஒதுங்கிவிட்டது கடற்றவளை.

இக்கதையிலிருந்து இந்நியாயத்தின் மதவிஷயப் பொருத்தம் நன்கு வெளியாகும். மதவாதிகள் பொதுவாகத் தமது மதமே உண்மை மதம் என்று மூர்க்க எண்ணங்கொண்டு, பிறமதம் எல்லாம் பொய்ம்மதங்கள் என்று அவதூறு பேசி மற்றைய மதஸ்தர்களை வெறுத்து மதத்துவேஷம் என்ற பேய் பிடித்து ஆட்டிவைக்க, பிறமதஸ்தர்களுக்கு அவர்கள் மதக்குற்றங்களையும் தன் மத சிறப்புக்களையும் மாத்திரம் சூதாக எடுத்துக்காட்டி, 'மூக்கறுத்துக்கொண்டால் ஸ்வாமி தெரியும்' என்று எல்லோரையும் மூக்கறையனுக்கிய மூக்கரையன் கதையாக, தன் மதத்தில் சேர்ந்தால்தான் பிறருக்குக் கதியுண்டு என்று இடித்துக்கூறி ஏமாந்தவர்களைத் தன் மதம் சேர்த்துத் தலையைத் தடவும் மதாபிமானிகள் நிறைந்த இக்காலத்தில், இந்நியாயத்தின் மதவிஷயப் பொருத்தத்திற்கு அதிகக் கஷ்டப்பட்டுத் தேடிப் பார்க்கவும் வேண்டுமா ? மதத்துவேஷமும், ஸ்வமதத்திற்கு ஆள்சேர்த்தல் என்ற துர்ஆக்ரஹமும் பிடித்தலைபவர்களே மத விஷயத்தில் காணப்படும் முதல்தரமான கிணற்றுத்தவளைகள்.

### 46. कूपयन्त्रघटिका न्यायः

కూపయన్త్రఘటికా న్యాయః

கூபயந்த்ரகடிகா நியாயம்

கிணற்று ராட்டணப் பானைகள் நியாயம் என்பது இதன் பொருள். கிணற்றில் ஸாதாரணமாக ஒரு ராட்டிணம் போட்டு அதில் நீளக் கயிறு மாட்டி இருநுனிகளிலும் பானைகள் கட்டி, இருபுறத்தில் ஆள்கள் நின்றுகொண்டு தோட்டத்திற்குத் தண்ணீர் இறைப்பது வழக்கம். இதோடு ஸம்பந்தப்பட்டது இந்த நியாயம். கிணறு எவ்வளவு ஆழமாக இருந்தாலும், தண்ணீர் எவ்வளவு ஆழத்திலிருந்தாலும், அதன் ஸ்வரூபம் இன்னது என்பதைப் பானையில் வரும் தண்ணீரிலிருந்து ஸாதாரண ஜனங்களும் கிரஹித்துக் கொள்ளலாம். இதுபோலச் சாஸ்திரங்கள் எவ்வளவு ஆழ்ந்த பொருள்களை மறைத்து வைத்திருந்தபோதிலும் குரு உபதேச மூலமாக அவைகளின் ஸ்வரூபத்தை ஸாதாரண சிஷ்யனுங்கூட எளிதில் உணருவான். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்க்க உதவும் அகப்பைவிஷயமும், இதுபோல விரிந்த விஷய ஸ்வரூபத்தை ஒன்றன் ஸஹாயத்தால் உணரும் திறன் நமக்கு உண்டாகும் இடங்களும் ஆகிய

இவைகள் எல்லாம் இந்நியாயம் உபயோகப்படும் இடங்கள்.

இந்நியாயத்திற்கு வேறு ஒரு உபயோகமும் உண்டு. தண்ணீர் இறைக்குங்கால் முற்கூறிய ராட்டணத்தில் ஒருபானை நீர் மொண்டு நிறைந்து ஏறுவதும் மறு பானை நீர் ஊற்றப்பட்டு காலியாகி இறங்குவதுமாக மாறிமாறி நடந்து கொண்டுவரும். இதுபோல உலகில் ஒருவன் பணக்காரனும் மற்றொருவன் ஏழையாயும், ஒருவனே ஒரு ஸமயம் ஏழையாயும் வேறொரு ஸமயம் பணக்காரனும் நிற்கச் செய்யும் விதிவிஷயத்தில் இந்நியாயம் நன்கு பொருந்தும். ஆகவே இது உலக விஷய ஸுகதுக்க மாறுபாடுகளைக் குறிக்கும்.

### 47. कूर्माङ्गन्यायः

కూర్మాఙ్గన్యాయః

### கூர்மாங்க நியாயம்

ஆமை அங்கநியாயம்என்பது இதன்பொருள். அபாயம் வருங்காலங்களில் ஆமை தனது ஐந்து அங்கங்களாகிய தலையையும் நான்கு கால்களையும் உள்ளே இழுத்துக்கொள்ளும். இதுபோல அறிவுடையோரும் விஷய ஸம்பந்தப்படுங்கால் தமது ஐந்துஇந்திரியங்களை உள்முகப்படுத்தித் தாக்கற்றுநிற்பார்கள். இந்திரிய நிக்காவிஷயமாகஇந்நியாயம் உபயோகப்படும். இக்கருத்தை பகவத்கீதையில் 'ஆமை தன் அங்கங்களை உள்ளே இழுத்துக் கொள்ளுவது போல, ஒருவன் இந்திரியங்களை விஷயங்களிலிருந்து உள்ளிழுத்துக் கொள்ளும் போதுதான் அவன் அறிவு திடப்பட்டது என்று கூறலாம்,' என்று பகவான் கூறுகிறார்.

இந்நியாயத்திற்கு வேறுவித உபயோகமும் உண்டு. ஆமை அங்கங்களைஉள்ளிழுத்துக் கொள்ளுங்கால் அவை மறைந்தும், வெளியில் நீட்டுங்கால் அவை வெளிப்பட்டும் நிற்கும். அதுபோலக் காரியங்களாகிய பானை, துணி முதலியவைகள் காரணங்களாகிய மண் பஞ்சுகளிலிருந்து வெளியேறுங்கால் வெளிப்படையாகத் தோன்றி, காரணங்களே யாகுங்கால் மறைந்தும் போகும். ஆகவே இல்லாதது உண்டாவதும் இல்லை. உள்ளது அழிவதும் இல்லை. ஒரு வஸ்துவின் வெறுந் தோற்ற மறைவே, ஸ்ருஷ்டி ஸம்ஹாரம் என்பது. ஆகவே ஸ்ருஷ்டி ஸம்ஹார விஷயமாக இந்நியாயம் உபயோகப்படும்.

# உல்லாஸன் சரித்திரம்

## ADVENTURES OF ULYSSES

(தொடர்ச்சி)

### எட்டாமத்தியாயம்

என்னை யொன்று மறியாத விளம்பருவந்தனிலே
என்னுளத் தேயமர்ந்தருளியான் மயங்குந்தோறும்
அன்னை யெனப்பரிந்தருளியப் போதைக்கப்போ
தப்பனெனத் தெளிவித்தே யறிவுறுத்தி நின்றாய்,
நின்னையெனக் கென்னென்பே னென்னுயிரென்பே
[னே
நீடிய வென்னுயிர்த்துணையா நேயமதென்பேனே,
இன்னலறுத் தருளுகின்றவென் குருவென்பேனே
என்னென்பேனென்னுடைய வின்பமதென்பேனே
அருளாரமுதே யென்னுடையவன்
பேயென்ற னறிவேயென்
பொருளா யகத்தும் புறத்துமென்னைப்
புணர்ந்த கருணைப்பொருப்பே மெய்த்
தெருளாமொளியே வெளியாகச்
சிற்றறிவின்கணே நடிக்கின்றாய்
இருளாயின வெலாந்தவிர்த்
தென்னெண்ண முடிப்பாயிப்போதே

என, உல்லாஸன் மினெர்வாவைத் தோத்தரித்துக் களித்திருக்கையில், அந்தத் தேவதை "உல்லாஸா, மனை மாட்சியும் அரசாட்சியும் உனக்கு எளிதில் லபிக்கின்றனவா யில்லை; இன்னும் அனேக இடையூறுகளைக் கடந்துதான் நீ அவற்றைப்பெறலாகும். நீ நாடு துறந்துபோய் நாளானமையால் நமனுக்கிரையானா யென்றெண்ணி உன்னாட்டுப் பிரபுக்களும் அயல்நாட்டாரும் உன்மனைவியை மணம்புரியக்கருதி, உன்னரண்மனையிற் புகுந்து உன்பொருளை யெல்லாமுண்டு களித்தழித்து வருகின்றார்கள். உன் பத்தினிமட்டில் உன்னிடத்தில் பக்தி குன்றாதவளா யிருக்கின்றனள். உன்புத்திரன் தலைமகன் இங்கே வசிப்பானாயின், காமாதுரரான பாவிகளால் கொலையுண்டான் என்றெண்ணி நான் மெண்டார் என்னும் தேவன் வடிவம்பூண்டு அவ்விளங் குமரனோடு பற்பல தேசங்களிலும் உன்னைத் தேடலானேன். இவ்வாறு தேசாடனஞ் செய்ததால், தலைமகன் புத்தி விசாலத்தையும் பொறுமையையும் லோகானுபவத்தையும் அடைந்திருக்கிறான். நீ இங்கு வருங்காலமும் தலைமகன் வருங்காலமும் ஸமகாலமாயிருக்கவும் விதித்தேன். உன்குமாரன் கண்ட காக்ஷிகளையும் செய்த அற்புத காரியங்களையும் அவன் வாக்கினாற்கேட்டே நீ களிக்க

லாகும். நான் அவற்றை இங்கு விரித்துரைத்தல் அனுவசியம்,'' என்று சொன்னாள்.

மினெர்வாவும் உல்லாஸனும் ஒரு மாத்தடியி லுட்கார்ந்து கொண்டிருக்கையில், உல்லாஸ னுக்கு மனக்கவலை மிகுந்து, "கருணைக் கடலே, நானே ஒருவனா யிருக்கிறேன்; என் பகைவரோ பலரா யிருக்கின்றார்கள். அகமெம்னன் தன் மனைவியி னுடைய சோர புருஷர்களால் தன் வீட்டிலேயே கொல்லப்பட்டது போல, என் கதியு மாகும்போலத் தோற்றுகின்றது. த்ரோஜா நகரத்தில் எனக்கு நற்றுணையா யிருந்த வாறே நீ மனம் வைப்பா யாயின், என் பகைவர் முன்னூற்றுவரையும் தவிடுபொடி செய்யும் திறத்தின னாவேன். 'உன்பாதமே எனக்குத் துணை,'' என்று வருந்தினன்.

தேவியும் உல்லாஸ னிடத்தில் கிருபை கூர்ந்து, "பிள்ளாய், கவலை யொன்றையும் வைத்தல் வேண்டாம். உனக்கிட்ட வேலையை நீ ஒழுங்காகச் செய்தால், நான் உனக்கு உதவிசெய்வதில் தடையொன்று மில்லை. ஆயினும், உன் பகைவர் உன்னை உல்லாஸனென் றரியாதிருத்தற் பொருட்டு உன் ரூபத்தை நான் முற்றிலும் மாற்றுவேன். அதி லுனக்கு சம்மதந்தானே,'' என்றனள்.

தன்னை ஆக்கலையும் அழித்தலையும் தேவியினிடத்தி லொப்புவித்த உல்லாஸன், அவளாணைக் கிணங்க, அவன் உடல் தளர்ந்த கிழவனுடலாயிற்று. அலஸினை னளித்த விலைபெற்ற ஆடைகளுக்குப் பதிலாகக் கிழிந்த ஆடைகளுண்டாயின. இரப்போர் வைத்திருக்கும் பிக்ஷாபாத்திரம் ஒன்றும்| அவன்கையில் வந்து சேர்ந்தது. திருசிரஸ் சொன்னவாறு அரசிழந்து பிக்ஷுவாகியும் கம்பீரயத் தோற்ற மாத்திரம் உல்லாஸ னிடத்தில் குறையவில்லை. இதுவும் அத்தேவதையின் அருளேயாம்.

பிக்ஷாடனம் பூண்ட உல்லாஸனுக்கு இதினுங் கீழ்மை ஒன்று விதிக்கப்பட்டது. பிக்ஷுவினுடைய வஸ்திரத்தோடு அரண்மனை இடையன் யூமையன் என்பவன் வீட்டிற்குப் போய் யாசிக்கும்படி மினெர்வா உல்லாஸனுக்குக் கட்டளையிட்டனள். யூமையன் எக்காலத்தும் உல்லாஸனிடத்தில் ராஜபக்தி பூரணமாய் வைத்தவன். தேவதை யூமையன் வீட்டிற்கு சமயம் பார்த்து உல்லாஸன்குமாரன் தலைமகனை அனுப்புகிறதாகவுஞ் சொல்லிவிட்டு மறைந்தனள். உல்லாஸன் தன் மகனுக்கு மாத்திரம் தன் வாஸ்தவ ரூபத்தை யறிவித்தலாகுமென்றும் மினெர்வாவின் ஆக்ஞை பிறந்திருந்தது.

தேவதையின் ஆணைப்படி உல்லாஸன் யூமையன் வீட்டுக்குக் கையிற் கோலைப் பிடித்துக் கொண்டு போகையில் இடையன் வீட்டு வேட்டை நாய்கள் உல்லாஸன் மேற்பாய்ந்து கிழித்துவிடும் போலக் குரைக்க, உல்லாஸன் ஊன்று கோலைக் கீழேவைத்து விட்டுச் சும்மா தரையி லுட்கார்ந்தான். நாய்களுக்கும் பிக்ஷுகளுக்கும் இயற்கைப் பகைமைபாம். நாய்கள் குரைத்ததைக் கேட்டவுடன் யூமையன் அவற்றை வந்து அடக்காவிடின் அவை உல்லாஸனுக்குப் பெருங் கேடு செய்திருக்கும்

யூமையன் உல்லாஸனை நோக்கி, "பெரியவரே! என் நாய்கள் உம்மைச்சின்னாபின்னமாக்க இருந்தனவே. என்னுடைய அஜாக்கிரதையால் தமக்கு ஏதாவது தீங்குண்டாயிருப்பின் நான் பெரும் பாவி யாவேன். ஆயினும் என் கவலைகள் கணக்கிலகப்படா. என்னரசன் நாட்டைவிட்டுப் போய் வெகு நாளாயிற்று. அவர் உயிரோடிருக்கிறாரோ இறந்தாரோ அறியேன். அவர் திரும்பி வரக் கூடாதென்று விரும்பி யிருக்கும் பாதகர்களுக்கு ஆடுகளையும் மாடுகளையும் கொழுக்கச் செய்துவருகிறேன். எங்களுக்குப் பிதாவாயிருந்த அரசனை யிழந்து அவருடைய சத்துருக்களுக்கு ஊழியஞ் செய்வதினும் ராஜபக்தியுள்ளபிரஜைகளுக்குப் பெரியதுக்கம் வேறெது?''என்றான்.

யூமையனுக்குத் தன் முன்னிருந்தவனே உல்லாஸனென்பது எள்ளளவேனுந் தோற்றவில்லை. இதுவும் தேவியினுடைய மாயையாம்.

யூமையன் பிக்ஷுவை வீட்டிற்கழைத்துப் போய் அன்னபானாதிகளைக் கொடுக்க உல்லாஸன் "என்னைப்போன்ற அகதிகளுக்கு உபகாரஞ் செய்யும் உன்னைக் கடவுள் க்ஷேமமாய் வைப்பாராக'' என்று ஆசீர்வதித்துப் பிறகு பசிதீர்த்துக் கொண்டான்.

"அய்யா பெரியவரே, உம்மிலுங்கேடானவர்
என் வீட்டிற்கு விருந்தாக வருவாராயினும் அவரை
யுபசரிக்கக் கடமைப்பட்டிருக்கின்றேன்.
"ஆற்றுவாராற்றல் பசியாற்ற லபசியை
மாற்றுவா ராற்றலிற்பின்'' என்றும்
"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று'' என்றும்

பெரியோர் கூறியுள்ளதை நான் என்றும் மறந்திலன். சேவகனுயிருக்கிற என் போலியர்கள் செய்யுமளவு உதவிபுரிய என்றும் ஸித்தமாயிருக்கின்றேன். என் மனத்தை வருத்துவது ஒன்றுளது. இந்த நாட்டிற்கதிபதியான மஹான் போன விடந்தெரியவில்லை. அவர் இங்கிருப்பின் எனக்கு ஒரு குறையுமிராது. பாவி ஹெலென் செய்த குற்றத்திற்காக அவள் குலம் நிர்மூலமாய்ப் போகத்தக்கது. அவள் பொருட்டு உண்டான யுத்தத்தினுலல்லவோ எங்களரசன் நாட்டைத் துறந்துபோம்படி நேரிட்டது. என்னைப் போன்ற ஏழைகள் செய்யும் விருந்தை முழுமனத்தோடு அங்கீகரித்தல் வேண்டும். எங்களரசன அரண்மனையில் கூடியிருக்கும் பாதகர்கள் நல்ல பொருள்களையெல்லாம் உண்டழித்துக் கொழுக்கின்றன ரென்பதே, என்று யூமையன் பின்னுஞ் சொன்னுன்.

இடையன் பேசினவற்றைக் கேட்டு மனம் புண்ணுன உல்லாஸன் "நீர் மிகவும் மேன்மையாகப் பேசுகிற அரசன் யார்? த்ரோஜா நகரத்தில் இறந்துபோனுரென்றுஞ் சொல்லுகிறீர். நான் இந்த நாட்டிற் பழக்கமில்லாதவன். பலதேசங்கள் போய்ப் பார்த்தவனுனபடியால் நீர் பேசிய அரசனைப்பற்றி நானும் ஏதாவது தெரிந்தவனுயிருத்தல்கூடும்" என்று கபடமாய்ச் சொன்னுன்.

இதைக்கேட்ட யூமையன், "விருத்தரே, உல்லாஸ ராஜனைப்பற்றி சமாசாரந் தெரிந்தவராக நடித்தவர் அனேகர். ஒருவயிற்றுச் சோற்றிற்கும் முழத்துணிக்கும் பொய்யையே அனேகர் சொல்லி வந்திருக்கின்றனர். மஹாராணியை இவ்வாறு பொய்யர் பலமுறை ஏமாற்றியிருக்கின்றனர். ஒருவேளைச் சோறும் முழத்துணியும் வேண்டுமாயின் நீரும் ராணியிடத்திற் போய் உமக்குத் தெரிந்தவற்றைச் சொல்லும். என்னைப் பற்றின மட்டில் கேட்டாலோ, எங்களரசன் எங்கு செத்துக்கிடக்கிருரோ அறியேன்; கடலிலுள்ள மீன்கள் அவரை விழுங்கி யிருக்கலாம்; அவருடைய அஸ்திகள் கடற்கரை மணலில் புதைப்பட்டிருக்கலாம். பிழைத்திருக்கிருரென்று எண்ணுவதற்கு கிஞ்சித்தேனும் ஹேது வில்லை. என்னைப்போன்ற ஏழையிடத்தில் அவர் அதிக அன்பு பாராட்டினமைபற்றி நன்றிமறக்காமலிருப்பது என்கடமை. மறுமையில் அவர் தெய்வமாய்த் தானிருப்பார். அவரை வழிபட்டால் அவர் கிருபை எனக்குண்டாகும்," என்றுன்.

யூமையன் வசனங்களைச் செவியுற்ற உல்லாஸன் கண்ணீர்விட்டு, "நண்பரே, உல்லாஸராஜன் ஜீவந்தராகவில்லை என்பதுஞ்சரியன்று. அவர் திரும்பிவருவாரென்று பிரமாணமாய்ச் சொல்லுகின்றேன். அவர் வந்தபின் நீர் எனக்கு வஸ்திரப் பரிசளிக்கலாகும். அதுவரையில் ஒரு நூல் கூட உம்மிடத்தில் நான் வாங்கமாட்டேன். நிர்வாணமாக நின்றுலும் நிற்பேனேயல்லாமல் அற்பப் பிரயோஜனத்தை யடையும் பொருட்டுப் பொய்யை நான் சொல்வதில்லை. இன்று முதல் ஒரு மாதத்திற்குள் உல்லாஸராஜன் திரும்பிவந்து அவருடைய சத்துருக்களைத் தக்கபடி தண்டிப்பார். இது உறுதி," என்றுன்.

யூமையனுக்குத் தன் பேச்சில் விசுவாஸம் பிறத்தலுக்கு உல்லாஸன் அனேக சிறுகதைகளைச் சொன்னுன். உல்லாஸனுடைய குணுதிசயங்களையறிந்தவர் பிக்ஷு வேஷம் பூண்ட உல்லாஸன் சொன்னவற்றை அவசியம் நம்ப வேண்டியதாயிருந்தது. உல்லாஸனுக்கும் தனக்கும் விசேஷ பரிச்சய முண்டென்றுஞ் சொன்னுன். பேஷியா தேசத்திற்குத் தான் வந்திருந்த போது கோயிவிற்போய்க் குறிகேட்ட காலத்தில் அந்தக் கோயில் தேவனும் உல்லாஸன் இதாகாவுக்கு ஒருமாதகாலத்திற்குள் திரும்பிவருவானென்றும் வாக்குக் கொடுத்திருந்ததாம், நான் சொன்னது வாஸ்தவமா யில்லாவிட்டால் என்னுடலை நாய் நரிகளுக்கு இரை யாக்கவும் அன்றேல், மலையுச்சியிலிருந்து கடலிலெறியவும் சம்மத மென்றும் உல்லாஸன் சொன்னுன்.

இராத்திரி போஜனமானபிறகு குளிர் மிகுதியாயிருந்தமையால் கம்பள வஸ்திரம் ஒன்று யூமையனிடத்திற் பெறுவதற்கு உல்லாஸன் த்ரோஜாயுத்தத்தில் செய்த தந்திரமொன்றை யூமையனுக்குச் சொல்லவே, யூமையன் களிகூர்ந்து உல்லாஸனுக்கு ஓர் கம்பளங் கொடுத்தான். அதைப் போர்த்துக்கொண்டு குளிராடக்கமாக இரவுமுழுதிலும் உல்லாஸன் நித்திரை போனுன்.

மறுநாளுதயமானவுடன் உல்லாஸன் படுக்கை விட்டெழுந்து யூமையனை நோக்கி "அன்னதாதா, தாம் எனக்கு வேண்டிய சகாயஞ் செய்

தீர்; தங்களுக்கே பாரமாக எப்போதுமிருக்க எனக்கிஷ்டமில்லை; இவ்வூரில் அனேகங் கனவான்களிருக்கின்றமையால், அவர்களுடைய ஜீவ காருண்யத்தையும் பார்க்கின்றேன். அரண்மனையில் இருக்கும் பிரபுக்களுக்கு ஊழியஞ் செய்து அவர்களாலளிக்கப்படும் பிக்ஷையைப் பெற்று காலம் போக்குவேன். சமையலிலும் பரிசாரகத்திலும் வெகு சுருசுருப்பாய் வேலை செய்வேன். இன்னும் பிரபுக்களாயிருப்பவர்கள் திருப்திப் படும்படியான பல வேலைகளையும் நான் அறிவேன் எனக்குவிடை கொடுத்தல்வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

யூமையன் "இந்த வூர்ப்பிரபுக்கள் சமாசாரந் தெரியாமற் பேசுகின்றீர். இராணியை மணம்புரிவதற்கு அரண்மனையிற் கூடியிருக்கிற கனவான்களுக்கு உம்மைப்போன்ற வயோதிகர் செய்யக்கூடிய சிச்ருஷை எவ்வகைத்தென வறியேன், உம்மைப்போல் நரைதிரை படர்ந்தவரை அவர் விரும்பார். பட்டாடை யுடுத்துப் பளீர் பளீர் என்று மின்னும் முகமுடைய யௌவன சேவகர்களா யிருந்தால் அவர் நிமிர்ந்து பார்த்துப் பேசுவார். பிறர்பொருளை யுண்டு திமிர்பிடித்த கனவான்கள் உம்மை வெறுத்து நகைப்பார்கள். நீர் இங்கேயே இருத்தல் வேண்டும். ஒருகால் தலைமகனாவது இராணியாவது உமது வருகையை யறிந்து உம்மைத் தருவித்துக் கொள்வார்கள். நீர்போதல் சரியன்று" என்று மறுத்துவிட்டான்.

இவ்வாறு இருவரும் பேசிக்கொண்டிருக்கையில் காலடிச் சத்தம்கேட்டது. அங்கிருந்த நாய்கள் குரைக்காமல் உறவுபாராட்டி ஓடின. இதை யறிந்த யூமையன் உல்லாஸனைப்பார்த்து "ராஜகுமாரனை தலைமகன் வருகிறார்" என்றான். தலைமகனும் அந்தக்ஷணமே அவ்விடம் வர உல்லாஸன் எழுந்து தலைமகனுக்கு உபசாரஞ் சொல்ல, தலைமகன் வயோதிகர் தனக்கு மரியாதை செய்தல் தகுதியன்றென்று கிழவனுக்குத் தானே தலைவணங்கி கைலாகுகொடுத்து உட்காரச்சொல்லிவிட்டு யூமையனைப் பார்த்து "என் பிதாவைப் பற்றி சமாசாரந் தெரிந்தவர் இந்தப் பெரியவர் தானோ?" என்று வினவினன். உல்லாஸன் கண்களில் நீர்பெருக, அதைத் தன் கைகளால் மறைத்துக்கொண்டான்.

யூமையன் ராஜகுமாரனை வணங்கி, "கிரீட தேசத்திலிருந்து வந்தவராகச் சொல்லுகின்றார்; தேசாடனஞ் செய்த போர்வீரனும். அவர் பேசுவது வாஸ்தவமோ இல்லையோ யானறியேன். இவருடைய பூர்வ நிலைமை எதாயிருப்பினுமிருக்கலாம். தற்காலத்தில் யாசகராய் வந்திருக்கின்றனர். தாமே அவரிடம் பேசி மருமங்களை யறியலாம்," என்றான்.

தலைமகன், "இந்தப் பெரியவருடைய பூர்வ சரித்திரம் நம்மாற் பரிசீலனை செய்யப்படவேண்டுவதில்லை. இவரை எங்கு வைத்துப் பரிபாலிக்கிறதென்று எனக்குத் தோன்றவில்லை. என் தாயை மணம்புரிவதற்கு அரண்மனையிற் கூடியிருக்கும் சண்டாளர் இம்முதியவரைக் கண்டு பரிகசிப்பார்களே; அவரிடத்தில் அடிபடாமல் இவர் தப்புவதே துர்லபம் என்று அஞ்சுகின்றேன்" என்று மனவருத்தத்தோடு சொன்னான்.

தலைமகனும் யூமையனும் தர்க்கித்துக்கொண்டிருந்ததைக் கேட்ட உல்லாஸன் சுளித்த முகத்துடன் "ராஜனே, தாம் சொல்லிய சொற்களைக் கேட்கையிலேயே எனக்கு ஆத்திரம் பொங்கி வருகின்றது. உமது அரண்மனையிற் பிரவேசித்து அக்கிரமஞ் செய்து வருபவர்களை இப்பொழுதே சின்னாபின்னமாய்க் கிழித்தெறிவேன். இவ்வாறு நீதி தவறினதற்குக் காரணம் யாது? தாமே இஷ்டப்பட்டு அநீதிக்கு இடங்கொடுத்தீரோ? தமது செங்கோல் தவறினமையால் தமக்குப் பிரஜைகள் உதவி செய்ய விரும்பவில்லையோ? தமது உற்றார் நண்பரிடத்தில் விசுவாசங் குறைந்துவிட்டபடியால் அவருமக்கு உதவி புரியோமென்று விட்டாரோ? உற்றவிடத்திலுயிர் வழங்குந் தன்மையோரையன்றோ உற்றாரெனல் வேண்டும்?" என்று கேட்டான்.

தலைமகன், "உல்லாஸனுறவினர் சிலரே, எனக்குதவி புரிய உடன்பிறந்தாரில்லை. என் தாயைப் பாணிக்கிரஹணஞ் செய்வதற்கு அரண்மனையிற் கூடியிருப்பவர்களுக்கு நண்பர்களும் உறவினர்களும் அனேகர். ஆர்ஷகுலத்தரசருக்கெல்லாம் ஏகபுத்திரர்தாம் விதிக்கப்பெற்றது போலும். ஆர்ஷருக்கு லோதீயரும், லோதீயருக்குல்லாஸனும், உல்லாஸனுக்கு நானும்,முறையே ஏகபுத்திரர்களாய் வந்தோம். என் பிதாவான உல்லாஸன் நான் சிசுவாயிருக்கையிலேயே ஊரை விட்டுப் போனவர். என்றால் அவருக்கு ஒரு சந்

தோஷமுங் கிடையாது, எல்லாங் கடவுள் செயல் என்று மறுமொழி பகர்ந்தான்.

யூமையன் ஆடு மாடுகளைக்காவல் செய்யும்பொருட்டு வேலையாய் வெளியிற்சென்றான். மினெர்வா பெண்ணுருவெடுத்து வாசற்படியில் நின்று உல்லாஸன் கண்களுக்கு மட்டிற் புலப்பட்டாள். தேவதைகள் தாம் விரும்பியவர்களுக்கு மாத்திரங் கண்ணிற் படுவார்கள். அங்குள்ள சுவானங்கள்தெய்வஸான்னித்தியத்தை யறிந்துகுரைக்காமல் சும்மா கிடந்தன. உல்லாஸனுடைய நிஜரூபத்தை அவன் மகன் அறிதல் வேண்டிய காலம் வந்ததையுணர்ந்து மினெர்வா முதிய பிக்ஷு வேஷந்தரித்திருந்த உல்லாஸனை முன்போல வாஸ்தவ ரூபத்தோடு விளங்கும்படிச் செய்தாள். தளர்ந்த வயதும், நரை திரைகளும் நிறைந்த கிழப் பிச்சைக்காரனாயிருந்தவன் திடமுள்ள அரசவடிவம் பெற்றுத் தம் முன் நிற்பதைப் பார்த்த தலைமகன் திகிலடைந்து "இது தெய்விகமேயொழிய வேறில்லை" என்று சொல்லிக் கொண்டு உல்லாஸனை வணங்கப்போனான். வணங்கவந்த தன் மகனைத் தடுத்து உல்லாஸன், "என்னை நன்றாயுற்றுப்பார். தெய்வமல்லாத எனக்குத் தெய்வத் தன்மையை ஏன் தருகின்றாய்? என்னை உன் அப்பனென்றறி; எந்த உல்லாஸன் ஊரில்லாமை இன்மைதுன் புற்றதோ அவனே யானென்றறி" என்று சொல்லித் தன்மகனைக் கட்டித் தழுவி உச்சிமோந்து முத்தமிட்டான். தடங்கரை பேர்த்து விட்ட வெள்ளம்போல் உல்லாஸன் கண்களினின்றும் நீர்பெருகிற்று. தலைமகன் மட்டில் தன்பிதாத்தான் தன்னுடன் பேசினவன் என்று நம்பினானில்லை. தன் மனத்தை வருத்துவதற்குத் தெய்வஞ் செய்த மாயை என்றெண்ணுவா னாயினான். "சற்று முன்னரைத்த கிழவராயிருந்த நீர் இப்போது ரூபமாறி யௌவனபுருஷனாய் விட்டீர். மனிதருணவை யுண்டு வளர்பவர்கள் காமரூபிகளா யிருத்தல் சாத்தியமாகத் தோற்றவில்லை," என்று உல்லாஸனை நோக்கித் தலைமகன் கூறலாயினான்.

உல்லாஸன் மகனை நோக்கி "அகத்தில் நான் உன் பிதாவாயிருத்தல் போலவே, புறத்திலுமுள்ளேனென்றறி. உல்லாஸன் பெயரைவைத்துக்கொண்டு என்னையன்றி வேறொருவரும்இங்கு இனி வரமாட்டார். இருபதுவருஷ காலம் அயல் நாடுகளிலலைந்து படாத பாடுகளெல்லாம் பட்டு ஜன்மபூமிதரிசனங் கண்டேன். என்னுருமாற்றம் மினெர்வாவின் காரியம். தன்பக்தர்களை உயர்த்துவதும் தாழ்த்துவதும் அவள் செயல். எல்லாஞ் செய்யவல்லவள் மினெர்வா என்று அறிதல் வேண்டும்," என்றான்.

முதலில் கொஞ்சம் ஐய முற்றிருந்த தலைமகன் சந்தேகந் தெளிந்தவுடன் முன்னின்றவன் தன் பிதாவென்று முழுநம்பிக்கை பிறந்து அவனைக் களிப்புடன் கட்டித்தழுவி ஆனந்தித்தான்.

உல்லாஸன் "அருங்குமாரா,உன் தாயை மணம் புரிய கூடியிருப்பவர்கள் எவர்? அவர் சங்கியை என்ன? உன் தாயின் மனம் எவ்வாறிருக்கின்றது?" என்று கேட்டனன்.

"மனம் புரிதலில்லை யென்று முதலிலேயே மறுத்துவிட்டால் அவர் கோபத்துக்குள்ளாதலாகுமென்றஞ்சி "ஆகட்டும், ஆகட்டும்" என்று சொல்லிக் காலஹரணஞ் செய்து வருகின்றாள். அவர்களும், இனமாகச் சோறு அரண்மனையிற் கிடைக்கின்றபடியால், உண்டு களித்து அவள் பேச்சை நம்பியிருக்கிறார்கள்" என்று தலைமகன் சொன்னான்.

"அவர்கள் தொகையை எண்ணிச் சொல். நம்மினினும் எண்ணிக்கையில் மிகுதியானவர்களாயிருக்கின்றமையால் நாமிருவரே அவர்களை வெல்ல முயல வேண்டும்," என்று உல்லாஸன் கூறினான்.

தலைமகன் உல்லாஸன் பேச்சைக்கேட்டுப் பிரமித்தவனாய், "பிதாவே, உமது புஜபல பராக்கிரமங்களைப் பற்றியும், நுண்ணறிவைப்பற்றியும் விசேஷமாகக் கேள்வியுற்றிருக்கின்றேன். இப்பொழுது உமது துணிவான சொற்கள் என் புத்தியைக் கலக்கிவிடுகின்றன. தங்கள் மனைவியைக் கலியாணஞ் செய்துகொள்ள விரும்பி நமது அரண்மனையிற் குடிகொண்டிருக்கின்றவர்கள் ஐந்துபேர், பத்துப்பேரென்றா எண்ணுகின்றீர்? அவர்களே ஒரு பெருஞ்சேனையெனலாம். அப்பெருங்கூட்டத்தை நாமிருவருமே வெல்ல வல்லமையுடையோமென்று நினைத்தல் மதிக்குறைவு என்று எனக்குத் தோற்றுகின்றது. ஆத்திரத்தில் அவஸரப்பட்டு ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பிப்போமாயின் அக்காரியம அவமானமாய் முடியும். துணைவரைத் தேடாமல் இக்கருமத்தை நாம் தொடங்கலாகாது" என்று மறுத்துச் சொன்னான்.

"விண்ணுலகுக் கதிபதியும் மினெர்வாவும் நம்முடைய பக்கத்தில் இருப்பின் அவர்களைவிட மேலான உதவியும் உளதோ?" என்று உல்லாஸன் கேட்கத்

தலைமகன் " தாம் சொல்லுவது சத்தியம். தேவருக்குயர்ந்தவர் எவருமிலர். அவர்முன் மனிதர் திரணந்தான்" என்றான்.

உல்லாஸன் தன் மகனைப் பார்த்துப் "பிள்ளாய், நீ அரண்மனைக்குப் போய் மாப்பிள்ளை மாரோடிரு. நம்மிருவருக்கு முள்ள ரகஸ்யத்தை உன் தாயிடத்துஞ் சொல்லக்கூடாது. ஆயுதங்களையெல்லாம் ஆயத்தஞ் செய்துவை. நான் பிக்ஷுவேஷம் பூண்டு மாப்பிள்ளைமாரிடத்தில் யாசிக்க வருவேன். அவர்கள் என்னை அவமரியாதைகள் செய்து அடித்தாலும் நீ எள்ளளவேனுங் கோபங்கொள்ளலாகாது. அவரிடத்தில் சாந்தமான சொற்களைப் பேசவேண்டுமேயன்றிச் சினந்து பேசலாகாது. மினெர்வா நம்மிருவருக்கும் ஒரு ஸம்ஞை காட்டுவாள். அதைப் பார்த்துக்கொண்டு சத்ருஹதத்திற்கு நாம் ஆரம்பிக்க வேண்டும்" என்று சொல்லத் தலைமகனும் "அப்படியே ஆகுக" வென்று வாக்களித்து அரண்மனை சென்றான். உல்லாஸனும் பிக்ஷுவுருவத்தைத் திரும்பவும் பெற்றான்.

கே. வெங்கிடாராமய்யர், பி. ஏ.

---

மருந்துப்பக்குவமான மிளகாய்.—2 இந்துப்பு, மூங்கிலுப்பு, பெருங்காயம், வளையலுப்பு, தினிசுக்கு பலம் 1, புளித்ததயிர் படி ½, பச்சமிளகாய் பலம் 1½, இந்த உப்புக்களையும் பெருங்காயத்தையும் தயிரில் கலக்கி, மிளகாயையும் சேர்த்து, ஊறின மிளகாயை வெயிலில் உலற்றி, மறுபடியும் தயிரில் ஊறவைத்து இவ்வாறாக தயிர் முழுவதும் சுருங்கும் வரை செய்ய வேண்டியது. கடைசியில் உலர்ந்து உப்பேறின மிளகாயை ஒரு மண் கலத்தில் எடுத்து வைத்துக் கொள்ளவும். அஜீரணம், ஆரோசிகம், உஷ்ணவாயு, பசியின்மை, அக்கினி மந்தம், அன்னத்துவேஷம், புளிச்சேப்பம், அஜீரணபேதி, வயிற்றுப்போக்கு வயிற்றுக்கடுப்பு, இவைகளால் கஷடப்படுகிறவர்கள் 4 மிளகாய்களைப் பொன்னிறமாய் வறுத்துப் பொடி செய்து அன்னத்துடன்சேர்த்துக் கொண்டு நெய் விட்டுச் சாப்பிட்டால் மேற்கூறிய வியாதிகள் சொஸ்தப்படுமாம்.

# பெரும்புயல்

## TEMPEST

(தொடர்ச்சி)

இதைப் பிராஸ்பெரோ தனது மாந்திரீக சக்தியினால் உணர்ந்துகொண்டு, இதுவே நல்ல சமயம் இது தவறினால் இனி இதுவரை செய்த முயற்சியும் வீண்போய்விடும். நம்முடைய நக்ஷத்திரம் உச்சத்திலிருக்கும்போதே, நாம் நினைத்தது அவ்வளவும் சித்தியடையக் கூடியகாலத்திலேயே நாம் செய்து முடித்துக்கொள்ளவேண்டியது. அதன்பின் போனகாரியத்தைப்பற்றி வருந்துதல் பயன் படாத காரியமென்றெண்ணி, உடனே ஏரியலைக் கூவி 'அதோ கப்பல்கள் தூரத்தில் வெகு கம்பீரமாய் பாய்விரித்து ஓடுவது தெரிகிறதா அதில் மிகவும்ஆடம்பரமான துநேப்பிள்ஸ்அரசன்கப்பல். ஒரு பெரிய புயல் உண்டாகித் தத்தளிக்கும் அந்தக் கப்பலை யிவ்விடம் இழுத்துவந்து அதிலுள்ள மனிதரை யெல்லாம் கரைகொண்டுவந்து சேர்' என்று சொன்னார். சொன்ன மாத்திரத்தில் பூதத்திற்கு எதுதான் கடிது.' உடனே, அண்டபகிரண்டங்களத்தனையும் வெடித்து இடி இடித்து, காற்றடித்து உலகமே ஒரு க்ஷணப்போழ்தில் முடிவுக்குவந்து விடுவதுபோல் ஒரு பெரும்புயல் பிரசண்ட மாருதம்போல் முழங்கி கர்ச்சித்தது. காற்று அகோரமாய் கப்பலின் முன்னும் பின்னும் பாய்மரத்திலும் அடிக்கட்டைகளிலும், மோதி கப்பல் மேலுங்கீழுமாய்ப் புரண்டு, தடுமாறித் தத்தளித்துக் கடலலைகள் மேகத்தோடு ஆடும் அம்மானை போல் எறியப்பட்டு மின்னல் மின்ன இடி இடிக்க கப்பலிலேயே நாலாபுறமும் வெளிச்சம் ஜொலித்தெரிய மனிதரெல்லாம் ஆ! வருணபகவான் வெருண்டெழுந்து தன் செங்கோல் கொண்டு நம்மைக் கண்டிக்கிறானென்றும், சரி இனிப் பிழைப்பதில்லை என்றும் நினைக்கும்படி இருந்தது. ஆகவே மந்திர சக்தியால் கடுந்தூக்கங் கண்ட மாலுமிகள் கப்பலுள் தூங்கிக் கொண்டிருந்தாரே தவிர மற்றப்படி நேப்பிள்ஸ் அரசன் அவன் மகன் முதலிய எல்லோரும் உடனே உயிர் பிழைப்பது எவ்விதமாயினென்? உயிர் துறப்பதும் எவ்விதமாயினென்? என்று துணிந்து உடனே கடலில் குதித்துவிட்டார்கள். அலைகள் ஆரவாரித்தன. அவைகளை நீந்திப் போவது மகா கஷ்டம். என்றாலும் ஏரியல் அவர்

களைத் தனித்தனிக் கூட்டாய் இருவர் மூவர் சேர்ந்த ஒரு தனிக்கூட்டமாய் அத்தீவின் வெவ்வேறு இடங்களில் பிராஸ்பெரோவின் கட்டளைப்படி கொண்டுவந்து இறக்கியது. கப்பலை மற்றொரு இடத்தில் பத்திரமாய்ச் சேர்த்தது. கப்பலில் மாலுமிகள் தூங்கிக்கொண்டிருந்தார்கள். கரையேறினவர்கள், தாங்களும் தாம் நேரில் தமக்கு முன் கண்டவர்களுமட்டுமே பிழைத்தார்களன்றி மற்றவர்கள் இறந்து விட்டார்களென்று எண்ணிக்கொண்டு இருந்தார்கள். அரசன் கப்பலுடன் வந்த கப்பல்கள், கடல் கொத்தளிப்பு நின்றவுடன் அரசன் கப்பல்மட்டும் காணாதபடியினால் அது இந்தப்புயலையுந் தப்பிப் பிழைக்கவா, அமிழ்ந்து போயிற்று என்று நிச்சயித்துக்கொண்டு, தாம் பிழைத்து வந்தது பெரிய புண்ணியமென்றெண்ணி உடனே நேப்பிள்ஸ் நகர மார்க்கமாய்த் திரும்பிப் போய்விட்டார்கள்.

இப்படிக் கடலிலிருந்து பிழைத்துவந்து தனியாகக் கரையேறினவன் நேப்பிள்ஸ் அரசனது மகனாகிய பார்டினாண்டு. இவன் ஒரு பாறையிலுட்கார்ந்துகொண்டு, தன் தகப்பன் தண்ணீரில் வீழ்ந்து அமிழ்ந்திறந்து போனானே என துக்கசாகரத்தில் மூழ்கி அழுது கொண்டிருந்தான். ஏரியல், பிராஸ்பெரோவின் கட்டளைப்படி அவனிடம் போய் அவன் கண்ணுக்குக் காணா உருவெடுத்துக் காதுக்கினிமையாய்ப் பாடிக்கொண்டிருந்தது. அந்தப் பாட்டுகளில், ஏன் வருந்துகிறாய் மஞ்சள் மணல் நிறைந்தவொரு கடற்கரை யிங்குண்டு. அங்கு வந்து உல்லாசமாய் ஆடிப்பாடி பொழுதுபோக்கலாம் வாவென்றும் தகப்பன் மூழ்கி இறந்ததாய் நினைத்துக்கொண்டிருந்த விஷயத்திற்கு அந்த எண்ணம் மனதிலிருக்க வேண்டியதல்லவா என்று அதைச் சேர்த்துப் பாடி

30 அடி ஆழத்தில் கிடந்தாலும்,
எலும்போ பவளமாய்
கண்ணிரண்டும் நல்முத்தாய்
அழகழகாய் மாற்றம்பெற்று
அழியாம லிருக்கின்றான்.

என்றும் பாடியது. இது கேட்டு பார்டினாண்டு சரி இனி என்ன செய்வது. நடந்தது நடந்தாய் விட்டது. இனி மனிதரால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. நடக்கவேண்டிய விஷயத்தைப் பார்ப்போமென்று நாலாபுறமும் பார்த்து, இந்த இடம் எப்படிப்பட்டது என்றெல்லாம் யோசிக்கவாரம்பித்தான். அப்பொழுது ஏரியல் பாடிக்கொண்டே நகர இதையாவது பின் தொடர்ந்து போவோமென்று நடந்தான். மஞ்சள் மணற்கரைக்குப் போவோம் என்று அதன்பின் ஓசை கேட்கும் வழியாகவே போய்க்கொண்டிருந்தான். இதற்குள் பிராஸ்பெரோ தன்மகள் மிரான்டாவைக் கூப்பிட்டு முதலில் கப்பல் அல்லாடுவதையும், பிறகு கப்பலிலுள்ள ஆட்கள் இன்னாரென்றும், தங்களிருவருடைய வரலாற்றையும், சிறிது சிறிதாக ஞாபகப்படுத்துவது போல, அவள் மனம் கிரகிக்க கிரகிக்க சொல்லிக்கொண்டேவந்து, அவள் முற்றிலும் இந்தச் சங்கதிகளை உணர்ந்துகொண்ட பின்னர், இனி நீ ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். இங்குவரக்கூடிய ஜனங்கள் பல் வேறுவகை இயற்கையமைந்தவர்கள். நீ உன் ராஜகுல மகிமைக்கும் என் புத்திரியாகிய கௌரவத்திற்கும் யாதொரு குறைவும் தீங்குமில்லாமல் ஒழுங்காய் நடந்துகொள்ள வேண்டியது. நல்லது இதோ தூரத்தில் என்ன வருகிறது பார் என்று தூரத்தில் வரும் பார்டினாண்டைக் காண்பித்தான்.

மிராண்டா.—அது என்னமோ பூதம்போலிருக்கிறது. ஆனால் மிகுதியும் அழகு வாய்ந்ததாயிருக்கிறது. அங்குமிங்கும் பார்க்கிறது பாருங்கள்! நான் இதுவரை இதுபோலப் பார்த்ததில்லை. இது ஒரு புது ஜெந்துவாயிருக்கிறது.

பிராஸ்பெரோ.—இல்லை குழந்தாய், அது பூதமல்ல. நம்போல் உண்கவும், உறங்கவும், உணரவுமுள்ளதுதான், இந்த மனிதன் அந்த உடைபட்ட கப்பலிலிருந்தான். ஆகையால் முகம் வாடி வருந்தியிருக்கிறது. மற்றபடி இன்னு மதிகமாய் அழகு வாய்ந்தவன். தன்னுடன் வந்தவர்களெங்கே என்று தேடி வருகிறான்.

பார்டினாண்டு.—(இதற்குள் அவர்களைப் பார்க்குந் தூரத்துக்குள் நெருங்கி கிட்ட வந்து) ஆ இந்த இனிமையான பாட்டு ஓசை கேட்டது முதல் இந்த ரம்மியமான பாட்டும், இத்தீவிலுள்ளமற்றவெல்லாம் அழகியதோர் அரசிஆண்டு வரும் பூமி யென்று எண்ணியபடியே நீ யிருக்கிறாய் நீ இத்தீவின் அரசிதானா. இல்லாவிட்டால், நீ தெய்வப்பெண்தானோ, நான்தான் கனாக் கண்டு கொண்டிருக்கிறேனோ ஒன்றுந் தெரியவில்லையே ?

இப்படி அவன் பேசுவதைக் கேட்டு உடனே மிரான்டா நான் பெண் தான், தெய்வமில்லையென்று சொல்லிவிட்டுத் தன் பிதாவை நோக்கிப் பார்த்தாள். பார்டினண்டுக்கு இந்த நிர்மானுஷ்யமான தீவில் தன்னூரில் வழங்கும் பாஷை பேசக்கூடிய ஆள்களு முண்டாவென ஆச்சரிய மதிகரித்து, எப்படி நாம் திக்குத்திசை தெரியாமல் ஒரு புதுஊரில் நம்மூர் ஆளாவது நம் பாஷை தெரிந்த ஆளாவது வருவாரானால் எவ்வளவு ஆவலோடும், அன்போடும் அவர்களுடன் பேசவும் நடந்துகொள்ளவுமிருக்கிறேமோ அதேமாதிரி, இவள் பெரும் புயலில் அதிர்ஷ்ட வசமாய்த் தப்பிப்பிழைத்து, நிர்மானுஷியமான காட்டில் ஆட்களைக் கண்டு பிடித்ததே பெரும்பயன் அதில் அந்த ஆட்கள் தனக்குத்தெரிந்த பாஷையே பேசுவதானால் இன்னும் சிரேஷ்டம். அப்படிப் பேசக்கூடிய பெண் மிகவும் கட்டழகி. தெய்வப் பெண்போலிருந்தால், இவன் மனதிலிருந்தது அவா அன்புக்கு அளவில்லை யென்று சொல்லலாம். இதைப் பிராஸ் பேரோ மனித இயற்கை தெரிந்தவரால் நன்றாய்ப் பார்த்துக்கொண்டு தன் மனதுக்குள்ளேயே இவ ரிருவரும் ஒருவர்மீது ஒருவரிவ்வளவு அன்பு கொள்வது இவரிருவரும் தன் மனம்போலே மணம்புரிந்து இரு அரசாட்சியையு மொன்று சேர்த்து வெகுகால அன்புடனும் அதிகாரத்துடனு மிருப்பார்களென்று மிகுதியும் சந்தோஷப்பட்டு, என்றாலும் அதை அதிகமாய் வெளியிலும் காட்டக்கூடாது. உலகப்பழக்கமில்லாத தன் பிள்ளை அவன்பேரில் வெகு சீக்கிரமாய்ப் பிரியமுண்டாதல்கூடும். ஆகையால் அவன் இது எளிதில் கிடைத்த பலன் என்று சுளுவாயு மெண்ணிக்கொள்ளக்கூடாது என்று 'நல்லது நீ யார் எங்கு வந்தாய்' என்றெல்லாம் வினவ வாரம்பித்தார். அவன், தான் தன் பிதா கடலில் மூழ்கி யிறந்துபோய்விட்டபடியால் நேப்பிள்ஸ் நகரத்திற்கு முதன்மையானவன், அந்த ராஜ்ஜியத்திற்கு அரசன் என்று சொன்னன். 'இல்லை அவன் இறந்துபோனதாய்த் தெரியவில்லை, நீ வேவுகாரன் போலிருக்கிறது. என்னவாயினும் என்னேடே வா என்கவும், இராஜகுமாரனுகையால், இவ்விதமாய் ஒருவரும் பேச அதுவரையிலனுபவமுமில்லாதவனுகையாலும், நீயார் என்னை வேவுகாரனென்றும், என்னை உன் வேலைக்காரன் போல் உன்பின்னை யழைக்கிறாய் என்று கத்தியை உருவினன். ஆனல் கத்தி ஓங்கமுடியாமல் பிராஸ்பேரோவின் மந்திர சக்தியால் அப்படியே நின்றுவிட்டது. அடா இதென்ன வீரசூரப்புலி கத்தியை யெடுத்தான் ஓங்கமுடியவில்லை யென்று நகைத்துப் பரிகாசம் பண்ணிவிட்டு, நல்லது உனக்கா சொந்தபலம்இருக்காது. நான்சொல்லுகிறபடி செய் என்று கூட வழைத்துக்கொண்டு போனர். மிரான்டாவோ இது முழுவதும் நடந்த நேரமெல்லாம் பதைபதைத்து ஐயோ! என் என் பிதா இதுவரை எவ்வளவோ பிரியமாயிருக்கக் கூடியவர், இப்பொழுது இவ்வளவு குரூரமாய் நெஞ்சில் சிறிதும் பச்சாதாபமில்லாதவர்போல் பேசி, இவ்வரச குமாரனை ஒரு வேலைக்காரன் போல மிரட்டுகிறார். இவ்வளவு அழகுவாய்ந்தவன் வேவுகாரனுயிருப்பானு? என்று சொல்லிக் கொண்டே, தன் பிதாவோடு மன்றாடிக்கொண்டு சினந்து பேசப் போகிறாரென்று பயந்துகொண்டும், மெல்ல மெல்ல அவர்களோடு தம் குடியிருப்புப் பக்கமாய் மூவருஞ் சென்றார்கள்.

---

ஆளிவிதை.—நமக்கு ஜுரம் அதிகரித்து விட்டால் நமது மண்டையில் பனிக்கட்டியைக் கட்டிவைத்து உஷ்ணத்தை தணிக்கவேண்டி வருகிறது. அப்படிப் பனிக்கட்டி அகப்படாவிட்டால், அதற்குப் பதிலாக ஆளிவிதைச் செடியை உபயோகிக்கலாம். இதற்கு ஓர் உதாரணம் கூறுவ தென்னவெனில் "என்னுடைய மகளுக்கு ஜுரம் அதிகமாயிருந்தபோது பனிக்கட்டிக்காக அநேக இடங்களில் தேடியும் அகப்படவில்லை. இந்த ஆளிவிதைச்செடியை வைத்துப் பார்த்ததில் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் உஷ்ணம் 104 டிகிரி யிலிருந்து 102 டிகிரிக்கு ஒரே தரியாய் இறங்கி விட்டது. குழந்தையும் சௌக்கியமாக விருக்கிறது." இத்தகையான செடியை உபயோகிக்கும் விதம் யாதெனில், "முதலில் ஆளிவிரையின் தோலை உரித்து விட்டால் உள்ளிருக்கும் தசை பனிக்கட்டி போலவே யிருக்கும். பிறகு அதை யெடுத்து காலையில் தலையில் கட்டிவிட்டு விசிரிக்கொண்டே யிருந்தால் சாயந்திரம் குளுமையாகவே யிருக்கும். பிறகு அதைவிட்டு புதிதாக இரவில் கட்டினல் அடுத்த நாள் காலைவரையில் சீதளமாகவே யிருக்கும். இவ்விதச்செடி எங்கு மகப்படும்.

# வஸந்த மாளிகை
## VASANTHA MALIKAI
### அத்தியாயம் 8
### உபாயம்
### STRATAGEMS

ஜானகி! ஆஹா! இந்தச் சித்திரங்களெல்லாம் எவ்வளவு இயற்கையாயிருக்கின்றன! இந்தத் திரைகளெல்லாம் எவ்வளவு அழகாய் இருக்கின்றன! ஆஹா! இந்த ஹம்ஸதூலிகா மன்ஸம் எவ்வளவு மிருதுவாசவும் நேர்த்தியாகவும் இருக்கின்றது! அடி இந்த நிலக்கண்ணடி—! அடி இந்த பொன்பாத்திரங்கள்—! ஆஹா ஹா—! ஜானகி-இன்று மாலை இவ்வந்தப்புரம் முழுமையும் சிங்காரமாய் ஜோடித்திருப்பதைப் பார்த்தால்—என்ன வாஸனையடி இது!-ஏதோ தேவேந்திர பவனம்போல் விளங்குகின்றதேடி! ஆஹா! ஆஹா! ஆஹா! என் பிராணநாதா!—என் ஆசைக்காதலா—ஆஹா அவர் அன்பே அன்பு! அவர் ஆசையே ஆசை! நான் என்ன பாக்கியம் செய்தேனே முன் ஜன்மத்தில்—இப்படிப்பட்ட மஹானுபாவனைத் தேடி மாலையிட-ஜானகி! என் பதவியே பதவி! ஈசா! எல்லாம் உன் அருளே! என்று பலவாறு வியந்துகொண்டு தன் அந்தப்புரத்தில் ஓர் நிலைக்கண்ணடி முன் நின்று, தன் பேரழகைப் பார்த்துத் தானே ஆநந்தபரவசையாய் பாநுமதி நிற்கின்றாள். தன் காதலனை ஆவலுடன் அவள் எதிர்பார்த்துக் கொண்டும், தனக்குப் புதிதாய் ஏற்பட்டிருக்கும் கௌரவத்தால் பவிஷு பாராட்டிக்கொண்டும், அவள் அங்கும் இங்கும் முன்னும் பின்னும் குதூகலத்தால் தன்னினைவற்று தேவடியாப் பூச்சிபோல, ஜிலு ஜிலுவென்று உலாவிக்கொண் டிருக்கின்றாள்.

ஜானகி! ஆஹா என்ன சந்தோஷமா யிருக்கின்றது. என் காதலர் எப்பொழுது வரப்போகிறார். இன்னும் ஒரு நாழிகைக்குமேல் செல்லும் போலிருக்கிறதே! சரி! இருக்கட்டும்! என் பிராணநாதர் வருமுன்னமே உன் தகப்பனாரைப் பார்க்க விரும்புகிறேன். தவிரவும், என் காதலருக்கு அத்யந்த பிரியனான, மஹாவீரனையும் பார்க்க—விரும்புகின்றேன். அவனுக்குக் கொஞ்சம் சுருக்குக் காட்டியிருக்கவேண்டும்—"

ஜானகி.—"அம்மணி! மஹாவீரன் வழிக்குப் போகாதேயுங்கள். அவனே முரடன், பழிபாவத்துக்கஞ்சான். அவன் சொல்லுகிறபடியெல்லாம் மந்திரி ஆடுகின்றார்— "பாம்போடு பழகுவதுபோல இருக்கிறது" என்று என் தகப்பனார் அடிக்கடி சொல்லி யிருக்கிறார்.

பாநுமதி. — வாஸ்தவந்தான்! துஷ்டரைக் கண்டால் தூர நில்லு! ஏன் ஜானகி! அது இருக்கட்டும், உன் தகப்பனார் ஏன் இந்தச் சந்நியாசி வேஷம் தரித்திருக்கவேண்டும். அவர் வேஷத்துக்கும், ஸகவாஸத்துக்கும் எவ்வளவோ பரஸ்பரம் விரோதமாயிருக்கின்றதே! - நான் சொல்லுவதைப்பற்றி மனதில் வருத்தப்படாதே! ஏன் இந்தமாதிரி யெல்லாம்-

ஜானகி.—(கண்ணீர் ததும்ப) அம்மணி! அவரவர் வினையை அவரவரே அனுபவிக்க வேண்டும். என் தாயார் இருக்கும்வரை எவ்வளவோ நல்லவராகத்தான் என் தகப்பனார் இருந்தார். அவள் இறந்ததும், அவள்மேலிருந்த அன்பால், எல்லாவற்றையும் வெறுத்துக் கொஞ்ச காலம் உத்தர தேசங்களில் சுற்றித் திரிந்தார். இப்பொழுது தான் கொஞ்ச காலமாய், இங்கேயிருக்கின்றார், மஹாவீரன் தாக்ஷண்யத்துக்காகவும், மந்திரியின் தாக்ஷண்யத்துக்காகவும்.

பாநுமதி.—கண்ணே ஜானகி? நீ மனம் வருந்தாதே. நான் பகிரங்கமாய் என் பதவியை யடைந்ததும்-உனக்கும் உன் தகப்பனாருக்கும்-ஐயோ-என் தகப்பனார் எவ்வாறு தவிக்கின்றாரோ-ஐயோ! என் பிராணநாதர் வந்ததும் அவர் அநுமதி பெற்று-

இவர்கள் இவ்வாறு சம்பாஷித்துக்கொண்டு அவ்வந்தப்புரத்தின் முன்னணியின் பிராகாரத்திற் சென்று உல்லாஸமாய் உலாவிக்கொண்டிருக்கையில், தாதி வந்து, 'அம்மணீ! மஹாவீரர் தங்களைப் பார்க்கலாமா வென்று அனுமதி பெற்று வரச்சொன்னார்' என்றாள்.

'சரி! வரலாம்; என்று பாநுமதி ஆக்ஞாபிக்க, தாதி திரும்பிச்சென்ற சிறிது நேரத்துக்குள், மஹாவீரனும், அவன்பின், சாமியாரும் பிரவேசமானார்கள்.

கபடத்தால் இருண்ட தன் ஹிருதயத்தை, உபாயம், நாகரீகம், ஸமயோபசாரம் முதலானவைகளாலும், செழித்த முகத்தால் மறைத்துக்கொண்டு, மஹாவீரன் வந்தனோபசாரங்கள் செய்ய, ராணுவக்கட்டையான நமது சாமியார், சற்றுமுன் தன் ஆதீனத்திலிருந்த பாநுமதி, சிறிது

நேரத்துக்குள், இந்திரஜாலத்தாற்போல ராஜாங்க கோலத்துடன் விளங்குவதைப் பார்த்துக் கிடுகிடுத்துத் தன் வலக்கையை நெற்றிக்கு நேர் உயர்த்தி 'ஸலாம்! அம்மணீ! என்று பிரக்ருத ஆச்சிரமத்தை மறந்து ராணுவ ஸலாமிட்டான்.

இளங்காற்றால் வணங்கும் பூங்கொத்துப்போல தன் முகத்தை முறையே சற்று வளைத்து, தன் புன்னகையால் அவர்களின் வந்தனேப சாரங்களை யங்கீகரித்துக்கொண்டு, அவர்கள் செய்யும் உபசாரங்களெல்லாம், மந்திரியின் மஹிஷியாய் விளங்கும் தன் உயர்பதவிக் கனுகுணமாயிருக்கின்றனவே யொழிய, கபடமானவைகளென்று அறிய முடியா அப்பேதை, 'மஹாவீர! இன்று மாலை நமக்கு நல்ல சமாசாரங் கொண்டு வரும் பாக்கியம் உனக்குக் கிடைத்ததல்லவா? நிரம்ப சந்தோஷம்" என புன்னகையுடன் சொல்ல,

**மஹாவீரன்.**—அம்மணீ! எல்லாம் தங்கள் தயவுதான்!—

**சாமியார்.**—அம்மணீ! அடியேனை மன்னித்தருளவேண்டும். ஏதோ தங்கள் விஷயத்தில் அடியேன் கண்டிப்பாய் நடந்ததாய்க் காட்டிக்கொண்டது, எனது எஜமானனான தங்கள் கணவன் ஆணையை முன்னிட்டே! கணவன் வழிப்பட்டு நடப்பதே கற்புடைய மங்கையரின் பேரணிகலன் என்ற பெரியோர் வாக்கியங்களைத் தாங்கள் அறியாதவர்களா?

**பாநுமதி.**—சாமியாரே! இந்தச் சந்தோஷ சமயத்தில் உங்களைப்போன்ற உரித்தானவர்களின் பிழைகளைப் பொறுப்பதைப் பார்க்கினும் நம்முடைய பேரும் பதவிக்குத் தக்க பலன் என்ன?

**சாமியார்.**—"எல்லாம் தங்கள் தயவே!" என்று மறுபடி வணங்கிவிட்டு வெளியே சென்றான். இதற்குள் ஜானகியும் இன்னும் சில அலங்காரங்கள் செய்ய வேண்டுமென்று அந்தப்புரஞ்சென்றுவிட்டாள்.

இப்பொழுது பாநுமதியும் மஹாவீரனும் தனித்திருக்கின்றார்கள். மஹாவீரன் யாதொன்றும் பேசாதிருப்பதைக் கவனித்த பாநுமதி ஏதோ பயத்தாலும், சங்கோசத்தாலும், அவ்வாறு பேசத்துணியவில்லை யென்று நினைத்து, "மஹாவீர! உன் முகத்தைப் பார்க்கையில், நீ ஏதோ நம்மிடம் தெரிவிக்க விரும்புவதுபோல--"

**மஹாவீரன்.**—தங்களுக்குத் தெரியாத தொன்றுமில்லை. நான் என்ன தெரிவிக்கப்போகிறேன்?

**பாநுமதி.**—மஹாவீர! கூசாமல் சொல்லு—

**மஹாவீரன்.**—அம்மணி—! தங்கள் அனுமதியின்பேரில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்—தாங்கள் இன்று தர்மராஜனைப் பார்க்க நேர்ந்ததல்லவா—?

**பாநுமதி**—ஆமாம்! அதற்கென்ன! அவன் வந்ததுமுதல்—அவன் சொன்ன சமாசாரங்களைக் கேட்டதுமுதல்—கொஞ்சம்—என் மனது—கவலை—

**மஹாவீரன்.**—அம்மணி! தங்கள் மனம் வருந்த யாது காரணமோ?

**பாநுமதி.**—என் தகப்பனார் அதிக அபாய நிலைமையில்—

**மஹாவீரன்.**—ஹா! எங்கள் தகப்பனார்! அப்பொழுது திடீரென்று சம்பவித்திருக்கவேண்டும்! எனது எஜமானர் கட்டளைப்படி யடிக்கடி அனுப்பப்படும் தூதுவன் சிறிது நேரத்துக்கு முன்தான் வந்தான்! தங்கள் தகப்பனார் இன்று காலை சம்பக வனத்தில் வேட்டையாடிக்கொண்டிருந்ததைக் கண்டதாகச் சொன்னானே! அம்மணி! இதெல்லாம் தர்மராஜன் செய்த சூது! அவன் எதையும் செய்யத் துணிந்தவன்!—

**பாநுமதி.**—மஹாவீர! தர்மராஜனைப்பற்றி நீ அவ்வாறு அபவாதம் கூறுவது தகுதியல்ல. அவன் பரம யோக்கியன். கபடமே யற்றவன். கருணை வாய்ந்தவன். தர்மமே உருவெடுத்தாற்போல விளங்குபவன். பொய் சொல்லும் விதமே யறியாதவன். என் பிராணநாதரைக் கண்டவுடன்—என் சிபார்சால் உபகாரமடையத் தகுதியானவர்களில் அவனே முதல்வன். அவனைப் பற்றி என் பிராணநாதரிடம்—' அம்மணி! நான் தர்மராஜனைப்பற்றி அபவாதம் கூறத் துணிந்தவனில்லை—ஆயினும்—எல்லோரும் நல்லவர்கள் தான்,—ஆயினும் நல்ல விஷயமென்று—தான் கைக்கொண்டதை ஒருவன் எண்ணுவானாகில்—அதைச் சாதிக்கும்பொருட்டு—ஒருசிறு பொய்! அம்மணி—அவ்வளவு கண்டிப்பாய்—தர்மசாஸ்திரம் பார்த்தால்—இவ்வுலகில் ஜீவிப்பதே அசாத்தியமாகும்."

"ராஜாங்க காரியங்களில் நீ அதிகமாய்ப் பழகியிருப்பதால், உனக்கு மனச்சாக்ஷி யென்பது கொஞ்சம் மலினமடைந்திருக்கின்றது. தர்ம

ராஜன் ' அப்படிப்பட்டவனல்ல. அவன் மாதிரியே வேறே ! கேவலம் இவ்வுலக சுகத்தின் பொருட்டு நல்வழி தவறி நடக்கப்பட்டவன் அவனல்ல. இந்த உத்தம குணத்தின்பொருட்டே என் தந்தை யவனிடம் மிக்க அன்புபாராட்டி வருகிறார். இவ்வுத்தம குணத்திற்கே யவனை நான் காதலித் திருக்கவேண்டும். என்ன செய்யலாம். ஆயினும், இந்நிலமையில் என் காந்தர்வ விவாஹத்தையும், என்னை யடைந்திருக்கும் மஹானையும் அவனறியாமையால், நான் ஏதோ உன் போன்றவர்கள் வசத்தால் அகப்பட்டுத் தவிப்பதாய் எண்ணி, என்னை மீட்டி என் தந்தையிடம் சேர்க்க, அவர் வியாதியால் வருந்துவதாய் ஒருவேளை—சொல்லி யிருக்கலாம்.

அம்மணீ! அதில் சந்தேகமேயில்லை! அம்மணி! கலப்பில்லாச் சத்தியமே சிறந்த தர்மமென்று கூறித் திரியும் பேதையரில்நானும் ஒருவனென்று பாசாங்கு செய்யவில்லை. சமயோசிதமாய், அஃதைக் கொஞ்சம் மறைத்துப் பேசாவிடில் அதற்கு அழகுமில்லை. ஆயினும் எவ்வளவு கேவலமாய் என்னைத்தான் மதிப்பினும், அம்மஹானுக்கு மித்திரனாயிருக்கும் நான், தங்களிடமும் பொய் கூறுவேனாகில், அது எவ்வளவு காலம் வெளிப்படாது தப்பிக்க முடியும்."

"மஹாவீர ! என் பிராணநாதர் உன்மேல் வைத்திருக்கும் விசுவாஸமும், அவர் கொண்டிருக்கும் ஆசையெனும் பெருங்கடலில் யாத்திரை செய்யும் ஓர் மரக்கலத்தின் மாலுமியாக உன் ஸகாயத்தை யவரடைந்திருப்பதும் நான் அறிவேன். ஏதோ தர்மனுக்குப் பரிந்து பேசியதால் உன்னைக் கேவலமாய் நினைத்ததாய் எண்ணாதே. என்ன ஆனாலும், நான் கிராமத்தில் வளர்ந்த பெண்தானே. ஆகையால் உபசார வார்த்தைகள் சொல்லத் தெரியாமல் முண்டமாய் உண்மையே பேசிவிட்டேன். வாஸ்தவந்தான் ! காலத்துக்குத் தக்க கோலம்போடவேண்டியது நியாயந்தானே."

அம்மணீ ! வாஸ்தவந்தான் ! ஆயினும் நமது மஹாராணியாரைச் சுற்றிப் பழகி நாகரீகம் எனும் கடலில் நீந்திவரும் எந்தப் பெண்ணும், தமது காதலன்முன், இன்னொருவனைப்பற்றிப் புகழமாட்டாள்— "அது—அவ்வளவாக—"

"மஹாவீர ! அதென்ன அப்படிக் கூறுகின்றாய்?என் பிராணநாதரிடம்,தர்மாஜனைப்பற்றிக் கூறுவதில் என்ன கூடாத காரியம் ? "

" அம்மணி ! அப்படியானால் நமது எஜமானிடத்தில், எவ்வளவோ இரஹஸ்யமாய் காக்கப்படும் இவ்விடத்தைத் தர்மாஜன் கண்டுபிடித்து தம்மிடமும் சம்பாஷித்துச் சென்றார் என்று சொல்லப் போகிறீர்களாக்கும் ?"

"தடையில்லாமல்! ஒன்றுகூட ஒளிக்காமல்?"

"ஏதோ தங்களிஷ்டம் ! பின்னால் அதனால் ஏற்படும் துன்பத்தை யோசித்தால் "—

"என்ன துன்பம் ?"

அம்மணீ சற்று யோசியுங்கள். இவ்வளவு தூரம், இவ்வாண்மனையும், நமது எஜமானருடைய போக்குவரவும் ஏன் இரகஸ்யமாய் காக்கப்படவேண்டும் ? காரண மில்லாமலா ? "ஏதோ என் பிராணநாதர் சித்தம் ! அதில் என்ன ரகஸ்யமிருக்கிறது ? "

" அம்மணீ ! தங்களுக்குத் தெரியாதது ஒன்றும் புதிதாய்ச் சொல்லக்கூடியவனல்ல ! நமது எஜமானருடைய மனோபாவங்களும்,அவர்பொறுமை முதலான குணங்களும் என்னிலும் பன்மடங்கு தாங்கள் அறிந்திருப்பீர்கள். ஆயினும், இவ்வாண்மனைக்கு வெளியே நடக்கும் சில விஷயங்களில் அடியேனுக்கு"

"சும்மா ! தைரியமாய்ச்சொல்லு !"

ஏதோ இவ்விடத்தைவிடக் கொஞ்சம் அதிகப் பரிசயமுண்டென்று எண்ணத் துணிகின்றேன்—"

" வாஸ்தவம்தான்—என்னசொல்லுகின்றாய்—"

"என்ன சொல்வது. இயற்கனவே தர்மாஜனுக்கும் நமது எஜமானருக்கும் அவ்வளவாக நல்ல எண்ணமில்லை—இவ்விஷயமும் தெரியும் விஷயத்தில்—என்ன நேரிடுமோ என்ற சங்கைதான். மேலும் இதுவரை இவ்வாண்மனை ரகஸ்யமும், ஏன்—! தங்கள் பதவியும், இவ்வாண்மனையைக் காத்துவரும் இந்த நாய்ப்பயல் சாமியாருக்குக்கூடத் தொலையாது. இனிமேல் ஒருவேளை இவையெல்லாம் வெளிப்பட காலம்வந்து நேர்ந்துவிட்டதோ என்னவோ !

பாநுமதி.—சற்று நேரம் ஆலோசித்துவிட்டு, மஹாவீர ! நீ சொல்லுவதும் வாஸ்தவந்தான். ஒவ்வொருவரும் தம்தம் பரிசீலனைகளில் புத்திமான்தான். ஆகையால் நீ சொல்லுவதும் சற்று அங்கீகரிக்க வேண்டியதுதான். ஆயினும்—

ஆ ! குதிரைக் காலடிச்சத்தம் கேட்கின்றது. என் பிராணநாதர் வந்துவிட்டார்." (தொடரும்.)

# மாணவர் பக்கங்கள்
## STUDENTS' PAGES
## வியாஸ விதானம்
## Essay writing
### IV. ஆராய்ச்சி வியாஸங்கள்
### REFLECTIVE ESSAYS
### மனதைப்பற்றிய விஷயங்கள்: மனோராஜ்யம்
### Psychological Subjects : Day dream

குறிப்பு:—ஸ்வரூபம்: உதாரணங்கள் எல்லை-உண்டாகும் விதங்கள்-பயன் கதை-முடிவு.

மனோராஜ்யம் எனப்படுவது விழித்துக் கொண்டிருக்கையிலேயே மனது வேறு ஒருவிஷயத்தைத் தாரையாக விடாது நினைத்துக்கொண்டிருத்தலாகும். இந்த எண்ணம் மனதைமுற்றிலும் கவர்ந்துவிடும். சுற்றுமுள்ளவைகள் ஒன்றும் தோற்று. மனதிலிருக்கும் எண்ணமே ஓயாது முன் நிற்கும். அன்புள்ள காதலனைவிட்டுப் பிரிந்தபெண்ணுக்கு மனம் எவ்வளவு திருப்பினும் திரும்பாது; காதலன் விஷயமாகவே பாய்ந்தோடிக் கொண்டிருக்கும். இதுபோலவே புருஷனை இழந்த பூவைக்கும், பிள்ளையை இழந்த தாய்க்கும்மனோராஜ்யத்தின் கொடுமைஅதிகம் .என்ன முயன்றும் துக்ககாரணத்தை விட்டு கொஞ்சம் கூட மனம் விலகாது: அதன் விஷயமான காரியங்களிலேயே சிலநாள் பாய்ந்துகொண்டிருக்கும். ஆகவே ஸுகத்தில் அதிக ஸுகத்தையும், துக்கத்தில் அதிக துக்கத்தைக் காட்டுவதும் இந்த மனோராஜ்யமே. ஒரு சிறைச்சாலையிலிருக்கும் ஒருவனுக்கு மனதில் அரண்மனை ஸுகாதிகள்ஊறிக்கொண்டிருப்பின் அவனுக்கு சிறைச்சாலையின் கஷ்டமே தோன்றுது. இக்கருத்தையே 'மனங்கொண்டது மாளிகை' என்ற பழமொழி அடக்கியுள்ளது. ஆகவே மனோராஜ்யம் வெளி விஷயத்திற்கு மாறாக விருப்பின் அதிலிருந்து வரும் ஸுகதுக்கங்களின் வலிமையைக் குறைத்துவிடும்.

மனோராஜ்யம் என்பது ஒரு எல்லை கிடந்துவிட்ட மனோபாவத்திற்கே பெயர். மனதால் எண்ணும் தொடர்ந்த எண்ணங்களை அநேக விதப் பெயரிட்டழைப்பது வழக்கம். மதம் கடவுள் இவைகள் விஷயமாக இது இருக்குமாயின் இதற்குத்தியானம் என்று பெயர். வெளியில் செய்து முடிக்க வேண்டிய கார்ய விஷயமாக இது ஏற்பட்டால் இதற்கு யோசனை என்று பெயர் வெளி விஷயத்திற்கு ஒருவித ஸம்பந்தமும் இன்றி மனதை செலவிட்டு மனம்போனபோக்கே போய்க் காலத்தை வீணாகக் கழிப்பதற்குத்தான் மனோராஜ்யம் என்று பெயர். இது ஸாதாரணமாகக் கொடியவர்கள், மூடர்கள், விஷய ஆசை உள்ளவர்கள் ஆகிய இவர்களிடமே முக்கியமாகக் காணப்படும்: முற்கூறியவைகள் முறையே அப்யாஸிகளிடத்தும், வியாபாரிகளிடத்தும் காணப்படும். ஆதலால் வெளிவிஷய ஸம்பந்தம் நீங்கி ஒரு பயனும் இன்றி எண்ணப்படும் எண்ணம் மனோராஜ்யமாகி விடும்.

இம்மாதிரியான மனோராஜ்யங்கள் உண்டாகக் காரணமென்ன? என்ற விஷயத்தைப்பற்றி யாராய்வோம். ஒருவன் வாசிக்கும் புஸ்தகங்களே இதற்குக் காரணம். உலகில் இல்லா அற்புத விஷயங்கள் அடங்கிய அரபிக்கதைகளை விடாது வாசித்தால் நம்மனம் உலக ஸம்பந்தமற்ற அற்புதங்களிலேயே ஊறிக் கொண்டிருக்கும். உலகம் ஆச்சர்யமாகத் தோன்றுது, நிஸ்ஸாரமாகப்படும். சாப்பிடச் சோறு கூப்பிட வேலையாள்கள் இருக்குமட்டும் இந்த அற்புத மனோராஜ்யம் நிலைக்கும்: அவ்வளவுதான். உலகக் கடமைகளைச்செய்து மேன்மைபெற மனமெழாத தாழ்ந்தநிலை வந்துவிடும். இம்மாதிரியே தான் நாடகம் கற்பனைக் கதைகள் (நாவல்கள்) வாசிப்பவர்கள் கதியும். சாகுந்தளம் வாசித்து சகுந்தலைபோன்ற மனைவிவேண்டும் என்ற மனோராஜ்யத்தில் ஒருவன் விழுந்துவிட்டால், அவனுக்குக் கல்யாணம் எப்படி யாகும்? இல்லறத்தில் மனம் எவ்வாறு நிலைக்கும்? அழகிய பெண்டிரை எல்லாம் வெறித்து நோக்கும் மானம் கெட்ட நிலைவந்து விடாதா? ஆகவேநாம் வாசிக்கும் புத்தகங்களே மனோராஜ்யத்தைத் தூண்டி நம்மைச் சீரழியச் செய்வது. மேலும், நமது தோழர்கள் உறவினர்கள் முதலியோரும் வீண் வர்ணனைகள் பொய்கள் கலந்து பேசுவதாலும் இந்த மனோநிலை உண்டாகி ஓங்கும். ஆகவே வாய்ப்பந்தல் போடுபவர்களோடு அதிகப் பழக்கம் கூடாது.

மனோராஜ்யத்தின் பயனை முற்கூறியவைகளிலிருந்து சேர்த்து எழுதுவோம். மனோராஜ்யம் ஒருவன் முயற்சியைக்குறையும்படிசெய்துவிடும். உலகவிஷயத்தில் ஒருவித பைத்தியமான வெறுப்பையுண்டாக்கி பெருங் கஷ்டங்களுக்கு ஒரு

வனே ஆளாக்கிவிடும். ஸாகங்களில் கால் தலை தெரியாது மூழ்கிவிடவும் துக்கத்திலிருந்து மீளாது தத்தளிக்கவும் செய்துவிடும். பார்ப்போர் நகைப்புக்கு இடன் உண்டாக்கிவிடும். மனோராஜ்யம் குடிகொண்ட மூடனை எவராலும் திருத்தமுடியாது. அதன் கொடிய பலன்களை அனுபவித்துத்தான் அவன் திருந்தவேண்டும். வியாதி வந்துவிட்டால் அதைப் பெரிதாக எண்ணிவளரவிட்டு வருந்துவதும் இந்த மனோராஜ்யத்தால்தான். ஆதலால் இதை எப்பொழுதும் புத்திமான் அடக்கி யாண்டுகொண்டே வரவேண்டும்.

மனோராஜ்யத்தின் கொடுமையைக் காட்டும் கதைகள் அநேகம் உண்டு. பிராஹ்மணார்த்தக்காரன் குளக்கரையில் வந்து உட்கார்ந்து, தலையிலிருந்த ஒரு எள்ளை எடுத்துப்பார்த்து மனோராஜ்யம் செய்து குளத்துள் விழுந்த கதையும், தயிர்க்காரன் மனோராஜ்யம் செய்து குதிரை ஓட்டி தயிர்க்குடத்தை உடைத்த கதையும் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். அரபிக்கதையில் அல்நாஸ்கர் என்ற கண்ணாடி வியாபாரி விஷயம் மிக வேடிக்கையாக விருக்கும். அல்நாஸ்கர் தகப்பன் இறக்குங்கால் ரூ. 100-அவனுக்கு ஆஸ்தியாக வைத்துவிட்டுப் போனான். அதை அவன் கண்ணாடிஸாமான்கள் வாங்குவதில் செலவிட்டு கண்ணாடிக்கடை பரப்பிக்கொண்டு வியாபாரம் தொடங்கினான். அப்பொழுது அவன் சுவரில் சாய்ந்துகொண்டு,காலை கண்ணாடிக்கூடையின் அருகில் நீட்டிக்கொண்டு வாங்குபவர் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கையில்மனோராஜ்யம் செய்து விஷயங்களை வாய்விட்டுக் கூறவும் தொடங்கிவிட்டான். அடுத்த கடைக்காரர் இந்த அற்புதத்தை வந்து கேட்டுக்கொண்டே நின்று விட்டார்கள்.

அல்நாஸ்கர் கூறலுற்றான்:—'நான் இவைகளை இரட்டிப்பு விலைக்கு விற்று 200 ரூ ஸம்பாதிப்பேன். இப்படி மறுபடியும் மறுபடியும் வியாபாரம் செய்து 1000, 10,000 ரூபாய்கள் வாரிவிடுவேன். உடனே இந்தத் தொழிலை விட்டு ரத்ன வியாபாரியாகி லக்ஷாதிலக்ஷமாகக் குவித்துவிடுவேன். பின்னர் இவ்வூர் மந்திரி பெண்ணை கோலாகலமாக மணம் முடிப்பேன். அவள் தனது குலக்கர்வத்தை என்னிடம் காட்டவா நான் கோபங்கொள்ளுவேன். 'துரைமகளானாலும் பாரி, உரியவனுக்கவள் ஊழியக்காரி' தானே. அப்பொழுது என் மாமி எங்கள் பிணக்கைத் தீர்க்க பெண்ணை என் உள்ளே கால் மாட்டில்கொண்டு விட்டு கெஞ்சி மன்றாடுவாள். பெண்சாதி மிகப் பணிவுடையவளாக இருப்பினும்அவளை அப்பொழுது அங்கீகரியாது இப்படி உதைப்பேன்,' என்று தன் காலால் ஒரு உதை உதைத்தான். இது கண்ணாடிக் கூடையில் பட்டு கண்ணாடி ஸாமான்கள் சுக்குத் தூளாகிவிட்டன. உண்டான சப்தத்தில் உலக பிரக்ஞை வந்தது அல்நாஸ்கருக்கும். எல்லோரும் 'என்னடா மனக்கோட்டை கட்டி அஸ்திவாரத்தைத் தகர்த்துவிட்டாயே' என்று கூறி வயிறுவெடிக்க சிரித்தனர். மனோராஜ்யம் படுத்தும் பாடு இத்தன்மையாகவே இருக்கும்.

இம்மாதிரியே விவரிக்கக்கூடிய விஷயங்கள்

| | |
|---|---|
| 1. ஞாபக சக்தி | 6. கனவு |
| 2. உருப்போடுவது | 7. உறக்க நடை |
| 3. கற்பனாசக்தி | 8. மூர்ச்சை: மரணம் |
| 4. அறிவு | 9. தண்டனையும்மனோநிலையும் |
| 5. தூக்கம் | 10. கவிதை |

போதக் குறிப்புகள்

1, ஸ்வரூபம், உதாரணங்கள்
2. எல்லை
3. உண்டாகும் விதம்
4. பயன்
5. கதை
6. முடிவு

## மொழிபெயர்ப்பு விளக்கம்
## Translation Models
### Imitation and Reality

A certain man had the peculiar power of grunting exactly like a pig, so much so that whenever he grunted where pigs were grazing, they would all turn round to see if any new member had come into their fold. This man's fame spread abroad and he began to tour to obtain money by means of his art. Wherever he went he erected a pandal and issued tickets, for admission, all of which got exhausted very soon—such was the eagerness of people to hear him grunt. While he was thus making money in a village, a sage happened to pass by with his disciples, and it struck him that he could teach a good lesson to them through this incident. Accordingly he ordered a small

pandal to be erected and advertised that even better grunting could be heard there than in the other pandal and that free of cost. The people were naturally very eager to hear it and. they rushed in. What did the sage do? He brought a pig before them and squeezing it a little, made it grunt. Really the grunt was much better than the man's, but the people exclaimed, "Pooh, is this all? We hear this every day, but what is there in it? It is nothing wonderful" and went away. In spite of the loud tom-tom which he engaged, not one would enter his pandal, while that of the man-pig was crowded to suffocation every few minutes. After all the people had left his pandal, the sage addressed his disciples and said, here is "splendid lesson for us. Men seldom care for reality but always go in for imitation. That is why this world exists which is a mere imitation, a reflection in the distorting mirror of Maya of the great Atman. No external help is required to see the *Self* but very few want it and even if you eagerly advertise it, none will go to you except those who love Truth of Truth's sake. Reflect on this."

### உண்மையும் தோற்றமும்

ஒரு மனிதனுக்கு பன்றிகள்போல் உறுமும் திறம் நன்றாக இருந்தது. பன்றிகள் மேய்ந்து கொண்டிருக்கும் இடம் போய் அவன் உறுமினால் தமது கூட்டத்தில் ஏதாவது ஒரு புதிய பன்றி தான் வந்து விட்டதோ என்று அவைகள் நாற் புறமும் சுற்றி வெருண்டு நோக்குமாம். அவன் கீர்த்தி உலகெங்கும் பரவியதும், தன் திறமை யால் அவன் பணம் ஸம்பாதிக்க தேசசஞ்சாரம் செய்யத் தொடங்கினான். ஓர் ஊரில் இவன் உறு மிப் பணம் சம்பாதித்துக் கொண்டிருக்கையில், அவ்வூர் வழியாக ஒருமஹான் தமது சிஷ்யர்களு டன் போய்க்கொண்டிருந்தார். அவன் பணம் சம் பாதிக்கும் வழியைக் கண்டதும் அதன் மூலமா கத் தமது சிஷ்யர்களுக்கு நல்லவிஷயம் ஒன்றை போதிக்கலாமென்று அவருக்குப்பட, உடனே, அங்கே பந்தல் ஒன்றைத் தயார்செய்து 'இங்கு வேறிடங்களில் கேட்கக்கூடிய உறுமலை விடச் சிறந்த உறுமலை கேட்கலாம். இதற்கோ காசு ஒன்றும் கொடுக்கவேண்டியதில்லை. இஷ்ட மானவர்கள் வரலாம்' என்று தமது சிஷ்யர்க ளால் தண்டோராப் போடுவித்தார். ருசிகண்ட அவ்வூர் ஜனங்கள், மிகுந்த ஆவலோடு மஹா னது பந்தலில் வந்து கூடினார்கள். அவரோ நிஜ மான பன்றி ஒன்றை வாங்கிவந்து அதன் காதைத் திருகிக் கத்தும்படி செய்தார். உண்மை யில் இது மற்றையவன் உறுமலைவிட மிக நேர்த் தியாகத்தான் இருந்திருக்கவேண்டும். ஆனால் ஜனங்கள் எல்லோரும் 'சீ! இதுதானா! இதை நாம் தினம் கேட்கவில்லையா? இதில் என்ன ஆச் சரியம் இருக்கிறது!' என்று இகழ்ந்து பேசிவிட் டுப் போய்விட்டனர். மஹான் எவ்வளவோ தண்டோராப்போட்டு பாடுபட்டுப் பார்த்தார். அவர் பந்தலுள் ஒரு மனிதன்கூட வரவில்லை. ஆனால் போலிப்பன்றியின் பந்தலில் கூட்டம் எப்பொழுதும் விடாது கூடிக்கொண்டே இருந் தது. பந்தல் காலியானதும், மஹான் தமது சிஷ்யர்களைச்சூழ இருக்கும்படி சொல்லி 'பார்த் தீர்களா! இப்பொழுது செய்த சோதனையில் ஓர் அற்புதம் வெளியாகின்றது. மனிதர் களுக்கு உண்மை வஸ்துக்களில் இஷ்டமில்லை. போலித்தோற்றங்களில் அதிகப் பிரீதி. இதனால் தான் போலி இன்பங்களாகிய உலகஇன்பங்களைக் கட்டிக்கொண்டு அவைகளை விட்டு நீங்க மனம் வராது அவர்கள் அவைகளில் கிடந்து உழன்று வருந்துகின்றார்கள். மேன்மை அடைவது கஷ்டமல்ல. அதற்கு எந்த வெளிவஸ்துவின் ஸகாயமும் கொஞ்சமேனும் வேண்டியதில்லை. அதை அடைய வேண்டுமென்ற மனப்பூர்வ ஆவல் தான் வேண்டும். நாம் எவ்வளவுதான் பேரின்பத்தின் சிறப்பை எடுத்துரைத்த போதி லும் அதில் ருசி உள்ளவர்கள் தவிர வேறொரு வரும் நம்மை அணுகார். இதைப்பற்றிச் சிந்தி யுங்கள்" என்றார்.

---

ஓரற்புத தபால்யந்திரம்.—லண்டனிலுள்ள ஒரு போஸ்டாபீஸில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு யந்திரம் வைக்கப்பட்டிருக்கின்றது. அது தபாற் றலைகளைக் கடிதங்களில் தானகவே யொட்டிவிடுமாம்; ஒரு மணி நேரத்தில் 2000 முதல் 3000 வரையிற் றபாற்றலைகளை யொட்டுமாம்; 50000 ஸ்டாம்புகளைக் கொள்ளுமிடமுடையதாம்; இவ்வாறான யந்திரங்கள் பம்பாய்ப் போஸ்டாபீசுகளில் வைத்துப் பரீட்சிக்கப் பட்டு வருகின்றன வென்று தெரிகின்றது. அந்த யந் திரம் அன்னிய தேசத்து நாணயங்களையும் தேய்ந்து போன நாணயங்களையும் தன்மீது வைத்தால் கீழே தள்ளிவிடுமாம்; செலாமணியாகக்கூடிய நாணயங்களை வைத்தால் ஸ்டாம்பை வெளிக்கு கொண்டுவந்து கடி தங்கள்மீது ஒட்டுமாம்.

# சிறுவர்களுக்கான பக்கங்கள்
## CHILDREN'S PAGES

### உண்மை உயர்வு அல்லது வாஸுதேவ சாஸ்திரி
### TRUE GREATNESS OR VASUDEVA SASTRI

### அத்தியாயம் 13
### ஸித்தர் பூர்வ சரித்திரம்

அற்பு தச்செய லாற்றலின் யாரையு மயக்கி
வற்பு றும்பொரு ளாசையின் மனமதான் றழியு
மற்ப வீழ்நெறி யடைகுறூஉஞ் சித்தரின் இதயம்
பொற்புண் ஞானியர் போற்றுமென் சடப்பொருள்
[இவற்றை ?

ஐயோ பாவம்! நாராயணய்யர் பிரமித்து தூண்போல் நின்றுவிட்டார். அங்கிருந்த அலங்கோலத்தைக் கண்டும் உறக்கக் கூவ அவருக்கு நாவெழவில்லை. 'ஐயோ! ஐயோ!! திருடன்! திருடன்!!' என்று கூவ இரண்டொருதரம் கூடியவரையில் முயற்சித்துப் பார்த்தும் முடியவில்லை. இச்சொற்கள் பயத்தால் அவர் தொண்டையில் சிக்கிக்கொண்டுவிட்டன. முடிவில் குழறிய வாக்காக இவை வெளி வந்தன. ஸாதாரணமாக இடும் கூக்குரலைவிட இதுமிக ஒலி உடையதாகவே இருந்தது. வெகுதரம் கத்த முயற்சித்து பயத்தால் தடுக்கப்பட்டு பின்னர் பயத்தாலேயே கரை புரண்டு அணைகளை இடித்து வரும் வெள்ளம்போல உண்டாக்கும்சப்தம் இவ்வாறுதானிருக்கும். இதனால் வீட்டில் மிகுந்த குழப்பம் உண்டாகி வெளியிலும் பரவியது. முதலில் வீட்டுச் சேவகர்கள் வாரிச் சுருட்டிக்கொண்டெழுந்து பசபசவென்றுவிழித்தனர்; வீட்டிலுள்ளோர் எல்லோரும் கிளம்பிவிட்டனர்; பின்னர் அயலாரும், அருகிலிருந்த நகர ரக்ஷணை கூட்டத்தாரும் கிளம்பி ஓடிவந்துவிட்டனர். இந்த அல்லோலகல்லோலத்திற் கிடையில்,பயத்தால் வெளுத்த முகமும், விரிந்து புரண்ட கூந்தலும் உடையாளாய் வெலுவெலுக்க ருக்மிணி அலறிக்கொண் டோடிவந்து, தகப்பனர்மேல் சாய்ந்துகொண்டு, 'அவர்! அவர்! உங்கள் அருமை மாப்பிள்ளை! மாப்பிள்ளை!!' என்று ஓலமிட்டாள். தூக்கி வாரிப்போட்டது நாராயணய்யருக்கு! உடல் பதற'மாப்பிள்ளையா? அவனுக்கு என்ன? என்ன சமாசாரம்? திருடன் கழுத்தறுத்துவிட்டானு? என்ன? சொல்லித் தொலையேன்!' என்று உளறிக் கொட்டினர். 'அவர் என்னை அநாதை யாக்கிவிட்டோடிவிட்டார்! ஜபாயே போய்விட்டார்!' என்று கொந்தி அழுதுகொண்டு வெளியிட்டாள். 'அப்படியா! ஐயோ! நான் தொலைந்துபோனேன்! போனேன்! என் பிராணன் போகட்டுமே!!' என்று கதறி பாவம் அந்தப் பிதா மூர்ச்சைபோட்டு அடியற்ற மரம்போல் சாய்ந்துவிட்டார். அங்கிருந்தோர் அவரைத் தூக்கி நிறுத்திவிட அவர் நாற்புறமும் 'திருடன்! திருடன்!! மாப்பிள்ளை! மாப்பிள்ளை!! பணப்பெட்டி! பணப்பெட்டி!!' என்று கதறிக்கொண்டோடி மறுபடியும் முன்போல விழுந்துவிட்டார். இந்த ஸமயம் அவருக்கு வெகு நாழிகை தேஹ உணர்ச்சியே வரவில்லை. ஜனங்கள் மேலும் கீழுமாக ஓடித்தேடிப் பார்த்தனர்; சித்தரையாவது, ஸ்ரீநிவாஸனையாவது, பணப்பெட்டியாவது எங்குதேடியும் அகப்படவில்லை.

இவ்வாறு கொஞ்சநாழிகை கழிந்ததும், குழப்பம் அடங்கி எல்லோருக்கும் சற்று மனம் நிதானப்பட்டது. நாராயணய்யரும் மூர்ச்சை நீங்கி சற்று தேர்ந்து எழுந்திருந்தார். காவற் சேவகர்கள் மேல் நடக்க வேண்டியவைகளைப்பற்றி ஆலோசித்த வண்ணம் இருந்தனர். அங்குக் கூடியிருந்த மற்றவர்கள் எல்லோரும், வாயில் வரத்தகாத வார்த்தைகளை வாரி வீசி ஸித்தபுருஷரை வாய்கொண்ட மட்டும் வைது தீர்த்தனர். ஸித்தபுருஷன் ஒரு ஜாலக்காரன், மோசக்காரன், பெருந்திருடன், கொடியவன் என்றஇவைபோன்ற துர்க்குண ஸம்பூர்ணன் என்றே எல்லோரும் மதிக்கத் தொடங்கிவிட்டனர். 'எனக்கு முதலிலேயே தெரியுமே இந்தப் பயல் வெறும் வேஷக்காரன் என்று' என்றான் ஒருவன். 'இவன் சோற்றுக்கில்லா சோம்பேறியடா' என்றான் மற்றொருவன். 'சாஸ்திரியைக் கண்டதும் கதிகலங்கிவிட்டது அவனுக்கு, நீ பார்க்கல்லே' என்றான் வேறு ஒருவன். 'அதாண்டா! சாஸ்திரிக்கு தெரியும்போலிருக்கு இவன் வண்டவாளம் எல்லாம்!' என்றான் ஒருவன். 'பெரியோரைப் பழிக்கலாகாது: பாபம்! அந்தப் பயல் ஸ்ரீநிவாஸன்தான் திருடியிருக்கவேண்டும்' என்றான் ஐந்தாவன். 'இரண்டுபேரும் கூட்டுடா!' என்றான் வேறொருவன். இவ்வாறு ஜனங்கள் எல்லோரும்தமக்குத் தோன்றியவாறுஇவ்விஷயமாக வார்த்தையாடி வருகையில்,அந்தத் துரோகியான ஸித்தன் வாஸுதேவ சாஸ்திரியைக் கண்டு கலங்

கியதால் ஓடிவிட்டான் போலும் என்று நாராயணய்யர் மனதில் பட்டது. உடனே சாஸ்திரிக்கு ஸித்தன் சரக்குத்தெரிந்திருக்கலாம், என்ற எண்ணம் பிறக்க, 'அந்த மடப்பயல் ஏன் என்னிடம் சொல்லவில்லை? சற்று எச்சரித்தாவது இருக்கக் கூடாதா?' என்று தோன்ற அதிககோபம் வந்து விட்டது. உடனே ஒரு வேலையாளைக் கூப்பிட்டு 'சாஸ்திரியை உடனே தலைமயிரைப் பிடித்திழுத்துவா' என்று கடுங்கட்டளை யிட்டார்.

இந்த ஸேவகன் சாஸ்திரி வீட்டிற்கு வரும் பொழுது, அன்னம்மாள் அழுக்கடைந்த தலையணையில் சாய்ந்துகொண்டு பெருங் குறட்டை விட்டுக்கொண்டிருந்தாள்: சாஸ்திரியோ தம் வீட்டு முற்றத்தில் ஒரு பலகையின் மேல் காலைமடித்து உட்கார்ந்துகொண்டு நிஷ்டாவஸாத்திலிருந்தார். ரிஷிபோன்ற சிறப்புவாய்ந்த முகத்தில் அக்காலத்தில் அப்பொழுது அலர்ந்த தாமரைப்பூவின் காந்தியைவிட சிறந்ததான ஒரு விநோத தேஜஸ் தவழ்ந்துகொண்டிருந்தது. உலகம் இருந்தவிடம் தெரியாமல் பறந்தோடி விட்டது. அவர் அமிழ்ந்து கிடக்கும் திவ்ய தேஜஸில், திருடர்களாவது, மாப்பிள்ளைகளாவது, பணப்பெட்டியாவது, ஸித்தர்களாவது இல்லை. அங்கு சாந்தி சாந்தி சாந்தி என்று கூறப்படும் அமைதியே இருந்தது. அலையற்ற நிரதிசய ஆனந்த ஸாகரம், விரிகடல், அகல்விசும்பு, ஸூர்யசந்திர நக்ஷத்திராதி அளவிலகப்படா அண்டப்பரப்பு, இவைகளைவிட ஓடி விரிந்ததாயும், பெருமை சிறுமை என்று கூறொணாததாயும், தேசகால நிமித்தாதீதமாயும் இருக்கும் நிலையாகவே இருந்தனர் நமதுசாஸ்திரிகள். நாராயணய்யர் ஸேவகன்வந்து கதவிடித்த தருணத்தில், அவரிடம் எண்ணம் அனுபவத்திலும், அனுபவம் ஆரூடத்திலும், ஆரூடம் ஸஹஜத்திலும் முறையே இறந்து நின்றது. அறிபவன், அனுபவிப்பவன், அல்லது அறிவு அனுபவம் ஆகிய இவைகள் அங்கு தலை எடுக்கவே இல்லை. மறுபடி இடித்தான் சேவகன்; உள்ளிருந்தோர் இருவரும் அவஸர வேலையிலிருந்தமையால் பதில் ஒன்றும் வரவில்லை.

மூன்றும்தரம் வெகு பலமாக இடித்தான் சேவகன்; அலறிப் புடைத்துக் கொண்டெழுந்தாள் அன்னம்மாள்! பதறி விழுந்தான் வாயிலிருந்த வேலையாள்! ஒரு மலைக் கணவாயில் வழிதப்பி விட்டதாகவும், அங்கு ஓநாய் புலிமுதலிய காட்டு மிருகங்களிருந்தமையால், தப்பிப்பிழைக்க ஒரு செங்குத்தான பாறையின்மேலேறிப் போனதாகவும் அங்கு கால் சறுக்கிவிட கீழேவிழுந்துவிட்டதாகவும், அப்பொழுது ஒருகொடியபுலி வாய்க்கு நேரேவந்ததாகவும், ஸ்வப்னம்கண்டிருந்தாள் அன்னம்மாள். வேலையாள் இடித்ததும், அவள் மேல் புலி பாய்ந்ததும் சரியாகவிருக்கக் கதிறிக்கொண்டெழுந்தாள். கதவு தட்டும் ஓசையைவிட அலங்காரி அன்னத்தினது திவ்ய த்வனி சாஸ்திரிகள் ஸமாதியைக் கலைத்துவிட முக்கிய முகாந்திரமாயிற்று. விழித்தாள் அன்னம்மாள். புலிவாயில் அகப்பட்டிராததைக் கண்டு தேறினாள். மறுபுறம் திரும்பி முற்றத்தில் தன் கணவன் உட்கார்ந்திருப்பதைக் கண்ணுற்றாள். 'வேதாந்தம் ராவெல்லாம் ஒக்காந்து கிண்டே இருக்கு. கதவைத் தொரந்து யாரிடிக்கிறது என்றுகூட பாக்கிறதில்லை' என்று கண்டித்து வைதாள். பின்னர் கதவைத் திறக்க, வேலையாள் வாஸுதேவ சாஸ்திரி எங்கே என்றான். அப்பொழுது ஸத்ய ப்ரஹ்ம நிலையிலிருந்து மித்யாஜகத் நிலைக்கு வந்தும் ஜகத் வ்யவஹாரத்திற்குத் தயாராகவில்லா சாஸ்திரியிடம் ஓடோடியும் வந்தாள் அன்னம்மாள். கத்திரிக்காய்க்கூடை ஊறுகாய்ப் பானை இவைகளைக் குலுக்குவது போலச் சாஸ்திரிகள் தோளைப் பிடித்து உலுக்கினாள். 'வேதாந்தம்! ஏ வேதாந்தம்!! ஏந்திரு! பொணம்போல வெரச்சு கிடக்கரேயே!! ஏந்திருன்ன!!' என்றுகாது செவிடுபடும்படி அவர் காதிற்குள் உபதேசம் செய்தாள். ஒன்றும் சொல்லாது சாஸ்திரி எழுந்து கொஞ்ச நாழிகையில் நாராயணய்யர் வீடு வந்துசேர்ந்தார்.

இவரை வெகு பரபரப்புடன் எதிர்பார்த்திருந்த நாரயணய்யருக்கு இவரைக் கண்டதும் அடங்காக் கோபம் வந்துவிட்டது,

நாராயணய்யர்.—(மிகுந்த கோபத்துடன் வாய் கொண்டமட்டும் வைதுகொண்டு) இவை எல்லாவற்றை முன்னரே ஏன் என்னிடம் கூறவில்லை. நடந்ததெல்லாம் தெரியுமா உனக்கு? பணப்பெட்டி! மாப்பிள்ளை!! பய்வாப்பயல் ஸித்தன்!!! எனக்கு ரொம்ப வெட்கமா யிருக்கிறது! அவன் காலிலேயும் நான் போய் விழுந்தேனே!! மானக் கேடு!!! ஏன் என்னிடம் இவைகளை முன்னரே தெரிவிக்கவில்லை?

சாஸ்திரி.—எனக்கு ரொம்ப துக்கமாகத்தான் இருக்கிறது!

நா.—துக்கமோ சுகமோ! ஏன் என்னிடம் கூறவில்லை? சொல்.

சா.—எனக்குத் தெரியாதே.

நா.—உனக்குத் தெரிந்திருக்கவேண்மே! ஏன் உனக்குத் தெரியவில்லை?

சா.—(மனதிற்குள்) இதென்ன கேள்வி! (மௌனம்)

நா.—இந்தப் பாவிப்பெண்ணை விட்டுவிட்டு அந்தப் பேய்ப்பயல் ஸ்ரீனிவாஸன் ஓடிவிட்டான்! இவைகளை எல்லாம் ஏன் என்னிடம் தெரியப் படுத்தவில்லை? இப்பொழுதாவது போக்கிரிஸித்தன் சாயம் வெளுக்கட்டும். சொல் பார்ப்போம். ஆஹா வாஸு! நீகூட என்னை இவ்வாறு காட்டிக் கொடுத்து வேடிக்கைப் பார்ப்பாய் என்று நான் எண்ணவில்லையே! ஐயோ! மாப்பிள்ளை! பணப்பெட்டி!! நேற்றிரவு நீ சொல்லியிருந்தால் போதுமே! இந்தப் பயலை போலீஸார்வசம் ஒப்புவித்து நல்ல வேலை செய்திருப்பேனே.

வா:—உன் பணத்தைக்கொண்டு போவான் என்று எனக்குப் படவில்லை! ஸ்ரீநிவாஸனும் ருக்மணியை விட்டுப் பிரிவான் என்பதும் எனக்குத் தோற்றவில்லை. வீட்டில் பெண்டுகள் ஸௌக்யம் தானே! என் தோழன் இந்த ஸித்தனுக்குப் புருஷர்களைவிட ஸ்திரீகள்மேல் அதிக ஆசை. இப்பொழுது வேறுவிதமாக வல்லவோ இருக்கிறது.

இத்தருணத்தில் போலீஸ் ஸேவகர்களை நாற்புறமும் அனுப்பியிருப்பதாக, வந்து ஸங்கதி சொன்னான் ஓர் தலைமை ஸேவகன்.

நா.—ஸரிதான்! நாளைக்குள் என் முன்னே அந்தப்பயலை கொண்டுவரவேணும்! போங்கள். (வாஸுதேவ சாஸ்திரியை நோக்கி), உனக்கு இந்த ஸித்தரைத் தெரியுமா? என்ன தெரியும்? நேற்றிரவு ஸித்தன் உன்னைக்கண்டு ஏன் பதறினான்?

வாஸுதேவ சாஸ்திரி.—நான் காசிக்குப் போனகாலத்தில் கேஸிபூரில் தங்க, அங்கிருந்த ஒரு பணம்பெருத்த வியாபாரியுடன் எனக்குப் பழக்கம் உண்டாயிற்று. அவன் என்னிடம் மிக அன்பாகவிருந்தான். அவன் எனக்கு வேண்டியவைகளை கொடுத்து, என்னை அன்பு பாராட்டி வந்ததால் அவ்விடத்திலேயே கொஞ்சநாளிருந்தேன். நான் வந்து இரண்டு மூன்று நாளைக்கெல்லாம் அங்கு காஷாயம், ஜடை, பாம்பு முதலியவைகளுடன் ஒரு யோகி வந்தான். அநேக யோகிகள் அவனைப் பின்தொடர்ந்து வந்தனர். அவர்கள் அவனை மனம் போனபடி துதிப்பது. ஆகாய கமனம் ஜலஸ்தம்பனம், முதலிய அற்புத ஸித்திகளிருப்பதாக வெளியிடுவது ஆகிய இத்தொழிலையே மேற்கொண்டிருந்தனர். என் நேசன் தோழனான ஒரு வியாபாரி இந்த யோகியை எதிர்கொண்டழைத்துக் கூட்டத்துடன் ஆதரித்தான். நான் எவ்வளவோ அவனுக்குச் சொல்லிப் பார்த்தேன், அவன் கேட்காது தன் வீட்டிற்குள்ளேயே யோகிக்கு ஜாகைவிட்டான். நானும் என் தோழனுமாக ஒருநாள் அவனைப் பார்க்கச் சென்று, உன் பூர்வ விருத்தாந்தம் என்ன என்றுகேட்டோம். தன் பூர்வாச்சிரமத்தில் தான் மதுரை கலாசாலை ஸம்ஸ்கிருத வாத்யார் என்பதாகவும், ஒருகால் தான் திருநெல்வேலி ஜில்லா சதுரகிரி மலைக்குப் போனதாகவும், ஒரு ஸித்தரைக் கண்டு வணங்க, மகிழ்ந்து அவர் தன்னை உள்ளிருந்த ஸித்தாச்சிரமம் அழைத்துச் சென்றதாகவும், அங்கு தனக்குப் பார்வதீ பரமேச்வரர்கள் தர்சனம் கிடைக்கும்படி செய்து தன்னை ஒரு பெரிய ஸித்தனாக்கி விட்டதாகவும், அதற்கு அடையாளமாகத்தனக்கு இந்தப் பாம்பு கொடுக்கப்பட்டது என்பதாகவும், ஆதலால்தான் அகஸ்தியருக்கு நிகர் என்பதாகவும், தன் துணிபட்டவர்களுக்குக்கூட அற்புத சித்து வித்தைகள் தெரிந்துவிடும் என்பதாகவும் கூறி முடித்தான். நாள்தோறும், தன் யஜமானன், சுற்றுமுள்ள மற்றவர்கள் எல்லோரையும், விதம்விதமான செப்படி வித்தை, கண்கட்டி வித்தை, மனஸ்தம்பனம் முதலியவைகளால் ஆச்சர்ய பரவசர்களாக்கி வந்தான். இவைகளை ஸாதாரண தெருவித்தைக்காரர்கள் செய்தால் தந்திரங்கள் என்று மதிக்கும் ஜனங்கள் இவன்செய்ததால் பெரிய சித்து வித்தைகள் என்று கொண்டாடினர். என் தோழர், ஸித்தர் பூர்வ கதையைப்பற்றி என்னிடம் தனியாக விசாரித்தார். 'இவன் ஸம்ஸ்கிருத பண்டிதன் என்றானே அது முழுப்பொய். ஆதிமுதல் மதுரை கலாசாலை பண்டிதர்களை எல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும்,' என்றேன். அவ்வூரில் அவன் பெயர் பரவியது, அநேகர் இவன் பரிவாரங்களுடன்இவனுக்கு விருந்தளித்தனர். ஒவ்வொரு நாளும் தான்பறந்து ஓடிவிடுவதாக அவன் பயமுறுத்தினான்: அவ்வூர் வியாபாரிகள் மடத்தனமாக அவனைப் போக

வொட்டாது தடுத்தனர். முடிவில் அவன் ஓடியே தான் போனான்; ஆகாயத்திலாவது, அல்லது தன் பரிவாரங்களோடாவது அவ்வாறு செய்ய வில்லை. அவ்வூர் பெருங்குடும்பத்தைச் சேர்ந்து ஒரு பதினாறு வயது ரூபவதியுடன் பறந்தோடிப் போய்விட்டான். அவன் ஓடினதுதான் தாமதம், அவன் சென்னபட்டணத்தில் பொய்க்கையெழுத்துப் போட்டதாகவும் அதற்காகஅடைக்கப்பட்டிருந்த சிறையிலிருந்து தப்பிஓடிவிட்டதாகவும், ஆகையால்அவனை உடனே பிடித்துவிடவேண்டும் என்பதாகவும் கண்டிருந்த உத்தரவுடன் ஸேவகர்கள் அங்கு வந்துவிட்டனர். அவ்வூரார் ஸேவகர்கள் எல்லோரும் இவனைக் கண்டுபிடிக்கச் செய்த முயற்சிகள் பலவாயினும் இவன் பிடிபடவில்லை: எங்கும் அகப்படவில்லை. சிலர் அவன் இறந்தான் என்றும் வேறுசிலர் அவன் ஹிமாலயம் சென்றான் என்றும் கூறினர். அவனுக்கு என்னை நன்றாகத் தெரியும். நான் மதுரை ஆள் என்று மாத்திரம் தெரியாது: தெரிந்திருந்தால் அவன் இங்கு வந்திருக்கவேமாட்டான்.

கேஸிபூரிலிருக்கையிலேயே என்னிடமிருந்து ஒரு வாக்குறுதி அவன் வாங்கிவிட்டான். அவன் விஷயங்களை நான் ஸந்தேஹிப்பதாக அவன் உணர்ந்து, கேஸிபூர் மஹாஜனங்களுக்குத் தன்னைப்பற்றி ஒன்றும் கூறிவிடலாகாது என்று கேட்டுக்கொண்டு என்னிடம் வாக்கும் வாங்கி விட்டான். அவன் என்னிடம் கூறிய சில கெட்ட வழிகளை விட்டுவிடும்படி நான் வெகுவாக அவனுக்குப் புத்திமதி கூறினேன்: அது பயன்படவில்லை. இந்த ஸம்பாஷணை முடிவில் 'நான் எந்த ஊரிலிருந்தபோதிலும் நானிருக்கும் வரையில் அங்கு என்னைத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளக்கூடாது. என்னைப்பற்றி அவதூறு பேசக்கூடாது' என்று கெஞ்சிக்கேட்டு வாக்குக் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டான். இது ஒரு விசித்ர ஸத்தியமாயினும், நான் தயங்காது செய்துவிட்டேன். எவ்வளவு கொடியவனாயினும், அவனைப் பழிப்பது காட்டிக்கொடுப்பது முதலியவைகள் என் குணத்திற்கு விரோதமானவை, ஆதலால் அவன் சீர்திருந்துவான் என்னைக் காணப் பெற்றால், என்ற நம்பிக்கையுடன் வாக்கும் கொடுத்துவிட்டேன். கடவுளேயாகி நிற்கும் இப்பிரபஞ்சத்துள் கொலைக்காரனைக்கூட வெறுப்பதற் கிடமில்லையே!

"உன் வீட்டில் அவனைக் கண்ட உடன் எனக்கு உண்டான ஆச்சர்யத்திற்கு அளவேயில்லை. நான் ஸத்தியத்தால் கட்டுண்டிருந்ததால் வாயைத்திறக்கமுடியாமல் போய்விட்டது. அதிகம்இருந்தால் எங்கே ஸத்தியத்தை மீறும்படிநேரிடுமோ என்று எண்ணியே நான்நேற்றிரவு திடீரென்றுமறைந்து விட்டேன். உன் வீடு தகுந்த காவலுடனிருப்பதால் ஸித்தன் ஆட்டம் இங்குப் பலிக்காது என்ற தைர்யத்துடனே நான் வீடு சென்றேன்: என் மனமும் ஸமாதானமாக விருந்தது. உன் பணப்பெட்டி போனதையும், ஸ்ரீநிவாஸன் ஓடிவிட்டதையும் கேட்டதும் எனக்கு ஒருவிதத்தில் ஸந்தோஷம்தான்.

நா:—(கோபமும் துக்கமும் கலந்த சிரிப்புடன்) உன் வேதாந்தம் உன்னைப் பெரும் மடையனாக்கி விட்டதப்பா! ஆய்ந்து ஓய்ந்து நோக்கில் முடிவில் அன்னம்மாள் சொல்வது ஸரி! நிரம்ப ஸரி!! வேதாந்தம் மனிதரை மூழுமூடராக்கி விடும். என்னடாது! திருடனுக்கு ஸத்தியம் பண்ணிக் கொடுத்துவிட்டு, சும்மாவிருப்பதா? அடே ஸத்யம் பண்ணமாட்டேன் என்றல்லவா நீ சொல்லியிருக்கவேண்டும்!

வா.—அவன் என்னைரொம்ப கெஞ்சிக்கேட்டுக் கொண்டான். மேலும் ஸத்யம் கொடுப்பதால் கேடொன்றும் வாராதென்று எனக்குத் தோற்றியது. பெண்ணை அடித்துக்கொண்டு போனபின்பு என்னைக் கேட்டிருந்தால் நான் இந்த வாக்கு கொடுத்திருக்கமாட்டேன். ஸத்தியத்தால் கட்டுப்படாவிடினும் நாம் ஒருவரையும் பொல்லாங்கு சொல்லலாகாது. அவனைப்பற்றி எனக்குத் தெரிந்ததில் நூறிலொருபாகம்கூட நான் உனக்கு இன்னம் சொல்லவில்லை. உனக்கு வந்திருக்கும் கஷ்டம் அவ்வளவு பெரிதல்ல என்பதைக் காட்ட எவ்வளவு சொல்ல வேண்டுமோ அவ்வளவுதான் சொன்னேன். ஒருவேளை ஸித்தன் இப்பொழுது சற்று திருந்தி விட்டாற் போலிருக்கிறது.

நா.—ஆமாமடா மடையா! அவன் மாத்திரமா திருந்தி விட்டான்: நீகூட மடயனைத் திருந்தி விடவில்லையா? மடப்பயலே. பார் இந்தக் கண்ராவியை; (ருக்மணியைக் காட்டிக்கொண்டு) இப்பெண் கண்ணிலிருந்து ரத்ததைச் சொட்ட விட்டுக்கொண்டு நிற்கிறாள், முழுமூடா! நான் கஷ்டப்படவில்லை என்றா சொல்லுகிறாய்?

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

## ருக்மணி அல்லது பக்திநிலை

### பக்தி மலர்ந்த காதை

(தொடர்ச்சி)

ஹிமயமலைச் சாரல். பல மரக்கூட்டத்திடைப் பொதிந்து விளங்கும் தவவனம். வேதகோஷத்தின் ஸாமகோஷ மயங்கி மனதை மயக்கி ஆநந்த மூட்டுமிடம். இதனிடை எம்பெருமான் சக்கிரவர்த்தித் திருமகனார்ப் புகழைப்பாடி பரவச மடையு மஹா புருஷரது காதில் "ராமா ராமா ராமா" வென்னும் நாமம் காற்றில் மயங்கி கலந்தது. ஹநுமாரும் கண்ணைத் திறந்து நாரதரை க்ஷேமம் விசாரித்தனர். மற்றும் "ஏது தாங்கள் இவ்வளவு தூரம் தயவு செய்தது? எல்லாம் ஸுகமோ? இங்கு விஜயம் செய்ததென்பொருட்டோ? இந்த எளியன்பால் வந்து தர்சனம் கொடுத்து நாயினும் கடையாய என்னைத் தன்யனாக்கினீர்" என்றார்.

"அதுவொன்றுமில்லை. உம்முடைய பகவன் நாமாவின் இசையாலிங்கிழுக்கப்பட்டேன். தங்களைத் தர்சனஞ்செய்து பெறும்பேறு பெற்றேன். ஸாது ஸங்கத்தாலாகாததென்ன? நான் இங்கு யாத்திரை செய்யப் புறப்பட்டேன்—"

"தகுந்த துணையில்லை என்றிங்கு வந்தீரோ!"

"அதற்காகவில்லை. ஆனாலும் தங்களைப்போலத் துணைக்கிடைத்தால் வேண்டாமென்று சொல்லவும் நாவெழுமோ?"

"நீர் கூறும் முன்னமே என்னன்பனுடன் செல்ல, இக்கால்கள் எழா நிற்குமோ? வாரும்; யானும் உடன் வருகிறேன்."

"அப்படியானால் ஸரி; அவந்தி முதலிய புண்ணிய ஸ்தலங்கள் ஏழுங் கண்டு செல்வோம். யானிப்பொழுது வரிசையாக எம்பெருமானது திருக்கோயில்களைக் கண்டு வருவதே காலாலாய பயன் என்றுணர்ந்தேன். அதற்குத் தங்களைப் போன்ற ஸாது துணையே மோக்ஷ ஸாதனத்திற்கு மூல வழியாகும். புறப்படும்."

"அப்படியே"

புறப்பட்டனர். பல தீர்த்தங்களாடி யமுனையைத் தாண்டி விந்திய மலைச்சாரலைக் கடந்து அங்குப் பச்சைப்பசேல் என்று சோபை வீசுமிடமெங்கும் பரந்தாமனது உருவத்தையே கண்டானந்தித்தனர். கருங்கொண்டலைக் கண்டதும் எம்பெருமானது திருமேனியின்வைபவத்தையே அனுபவிப்பர். துளபக்காடைக் காணின் அம்மங்கள விக்கிரஹத்தின் அமைப்பையே நினைந்து நினைந்து உருகுவர். மலையைக் காணுந்தோறும் எம்மிறைவனது கருணையையே நினைந்து உள்ளம் அழிவர். அது பார்ப்பார்க்கு இன்பமளித்து தன்னயம் பாராததை எண்ணி எண்ணித் தாமும் அவ்வாறே ஒழுகவேண்டுமென்று எண்ணுவர்! பரந்தாமனது பக்தியிலீடுபட்டு மெய்ம்மறந்து, நடப்பதும் தெரியாது நடப்பர். தம்மொடு தலைவன் கலந்தன்ன நடிப்பர். உள்ளம் தேக்கி கூத்தாடிக் கூத்தாடிக் கூவுவர். வழி நடந்து வந்தது நெடுந்தூரமென அவர்க்குப் படவேயில்லை. உள்ளங்கலந்து அன்பிலீடுபடில் எம்பெருமானது திருநாமமென்னும் திவ்யசக்தியின் பரப்பால் உண்டாகும் உத்ஸாகத்தின் பெருமையால் எதுதான் அமையாது?

ஸூர்யனுடைய ஒளி மறையும் ஸமயத்து ஓர் சோலையுளிருவரும் தங்கினர். கிளிகள் கொஞ்சிக் குலுக்கிய பழங்களிலிருந்து விழுந்த தேனின் பெருக்கைக் கண்டு எம்பெருமானது நாமவினிப்பைப் பெற அவாவுற்றனர். மலைவீழ்ந்து மிகுவேகத்தோடு பாய்ந்து கணவாய் உச்சியிலிருந்து வீழ்ந்தெரிக்கும் அருவி நீர்த்துளியைக் காணுந்தோறும் தன்னுன்னத நிலையிலிருந்து யாவர்பாலும் எம்பெருமான் எரிக்கும் கருணைத்திரளே மனதில் பதியும். பச்சைப் பசேலென்று பண்ணை முழுதும் படர்ந்து விளங்கும் பசுமைத் தொடர்செழித்து இனிது ஓங்கும் பரந்தாமனது அழகையே மனத்திலூட்டும். நிர்மலமாக நிற்கும் ஓடைநீர் முழுதும் "ஞானப் பெருந்தீபம் கொளுத்திய" பெரியாரது வைபவத்தையே எடுத்துரைக்கும். சிவந்து படர்ந்து விளங்கிய செவ்வானத்தில் பொன்னென எதிர் தோன்றிய நகரம் இருளில் பதிந்து மதியவன் தோன்ற கண்ணிற்கு எதிர்படல், மாயை யொழிந்ததும் மனவமைதியையே குறிப்பிடும். கீழ்க்கொண்டலைக் கிழித்து இனிது ஓடி வெளிவரும் சந்திரனுடைய வேகம் ஐம்புலப்போக்கை அறிய வழி காட்டும். அம்மதியவன்பால் அருகு விளங்கும் நக்ஷத்திர பரிவாரம் மானிடரின் சிறுமையையும் எம்பெருமானது பெருமையையும் சாங்

தம், தயை, பொறை முதலிய அனந்த குணங்களை உருவகப்படுத்தும்.

இத்தகைய இளங்கொழுந்தன்ன செழுமை வாய்ந்து எவர்க்கு மினிமை யூட்டும் இடத்தில் அன்பென்னும் வெள்ளப்பெருக்கில் மூழ்கி விளங்கு மிவ்விருவரும் தங்கி காலங்கழித்து வரும்பொழுது "ஹே! நாரத! இப்புரத்தையும் இதன் புறச்செழுமையையும் பார்க்கப் பார்க்கப் பரமானந்த மடைகிறேன். 'பழந்தன மிழந்தவர் படைத்த தெனலா' னேன். ஸரயூ நதி தீரத்து இனிது விளங்கிய என் தலைவனது நகரேபோல் இந்நகரம் தோன்றுகிறது. இக் கோபுரத்தை நோக்க நோக்க அவ்வயோத்தியைக் கண்டாற்போல் காணுகிறேன். இது அயோத்தியோ? இவ்வூரரசன் ராமன்தானோ? ராமனை இனி யெங்குக் காணலாகும்?" என்றார் ஹனுமார்.

"நண்ப! இது அயோத்தி யல்ல; துவாரகை. இந்நகர்க்கு மன்னன் ராமன்தான்."

"ராமனா? யார் அவர்? சக்கரவர்த்தி திருமகனா? என்னிரு தோள்மேல் தாள்பதித்து என் பவத்தை யொழித்த எனது தலைவனா?"

"சக்கிரவர்த்தித் திருமகனா? அவர் யார்?"

"தசரத சக்கிரவர்த்தியின் மூத்த குமாரன்; ரகுராமன்"

"அவரல்ல இவர்—அவரல்லவே அல்ல."

"மற்று யாரிவர்?"

"உமது ராமருக்கு முன் என்ன இருக்கும்?"

"அவர் முன் இருந்தது ஒன்றும் இல்லை."

"அவ்வளவு தானோ? அவர் வெறும் ராமன் தான்; அவ்வளவே."

"வெறும் ராமன் என்று அவரைப் பரிகசிக்கிறாய்?"

"யான் பரிகசிக்க வில்லையே."

"மற்றெவன் பரிகசித்தது?"

"உமது ராமன் வெறும் ராமன்தானே? அதை முன் சொல்லும்."

"மூலபலங்களையும் முடியாத அரக்கரை கையொன்றால் அம்பு வாங்கி எங்கும் புகழ்பெற்று ஜயவீர கோதண்டந் தாங்கி, 'சொல்லொக்கும் கடிய வேக சுடுசரங்" கொண்ட என் தலைவன், ராமன் வெறும் ராமனாய் விட்டாரோ?"

"அப்படி யான் ஒன்றுஞ் சொல்லவில்லை. இவ்விடத்திருக்கும் ராமன் வெறும் 'ராமனல்ல. உமது கைவண்ணம் பெற்ற ராமன், என்னதான் நீர் சொல்லிய போதிலும், வெறும் ராமன்தான். அவரெப்படி பலராமராவர்?"

"பலராமனா? யாரவன்? ராமனைக் காட்டிலும் மிகு பலசாலியோ? வீரனோ? சூரப் பிரதாபப் பெருமையிற் சிறந்தவனோ?"

"அப்படி இருந்தாலொழிய அப்படி பெயர் செல்லுமோ? அந்த ஹஸ்தினாபுரம் பட்டபாடு அதற்கன்றோ தெரியும்? அவர் கலப்பையொன்றே உங்களிராமன் குலத்தைக் கலக்கும். அவரைப் பார்த்தால் உமக்குத்தெரியும். பேசுவதில் என்ன பிரயோஜனம்?"

"நெடிய வில் வலிய வாங்கும் என் நாதனைக் காட்டிலும் சிறந்தவன் ஒருவனிருக்கிறான்! அவன் பலராமனாம்! நாம் இதுவரை ராமனுடைய பெயரை வஹிக்கத்தக்க ஆட்களை காண முடியவில்லை. இன்றிங்கு அவர் பெயரை மாத்திரம் வஹித்தாலும் பொறுப்பேன். ராமனோடு நிற்காமல் பலராமனென்று பெயர்கொண்டு என் தலைவனுடைய பெயரை ஏளனம் செய்ததன்றி அவர் வலியின் திறமையையும் பரிகலிக்கும் நாமங்கொண்டுளான்! அவன் யார்? அவ்வற்ப குணங்கொண்டவனைக் கண்டால் யான் என்ன செய்வேன் தெரியுமா?"

"தெரியும்! முதுகைக் காட்டிக்கொண்டோடுவீர். நான் சொல்வது பொய்க்குமா? அவரிடம் உமது இருமாப்பு செல்லுமா?"

"பார்த்தால் அப்பொழுது தெரியும்."

"நான் அவரிடம் போய் தங்களிடம் வரும்படிச் சொல்லுகிறேன்."

"அப்படியே செய். சீக்கிரத்தில் அவனை அச்சுவேறு ஆணி வேறாக்கி விடுகிறேன்."

"இதோ வந்துவிட்டேன்" என்று ஓடினார் நாரதர்.

* * *

துவாரகையின் ராஜவீதி. வரிசை வரிசையாக அமைந்த வீட்டின் உப்பரிகைகளில் பதித்த

கலசங்களின்மேற் பதிந்த ஸூர்யனுடைய ஒளி தவறி தெருவெங்கும் தங்கத்தொடு தவழ்ந்தது. இருபுறங்களில் வரிசையாய் வளரும் கமுக மரத்தின் மணத்தில், உடன் படர்ந்த மாதவிக்கொடியில் மலர்ந்த வாஸனை மயங்க, அவ்வீதியின் நடப்பார் மன முழுதும் அத்தெருவின் அழகிலேயே மயங்கும். தென்றற்காற்றும் தேரும் திருநாளும் அத்தெரு வழியே எப்பொழுதும் நடப்பதாயினும் அன்று அங்கு உடன்வந்த கூட்டத்தின் முகத்தில் கொஞ்சமேனும் அமைதி என்பதில்லை. எல்லாரும் பிரமையுள்ளேயே பதிந்தனர். காற்றும் அசைய பயந்தது. கூட்டத்திடையிருந்த ஒரு கிழவனார் பட்டபாடு யாவர் மனத்தையுங் கலக்கும். "ஹே பலராமா! ஹே பலராமா!" என்றிவரிட்ட கூச்சல் அம்மன்னன் அந்தஃப்புரத்திருந்த ஸ்திரீகளையும் வெருட்டி விட்டது. கிழவனார் மெல்ல மெல்ல தத்தளித்து பலராமரது மந்திரத்தை அடைந்தார். என்று மசையாத அரசாட்சி மணியை "டங் டங் டங் டங்" என்று மனம் படக்க கண்டாரது உள்ளம் துடிக்க அடித்தார். பெருங்கூட்டம் வந்துவிட்டது. அந்தஃப்புரத்துத் தன் மனைவியுடன் கேளிக்கையில் விளங்கிய பலராமர் துடுக்கிட்டு "ஹா" வென்றலறிக்கொண்டோடி வந்தார். வந்ததும் கிழவர் அழுதார்; விழுந்தார்; எழ முடியாது திகைத்தார். பேச முடியாது தயங்கினர்: மெதுவாகத் தள்ளித் தடுமாறி கூறுவர்:—

"என்னையனே அபயம்! அபயம்! இந்நாட்டிலினியிருத்தல் முடியாது. ஹே பலராமா! நீங்களிருந்தும் நாங்களிப்படியா பாடுபடுவது. இனி இந்த நாளே எங்கள் பிராஹ்மணக் கூட்டத்தை இவ்வூரை விட்டோடும்படி செய்தால்தான் நலம். இங்கவரிருந்தால் உயிர்ச்சேதம்தான்—"

"படபடப்பு வேண்டாம். உமக்கென்ன குறை சொல்லும்; தீர்ப்போம். கவலைபடாதியும்."

"கவலையேன்? ஊர்க்கு வெளியிருக்கும் ஒரு சிறு குரங்குசெய்யும் பாட்டைத் தவிர்க்க உமக்கு வலியில்லையா? அது என்ன பாடுபடும்? அதைத் தடுக்க உமக்குப் பலமில்லையா? உமக்குப் பலராமரென்று யார் பெயர் வைத்தார்கள்? அந்தக் குரங்குக்குப் பதில்சொல்ல யாரால் முடியும்? என்னால் கேட்டுப் பொறுக்க முடியவில்லையே? எல்லாவற்றையுமொழித்த என்னையே அம்மொழிவெருட்டுகிறது. உமக்கென்ன காதில் படவில்லை போலல்லவோ இருக்கிறது."

"ஒரு குரங்கா?"

"ஒரு சிறு குரங்கு—கோபுரவஸ்து—அல்ப சாகாமிருகம். அதுதான். ஒன்றேஒன்று. அப்பா! அதை நினைக்கும் பொழுதே என் உடம்பு நடுங்குகிறது."

"அது என்ன செய்தது?"

"எப்படி என்று சொல்வேன். ஒன்றும் எனக்குத்தோன்றவில்லை. என் நினைப்பே மறந்துவிட்டது. என்னமோ சொல்லிச் சொல்லி பின் 'இவ்வூர் அரசன் யார்?' என்றது. 'பலராமர்' என்றேன். 'யார் பலராமர்?' யாரது? ராமனைக் காட்டிலும் இவன் சிரேஷ்டனே? அம்மடையனைப் பல என்கிற அடைமொழியை எடுத்துவிடச் சொல். இல்லாவிட்டால் என்னோடு வந்து சண்டை செய்யும்படிச் செய்' என்றது. இன்னம் என்னென்னமோ கூறியது. ஐயா என் மூளையே கலங்கிவிட்டது. ஐயா உம்மிடம் சொல்லிவிட்டேன். நீங்கள் தயவு செய்து அக்குரங்கைத் துலைத்தால் ஊரார் பிழைத்தார். இல்லாவிடில் அவர் நமனுலகிற்கு வேறு வழி தேடவேண்டியதில்லை. வாலொன்றுதான். அதுவே போதும்."

"நீர் யார்? ஏன் இப்படிப் பயப்படுகிறீர்? யானிருப்பது உமக்குத் தைர்யமூட்டவில்லையா?"

"தைர்ய மூட்டும். ஆனால் என்கண்முன் அப்பொல்லாச் சிறு குரங்கே குடிகொண்டிருக்கிறது. யான் என்ன செய்வேன். யான் நாரதன்

அவர் கேட்டவிதத்திலேயே நடுங்கிவிட்டேன். தயவு செய்து அச்சிறு குரங்கைச் சும்மா விடாதி யும்; உமக்குப் புண்யமாய்ப் போகும். அதை முன் பிடித்து சிறையிடும்."

"என்ன நாரதா நீயா இப்படி வந்தாய்? இது என்ன வேஷம்?"

"உங்களுக் கென்னபரிஹாஸம். வீடுஎரிந்தால் பார்ப்பவர்க்குக் கொண்டாட்டம். எருதின்வலி காக்கைக்குத்தெரியுமோ? நான் பட்டபாடு எனக் குத் தெரியும், அக்குரங்கின்வார்த்தையைநினைத் தால் வயிறு கலங்குறது.வந்தவழியில் என்தம் புரு விழுந்ததே தெரியவில்லை.தலைதப்பினது தம் பிரான் புண்ணியம் என்று உம்மிடம் வந்தேன். காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ளும். அக் குரங்கு தனித்திருக்கும் போதே பிடித்துவிடும். பின் எதிர்ப்பது எப்படியோத்தான் என்றெனக் குத் தோன்றுகிறது."

"என்ன நாரதா? ஒரு குரங்கிற்கா இவ்வளவு பயந்து விட்டாய்! பலே! கோலாடக் குரங்கா டாதோ?"

"உங்களுக்குச் சொல்வதற்கென்ன? இக் கரைக்கு அக்கரை பச்சை. போய்ப் பார்த்தால் தெரியும். நீங்கள் போய்த்தான் பாருமே, அது படுத்தும்பாட்டை. உம்மை முன் பலராமன் என் கிறபெயரைமாற்றி ராமன் எனக்கொள்ளவேண்டு மென்று வற்புறுத்துகிறது. நான் சொன்னல் தகுமா? ஆண்டிச்சொல் அம்பலமேறுமோ?"

"ஸரி நான் எனது படைத்தலைவனுடன் சொல்லி அதை யோட்டச் செய்கிறேன். நீ பயப் பட வேண்டாம். ஒரு க்ஷணத்திற்குள் அது இருக்குமிடமெங்கென்று தெரியாமல் ஓட்டி விடு கிறேன."

"மஹாப்ரபூ! உமக்கு ஸமான பலமுடைய வர் யார்? அதனால்தானே பலராமரெனப் பெயர் பூண்டீர். உங்களால் ஆகாததெது? இனி எனக் கென்ன குறை."

# விசேஷக் குறிப்புகள்

## NEWS AND NOTES

மதுரைத் தமிழ்ச் சங்கம்.— இச்சங்கத்துப் பதி னேழும் வருடத்து அறிக்கைப் பத்திரத்தைப் பெற்று நோக்குமிடத்து எமக்கு இன்பமும் துன்பமும் ஒருங் குண்டாகின்றன. சங்கத்தலையாய் கொடையாளியாய் தமிழ்க்காய் உழைத்த பாண்டித்துரையாரின் மரிப்பால் உண்டாகிய தௌர்ப்பாக்கியத்தைத் தோற்றுவிதம் உழைக்கும் மதுரை வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ, P. S. சுப்பிர மணிய ஐயரவர்கள் சங்கத்தலைவராயும், தமிழின் உயர் விற்கு வேண்டிய உதவி புரிய தயாரா யிருக்கும் கானடுகோத்தான் ம-ா-ா-ஸ்ரீ, சா. ராம மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்கள் உப அக்கிராஸனதிபதி யாயிருப்பதும், எல்லோருக்கும் இன்பம் தரும். காரிய தரிசிகள், மதுரை வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ, T. C. ஸ்ரீநிவாச ஐயங்கார், T. N. சுந்தரராஜ ஐயங்கார் இவர்கள் ஆர்வமும் புகழத்தக்கதே. ஊக்கத்தோடு உழைத்திவர் செய்யும் செயல்களை ஜனங்கள் கவனி யாதது நமக்குப் பெருந்துன்பம் உண்டாக்குகிறது. இச் சங்கத்தார் வெளியிடும் "செந்தமிழ்" ப் பத்திரிகைக்கு இந்தத் தமிழ் நாட்டிற்குள் பெறத்தக்கவர் 256 பேர் களே என்பதை நோக்குமிடத்து மிகுந்த வருத்தத்தை உண்டாக்குகிறது. மற்ற இராஜதானிகளில் தமது தாய்ப்பாஷையைப் போற்றுவதுபோல் இந்நாட் டிற்கு இன்னம் ஞானோதயம் ஆவதென்றோ! தமிழ்ப் புத்தகங்களைப் பரிசோதித்து தக்கவித மளிக்கும் பேருதவியைக் கவனியாது விளங்கும் நமது தமிழகத் தினற்கு யாம் மிக்க வணக்கமாக ஷ பத்திரிகையைப் போஷித்துத் தாமும் பேறடைய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம்.

***

லார்ட் பெண்ட்லண்ட்.—சென்னைக் கவர்னராய் வரப்போகிற லார்ட் பெண்ட்லண்ட் ஸ்காட்லண்ட் மந்திரியா யிருந்தவரென்று சொன்னோம். அவர் ராச் சிய நிருவாகத்திறமைமட்டுந்தானுடையவரென்று நாம் நினைப்பதற்கில்லை. அவர் புஸ்தகங்கள் எழுதும் யோக் கியதையுடைய கிரந்த கர்த்தா என்று காண்கிறது. 1901 முதல் 1911 வரை இறந்துபோன பிரபலஸ்தர் களாயுள்ள 1600கனவான்களின் ஜீவிய சரித்திரங்களை யெழுதிய 300 கிரந்த கர்த்தாக்களில் அவர் ஒருவ ரென்று தெரிகிறது. அவர் மிஸ்டர் ஆஸ்க்வித்துக்கு முன்னே லிபரல் கவர்ன்மெண்ட் தலைவராயிருந்த ஸர்

ஹென்ரி காம்பல் பானர்மானின் ஜீவிய சரித்திரம் எழுதியிருக்கிறார்.

* * *

உலகத்திலுள்ள உன்னத சிகரம்.—இதுவரையிலும் ஹிமயமலையில் உன்னதசிகரமாகிய எவரெஸ்டு தான் உலகத்திலுள்ள மலைச்சிகரங்களில் உன்னதமானது என்று படித்தும் கேட்டும் இருந்தோமல்லவா? கிஞ்சிங்கங்காதான், எவரெஸ்டைவிட சில நூறு அடி உயரம் என்று கண்டுபிடித்திருக்கிறதாகத் தெரிய வருகிறது.

* * *

ஒரு புதுவகைப் பெட்டி.— புதுவகை நகைப் பெட்டி யொன்று கண்டுபிடிக்கபட்டிருக்கிறது. யாராவது வந்து நகைப்பெட்டியைத் தூக்கினால் அது நாய் போல ஓயாமற் குலைத்துக்கொண்டிருக்குமாம். எட்டு மணி ஓயாமற் குலைக்குமாம். அதை நிறுத்தவேண்டுமானால் பெட்டியின் சொந்தக்காரன் வந்து அதைத் திறந்து குலைக்கும்படி உள்ளே வைத்த யந்திரத்தை அமர்த்திவிடவேண்டுமாம். இப்பெட்டி உபயோகத்துக்கு வந்தபின் களவுபோகமாட்டாது. எங்கே வேணுமென்றாலும் அச்சமின்றி நகைப்பெட்டியை வைத்துப் போகலாம்.

* * *

நான்கு பிள்ளை ஒரே முறையில் பெற்றவள்.—விசாகப்பட்டணத்திலிருந்து பெங்களூருக்குச் செல்ல ரயிலில் பிரயாணஞ்செய்து கொண்டிருந்த ஒரு ஸ்திரீ சென்றமாதம் 4-ந்தேதி காலை 2-30 மணிக்கு ஹிந்துபூரில் ரயில்வேயை விட்டிறங்கினள். நான்கு மணிக்கு ஒருபெண் குழந்தையைப்பெற்றனள்.பின்னர் அவ்வூர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டனள்; அங்கு 7 மணிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது; பின்னரும் 7-15 மணிக்கு வேறிரண்டு பெண் குழந்தைகள் பிறந்தன. முதல் பிறந்த குழந்தை யுயிரோடிருக்கின்றது. ஏனைய மூன்று பிள்ளைகளு மிறந்துபோயின. எல்லாக் குழந்தைகளும் பூரண ரூபம் பெற்றிருந்தன. தாய் சுகமா யிருக்கின்றனளாம்.

* * *

கானடா ரயில் பாதையின் நீளம்.—கானடா தேசத்திலுள்ள ரயில்பாதை மொத்தத்தில் 26000-மைல் நீளமுடையதாம். இவ்வாறு வேறு தேசங்களிலில்லையாம்.

காப்பியின் குணதுற்றங்கள்.—அமேரிக்காவிலுள்ள வைத்திய சாஸ்திரிகளுட் சிலர் காப்பி குடிப்பது பற்றி யாராய்ச்சிச் செய்து, காப்பியை யளவிற்கு மிஞ்சி யுண்டால் கெடுதி யுண்டாகுமென்றும், மிதமாகவுண்டால் மூளைக்குப் பலமும், தேகத்திற்குச் சுறுசுறுப்பு முண்டாகுமென்றும், தினமொன்றிற்கு 2-சேர் காப்பிக்குமேல் குடித்தல் கூடாதென்றும் தெரிவித்திருக்கின்றனர்.

* * *

W. T. ஸ்டெட் என்பவரது ஆஸ்தி.—டிடானிக் கப்பல் முழுகியபோது இறந்துபோன W. T. ஸ்டெட் என்பவருடைய ஆஸ்தி 13000 பவுண்டாம்.

* * *

சென்னை மாகாணத்தில் இறக்குமதியாகும் சைகிலும் மோடார்காரும்.-சென்ற 1911-12-ம் வருஷத்து ரிபோர்ட்டின்படி, அயல் நாட்டிலிருந்து இந்த மாகாணத்தில் இறக்குமதியான ஸைகில்களின் மதிப்பு 6,57,000 ரூபாய். இதற்கு முன் வருஷத்திலோ 5,19,000 ரூபாய். மோடார்கார்களோ 1911-12-ல் 10,46000 ரூபாய்க்கு இறக்குமதியா யிருக்கின்றன. அதற்கு முன் வருஷத்தில் 6,24000 ரூபாய்க்குத்தான் வந்திருக்கின்றன. ஸைகில்களும் மோட்டார் கார்களும் இப்படி அதிகமாய் இறக்குமதியாக, குதிரைகள் இறக்குமதியாவது குறைந்துவிட்டது. 1910-11-ல் 1006 குதிரைகள் வந்து இறங்கி இருக்க, இந்த 1911-12-ம் வருஷம் 780 குதிரைகளே வந்திறங்கியிருக்கின்றன, ரஸாயன எருவில் 1910-11-ல் 153000 ரூபாய்க்கு இறக்குமதியாயிருக்க, 1911-12-ல் 294000 ரூபாய்க்கு இறக்குமதியா யிருக்கிறது.

* * *

பர்மா அரிசி.—ஸ்வீடன் தேசத்தார் இப்போது பர்மா தேசத்தரிசியை வாங்கவாரம்பித்திருக்கின்றனர். இனி இந்தியாவிற்குப் பர்மா தேசத்திருந்து அரிசி வருதல் குறைவுபடும்.

---

## புத்தக வரவு
## BOOKS RECEIVED

கோமதி கோகிலமானது * ஓர் இனிய செந்தமிழ் நாவல் ம-ா-ா-ஸ்ரீ N, R. ஸுப்ரமண்ணிய சர்மா இயற்றியது. விலை அணு பத்து.

மதன காந்தி * ஓர் இனிய தமிழ் நாவல் ம-ா-ா-ஸ்ரீ ஆரணி குப்புசாமி முதலியார் இயற்றியது. விலை ரூபா ஒன்று.

* இப்புத்தகங்கள் 'விவேக போதினி' ஆபீஸில் கிடைக்கும்.



வீதை. ராமர். லக்ஷ்மணர். ஹனுமார்.



ராமபஞ்சாயதனம்.

# விவேக போதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."——திருவள்ளுவர்

தொகுதி V } பரிதாபிஸு ஆடிமீ ௸ 1912-ஸு ஆகஸ்டுமீ { பகுதி 2


## ஜீவன்முக்தர் பாகுபாடு

### VARIETIES OF LIVING DEADMEN

ஜீவன்முக்தர்கள் வெளி வ்யவஹாரங்கள் உள் அனுபவங்களால் மாறுபடும் விதங்களை உத்தேசிக்கில் மூன்று விதமாக விருப்பர். அவர்களுக்கு முறையே பிரஹ்மவித், பிரஹ்மவரன், பிரஹ்மவரியான் என்று பெயர். இதில் முன்னர் எடுத்துக்கூறியுள்ள லக்ஷணங்கள் பிரஹ்மவித்தினதே. இவர் மூவர்களுக்கும் பொதுவாக இவைஇருப்பினும்,பின்னவர் இருவருக்கும் சிற்சிலசிறப்பு லக்ஷணங்கள்வெளிவ்யவஹாரங்களில் காணப்படும். பிரஹ்மவித் எல்லா வ்யவஹாரங்களுக்கு இடையிலும் இருந்து மோஹமடையாது ஒதுங்கியே நிற்பன். இதனால் அவனுக்கு உலகில் த்ரஷ்டதுக்கம் அதாவது துக்கத் தோற்றம் மாறவே மாறாது. இவனுக்கு உலகங்களும் அதனால் ஏற்படும் ஸுகதுக்கங்களும் ஸ்வப்நம் போலவாவது தோற்றிக்கொண்டே இருக்கும். உள்ளனுபவ விஷயத்தில் இவனைப்போலவே மற்றைய இருவரும் இருந்தபோதிலும், அனுபவத்தில் அழுந்தி நிற்கும் அப்யாஸ பலத்தால் இவர்களிடம் வ்யவஹாரம் அணுகவே மாட்டாது. இரண்டாமவன் தன் தேஹதாரணத்திற்கு வேண்டிய வ்யவஹாரம் மாத்திரமாக நின்று ஸமாதி ஸாதிப்பன். மூன்றாமவன் இவ்விஷயமாகப் பிறர் கூறத் தொழிற்படுவன். ஆகவே இவர்களுக்கு ஸமாதியில் மனம் அழுந்தியே நிற்கும். இந்த அவசிய வ்யவஹாரங்கள் நீங்கியதும் மனம் தானே ஸமாதியில் சென்றுவிடும். மற்றைய விரிவிற்கு இடமே இராது. முதலவனிடம் வ்யவஹாரங்கள் மேன் மேலும் தொடரும், ஆனால் அவைகளிலிருக்கும் பொழுதே தன் அனுபவச் சிறப்பு அவன் மனதில் ஊறிக்கொண்டும், ஓய்ந்தவேளையில் மற்றையவர்கள் போல ஸமாதியில் மனம் அழுந்திக்கொண்டும் இருக்கும்.

பிரஹ்மவித் மூன்று விதமாக உலகில் காணப்படுவன். இவர்களுக்கு முறையே மஹாகர்த்தன், மஹாபோகி, மஹாத்யாகி என்று பெயர். அவசியமான வ்யவஹாரங்களுள் இருந்து நிர்வஹிக்குங்கால் காந்தச் சிலைமுன் இரும்புத்துண்டுகள் அசைவதுபோல எல்லாம் தன்முன்சேஷ்டிக்கத் தனக்குயாதொருவிகாரமும் இல்லை என்ற மன உறுதி மாறாது நின்று ஸமாதியில் இருக்கும் ஸாக்ஷிவிருத்தியே மனதில் ஊறிக்கொண்டிருக்கப் பெற்றவனே மஹாகர்த்தன். ஜனகர் இம்மாதிரியான மஹாகர்த்தர். உணவு, அனுபவவஸ்துக்கள் இவைகளின் ஏற்றத்தாழ்வுகளைப்பாராது நியாயப்படித் தன்னிடம் வந்துசேருபவைகளை பொறுமையுடன் காட்டுத்தீப்போல அனுபவித்து விகாரமற்றிருப்பவனே மஹாபோகி. கிருஷ்ணன் இத்தகைய மஹாபோகி. உலகவிசித்ரம், நன்மை தீமை முதலிய த்வந்தங்கள் எது எதிர்ப்படினும் ஸ்படிகத்தில் வர்ணம் தோன்றியும் அது உண்மையில் நிர்வர்ணமாகவே இருப்பதுபோல மனம் எப்பொழுதும் ஆச்சர்யம் முதலியவைகளால் கலங்காது தெளிந்திருப்பவனே மஹாத்யாகி. சுகர் தத்தாத்ரேயர் ஆகிய இவர்கள் மஹாத்யாகிகள்.

இவ்விஷயங்களைக் கூறிவிட்டு கைவல்லிய நவநீதம், 'விரத மூன்றுடையவரே வீடுளோரே' என்று சொல்லி இந்த ஜீவன்முக்தர் பாகுபாட்டை முடிக்கின்றது. அதாவது ஜீவன்முக்தர்கள் இம்மூன்று விதமாக விருந்தபோதிலும் இதை அடைய முயலும் அப்யாஸி இம்மூன்று விரதத்தையும் கைக்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்தால் அவன் முக்தி பெறுவது நிச்சயம் என்பதாயிற்று. அப்யாஸிக்கு வ்யவஹாரம் வந்து தாக்கிக்கொண்டிருக்கும். அவன் மனம் கலங்குவதும் தெளிவதுமாகவிருக்கும். அவன்தனக்குவரும் வ்யவஹாரங்களுக்கு ஏற்ப இம்மூவர் லக்ஷணங்களிலும் பழகி வரவேண்டும். பின்னர் ஜீவன்முக்த நிலை வருங்கால் ஏதாவது ஒரு லக்ஷணம் தானே ஓங்கிநிற்கும். முன்னரே இவைகளைப் பிரித்து அப்யாசம் செய்யலாகாது என்பது சாஸ்திரங்களின் துணிபு.



விவேக போதினி

தொ 5.] பரீதாபிஸூ ஆடிமீ [பகுதி 2

## விக்கிரஹ ரஹஸ்யம்

### THE INNER MEANING OF IMAGES

### 9. ஸ்ரீராமர்

இந்த விக்கிரஹம் பொதுவாக ஒரு வில்லைக் கையிலேந்திய புருஷன் ஸீதா லக்ஷ்மண ஹனுமாரோடு நிற்பதாக அமைந்துள்ளது. இதைத் தியானபரமாக வழிபடும்பொழுது, ஒரு ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு வலது காலைத் தொங்கவிட்டு இடது காலை வலது முழந்தாளின்மேல் போட்டுக்கொண்ட ஸ்ரீராமர்மடியில்தன்னைநோக்கி இருக்கும் ஸீதையை உட்காரவைத்துக்கொண்டு, கையில் உபதேசமுத்திரை தாங்கி லக்ஷ்மணர் பரதர் சத்ருக்னர் ராஜோபசாரங்கள் செய்ய எதிரில் ஹனுமார் கூப்பிய கையுடன் மஹா விநயத்துடன் நிற்க கற்பகவிருக்ஷ நிழலில் அமைந்திருப்பதாக ஆராதிக்கப்பட்டு வருகிறது. இவ்விருவித விஷயங்களையும் சித்திரங்களில் காணலாம். உட்கார்ந்திருக்கும் மாதிரி, கையில் பிடித்திருக்கும் உபதேசக்குறி ஆகிய இவைகளைப் பின்னர் தக்ஷிணாமூர்த்தி விக்கிரஹ விஷயமாக எடுத்து விவரிப்போம். கற்பக விருக்ஷத்திற்கு அடியில் இருப்பதாக எண்ணுவது இந்த மூர்த்தி ஆராதிப்பவன் விரும்பியதை எல்லாம் கற்பக விருக்ஷம்போலக் கொடுக்க வல்லது என்பதைக் குறிக்கும்.

ராமகதையை வால்மீகி மஹரிஷி வெகு விஸ்தாரமாக எழுதியிருக்கிறார். இதை அறியாதார் ஒருவருமில்லை. ஆதலால் அதை இங்கு எடுத்து விஸ்தரிக்காமல் விடுவோம். இந்தக் கதையின் ரஹஸ்யப்பொருள் இருவிதமாகக் காணப்படும். முதலாவது பக்திபரமானது. இதில் ராமரை வழிபடு கடவுளாகவும், இவரை பக்தி செய்து நல்லகதி யடைந்த ஸுக்ரீவன், லக்ஷ்மணர், ஜடாயு, விபீஷணர், ஹநுமார், குஹன், ஸீதை, மஹரிஷிகள், சரபங்கர், சபரி, காகாஸுரன், பரதர் முதலியவர்களை விதம் விதமாய்க் கடவுளைப் பக்தி செய்தவர்களாகவும் கொள்ளலாம். இக்கருத்தை உள்ளடக்கியே பக்தி ஸூத்ரத்தில் நாரதர், 'மஹிமாஞானத்தால் வருவது, தர்மஞானத்தால் வருவது, உபாஸனக்கிரமத்தால் வருவது, தாஸ்யபாவத்தால் வருவது, ஸஹ்யபாவத்தால் வருவது, ஸ்நேக (நாயகாநாயக) பாவத்தால் வருவது, தான் பகவானுடைய குழந்தை என்ற பாவத்தால் வருவது, ஆத்ம நிவேதனத்தால் வருவது, தாதாத்மிய பாவத்தால் வருவது, துக்கத்தால் வருவது, பிரிவாற்றாமையால் வருவது, ஆகிய இப்பதினொரு விதங்களால் ஒரே பக்தி பதினொரு விதமாகக் காணப்படும்' என்று எடுத்துக்காட்டி இருக்கிறார். ஆகவே ராமாயணமானது இப்படி அநேக விதமாய் ஒரே பரம்பொருளைப் பக்தி செய்து பரமபதமடைந்த மஹான்களது சரித்திரமூலமாய் நமக்குத் தகுந்த வழிபாட்டைப் பின்பற்றி நற்கதியடைய நம்மைத் தூண்டுகிறது.

இரண்டாவது விதம் ஞானபரமானது. இது அத்யாத்ம ராமாயணத்தில் காணப்படுகிறது. சிற்சில மாறுபாடுடன் ஆனந்த ராமாயணத்திலும் காணப்படுகிறது. பின்வருவது அத்யாத்ம ராமாயணத்தில் பாலகாண்டம் முதல் ஸர்க்கத்தில் காணப்படுவது.

மோக்ஷமென்ற அயோத்திமாநகரில் பிரம்மமென்ற தசரதர், ஞானசக்தி இச்சாசக்தி கிரியாசக்தியாகிய கௌஸல்யை ஸுமித்ரை கைகேயி என்ற மனைவிகளோடு அரசாண்டு வந்தார். அப்பொழுது ஞானசக்தியிடம் ஆத்மாவாகிய இராமர் தோன்றினார். அவ்யக்தமாகி குழந்தைப்பருவத்தில் தன் நிஜஸ்வரூபத்தை மறந்து சிரவணமென்னும் வஸிஷ்டாது உதவியால், வைராக்கியமாகிய லக்ஷ்மணரோடு மனனமென்ற விசுவாமித்திரரை அடுத்து, பின்பு அவரை முன்னிட்டுக் கொண்டு ஆத்மாவாகிய இராமர் பாபங்கள் என்னும் கொடிய அரண்யங்கள் முதலியவைகளைத் தாண்டிச்சென்று,ஞானமாகிய அம்பால் ஆவரணமாகிய தாடகையைக் கொன்று, இச்சையாகிய மாரீசனைத் தன்னை அணுகாதபடி வெருட்டி ஓட்டிவிட்டார். அதன் பின்பு ஏகாந்தமென்னும்

மிதிலா நகரத்துட்சென்று, சாந்தமென்னும் ஜனக ராஜனது ஆனந்தமென்னும் ஸீதையாகிய பெண்ணை விவாஹம் செய்துகொண்டு ஆத்மாவாகிய இராமர் மதமாகிய பரசுராமரைத் தலை எடுக்க ஒட்டாது பங்கப்படுத்திவிட்டு 'நான் பிரும்மபின்னனான ஜீவனல்ல' என்று தெளிய மோக்ஷமென்னும் அயோத்தியை அடைந்தார்.

ஜீவப்ரம்ம ஐக்கியமாகிய பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடப்பதை, கிரியா சக்தியாகிய கைகேயி சஞ்சலமென்னும் கூனியால் அறிந்து, பிரம்மமாகிய தசரதருக்கும் ஆத்மாவாகிய இராமருக்கும் பேதம் உண்டாக்கினாள். உடனே ஆத்மாவாகிய இராமர், ஆனந்தமாகிய ஸீதை, வைராக்கியமாகிய லக்ஷ்மணர், ஆகிய இவர்களோடு சித்தமென்னும்ஸரயூவைத் தாண்டி புத்தி என்ற குஹனோடு நேசித்தார். பின்பு விக்ஷேபம் என்ற காட்டின் வழியாகத் தபஸ் என்ற சித்திரக்கூடத்தை அடைந்து, மனஸ் என்ற காகாஸுரனுடைய ஸங்கல்பம் என்ற கண்ணைக் கெடுத்து, நிர்விகல்பம் என்ற கண்ணை இருந்தபடி விட்டு, அங்கு ஆத்மாவாகிய இராமர் ஸுகமாய் இருந்தார்.

இதன் பின்பு விக்ஷேப வனத்தின் வழியாய்ப் போகையில், எதிர்ப்பட்ட அகங்காரம் என்னும் விராதனைக் கொன்று, வீர்யம் என்ற அகஸ்தியரைத் தரிசித்து, தைரியம் என்ற அஸ்திரத்தை வாங்கிக்கொண்டு, காமம் என்ற சூர்ப்பனகையை அடக்கினார். அப்பொழுது அதனால் எழுந்த ஆகாமி கர்மமென்ற கரதூஷணாதிகளை வென்றார். இப்படி இருக்கையில் முன்னமேயே ஒழிக்காது விட்டிருந்த இச்சை என்ற மாரீசன் மறுபடியும் வர, அதனால் ஆனந்தமென்ற ஸீதையைப் பிரிந்து ஆத்மா என்னும் இராமர் போக, இரஜோ குணம் என்ற இராவணன் வந்து, ஆனந்தமாகிய ஸீதையைக் கொள்ளைகொண்டுபோய், துக்கம் என்ற லங்கையில் விசாரம் என்ற அசோக வனத்தில் வைத்து, அசுத்த வாசனைகளாகிய இராக்ஷஸிகளைக் காவலாக ஏற்படுத்தினான். இப்படி இருக்க, இச்சை என்ற மாரீசனைத் துரத்திச் சென்று ஆத்மாவாகிய இராமர் கொன்று, நிராசை என்ற பூமியில் அவனைப் புதைத்தார். அப்பொழுது ஆனந்தம் நஷ்டமாய்ப் போனதை ஆத்மாவாகிய இராமர் கண்டு, துக்கித்துக்கொண்டு வைராக்கியமாகிய லக்ஷ்மணரோடு விக்ஷேபம் என்ற காட்டில் மறுபடியும் திரிந்து, சிந்தை என்ற கபந்தனைக் கொன்று, ஸந்தோஷம் என்ற சபரியினிடம் வந்தார்.

ஸந்தோஷம் என்ற சபரியால் ஏவப்பட்டு, ஆத்மாவாகிய இராமர் நிதித்யாஸனமாகிய ஹனுமாரைத் தூதனாக அடைந்து, ஆனந்தமாகிய ஸீதையை ஸதா தியானம் செய்து, ஜனனமென்ற ஸப்தஸால விருக்ஷங்களை அழித்து, பயம் என்ற வாலியைக்கொன்று நிர்பயம் என்னும் ஸுக்ரீவனைக் காத்தார்.

அதன்மேல் நிதித்யாஸனமென்ற ஹனுமார் மோஹமென்ற ஸமுத்திரத்தைத் தாண்டி, லோபம் என்ற லங்கிணியைக் கொன்று, அசுத்த வாஸனையாகிய இராக்ஷஸ வீரர்களைச் சிதற அடித்து, ஆனந்தமென்ற ஸீதையைக் கண்டு, இராஜஸமென்ற இராவணனை எதிர்த்து, மௌனமென்ற நெருப்பால் துக்கமாகிய இலங்கையை எரித்து, ஆத்மாவாகிய இராமருக்கு ஸ்வானுபூதி என்ற ஸந்தோஷம் வரும்படி செய்தார்.

இதன் பின்பு மோஹம் என்ற ஸமுத்திரத்தின் கரையில் ஆத்மா என்ற இராமர் வந்து சேர, ஸத்வகுணம் என்ற விபீஷணர் வந்து இவரிடம் குடிகொண்டார். உடனே மோஹம் என்ற ஸமுத்திரத்தைத்தடுத்து, தமோகுணமென்றகும்பகர்ணனைக் கொன்று, இரஜோகுணமாகிய இராவணனை வெருட்டுங்கால், வைராக்கியம் என்ற லக்ஷ்மணர் தோஷம்என்ற இந்திரஜித்தின்பிரமை என்ற பாசக்கயிற்றால் கட்டுப்பட்டு, மோஹம் என்ற மூர்ச்சையில் விழுந்தார். அப்பொழுது நிதித்யாஸனம் என்ற ஹனுமார் நிஷ்டை என்ற ஸஞ்ஜீவி பர்வதத்தை எடுத்து வந்து, வைராக்கியம் என்ற லக்ஷ்மணருக்குப் பலம் என்ற தெளிவை உண்டாக்க, அவர் உடனே தோஷம் என்ற இந்திரஜித்தைச் சீக்கிரத்தில் கொன்றார். இப்படி இருக்கையில், ஸஞ்சித கர்மம் என்ற மூலபலப் படைகள் கோடிக்கணக்காக வர, ஆத்மா என்ற இராமர் தைரியம் என்ற மோஹனாஸ்திரத்தைப் பிரயோகம் செய்து, அவைகளை வேரோடு நாசமாக்கினார். உடனே சுத்தவாஸனைகள் என்ற வானரர்கள் தலைதூக்கினார்கள். இதன் பின்பு ஆத்மாவாகிய இராமர், இரஜோகுணமாகிய இராவணனை எதிர்த்து, அகங்காரமென்ற அவன் மார்பைப்பிளந்து, பத்து இந்திரியங்கள் ஆகிய அவன் சிரங்களைக்கொய்து, ஆனந்தமென்ற ஸீதை

யை மௌனம் என்ற அக்கினியில் பரிசுத்தமாக்கி, அவளோடு சேர்ந்து மோக்ஷமாகிய அயோத்தி வந்தார். அங்கு ஜீவப்பிரம்ம ஐக்கியம் என்ற பட்டாபிஷேகம் செய்துகொண்டு, தாமே பிரம்மமாகிய தசரதராகி ஆத்மாவாகிய இராமர் பிரகாசித்தனர்.

இனி ஆனந்தராமாயணம் விலாஸகாண்டத்தில் 4-வது ஸர்க்கத்தில் காணப்படும் ரஹஸ்யப் பொருளை எடுத்தெழுதுவோம்.

ஸச்சிதானந்தமாகிய விஷ்ணு என்ற ஸாகரத்தில், பூபார ஹரணமென்ற இச்சையாகிய அலை தோன்ற, அதின் திவலை ஆத்மாவாகப் பரிணமித்தது. அப்பொழுது ஹிருதயாகாசமாகிய அயோத்திமா நகரத்திலிருக்கும் சுத்த ஸத்வாந்தஃகரணம் என்ற தசரதருக்கு, இந்த ஆத்மா நான்கு பிள்ளைகளாகத் தோன்றினன். சுத்தஸத்வாந்தஃகரணமாகிய தசரதருக்கு, ஸுபுத்தியாகிய கௌஸல்யை இடம், துரீயாத்மாவாகிய இராமரும், குபுத்தியாகிய கைகேயி இடம் ஸ்வப்நாத்மாவாகிய பரதரும், மத்யம புத்தியாகிய ஸுமித்திரையிடம் ஜாக்ரதாத்மாவாகிய இலக்ஷ்மணரும், ஸுஷுப்தி ஆத்மாவாகிய சத்துருக்கினரும், உண்டானர்கள். இவ்வாறு தோன்றிய துரீயாத்மாவாகிய இராமர், விசுவாமித்திரயாக ஸம்ரக்ஷணம் என்ற மனோவேகத்தால் இழுக்கப்பட்டு, ஜாக்ரதாத்மாவாகிய லக்ஷ்மணரோடு ஸம்ஸாரமாகிய அரண்யத்தின்வழியாகப் போகையில், கெட்ட மனோவிருத்திகளாகிய தாடகையை வதம் செய்து, அதன்மேல் மனோவேகபங்கம் என்ற தனுர்பங்கத்தைச் செய்து பின்பு சுத்தமாயையாகிய ஸீதையை விவாஹம் செய்துகொண்டார். அதன் பின்பு அம்மாயையின் பூர்வ ஸம்ஸ்காரங்களாகிய பரசுராமரை நிக்கிரஹம் செய்தார்.

இவ்வாறு ஆனதும், ஹிருதயாகாசமாகிய அயோத்தி அடைந்து, துரீயாத்மாவாகிய இராமர், ஸ்வப்ன ஸுஷுப்தி ஆத்மாக்களாகிய பரதசத்துருக்கினைப் பிரிந்து, ஜாக்ரதாத்மாவால் ஆதரிக்கப்பட்டு, சுத்தமாயையின் ஸம்பந்தத்தால் வரும் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். இப்படி இருக்கையில், சுத்தாந்தஃகரணம் என்ற தசரதருக்குத் துரீயாத்மாவை அடுத்து ஸந்தோஷம் அடையவேண்டும் என்று தோன்ற, அவர் அதற்கு வேண்டிய ஸாதனமாகிய தியானம் என்ற பட்டாபிஷேகத்தை நடத்த முயற்சி செய்தார். இந்த சங்கதியை சஞ்சலமென்ற கூனியால் அறிந்த குபுத்தி என்ற கைகேயி, ஸ்வப்னாத்மாவாகிய பரதனை சுத்தாந்தஃகரணத்தில் குடிகொள்ள வேண்டும் என்றும், துரீயாத்மாவாகிய இராமர் ஸம்ஸாரமாகிய அரண்யத்தில் திரிந்து வெளிவரவேண்டும் என்றும் தூண்ட, அதன்படியே துரீயாத்மாவாகிய இராமர் நடப்பதாக ஒப்புக்கொண்டு, சுத்தமாயை ஜாக்ரதாத்மா ஆகிய இவைகளோடு, ஸம்ஸாரமாகிய அரண்யம் சென்றார். அப்பொழுது துரீயாத்மா ஸம்பந்தமற்ற சுத்தாந்தஃகரணமாகிய தசரதர் தமது உருவம் நீங்கினர்.

ஸம்ஸாரமாகிய அரண்யம் சென்று, துரீயாத்மாவாகிய இராமர் டம்பமாகிய விராதனைக் கொன்று, தேகமாகிய பஞ்சவடியை அடைந்து, பஞ்சபூதமாகிய பர்ணசாலையைக் கட்டிக்கொண்டு அதில் ஒருவாறு விச்ராந்தி அடைந்தார். அக்காலத்தில் அவருக்கு எதிராய் எழுந்த ஆசையாகிய சூர்ப்பனகையை அவர் அடக்க முயல, அப்பொழுது புற்றீசல்போல் கிளம்பி வந்த காமக்குரோத லோபாதிகளாகிய கரதூஷண திரிசிரஸ் முதலிய இராக்ஷஸர்களை வேரறுத்தார். அக்காலத்தில் மோஹமாகிய மாரீசனால் இழுக்கப்பட்டு, இராமர் சுத்தமாயையாகிய ஸீதையைப் பிரிய, அவளை அகங்காரம் என்ற இராவணன் கவர்ந்துகொண்டான். அவள் உடனே தாமஸ நிலையை அடைந்தாள். மோஹமாகிய மாரீசனைக் கொன்றபின்பு, துரீயாத்மாவாகிய இராமர் சுத்தமாயை என்ற ஸீதையினுடைய நிஜஸ்வரூபத்தைக் காணமல்,மிகுந்த துக்கப்படுகையில், ஜாக்ரதாத்மாவாகிய லக்ஷ்மணரது ஸஹாயத்தால் துக்கம் என்ற கபந்தனை அழித்து ஸந்தோஷமாகிய சபரியை அடைந்தார்.

ஸந்தோஷம் என்ற சபரியால் ஏவப்பட்டு, துரீயாத்மாவாகிய இராமர் விவேகமாகிய ஸுக்ரீவனையும், பக்தியாகிய ஹனுமாரையும் அடைந்து, அவைகளை நிலையாய் இருக்கும்படி செய்வதற்காக அவிவேகமாகிய வாலியைக் கொன்றார். பின்பு விவேகம் என்ற ஸுக்ரீவன் பக்தி என்ற ஹனுமாரை, சுத்தமாயை இருக்கும் நிலையைத் தெரிந்துவரும்படி அனுப்பினன்.

அப்பொழுது பக்தி என்ற ஹனுமார், தமது சிறப்பால் ஸ்தூல தேகம் முதலிய இடையூறுக ளால் நிறைந்த அஜ்ஞானம் என்ற ஸமுத்தி ரத்தை எளிதில் தாண்டி, லிங்கதேகம் என்ற இலங்கையை அடைந்து, அகங்காரமாகிய இரா வணனால் தாக்கப்பட்டு அசுத்தமாகிய துக்கத் தில் மூழ்கி, தாமஸ நிலையை அடைந்து துக்கப் படும் ஸீதையைக் கண்டு துரீயாத்மாவிடம் சங் கதியைத் தெரிவித்தார்.

அப்பொழுது விவேகம் என்ற ஸுக்ரீவனோ டும், அவன் பரிவாரங்களாகிய நல்ல வாஸனை கள் என்ற வானர ஸேனையோடும், துரீயாத்மா வாகிய இராமர் அஜ்ஞானம் என்ற ஸமுத்திரத் தின் கரை வந்தார். அங்கு உத்ஸாஹம் என்ற விபீஷணர் வந்துசேர, அவரது தூண்டுதலால் அஜ்ஞானத்தைத் தாண்டும் உபாயமாகிய ஸேது பந்தத்தை நன்றாகச் செய்து, லிங்கதேகம் என்ற இலங்கையை அடைந்து, மதம் என்ற கும்பகர் ணனையும், மத்ஸரம் என்ற இந்திரஜித்தையும் கொன்று, முடிவில் அகங்காரம் என்ற இராவண னைத் துரீயாத்மாவாகிய இராமர் வெட்டிச் சாய்த் தார். இதன் பின்பு, அசுத்தமாயிருந்த மாயை யாகிய ஸீதையை, சித்தசுத்தி என்ற அக்கினி யால் பரிசுத்தமாக்கி அவளை ஸாத்விக நிலையை அடையும்படி செய்து, அவளை இராமர் அங்கீ கரித்துக்கொண்டார். எல்லாம் முடிந்தவுடன், துரீயாத்மாவாகிய இராமர் தனது நல்ல ஸ்நே கிதர்கள் முதலியவர்களோடு லிங்கதேகமாகிய இலங்கையை விட்டு, ஹ்ருதயாகாசமாகிய அயோத்தியை வந்து, ப்ரஹ்மானந்தம் என்ற ராஜ்யபோகத்தை அடைந்தார்.

முடிவில் ஸரயூவில் பிரவேசித்தலாவது, ஹிருதயாகாசத்தை மஹாகாசத்தில் லயிக்கும் படி செய்து ஸச்சிதானந்த ரூபமான விஷ்ணு ரூபத்தைத் துரீயாத்மாவாகிய இராமர் அறிந்து ஸாயுஜ்யமாகிய முக்தியை அடைவதே.

ராமவிக்கிரஹ ரஹஸ்ய விஷயமாக இரண்டுஉப நிஷத்துகள் இருக்கின்றன. அவையாவன: ராம ரஹஸ்யம், ராமதாபினி என்பவைகளே. இவை களில் ராம ஆராதனக்ரமங்கள் மந்திரங்கள் சக் ரங்கள் முதலியவைகள் எல்லாம் விஸ்தாரமாகக் காணப்படுகின்றன. இவைகளில் ராமரைப் பரம் பொருளாகி நிற்கும் ஆசார்யன் என்றும், ஹனு மாரை பரமானந்த சிஷ்யன் என்றும், ஸீதையை மாயை என்றும்,லக்ஷ்மண பரத சத்ருக்னர்களைப் பரம்பொருளது ஸகுண ரூபங்கள் என்றும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது. இதற் கேற்பவே முக்திகோபநிஷத்தில் ராமர் ஆசார்ய னாகவிருந்து பரமவேத ரகஸ்யங்களை சிஷ்ய னாகவிருக்கும் ஹனுமாருக்கு உபதேசிக்கிறார். மேலும் ராமவிக்கிரஹத்தை ப்ரணவமாகவும் பொ ருத்திக் காட்டி இருக்கிறது. இதில் லக்ஷ்மணர் அ, சத்ருக்னர் உ, பரதர் ம், ராமர் அர்த்மாத்ரை. ஸீதை மூலப்ரகிருதி என்று விளக்கப்பட்டிருக் கிறது இந்த விக்கிரஹத்துள், ஸகலவேத ரஹஸ் யங்களும், ஓம் என்பதனுள் அடங்கி இருப்பது போல அடங்கிவிட்டது. இம்மாதிரி ரஹஸ்யம் இதனுள் அடங்கியிருப்பதால்தான் ராமநாமம் ஸகல பயங்களையும் நீக்கி கைதூக்கிவிடும் தாரக மந்திரமாக மதிக்கப்படுகிறது.

ராம என்னும் நாம விசேஷத்தைப்பற்றி விசா ரித்தால் இது தாரக மந்திரமாகக் கருதத்தக்கது தான் என்பது நன்றாக வெளியாகும். 'நித்யானந் தம்,சித்ரூபம்,அனந்தம் ஆகிய இந்த ஸ்வரூபமாக இருக்கும் இவரிடத்தில் யோகிகள் ரமிப்பதால் (ஆனந்தபரவச ராவதால்)இவருக்கு ராமர் என்று பெயர் வந்தது' என்று ராமதாபனியில் கூறப்பட் டுள்ளது. ர என்பதற்கு ப்ரகாசம் என்றும், ம என்பதற்கு மங்களம் என்றும் பொருள். ர என் பது பரம்பொருளையும், ம என்பது ஜீவாத்ம ஆதாரமான பொருளையும் உணர்த்தி ; ராமா என் பது, இரண்டும் ஒன்றே என்ற வேத ரஹஸ்யத்

பது முதலில் முடியாவிடினும் முடிவில்முடியும். பின்யாவராலும் தள்ளப்பட்டமையால் கெடுதி செய்ய முடியாதாகிவிடும். ஆகையால் பொறுமையே பெருமையை விளங்கச்செய்யும். இதனல் நாம் நன்னிலையிலிருந்து நம்மால் எதிர்க்க முடியுங்காலத்திலும் நமதுபொறுமை நம்மைக் காவாதிருக்க முடியாது.

இவ்வெண்ணங்களை எல்லாங் கொண்டே திருவள்ளுவர்,

‘அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்தற் றலை’

என்ருர். அதாவது தன்னை நின்று வெட்டுவோர்க்கே நிற்க இடம் தரும் பூமியைப்போல் தம்மை இகழ்ந்து அதனல் தமக்குக்கேடு உண்டாகும்படிச் செய்பவர்களை அவர்செய்த தீங்கிலிருந்துப்பொறுத்தல் முதல்தருமமாகும் என்ருர். மேலும் உயர்குடிப் பிறந்தார் (அதாவது தலையாயார்) இடத்திற்ருன் அக்குணம்பொலியும் என்பதும் த்வனிக்கும்படிக் கூறினர். மேற்குடிப்பிறந்தார்க்கு அக்குணமின்றேல் குலம் சாய்ந்துவிடும் என்பதும் கொள்ளப்படும்.

மன்னருக்கும் பொறையுடைமை மிக வேண்டும். அது அருளுடைமையை யூட்டி சிஷ்டபரிபாலனத்திற்கு வழிகாட்டும். அன்றியும் வழிதப்பிகுணங்கெட்டுநல்வழிவிட்ட தீயர்களுக்குத் தக்கதண்டனைமாத்திரம்அவர்க்கிடல் அவனுக்குப்பெருமை உண்டாக்காது. தண்டித்ததும் பொறுத்து வழி தப்பினவர்களை நல்வழியில் கொண்டுவர முயற்சிகொண்டுஅவர்களை மேல்வழியில் புகுத்தலே அரசனது பெருந்தன்மையையும் அருளுடைமையையும் காட்டும். இதற்குப்பொறுமைவழிகாட்டும். அன்றியும் ராஜாங்க விஷயங்களில் நியாயங்களை அறிய நிதானமே முக்கியமாக வேண்டியது. உலகத்தாரது ஸுக துக்கங்களுக்குக் காரணமாகிய சட்டங்கள், ஒழுங்குகள் நடத்துவதில் முன்பின் யோசித்து அநுபவ வழியை ஒட்டிச் செய்வதற்கு நிதானம் முக்கிய ஸாதனம். நிதானமும் பொறுமையின் பால்பட்டதால் பொறுமை அரசற்கு இன்றி அமையாதது. அவ்வாறே அது நியாய வாதிகளுக்கும் நியாயாதிபதிகளுக்கும் இன்றியமையாததென அறியலாம். இவையெல்லாம் இம்மைப்பாற்பட்டன.

‘பொறுமை’ என்பது ‘அடங்குந்தன்மை’ என்று கூறினேம். பின்னது மனமடங்கலின் வழியென்றும் இம்மைக்கு மறுமைக்கு முதவியானது என்றுங் கூறப்பட்டது. இங்கது விரிந்தபொருளில் கொள்ளப்பட்டது. படவே அருள், அன்பு முதலிய குணங்கள் அதன் விரிவில் மயங்கிவிடும். ஆயினும் தமக்கின்பம் துன்பம் எதுசெய்யினும் வெளிக்காட்டாதிருத்தலாகிய மனே நிலைமையே பொறுமை என்று சொல்ல வேண்டுமென்று தோன்றுகிறது. மேலோர் செய்த நன்மையைக் காட்டுவது, உலகிற்கு ஒக்கும்; மேலும், அது நற்பிறவிக்கு ஆளாக்கும். கீழ்மையைக் கூறல் அது கீழ்ப்பிறவிக்கு ஆளாக்கும். புண்ணியமும் பாவமும் அற்ற நிலையே பிறவியறச் செய்யும். அதனல் தனக்குச் செய்யும் கீழ்மையையும் மேன்மையையும் எண்ணுதிருத்தல் தான் பொறுமையின் உயர்ந்த நிலையாகும். அதாவது, மனனவது கீழ்மை மேன்மை என்கிற பாவங்களால் அசைக்க முடியாது ஒடுக்கப்பட்டது என்பது விளங்கும். அதனல் பொறுமையின் நிலைமைப் பெறப்பட்டது. இவ்வளவு விரிவும், உயர்வும், பொருளும் வாய்ந்த பொறுமை என்னும் பதத்தை, ‘ஒருவர்க்குச் செய்த கெடுதியை வெளிக்காட்டாதிருத்த’ லென்னும் பொருளில் கொள்ளுதல் அப்பதத்தின் பெருமையைக் குறைக்கும். பொறுமை என்பது விரிந்த அரும்பெரும் நிலையைக்காட்டும் மொழியென அறியப்படும்.

இனிப் பொறுமையின் ஸ்வபாவத்தைக் காட்டும் அநுபவத்தில் சில கூறுவோம்:—காகாஸுரன் தன்மனைவியின்பால்செய்ததவறை மன்னித்த இராமர்; நக்ஷத்திரகனும் விச்வாமித்திர

னும் வருத்த அவர்க்கே இன்பஞ்செய்த ஹரிச்சந்திரன்; தமக்குக் காட்டிலிருக்கத் துன்பஞ்செய்த துரியோதனன், ராக்ஷஸர்கள் கைகளிலகப்பட்டுக் கஷ்டப்படும்போது, அவனை மீட்டுவரும்படிச்செய்த தர்மபுத்திரர்; தனக்குத் துன்பஞ் செய்த விசுவாமித்திரர்க்கு நன்மையையே செய்த வசிஷ்டர்; ஊரையெல்லாம் எரிக்கிரையாக்கவும் மௌனமாயிருந்த ஜனகர்; யுத்தஸந்நதமாய் பாண்டவ கௌரவ ஸேனை நிற்க துரியோதனனுக்கு நல்லமுஹூர்த்த மிதுதான் என்று மெய்யன்போடு கூறிய ஸஹாதேவன்; ஒட்டக்கூத்தன் தன்பால் கொண்ட பகையால் அவனைக் கொல்லச் சென்று முடிவில் அவனைத் தழுவிய புகழேந்தி; பெண்களது கற்பைக் காக்கக் கையையும் வெட்டியளித்த பொற்கையான் மாறன்; இவர் முதலானவர்களது காதைகளின்மூலமாகப் பொறுமையின் ஸ்வபாவத்தையும், அதன் விரிவையும், பெருமையையும், அது மனதை ஒடுக்கி மேல்வழிக்கு அழிவில்லா ஸாதனமாதலையும், இவையனைத்தையும் அறியலாம்.

வா. சேஷகிரி.

---

வியாயாமம்:—காலையிலும் சாயரக்ஷையிலும் வெளியில்போய்க் காற்றோட்டமாய் உலாத்திக் கொண்டு வருவதில், தேகத்தில் ரத்தம் செவ்வையாய்ப்போய்ப் பரவும், மாம்சாதிகளும் தாருட்டியமடையும். இல்லாவிட்டால் தினே தினே சோம்பல் அதிகரித்து முடிவில் இருந்த ஸ்தானத்தை விட்டு எழுந்திருப்பதற்கே கஷ்டமாயிருக்கும். முக்கியமாய்வீட்டிலிருப்பவர்களும், வீட்டிலிருந்துவேலை செய்கிறவர்களும், இந்த விஷயத்தை மறக்கலாகாது. பனிக்காலத்தில், பனிநின்றபிறகு உலாத்தவேண்டியது. நடப்பதே நல்லது, நடக்க தாருட்டிய மில்லாதபோது, குதிரைமேலேறிப்போகலாம், தோள்களைப் பின்னுக்குவைத்து, மார்பை விசாலமாக்கிக்கொண்டு நடந்தால் நுரை ஈரலில் அதிக காற்றுச்சென்று ரத்தம் செவ்வையாய்ச்சுத்தியாகும். தோட்டவேலை, ஓடுதல், பந்து விளையாடல், கனமுள்ளவைகளை எடுத்து தூரவிட்டெறிதல், காலால் சுற்றுதல், தாண்டால் வாங்குதல் ஆகிய இவைகளாலும் தேகசவுக்கியம் பிறக்கும். வெளியிற் சென்று உலாத்துவதற்குச் சமயம் நேரிடாவிட்டால், கிரகத்துக் குள்ளாகவே நடந்து உலாத்தலாம். தோட்டவேலை சுகத்தைத் தருவது மின்றி, துஷ்டக்கிரித்தியங்களில் மனதைப் பிரவேசிக்கவொட்டாது. முடிவில் லாபத்தைத் தரும்.

## பனைமரம்

### PALMYRA TREE

முன்னுரை.—இது நம் நாட்டு நீண்டகாலத்துப் பயிர். இது கடற்கரையோரங்களில் விசேஷமாயுள்ளது. நஞ்சை வயல்களின் வரப்புக்களிலுமுண்டு. நஞ்சையைப் பார்க்கிலும் புஞ்சையில் மிகுதி. இம்மரம் தஞ்சாவூர் ஜில்லாவின் சமுத்திரக்கரையோரத்திலும் இலங்கையிலுள்ள யாழ்ப்பாணத்திலும் அதிகம். இது வேலிக்காக பயிராக்கப்படுகிறது.

பூமி.—இதற்குமணற்பாங்கே யுரித்தானது. உப்பு சம்பந்தமானது விசேஷம். களிவாயிலும் வளரும். கரிசல் கப்பிக்கல் பூமி சிலாக்கியமானது.

பயிரிடல்.—கொல்லையின் வேலிக் கால்களை நன்றாய்க் கொத்தி வாங்கி, புற்பூண்டுகளை நீக்கி மழைகாலத்தில் அதாவது புரட்டாசி, ஐப்பசி மாதங்களில் இரண்டு மூன்று அடிக்கு ஒன்றிரண்டு கொட்டைகள் வீதம் போடுவார்கள். இவை முளைத்து வெளிக்கிளம்ப இரண்டு மூன்று மாதங்கள் செல்லும். இதற்கு எரு போடல், தண்ணீர் விடுதல், களையெடுத்தல் முதலிய செய்நேர்த்திகள் செய்கிற வழக்கமில்லை. இவைகள் யாவும் கிரமமாகச் செய்யும் பக்ஷத்தில் சீக்கிரத்தில் நல்ல பலனைக் கொடுக்கும்.

காய்ப்புக்குவருங்காலம்.—பன்னிரண்டு வருஷத்திற்குமேல் முப்பது வருஷத்திற்குள் காய்க்கும். அதுமுதல் பதனிகட்ட ஆரம்பிப்பார்கள். சுண்ணாம்பு தடவின கலயத்திலிறக்குவதற்குப் 'பதனி' யென்றும், அது தடவாமல் வெறுங்கலயத்தில் இறக்குவதற்கு 'கள்' ளென்றும் பெயர் வழங்கி வருகிறது. ஒரு மரத்திற்கு ஐந்து, ஆறு கலயங்கள்போட்டு பதனி இறக்குவார்கள். நல்ல மரத்தில் பட்டணம் படி 4-வரைக்கும் பதனி கிடைக்கும். இந்தப் பதனியில் சர்க்கரை அதிகம்.

இதிலிருந்து சர்க்கரை, வெல்லம் செய்யப்பட்டு நமது நாட்டில் வழங்குகிறது. பனை வெல்லம் என்று வழங்குவது இதுவே. இது மருந்து செய்கிறதற்கு உபயோகப்படுகிறது. பனங்கற்கண்டும் இதிலிருந்துதான் எடுக்கிறார்கள். இது தைமாதத்தில் பூத்து, காய்த்து, ஆடிமாதம் வரையில் பழுத்து, நெற்றுக்கள் கீழே தானாகவே உதிர்ந்துகொண்டிருக்கும். தானாக உதிர்ந்த நெற்றுக்களாலே மரம் பயிராவது முண்டு.

வெல்லம்.—ஒரு குவார்ட்டு பதனியிலிருந்து கால் பவுண்டு வெல்லம் கிடைக்கும்.

காய்க்கவிடுதல்.—50 வருஷம் வரையில் பதனி கட்டுகிறார்கள். இரண்டு மூன்று வருஷத்துக்கு ஒருமுறை நிறுத்தி காய்க்கவிட வேண்டும்.

வகை.—ஆண் பெண் என்று இரண்டுவகை. ஆண்மரம் பூத்து மாத்திரம் இருக்கும். பெண் மரம் பூத்து அதில் காய்க்கும்.

பூ.—இதைச் சுட்டு கார்த்திகைமாதத்து கிருத்திகைக்குப் பைகட்டி அதில் நெருப்பு வைத்து பொறி பறக்கச் சுற்றுவார்கள். விறகுக்கு முபயோகம்.

காய்.—இதிலிருந்து நொங்கு எடுத்து விற்கிறார்கள். இதை சிலர் மாத்திரமன்றி மற்றையவர்களும் தின்கிறார்கள். இது குளிர்ச்சியுள்ளது. ஜீரணஸ்தியாகாது. சில மாறுதல்களுடன் மலத்துடன் வெளிப்பட்டு விடும். இதன் ஜலம் குடிக்கிறதற்கு இனிமையாக இருக்கும். வேர்க்கூர்களுக்கு தடவினால் பொறிந்து போய்விடும்.

பழம்.—இதை ஏழை ஜனங்கள் தின்கிறார்கள். மாம்பழம் வாசனையுள்ளது; பித்தமானது. 'பசிக்குப் பனம்பழத்தைத் தின்றால் பித்தம் செய்கிறதைச் செய்யட்டும்' என்னும் பழமொழி உலகத்தில் வழங்குகிறது. சர்க்கரையிட்டு அவித்தும் உண்கிறார்கள்.

மட்டை.—ஒவ்வொரு மரத்திலும் 20முதல் 50 மட்டைகள் வரையிலும் இருக்கும். மாதத்திற்கு ஒரு மட்டைதான் விடும். சிலர் வருஷத்திற்கு 12 மட்டைகள் தான் வெட்டுகிறார்கள்.

ஓலை.—இது கணக்குப்புத்தகம் எழுத உபயோகப்படுகிறது. முன்காலத்தில் இதுதான், இக்காலத்துக் காகிதம்போல் வழங்கப்பட்டது. கூரைபோடுவதற்கும் அடைப்பு அடைப்பதற்கும் உபயோகப்படுகிறது. விறகாகவும் பிரயோஜனப்படுகிறது. பாய் பின்னுவதற்கும் விசிறி செய்வதற்கும் பயன்படுகிறது.

நார்.—மட்டையிலிருந்து நார் எடுக்கப்படுகிறது. சிலர் அரிவாள்கொண்டு கிழித்து எடுக்கிறார்கள். சிலர் ஊரவைத்தும் எடுக்கிறார்கள். நார் எடுப்பதற்கு இளமரத்தின் மட்டையே பிரயோஜனமுள்ளது. 10-பவுண்டு நார் ஒரு ரூபாய். இந்நாரைக்கொண்டு பிரஷ் (Brush) செய்யலாம்.

குறிப்பு.—இதன் குருத்து கறிகாய்களாகவும் உபயோகப்படுகிறது. இதன் கிழங்கும் தின்னுகிறதற்குபிரயோஜனப்படுகிறது. இதில் பிரயோஜனப்படாத வஸ்து ஒன்றுமேயில்லை. மரம் வீடுகட்ட பயன்படுகிறது. இதைப் போல பிரயோஜனப் படக்கூடிய மரம் வேறொன்றுமில்லை. ஆகையால் புஞ்சை பெருத்த விடங்களில் இதை வேலிக்கால்களில் பயிரிட்டால் நமது நாடுசெழித்து ஓங்க இது ஒரு சாதனமாகும்.

---

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.
சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.
பழகிய செல்வமும் பண்பும் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

# அடங்காப்பிடாரி அடங்கியவிதம்

## TAMING OF THE SHREW

(28-ம் பக்கத் தொடர்ச்சி.)

இவ்வாறு உபாத்தியாயரிடம் காதல் சென்ற இவளை, தான் கவனிப்பதே இல்லை என்று லூஸென்ஷியோ வேஷம் பூண்ட டிரேனியோ சபதம் செய்தான். தானும் பையான்காவிடமிருந்த தன் காதலை விட்டுவிட்டதாகவும், தான் ஹார்டென்ஷியோ என்பதாகவும், தான் ஓர் பணக்காரக் கைம்பெண்ணை மணந்து பெட்ருகியோவிடம் அடங்காப்பிடாரியை அடக்கும் விதத்தைக் கற்றுக்கொள்ளப்போவதாகவும் சொல்லிப் பையான்காவை வெறுத்துக்கொண்டு விகியோவும் போய்விட்டான். இதன் பின்னர் டிரேனியோ, லூஸென்ஷியோ பையான்கா இவர்களைக்கண்டு ஹார்டென்ஷியோவின் உபத்திரவம் நீங்கினதைக் கூறினன்.

ஒருவன் லூஸென்ஷியோ தகப்பன் வின்ஸென்ஷியோவின் வேஷம்கொண்டு பாப்டிஸ்டாவுக்கு வாக்களித்து பையான்கா கல்யாணத்தை நடத்திவைக்க வேண்டுமென்று முன்னரே எண்ணியிருந்த டிரேனியோவுக்கு இதை நடத்திவைக்கும் ஸமயம் வாய்த்தது. வழியில் போய்க்கொண்டிருந்த உபாத்தியாயர் ஒருவரைப் பிடித்து அவரை வின்ஸென்ஷியோ ஸ்தானத்திலிருக்க இசையும்படி அவன் செய்தான். பின்னர் அவருக்கு வின்ஸென்ஷியோ வேஷம்போட்டுப் பாப்டிஸ்டாவைப் பார்க்கும்படி செய்ய, பாப்டிஸ்டா ஸ்திரீதன விஷயங்களை லூஸென்ஷியோ வீட்டிலே தீர்மானிக்கலாம் என்றனன். அதன்படியே பையான்காவின் காதலனுகிய க்ரீமியோ வந்து சண்டையிட இடமில்லாது, டிரேனியோ லூஸென்ஷியோவாகவும், உபாத்தியாயர் வின்ஸென்ஷியோவாகவும் இருந்து ஸ்திரீதன விஷயங்களை அங்கு சென்று பேசத் தொடங்கினர்.

ஹார்டென்ஷியோ தன் கல்யாணம் முடிந்ததும் பெட்ருகியோவைப் பார்க்க அவன் வீடு போய்ச் சேர்ந்தான். அப்போது தான் பெட்ருகியோ கொஞ்சம் காதரீனுக்குத் தானே அன்புடன் தயார் செய்த உணவை அளித்துக் கொண்டிருந்தான். ஹார்டென்ஷியோவைக் கண்டதும் திடிரென்று உணவைக் கொண்டுபோகச் சொல்லிவிட்டு அவனுடன் தனக்குக் காதரீனிடம் இருந்த அன்பைப்பற்றிப் பேசத்தொடங்கிவிட்டான். இதற்குள் தையற்காரர்கள் காதரீனுக்கு உடைகள் தைத்துக்கொண்டுவர அவைகளில் குற்றங்கூறி அவர்களைக் கோபித்துக்கொண்டு துரத்திவிட்டு, காதரீன் இஷ்டப்படி போகாது, வெளியிற் சென்று தையற்காரர்களை ஸமாதானப்படுத்தி சரக்கை வாங்கிப் பணம் கொடுத்துவிட்டு வந்துவிட்டான். இம்மாதிரி எல்லாம் பெட்ருகியோ காதரீனுக்கு மாருகப் பிடிவாதம் பிடித்து அவளைத்தன் இஷ்டப்படி வரும்படி செய்துவிட்டதைக் கண்டு ஹார்டென்ஷியோ வியந்தான். இதற்குள் பையான்கா கல்யாண ஸங்கதி வந்துசேர எல்லோரும் பாடுவா நோக்கிப் புறப்பட்டனர். வழியில் பைஸாநகரத்து வின்ஸென்ஷியோ தன் மகன் லூஸென்ஷியோவைக் காண வந்து கொண்டிருந்தான். அவனையும் கூடச் சேர்த்துக்கொண்டு பாடுவாநோக்கிப் போகையில் வழியில் தான் கூறுவதற்குக் காதரீன் சற்றேனும் மாருகப் பேசினுல் பெட்ருகியோ உடனே தன்னூர் நோக்கி அடிக்கடித் திரும்ப யத்தனித்து அவளுக்கு அடக்கம்வரும்படி பழக்கினுன். அப்பொழுதுதான், 'பெண்சாதி கணவன் கட்டளைக்கு அடங்கி நடக்கவேண்டும். அப்படி இருந்தால்தான் இருவருக்கும் ஸுகம் உண்டு. இல்லாவிடில் சண்டையும் கஷ்டமுமே ஏற்படும். இம்மாதிரியான அடக்கமே நம்மேல் மாருஅன்பு கொண்டிருக்கும்பெட்ருகியோவிரும்புகிறது. அவர் காதலுக்கும், நமக்காக அவர் கஷ்டப்பட்டு பணம் முதலியன ஸம்பாதித்து வருவதற்கும் நாம் ஏன் அவருக்கு அடங்கி நடக்கக்கூடாது? இவ்வளவுகாலம் இந்த ரஹஸ்யத்தை உணராது நாம் அடங்காப்பிடாரியானேமே' என்று காதரீன் மனதில் பட்டது. அதுமுதல் அவள் நல்லவளாகிவிட்டாள். இப்படி இவள் மாறிக்கொண்டு வருகையிலேயே இவர்கள் பாடுவாவில் புகுந்து லூஸென்ஷியோ வீட்டுவாயிலில் வந்துவிட்டனர். அங்கு வாயிலில் க்ரீமியோ, உள்ளே பையான்கா விஷயமாக என்ன நடக்கிறதோ என்ற ஆவலுடன் கவனித்துக்கொண்டிருந்தான். பெட்ருகியோ வின்ஸென்ஷியோவுக்கு அவன் மகன் வீட்டைக் காட்டிவிட்டு ஒதுங்கினுன்.

வின்ஸென்ஷியோ இங்கு வந்ததும், பையான்கா லூஸென்ஷியோ இருவருக்கும் ரஹஸ்ய விவாஹம்

ஆத்மகுணங்கள் வந்து அணுகா. இதுபற்றியும் ஒருவன் தன் பெற்றோரைப் பேணல் வேண்டும்.

பெற்றோரைப் பேணிச் சிறப்புடன் வாழ்ந்தவர்கள் அநேகர். தர்மவ்யாதன் தன் பெற்றோரைப் பேணி நின்றதால் அவனுக்கு ஸகல தர்மஞானங்களும் உண்டாய் தான் வேடஜாதியாக விருந்தாலும் ஒரு பிராஹ்மணனுக்கு எடுத்துக்கூறும் நிலை அவனுக்கு வந்தது, மஹாபாரதம் ஆரண்ய பர்வத்தில் விஸ்தாரமாகக் காணப்படும். தந்தை தாய்களைப் பேணியவர்களின் விஷயத்தை ஆர்ய மத உபாக்யானம், முதல்பாகம், புத்திரர் கடமை என்ற கதைகளில் ராமர், பரசுராமர், பீஷ்மர், தர்மவ்யாதன் இவர்கள் கதைகளால் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. தந்தை தாய்களுக்கு வழிபாடு செய்து கொண்டிருந்த பண்டாபுரம் புண்டரீக பக்தனுக்குத் தர்சனம் கொடுக்கவந்த ஸ்வாமீ, அவ்வூர் நதிக்கரையில் அவன் இட்ட செங்கல்லின் மேல் நின்றுகொண்டு அவன் வழிபாடு முடியும் வரை காத்திருந்து அவனைப் பின்னர் அனுக்ரஹித்து மறைந்தார் என்று பக்தவிஜயத்திலிருக்கிறது. பெற்றோர் வார்த்தையை மீறி நடந்ததால்தான் துர்யோதனன், ருக்மி, கம்ஸன் முதலிய கொடியவர்கள் வேரோடழிந்தனர். தாய்தந்தையர்களைப் பேணிச் சிறப்புற்றவர்களைக் காட்ட தாயின் அடிமைத்தனத்தை நீக்கிய கருடன் கதையையும், ஒரு அந்தணன் கதையையும்,

அனையிடர்தீர்த் தான்கருட னந்தணன்செங் கந்தை
தனையெடுத்துச் சாவு தவிர்த்தான் - இனைவாபோய்
சீராடும் புன்னை வனதீரனே நாடோறும்
பேராருந்தந் தாய்ப்பேண்.

என்ற ஆத்திசூடி வெண்பா அடக்கி உள்ளது.

தாய்தந்தையர் நல்லவர்களாக விருந்துவிட்டால் தான் இவைகளைப் பின்பற்றவேண்டும்: இல்லாவிடில் அவர்களைக் கவனிக்கவேண்டியதில்லை என்று சிலர் அபிப்பிராயப்படலாம். அதற்கு அவர்கள் ப்ரஹ்லாதனையும், சண்டேசுர நாயனார் முதலியவர்களைத் திருஷ்டாந்தமாகக் கொடுப்பது வழக்கம். இவர்கள் விஷயங்கள் ஸாதாரணமாக உலகில் நடப்பவைகள் அல்ல; மிக அபூர்வம். இதைக் கொண்டே கொடிய தாய்தந்தையர்களை அவமதிக்கவேண்டும் கொல்லவேண்டும் என்ற விதியை ஏற்படுத்திவிடலாமா? மேலும் இவர்கள் தான் எவ்வாறு நடந்துகொண்டிருக்கிறார்கள்? ப்ரஹ்லாதர் தந்தைவாக்கைக் கவனியாது பகவத்பக்தி செய்தாரே ஒழிய அவனை ஒருவிதத்திலும் அவமதிப்பாகப் பேசவில்லை. அவன் கொடுத்த தண்டனைக்கு மாறாக அவனை எதிர்த்து அடித்துவிடவும் இல்லை. அவன் துர்போதனைப்படி நடக்காமலிருந்ததைத் தவிர வேறு ஒருவிதமான ஒழுங்கு தவறின நடத்தையும் ப்ரஹ்லாதனிடம் காணப்படவில்லை. பகவான் தகப்பனைக் கொன்றதும், அவனுக்கு நற்கதி வரும்படி செய்யவேண்டும் என்று ப்ரஹ்லாதர் கேட்டுக்கொண்டார். சண்டேச்வர நாயனாரும் தகப்பன் அடிகளை லக்ஷ்யம் செய்யாதிருந்து, முடிவில் சிவபூஜைக்குத் தடையாகத் தகப்பன் வந்தபொழுது அதையும் கவனியாது தமது காரியத்திலேயே கண்ணாக விருக்கமுடியாது, படபடப்புடன் தகப்பன் காலைத் தான் வெட்டினார். இதைச் செய்யாதிருந்தால் அவருக்கு ப்ரஹ்லாதன் சிறப்பு வந்திருக்கும். இந்த விஷயத்தில் ப்ரஹ்லாதருக்கு இவர் சற்றுக் குறைவுதான். பக்தி விசேஷத்தில் இருவருக்கும் யாதொரு பேதமும் இல்லை. ஆகவே இவைகளிலிருந்து என்ன கொடியவராயினும் பெற்றோர் பெற்றோரே; அவர்களை மதிப்புடன் நடத்துதல் புத்திரர்கடன். அவர்கள் கொடியவர்களாகில் அந்தப் பாபம் அவர்களுக்கு. அதற்காகப் புத்திரன் அவர்களை அவமதித்து வெறுத்தானாகில் இந்தப்பாபம் புத்திரனுக்கு. இப்படிச் செய்வதால் தாய்தந்தையர்கள்கொடுமையும்நீங்காது புத்திரனுக்குப் புண்ணியமும் வாராது. கொடிய தாய் தந்தையர்களிடம் அகப்பட்டுத் தத்தளிக்கும் பிள்ளை அவர்கள் துர்போதனைகள்படி நடக்காது நல்வழியிலேயே பிடிவாதமாக நடப்பதால் மாத்திரம் அவர்களுக்குக் குறிப்பாகத் தனது அப்ரியத்தைத் தெரிவிக்கவேண்டுமே ஒழிய, அவர்களை எதிர்த்துப் பேசுதல் அவமதித்தல் மூலமாக எப்பொழுதும் தெரிவிக்கவே கூடாது. அவர்கள் பெருந்தடைகளாக ஏற்பட்டுவிட்டால் அவர்களை விட்டுவிலகி நின்று அவர்களைப் பேணியே தீரவேண்டுமே ஒழிய ஒருகாலும் த்வேஷம் பாராட்டவே கூடாது. அதர்மத்தில் ப்ரவேசித்துத் தாய்தந்தையரைப் பேணவும் கூடாது, தர்மவழி நடக்கவேண்டும்என்று அவர்களை அவமதித்து த்வேஷிக்கவும் கூடாது. அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை மாத்திரம் சாந்தமனதுடன் எப்பொழுதும் செய்தே தீரவேண்டும்.

## 21. நன்றி மறவேல்

ஒருவன் செய்த நன்மையை ஒருநாளும் மறக்காதே: என்பது இதன் பொருள். ஆகவே ஒருவன் செய்யும் கெடுதியை உடனே மறந்துவிடவேண்டும் என்பது இதில் த்வனிக்கிறது உலகில் நாம் பலரோடு பழகுங்கால், சிலர் செய்வது நமக்கு நன்மையாயும் சிலர் செய்வது கெடுதியாயும் இருக்கும். இவைகள் இரண்டும் நமது மனதில் பதிந்து நிற்கும். நன்மை பதிந்திருந்தால் அது செய்தவனுக்குத் தருந்தசமயத்தில் நாமும் உதவவேண்டும் என்றும், கெடுதல் பதிந்தால் அது செய்தவனுக்குப் பதில் கெடுதி செய்துவிடவேண்டும் என்றும் ஸாதாரணமாக எல்லோருக்கும் படும். மேலும் முன் எண்ணம் அவ்வளவு பலமாக மனதில் நில்லாது சீக்கிரத்தில் மங்கிக்கொண்டே வரும்: பின்னதோ மங்க வெகு நாளாகும். நன்மை செய்வதால் நமக்கு சித்தஸமாதானமும், தீமை செய்வதால் மனச்சஞ்சலமும் உண்டாவது எல்லோருக்கும் தெரிந்த விஷயமாதலால் எளிதில் மங்கக்கூடிய நன்றி விஷயமான எண்ணத்தை எளிதில் மங்கவொட்டாமலும், தீமை விஷயமான எண்ணத்தை உடனேமங்கிப்போகும்படியாகவும் செய்துவிடவேண்டும், மேன்மையை அடைய விரும்பும் புத்திமான், என்று இந்நீதி வாக்கியம் கூறும். மேலும் ஒருவனோடு நாம் வெகுநாள் பழகிவந்தால் அவன் சிற்சில ஸமயத்தில் நமக்கு நன்மையையும் வேறு சில ஸமயத்தில் நமக்குத் தீமையையும் செய்யும்படி நேரிடலாம். இங்கும் நன்றியை மறவாது தீமையை வெட்டென மறந்துவிடவேண்டும்.

இந்நீதி வாக்கியம் ஒருவனிடமிருந்து உபகாரம் பெறுபவனை நோக்கியே கூறியுள்ளது. இதை நாம் மறந்துவிடும் காலத்தில்தான், நமக்கு விசித்திரமான மனோநிலைகள் எல்லாம் வந்துவிடும். முக்கியமாக உபகாரம் செய்பவன் இதை எடுத்து ஆளத்தொடங்கி விட்டால்தான் இந்நிலையின் மூடத்தனம் நன்கு வெளியாகும். ஒருவனுக்கு நாம் ஏதாவது நன்மையைச் செய்துவிட்டு, அவன் அதை மறவாது பதில் உபகாரம் செய்யவேண்டிய சமயத்தில் செய்யாது விட்டுவிட்டான் என்று வைத்துக்கொள்ளுவோம். உடனே நாம், 'நாம் செய்த உபகாரத்தை அவன் நினைக்கவில்லை பார்த்தாயா! அநியாயமாக நன்றி மறந்து அவன் அதோகதியை அடைந்து கெட்டுப்போகிறானே,' என்று எண்ணி அவன்மேல் கோபித்து த்வேஷம் பாராட்டுவது நமக்கு வழக்கமாகிவிட்டது. இவ்வாறு உண்டாகும் எண்ணத்தை ஆராய்ந்து நோக்கில் 'ஆடு நனைகிறதே என்று கோநாய் அழுத' கதையாக முடியும். ஆடு நனையாது தான் மழைக்கு ஒதுங்கியிருக்கும் இடத்திலேயே இருக்குமாயின் அதை தான் நனையாது பிடித்துத் தின்று ஸுகிக்கலாமே என்பதுதான் இக்தக் கோநாயின் நோக்கம். இதுபோலப் பிறன் நன்றி கொன்று கெட்டுப்போகிறானே என்று உபகாரம் செய்தவன் எண்ணுவது தனக்கு ஸமயத்தில் உபகாரம்செய்து அவன் ஸுகப்படுத்த வில்லையே என்ற வெறும் தன்னயம்கருதுவதால்தான் உண்டாவது. இம்மாதிரி நன்றி மறவேல் என்ற வாக்கியத்தை உபயோகப்படுத்தி நாம் தட்டழியாதிருக்கத்தான் கீதையில் பகவான் 'நன்மை செய்யத்தான் உனக்கு அதிகாரம், அதன் பலன் உன்னால் வருவதல்ல. ஆதலால் பலத்திலிச்சை விட்டு ஸத்கருமங்களைச் செய்து விடுபடு' என்று அர்ச்சுனனுக்குக் கூறியிருக்கிறார். இம்மாதிரியான எண்ணம் வந்து அப்யாஸிகளை வருத்தாதிருப்பதற்கு ஒரு மஹான் பின்வரும் உபாயம் கூறுகிறார். 'நாம் ஒருவன் ஆபத்காலத்தில் அவனுக்கு உபகாரம் செய்துவிட்டோம் என்று வைத்துக்கொள்ளுவோம். உடனே அவன் நம்மிடத்தில் நன்றி யறிவோடு இருக்கவேண்டும்

என்பது நமக்குத் தோன்றலாம். அவன் அவ்வா றில்லாவிட்டால் பாபம் அவனது, அதைப்பற்றி நினைந்து வருந்த நாமா ஆள்? அவ்வாறு வருந்தினல் நமக்கு ஸ்வயநயம் கருதும் தன்மை வருகிறது. மேலும் அவன் நன்றியறிவுடனிருக்க வேண்டும் என்று எண்ணுவதன் நோக்கம் என்ன? நமக்கும் அவனுக்கு வந்தது போன்ற ஆபத்துவர அப்பொழுது அவனும் நாம் செய்ததுபோல நமக்குச் செய்ய வேண்டும் என்பது தானே! அப்படியானல் அவன் நன்றியறிவை நாமறியக்காட்ட, அவன் முதலில் நமக்கு ஒரு ஆபத்து வரவேண்டும், என்று கோரவேண்டும். இவ்வாறு கோருவது நன்றி யறிவாகுமா?' என்று மனனம் செய்தால் உடனே சிரிப்பு வந்து முற்கூறிய எண்ணத்தை மாற்றிவிடும்' என்பர் பெரியோர். ஆகவே இதிலிருந்து உபகாரம் பெறுவோர்கூடச் செய்தவருக்கு அதை எப்படியாவது திருப்பிவிடவேண்டும் என்று எண்ணுவது நன்றியறிவே அல்லவென்றும்; செய்த நன்றியை மறவாதிருந்து தருணம் வாய்க்குங்கால் அதற்குப் பதில் செய்து இந்த அறிவைக்காட்டி மற்றஸமயம்காட்டவேண்டும் என்ற எண்ணம் தோன்றுதிருப்பதே நன்றியறிதல் என்பதும் வெளியாகும். மேலும் வாய்விட்டுக் கூறுவது இன்றித் தகுந்த தருணத்தையும் எதிர்பார்த்திராது ஸமயம் வாய்த்தால் கூடியவரையில் பதில் நன்மைசெய்து காட்டுவதே நன்றிமறவாததற்கு முக்கிய லக்ஷணம்.

ஒருவன் செய்த நன்றியை மறப்பதால் உண்டாகும் கேடு யாது? ஒருவன் நமக்கு நன்மை செய்தால் அவனுக்கு ஒருவிதமாகக் கடமைப்பட்டவனுகிறோம். அதுபற்றியே மிகுந்த மானிகளாக விருப்பவர்கள் என்ன கஷ்டம் வந்தபோதிலும், பிறர் தயவை எதிர்பாராது வருந்துவதே மேல் என்று மதிப்பார்கள். இம்மாதிரி கடமைப் பட்டுவிட்டுப் பின்னர் அதைத் தீர்த்துக்கொள்ளும் ஸமயம் வருங்கால் அதைப் பதில் செய்து தன்னை விடுவித்துக்கொள்ளாது எந்தப் புத்திமான்தான் இருப்பன்? அவ்வாறிருப்பவன் ஸ்வதர்மத்தைக் கவனியாத மூடன். இதுவே அவனை மேலும் உபகாரம் செய்தவனிடம் நன்றுகப்பந்தப் படுத்திவிடும். இவன் மிருகங்களைவிடக் கேடுகெட்டவனுவான். இதோடு நின்றுவிடுவானு இவன். ஒரு ஆபத்ஸமயம் தன் உபகாரிக்கு வந்துவிட, அப்பொழுது அவனுக்கு ஸஹாயம் செய்தால் தனக்கு வரும்படி குறைவதாகவும், செய்யாது அவனைக் கொன்றுவிட்டால் தனக்கு அதிகவரும்படி வருவதாகவும் இருந்தால் இவன் உடனே உபகாரியைக்கொன்று தன் விஷயத்தை அதிகப்படுத்தி விடுவான். இதனல் இவனுக்கு நன்றிகொன்ற பாபமும் வந்து விடும். நன்மைக்குப் பதில் தீமை செய்வதாகிய இந்நன்றி கொன்றவர்களுக்குப் பரிஹாரமே இல்லை. ஆதலால் நன்றி மறத்தல் நன்றி கொல்லும் நிலைக்கு நம்மைக் கொண்டுவந்து விட்டு அனுபவித்தே தீர்க்கவேண்டிய முற்றிய பாபத்திற்கு நம்மை ஆளாக்கிவிடும். ஆதலால் நாம் பிறர் நமக்கு செய்த நன்றியை மறந்து ஒருபொழுதும் அவர்களுக்குத் தீங்கு செய்யும் நிலைக்கு வந்துவிடக்கூடாது.

நன்றிமறந்து அதோகதியை அடைந்ததற்கு மஹாபாரதம், சாந்திபர்வத்தில் நாடீஜங்க உபாக்யானம் என்ற ஒரு கதை யுண்டு. அதை மஹாபாரத வினவிடை 3-ம் பாகம், வின ௪0, பக்கம் 55-56-களைப் பார்க்க.

இந்த விஷயத்தில்

உன்னுட்டாரெல்லா முயிர்காத்துக் கோத்திரத்தில்
எந்நாளும் வாழ்ந்தே யிருப்பதனல்—பன்னுளும்
பூதலத்தின் மேன்மைபெறு புன்னைவன நாதனே
எந்திகழ்ந்து நன்றி மறவேல்.

என்பது ஆத்திசூடி வெண்பா.

# இராஜாங்க முறை

## பிரதமக் கொள்கைகள்

## MORALS AND CIVICS : ELEMENTARY PRINCIPLES

(தொடர்ச்சி)

### பிற உறவினரிடத்துச் செலுத்தவேண்டிய கடமைகள்

தகப்பன், தாய், பாட்டனார், பாட்டியார், முதலியவர்களும், குழந்தைகளும், குடும்பமெனப்படுவார். எல்லாரும் ஒரே வீட்டில் வசிப்பார்கள். அன்றியும் நாம் முன்னமேயே சொன்னபடி குடும்பம் என்பது சிற்றப்பன், அத்தை, அத்தான், பங்காளிகள் யாவரையும் குறிக்கும். உங்கள் தாயார், தகப்பனார், பாட்டனார், பாட்டியார் இவர்களுடைய பெயரே அவர்களுக்கும் இட்டு அழைப்பார்கள்.

ஒருவன் பிள்ளையில்லாமல் இறந்துபோனால் அவனுடைய ஸொத்துக்கள் யாவும் சட்டப்பிரகாரம் அவனுடைய ஸகோதரர் பிள்ளைக்காவது வேறு பங்காளிக்காவதுதான் போய்ச் சேரும். இந்தச் சட்டம் நியாயமானதுதான். ஏனென்றால் ஓர் குடும்பத்துக்கு மூலபுருஷன் ஒருவனேயாதலால்,ஸொத்துக்குப் பாத்தியம்குடும்பத்தார் எல்லாருக்கும் உண்டு. இவ்விதமாக ஸொத்து பாத்தியத்தினாலன்றிப் பிரியத்தாலும், குடும்பத்தார் ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டிருக்கிறார்கள்.

குடும்பத்தில் ஏதாவதொரு விசேஷம் நடக்கும்போது உன் சிற்றப்பன், சிறுதாயார், அவர்கள் குழந்தைகள்முதலியவர்கள் வந்தால் உனக்கு ஸந்தோஷம் உண்டாகாதா ? அவர்களைப் பார்க்க நீ போகும்போது உனக்கு எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது. வருஷப் பிறப்பன்று நீ முதன்முதல் உன் பெற்றோரை வணங்குகிறாய் ; பிறகு, உன் பந்துக்கள் ஸமீபத்தில் இருந்தால் அவர்களையும் வணங்குவாய். அவர்கள் ஸமீபத்தில் இல்லாவிட்டால் நீ அவர்களுக்குக் கடிதம் எழுதுகிறாய். பொங்கல் பண்டிகை யன்றும், தீபாவளியன்றும், இவ்விதமே செய்வாய். ஒருவனுக்கு விவாஹம் ஆய்விட்டால் அவன் மனைவியின் உறவினரெல்லாம் அவனுக்கு உறவினராகிறார்கள். அவ்விதமே அவன் மனைவியும் தன் புருஷன் குடும்பத்தைத் தன் குடும்பம் எனவே மதிக்கிறாள். இதுதான் விவாஹ உறவு என்று சொல்லப்படும்.

ஒரே குடும்பத்திற் பிறந்தவர்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்யவேண்டும். அவர்கள் எல்லாரும் குடும்பத்தின் நல்ல பெயரைக் காப்பாற்றவேண்டும். ஒவ்வொருவனும்தன்முன்னோர்களின் பெருமையையும் கௌரவத்தையும் மிக்க கௌரவமாகப் பாராட்டுகிறான். ஆனால் யாராவது ஒருவன் ஏதாவது தவறுசெய்து குடும்பத்தின் நல்ல பெயரைக் கெடுத்துவிட்டால் குடும்பத்தாரெல்லாரும் வருந்துவார்கள். மேல் நாட்டுதேசங்களில் அதிலும் பிராஞ்சு தேசத்தில் ஒருவன் தன் பெயரை மாற்றிக்கொண்டாலும் மாற்றிக்கொள்வானே யன்றி, தான் திருடன், கொலை செய்தவன் என்ற கெட்டப் பெயரை அடைய அஞ்சுவான்.

ஆதலால் உங்கள் குடும்பத்தின் நல்ல பெயரை மாற்றத்தக்க செய்கை ஒன்றையும் செய்யாதேயுங்கள். நீங்கள் ஸமீபத்தில் இருந்தாலும், வெகு தூரத்தில் இருந்தாலும், உங்கள் குடும்பத்தைப்பற்றி நினைத்துக்கொண்டு, குடும்பத்துக்கு ஓர் கெட்ட பெயரைக் கொண்டுவராமல் பாருங்கள். உங்கள் உறவினரிடம் நீங்கள் பிரியமாக இருப்பது ஸாதாரணமே. ஆனால் உங்கள் அயலாரிடத்தும் அன்பு பூண்டொழுக வேண்டும் ; ஏனென்றால் அவர்கள் நம்முடைய தேசத்தைச் சேர்ந்தவர்கள். இம்மாதிரியே நீங்கள் பொதுவாக எல்லா ஜனங்களிடத்தும் அன்பு மேற்கொண்டு நடந்துகொள்ள வேண்டும். இவ்விதமாகக் குடும்பத்தினிடம் பிறக்கும் விஸ்வாஸமானது தேசத்தாரிடத்தில் பிரியத்தை உண்டுபண்ணி, மேன்மேலும் பரோபகார சிந்தையையும், தான் வருந்தியும் பிறருக்கு உதவி செய்யும் குணத்தையும் விருத்திசெய்கிறது. குடும்பத்தாருக்குள் பிரியமில்லாவிடில் ஜனங்களும் அன்னியோன்யமாக வாழமாட்டார்கள்.

### வேலைக்காரனிடம் நடந்துகொள்ள வேண்டிய விதம்

ஓர் குடும்பத்தில் அந்தக் குடும்பத்தைச்சேர்ந்தவரேயன்றி வேறு சிலரும் இருக்கக்கூடும். அவர்கள் யாரென்றால் குடும்பத்தில் நெடுநாளாக

வேலைக்காரர்களாக இருந்தவர்கள். சிறு குழந்தைகளை அவர்கள் எடுத்து வைத்துக்கொள்வதாலும், எஜமானர் அவர்களிடம் பிரியமாக இருப்பதாலும், அவர்களும் தங்கள் எஜமானரிடத்தும், அவர் குழந்தைகளிடத்தும் மிக்க அன்புபாராட்டி வருவார்கள். சில வீடுகளில் குழந்தைகளை வளர்த்த செவிலித்தாயார் இருப்பாள். அவர்களும் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்தான். குழந்தைகள் அவர்களிடம் பிரியமாகவும் மரியாதையாகவும் இருப்பார்கள். குழந்தைகளின் பெற்றோர்கள் அப்படிப்பட்டவர்களைப் பக்ஷமாகக் கவனித்து அவர்களை ஸுகமாக இருக்கச் செய்வார்கள். எஜமானன் தேக வலிமை குன்றி, கைப்பணமும் இழந்து வருந்துங்காலத்தில் கூட அவனை அதிக பிரியத்தோடும் மரியாதையோடும் கவனித்துவரும் ஊழியர்களைக் கண்டிருக்கிறோம்.

ஏழையாகவும் உதவியை எதிர்பார்த்தவராகவும் இருக்கும் ஊழியர்களிடத்து நாம் கருணையுடையவராக இருக்கவேண்டும். கடவுள் நமக்குச் செல்வம் கொடுத்திருப்பதால் நாம் அதனை வேண்டுபவர்களுக்குக் கொடுப்போம். ஆனால் அப்படிக் கொடுக்கும்போது தயையோடும் இன்சொல்லோடும் கொடுக்க வேண்டுமேயல்லாது கொடுக்கிறோமென்ற கர்வத்துடன் கொடுக்கக்கூடாது. இனிய பார்வையும் பிரியமான சொல்லும் பணத்தைவிட மேலானவை.

### ஆல்பான்ஸோ வென்னும் ஸிஸிலி அரசன்

ஸிஸிலிக்கும் நேபிள்ஸுக்கும் அரசனாக இருந்த ஆல்பான்ஸோ வென்பவன் பிரஜைகளிடத்தில் தண்ணளி நிரம்பியிருந்தான்.

ஸிஸிலித் தீவிலே சண்டையொன்று நடந்தது. அக்காலத்தில் அவன் ஒரு ஆற்றைக் கடக்க முடியாதபடி அவனுடைய பகைவன் அவனைத் தடுத்தான். அதனால் அவன் அந்த ஆற்றின் கரையிலேயே தங்கும்படி நேர்ந்தது. ஒருநாள் முழுவதும் அங்கேநின்ற சேனைக்கு ஆகாரமில்லை. அன்று ஸாயந்திரம் ஒரு போர் வீரன் அரசன் ஆகாரத்துக்காகக் கொஞ்சம் ரொட்டியும், பாற்கட்டியும் கொண்டுவந்து கொடுத்தான். அந்த நிலைமையிலுள்ளவன் எவனுக்கும் அந்த ஆகாரம் அச்சமயத்துக்கு எவ்வளவோ ருசியாக இருக்கும். ஆனால் ஆல்பான்ஸோ அது தனக்கு வேண்டியதில்லை யென்றும், தன்னைப்போலவே தைரியமும் வீரமும் பொருந்திய போர்வீரர்கள் அநேகர் அன்னம் அருந்தாமலிருக்கத்தான் மாத்திரம் உண்டுகளிப்பது தகுதியல்லவெனச் சொன்னான்.

இன்னொரு சமயம் ஆல்பான்ஸோ கம்பானியா மூலமாக யாத்திரை செய்துகொண்டு போனான். அப்போது ஒருவன் ஒரு குதிரையை ஓட்டிக்கொண்டு போனதையும் அந்தக் குதிரையின்கால் சேற்றில் அமிழ்ந்து அது தளர்ந்து நின்றதையும் கண்டான். குதிரையை ஓட்டிக்கொண்டு வந்தவன் அதனைச் சேற்றினின்றும் வெளியேற்ற, எவ்வளவோ முயன்றும் பயன்படவில்லை. வழியே போகும் ஒவ்வொருவரையும் உதவிசெய்யும்படி கேட்டும் பயன்படாமற் போயிற்று. கடைசியில் அவன் ஆல்பான்ஸோ வென்னும் மனிதனை அரசன் என்று உணராமல் தனக்கு உதவி செய்யும்படி வேண்டிக்கொள்ள, அரசன் தன் குதிரையினின்றும் இறங்கி, சேற்றில் கால் அமிழ்ந்தி கிடந்த குதிரையைத் தன் முழுபலத்தால் இழுத்துக் கரைக்குக் கொண்டு வந்து சேர்த்தான். பிறகு அவன் அரசன் என்பதை உணர்ந்த அந்தக் குதிரைக்காரன் தான் தெரியாமற் செய்த பெரும் பிழைக்காகத் தன்னை மன்னிக்கும்படி அவன் பாதங்களில் வீழ்ந்து வேண்டிக்கொண்டான். ஆனால் குதிரைக்காரன் ஒரு தவறும் செய்யவில்லையென்று ஆல்பான்ஸோ அவனுக்கு உறுதிகூறி அவனைத் தைரியப்படுத்தினான். இவ்வளவு நல்ல குணத்துடன் இருந்தமையாலேயே அரசனுடைய பகைவரெல்லாரும் அவனுக்கு நண்பராக ஆய்விட்டார்கள்.

### பிளாஸ்கஸும் அவன் அடிமைகளும்

ஆக்டேவியஸ், லெபிடஸ், அன்டோனியஸ் முதலியோர் ரோம் நகரத்தில் முக்கிய அதிகாரிகளான ஸமயத்தில், முன்னே கான்ஸல் என்ற உத்தியோகத்தைப் பார்த்துவந்த ப்ளாஸ்கஸ் என்பவர் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக வெளியே ஓடினார். அதிகாரிகள் அவனுடைய அடிமைகளைப் பிடித்து அவர்களை எவ்வளவோ சித்திரவதை செய்து அவன் எங்கேயிருக்கிறானென்பதைத் தெரிவிக்கச் சொன்னார்கள். ஆனால் அவர்கள் அவனைக் காட்டிக்

கொடுக்கவில்லை. வேறுவிதமாக அவர்களைத் தொந்திரவு செய்ய எத்தனித்தார்களென்பதை ப்ளாஸ்கஸ் கேள்வியுற்றார். தான் இன்னும் ஒளிந்திருக்க, தனக்கு முக்கிய பிராண சிநேகிதர்கள் போன்ற அடிமைகள் தொந்திரவு பொறுக்கமாட்டாமல் இறந்துபோவார்களென்று அஞ்சி, பிளாஸ்கஸ் தான் எங்கே யிருக்கிறாரென்பதைத் தெரிவித்துத் தன்னைக் கொல்லும்பொருட்டு அனுப்பப்படும் கொலையாளிகள் கையால் தான் மாள நிச்சயித்துவிட்டதாகத் தெரிவித்தார். அடிமைகளைக் காப்பாற்றும் பொருட்டு பிளாஸ்கஸ் தன்னுயிரைக் கொடுக்க நினைத்ததும், அவன் உயிரைக் காப்பாற்றுவதற்காக அடிமைகள் தங்கள் உயிரை லக்ஷ்யம் செய்யாமல் இருந்ததும், எல்லாருக்கும் ஆச்சரியத்தை உண்டுபண்ணிற்று. இதை உத்தேசித்து, பிளாஸ்கஸுக்கு உகந்த அடிமைகளும், அடிமைகளுக்கு உகந்த எஜமானனும் உயிரோடு இருக்கட்டுமென்று, அதிகாரிகள் பிளாஸ்கஸையும் அவன் அடிமைகளையும் விடுதலை செய்துவிட்டார்கள்.

### ஓர் வேலைக்காரனுடைய உண்மையான அபிமானம்

1776-ம் வருஷத்தில் குளிர் மிகுதியாக இருந்த காலத்தில் பொடோட்ஸ்கி பிரபுவும் அவர் மனைவியும் வியன்னா நகரத்திலிருந்து க்ராகோ நகரத்துக்குப் பிரயாணப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் போகும் வழியில் கார்பேதியன் மலையைக் கடந்து செல்லவேண்டியிருந்தது. அம்மலையில் ஓநாய்கள் அதிகமாய் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும். அவை ஸ்வபாவத்திலேயே துஷ்ட மிருகங்கள். அதிலும் குளிர் அதிகமான காலங்களில் அவை வெகு கொடுமையாக இருக்கும். ஆதலால் பொடோட்ஸ்கி பிரபு ஏறிச் சென்ற வண்டியைக் கண்டவுடன் அவை பல சேர்ந்து வண்டியைச் சுற்றி ஓடிவந்து துரத்த ஆரம்பித்தன. ஆஸ்லிக் என்ற ஊருக்கும் ஜேடார் என்ற ஊருக்கும் மத்தியில் இது நடந்தது. ஜேடார் என்ற ஊருக்கு அப்பால் க்ராகோ நகரம் சில காதம் தூரம்தான். பொடோட்ஸ்கி பிரபுவோடு கூடச்சென்ற வேலைக்காரர்கள் இருவர். அவர்களுள் ஒருவனை அவர் தமக்கு முன்னேயனுப்பி வாடகைக்குக் குதிரைகள் பேசி வைக்கும்படி சொன்னார். மற்றொருவனிடம் அவருக்குப் பூரண நம்பிக்கை உண்டு. அவனைத் தம்மோடு நிறுத்திக்கொண்டார்.

அவன் எஜமானனிடத்தில பேரன்பு பூண்ட வேலைக்காரனாதலால், ஓநாய்கள் வண்டிக்கருகில் வந்து மிக்க தொந்தரை செய்ததைப் பார்த்து அவற்றின் கோபம் கொஞ்சம் அடங்க அவற்றிற்கு இரையாகத் தனது குதிரையை அவிழ்த்துவிட்டு விடுவதாக எஜமானரைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். பிரபு அதற்கு ஸம்மதிக்கவே அவன் தன் குதிரையை விட்டுவிட்டு வண்டியின் பின்னே ஏறிக்கொண்டான். ஓநாய்கள் குதிரையை ஆயிரந்துண்டுகளாகக் கடித்து சின்னாபின்னப்படுத்தின.

ஜேடார் நகரத்துக்குச் சீக்கிரம் போய்ச்சேர்ந்துவிடலாமென்ற ஆவல்அவர்களைத் தூண்ட வண்டியை வெகுவேகமாக ஓட்டிக்கொண்டு போனார்கள். ஆனால் குதிரைகள் களைத்துப்போயின. ஓநாய்களோ மாமிஸத்தை யுண்டு இரத்தவெறி கொண்டு முன்னிலும் பதின்மடங்கு அதிவேகமாக ஓடி வந்து வண்டியைச் சூழ்ந்துகொண்டன. இத்தருவாயில் வேலைக்காரன் எஜமானனைப் பார்த்து "இப்போது உயிர்தப்பிப் போக ஒரே மார்க்கம்தான் உள்ளது. என்னுடைய மனைவி மக்களுக்குத் தகப்பன் போல இருந்து தாங்கள் காப்பாற்றுவதாக வாக்களித்தால் நான் ஓநாய்களுக்கு இரையாகி விடுகிறேன். அப்போது நீங்கள் தப்பிப் போகலாம்" என்று சொன்னான். பொடோட்ஸ்கி பிரபுகொஞ்சம்தயங்கினார். ஆனால் ஓநாய்களினின்றும் தப்ப வேறுவழி யில்லாமையாலும், அவை இன்னும் கொஞ்சம் நெருங்கினால் எல்லாரையுமே கொன்று விடுமாகையாலும், அவர் தமது வேலைக்காரனுடைய குடும்பத்தைக் காப்பாற்றுவதாகப் பிரமாணம் செய்துகொடுத்தார். தக்ஷணமே வேலைக்காரன் வண்டியினின்றும் குதித்து, ஓநாய்களை ஸமீபித்து அவற்றிற்கு இரையானான் !

பிரபு ஜேடார் நகரத்துக்கு க்ஷேமமாய்ப் போய்ச் சேர்ந்தார். அவர் சொன்ன வாக்கை மனச்சாட்சிக்கு விரோதமின்றிக் காப்பாற்றி வந்தார்.

C. S. சுந்தரம் ஐயர், பி. எ., எல். டி.

# வஸ்து தத்துவம்

## CHEMISTRY

### தண்ணீர் அல்லது ஜலம்

### WATER

நமக்கு ஸ்வபாவத்தில் ஏராளமாய்க் கிடைக்கிற வஸ்துக்களுள் தண்ணீர் ஒன்று. இது மழையாகப் பெய்து கடல்களிலும், ஆறுகளிலும், ஏரிகளிலும், குளங்களிலும் தங்கியிருக்கின்றது. சுமார் நூறு வருஷங்களுக்கு முன்பு தண்ணீரை ஒரு மூல வஸ்து என்று எண்ணியிருந்தார்கள். பிறகு அநேக பரிசோதனைகளால் இது ஒரு சேர்க்கைப் பொருளென்றும், மூலவஸ்து இல்லையென்றும் தெரியவந்தது. இது பிராண வாயுவும், ஜல வாயுவும் சேர்ந்த ஒரு சேர்க்கைப்பொருள். இத்தண்ணீர், திட திரவ வாயுவாகிய மூன்று ஸ்திதிகள் அல்லது நிலைமைகளில் காணப்படுகிறது. திடபதார்த்தமாகிய பனிக்கட்டி, திரவ பதார்த்தமாகிய ஜலம், வாயுபதார்த்தமாகிய நீராவி, ஆகிய இம்மூன்றும் தண்ணீரின் வெவ்வேறு நிலைமைகளே யொழிய வேறில்லை.

இவைகளுள் திரவபதார்த்தமாகிய ஜலம் சுத்தமாயிருந்தால் அதற்குச் சுவையுமில்லை, வாசனையுமில்லை. இந்த ஜலத்தைக் கொஞ்சமாக எடுத்துப் பார்த்தால் இதற்கு நிறமுமில்லை. ஆனால் இந்த ஜலம் ஏராளமாய் ஓரிடத்தில் தங்கியிருக்கப் பார்த்தால் ஒருவிதநேர்த்தியான பச்சையமைந்த நீலநிறமாகக் காணப்படும். நீரில் தூசி அதிகமாகத் தங்கியிருந்தாலும் அது நீலநிறமாகக் காணப்படும். சுத்தஜலம் காற்று அல்லது ஸஹஜ வாயுவைக் காட்டிலும் சுமார் 800 மடங்கு கனமுள்ளது. இதை பாரத்தினால் அமுக்க முடியாது. அதாவது, பாரத்தினால், ஸஹஜ வாயுபோல், இது அளவில் சுருங்காது. ஆனால் வாயுபதார்த்தங்களைப்போல் அவ்வளவு சுருங்காவிட்டாலும், மிகுந்த பாரத்தினால் மிகச்சிறிது சுருங்கும். தண்ணீர், தன் மூலமாய் உஷ்ணத்தை அழைத்துப் பரவச்செய்வதில் மிக மெதுவான வஸ்து. அதாவது தண்ணீர் தன் மூலமாய் உஷ்ணத்தை நடத்திச் செலுத்த வெகு நேரம் எடுத்துக்கொள்ளும்.

உதாரணமாக ஒரு கண்ணாடிக்குழல் பாத்திரத்தில் கொஞ்சம் ஜலத்தை யெடுத்துக்கொண்டு, ஒரு சாராய விளக்கினால் பாத்திரத்தின் வாய்ப் பக்கத்திலுள்ள ஜலத்தைச் சுடவைக்கவும். சற்று நேரத்திற்கெல்லாம் பாத்திரத்தின் வாய்ப் பக்கத்திலுள்ள ஜலம் கொதிக்க ஆரம்பிக்கும். இப்பொழுது பாத்திரத்தின் அடியைத் தொட்டுப்பார்த்தால், அங்கு உஷ்ணம் அதிகமிருக்காது. கொஞ்சம் சூடாயிருக்கும். பாத்திரத்தின் வாய்ப்பக்கத்திலுள்ள ஜலத்தைத் தொடவே முடியாது. அதாவது, இப்பொழுது பாத்திரத்தின் அடிப்பக்கத்திலுள்ள ஜலத்திற்குச் சூடு மேலிருந்து தண்ணீரின் வழியாய்ப் பரவ வேண்டுமல்லவா? இப்படித் தன்வழியாய் உஷ்ணத்தை நடத்திவர தண்ணீர் நேரம் எடுத்துக்கொள்ளுகிறது. இப்பாத்திரத்தின் அடிபாகத்தின் நீரில் ஒரு சிறு பனிக்கட்டி தங்கும்படி இக்குழல் பாத்திரத்தைச் சற்று சாய்த்துப் பிடித்து, அதில் ஒரு பனிக்கட்டியைப் போட்டு, வாய்ப்பக்கத்திலுள்ள நீரைச் சுடவைத்தால், அந்தப்பாகத்தின் நீர்மாத்திரம் கொதிக்க அடிப்பாகத்திலுள்ள பனிக்கட்டிக் கரையாமல் கூடவிருக்கும். ஆனால் தண்ணீர் தன்மூலமாய்மின்சாரத்தைச் சீக்கிரம் நடத்திச் செலுத்துகின்றது.

நீராவி:—சாதாரணமாய், தண்ணீரைக் காய்ச்சினால், அது உஷ்ணத்தினால் ஆவியாக மாறுகின்றது. உண்மையில் நீராவிக்கு நிறமில்லை. ஸஹஜ வாயுவை எப்படி நாம் கண்ணால் பார்க்க முடியாதோ அதுபோலவே, நீராவியும் நமது கண்ணுக்குப் புலப்படாத வஸ்து. ஆனால் ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் ஜலத்தை வைத்துக் காய்ச்சினால், பாத்திரத்தின் வாயினின்று ஒரு வித புகைபோன்ற வஸ்து வெளிப்படுகிறதைப் பார்க்கிறோம். அதுதான் நீராவியென்று சொல்லுவது வழக்கம். அது நீராவியல்ல. பாத்திரத்தில் நீர்மட்டத்திற்குமேல் நீராவியிருக்கிறது. அது நமதுகண்ணுக்குத்தெரியாது. அதற்குநிறமில்லை. நீராவி, பாத்திரத்திற்கு வெளியே வந்தவுடன் ஆகாயத்தின் குளிர்ச்சியால் குளிர்ந்து சிறு நீர்த்துளிகளாலாகிய மேகம்போன்ற வஸ்துவாகின்றது. அதுதான் நமது கண்ணுக்குப் புலப்படும் வெண்மையான புகைபோன்ற வஸ்து. நீராவிக்கு மற்ற வாயுக்களின் குணங்கள் உண்டு. பாரத்தினால் இதன் அளவு சுருங்கும். உஷ்ணத்தினால் அளவு அதிகரிக்கும், தண்ணீரை 100-டிகிரிக்கு (100°c)ச் சுட வைத்தால் அது ஆவியாக மாறும். அதிகச் சூடு இல்லாவிட்டாலும் நீர்

மெதுவாகக் கொஞ்சம் கொஞ்சமாக ஆவியாக மாறுகின்றது. இதனுல்தான் பாத்திரங்களில் வைத்த ஜலமும், குளங்கள் ஏரிகள் முதலியவைகளிலுள்ள ஜலமும் வரவரக் குறைவுபடுகின்றது. சூரிய வெப்பத்தினல் கடல்கள், ஏரிகள், ஆறுகள், குளங்கள், முதலியவைகளிலுள்ள ஜலம் மெதுவாக நீராவியாக மாறி ஆகாயத்தில் பரவ, இந்நீராவி குளிர்ந்து சிறு நீர்த்துளிகளாலாகிய மேகங்களாகத் தங்குகின்றது. இம்மேகங்களின் மேல் குளிர்ந்த காற்று வீசினல், இவை ம்மழையாகப் பூமியில் பெய்து மறுபடி கடல்கள், குளங்கள், ஆறுகள் முதலியவைகளை நீரால் நிரப்புகின்றன.

**பனிக்கட்டி.**—இக்காலத்தில் பனிக்கட்டியைப் பார்த்திராதவர்கள் மிகச் சிலர். குளிர் தேசங்களில் பனிக்கட்டி ஏராளமாய் சுபாவத்தில் கிடைக்கும். அதாவது அத்தேசங்களில் கொடுங் குளிர்காலத்தில் ஆறுகள், ஏரிகள், முதலியவைகளிலுள்ள நீர் இறுகிக் கடின பதார்த்தமாகிய பனிக்கட்டி யாகிறது. ஆனல் நமது தேசத்தில் நீரைப் பனிக்கட்டி யாக்குவதற்கு வேண்டிய குளிர் ஒருபொழுதுமில்லை. ஆகையால் நமக்குப்பனிக்கட்டி சுபாவத்தில் கிடைப்பதில்லை. நாமே செய்துகொள்ள வேண்டியதாயிருக்கிறது. இத்தேசத்தின் பெரிய பட்டணங்களில் பனிச்கட்டி செய்யப்படும் யந்திரசாலைகளிருக்கின்றன. சாதாரணமாக O டிகிரியில் (O°c) நீர் பனிக்கட்டியாக மாறுகிறது. அதாவது தண்ணீரை மிகக் குளிரான பதார்த்தங்களால் O டிகிரிக்குக் குளிரவைத்தால், அது மிக பளபளப்பான ஸ்படிகம்போன்ற கடின பனிக்கட்டியாக மாறுகிறது. மறுபடி இப்பனிக்கட்டி உஷ்ணத்தினல் உருகி நீராக மாறுகின்றது. ஆனல் நீரின் மேலுள்ள பாரத்தை வித்தியாசப்படுத்திக்கொண்டு, நீரை O டிகிரிக்கு மேலேயாவது கீழேயாவது பனிக்கட்டியாகும்படி செய்யக்கூடும். இப்பனிக்கட்டி நீரைக்காட்டிலும் கடின பதார்த்தமேயானலும், அதைவிட கனபதார்த்தமன்று. ஒரு பனிக்கட்டித் துண்டைத் தண்ணீரில் போட்டால், அது நீரின்மேல் மிதக்கும்.

அதாவது நீர் பனிக்கட்டியாகும்போது அளவில் அதிகரிக்கின்றது. 10 கன அங்குலம் அளவுள்ள நீர் பனிக்கட்டி யாகும்போது சுமார் 11 கன அங்குலம் (10·908 C. in.) அளவுள்ளதாகிறது. ஆகையால் பனிக்கட்டி நீரைவிட இலேசாயிருக்கிறது. இப்பனிக்கட்டியைச் சிற்சில வியாதிகளின் சிகிச்சைக்கும், இன்னும் அநேக காரியங்களுக்கும் மனிதர்கள்உபயோகிக்கிறார்கள்.

ஆனல் தண்ணீரை மனிதர்கள் குடிப்பதற்கும், சமையல் செய்வதற்கும், ஸ்நானம் முதலிய செய்வதற்கும், இன்னும் மற்ற வஸ்துக்களைச் சுத்தம் செய்வதற்கும் உபயோகப் படுத்துகிறார்கள். பட்டணங்களில் தெருவுகளில் தெளிப்பதற்கும், சாக்கடை முதலியவைகளைச் சுத்தம் செய்வதற்கும் ஜலம் வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு மனிதன்தேகத்தின் நிறையில் சுமார் மூன்றில் இரண்டு பங்கு நீராயிருக்கின்றது. அதில் ஒவ்வொரு தினமும் கொஞ்சம் வியர்வையாகவும், மூத்திரமாகவும், வெளிமூச்சு விடும்போது நீராவியாகவும் வெளியே போகின்றது. இந்நீருக்கு ஈடு செய்ய நாம் தண்ணீர் சாப்பிடுவது அவசியமே. தினம் ஒன்றுக்கு ஒரு மனிதனுக்குச் சமையலுக்கும், குடிப்பதற்கும், ஸ்நானம் முதலியவைகளுக்கும் சுமார் 25 காலன் ஜலம் வேண்டும். இந்தக் கணக்கு அந்தந்த இடத்திற்குத் தகுந்தாற்போல் வித்தியாசப்படும். இப்படி நமக்கு உபயோகப்படும் நீரின் வகைகளைப் பற்றிப் பிறகு பார்ப்போம்.

எம். ஆர் சுப்பிரமணிய அய்யர், பி. ஏ., எல். டி.



# தேவாரம்—சிற்றாராய்ச்சி

## SAIVITE HYMNS—A CRITICAL NOTE

தேவாரம் பாடிய திருவாளர் மூவருள் ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் என்னும் இருவர் தேவாரத்தினின்றும் அறியக்கூடிய அரிய விஷயங்களை முன்னரே எழுதியுள்ளேன். இப்போது ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திப்பியப் பாடல்களினின்றும் தெளியக்கிடக்கின்ற விஷயங்களை ஈண்டெழுதுகின்றேன்:—

### I. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரித்திர சம்பந்தமான விஷயங்கள் :

(1) திருவெண்ணெ நல்லூர் என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமான் மண்ணுலகத்தவர் யாருங் காணப் பிராமண வேடம் பூண்டு அற்புதமான ஓலை ஒன்றைக் காட்டி "இவன் எனது அடிமை" யெனச் சொல்லி வலிய யாட்கொண்டு வாதில் வென்றப் பின்னர் அத்தலத்துத் திருக்கோயிலில் மறைந்தன ரென்பது—

"வெண்ணெநல்லூரில், அற்புதப்பழ ஆவணங்காட்டி
அடியனு வென்னை யாளதுகொண்ட நற்பதத்தை"
"அன்று வந்தெனை யகலிடத்தவர்முன் ஆளதாக
வென்றுவணங் காட்டி
நின்று வெண்ணெநல் லூர்மிசையொளித்த
நித்தில திரட் டொத்தினை."
"ஒட்டியாட் கொண்டுபோ யொளித்திட்ட வுச்சிப்
போதனை"
"வாயாடி மாமறை யோதியோர் வேதிய னாகிவந்து
** வெண்ணெநல்லூரில் வைத்தென்னை யாளுங்கொ
[ண்ட."
"நம்பனே யன்று வெண்ணெநல்லூரில் நாயினேன்
[றன்னையாட் கொண்ட சம்புவே."
"மண்ணின்மேன் மயங்கிக் கிடப்பேனை வலியவந்
தெனையாண்டு கொண்டானே."

(2) அங்ஙனம் சிவபிரான் தம்மையாட்கொள்ள வந்தபோது சபையில் தாம் வன்மைகள் பேசிய காரணத்தால் 'வன்றொண்டன்' என்னும் பெயர் தமக்குப் போந்த தென்பது.—

"தன்மையினு லடியேனைத் தாமாட்கொண்ட நாட்
[சபைமுன்
வன்மைகள் பேசிட வன்றொண்ட னென்பதோர்
[வாழ்வு தந்தார்."

(3) குண்டையூர் என்னும் ஊரில் தாம் பெற்ற நெல்லை அவ்வூரினின்றும் எடுப்பிக்க ஆள்வேண்டித் திருக்கோளிலி நாதர்மீது பதிகம் பாடினரென்பது.—

'குண்டையூர்ச் சில நெல்லுப்பெற்றேன்.'
'திருக்கோளிலி மேயானை ** நெல்லிட
ஆட்கள்வேண்டி நினைந்தேத்தியபத்து'

(4) விருத்தாசலத்துக்குப் போகும்போது சுவாமி பிராமண வடிவமாய் இவர்முன் தோன்றி "இந்தக் கூடலை யாற்றூர் வழியாகத்தான் விருத்தாசலத்துக்குப் போகவேண்டியது" என்று சொல்லி அழைத்துச் சென்று மறைந்தன ரென்பது—

'கூடலையாற்றூரில்
அந்தணன் வழிபோந்த அதிசயமறியேனே.'

(5) விருத்தாசலத்திற் சிவபெருமான் அருளிய செம்பொன்னை (மணிமுத்த நதியிலிட்டுப்) பின்னர்த் திருவாரூரில் (கமலாலயம் என்னும் திருக்குளத்தில்) 'பரவை வாடுகின்றாள்' எனப் பாடித் தேடி அப்பொன்னை எடுத்தன ரென்பது—

'எனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திகழும்முது குன்றமர்ந்தீர்,
வம்பமருங் குழலாள் பரவையிவள் வாடுகின்றாள்,
எம்பெருமா னருளீர் அடியே னிட்டளங் கெடவே'

(6) குருகாவூர் என்னுந் தலத்தில் கட்டமுதுந் தண்ணீருந் தந்து சுவாமி இவர் பசியைத் தீர்த்தன ரென்பது.

"பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்'

(7) சங்கிலிநாச்சியாரை இறைவனருளால் திருமணஞ்செய்தன ரென்பது—

"சங்கிலியோ டெனைப் புணர்த்த தத்துவனை"

(8) திருவொற்றியூரில், மகிழமரத்தின்கீழ்ச் சங்கிலி நாச்சியாருக்குப் பிரமாணஞ்செய்து தவறிய காரணத்தால் இருகண்ணுங் குருடாய், உடற்பிணியும் கொண்டவராய், "என்கண்ணுக்கு ஒரு மருந்து சொல்லாயோ" என இரந்து சுவாமியை வேண்டின ரென்பது.—

"போய் மகிழ்க்கீ ழிருவென்று
சொன்ன வெனைக் காணமே சூளறவு மகிழ்க்கீழே
யென்ன வல்ல பெருமானே."
"பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன்
பிழைத்தக்காற்
பழியதனைப் பாராதே படலமென்கண்
மறைப்பித்தாய்."
"அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்
அழையேற் போகுருடா எனத்தரியேன்

முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்
முக்கணா முறையோ மறையோதீ
உகைக்குந் தண்கட லோதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊருறைவானே."

"ஒழுக்கவென் கணுக் கொரு மருந்துரையாய்
ஒற்றியூரெனும் ஊருறைவானே."

(9) கண்ணிழந்ததும் இவர் கோலைப் பிடித்துக் கொள்ள அக்கோலை ஒருவன் பிடித்துக்கொண்டு வழி காட்டிச் செல்ல அவன்பின் வழியெலாஞ் சென்று இளைத்தன ரென்பது.—

கழித்தலைப் பட்ட நாயதுபோல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்துநீ யருளாயின செய்யாய்
ஒற்றியூரெனும் ஊருறைவானே."

(10) இங்ஙனம் திருவொற்றியூரினின்றும் நீங்கிதிரு முல்லைவாயில் முதலிய தலங்களிற் றங்குறையைச் செப்பித் திருவெண்பாக்கம் என்னும் தலத்தை யடைந்து "இறைவனே! இங்கிருக்கின்றீரோ!" என வினவ சுவாமி "உளோம், போகீர்" என விடை யருளி ஊன்றுகோ லொன்று உதவின ரென்பது.—

"கண்மணியை மறைப்பித்தா யிங்கிருந்தா யோவென் [ன
ஒண்ணுதலி பெருமானார் உளோம் போகீர் என்றா [னே."

"ஊன்றுவதோர் கோலருளி உளோம் போகீர் என் [றானே."

(11) ஊன்றுகோலை உதவியாக் கொண்டு சென்ற நாயனார் காஞ்சிமாநகரத்தில் ஒரு கண்ணின் பார்வை யைப்பெற்றன ரென்பது.—

"கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடியேன் பெற்ற வாறே."

(12) காஞ்சிபுரத்தினின்றும் நீங்கி ஒருகண் பார் வையோடும் உடற்பிணியோடும் திருநெல்வாயில், திரு வாவடுதுறை என்னுந் தலங்கள் வழியாய்ச் சென்றன ரென்பது.—

"எற்றே யொருகண்ணிலன் நின்னை யல்லால்
நெல்வாயி லரத்துறை நின்மலனே."

"மற்றே லொரு பற்றில னெம்பெருமான்."

"கண்ணிலேனுடம் பில்லடு நோயாற்
கருத்தழிந் துனக்கே பொறையானேன்.
தெண்ணிலா வெறிக்குஞ் சடையானே
தேவனே திருவாவடு துறையுள்
அண்ணலே யெனையஞ்ச லென்றருளா
யாரெனக்குற வமரர்களேறே."

(13) பின்னர் அவ்வுடற்பிணி திருத்துருத்தி என்னும் தலத்தில் வீற்றிருக்கும் வேதேசுரர் திருவருளால் நீங்கிற் றென்பது—

"துருத்தியார் வேள்விக் குடியுளார் அடிகளைச்
செடியனேன் நாயேன்
என்னை நான் மறக்குமா றெம்பெருமானை
என்னுடம்படும் பிணியிடர் கெடுத்தானை."

(14) ஏனைய கண்ணின் பார்வையையும் பெற வேண்டி திருவாரூர் வன்மீகநாதர் சந்நிதானத்தில் நின்று "இறைவனே! ஏனை எனது கண்ணைக் கொண்டீர். அதனால் நீரேபழிபட்டீர் இவ்வொரு கண் ணையுந்தாராதொழிந்தால் நீரேசுகமாய் வாழ்வீராகவும்! உம்மை மறவாது பாடிப்பணியும் உமதடியவனாகிய யான் குன்றின்முட்டிக்குழியில் விழுந்தால் நீரே வாழ் வீராகவும்" என முறையிட்டு ஏனைய கண்ணின் பார் வையும் பெற்றன ரென்பது—

"எற்றுக் கடிகேள் எண்கண் கொண்டீர்
நீரே பழிபட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால்
வாழ்ந்து போதீரே."

"என்று முட்டாப் பாடு மடியார் தங்கண் காணாது
குன்றின் முட்டிக் குழியில் விழுந்தால் வாழ்ந்து போ
தீரே."

(15) சுவாமி தம்பொருட்டுத் தூது சென்றன ரென் பது—

"அடியேற் கெளிவந்த தூதனை."

(16) சுவாமி தமக்குத் தோழராயிருந்தன ரென் பது—

"என்னுடைய தோழனுமாய்"

"தூதனை யென்றனையாள் தோழனை."

(17) அவிநாசி என்னுந் தலத்துக்குச் சமீபத்தி லுள்ள திருப்புக்கொளியூர் ஏரியில் இறங்கிக் குளித்த பாலனை முதலையுண்ண அப்பாலனை வரவழைக்க வே ண்டி "முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனை யே" எனச் சிவபெருமானைத் துதித்துப் பணிந்தன ரென்பது.—

"பொழிலாருஞ் சோலைப் புக்கொளியூரிற் குளத்திடை
யிழியாக் குளித்த மாணி யெனைக்கிறி செய்ததே."

"புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவிநாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு கால
னையே."

(18) ஈற்றில் மனைவாழ்க்கையை வெறுத்தனரென்பது—

"வெறுத்தேன் மனைவாழ்க்கையை
விட்டொழிந்தேன்."

(19) பிறவா வரம் பெற்றனரென்பது—

"பிழைத்தெருநாலினிப் போய்ப் பிறவாமைப்
பெருமைபெற்றேன் பெற்றதார் பெறுகிற்பார்?"

(20) சிவபிரான்மீது அசைதலில்லாப் பத்தி பூண்டவரென்பதும், வேறொரு தெய்வத்தை மறந்தும் நினையாதவரென்பதும்.

"நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே."

"வழுக்கிவீழினுந் திருப்பெயரல்லால்
மற்றுநானறியேன் மறு மாற்றம்."

"விரும்பேனுன்னையல்லா லொரு
தெய்வமென் மனத்தால்."

(21) இவ்வுலகை விட்டுப் பிரிந்தபோது வெள்ளை யானையின்மீது தமது தேகத்தைச் சுவாமி காட்டுவித்தன ரென்பதும் தாம் கைலைக்குச் செல்லும் விஷயத்தை திருவஞ்சைக்களத்திலிருந்த சேரமான் பெருமாளுயனர் அறிய வேண்டியது எனப்பாடினரென்பதும்.

"விண்ணுலகத்தவர்கள் விரும்ப வெள்ளையானையின் மேல்
என்னுடல் காட்டுவித்தான் நொடித்தான் மலை யுத்தமனே"

"ஏழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
ஆழிகட லரையர் வஞ்சையப்பர்க் கறிவிப்பதே."

## II. சுவாமிகள் தேவாரத்தினின்றும் அறியக் கூடிய வேறு விஷயங்கள்

(1) சீகாழியில் திருஞான சம்பந்தருக்குச் சிவபெருமான் ஞானம் அருளின ரென்பது—

"ஊனமில் காழிதன்னு ளுயர் ஞானசம்பந்தர்க்கன்று
ஞானமருள் புரிந்தானண்ணுமூர் நனி பள்ளியதே."

(2) திருவீழிமிழலையில் (அப்பர் சம்பந்தர் இவர்களுடைய) தமிழ் கேட்கும் இச்சையால் காசு தினந்தோறும் அருளினது—

"இருந்துநீர் தமிழோடிசை கேட்கு மிச்சையாற்
காசு நித்த நல்கினீர்
அருந்தண் வீழி கொண்டீர் அடியேற்கு மருளுதிரே."

(3) திருக்கோலக்கா என்னும் தலத்தில் திருஞானசம்பந்தருக்குச் சிவபெருமான் தாளம் தந்தன ரென்பது.

"நாளு மின்னிசையாற் றமிழ் பரப்பு
ஞான சம்பந்தனுக் குலகவர் முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மையாளனை யென்மனக் கருத்தை."

(4) திருநாவுக்கரசு சுவாமிகள் பாடிய பதிகத் தொகை இவ்வள வென்பது.—

"இணைகொ ளேழெழு நூறிரும் பனுவல்
ஈன்றவன் திருநாவினுக் கரையன்."

## III. சுவாமிகள் தேவாரத்திற் சொல்லப்பட்டுள்ள நாயன்மார், அரசர், முனிவர் முதலியோர்.

புகழ்த்துணை நாயனர், வனப்பகை, சிங்கடி, தண்டி, சடைய நாயனர், இசைஞானியார், நரசிங்க முனையரையன், பரவையார், சங்கிலியார், ஏயர்கோன் கலிக்காம நாயனர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மூர்க்க நாயனர், சாக்கிய நாயனர், கண்ணப்பர், கணம்புல்லர், கோச்செங்கணன், பரசுராமன், பகீரதன், மார்க்கண்டன், வீமன், விசயன், பாரி :

"தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" எனத்துவக்கும் பதிகத்தில் எல்லா நாயன்மார்களுடைய திருநாமங்களும் ஒருங்கே சொல்லப்பட்டுள்ளன.

## IV. சுவாமிகள் தேவாரத்திற் சொல்லப்பட்டுள்ள பழமொழி போன்ற வாக்கியங்களும் ஞாபகத்தில் வைக்கவேண்டிய வாக்கியங்களும்,

நல்வாயில் செய்தார் நடந்தாருடுத்தார் (1)
நரைத்தா ரிறந்தா ரென்று நானிலத்திற்
சொல்லாய்க் கழிகின்ற தறிந்தடியேன்
உய்யப் போவதோர் சூழல் சொல்லே.

ஓடு புனற்கரையாம் இளமை. (2)

உறங்கி விழித்தா லொக்குமிப் பிறவி. (3)

நெல் வாலூன்ற வருந்தும் உடம்பு. (4)

மணக்கோலமதே பிணக்கோலமதாம் பிறவி யிதுதான். (5)

அகரமுதலி னெழுத்தாகி நின்றாய். (6)

பலவின்கனியீ. (7)

இன்ப முண்டேற் றுன்பமுண்டு ஏழைமனை வாழ்க்கை. (8)

கொடுக்கிலாதானைப் பாரியே யென்று
கூறினுங் கொடுப்பாரிலை. (9)

பஞ்சதுட்டனைச் சாதுவே யென்று
பாடினுங் கொடுப்பாரிலை. (10)

குலமிலாதானைக் குலவனே யென்று
கூறினுங் கொடுப்பாரிலை. (11)

தாயன்றே புலவோர்க் கெலாமென்று
சுற்றினுங் கொடுப்பாரில்லை. (12)
முற்றிலாதானை முற்றனே யென்று
மொழியினுங் கொடுப்பாரில்லை. (13)
கையுலாவிய வேலனே யென்று
கழறினுங் கொடுப்பாரில்லை. (14)
எள் விழுந்திடம். (15)
முன்னைச் செய்வினை யிம்மையில் வந்துமூடும். (16)
காலையெழுந்து தொழுவார் தங்கள் (17)
கவலை களைவாய் கறைக்கண்டா (18)
பஞ்சியிடப் புட்டில் கீறுமோ? (19)
நஞ்சணி கண்ட நான் மறைக்கிலும், சொல்லு
நா நமச்சிவாயவே. (20)

பொற்குன்றஞ் சோநததோர் காக்கை பொன்
னும். (21)

மகத்திற் புக்கதோர் சனி. (22)
இரும்புண்ட நீர். (23)
கழுதை குங்குமந்தான் சுமந்தெய்த்தால். (24)
அரைத்த மஞ்சள தாவகை யறிந்தேன் (25)
புன்னுனைப்பனி வெங்கதிர் கண்டாற் போலும்
வாழ்க்கை. (26)

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம் (27)
கன்று முட்டி யுண்ணச் சுறந்த காலியவை
போல. (28)
குன்றின் முட்டிக் குழியில் விழுந்தால். (29)
பேயோ டேனும் பிறிவொன்றின்னா தென்பர். (30)

வ. சு. செங்கல்வராயன், எம். ஏ.

வைரக்கல் செய்யு முறை.—பெர்லின் நகரத்திலிருக்கும் ஒரு தத்துவ சாஸ்திரி நிலக்கரி வாயுவினின்றும் வைரஞ் செய்திருக்கின்றாராம். இது ஷை வாயுவினுடன் பாதரசங் கலந்து செய்யப்படுகின்றது. பாதரசக்கலப்பினால் ஷை வாயு கெட்டிப்பட்டு வைரமாகின்றதாம். இவ்வாறு கெட்டிப்பட்ட கரியமில வாயு வெகு நேர்த்தியாயிருக்கின்றதாம். இதனுடன் ஒரு துண்டு வைரத்தைச் சேர்க்க அதனைச் சுற்றிலும் வைரக் கற்களுண்டாகின்றனவாம்.



# உபநிஷத் ரத்தினமாலை

## THE SUMMARY OF THE MINOR UPANISHADS

### 28. பைங்கலோபநிஷத் (59)

பைங்கலர் யாக்ஞவல்க்யரை அடுத்து 12-வருஷம் சிச்ருஷை செய்து பரமரஹஸ்யமான மோக்ஷத்தைச் சொல்லும் என்று கேட்க, முதலில் ஸ்ருஷ்டிக்கிரமம் சொல்லி எல்லாம் பிரஹ்மத்தைத் தவிர அணுவேனு மில்லை என்று ஸ்தாபிக்கிறார்.

பிரபஞ்சமெல்லாம் முதலில் ஸத்தாகவே இருந்தது. இந்த ஸத்திற்கு ஸத்ய ஞானனந்த அத்வய ப்ரஹ்மம் என்று பெயர். இதில் கானல்நீர், கிளிஞ்சில் வெள்ளி, கட்டையில் புருஷன், ஸ்படிகத்தில் வர்ணம் முதலியவைபோல ஸத்வ ரஜ தமோ குண ஏற்றத் தாழ்வின்றிக் கலந்த அனிர்வாச்யமான மூலப்ரகிருதி யிருந்தது. இதில் ப்ரதிபிம்பித்ததற்கு ஸாக்ஷி என்று பெயர். மூலப்ரகிருதிமாறி ஸத்வ அதிகமான அவ்யக்தம் அதாவது ஆவரணசக்தி யாயிற்று. இதில் காணப்படுவதற்கு ஈச்வரன் என்று பெயர். இந்த ஈசன்தான் மாயையை அடக்கியாளும் ஸர்வக்ஞன் ஸ்ருஷ்டியாதிகளுக்கு ஆதிகர்த்தா : ப்ரபஞ்சத்திற்கு விரை போன்றவன்.

சுருட்டியிருக்கும் படத்தை விரிப்பதுபோல ஜீவர்கள் கர்மங்களுக்கு ஏற்ப தம்மிடம் அடங்கியிருக்கும் ப்ரபஞ்சத்தை இவர் தோற்றும்படி செய்கிறார். மறுபடி சுருட்டுவதுபோல அவர்கள் கர்மக்ஷயத்திற்கேற்ப இதை மறைத்தும் விடுகிறார். இவருக்கு அடங்கியிருக்கும் ஆவரண சக்தியிலிருந்து ரஜோகுண அதிகமான மகத் என்ற பெயருடைய விக்ஷேப சக்தி பிறந்தது. இதில்தோற்றுவதே ஹிரண்ய கர்ப்பர் என்ற சைதன்யம். இவருக்கு ஸ்தூலஸூக்ஷ்ம தேகங்கள் உண்டு. இந்தச் சக்தியிலிருந்து தாமஸ அதிகமான அஹங்காரம் உண்டாயிற்று. இதில் தோற்றுவதே விராட்சைதந்யம். இது ஸ்தூல தேஹமுடையவராய் எல்லா ஸ்தூலத்தை ரக்ஷிக்கும் விஷ்ணுவாகிறது. இதிலிருந்து முறையே முன்னதிலிருந்து பின்னதாக உண்டான

ஆகாசம், வாயு, அக்னி, அப்பு, ப்ருதிவி, இவைகள்தான் பூத ஸூக்ஷ்மங்கள். இவைகளை ஈசுவரன் ஸ்தூலமாக்க எண்ணி பஞ்சீகரணம் செய்து கலந்தார். [ஒவ்வொரு பூதத்தையும்முதலில் இவ்விரண்டு ஸமபாகமாகப்பிரிப்பது, ஒவ்வொன்றின் ஒருபாதியை நான்குஸமபாகமாகப் பிரித்து விடுவது. ஆக இப்பொழுது ஒவ்வொரு பூத தன்மாத்திரையையும் ஒரு பாதியும் நான்கு அரைக் கால்பாகமும் ஆக ஐந்துபாகயாகப் பிரித்தாகிவிட்டது! ஒரு பூதத்தின் (ஆகாயத்தின்) பாதியை வேறாக எடுத்து மற்றை நான்கு பூதங்கள் ஒவ்வொன்றிலிருந்து ஒவ்வொரு அரைக்கால் பாகத்தை எடுத்து இந்தப் பாதியுடன் சேர்த்து ஐந்துபாகமுடைய பஞ்ச பூதக்கலப்பை உண்டாக்கி பாதிபாகத்தின் பெயரை இந்தக் கலப்பிற்குக் கொடுப்பது (ஸ்தூல ஆகாயமாகும்) இம்மாதிரி ஐந்தாகப்பிரித்து ஐந்துபாகமாக வரும்படி கலப்பதற்குப் பஞ்சீகரணம் என்று பெயர்.] இந்தக் கலப்பு பூதங்களால் ஸ்தூல ப்ரபஞ்ச முழுவதும் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. பஞ்சபூதங்களுடைய ராஜஸபாகத்தை நான்காகப் பிரித்து மூன்று பாகத்தால் பஞ்சவாயுக்களையும், நான்காவதால் கர்மேந்திரியங்களையும் உண்டாக்கினர் ஈசன். அதன் ஸத்வாம்சத்தை நான்காகப் பிரித்து மூன்றால் ஸம்சயம், நிச்சயம், விகல்பம், நித்திரை, நினைப்பு என்ற விருத்திகளை உடைய அந்தஃகரணத்தையும், நான்காவதால் ஞானேந்திரியங்களையும் உண்டாக்கினர். ஸத்வாம்சகூட்டத்தினாலே இந்திரிய அபிமானி தேவதைகளையும் ஸ்ருஷ்டித்தார். ஈசன் ஆக்ஞையாலே விராட் ஸகல ஸ்தூலத்தையும் ஸ்ருஷ்டித்தார், ஹிரண்யகர்ப்பர் ஸூக்ஷ்மத்தை ரக்ஷித்தார். இவ்வாறு எல்லாவற்றிலும் உள்ள ஸ்ருஷ்டி விசித்திரங்கள் எல்லாம் ஈசனையன்றித் தொழிற்படா. அவனன்றி அணுவும் அசையாது. இந்தப் பொருள்களுக்கு அறிவைஉண்டாக்கஎண்ணி ஈசன் ஒவ்வொன்றின்தலையைப்பிளந்து உள்ளே புகுந்துவிட எல்லாம் அறிவுள்ளதுபோலத் தொழிற்படத் தொடங்கிவிட்டன. இவ்வாறு செய்ததும் மாயாலேசத்தால் மோஹத்திற்குள்ளாகி ஜீவத்வத்தை அடைந்தான். உடனே, 'சரீரம் நான், நான் செய்பவன் அனுபவிப்பவன்' என்ற நிலையோடு மூன்று அவஸ்தை மூர்ச்சை மரணம் முதலியவைகளுக்கு ஆளாகி ஜனன மரண சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டு விட்டான்.

'ஸகலப்ரபஞ்சங்களுக்கும் ஸ்ருஷ்டியாதி கர்த்தாவாகிய ஈசன் ஜீவனாவது எப்படி?' என்று பைங்கலர் கேட்கயாக்ஞவல்க்யர் சொல்லுகிறார். முன்கூறியபஞ்சீகிருத பூதங்களால் ஈசன் வியஷ்டி ஸமஷ்டி ஸ்தூல சரீரங்களை ஸ்ருஷ்டித்தார். (இங்கு தேஹத்தின் இன்ன பாகங்கள் இன்ன பூதாம்சம் என்றுசாரீக உபநிஷத்தில் கூறுவது போலக் காணப்படுகிறது) ஸ்தூலசரீரம் கர்மத்தால் ஏற்படுவது பால்யாதி அவஸ்தாபிமானத்திற்கு இடம், தோஷபூர்ணம். (பின்னர் முன் கூறிய இந்திரியாதி ஸ்ருஷ்டிகள் கூறப்படுகின்றன) கோசங்கள் ஐந்து. அவற்றுள், அன்னத்தால் உண்டாகி, செழித்து, அதன் ரூபமான ப்ருதிவியில் ஒடுங்குவது எதுவோ அதுதான் அன்னமயகோசம். இதுதான் ஸ்தூலதேஹம். ப்ராணன்களும் கர்மேந்திரியங்களும் சேர்ந்ததே ப்ராணமய கோசம். மனதும் ஞானேந்திரியங்களும் மனோமய கோசம் புத்தியும் ஞானேந்திரியங்களும் விக்ஞானமய கோசம். இம்மூன்றும் லிங்கதேஹம். மூல அக்ஞானமே ஆனந்தமயகோசம். இதுவே காரணசரீரம். இந்திரியங்கள், ப்ராணன்கள், பூதங்கள், அந்தஃகரணம், அவித்தை, காமம், கர்மம், தபஸ் ஆகிய இவைகள் அடங்கிய பட்டணமே இந்த தேஹம். ஈசன் ஆக்ஞைப்படி விராட் ஒவ்வொரு தேஹத்துள்ளும் புகுந்து புத்தியைத் தழுவி விச்வனாகிறான். இவனுக்கு விக்ஞானாத்மா சிதாபாஸன், விசுவன், வ்யாவஹாரிகன், ஜாக்ரத், ஸ்தூலதேஹாபிமானி, கர்மத்தின் கார்யம் என்ற பெயர்கள் ஏற்படுகின்றன. ஸூத்ராத்மா ஸூக்ஷ்ம தேஹத்தில் புகுந்து மனதைப் பற்றி நின்று, தைஜஸன், ப்ராதிபாஸிகன், ஸ்வப்நகற்பிதன் என்ற பெயர்களைப் பெறுகிறான். அவ்யக்தத்துடன் சேர்ந்தவன் காரணதேஹத்தில் புகுந்து, ப்ராக்ஞன், அவிச்சின்னன், பாரமார்த்திகன், ஸுஷுப்தி, அபிமானி, என்ற பெயர்களை அடைகிறான். வெறும் அக்ஞானமாத்திரத்தால் மறைபட்டிருக்கும் பாரமாத்திகனே ப்ரஹ்மத்துடன் ஐக்கியம் என்று தத்வமஸியாதி மஹாவாக்யம் கூறும். மற்றைய ஜீவர்களுக்கு இது பொருந்தாது. அந்தக்கரண பிரதிபிம்ப சைதந்யமே மூன்று அவஸ்தைகளுக்கும் ஆளாகிறது. இவைகளில் அகப்பட்டுப் பிறப்பிறப்பில் ஜீவன் சுழல்கிறான். இந்திரியாதிகளால் தேவதைகள் ஸகாயமூலமாகவிஷயங்களைக் கிரஹிக்கும் அவஸ்தையே ஜாக்ரதை என்பது. புருவமத்தியில் நிலைத்து தேஹம் எல்லாம் பரவி ஜீவன் கர்த்தாவாகிறான்: போக்தாவும் ஆகிறான். அனுபவித்து அலுத்து ஒழிவடைய யத்தனிக்கையில் முதலில் தான் கண்டவைகளின் ஞாபகத்தால் தானே கர்த்தாவாகவும் வஸ்துவாகவும் இருப்பதே ஸ்வப்னாவஸ்தை. இதில் ஜீவன் நாடிமத்தியில் உலாவி வாஸனா ரூபமான ஜகத்வி

சித்ரத்தை தானே தோற்றுவித்துக்கொண்டு தன் கர்மத்திற்கு ஏற்றபடி அனுபவிக்கிறான். சித்தம் என்ற ஒரே காரணத்துடன் இரை எடுத்த ஜந்துகூட்டுள் அடங்குவதுபோல அக்ஞானத்தில் புகுந்து ஸுகிப்பதே ஸுஷுப்தி எனப்படும். திடீரென்று இந்திரியாதிகளிலிருந்து பிரிந்து அறிவிழந்து நிற்கும் அவஸ்தையே மூர்ச்சை. பிரஹ்மா முதல் சிறுபூச்சிவரையில் ஒரு வித பயத்தை உண்டாக்கும் ஸ்தூலதேஹப் பிரிவே மரணம். இந்திரியங்கள், விஷயங்கள், ப்ராணன்கள், காமகர்மம், அவித்தை, ஸூக்ஷ்ம பூதங்கள், இவைகளால் சூழப்பட்டு ஜீவன் வேறு தேஹத்தை அடைந்து லோகாந்தரம்போகிறான். பூர்வ ப்ராரப்தத்தினால் பிறப்பிறப்பாகிற சுழலில் அகப்பட்டு ஓய்வு அடைவதில்லை. வெகுகாலஸத்கர்மபுண்ய பரிபாகத்தால் மனிதருக்கு மோக்ஷஇச்சை உண்டாகின்றது. அப்பொழுது குரு சிச்ருஷையால் எவனோ அநேகரில் ஒருவன் விடுபடுகிறான். விசாரணையால் மோக்ஷம் கைகூடும். இதை விடாது செய்யவேண்டும். ஜகத்ஜீவன் பரம் இவைகளை விசாரித்து அறியவேண்டும். முதலிரண்டையும் உள்ளபடி உணர்ந்தால் மூன்றாவதே சேஷித்து நிற்கும்.

பைங்கலர் மஹா வாக்யத்தை விஸ்தரித்துக் கூற வேண்டும் என்று கேட்டார். அதற்கு யாக்ஞவல்க்யர் கூறுகிறார். தத்வமஸி என்பதுஉபதேசவாக்யம். இதைக் கேட்டு அஹம் பிரஹ்மாஸ்மி என்று அனுஸந்தானம் செய்யவேண்டும். வெளிப்படையாக வில்லாததாயும், ஸர்வக்ஞாதி லக்ஷணம், மாயோபாதி ஜகத்காரணத்வாதி லக்ஷணங்களை உடையவனே தத்பதத்திற்கு வாச்யார்த்தம். இவனே, 'நான்' என்ற உணர்ச்சிக்கு ஆதாரம். இந்த வேறு போலக் காணப்படும் நானான ஜீவனேத்வம் பதவாச்யார்த்தம். பரமாத்மா, ஜீவாத்மா இவைகளின் உபாதியான மாயை அவித்தை, இவைகளைத் தள்ளி, இவைகளின் லக்ஷ்யமான கூடஸ்தனே ப்ரஹ்மம். இவ்வாக்கியங்களின் அர்த்த விசாரமே ச்ரவணம்; இதை ஏகாந்தமாக அனுஸந்தானம் செய்வதே மனனம். இவை இரண்டன் முடிவான வஸ்துவில் நிலைப்பதே நிதி த்யாஸனம். த்யானம் த்யானிப்பவன் என்ற எண்ணம் நழுவி, காற்றில்லாவிடத்திலுள்ள தீபம் போல த்யான வஸ்துவாக நிற்பதே ஸமாதி. இங்கு ஆத்ம விருத்திகள் உண்டாகி ஸூக்ஷ்மமாக விருந்து கர்மகோடிகளை லயம் அடையும்படி செய்யும். அப்யாஸ விசேஷத்தால் அமிருததாரை தொடங்கிவிடும். இதனால் வாஸனைக் கூட்டங்கள் அடங்கிவிடும். புண்ய பாபாதிகள் ஒழிந்ததும் மஹாவாக்கியப் பொருள் நன்கு விளங்கும். அப்போது இவன் விடுபடுவன். உடனே ஸ்ருஷ்டி வந்தபடி பின் க்ரமமாக ஒடுங்கிவிடும். ஆகவே ப்ராஹ்மணன் எப்பொழுதும் தத்வம் பதங்களின் ஐக்யத்தை த்யானம் செய்யவேண்டும். பின்னர் மேகத்திலிருந்து வெளிப்பட்ட ஸூர்யனைப்போல ஆத்மா ப்ரகாசிக்கும். இதைத் தேஹமத்தியில் சிறு ஜ்யோதியாகிய கூடஸ்தனாக த்யானம் செய்யவேண்டியது. எவன் தூக்கம், மரணம் ஆகிய இவைகள் வரும்வரையில் இவ்வாறே த்யானிக்கிறானோ, அவன் தேஹம் நீங்கியதும் விதேஹ முக்தி பெற்று அப்பொழுது மிஞ்சி நிற்கும் பிரஹ்மமே யாகிறான்.

பைங்கலர் 'ஞானிகளும் செய்யவேண்டிய கர்மம் என்ன? அவர்கள் ஸ்திதி என்ன?" என்று கேட்க யாக்ஞவல்க்யர் கூறுவார். அமானித்வாதி தெய்வஸம்பத்து உள்ள முமுக்ஷு 21 குலத்தை மேன்மைப்படுத்துவான். ப்ரஹ்மவித் 101 குலத்தைக் கரையேற்றுவான். (இங்கு கடவல்லியிலுள்ள ரதாதிகதிருஷ்டாந்தம் கூறப்படுகிறது) இதனால் இந்திரிய மனதுடன் கூடிய ஆத்மா ஜீவனாகிறான். ஆதலால் நாராயணன்தான் மனிதன் ஹிருதயத்திலிருப்பது: ப்ராரப்த கர்மம் முடியும்வரையில் கழற்றிய சட்டையில் பாம்புக்கு உள்ளபற்றைப்போன்ற தேஹப் பற்றுடனிருப்பன் ஞானி. இவன் சந்திரனைப்போலப் பிறருக்கு ஸுகத்தை உண்டாக்கிக்கொண்டு ஒருவிடத்தில் நிலைக்காது உலாவிவருவான். இவன் எங்குவேண்டுமானாலும் சரீரம் நீக்குவன். இதைக் கண்டவன் இவனைப் புதைக்கவேண்டும் அல்லது திக்பலி கொடுக்கவேண்டும். இவன் எங்கும் பரவிய ஆகாசம்போல அங்கேயே லயமடைந்து பற்றற்ற ஞானப் ப்ரகாசமாகி விடுவன். புருஷனுக்கும் ஞானிக்குந்தான் ஸந்யாஸம். இவனுக்குமேல் அபரக்ரியைகள் முதலியன செய்யவேண்டியதேயில்லை. ஞானாக்னியில் எரிந்த சரீரத்தை மறுபடி எரிப்பானேன்? உபாதி எதுவரையில் உண்டோ அதுவரை குருமரியாதை ஒழுங்குகளை விடலாகாது. சுத்தமனது, சித்ரூபம், பொறுமை, முதலியவைகளால் வரும் 'அவனே நான்' என்ற அறிவால் பரமாத்மத்யானம் ஏற்பட்டு இந்திரிய வ்யாபாரங்கள் ஒடுங்கினால்தான் மனம்புத்தி இவைகள் சூன்யமாகி ஜ்யோதி நிலையை ஒருவன் அடைவன். இப்படிப்பட்டவனுக்கு வேதம் எதற்கு? செய்யும் கார்யம் எதுண்டு?

கர்மங்கள் ஒருவனுக்கு அவசியமாயின் அவன் அறிந்தவனல்ல. முன்னர் கூறியபடி ஞானம் பெறுவதே ஸுகம். ஜலத்துடன் சேர்ந்த ஜலம், பாலுடன் சேர்ந்த பால்,நெய்யுடன்சேர்ந்த நெய், ஆகிய இவைகள்போல ஜீவாத்மா பரமாத்மா சேர்ந்து ஒன்றுபடும். தேஹம் ஞானதேஜஸ் பெற புத்தி அகண்டகாரமானதும் கர்ம பந்தம் நீங்கிவிடும்! எங்கும் நிறைந்த பரம்பொருளே யாகிவிடுவன். எவ்வளவு தவம், சாஸ்திராப்யாஸம் முதலியவைகள் செய்த போதிலும் இந்நிலை வருவது கஷ்டம். இவைகள் மூலமாக அனுவசிய பாகங்களைவிட்டு ஸ்தயவஸ்துவை நெருங்கவேண்டும். இதை அறிந்து நிலக்கும்வரை ஸத்கர்மாதிகளைச் செய்தே தீர வேண்டும். 'நானே ப்ரஹ்மம்' என்ற த்யானம் பெரியோர்களுக்கு மோக்ஷகாரணமாகும். என்னுடையது என்ற எண்ணம் பந்தஹேது: எனதல்ல என்பது மோக்ஷஹேது. மனம் உன்மனீப்பாவம் (அசைவற்றநிலை) சேருங்கால் துவைதமே இல்லை. அது தான் பரமபதம். இந்நிலையில் மனம் போகுமிடமெல்லாம் பரமபதமே: அங்கெல்லாம் ப்ரஹ்மமே. ஆகாயத்தைக் குத்தினாலும் குத்தலாம்; உமியைத் தின்று பசி ஆறினாலும் ஆறலாம்; 'நானே ப்ரஹ்மம்' என்றறியாமல் முக்தி பெறுவது அரிது.

இந்த உபநிஷத்தைப் படிப்பவனுக்குப் பாபங்களும் நீங்கிவிடும். ஸகல ஸத்கர்ம பலனும் கைகூடும். (இங்கு ஸ்கந்தோபநிஷத் முடிவிலுள்ள தத்விஷ்ணோப் பரம பதம் என்று தொடங்கும் ச்லோகம் காணப்படுகிறது.)

## 29 பிக்ஷுகோபநிஷத் (60)

எந்த வஸ்துவினிடத்தில் பிக்ஷுக்கள் கூட்டம் எப்போதும் ஒழிவு அடைகிறதோ அந்த பிரும்மதத்துவமானது என்னை பிரம்மமே ஆக்கட்டும்.

மோக்ஷத்தை விரும்புகிற பிக்ஷுக்களுள் குடீசக, பஹூதக, ஹம்ஸ, பரமஹம்ஸரென்று நான்கு பேதங்களுண்டு. குடீசகர் என்பவர் கௌதமர், பாரத்வாஜர், யாஜ்ஞவல்க்யர், வஸிஷ்டர் முதலானவர்கள். இவர்கள் பிக்ஷையெடுத்து எட்டு கவளங்களைச் சாப்பிட்டு யோகமார்க்கத்தி லிருந்துகொண்டு மோக்ஷத்தையே விரும்புகிறவர்கள்.

பஹூதகன் என்பவன் த்ரிதண்டம், கமண்டலு, சிகை, யஞ்ஞோப வீதம், காவிவஸ்திரம் இவைகளைத் தரித்துக்கொண்டு பிரும்மர்ஷிகளது வீட்டில், மதுமாம்ஸம் இவைகளைத் தவிர பிச்சையெடுத்து எட்டு கவளங்களைச் சாப்பிட்டுவிட்டு யோகமார்க்கத்தி லிருந்து கொண்டு மோக்ஷத்தையே விரும்புகிறவர்கள். ஹம்ஸர் என்பவர் கிராமத்தில் ஒரு ராத்திரியும் நகரத்தில் ஐந்து ராத்திரியும், க்ஷேத்திரத்தில் ஏழு ராத்திரியுமே வஸிக்கவேண்டும். அதற்குமேல் வஸிக்கக்கூடாது. கோமூத்ரம், பசுவின் சாணம் இவைகளை ஆகாரமாகக் கொண்டு நித்ய சாந்த்ராயண வ்ரதம் செய்து யோக மார்க்கத்திலிருந்து, மோக்ஷத்தையே விரும்புகிறவர்கள்.

பரமஹம்ஸர் என்பவர்,ஸம்வர்த்தர்,ஆருணி, ச்வேதகேது, ஜடபரதர், தத்தாத்ரேயர், சுகர், வாமதேவர், ஹாரீதகர் முதலியவர்கள்போல், எட்டு கவளங்களைச் சாப்பிட்டு யோகமார்க்கத்தில் மோக்ஷத்தையே விரும்புவார்கள். மரத்தினடியிலாவது பாழும் வீட்டிலாவது ச்மசானத்திலாவது வஸிப்பவர்கள் வஸ்திரமுள்ளவர்களாயும், வஸ்திரமற்றவர்களாயும் இருப்பார்கள். அவர்களுக்கு லாபம் நஷ்டம், தர்மம் அதர்மம், சுத்தம் அசுத்தம் இவை ஒன்றுமில்லை. த்வைதமற்றவர்களாக ஓடு, கல், ஸ்வர்ணம் இவைகளில் ஸமபுத்தியுள்ளவர்களாக எல்லா ஜாதிகளிலும் பிச்சை எடுத்து சாப்பிட்டுக் கொண்டு எங்கும் ஆத்மாவொன்றையே பார்ப்பார்கள்

பிறந்த மேனியாய் இருக்கிறவர்களாயும், த்வந்த்வமற்றவர்களாயும் வாங்குதலற்றவர்களாயும், விஷ்ணு த்யானத்தை முக்கியமாய் உடையவர்களாயும், ஆத்ம நிஷ்டர்களாயும் பிராண தாரணத்திற்குத் தகுந்த காலத்தில், பிச்சையெடுத்துக்கொண்டு, பாழும் வீடு, தேவாலயம், புல்நிறைந்தவிடம், புற்று, மரத்தடி, குயவன் வீடு,அக்னி ஹோத்ரசாலை,ஆற்றின் மணல் மேடு, பர்வதங்களின் குஹை, மலையருவி, கட்டாந்தரை இவைகளில் இருந்துகொண்டு சுத்தமனம் உள்ளவர்களாய் பிரும்ம மார்க்கத்திலேயே திருஷ்டியுள்ளவர்களாக ஸந்யாஸத்தோடு தேஹத்யாகம் செய்கிறவர்கள் தான் பரமஹம்ஸர்கள்.

## 30 கிருஷ்ணோபநிஷத் (96)

ஸச்சிதானந்த ஸ்வரூபமான மஹா விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமர் அங்க அமைப்பின் சிறப்பைக் கண்டு அவர் அமானுஷ ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டு வனங்களிலிருந்த முனிவர்கள் எல்லோரும், 'எங்கள் பிறவி மிக அசுத்தமானது என்று கூறப்பட்டுள்ளது. உம்மை ஆலிங்கனம் செய்து பரிசுத்தமாவோம்.

உத்திரவு தரவேண்டும்' என்று கேட்டுக்கொண்டனர். அதற்கு ஸ்ரீராமர் 'அடுத்த யுகத்தில் நான் கிருஷ்ணனாக அவதரிப்பேன், நீங்கள் கோபிகைகளாகப் பிறந்து என்னை ஆலிங்கனம் செய்துகொள்ளலாம்' என்றனர். அப்பொழுது மஹரிஷிகள், 'அடுத்த அவதாரத்தில் எங்களைக் கோபிகைகளாக்குவது இருக்கட்டும். இப்பொழுது உமது அங்கங்களைத் தொட்டுவிட்டுப் பின்னர் வேறு எந்த ஜன்மம் வேண்டுமானாலும் எடுக்கத் தயாராகிறோம். எங்கள் ஜன்மங்களில் எல்லாம் உமது தேஹஸ்பர்ஸம் கிடைப்பது நிச்சயமாகில் நாங்கள் எவ்வளவு ஜென்மம் வேண்டுமானாலும் எடுக்கத் தயார்தான்' என்று கூறிவிட்டனர். இவைகளைக் கேட்டு அவ்வாறே செய்துகொள்ள ஸ்ரீராமர் அனுமதி கொடுக்க, அவரைத் தொட்டு எல்லோரும் திருப்தியடைந்தனர்.

கிருஷ்ணன் வளர்ப்புத் தகப்பனான நந்தகோபர் பரமானந்தம், யசோதை, முக்தி காந்தை; அவள் தான் ஸத்வ ரஜஸ் தமோ ரூபமான மாயை, ஸத்வ மாயை ருத்ரனிலும், பக்தனாகிய ப்ரஹ்மாவிடம் ராஜஸ மாயையும், தாமஸம் தைத்யரிலும் உள்ளது. விஷ்ணு மாயையிலிருந்து அஸுரர்கள் வெளிப்பட்டனர். தேவகீ வேதத்திலுள்ள ப்ரஹ்மவித்யை, வஸுதேவர் வேதம், கிருஷ்ணராமாள் வேதாஹஸ்யம், கோபிகளும் பசுக்களும் ருக்குகள், மாடுமேய்க்குங்கோல் ப்ரஹ்மா, புல்லாங்குழல் ருத்ரன், கொம்பு இந்திரன், கோகுலவனம் வைகுண்டம், மரங்களே தபஸிகள், தைத்யர்கள் லோபக்ரோதாதிகள், திரஸ்காரம் கலி காலம், விஷ்ணுவே தன் மாயையால் கோபால கிருஷ்ண ரூபம் எடுக்கிறார். இந்த மாயையை உணருவது தேவதைகளுக்கும் அஸாத்யம். த்விஜர்களே திருஷ்டி. இப்படிப்பட்டவரை மாயை எப்படி மயக்கும். பலராமர் சேஷன். கிருஷ்ணன் சாச்வத ப்ரஹ்மம். 16108 பெண்சாதிகள் ருக்குக்களும் உபநிஷத்துகளும். பட்டமஹிஷிகள் ருக்குக்கள். சாணூரன் த்வேஷம், முஷ்டிகள் மத்ஸரம், குவலயாபீடம் தர்ப்பம், பகாஸுரன் கர்வம், ரோஹிணீ தயை, ஸத்யபாமை பூமி, அகாஸுரன் மஹாவ்யாதா கம்ஸன் கலி, குசேலர் சமம், அக்ரூரர் ஸத்யம், உத்தவர் தமம். சங்கம் விஷ்ணு ரூபமான லக்ஷ்மி. அது பாற்கடலில் உண்டாய் இடி போல முழங்கும் தயிர் இருக்கும் உள்ளே புகுந்து பானைகளை உடைத்துத் தான் முன்னர் பாற்கடலில் வடபத்ரசாயியாக விளையாடியதுபோல விளையாடுகிறார். துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்து தர்மத்தை நிலைநிறுத்த ஸர்வரக்ஷகரான பரம்பொருள் கருணையால் கிருஷ்ணனாகிறார். சிவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சக்கரம் ப்ரஹ்மாவினின்றும், சாமரம் தர்மம், அதன் காற்று ஜயந்திபுத்ரன், நெருப்புப்போல ஒளிவிடும் கத்தி மஹேச்வரன், உரல் காச்யபர், கயிறு தாயாகிய திதி, தேவதைகள் எல்லோரும் 'பகவானுக்கு ஆயுதமாக ஞானிகளே ஏற்படுகின்றனர்; அவர்களைத் தேவதைகளாகவே கருதவேண்டும்' என்று கூறுகின்றனர். ஸர்வ சத்ருக்களையும் அழிக்கும் கதையே காளி, சாரங்கதனுஸ் மாயை ஸுபோஜனம் என்னும் ஆயுதம் சரத்காலம், கையில் வைத்திருக்கும் தாமரைக் கொத்து ப்ரபஞ்சகாரணமான அவ்யக்தம், கருடன் பந்தீர ஆலமரம், ஸுதாமாதான் நாரதர். இம்மாதிரி ஸகல தேவதைகளும் உலகில் பகவானுக்கு அங்கங்களாக உதித்தனர். பகவான் இவர்களைவிட வேறாகத் தோன்றியபோதிலும் உண்மையில் எல்லாம் அவரே.

கடவுளின் பிரகாரம் பல.—ஈசன் ஒருவரேயாயினும் அவரது பிரகாரங்கள் பல. வீட்டின் ஒரே யஜமானன் ஒருவனுக்குப் பிதாவாயும், இன்னொருவனுக்குச் சகோதரனாயும், ஒருத்திக்குக் கணவனாயும் இவ்வாறு பல பிரகாரங்களிற் காணப்படுவதுபோல், ஒரே ஈசனர் எந்த எந்தப் பக்தனுக்கு எந்த எந்தப் பிரகாரமாய்க் காட்சி அளித்தாரோ, அந்த அந்தப் பிரகாரங்களாக வர்ணிக்கப்படுகிறார். வீட்டின் கூரையின்மேல் ஏறுவதற்கு ஏணி, மூங்கில், படிக்கட்டு, கயிறு முதலிய ஸாதனங்கள் பயன் படுவதுபோல், ஈசனைக் காண்பதற்கும் பலவகை மார்க்கங்களும் ஸாதனங்களும் ஏற்பட்டிருக்கின்றன. உலகத்திலுள்ள பிரதி சமயமும் இவ்வழிகளில் ஒன்றைக் காட்டுகின்றது.

# உல்லாஸன் சரிதம்

## ADVENTURES OF ULYSSES

### ஒன்பதாம் அத்தியாயம்

(தொடர்ச்சி)

ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனல் வாய்பூட் டிடப்படின்மற்
ருவா விவரென் செய்வார்.

பிக்ஷுவேஷம் பூண்டு, கையிற் கோலூன்றி, நடை தளர்ந்தவனாய் உல்லாஸன் இடையன் வீட்டிலிருந்து புறப்பட்டு அரண்மனைக்குச் சென்றபோது, அங்குள்ள பிரபுக்கள் உண்டு களித்திருந்தார்கள். பிறந்த நாள் முதல் பிக்ஷுவாயிருந்தவன் எவ்வாறு தலைவணங்கித் தாழ்ந்து குறையிரப்பானே அவ்வாறே உல்லாஸன் ஒவ்வொரு பிரபுவினிடத்தும் யாசித்தான். ஆழ்ந்து நோக்கினவர்களுக்கு மட்டில் உல்லாஸன் நடையில் கவுரவமிருந்ததென்று நன்ருய்ப் புலப்பட்டது. அவ ரிற் சிலர் "இந்த பிக்ஷு அரசனாய்ப் பிறந்திருப்பின், ஸிம்மாஸனத்திலும் பெருமையுடையனா யிருப்பான்" என்ருர். சிலர் அனுதாபப்பட்டு பிக்ஷை தந்தார்; வேறு சிலர் தமது களியாட்டைக் கெடுக்கவந்த கழுதை யென்று உல்லாஸனைத் திட்டி வெருட்டினர். நன்மன முடையவர் களித்திருக்குங்காலத்தில் துக்கச் சின்னங் களைக் காண்டல் அவர்கள் களிப்பைத் தாழ்த்து மியல் புடையது. உல்லாஸனுடைய சொந்த கிருஹத்திலே அவனுக்கு நடந்த உபசாரத்தைப் பார்ப்போமாயின் கஷ்டகாலஞ் செய்யுங் கொடுமையை நன்ரு யறித லாகும்.

பந்தியிலிருந்த ஒவ்வொருவரையும் பிக்ஷை கேட்டு வருகையில் உல்லாஸன் தன் மகனிடத்திலும் வந்தி ரக்க, குமாரன் இரப்பவன் தன் பிதாவென்றறிந்து தனக்குப் பரிமாறியிருக்கும் உயர்ந்த பொருள்களை உல் லாஸனுக்குதவித் தன் பாத்திரத்தையும் அவனுக்குத் தந்தான். யாசிப்பவன் ஸாமான்ய பிக்ஷுவென்று மாத்திர மெண்ணின அகந்தை பிடித்த பிரபுக்கள் தலை மகன் காரியத்தைக் கண்டித்தார்கள். வாஸ்தவமறி யாதவர் செய்யும் பிழைகளுக்கு அளவுமுளதோ?

அங்குக் கூடியிருந்த பிரபுக்களிற் அந்தீனன் என்னு மொருவன் கோபாக்கிராந்தனாய் "ராஜகுமாரா, கா லாடியாய்த் திரியும் பொய்யர்களை அரண்மனைக்குள் வரவிட்டு அவர்களை யுபசரித்துப் பெருமை செய்கின் றது உனக்குத் தாழ்வை யுண்டாக்கும். இங்கு வந்தி ருக்கும் பிக்ஷு ஒரு காலாடி யென்றே நானெண்ணு கின்றேன்" என்ருன்.

இந்தக் கடுஞ்சொற்களைக் கேட்ட உல்லாஸன் அந் தீனனை நோக்கி "மஹா பிரபுவே, தம்மிடத்தில் யாச கர்க்கு எதுவுங் கிடைக்காது போலும். வெறுங் கஞ்சி வைத்துக்கொண்டிருப்பவனுக்கு நீர் உப்புந்தரமாட் டீர்" என்று இடித்துச் சொன்னான்.

பிக்ஷு தன்னை உதாஸீனமாய்ப் பேசினதைக்கண்டு கோபமூண்ட அந்தீனன், தன் கையண்டையி லிருந்த பலகை ஒன்றையெடுத்து உல்லாஸன் தலைமேல் எறிந் தான். "அச்சமயத்தில் கொக்கைப்போ லுறங்கியிரு ந்து ஸமயத்தில் அதன் குத்தைப்போலிருத்தல் வேண் டும்" என்னும் பழமொழியை அனுஸரித்த உல்லாஸன் சிறிதேனுங் கோபங்கொள்ளாமல் வாசற்படியண்டை போய்த் தனக்குக்கிடைத்த பிக்ஷையைத் தின்றுகொண் டிருக்கையில் "பிராணனும் பொருளும் நஷ்டம் வரு மாயின் ஒருவன் சண்டைபோடுவது ஸஹஜம்; அந்தீ னன் சாண்வயிற்றிற்குச்சண்டைபோடுகிருன். அகதிக் குத் தெய்வமே துணையென்பது வாஸ்தவமானல், அந் தீனன் உயிரோடிருக்குங்கால் அரசியை மணக்கும் பாக்கியத்தைப் பெருன்" என்று கண்டிப்பாய்ச் சொன் னான்.

இந்த வார்த்தைகள் அந்தீனனுக்கு எரிகின்ற நெருப்பில் எண்ணெய் வார்த்ததுபோ லிருந்தது. அந்தீனன் உல்லாஸனை நோக்கி "இனி வாயைத் திறப்பாயானல் உன்னைக் காலைவாரி யிழுத்தெறிந்து விடுவேன்" என்று பயமுறுத்தினன்.

பிரபுக்களில் சிலர் அந்தீனன் சொன்னவற்றை அங்கீகரித்தாரில்லை. அவர்களில் ஒருவன் "தேவர் கள் மனிதருடைய பக்தியையும் ஜீவகாருண்யத்தையும் சோதனை செய்வதற்கு பிக்ஷுவேஷம் பூண்டு வருத லுண்டு. நம்மெதிரிலிருக்கும் பிக்ஷு ஒரு தேவனாக இருந்தாலுமிருக்கலாம்.நாம் எதைக்கண்டோம்?பிச்சைக் காரரைக் கடுந்து சொல்லலாகாது" என்று ஹிதோப தேசஞ் செய்தான். தலைமகன் தன் பிதா சொன்ன வற்றை நினைந்தும் மினெர்வாவினுடைய ஸம்ஞையை எதிர்பார்த்தும் ஒன்றும் பேசாமலே யிருந்தான்.

உல்லாஸன் அரண்மனைக்கு வந்த தினத்திலேயே பிரபுக்களிடத்தில் வழக்கமாய்ப் பிக்ஷை வாங்கிக்கொண் டும் அவர்களுடைய நகைப்புக்கு இலக்காயுமிருந்த ஐரஸனென்பவன் வந்தான். ஐரஸன் ஆறு ஆட்கள் சோற்றை ஒருவனாய் தின்பவன் ; உடல் பெருத்த வன் ; சிறிதேனும் மனத்தைரியமில்லாதவன். தனக் குப் போட்டியாக உல்லாஸன் பிக்ஷுவாய் வந்த பொருமையாலும் பிரபுக்களுடைய தயவு தனக்கு மிகுதியாகக் கிடைக்குமென்கிற நம்பிக்கையாலும் ஐர ஸன் உல்லாஸனை இகழ்ந்து பேசிச் சண்டைக்கிழுத் தான். பிக்ஷுக்கள் ஸ்வஜாதி வைரிகளாம். உல்லா ஸனோ கொஞ்சமேனும் ஐரஸன் சொற்களால் சினக் காமல் “ பிரபுக்கள் வயிறு நிரம்பச் சோறு போடுகிறார் கள். தின்று களித்துச் சும்மா போவோமே ” என்று அலக்ஷியமாய்ப் பேசினான். தாழ்ந்து பேசின உல்லா ஸனைக் கோழையனென்றெண்ணி ஐரஸன் ஆரவாரித் தான். பிக்ஷுக்களிருவருஞ் சண்டை செய்யும் வேடிக் கையைப் பார்க்க விரும்பின வீணர்கள் இருவரையும் மல்யுத்தஞ் செய்யச் சொன்னார்கள். உத்தம வீரனாகிய உல்லாஸன் ஸாமான்யப் பிச்சைக்காரனிடத்தில் யுத் தஞ் செய்ய மனமுவக்காவிடினும் தன் வலிமையை அங்குள்ளார் அறிதற்பொருட்டு ஐரஸனை முதலடியி லேயே காலைவாரித் தூரத்தில் எறியவே ஐரஸன் பல் லுடைந்து சவம்போலக் கிடந்தான். உல்லாஸன் அவனுடைய கோலைக் கையிற் கொடுத்து, “ இனி சுவானங்களிடத்திற் போய் உன் அதிகாரத்தைச் செலுத்து ; பிரபுக்கள் ஸபையில் இனி வராதே ; பிக்ஷுக்களிலும் நீதான் பெரியவனென்றெண்ணாதே” என்று எச்சரித்தான்.

பிக்ஷு யுத்தத்தைக்கண்டு களித்த பிரபுக்கள்
ஒருவர்வாய்க் கொள்ளுந் தேனை
யொருவருண் டெளிதிற் போவார்
ஒருவர்கைக் கொள்ளுந் தேனை
யொருவர்கொண் டோடிப் போவார்
ஒருவரோ டொருவ ரொன்றத்
தழுவுவர் விழுவ ரோடி
ஒருவர்மே லொருவ ரேறி
யோகையென் றுவகை கூர்வார்.

பகற்காலம் இவ்வாறு செல்ல இரவு வந்தவுடன் அர சியை மணம்புரியக் கூடியிருந்தவரெல்லோரும் உணவு முடிந்தபின் ஆடல் பாடலுக்கு ஆரம்பித்துக் குதூ கலஞ் செய்தனர். யூரிமாகஸ் என்றொருவன் உல்லா ஸனைப் பலவாறு பழிக்கையில் “இந்தத் தடியனுக்கு வேலிகட்டத் தெரியாது; மண்வெட்டியாற் குழிவெட் டவுமறியான் ; இவன் பிறர் பொருளை அபகரித்துச் சோம்பேறியாய்க் காலம் போக்குகின்றவன். இவனைக் கூலியாளாகவும் ஒருவரும் வைத்துக்கொள்ளமாட்டார். இவனிடத்தில் தெய்வத்தன்மை யுண்டெனலு மொரு வாறு சரிதான். தெய்வம் வேலை செய்தலில்லை” என்றான்.

உல்லாஸனுக்குப் பௌருஷம் பிறந்து “யூரிமாகஸ் பிரபுவே, என்னை இகழ்ந்து பேசுதலுமக்குச் சுளுவாயி ருந்ததே, நானும் காலையில் ஒரு அரிவாளை எடுத்துக் கொள்கிறேன். நீரும் ஒன்றை எடுத்துக்கொள்ளும், நம் மிருவரில் மாலைக்குள் யார் அதிக வேலை செய்வார், பார்ப்போம். ஒரே நாளில் நான் நாலுகாணி நிலத்தை யுழுந் திறமுடையவன். உம்மாலதாகுமா? ஈட்டி யுத்தஞ் செய்வோம். அதில் எவர் ஜயிப்பார் என்று நினைக்கின் றீர்? நீர் என்னைப் பரிகஸிக்கும்படியாய் ஒரு அம் சத்திலும் நான் குறைந்தவனாக மாட்டேனென்றறியும். இந்த வீட்டிற்குடையவனாகிய உல்லாஸன் திரும்பி வருகின்றவரையில் உமது உடல்வலியைப் பரிபா லித்து வாரும். அதன்பின் நீர் படும்பாட்டை நான் சொல்வேன்” என்று துணிவாய் எதிர்பேசினான்.

பிச்சைக்காரன் பேசின பேச்சினால் கோபாவேச னாய் யூரிமாகஸ் ஒரு பாத்திரத்தை எடுத்து உல்லாஸன் தலைமேல் வீச அது மயிர்க்கிடை தவறினதால் அவன் மேற்படவில்லை. மற்ற கனவான்களும் கோபவசத் தர்களாய்உல்லாஸனை நெட்டிவெளியிற்றள்ளப்போன போது தலைமகன், “என்னுடைய ரக்ஷணையிலிருக் கும் பிச்சைக்காரன் மேல் உங்கள் கைபடவேண்டாம். உங்களுக்கு வெறி பிடித்திருக்கிறது போலும் ; விருந் தினர்களாய் வந்தவர்கள் இவ்வாறு ஆரவாரிப்பதேன் ? அன்ன பானாதிகளை யுண்டு இங்கே இருந்தாலுஞ்சரி, படுக்கப்போகிறதென்றாலுஞ்சரி, எனக்காக்ஷேப மில்லை. பிச்சைக்காரனுடன் கோபித்தல் எதற்கோ ?” என்று கோபத்தோடு சொல்ல, பிரபுக்கள் சிறு பிள்ளை யின் தீரத்தனத்தால் அச்சமுற்று அச்சமயம் சும்மா விருந்து விட்டனர். மினெர்வா அவர்கள் மனத்தில் பயத்தை யுண்டாக்கியுமிருக்கலாம்.

விருந்தினர் தத்தம் விடுதிகளுக்குச் சென்றபிறகு உல்லாஸனும் தலைமகனுந் தனியேயிருந்தார்கள். ஆயுத சாலையிலிருந்து ஆயுதங்களையெல்லாம் எடுத்து வரும் படிதலைமகனுக்கு உத்தரவளித்து உல்லாஸன் "மகனே, நாளைக்கு இவ்வாயுதங்களெல்லாம் உபயோகமாகும். எவராவதுஇவற்றை வெளியிலெடுத்ததற்குக் காரணங் கேட்கின் துருப்பிடித்ததைச் சுத்தஞ்செய்ய வென்று சொல்" என்றான். விளக்குகளெல்லாம் அணைந்து போய் நள்ளிருளாயிருக்கையில் ஆயுதங்கள் பகல்போல ஒளி வீசின. ஸ்தம்பங்கள் ஜோதிர்மயமாயிருந்தன. இவற்றையெல்லாங் கண்ட உல்லாஸன், மகனைப் பார்த்து "குழந்தாய், தேவர் பெருமையை நம்மாலறிதலாமா? இரவைப் பகலாக்க வல்லவர் அவரே. இவ்வொளி வீசுதலே நமக்குச் சுபசகுனம்" என்று சொன்னான். பிறகு இருவரும் ஆயுதங்களையெல்லாம் துருப்போகத் துடைத்தார்கள்.

இருபது வருஷம் கண்ணுற்பாராத தன் மனைவி பனிலோபி என்பவளைப் பார்க்கவேண்டுமென்ற அவா உல்லாஸனுக்கு மேலிட்டிருந்தது. தன் அரண்மனை ரஹஸ்ய வழிகளெல்லாஞ் செவ்வையா யறிந்தவனாதால் அந்தப்புரத்திற்குச் சென்றான். அந்த ஸமயந்தான் பனிலொபியின்சேடிமார் அவளைப் படுக்கைக்குஅழைத்துப்போகுந் தருணம். பனிலொபி, புருஷர் ஸபையில் விசேஷ தினங்கள்தவிர மற்றைக் காலங்களில் வருகிறதேயில்லை. அந்தப்புரத்தில் தானுஞ் சேடிமாரும் வீட்டிற்குரிய வேலைகளைச் செய்துகொண்டு பொழுதுபோக்கினார்கள். சேடிமார் உல்லாஸன் வந்ததைக் கண்டு "இன்று பகலில் ஒரு பிக்ஷுவைப் பற்றிப் பிரபுக்கள் ஆரவாரித்தாரே, அவன்தான் இங்கு வந்திருக்கிறான். அவனுக்கு இங்கு என்ன காரியம்?" என்றதைக் கேட்ட நிமிஷமே பனிலொபி "பிக்ஷுவாயினும் நம்முன் அவன் வரட்டும். பலதேச யாத்திரை செய்திருத்தலால், எமது பிராண நாயகன் உல்லாஸனைப்பற்றி ஸமாசாரம் தெரிந்தவனாயிருத்தல் கூடும்," என்றாள்.

நாளாகியும் தன்னையும் தன் பெயரையும் மறக்காமல் ஸதா தன்னையே தியானம் பண்ணிக்கொண்டிருந்த பனிலொபியின் தேன்மொழிகள் காதிற்படவே, உல்லாஸனுக்கு மிகுந்த ஸந்தோஷம் பிறந்தது. அரசியின் ஸந்நிதானத்தில் உல்லாஸன் நின்றபோது அவனைப் பிக்ஷுவாக எண்ணினாளேயன்றித் தன் பர்த்தாவாகிய உல்லாஸன் எதிரில் நிற்கின்றானென்பதைப் பனிலொபி அறிந்தாளில்லை. உரு மாற்றம் தடுமாற்றஞ் செய்தது.

பனிலொபி பிக்ஷுவுக்கு உபசார வார்த்தைகள் சொல்லி உட்காருவித்துத் தன் பர்த்தாவைப்பற்றி விசாரித்தாள்.

உல்லாஸன் வாஸ்தவத்தை மறைத்தே பேசினதாவது:—

"நான் பிறந்தது கிரீடதேசம். மைனஸன் என்னும் அரசனுடைய பௌத்ரன். உல்லாஸன் த்ரோஜா நகரத்திற்குப் போகும் வழியில் எங்கள் துறையில் இறங்கிப் பன்னிரண்டு நாட்களிருந்தான். அவனுக்கு நான் பலவிதமாக விருந்துகள் செய்தேன். அவன் அங்க அடையாளங்கள், தரித்திருந்த ஆடையாபரணங்கள் எல்லாவற்றையும் நன்றாயறிவேன். காலத்தின் கொடுமையா லேழையாகிப் பிச்சை வாங்கிப் பிழைக்கின்றவனாய் விட்டேனே யல்லாமல், பிச்சைக்காரனாய்ப் பிறந்தவனல்லன். உல்லாஸனை யுத்தகளத்திலும் பார்த்திருக்கின்றேன். அவனுடைய பராக்கிரமங்கள் ஸாமான்ய மனிதனொருவனுக்குங் கிடையாது. அவனுடைய புத்திக் கூர்மையை வருணிப்பது என்னாலாகாத காரியம். புருஷ லக்ஷணங்கள் அவனிடத்திலமைந்தனபோல மன்மதனுக்கும் இல்லையெனலாம். உல்லாஸனுக்கு வாழ்க்கைப்பட்டவளைப் பார்க்கிலும். உத்தமிகள் உலகிலில்லை யென்றே சொல்லத்துணிவேன்."

இந்த மதுரமொழிகள் காதிற்பட்டவுடன் பனிலொபி கண்களினின்று தாரைதாரையாய் நீர் பெருகிற்று. தன் பர்த்தா உயிருடன் எதிரில் நிற்கையிலே பனிலொபி அவனிறந்தானென்றெண்ணி யிருந்தாள். உல்லாஸனுக்கும் கண்ணீர்வர ஆரம்பித்தது. மனவுறுதியால் கண்ணீரைத் தடுத்து அன்னியன்போல் அவன் நடித்தான்.

பிக்ஷு தான் பேஷியா தேசத்திற்கு வந்திருந்ததாயும் அங்கு உல்லாஸனைப்பற்றி ஸமாசாரந் தெரிந்ததாயுஞ் சொன்னான். பனிலொபிக்கு நம்பிக்கை பிறந்து தான் கண்ட சொற்பனமொன்றைப் பிக்ஷுவினிடத்தில் சொன்னாள். அதாவது:—

"என்னரண்மனையில் இருபது கோழிகளுண்டு. அவைகளுக்கு நானே தீனிபோடுவது வழக்கம். கோதுமை மணிகளை அவற்றிற்கு நான் இறைத்துக் கொண்டிருந்தபோது ஒரு ராஜாளிப்பக்ஷி பறந்தோடி வந்து அந்த இருபது கோழிகளையுங் கொன்றுவிட்டு ஓடிப்போயிற்று. வளர்த்த பறவைகள் கொல்லப் பட்டதை நினைந்து நான் துக்கப்பட்டுக் கொண்டிருந் தேன். ராஜாளி என்னைப் பார்த்து "இதனினும் மங்களகரமான விஷயம் ஒன்றுமில்லை. ராஜாளிப் பக்ஷி உன் புருஷன் உல்லாஸன். கோழிகளெல்லாம் உன் அரண்மனைத் திரவியத்தைத் தின்றழித்து உன்னை மணம்புரிய வந்திருக்கும் சண்டாளப்பிரபுக் கள் இந்தப் பாவிகளுக்குக் காலன் கிட்டினனென்பது தான் இதனால் நீ அறியவேண்டியது" என்று சொல் விற்று. நானும் விழித்துக்கொண்டேன். கோழிகள் உயிரோடிருக்கின்றனவாவென்று போய்ப்பார்த்தேன். அவை ஒன்றுஞ் சாகாமலிருந்தன. இந்தச் சொற்ப னம் ஸூசிப்பிப்பது என்ன?

பிக்ஷுவான உல்லாஸனும் ராஜாளிப்பக்ஷி சொன் னவையே சொர்ப்பனத்தின் கருத்தென்று தெரிவித் தான். பனிலொபியும் மனமகிழ்ந்து "உத்தமரே, உமது மதுரவாக்கைக் கேட்டுக்கொண்டிருந்தாலே நித்திரை வராது. மனிதஜென்ம மெடுத்தவர்களுக்குத் தேவர் நித்திரை யென்னும் க்ஷணமரணத்தைக் கற் பித்திருக்கிறார். அதுவும் மனிதருடைய அநித்தியத்தை உணர்த்தற்பொருட்டே. நான் படுக்கப் போகின்றேன். இருபது வருஷகாலமாய் என் கண்ணீரால் நனைந்திருக் கின்ற படுக்கையை இன்றும் நனைக்கின்றேன். இதற் குத்தான் நான் பெண்ணாய்ப் பிறந்தேன்போலும். தமது வரவு நல்வரவாகுக. எனக்கு விடைதரல் வேண்டும்" என்று பிரார்த்திக்க உல்லாஸனும் அந்தப்புரத்தை விட்டுத் தன் மகனிருந்த விடத்திற்கு வந்தான்.

கே. வேங்கடராமையர், பி. ஏ.



# ராகங்களின் உற்பத்தி

## ORIGIN OF TUNES

ஸங்கீத புஸ்தகங்களில் ஏற்பட்டிருக்கிற இவ் வளவு ராகங்களும் ஆதிகாலந்தொட்டு வழக்கத்திலிருந் தன வல்லவென்று ஸங்கீதப் பழக்கமுள்ளவர் யாரும் கண்டறிந்துகொள்ளலாம். எப்படி காஹரப்பிரியா என்றும் ஹரிகாம்போதி என்றும் உள்ள கர்த்தா ராகங் களும் ஸ்ரஸ்வதி என்றும், ஸ்ரஸ்வதி மனோஹரி என் றும் பலவிதமான ஜந்நிய ராகங்களும் ஸ்ரீ தியாகராஜய் யர் அவர்களால் கொடுக்கப்பட்டுள்ளனவோ, அது போலவே வேறு கர்நாடக வித்துவான்களும் அபூர்வ ராகங்கள் பாடியிருக்கிறார்கள். ஆக, தியாகய்யர் அவர் கள் பாடியதும், மற்ற வித்வான்கள் பாடியதும் எல்லாம் சேர்ந்து சுமார் முன்னூறு ராகங்களில்தான் ஸாஹித் தியங்கள் இருப்பதாகத் தெரியவருகிறது. அந்த 300 ராகங்களில் சுமார் 50 ராகங்கள்தான் ராகங்க ளாய்ப் பாடும் வழக்கத்தில் உள்ளவை.

[வித்துவான்கள் என்று பெயர் வைத்துக்கொண்டு சபைகளில் பாடுவோர், அபூர்வ ராகத்தை ராகமாகப் பாடும் சக்தி பொருந்தியவராயும், அபூர்வ ராகத்தின் ஸாஹித்தியங்களைப் பாடும்போது, அவைகளுக்கு ஏற்ப மனோதத ஸ்வரங்கள் பாடும் வழக்கமுள்ளவராயும் இருக்கவேண்டும். ஆனால் இப்போதைய வித்துவான் களுக்கு அந்த வழக்கம் குறைபட்டுக்கொண்டு வரு வது மிகவும் விசனிக்கத்தக்கதே.]

அதுவுமன்றி, புஸ்தகங்களிலோ, சுமார் ஆயிர ராகங் கள் எழுதப்பட்டுள்ளன. இந்த ஆயிர ராகங்களும் 72 ஸம்பூர்ண ராகங்களாகிற ஜனக ராகங்களும், அவற் றிலிருந்து பிரஸ்தரித்துக் கிடைத்த ஜந்நிய ராகங்களு மாகும்.

பிரஸ்தரிக்கும் விதிகள் ஷாடவம் (6 ஸ்வரச் சேர்க் கை) ஔடவம் (5 ஸ்வரச் சேர்க்கை) என்னும் விதிக ளாம். ஆரோஹணத்திலோ, அவரோஹணத்திலோ குறைந்த பக்ஷம் 5 ஸ்வரங்கள் வைத்து பிரஸ்தரித்து வர்ஜ்ஜிய ராகங்கள் உண்டாயின. இப்படி வர்ஜ்ஜிய ராகங்களில் மேலடி உண்டாக வேண்டுமென்றால், ம, ப| என்னும் இரண்டு ஸ்வரங்களில் ஏதாவது ஒன் றைத்தான் வர்ஜ்ஜியம் செய்வதேயொழிய இரண்டை யும் வர்ஜ்ஜியம் செய்கிறதில்லை. அப்படி இரண்டை யும் வர்ஜ்ஜியம் செய்த ராகம் பாட முடியாததாம்.

இதைத் தவிர வக்ரம் என்னும் ஒரு விதி இருக்கி றது. அதாவது ஸ்வரங்களைப் பிடிக்கும்போது நேரில் வரிசைக்கிரமமாய் உச்சரிக்காமல் மடக்கி உச்சரிப்ப தாம். உதாரணம், ஸகரி கமப என்பதில் க வக்ரமாம். இதேமாதிரி எல்லா ஸ்வரங்களையும் வக்ரமாக வைத் துக்கொண்டாவது சில ஸ்வரங்களைமட்டும் வக்ரமாய் வைத்துக்கொண்டாவது, அல்லது ஆரோஹணத்தில் மட்டுமோ அவரோஹணத்தில் மட்டுமோ வக்ரம் வைத்

துக்கொண்டாவது அநேக ராகங்களை ஜந்ய ராகங்களாக ஏற்படுத்திக்கொள்ளலாம்.

இப்படிப் பிரஸ்தரித்து ஆயிரம் ஆயிரமாகக் கணக்குக்கு ராகங்கள் ஏற்பட இடமிருந்தாலும் புஸ்தகங்களில் சுமார் ஆயிரம் ராகங்களுக்குத்தான் ஆரோஹண அவரோஹணம் அமைக்கப்பட்டுள்ளது. இந்த ஆயிரம் ராகங்களுக்கும் ஆதாரம் என்னவென்று விசாரிப்போமாகில் வெங்கடமகி என்பவரால் ஏற்படுத்தியுள்ள லக்ஷண கீதமன்றி, இன்னார் இயற்றியவர் என்று தெரியாத வேறொரு லக்ஷணகீத புஸ்தகம் ஒன்றில் ஏற்படுத்தியிருக்கிற ராகவரிசைகளை யநுசரித்திருக்கிற ஒரு அட்டவணை போலிருக்கிறது. மற்றும் ஒரு லக்ஷண கீதபுஸ்தகம் ஒன்றும் இருக்கிறது. ஆகவே லக்ஷணகீத புஸ்தகம் மூன்றுவகையாய் இருக்கிறது. வெங்கடமகி இயற்றிய தொன்றும் மற்றும் இரண்டின் இயற்றியவர் பெயர் தெரியாமலும், இருக்கிறது.

அவைகளில் மேளகர்த்தாக்களை வரிசைக்கிரமமாக எடுத்துக்கொண்டு, ஜநகராகத்திலும் பிறகு அதன் ஜந்நிய ராகங்களிலும் ஒவ்வொரு கீதம் ஸாஹித்தியம் செய்து ஸ்வரத்துடன் எழுதப்பட்டிருக்கிறது.

[கீதம் என்பது ஒருவகை ஸாஹித்தியம். அதன் லக்ஷணம் ஸாஹித்தியம் என்னும் அதிகாரத்தில் விஸ்தரித்து எழுதப்படும்.]

முதல் முதல் பாட்டை ஸ்வரமாக எழுதி ஸாஹித்யத்தையும் ஸ்வரத்தையும் எழுதி வைத்திருக்கும் வழக்கம், இந்த லக்ஷண கீதத்தில்தான் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. முதல்முதல் ஏற்படுத்திய நோடேஷன் (Notation) அந்தப் புஸ்தகத்தில் கண்டுள்ளதுதான்.

இந்த லக்ஷண கீதங்களில்கூட ஏற்பட்டிருக்கும்ராகங்கள் முன்னூறு ராகங்களே.

ஸம்ஸ்கிருதத்தில் எழுதும் புஸ்தகங்களில் சாஸ்திரங்களில் சில லக்ஷண லக்ஷியம் சேர்த்தே எழுதியிருப்பதுபோல், ராகங்களின் ஸஞ்சாரக்கிரமத்தையும் ராகத்தின் பெயரையும் காட்டி எழுதியிருப்பது கவனிக்கத் தக்கதாகும்.

ஆகவே இந்த ஆயிர ராகங்களுக்கு ஆரோஹண அவரோஹணங்களை மட்டும் காட்டும் புஸ்தகத்தின் கிரந்தகாரரும் தெரியவில்லை. அதில் ராகங்களின் லக்ஷணமும் விரித்துத் தெளிவாய் எழுதியிருக்கவில்லை. இந்த அட்டவணையையே இக்காலத்து ஸங்கீதப் புஸ்தகங்களை அச்சிடுவோர் எழுதிப் பிரசுரிக்கிறார்கள். அதன் அபிப்பிராயம் இன்னதென்று யாருக்கும் தெரியவில்லை. அவைகள் விற்பனை யாவதற்கும் குறைவில்லை.

கீதங்களை ஸ்வரப்படுத்தி எழுதியிருக்கும் லக்ஷண கீத புஸ்தகம் மூன்றுவகை என்று சொன்னோமல்லவா? அதில் வெங்கடமகி இயற்றிய கீதங்களைக் காலம் சென்ற (முத்துசாமி தீக்ஷிதர் அவர்கள் வம்சத்திற் பிறந்த அவரது பேரப்பிள்ளையான) சுப்பராமதீக்ஷிதர் அவர்கள் "ஸங்கீத ஸம்பிரதாயப் பிரதர்சினீ" என்னும் நூலில் அச்சிட்டுப் பிரசுரித்திருக்கிறார்கள்.

மற்றும் உள்ள இரண்டும் அச்சிடப்படவில்லை. ஆனால் ராகங்களின் ஆரோஹ அவரோஹ அட்டவணை மட்டும் அச்சிட்ட ஸங்கீத புஸ்தகங்களில் அநுபந்தமாகக் காணலாம். ஆனால் லக்ஷண கீத புஸ்தகத்திலிருந்து ஸ்வரஞான பலமிருந்தால் ஏதோ ஒருவகையாய் நாம் ராகத்தின் ஸஞ்சாரத்தை நிர்ணயித்துக் கண்டறியலாம். ஆனால் கேவலம் ஆரோஹணம் அவரோஹணம் மட்டும் எழுதியுள்ள புஸ்தகத்திலிருந்து ராக ஸஞ்சாரத்தைக் கண்டுபிடிக்க இடமில்லை. இப்படி புஸ்தகமில்லாததாலும் ஸ்வரஞான மில்லாததாலும் இருவிதத்திலும் ஸங்கீத சூனியராயிருந்தபோதிலும் ஸங்கீத ஞானஸ்தராய் வேஷம் போட்டுக்கொண்டிருப்பவர்இந்த இரண்டாவது தினுசு அச்சிட்ட புஸ்தகத்தை வாங்கித் தங்கள் அலமாரிகளில் வைத்துக்கொண்டு ஸங்கீதத்தைச் சிரமப்பட்டு அப்பியஸிக்காமலும் ஸங்கீதத்தில் முக்கிய பாகமான ராகத்தின் லக்ஷணத்தை அறியும் திறமை யில்லாமலும் இருந்தபோதிலும், ஸங்கீத ஸம்பந்தமான சில பரிபாஷை வார்த்தைகளை (Technical Terms) பேசிக்கொண்டு ஸங்கீதத்தைப்பற்றி வாய்மொழியாய்ப் பேசித் தள்ளிக்கொண்டு இருப்பவரே யன்றித் தாங்கள் பேசும் விஷயங்களை அனுபவ வித்தமாய்ப் பாடிக்காட்டிதிருஷ்டாந்தப்படுத்தும் வல்லமை யின்றிப் பிதற்றுவோராம். இந்த வகையரா மனிதரிடத்தில் இன்னொரு கெட்ட சுபாவம் ஒன்றுண்டு. அதென்னவெனில், "குறை குடம் கூத்தாடும்" என்னும் பழமொழிக்கிணங்க நல்ல பாடகர்கள் பாடும் பாட்டுக்களை லக்ஷண பூர்வமாய்க் கேட்க முடியாதிருந்தும், "இவருடைய பாட்டுக் காதில் ஏறவில்லை" என்றும் "அவருடைய பாட்டுச் சுகப்படுகிறதில்லை" என்றும் அதிகப் பிரஸங்கமான குணதோஷத்தைச் சொல்லுவதால், நமது ஸம்பிரதாய வித்வத்து முறையான ஸங்கீதம் குறைபட்டு வருகிறதென்று யாரும் அறியலாம். தாம் குறை கூறும்போது, "பாட்டு இன்ன விதமாய் இருக்கவேண்டும். அது இன்னாருடைய பிராசீன ஸாஹித்தியத்தில் இப்படித்தானிருக்கிறது. இது இவ்விதமா யிருக்கக்கூடாது" என்று சுட்டிக்காட்டினால் எவ்வளவோ சௌகரியமாயும் வித்தை அபிவிருத்திக்கு வரும்படியாயும் இருக்கும். அப்படிக்குக் காட்ட வேண்டிய திறமையோ இல்லை. நமது ஸங்கீதத்தில் அபிமானமுள்ளவர்களே! மேற்படி போலி ஞானஸ்தர்கள் அதிகப் பிரஸங்கமாய்ப் பேசுவதையும், அவர்கள் ஸங்கீதத்தை நடத்துவதற்காகத் தலையிட்டுக் கொள்வதையும் நிறுத்தி, ஸங்கீத ஸபைகளில் அவரது அபிப்பிராயங்கள் தலையெடுக்காமல் அடிக்கவேண்டுமென்பது நீங்கள் இவ்வித்தைக்குச் செலுத்தவேண்டிய உங்கள் முதற்கடமை யென்று எண்ணவேண்டும்.

பி. எஸ். சுந்தரம் ஐயர், பீ.ஏ., எல்.டி.

# கல்யாணி
## KALYANI
### 3-ம் அதிகாரத் தொடர்ச்சி

“ பிரபுவே ! இல்லை. இவ்விதத் துறைகளில் இழிபவர், கிழம், குருடு, அசக்தர் இவர்களைத் தங்கள் ஆலோசனையில் சேர்க்கிறதில்லை. நான் உம்மை எச்சரிப்பது வேறு விஷயத்தில். புனபதிகளுக்கு நீர் மிகுந்த கஷ்டமான காரியங்களைச் செய்திருக்கின்றீர். உண்மையைச் சொல்லுகிறேன். நம்பும். அவர்கள் உக்ரமானவர்கள். மனத்தமொற்றமாகித் துணிவு பிறந்தவருடன் காரியங்கள் நடத்துவதில் எப்பொழுதும் அபாயமுண்டு” என்று முனியம்மாள் சொன்னாள்.

“ சீ ! எங்களுக்குள் நடந்தது சட்டப்படி நடந்ததே ஒழிய, நானாகச் செய்ததல்ல. வழக்கின் முடிவை எதிர்க்க அவர்கள் சட்டத்தின் உதவியைத்தான் தேடவேண்டும்” என்றான் வீரசேனன்.

“சரிதான், அவர்கள் வேறுவிதம் நினைக்கலாம். மற்றைய நிவர்த்திகட்கிடமில்லாவிட்டால், கையாலானதைப் பார்க்கலாம்” என்றாள்.

“நீ சொல்லுகிறதென்ன ? மாதவன் தேகக் கெடுதி செய்யமாட்டானல்லவா ? ” என்றான்.

“அந்த வாலிபன் கவுரவமுடையவன், கபடமற்றவன் ; இம்மட்டோ, உதாரன், தயாளு, கம்பீர சுபாவமுடையவன். ஆனாலும் அவன் புனபதி வமிசத்தன். சமயம் பார்த்திருப்பான். தனக்கு நேர்ந்த துன்பங்களால் மனம் துணிந்திருப்பவனைச் சட்டத்தைத்துணைக் கொண்டு நிர்ப்பந்திப்பதா லுண்டாவதைப்பற்றி எச்சரிக்கையா யிருக்கவேண்டும். ஆகையால் அவன் விஷயத்தில் நீர் கவனமாயிருக்கவேண்டும் ” என்றாள்.

தெரிந்தோ தெரியாமலோ முனியம்மாள் சொன்னது வீரசேனனுடைய பயத்தை உறுதிப்படுத்துவதாயிற்று. முற்காலங்களில் நடந்துவந்த சதிக்கொலைகள், அபூர்வமான காரணங்களால் தற்காலத்திலும் நடத்தப்படுகின்றன என்பதை அவன் அறிந்தவன். புனபதிகள் விஷயத்தில் நடத்தப்பட்ட வியாச்சியங்களால் மாதவனுக்குக் கெடுதிகளுண்டா யிருக்கின்றன. அவற்றால் அவன் பழிவாங்க நினைக்கக்கூடும். நியாயஸ்தல முடிவுகள் சிலவற்றால் அடிக்கடி பயங்கரமான செய்கைகள் நடத்தப்பட்டிருக்கின்றன என்று அவன் அறிவான். தனக்குண்டாகிய பயத்தை முனியம்மாள் அறியாமலிருக்க அவன் முயன்றாலும் அவனால் முடியவில்லை. அவளிலும் குறைந்த புத்தியுடையவர்களுக்கே அவன் மனத்தில் அது நன்றாய்ப் பதிந்துவிட்டதென்று தெரியக்கூடியதா யிருக்கும்பொழுது அவளுக்கு அது தெரியாமலிருக்குமா ? அவன் குரல் மாறிப்போய் “ மாதவன் கவுரவமுடையவன். ஒருவேளை அப்படி யில்லாவிட்டாலும், தங்கள் கையாலானதைப் பார்ப்பவர் படுகிறபாடு அவன் தெரியாதவனா ?” என்று சொல்லிவிட்டு அவள் மறுமொழிக்குக் காத்திராமல் சடக்கென எழுந்து அவ்விடம்விட்டுச் சென்றான்.

### 4-ம் அதிகாரம்

மிகுந்த மௌனத்துடன் வீரசேனன் தன் மாளிகையைநோக்கி நடந்தான். சுபாவத்தில் கோழைத்தனமுள்ளவளும், அக்காலத்துக் கன்னிகைகளுக்கு வழக்கமாய்க் கற்பிக்கப்பட்டு ஆசாரத்தில் நடந்து வந்த பெற்றோரிடத்தில் பயபக்தி, அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடத்தலாகிய குணங்களுடன் வளர்ந்த அவன் பெண் அவனுடைய ஆலோசனையைக் கலைக்கத் துணியவில்லை. இப்படிக் கால் “மைல்” தூரம் சென்றபின் அவன் சடக்கெனத் திரும்பித் தன் மகளைப் பார்த்து “கல்யாணி ! நீ என் முகம் இவ்வளவு வெளுத்துத் தோன்றுகிறாய்” என்றான்.

எவ்வித முக்கியமான சங்கதிகளிலும் தன்னைக் கேட்டால் ஒழியத் தான் தனக்குத் தோற்றுவதைப் பேச ஒரு யுவதிக்கு அதிகார மில்லாததாகக் கருதப்பட்ட அக்காலத்தில், முனியம்மாளுக்கும் தன் பிதாவுக்கும் நடந்த சம்பாஷணையின் அருத்தம் தெரியாதவளாகப் பாவிக்க வேண்டியவளாகிய கல்யாணி அப்படிச் செய்து, அவர்கள் அப்பொழுது நடந்துபோகும் பாந்த காட்டில் மேயும் மிருகபயத்தால் தன் முக வெளுப்பு உண்டானதாகச் சொன்னாள்.

அக்காலத்தில் சில பிரபுக்கள் காட்டு மிருகங்களை வளர்த்து வந்தார்கள். காளைகள் முற்காலத்திலிருந்த பலமும், பரிமாணமும், மிகக் குறைந்தும், பிடரிமயிர் நிறைந்தில்லாமலும், உருவம் சிறுத்தும், நிறம் குன்றிமங்கலாயும், பலமற்றும், கறுப்புக்கொம்பும் குளம்பு

* An adaptation of Bride of Lammermoore.

முடையவைகளாக இருந்தாலும், அவைகளுடைய மூர்க்கம் மட்டும் குறையவில்லை. மனிதர்களிடத்தி லுள்ள பகையால் பழக்கப்படக்கூடாதவைகளாயும் தெரியாமல் ஒருவன் சமீபத்தில் போய்விட்டாலும் அல்லது வேண்டுமென்று அவற்றின் மந்தையைக் கலைத்தாலும் அடிக்கடி அபாயகரமானவைகளாயும் அவைகளிருந்தன.

இக்காளைகளில் சில கும்பலாய்ச் சமீபத்தில் நிற்கக் கண்டதைத் தனக்கு வேறு வகையாலுண்டான பயத் திற்குக் காரணமாக வியாஜமாக்கினாள். அவள் அடிக் கடி இந்த வேட்டைக்காட்டில் திரிந்து, காட்டு மிரு கங்களைக் கண்டு பழகியவள். இக்காலத்தில்போல அக்காலத்தில் ஸ்திரீகள் பயமிருப்பதாக வீணாக நடிக் கிற வழக்கமில்லை. ஆனாலும் அப்பொழுது மெய்யா கப் பயப்படவேண்டிய காரியம் நேரிட்டது.

அவள் அப்படிச் சொல்லவும் அவளுடைய கோழைத் தனத்திற்காக அவள் பிதா அவளை அதட்டிக் கண் டிக்க ஆரம்பிக்கும்பொழுது, அவளுடைய சிவந்த மேலாடையைக் கண்டோ, அல்லது மிருகங்களுக்கு ஒவ்வொரு காலத்திலுண்டாகிற காரணமில்லாத வீரா வேசத்தாலோ ஏவப்பட்டுத் தூரத்தில் புல் மேய்ந்து கொண்டிருந்த மாட்டு மந்தையிலிருந்த காளை ஒன்று கூட்டத்திலிருந்து திடீரென்று பிரிந்து "உம்" காரம் செய்து, பூமியைத் தன் முன்கால் குளம்பால் கீறிக் கொண்டும், தனக்குக் கோபமும் மூர்க்கமும் உண்டாக் கிக்கொள்வதற்குப்போல் தன் கொம்புகளால் மண் ணைக் கிளைத்துக்கொண்டும், தான் புல்மேயும் இடத்தில் தூராகிருதமாய்ப் பிரவேசித்தவர்களைச் சமீபித்தது.

அவ்வெருதின் செய்கையைக் கண்ட வீரசேனன், அது கெடுதி செய்யப்போகிறதென்று அறிந்து, தன் கக்கத்தில் தன் மகள் கையை வைத்துப் பிடித்துக் கொண்டு, அந்த மாட்டிற்கு அகப்படாமல் அதன் கண் பார்வைக்குத் தப்பிப்போக நினைத்துத் தீவிரமாக நடந் தான். இது மிகவும் அவிவேகமான செய்கை. அவன் ஓடுகிறதைக்கண்டு தைரியங்கொண்டு அந்தக் காளை அவர்களைத் துடர்ந்து அதிக வேகமாய்த் தூரத்திற்று. வந்திருக்கிற ஆபத்தைக் கண்டால், வீரசேனனிலும் அதிக மனத்தைரிய முள்ளவர்களும், அதைரியப்பட் டிருப்பார்கள். ஆனால் மரணத்திற்கும் அஞ்சாமல் செய்யும் புத்திரவாஞ்சையானது அவனுக்குத் துணை யாயிருக்க அவன் தன் புதல்வியைத் தாங்கி இழுத்துக் கொண்டு சென்றான். கடைசியில் பயம் மிஞ்சி ஓட முடியாமல் அவள் விழுந்துவிடவே, தப்பி ஓடமுடி யாமல் அவன் திரும்பி அவளுக்கும், அதிக வேகமாய் ஓடித் தூரத்துவதால் மிகுந்த கோபத்துடன் சமீபத் தில் வந்துவிட்ட அந்த காளைக்கும் மத்தியில் தான் நின்றுகொண்டான். அவனிடத்தில் ஆயுதம் ஒன்று மில்லை. கைத்தடிகூடவில்லை. அதிருந்தாலும்தான் என்ன பிரயோசனப்பட்டிருக்கும். பிதாவோ, புத் திரியோ, அல்லது இருவருமோ அம்மிருகத்தால் இறக்கவேண்டியதாயிருந்த அந்த ஆபத்துவேளையில், பக்கத்திலுள்ள ஒரு புதரிலிருந்து பிரயோகிக்கப்பட்ட ஒரு துப்பாக்கிக் குண்டால் அக்காளையின் ஓட்டம் தடைப்படுத்தப்பட்டது. அதன் முதுகெலும்பு, தலை மண்டை யோட்டுடன் சேர்கிற கழுத்தின் பாகத்தில் குண்டு பட்டதால், அதன் உடம்பின் வேறெந்தப் பாகத்தில் பட்டாலும் அதற்குச் சிறிதும் தீங்கு விளைத்திருக்க முடியாத அந்தக் குண்டடி அத ற்கு உடனே மரணத்திற்கேதுவாயிற்று. கோரமான கூச்சலுடன் அது முன்னே இடறி, அதன் கால்நடை யாலல்லாமல் முன்வந்தவேகத்தின் துடர்ச்சியாக, வீர சேனனுக்கு 10 அடிதூரத்தில்வந்து விழுந்தது,மரண வியர்வையால் அதன் அவயவங்கள் கறுத்து, நரம்புத் துடிப்பால் இழுத்துப் பதைத்துத் தரையில் புரண்டது.

இவ்விதம் அதிக ஆச்சரியமாக உண்டாகிய ஆபத்து நிவிர்த்தியை அறியாதவர்களாய்க் கல்யாணி மூர்ச்சை யற்றுத் தரையில் கிடந்தாள். விலக்க ஒண்ணாத கோரமான மரணத்திலிருந்து எதிர்பாராமல் திடீ ரென்று நீங்கிப் பத்திரமாய்க் காப்பாற்றப் பட்டதால், அவள் தகப்பன் ஸ்தம்பித்துப்போனான். நடந்த தின்னதென்று தெரிய ஒட்டாமல் செய்த அவனுக் குண்டாகிய பேசமுடியாத குழப்பமான ஆச்சரியத் தோடு இறந்தும் பயங்கரமாயிருந்த அந்த மிருகத்தை அவன் உற்றுப்பார்த்தான். தன் கையில் ஒரு சிறு துப்பாக்கியுடன் ஒரு மனித உருவம் சோலையின் மரக் கிளைகளின் மத்தியில் வருவதை அவன் பார்க்காவிட் டால், இடிவிழுந்து அந்த மிருகத்தின் ஓட்டம் தடைப் பட்டதென்று அவன் நினைத்திருப்பான். நடந்ததைப் பற்றிய ஞானம் அவனுக்கு அவ்வளவு தெளிவற்றதா யிருந்தது.

இது உடனே வீரசேனனுக்குத் தங்களுடைய நிலைமையைத் தெரிவித்தது. தன் பெண்ணைத் திரும்பிப் பார்க்கவே அவளுக்கு உதவி செய்யவேண்டிய அவசியம் அவன் மனத்திலுண்டாயிற்று. தன்னுடைய வனவேடர்களில் ஒருவனாக அவன் நினைத்த அந்த மனிதனை அழைத்துத் தன் பெண்ணுக்கு உடனே வேண்டியவைகளைச் செய்யச் சொல்லிவிட்டு உதவிக்காக ஆள் தேட ஓடினான். அவ்வேட்டைக்காரன் அவர்கள் சமீபம் சென்றான். அவன் ஒரு அன்னியனென்று வீரசேனன் கண்டும் தன்னுடைய அவசரத்தில் அதிகம் ஒன்றும் பேச முடியாதவனாய், தன்னிலும் அதிகத் திடகாத்திரமும் ஜாக்ரதையுமுடையவனாயிருந்த அவனிடத்தில் அடுத்துள்ள ஒரு ஊற்றிற்கு அவளைக் கொண்டுபோகச் சொல்லிவிட்டு, அதிகமாக உதவி தேட முனியம்மாள் குடிசைக்குத் திரும்பினான்.

காலத்தில் செய்த உதவியால் அவர்களைத் தனக்கு அதிகக் கடமைப்பட்டவர்களாகச் செய்த அந்த மனிதன் தன்னுடைய நற்செய்கையை அரைகுறையாக விட்டுவிட மனமற்றவனாக இருந்தான். தரையிலிருந்து கல்யாணியைத் தன் கைகளிலெடுத்து, அவனுக்கு நன்றாய்த் தெரிந்திருந்ததாகத் தோன்றிய பாதைகளிலும் அக்காட்டின் ஊடுவழிகளிலும் அவளைத் தூக்கிச் சென்று, ஒரு காலத்தில் மிக்க அழகான ஒரு கட்டடத்தால் மூடப்பட்டிருந்து ஸ்படிகம்போல் தெளிந்த நிறைந்த நீரையுடையதான ஒரு ஊற்றின் பக்கத்தில் அவளைச் சாவதானமாய் இறக்கி வைக்கிறவரை ஓரிடத்திலும் அவன் நிற்கவில்லை. அந்தக் கட்டடம் உடைந்து தகர்ந்து கிடந்ததால் தரையிலிருந்து கொப்புளித்து வருகிற தண்ணீர் அதன்மேல் வெயிலும் காற்றும் பட அதன் பக்கத்தில் உடைந்து கலந்து கிடக்கும் வெண்சுதை உருவங்கள் மேலும் பாசி படர்ந்த கற்களின்மேலும் ஓடிக்கொண்டிருந்தது.

S. V. கள்ளபிரான் பிள்ளை, பீ. ஏ.

ஜகந்மாதாவின் ஸ்மரணம்.—பெண்ணும் பொன்னுமே உலக முழுவதையும் பாவத்தில் முழுக்கடித்து விட்டன. பெண்ணை ஜகந்மாதாவின் ஸ்வரூபமென்று நீ எண்ணுங்கால் அவளுடைய வன்மை அடங்கிப் போய் விடுகின்றது.



# நாகாநந்தம்

## NAGANANDAM: A CLASSICAL DRAMA

(தொடர்ச்சி)

சங்க சூடன்—

என்று மின்மை யின்றி விளங்குறூஉம்
அணிபணி தன்மேல் அடைதாக் கபாலத்
தொடரின் வெண்மதித் தொகைகொடு சங்கான்
உடலென விளங்குமிம் மாயனம்
விநாய கர்க்கின்பம் விழைத்து பொலிந்தென.

நீ போ! அமைதி பெறும்படிப் பேசுவதில் பிரயோஜனம் என்ன? கருடன் வரும்வேளை யாகிவிட்டது. (தாயின் காலில்வீழ்ந்து பணிந்தெழுந்து கைகுவித்து)

மானிட ராவ தரிதென்பர் மானவர்;
ஞான முனர்ந்து நயம்பட வளர்ந்து
மோன மூழ்கி முதல்வனை யடைவதே
வழியென்ப ராரியர்; வானுென் றுண்டென்பர்—
தகுதண் டனைதனை தந்து தக்க
புகுமுடற் றந்து புகுத்துமென்றும் முரைப்பர்;
அம்ம விவற்றுள் ளுண்மை யறிவது
எம்மனோர்க் கில்லை; இவ்வுட லழிந்து
ஆருயிர் தானும் நீரொடு நீரும்
காற்றொடு காற்றும் ககனத் ததுவும்
கலந்திடு மென்பதும் கண்டிலன்; அன்றி,
இவ்வுல கிதுவே இருமையு மென்றும்
புண்ணியக் கின்பமும் புன்மைக் கல்லதும்
நண்ணுவ ததுவே நாடு நயமதனால்
விண்ணென் றொன்றிலையால் புண்டரு நாகின்று
லென்றெண் ணுவதோ; அன்றியிவ் வுலகில்
இன்ப மடைவதே இம்மையென் றெண்ணி
விழைவதோ, யெதுவோ,குழைமனத் தறிந்திலேன்.
புழைவள ரிரவுபோல் ஒழியா விளங்கும்
சன்மக் காட்டில் தவழ்ந்து
கன்மத் தொகையின் கணக்கிற் கேற்ப
எப்பிறப் படையினு மப்பிறவி தன்னில்
தப்பா துனையே தாயென வடைதா
ஈதோர் வரந்தா கோதிலென் னுயே!

(தாயின் காலில் வீழ்ந்து நமஸ்கரிக்கின்றான்.)

கிழவி.—(கண்ணீர் வடித்து) அந்தோ! என்ன இனிய மொழிகள்! என்னப்பனே! உன்னைவிட்டு என் கால் என்னைகொண்டு செல்ல எழவில்லை. இவ்விடமே உன்னோடு உயிர்மாய்ப்பனடா! என் குழந்

தாய் ! என் அப்பா உன்னைவிட் டெப்படியடா நான் வாழ்வேன் ! என்னப்பா ! என் செல்வமே ! என் சிரே !—

சங்கசூடன்.—(எழுந்துகொண்டு) இத்தக்ஷிண கோகர்ணத்தில் விளங்கும் எம்பெருமானது திருச் சன்னிதானம் சென்று அவரது கோயில் வலம்வந்து அவரது ஆணையைச் செலுத்துவன் — (இருவரும் போதல்).

நாயகன் .—

இன்றே வமயம் வாய்ந்ததென் எண்ணத்திற்
கெவ்வழி துணைக்கொண் டெய்து முடிவுறும் .—

(பராபத்யன் வரல்)

பராபத்யன் .—இந்த இரண்டு செவப்பு வஸ்திரங்கள் இளவரசு மித்ராவஸுவின் தாயால் அனுப்பப் பட்டுள்ளன. அவற்றை அரசிளங்குமாரர் அணியட்டும்.

நாயகன் .—(அவற்றைப் பார்த்து ஸந்தோஷத் துடன் — தனக்குள்)

எண்ணு தடைந்தவிவ் விருவுடை தம்மா
லெண்ணிய விருப்ப மெய்துவதா யிற்று.

(வெளிப்படையாக)

கஞ்சுகி ! யான் அதைப் பெறட்டும் !

(பராபத்யன் அவற்றைக் கொடுத்தல்)

நாயகன்.—(அவற்றைப் பெற்று—தனக்குள்) மலையவதியின் மணமின்றே பலம் தந்தது. (வெளியாக) பாராபத்ய !—நீ போகலாம்.—யான் நமஸ்கரித்ததாக அரசியிடம் சொல்வாய் !

பராபத்யன் .— தாங்கள் ஆணையிட்டபடியே ? (போகிறான்.)

நாயகன் .—

உற்ற விந்த பொற்றிகழ்க் கலைதாம்
செறியின் பாழ்த்திய துறுமுயிர் பிறர்க்காய்
அளிதர வளித்திட அவாவினேற் கின்றே !

(சுற்று முற்றும் பார்த்து)

துளங்கிட மலையமும் தொடர்கொளும் பழுவமும்
தடதட கிடுகிடுத் துடற்றி யெங்கணும்
படபொடி நிலனதும் அடிபட மரவினம்
வெடிபட ககனமும் மிகைவய வுடல்தொறும்
வடவடத் திடநமன் மனமது மயங்கிருள்
செறித்தொகைத் தொடர்கொள வருஉம் வழிதொறும்
கல்மணுங் கலந்தெரிந் தெல்லென் வெயில்பட
சில்லென் கூதிரும் செவ்வனற் படவையும்
ஒல்லென வீசி எல்லையீண் டெங்கும்
அடி அதிர்ந் திம்மலை அலமரல்,—
கொடுங்கழுத் தலையவன் குறுகலைக் காட்மோல் ;
அப்பாழ்ங் கூரலகான் பராஅவிய வச்சிறை
செப்பொணு வொழுங்கின் திமிரத் தொகைதாம்
படுநாள் படரூஉம் யூழி கொண்டல்
கக்கிடு மழலின் சிவணும் ;
வருஉம் விசை யதனுன் அழூஉங்கடல் வருத்தி
பரூஉ மூழி வெள்ளம் படர்ந்தது
கரைதின் றோடி கலங்கிட் டலையவும்,
திக்குக் கரிதாம் திகைத்து நடுங்கி
புக்கி டந்தெரியாப் புலம்பி
ஊழி கிட்டிற்றென் உப்பரைக் கலக்கவும்,
செய்யொளி புறமெலாம் செறிதா
மெய்படு செம்மையின்
நைபடு மாறுறு ஞாயிறென்றி வந்தாஅங்
கப்புள்ளின் நாயகன் அடைந்ததால்—
சங்க சூடனும் தலத்திவன் வருமுனம்
தங்கூன் பாறையின் தயங்கா தடைகுவன்.

(கற்பாறைமேல் உட்கார்ந்து அக்கல்லின் ஸ்பர்சத்தைப் பெறுகிறான்.)

செய்யச் சீதச் சேற்றின் தழுவுா
மையில் மலைய வதியுமிப் பாறையாங்
கெய்திட தருமெற் கெய்வரு மின்பம் !—அதான்றி
சிறுநாள் தாயின் கவான்மிசைச் செறிந்து
பெறலரூஉ மின்பம் பெரிதுமிச்
சிறுபாறை மிசைபடீஇ பெறுமின்பம் பயக்குமென்?
கருடனும் வந்தனன் கலையுடீஇக் கொள்வனே !

(சிவப்பு வஸ்திரங்களை அணிதல்)

---

ஜகந்மாதாவின் ஸ்மரணம்.—ஆசையை உண்டாக்கும் இடங்களுக்கு அவசியமாய்ப் போகும்படி நேரிடும்போது ஜகந்மாதாவை இடைவிடாமல் ஸ்மரணம் செய்துகொண்டுபோனால், உன் ஹிருதயத்திலேயே பதுங்கிப் பார்த்துக்கொண்டிருக்கும் கெடுதிகளுக்குக்கூட உட்படவொட்டாமல் அப்பாதேவதை உன்னைப் பாதுகாப்பள். அப்படிப்பட்ட இடங்களில் உன் அன்னையாகிய அம்பிகையின் ஸாந்நியத்தியமே உன்னைத் தீய செய்கைகளுக்கும் எண்ணங்களுக்கும் உட்படவொட்டாது வெட்கமுறச் செய்து தவிர்க்கும்.

# பெரும்புயல்

## TEMPEST

### இரண்டாம் அதிகாரம்

இனி கப்பலுடைந்ததினின்று தப்பிக்கரையேறின வர்க ளென்னசெய்து கொண்டிருந்தார்கள் என்று சிறிது ஆராய்வோம். இப்படி இறங்கினவர்கள் தனித் தனிக்கூட்டமா யனேகரிருந்தார்களென்று சொன் னோம். அவற்றில் சிலர் ஒருவனைப்பார்த்து, இவன் தூக்குமரத்திற் கென்று பிறந்தவனுயிற்றே! அதினு லல்லவா அந்தத் தூக்குமரத்தினதிர்ஷ்டம் இவன்மூழ் கிப்போகாமல் அவனுடன் நாமுமிருந்ததினல் அவன் பிழைத்ததோடு நாமும் பிழைத்துக்கொண்டோமென்று ஒருவரை ஒருவர் சடாய்த்தமாய்ப் பேசிக்கொண்டு துக் கத்தை மறக்க முயற்சிசெய்து கொண்டிருந்தார்கள். மற்றொரு பக்கத்தில் காலிபன் விறகு சுமந்துகொண்டு பிராஸ்பெரோவை சாபமிட்டுக்கொண்டே வந்து கொண்டிருந்தான். இவருக்கு அவர் பாஷை கற்பித்த பயனெல்லாம் தன்னை வையவும் திட்டவும்தான் பயன் பட்டது. அந்தச் சமயத்தில் அந்தப்புறமாய் கப்பலி லிருந்து வந்த ஸ்டீபானோ என்ற உக்கிராணக்காரன் ஒருவனும், டிரின்குலோ என்ற விதூஷகனும் அவ்வழி யாய் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களைக் கண்டு பயந்து காலிபன் உடனே குப்புறவடித்து படுத்துக் கொண்டான். அப்படியிருந்தும், அவனிருந்தது டிரின் குலோவுக்குத் தெரிந்து இது என்ன மனிதனு மீனு இன்னதென்று உருத்தெளிவு இல்லாமலிருக்கிறதே. ஆ! இதை நம்மூருக்குக் கொண்டுபோய் ஒரு இடத் தில் வைத்துக் காண்பித்தால் வேலைமெனக்கிட்ட ஒவ்வொருவனும் ரூபாய் கொடுத்துவந்து பார்க்கமாட் டானு? நம்மூரில் உயிரோடிருக்கிற ஒருவனைப்பார் த்து ஒரு தம்பிடி பிச்சைகொடுப்பவன் கிடையாது. செத்துப்போன மிருகத்தை வைத்துக்கொண்டு காண் பித்தால் அந்த அதிசயத்தைக்காண கூட்டங்கூட்டமாய் ஜனங்கள் அதிக பணம் கொடுத்து வருவார்களல்லவா? என்று சொல்லிக்கொண்டே காலிபனை உதைத்துப் பிரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். காலிபனும் அவன் உதை பொறுக்காமல் கத்திக்கொண்டிருந்தான்.

ஸ்டீபானோ.—நல்லது இது என்னவாயினு மென்ன வென்று கண்டுபிடிக்க கொஞ்சம் சாராயம் கொடுத்துப் பார்ப்போமென்று காலிபனுக்குத் தன் கையிலிருந்த புட்டியிலிருந்து சாராயம் கொடுத்தான். சாராயத்தை உட்கொண்டவுடனே அதன் மதுரத்தையும் அது உண் டாக்கிய உற்சாகத்தையும் நினைத்து நினைத்து ஆ! இது பூமியிலுண்டானதன்று. இன்று முதல் உமக்கு அடிமையாகின்றேன். நீர் ஆகாயத்தினின்று வந்த வர்போலத் தோன்றுகிறது, என்று சொன்னன். பின் னும் குடிவெறி அதிகப்பட அதிகப்பட, வாரும் நான் உமக்கு இந்தத் தீவில் நல்ல தண்ணீரெங்கே, உப்பு ஜலம் எங்கே என்று காண்பிக்கிறேன். உமக்காக மீன் பிடித்து கட்டை வெட்டிக்கொண்டு வருகிறேன். நான் இப்போ அவ்வளவு வேலையுஞ் செய்துகொடுத்தும், நான் யாருக்கு உழைக்கிறேனே அச்சண்டாளன், இது மாதிரி மதுரமானவை ஒன்றுந்தருவதில்லை. ஆகவே இனி அவனுக்கு வேலையொன்றுஞ் செய்வதில்லை. உமக்கே வேண்டிய வேலை செய்கிறேன். கிழங்குகள் பிடிங்கித்தரவோ, பறவைகள் பிடித்துத்தரவோ, பழங் கள் பறித்துத்தரவோ எதுவுஞ் செய்கிறேன் வாருங்க ளென்று அவர்களை அழைத்துக்கொண்டே, தனக்கு இப்புது எஜமானன் வந்தபின்பு குறைவொன்றுமில்லை யென்று,மற்றக் குடிகாரர் நினைத்துப் புத்தியைத்தவற விடுவதுபோல் விட்டு, உல்லாசமாய்ப் பாடிக்கொண்டு வந்தான். இத்தனையும் சாராயத்தினல் வந்ததல்லவா என்று நினைத்து டிரின்குலோ எது சாராயமென்று விசாரித்தால்,ஸ்டீபானோ இவனுக்கு முன்பு கரையேறி னவன் கப்பலிலிருந்து புயல் சமயத்தில் பாரத்தைக் குறைப்பதற்காகக் கீழே எறிந்துவிட்ட சாராயம் நிறை ந்த பீப்பாய் ஒன்று மிதக்க அதைப் பிடித்து தொத்தி வந்து ஒரு குகையில் பத்திரமாய் வைத்துக்கொண்டு, அதைத் தன் இடம் ஜோபியிலிருந்த புட்டி ஒன்றில் கொஞ்சம் கொஞ்சம் அடைத்துச் சாப்பிடுவதாகச் சொன்னன்.இப்படி யெல்லாரும் குடித்து வெறிபிடித் திருக்கும்போது அவர்கள் காலிபனை நம்மைத்தவிர இத்தீவிலிருப்பது வேறே யார் என்று கேட்டார்கள். காலிபன்ஒரு மந்திரவாதியும் அவன் மகளுமிருக்கிறார் கள்.இந்தத்தீவு என்னுடையது,என்னை யவர்கள் குரூர மாய் அடித்து அநியாயஞ்செய்து இதைப் பறித்துக் கொண்டார்கள். இப்பொழுது உங்களுக்கு நான் அடி மையாயிருப்பதால் இந்தத் தீவை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம். ஆனல் முதலில் அந்த மந்திரவாதியைக் கொன்றுவிட வேண்டியது. அதற்குத் தக்கசமயம் என்னவென்றல் சாயங்கால வேளையில் தூங்குவது அவனுக்கு வழக்கம். அந்தச்சமயம் பார்த்து, முதலில் அவன் புஸ்தகங்களைக் கைப்பற்றிக்கொண்டு பருத்த விறகுக் கட்டையொன்றைக்கொண்டு பலமாக அவன்

தலையிலடித்துக் கொன்றுவிடலாம். பிறகு அந்தப் புஸ்தகங்களை யெரித்துவிட்டு மற்றச் சாமான்களையும், அவனே ஒப்பிலாச்சிறப்பு வாய்ந்தவளென்று சொல்லுகிற அவன் மகளைக் கல்யாணம் செய்துகொள்ளலாம். நான் அதிகமாகப் பெண்களையே பார்த்ததில்லை. ஆனால் ஸைகோராக்ஸ் எவ்வளவு கிழவியாயும் அசங்கியமாயு மிருந்தாளோ அவ்வளவுபோல் முற்றிலும் மாறாய் இவள் யௌவனமாயும் அழகாயுமிருக்கிறாள். அவளுக்குநேர் எதிரிடை என்று வைத்துக்கொள்ள வேண்டியதுதான். மற்றப்படி அவளைப்பற்றி அதிகம் சொல்லவும் வேண்டுமா என்றான். நல்லது அப்படியே செய்கிறோம். கிழவனைக் கொன்று அவன் பெண்ணைக் கவர்ந்து கொள்ளுகிறது நல்லதுதான் என்று சொல்லிக்கொண்டே அவ்வழி நடக்கையில் ஏரியில் ஓகோ இது மோசம்போலிருக்கிறது என்றாலும் இல்லாவிட்டாலும் எஜமானுருக்குத் தெரிவிக்க வேண்டியது கடமை என்று மனதில் ஞாபகமாக வைத்துக்கொண்டு, எப்போதும்போல இசைபாட வாரம்பித்து. உடனே இது என்ன ஆச்சரியம் என்று இருவரும் திடுக்கிட்டு நின்றார்கள். காலிபன் பின்னும் பயப்படாதேயுங்கள். இதுமாதிரி இன்னிசை இத்தீவிலெங்கு முள்ளது தான். ஆயிரம் வாத்தியங்கள் ஒருங்கே தொனித்தாற்போல அனேகந் தடவை சப்தங் கேட்பதுண்டு. அதைக்கேட்டு விழித்தும், விழித்தபின் அதின் இனிமையினால் தூங்கியுமிருக்கிறேன். ஆகையால் பயப்படாதேயுங்கள். என்னுடன் வாருங்களென்று கூப்பிட்டுக்கொண்டு வழிகாண்பித்து முன்சென்றான்.

இனி, கப்பலினின்று மற்றொரு கூட்டத்தார் புயல் தப்பி கரையிலேறி யிருந்தார்கள். அவர்கள் நேப்பிள்ஸ் அரசனாய அலான்ஸோ, அவன் தம்பி ஸெபாஸ்டியன் மிலானில் பிரபுவாயிருந்த அன்டோனியோ இவர் மூவரும் தம்மைச்சேர்ந்த மற்ற சிப்பந்திகளுடன் வேறொரு புறத்திலிருந்தார்கள். எப்படி அரசன்மகன் பர்டினன்டு தன் தகப்பனிறந்துபோனானென்று வருந்திக்கொண்டிருந்தானோ, அவ்விதமே அரசன் தான்மட்டும்பிழைத்ததாயும், தன்மகன் பர்டினண்டு இறந்துவிட்டதாயும் நினைத்து, யாவருந் தேற்ற சிறிதும் தேறுதல் அடையமாட்டாமல் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தான்.

பிரபுக்கள் ஐயா நமக்கின்று ஒருநாள் வந்த கஷ்டம், வியாபாரிகளுக்கு என்றைக்குமுள்ளது. எத்தனை கப்பற்காரன் மனைவி, தன் மங்கிலியத்தைக் கையில் பிடித்துக்கொண்டிருக்கிறாள். இதுபோலவும் மற்றப்படி எவ்வெவ்வளவு கஷ்டம் ஜனங்கள் அனுபவிக்கிறார்கள். நாமட்டுமாவது தப்பிப் பிழைத்து இவ்வளவு சவுகரியத்தோடிருக்கிறோமேயென்று நாம் சந்தோஷப்பட்டுக்கொள்வதைத் தவிர செய்யக்கூடியது வேறொன்றுமில்லை யென்று தேறுதல் சொல்லிக்கொண்டிருந்தான். அரசன் அப்படிச் சொல்லியும், ஐயோ! இப்படிக் கஷ்டம் வருமாயின் ஆப்பிரிக்கா அவ்வளவு தூரத்தில் பிள்ளையைக் கொண்டுபோய் கல்யாணஞ் செய்து வைத்திருக்கவும் மாட்டேன். அப்படிச் செய்வித்த விடத்திலிருந்து வரும் வழியில் என் புத்திரனையும் இப்படிக் கடலுக்கிரையாகக் கொடுத்திருக்க மாட்டேனென்று பலவாறாகப் புலம்பிக்கொண்டிருந்தான். சிலர் ஐயனே, அஞ்சாதேயுங்கள். நாங்கள் பார்த்தவரை அவன் அலைகளோடு எதிர்த்து எதுந் தளர்ச்சியில்லாமல் நீந்திக்கொண்டிருந்தபடியால் உங்கள் புத்திரனுக்கு ஒரு கெடுதியும் வரவில்லை. இத்தீவிலேயே வேறு இடத்தில் வந்து கரையேறி யிருக்கக்கூடுமென்று தேறுதல் சொன்னார்கள். அப்படிச் சொல்லியுமின்றுந் தேறுதலடையாமல், பெற்ற மனம் பித்து என்பார்களல்லவா, பின்னுமவள் ஐயோ நேப்பிள்ஸ்க்கும் மிலானுக்குமரசனாகவேண்டுமென்று அருமையாய் வளர்த்த குழந்தையை இப்பொழுது எந்த மீன் விழுங்கித் தின்றுவிட்டதோ, என்று உலக வழக்கமெங்குமொன்றாதலால், அரசனும் பிள்ளையைப் பரிகொடுத்துவிட்டு ஒரு பெண்பிள்ளைபோல் கதறிக் கொண்டிருந்தான். அவன் தம்பி ஸிபாஸ்டியன் நான் அந்தப் பெண்ணை ஆப்பிரிக்காவில் கொடுக்க வேண்டாமென்றெத்தனையோ சொல்லியும் அங்கே கொடுக்கப்போய் இந்த பையனுந் தவறி, நாமிவ்வளவு தடுமாற்றத்தில் வரவேண்டியதாயிற்று என்று ஆறுதல் சொல்லவேண்டிய இடத்தில்நம்முள்ளும் அநேகர் தமக்குப் பிடிக்காத விஷயங்களையெல்லாம் இதுமாதிரி சமயங்களில் தம் பெருமை விளங்குவதற்காகச் சொல்வதுபோல் மிகவும் துக்கிப்பவன்போலப் பேசினான். பின்னர் அழுகிறவர்கள் தாமே அழுது ஓய்வதுண்டு. அப்படி, அலான்ஸோ வருத்தமெல்லாம் அழுது தொலைத்துவிட்டு, அழுதுதான் என்ன, இனி ஆகவேண்டிய விஷயங்களைப் பார்ப்போம், என்று எல்லோரும் சிறிதுதூரம் வந்து நாலாபுறமும் பார்த்தார்கள். என்ன. இந்தத் தீவு மனித சஞ்சாரத்தைத் தவிர மற்றெல்லா விதமாயும் உதவும்போலிருக்கிறதே. உயிர் வாழவேண்டியன தவிர்த்து மற்ற எல்லாப் பொருளுமிவ்விடம் கிடைக்குமென்று நம்புகிறேன் என்று சொல்லிச்சடாய்த்தமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். அச்சமயத்தில்

ஏரியல் இவர்கள் கண்ணுக்குக் காணமல் ஆகாயத்தில் இன்னிசையுடன் பாடிக்கொண்டு இவர்கள் பக்கமாய் வந்தது. சாதாரணமாகச் செவிக்கினிய பாடல்களைக் கேட்டால் அனேகருக்கு நித்திரை வந்துவிடுவதுண்டு. ஆகவே பஜனைக்காரர் சிலர் இருந்தாற்போல் தூங்கி விடுவது நாம் பார்த்திருக்கிறோம். இவர்கள் உடைந்த கப்பலிலிருந்து கஷ்டப்பட்டு நீந்திவந்து கரையேறின அலுப்பையும், சரீர சிரமத்தையும் உத்தேசித்து, பாடலினினிமையையும், அந்த நிர்மானுஷியமான காட்டில் வேறு சப்தமில்லாத விடத்திலுண்டான இனிமையினை இவ்வளவு என்று சொல்லவும்வேண்டுமோ. அவர்கள் அயர்ந்து தூங்கிவிட்டார்களென்று அதிசயிக்கவும் வேண்டுமோ? ஆகவே எல்லோரும் தூங்கிவிட்டார்கள். ஆனால் இருவர்மட்டும் தூக்கம்பிடிக்காமலிருந்தார்கள். அவர்களில் அன்டோனியோ ஒருவன். அவன்போலிருந்த ஸிபாஸ்டியனென்ற நேப்பிள்ஸ் அரசன் தம்பி, மற்றொருவன். அன்டோனியோவைப்பற்றி முன்னமே நமக்குக் கொஞ்சம் தெரியுமல்லவா? தான் பட்டங்கட்டி ஆளவேண்டுமென்று தன்னண்ணனாகிய பிராஸ்பெரோவையும் அவன்குமாரத்தியையும், கடலிலனுப்பிவிட்டு, தன் தேசத்தை மற்றொருவனுக்குக் கீழ்ப்படுத்தி வைத்தவன். இப்பொழுது சிறிது சிறிதாகத் தான் கெட்டுப்போனது மட்டும்போதாது என்று மற்றவனையுங் கெட்டுப்போகத் தூண்டுதல் செய்ய வாரம்பித்தான். ஆகவே அவன் ஸிபாஸ்டியனை நோக்கிச் சொன்னான்.

உன் தலையில் ஒரு கிரீடமிருப்பதாக எனக்கு வெகு திண்ணமாய்ப் புலப்படுகிறது.

ஸிபாஸ்டியன் : என்ன நீயும் விழித்துக்கொண்டு தானிருக்கிறாயா? இல்லாவிட்டால் கனாக்கண்டு புலம்பிக்கொண்டிருக்கிறாயா?

அன்டோனியோ : ஆ! ஸிபாஸ்டியன் நீயல்லவா கண்கள் கொட்டைப்பிராந்துபோல் விழித்துக்கொண்டிருக்கையிலேயே தூங்கிவிடுகிறாய். பர்டினான்டு இறந்துவிட்டபடியினால் நேப்பிள்ஸுக்கு அரசன் இவருக்குப் பின் யார் என்று நினைக்கிறாய்?

ஸிபாஸ்டியன் : ஏன்! பர்டினான்டு போனால் கிளாரிபெல் என்கிற அவன் சகோதரி எங்கேபோனாள், அவள் பட்டத்துக்கு வருவாள்.

அன்டோனியோ : அடா பேதை கேள். கிளாரிபெல் டியூனிஸில் வாழ்க்கைப்பட் டிருக்கிறாளே. அவ்விடமிருந்து நாம் ஊர் போவதுக்குள்தான் இவ்வளவு தடமோட்டமாய் விட்டதே. அவளாவது வந்து அரசாளவாவது, நீதான் அடுத்த படியிலிருக்கிறாய். இப்போ தூங்குகிறவர்கள் பெருந்தூக்கமாய் தூங்கிவிட்டால் நீ அந்த விடத்திற்கு வருவதற்கும் சந்தேகமோ? அலான்ஸோ இல்லாவிட்டால் வேறு அந்தவிடம் ஆளமுடியாது போய்விடுமோ. உலகமே முடிவுக்கு வந்துவிடுமோ என்று இன்னும் பலவாறாய் தன் மனதில் முன்னமே எண்ணங்கள் ஓடி எப்படித் துரோகஞ்செய்ய நேர்ந்ததோ அதேமாதிரி இவனுக்கும் தூண்டிக் கொடுத்தான். இதுமாதிரி தூண்டுதல் அநேகருக்கு வருவதுண்டு. ஆனால் உடனே தூண்டுதலுக்கு உட்பட்டு போபவர்கள் தக்க மனோதைரிய மில்லாதவர்களாயும், பிரயோஜனமற்றவர்களாயுங் கெட்டுப்போகிறார்கள். மற்றவர்கள், என்ன தூண்டுதலாயினும் அதற்குட்படாம விருப்பதால் தடவைக்குத் தடவை நற்குண மிகுந்து ஒருவிதத் தூண்டுதலுக்கும் உட்படாமல் நல்லோராய் நன்மை யடைந்திருக்கிறார்கள். அலான்ஸோ முதலில் அவ்வளவு கெட்டவனல்ல ஆனாலும், சமயம் வாய்த்து தூண்டுதலும் வந்தபின்னர், அவனால் அதை ஜெயிக்க முடியவில்லை. அது மட்டுமல்ல. ஒரு தடவை கெட்டுப்போனவன் நாளுக்குநாள் அதிகமாகக் கெட்டுப்போய் பிறனையுங் கெடுக்குங் கெட்ட புத்தியுமுண்டாயிற்று. ஸிபாஸ்டியன் அன்டோனியோவிலும் நல்லவன் என்பதற்குச்சந்தேகமேயில்லை. ஏனென்றால் அவன் மனதில் கிளாரிபெல் பட்டத்துக்கு வருவாள் என்று பட்டதே ஒழிய, எவ்விதத்திலும் எல்லாரையு மொழித்துவிட்டுத் தான் ஆண்டுவர வேண்டுமென்று ஆசை கிடையாது. என்றாலும், எல்லாரும் தூங்கும் சமயம். நிர்மானுஷியமான தீவு, உதவிக்கும் தூண்டுவதற்கும் ஒரு கெட்ட மனிதனுண்டானால் எவனும் கெட்டுப்போவதற்குத் துணிவதுண்டு. ஸிபாஸ்டியன் நற்குணத்திற்கு வேண்டிய வைராக்கியஞ் செலுத்தக் கூடியவனில்லை. ஆகவே அவன் தூண்டுதலுக்குட்பட்டு இருவரும் கத்தியை யுருவ வாரம்பித்தார்கள். அந்தச்சமயத்தில் ஏரியல் கோன்ஸாலோவின் காதில் நீங்களெல்லாம் தூங்கும்பொழுது துன்மார்க்கர் துர்நினைவு நினைக்கிறார்களே. உயிர்மேலாசையுண்டானால் உறக்கமெல்லாமுதறிவிட்டு, உடனே எழுந்திரு, மற்றவர்களையுமெழுப்பிவிடு என்று சொன்னது உடனே எல்லோரும் விழித்து எழுந்து பார்த்தார்கள். அலான்ஸோ இதுவென்று கேட்க நெஞ்சுத்துணிவுடன்.

ஸிபாஸ்டியன் —ஐயா தாங்கள் சவுகரியமாய்த் தூங்கும்படி நாங்கள் காத்திருக்கும்போது, காடிகளும், புலிகளும், சிங்கங்களும் வருவதுபோல் பெரியகர்ச்சனை ஒன்று கேட்டது. உடனே உருவின கத்தியோடு நிற்கிறோம்.

## மாணவர் பக்கங்கள்
## STUDENTS' PAGES
### வியாஸ விதானம்
### Essay writing
### IV. ஆராய்ச்சி வியாஸங்கள்
### REFLECTIVE ESSAYS
### இலக்கிய விஷயங்கள்—கம்பர்
### Literary Subjects—Kambar

குறிப்பு:—முகவுரை : காலம் முதலியன—அலங்காராதிகள் முதலியன—விஷய ஒழுங்கு—வாக்சாதுர்யம் முதலியன—முடிவு: சிறப்பு.

கம்பர் என்ற பெயர் இந்தக் கவிசக்கிரவர்த்திக்குத் தாம் பிறந்த நாட்டினளவாக வந்ததென்று தோற்றுகிறது. இதற்கேற்பவே 'கம்பநாட்டாழ்வார்' என்றும் 'கம்பநாடுடைய வள்ளல்' என்றும் இவர் புகழப்பட்டிருக்கிறார். இப்பெயர் ஏகாம்பர புறமாகிய காஞ்சீபுரத்தின் சிதைவு என்று மதிக்கப்படுகிறது. ஆகவே காஞ்சிபுரத்தில் பிறந்தவர் இவர் என்பது பெறப்படும். இவர் பின்னர் தெற்கே சென்று கல்வி பயின்று மேன்மை அடைந்தவர். இவர் ஸுமார் பதின்மூன்றும் நூற்றுண்டிற்கு முன்னரே செழித்தவர் என்று அநேகவித முகாந்திரங்களால் வெளியாகின்றது. நம் நாட்டவர் பொதுவாகத் தமது நூல் முதலியன உலகிற்கு உபயோகப்பட்டால் போதும், தமது விஷயங்கள் நீடித்து நிற்கவேண்டியதில்லை என்ற அமைதியான எண்ணங்கொண்டவராதலால் தமது காலம், சரித்திரம், சிறப்பு முதலியவைகளை நூலைவிட்டு வேறாகக் கண்டறியக்கூடிய சரித்திராதிகளுக்கு இடங்கொடுக்காமல் போய்விட்டனர். ஆதலால் நம் பெரியோரது சரித்ராவிஷயங்கள் அநுமானுதிகள் மூலமாக ஒருவாறு நிச்சயிக்கப்பட்ட பொதுவாக அவர்களைப்பற்றி வழங்கிவரும் அத்புதக் கதைகள் பொருத்தமுடையனவா அல்லவா என்று மதிக்கலாம். இதைத்தவிர வேறு உறுதியாக ஒருவிஷயத்தையும் கூற முடியாது. ஆதலால் இப்போது விஷயத்தை இச்சுருக்கத்தோடு விட்டு கம்பர் செய்துள்ள நூலில் வெளியாகும் சிறப்பை ஆராயப் புகுவோம்.

கம்பர் சொற்சுவை பொருட்சுவை ஆகிய இவ்விரண்டும் நிறைந்த கவி. இதனுலேயே 'கல்வியிற் பெரியர் கம்பர்' என்பது இலக்கணத்தில் ஐந்தாம் வேற்றுமை எதுப்பொருளுக்கு உதாரணமாகி ஒரு பழமொழிபோல வழங்கத் தொடங்கிவிட்டது. இவர் அலங்காரங்களை வெகு நேர்த்தியாக உபயோகப்படுத்தி வாசிப்பவர் மனதை எளிதில் கவருவார். தன்மை என்ற ஒரு அணி உள்ளது. அதன் லக்ஷணம் உள்ளதை உள்ளவாறு வாசிப்பவருக்கு விளங்கும்படி இயற்கைப்பொருள்களை வர்ணிப்பதே. இவ்வணியின் சிறப்பு:—

மிதித்தது மெல்ல மெல்ல, வெறித்தது, வெறுமிமீதில்
குதித்தது செவியை நீட்டிக் குரபதம் உரத்திற் கூட்டி
உதித்தெழுவமுதை உள்ளம் என்றிவைஉருவச்செல்லு
கதிக்கொரு கல்விவேரே காட்டிய தொத்ததன்றே. [ம்

என்று மாரீச மான் செயலைக்கூறி மான்கள் இயற்கையை உள்ளபடி வர்ணித்ததில் நன்கு வெளிப்படும். தற்குறிப்பேற்றம் என்ற அணியின் அழகை.—

மய்யறு மலரி னீங்கி யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவ ளிருந்தாள் என்று செழுமணிக்கொடிகளென்
கய்களை நீட்டி அந்த கடிநகர் கமலச் செங்கண் [னும்
அய்யனை ஒல்லைவாவென் றழைப்பது போன்றமாதோ.

என்று மிதிலைக்காட்சிப்படலம் முதற்செய்யுளில் ராமர் வரும்பொழுது அடிக்கும் அநுகூல காற்றுல் எற்படும் கொடி அசைவைப் பொருட் படுத்திவிளக்குகிறார். எதிர்காற்றின் பொருளை இம்மாதிரியே வில்லிபுத்தூராழ்வார் வெளிப்படுத்துவதை உத்யோக பர்வம் வாஸுதேவனைப் படைத்துணை அழைத்த சருக்கசெய்யுளில் காணலாம்.

ஈண்டுநீ வரினும் எங்கள்
எழிலுடை எழிலி வண்ணன்
பாண்டவர் தங்கட் கல்லாற்
படைத்துணை யாக மாட்டான்
மீண்டுநீ போகென் றென்று
அவ்வியன் மதிற்குடி மிதோடும்
காண்டகு பதாகை யாடை
கைகளால் தடுப்ப போன்ற.

இங்கு துர்யோதனன் பகவானைச்சண்டையில் ஸஹாயம் செய்யும்படி கேட்டுக்கொள்ள த்வாரகை நோக்கி வருங்கையில் எதிர்காற்றில் ஆடும் கொடிகள் கருத்து எடுத்துக் காட்டப்பட்டது. இதுபோன்ற பொருள் நிறைந்த தற்குறிப்பேற்றம் வேறெங்கும் அதிகமாகக் காணப்படுவதில்லை.

உவமையில் காளிதாஸன் சிறந்தவன் என்பது வடநூலோர் துணிபு. கம்பர் அத்தகையவர் தமிழில். இவர் உவமை மிகப்பொருத்தமாகவும், ஸாதாரண தர்

மங்கள் அநேக விஷயங்களில் பொருந்தி யிருப்பன வாகவும் காணப்படும்.

* * * *

விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.

என்று விச்வாமித்ர யாகஸம்ரக்ஷணம் வர்ணிக்கப்பட்டுள்ளது. இதை வெகு விஸ்தாரப்படுத்தி வ்யாக்யாதாக்கள் கூறுவர். யாகசாலை கண் வெள்ளை விழி, அதிலிருக்கும் ஹோமகுண்டம் கருவிழி, ராமலக்ஷ்மணர்கள் மேலிமைகீழிமைகள், அவர்கள் அம்புகள் இமைமயிர்கள், மேலிமை கண்ணைக் காப்பதுபோல் ராமர் யாகசாலையைச் சுற்றிக்கொண்டும், கீழிமைபோல லக்ஷ்மணர் ஓரிடத்தில் நின்றுகொண்டும் காத்தனர் என்ற இம்மாதிரியான பூர்ணப் பொருத்தம் இவ்வுவமையில் உள்ளது. இதுவுமன்றிக்கண்ணைப்போல எண்ணியாகத்தை ராமலக்ஷ்மணர்கள் காத்தனர் என்ற பொதுப்பொருளையும் இது கொடுக்கும். இம்மாதிரியே அநேக உவமைச் செய்யுள்கள் கம்பரிடம் காணப்படும். இல்பொருளுவமையைத் தகுந்தவிடத்தில் இவர் உபயோகிக்கிறார்.

கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தியே டவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றினன்.

என்றபாட்டு பகவான் க்ஷீராப்தியில் தேவர்கள் முன் தோன்றுவதை வர்ணிக்கையில் அமைந்துள்ளது.

உவமையில் உபமானம் தெரிந்த பொருளாயும் உபமேயம் தெரியாத பொருளாயும் இருந்து ஸாதாரண தர்மத்தால் விளங்குவதாக விருக்கவேண்டும். கம்பர் சிற்சில விடங்களில் இதை மாற்றி உபமானத்தை நேரிடத் தெரியாத அரிய விஷயமாயும், உபமேயத்தை அறியக்கூடிய விஷயமாயும் அமைத்து உபமானத்தின் விஷயமான ரஹஸ்யத்தை நன்கு வெளிப்படுத்துகிறார். இதிலிருந்து கம்பர் அந்தரங்க அபிப்பிராயங்களும்மனோ நிலையும் வெளியாகும். தாடகை வதத்தை வர்ணிக்குங்கால்

சொல்லொக்கும் கடிய வேகச்சுடுசரம் கரியசெம்மல் [றக்
அல்லொக்கும் நிறத்தி னாள்மேல் விடுதலும் வயிரக் குன்
கல்லொக்கும் நெஞ்சிற் றங்கா தப்புறங்கழன் றுகல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்னபொருளெனப் போயிற்
[றன்றே.

இதில் இழிவானவர்களுக்குச் செய்யும் உபதேசத்தின் கதி நன்கு விளங்குகிறது. அதன் மூலமாக ராமபாணச் சிறப்பு வெளிப்படும்.

வரைக்காட்சிப் படலத்தில் தசரதர் தேர் சந்திர சைல மலைச்சாரலில் வந்தபொழுது சக்கரத்தின் சுற்றுகட்டு பொன்னாக விருந்ததால் அடியிலிருந்தபாறைகள் பொன்மயமாகி ப்ரகாசித்ததை வர்ணிக்கையில்,

தெருண்ட மேலோர் சிறியவர் சேரினும் அவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும்பொன்னுரு வுரைத்துரைத்
திருண்ட கல்லையும் தன்னிறமாக்கிய விரதம் [தோடி

என்று கூறிப் பெரியோர்கள் சிறப்பை நன்கு விளக்குகிறார்.

பொதுவாக ஜனங்களுக்கு இருக்கும் மதத்வேஷத்தை நீக்கி மற்ற மதங்களை நன்கு மதித்து தம் மதத்தையும் விடாது விருத்தியடைவதற்கு வேண்டிய ரஹஸ்ய ஞானத்தை, கம்பர் உலாவியற் படலத்தில் ஸ்ரீராமர் ஆனந்தபவனி வருகையில் காட்சி வைபவத்தை வர்ணிக்குங்கால் தமது விசேஷ உபமானம் ஒன்றால் வெளிப்படுத்துகிறார்.

தோள்கண்டார் தோளே கண்டார்
தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்
தடக்கைகண் டாரு மஃதே
வாள்கண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னான்
உருவு கண்டாரை யொத்தார்.

இதை வாசிக்கும்பொழுது 'ஸமயகோடிகள் எல்லாம் தன்தெய்வ மென்தெய்வ மென்றெங்கும் தொடர்ந்து எதிர் வழக்கிடவும் நின்றதெது' என்ற அருள்வாக்கு ஞாபகம் வாராமல் போய்விடுமோ? சிறப்பாகச் சைவ வைஷ்ணவ ஸம்பந்தமாக ஜனங்களுக்கு ஏற்படும் பேதபுத்தி த்வேஷபுத்தி மஹாபாபம் என்பதைக் கிஷ்கிந்தாகாண்டம் நாடவிட்ட படலத்தில்,

அரனதிகன் உலகளந்த அரிஅதிகன்
எனஉரைக்கும் அறிவலார்க்குப்
பரகதிசென் றடையவரிய பரிசேபோல்
புகலறிய பண்பிற்றமால்
சுரநதியின் அயலதுவான் தொடுகுடுமிச்
சுடர்த்தொகையை தொழுவோர்க்கெல்லாம்

வானதிகம் தரும்தகைய தருந்ததியா
நெடுமேலையை வணங்கியப்பால்.

என்ற உபமானத்தால் நன்கு விளக்குகிறார். இம் மாதிரி உவமை யலங்காரத்தை அரிய ரஹஸ்யத்தை வெளிப்படுத்த கம்பர் அடிக்கடி உபயோகப்படுத்து கிறார்.

இனிக் கதை எடுத்து நடத்தும் அத்புதம் கம்பரிடத் தில் மிக ஏராளமாக உண்டு. ஆதி கவியாகிய் வால் மீகி எழுதிய ராமாயணத்தில் ஸாதாரணமாக நேர் கதையாக ஒழுங்காகக் கூறப்பட்டவைகளை எல்லாம் நாடக ஒழுங்குக்கேற்ப சற்று மாற்றி யமைத்து வாசிக் கும்போதே மேல் என்ன வரப்போகிறது என்ற நீங்கா ஆவலைப் படிப்போர் மனதில் உண்டாக்குகிறார் கம்பர். புத்ர காமேஷ்டியைப்பற்றி வஸிஷ்டரிடமிருந்து தசரதர் தெரிந்துகொள்ளுங்கால், அவர் மனத்தில் தோன்றிய தேவரஹஸ்யம், ஜனகஸபை போனதும் விச்வாமித்ரர் ராமர் குலமுறையை வெளியிட்டதும் சிவதனுஸை எடுக்க வேலையாட்கள் போனபொழுது ஸீதையின் குலமுறை வெளியிடப்பட்டதையும், ராமர் விவாஹத்திற்கு முன்னர் நடந்த விஷயங்களை விரி வாக வர்ணிக்கும் 7 படலங்கள் விஷயங்களையும் பரதர் அயோத்திக்குத் திரும்ப தேவர்கள் இடைநின்றதை யும், சரபங்கர் பிறப்பு நீங்கும் முன் இந்திரன் ஸ்ரீராம ரைத் துதித்ததையும், ராவணன் பூமியோடு பெயர்த்து ஸீதையை எடுத்துச் சென்றதையும், வாலி கேள்வி களின் வீர்யத்தையும், ஸம்பாதிக்கு இறகு முளைத்த விதத்தையும், ஸுந்தர யுத்த காண்டங்களிலுள்ள சிறு கதை மாறுபாடுகளையும், விபீஷணர் ராவணனைவிட் டுப் பிரியும் முன் அவனுக்கு இரணியன் கதையைக் கூறியதையும் வாசிப்போருக்குக், கம்பர், கவிகளுக்கு ஏற்பட்டுள்ள கற்பனுசக்தியை உபயோகித்து, மற் றைய ராமாயணங்களுக்கு ஏற்ப ராம கதையை மாற்றி வாசிப்பவர்களுக்கு வியப்பையும் ராமபக்தியையும் அதிகப்படுத்துகிறார் என்பது வெளியாகும்.

இவர் வாக்சாதுர்யம் ராமாயணத்தில் அநேகவிடங் களில் அநேக விதங்களில் வெளியாகிறது. முக்கிய மாக இரட்டுற மொழிதல், சமத்காரம், த்வனி முத லியவைகள் மூலமாக இவை நன்கு வெளிவரும். இவ்விஷயங்கள் அமைந்துள்ள பாகத்தைப் பின்வரும் பாக்களில் தடித்த எழுத்திலிடப்பட்டிருக்கின்றன.

இருபொருள் படும்படியாகக் கூறுவது மாரீசன் வதைப்படலத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ள பாடல் களில் காணலாம்.

இந்திரன் சசியைப்பெற்றான் :
இருமூன்று வதனத்தோன்தன்
தந்தையும் உமையைப் பெற்றான்;
தாமரைச் செங்கணானும்
செந்திரு மகளைப் பெற்றான் :
ஸீதையை பெற்றாய் நீயும்,
அந்தாம் பார்க்கில் நன்மை
அவர்க் கிலை உனக்கே ஐயா !

பாகத்தில் ஒருவன் வைத்தான் :
பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான் :
அந்தணன் நாவில் வைத்தான் :
மேகத்தின் மின்னை முன்னே
வென்றநுண் ணிடையை நீயும்
மாகத்தோள் வீர பெற்றால்
எங்ஙனம் வைத்து வாழ்வாய் ?

பிள்ளைபோல் பேச்சி னாளைப்
பெற்றபின் பிழைக்க லாற்றாய்
கொள்ளைபோ கின்ற செல்வம்
அவளுக்கே கொடுத்தி ஐய !
வள்ளலே உனக்கு நல்லேன்,
மற்றுநின் மனையில் வாழும்
கிள்ளைபோல் மொழியார்க்கெல்லாம்
கேடுசூழ் கின்றே னன்றே.

தூய தவங்க டொடங்கிய தொல்லோன்
மையவன் வல்விலி ருப்பதன் முன்னம்
சேயிழை மங்கையர் சிந்தைதொ றெய்யா
ஆயிரம் வில்லை அனங்கனிறுத்தான்.

வாச்சமத்காரம் பின்வரும்பாட்டுகளில் விளங்கும்.

தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்ததும் நாணுதி வைத்ததும் நோக்கார்
கடுப்பினின் யாரும் அறிந்திலர் கையால்
எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்.

விழிக்கும் கண்வே றில்லாவெங்கான்
என்கான் முளையைச்
சுழிக்கும் வினையால் ஏகச்சூழ்வாய்
என்னைப் போழ்வாய்
பழிக்கும் நாணாய் மாணாப்பாவி
இனியென் பலவுன்
கழுத்தின் நாணுன் மகற்காப்
பின்நான் என்றான்

ஒருவன் கஷ்டப்பட்டபோதிலும் அதனால் அநேகருக்கு நன்மை உண்டாகுமானால் அதை அவன் ஸுகமாகவே ஏற்கவேண்டும் என்ற ரஹஸ்ய தர்மத்தைத் துக்கப்படும் வீதைக்கு ஹனுமார் எடுத்துக் கூறித் தேற்றுவதாக,

சின்னாள் நீயிடர் தீராதாய்
இன்னா வைகலி னெல்லோரும்
நன்னாள் காணுதல் நன்றன்றோ
உன்னால் நல்லறமுண்டானால்

என்ற பாட்டால் வெளியிட்டிருக்கிறார். இந்த எண்ணம் எக்காலத்திலும் மேன்மையுடையதாக ஓங்கி நிற்பது. இதைக் கம்பர் நன்கு அனுபவித்தறிந்து நல்ல ஸந்தர்ப்பத்தில் தமது நூலில் புகுத்துத் தமது கவித்திரத்தை நன்றாக வெளிக்காட்டி யிருக்கிறார்.

கம்பர்தமதுகாலத்தில்தாம்கற்றநூல்களின்கருத்தை தழுவி அநேக விடங்களில் ராமாயணத்தில் பாடல்கள் அமைத்துள்ளதால், அதை வாசிப்போருக்கு அவை பழமொழிபோல் உள்ள பெரியோர் வாக்குக்குத்தகுந்தபடி விவரித்து பொருள் தோன்றச் செய்து சந்தோஷப்படுத்தும். கவி சக்ரவர்த்தியாகிய கம்பர் வேறு சில நூல்கள் எழுதியிருந்தபோதிலும் ராமாயணம்போல அவைகள் ப்ரஸித்தி பெற்றவைகளல்ல. இந்த ராமாயணமொன்றிலேயே அவர் தம் திறனைப்பூர்ணமாகக் காட்டி தமது மதத்வேஷமில்லாத விஷ்ணுவாராதனத்தை விளக்கி தாம் இக்காலத்திய ஸ்மார்த்தர்கள் மதத்தைச் சேர்ந்தவர் என்பதை நன்றாகக் காட்டி விட்டார். இவர் பிறந்தது சைவத்தில் என்றும் அதனால்தான் இவருக்குக் கம்பர் என்றும் இவர் பிள்ளைக்கு அம்பிகாபதி என்றும் உள்ள பெயர்கள் அமைந்தனவென்றும், பின்னர் விஷ்ணு பக்தி பரவசராகிய இவர் பரம அத்வைத மதத்தவராது நடுநிலைக்கு வந்தனர் என்றும் இவர் சரித்திரங்களிலிருந்தும், இவர் செய்யுள்களிலிருந்தும் நன்றாக வெளியாகும்.

இம்மாதிரியே விவரிக்கக்கூடிய
வியாஸ விஷயங்கள்:—

| | |
|---|---|
| 1. ஒட்டக்கூத்தர் | 6. காளிதாஸன் |
| 2. புகழேந்தி | 7. பவபூதி |
| 3. திருவள்ளுவர் | 8. அப்பையதீக்ஷிதர் |
| 4. ஔவை | 9. வால்மீகி |
| 5. வில்லிபுத்தூரார் | 10. வ்யாஸர் |

1. முகவுரை காலம் பெயர் முதலியன.
2. அலங்கார அமைப்பு முதலியன.
3. பொருட்சுவையாகிய வாக் சாதுரியம் முதலியன
4. முடிவுரை சிறப்பு.

## மொழிபெயர்ப்பு விளக்கம்
## Translation Models

### Destroying enemies.

A Chinese Emperor was told that his enemies had raised a rebellion against him in one of his distant provinces. 'Come, then, my friends', said he, 'follow me, and I promise you that I will quickly destroy them.' He marched against them, but they submitted on his approach. All now expected that he would take the most signal vengeance upon them. Instead of doing so, however, the captives were treated with kindness and calmness, 'How!' exclaimed his chief minister, 'Is this the way you fulfil your promise? You gave your royal word that your enemies should be destroyed; and behold, you have pardoned them all and even bestowed favours upon some of them.' 'I promised,' replied the Emperor, with a generous air, 'to destroy my enemies, and I have kept my word, for see, they are enemies no longer; I have made friends of them." Like this Emperor, let us learn 'to overcome evil with good', and destroy our enemies by changing them into friends by kindness.

### எதிரிகளை அழித்தல்

தூரத்திலிருந்த தன்னைச்சேர்ந்த மாகாணங்கள் ஒன்றில் தன் எதிரிகள் கலகம் தொடங்கிவிட்டனர் என்று ஒரு சீனசக்கிரவர்த்தி கேள்விப்பட்டான். 'ஆனால் ஸரி, தோழர்களே! புறப்படுங்கள். என்கூடவே வாருங்கள். நான் அவர்களை அழித்துவிட்டே மறுவேலை பார்ப்பேன்' என்று அவன் உறுதிமொழி கூறினான். அவன் எதிரிகள்மேல் படையெடுத்துச் செல்ல, அவர்கள் அவன் நெருங்கியதும் அடங்கிவிட்டார்கள். அவர்களை அவன் நன்றாகப் பழிவாங்கிவிடுவான் என்று எல்லோரும் எதிர்பார்த்திருந்தனர். ஆனால் அவ்வாறு செய்வதை விட்டு பிடிப்பட்டவர்களை அன்பாகவும், அமைதியாகவும், நடத்தினான் சக்கிரவர்த்தி. இதைக் கண்ட முதல்அமைச்சன், 'என்ன இது? இது தானா உமது வாக்குறுதிப்படி நடப்பது? உமது ராஜ வாக்கால் எதிரிகளை அழித்துவிடவேண்டும் என்று கூறிவிட்டீரே! இதோ பாரும், அவர்களை மன்னித்துவிட்டீர், போதாதென்று அவர்களுள் சிலருக்கு வெகுமதியும் அளித்துவிட்டீரே!' என்று வியப்புடன் கேட்டான். அதற்குச் சக்கிரவர்த்தி, 'ஆம், நான் எதிரிகளை அழித்துவிடுவதாகத்தான் வாக்களித்தேன்! அதன்படியும் செய்துவிட்டேனே! நீயேதான் பார், இங்கு விரோதிகள் ஒருவருமில்லையே! இங்கு எல்லோரும் எனக்குத் தோழர்களாகிவிட்டனர்' என்று பெருந்தன்மையோடு மறுமொழி சொன்னான். கெடுதியை நன்மையால் அடக்கவும், எதிரிகளை அன்பால் அழித்துத் தோழர்களாக்கவும் இந்தச் சக்கிரவர்த்தியைப்போல முயலுவோமாக.

# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

### உண்மை உயர்வு அல்லது வாஸுதேவ சாஸ்திரி

### TRUE GREATNESS OR VASUDEVA SASTRI

#### அத்தியாயம் 14

#### சாஸ்திரி வேலையில் புகுதல்

குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும் அறவோர்க்
கடிகளே தெய்வம் அனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை.

சாஸ்திரிகளுக்கும் நாராயணய்யருக்கும் நடந்த ஸம்பாஷணையை அதிகமாக விஸ்தரிக்கவேண்டியதில்லை. சுருக்கிச் சொல்லுமிடத்தில் முடிவில் ஸ்ரீனிவாஸனைக் கண்டுபிடித்து நல்வழிக்குக் கொண்டுவந்து அவனைப் பெண்சாதியுடன் சேர்த்துவைக்கும் வேலை சாஸ்திரிகள் தலையில் விழுந்தது. இந்த சாந்த புருஷனைத் தவிர இவ்வேலையை முடிக்க வல்லார் ஒருவருமில்லை, என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரிந்த விஷயம். அன்றைக்கே இந்த யாத்திரையில் புறப்பட்டு விடவேதாகச்சாஸ்திரிதீர்மானித்துவிட்டார். உடனே ருக்மிணியைத் தனிமையில் அழைத்து முன்னாள் இரவு அவளுக்கும் அவள் கணவனுக்கும் நடந்தவைகளை எல்லாம் விடாத சொல்லும்படி கேட்டார், வாஸுதேவ சாஸ்திரி.

ருக்மிணி கூறலுற்றாள். "வீட்டிலுள்ளோர் எல்லோரும் படுக்கச்சென்று சப்தம் எல்லாம் அடங்கி வெகு நாழிகைவரையில் அவர் என்னிடம் வரவில்லை. அந்தத் திருட்டு விக்தன் வாயிற்படியிலேயே பழியாகக் காத்துக் கிடந்தார். அவரிடம் இரண்டு மூன்று தரம் அணுகிக் கண்ணும் கண்ணீருமாக படுக்க வர வேண்டும் என்று நான் மன்றாடினேன். அதற்குக் கைம்மாறாக எனக்கு வசவுதான் கிடைத்தது. நான் விடாது கெஞ்சத் தொடங்கிவிட என்னை அவர் காலால் உதைத்துத் தூரத்தினார். நான் அழுது கொண்டே என் அறை வந்து சேர்ந்தேன். உடனே விக்தர் உள் கதவு திறந்த சப்தம் கேட்டது. கொஞ்ச நாழிகைக்கெல்லாம் கையில் ஒரு வீஸாவை மறைத்துக்கொண்டு என் கணவன் வந்து சேர்ந்தார். நான் கீழேபோய் எங்கே வீட்டைக்கலக்கி விடுவேனோ என்று பயந்தே அவர் என்னிடம் வந்து விட்டார் போலிருந்தது. என்னருகில் வந்து உட்கார்ந்து என்னைக் கண்கொட்டாது வெறித்துக் கொஞ்சநாழிகை பார்த்துவிட்டு என்னை வாயில் வந்தபடி எல்லாம் வைது கொட்டிவிட்டார்.

"இதற்கு 'உமக்கு நான் பெரும் தடையாக விருக்கிறாற்போலிருக்கிறது. என்னைக் கண்டால் ப்ராண வைரியைக் காணுவது போலத் தோற்றுகிறதோ? ஆ தெய்வமே! என்றைக்கு என்னை உமது பாதாரவிந்தங்களில் சேர்த்துக்கொள்ள உமக்குத் திருவுளமிரங்குமோ!' என்று வெறுப்புடன் கூறினேன். 'ஆம், ஆம்! நீ தான் எனக்கு உண்மையான விரோதி. நீ இல்லாவிட்டால்—' என்று கூறித்தயங்கினார். 'இந்தக் கொடிய தான்தோன்றி விக்தனுடன் நீங்கள் ஓடிப்போயிருப்பீர்கள்' என்று நான் பூர்த்திசெய்து விட்டேன். 'என் குருவை யேன் வைகிறாய்? பாபீ! திருடி!!' என்று கோபத்துடன் கூறி என்னை மறுபடியும் உதைத்தார். 'நான் உண்மையாக ஓடத்தான்போகிறேன்? யார் என்னைத் தடுப்பார்கள் பார்ப்போம். துக்கம் நிறைந்த இவ்வுலகில் உன்னைப்போன்ற கெட்ட கழுதைகளைக் கட்டிக்கொண்டழுவதைவிட காட்டிற்கு ஓடிப்போய் எங்கேயாவது ஒருவர் கண்ணிலும் படாது இறப்பதே மேல்; என்று மிகுந்த பரபரப்புடன் அவர் பொழிந்து விட்டார். துக்கமும் பயமும் என் வாயை அடைத்துவிட்டன. நான் மறுமொழி ஒன்றும் கூறவில்லை. 'நான் சொன்னபடி நடத்திவிடுவேனா என்ன? எனக்கு அவ்வளவு தெரியாதா? நீ அழாதே' என்று என்னை அவர் பின்னர் தட்டிக்கொடுத்து ஸமாதானப்படுத்தினார். நாங்கள் கடிந்து பேசியதன் காரணவிஷயங்களைப்பற்றிப் பேசி ஸமாதானப்பட ஸுமார் ஒரு மணி நேரத்திற்கு மேலாகிவிட்டது. ஒருவாறு இருவருக்கும் மனம் ஒப்பிவந்ததும், கையிலிருந்த கண்ணாடி வீஸாவைத் திடீரென்று எடுத்து 'நல்ல தூக்கம் உண்டாக்கும் மருந்து, ராத்திரி நாழிகை அதிகமாகி விட்டது. நல்ல தூக்கமும் வரவேண்டும். ஆதலால் தான் நான் இதைக் குடிக்கிறேன்' என்று சொல்லிக் கொண்டே அதைக் கொஞ்சம் குடித்து, எனக்கும் கொஞ்சம் கொடுத்தார். நானும் குடித்தேன். கொஞ்ச நாழிகை யானதும் ஒருவிதமான மயக்கம் வந்து என்னைத் தூக்கத்தில் முழுத்திவிட்டது. எனக்குப் பின்னர் ஒன்றும் தெரியாது. வீட்டில் உண்டான குழப்பத்தில் விழித்துப் பார்ப்பேனோ! அவர் போய்விட்டது உடனே தெரியவந்தது. இனிமேல் நான் கதியற்றவளாகிவிட்டேன். இனிமேல் சாவைத்தவிர வேறென்ன எனக்கு வேண்டியிருக்கிறது. நாலைந்து நாளைக்குள் அவர் வந்து சேராவிட்டால் என் உயிரை மாய்த்துக் கொள்ளுவேன். அவ்வளவுதான்' என்று கூறி முடித்தாள் ருக்மிணி.

'ஒரு பக்ஷத்திற்குள் எப்படியாவது அவனை அழைத்து வந்துவிடுகிறேன். நீ தேறியிரு' என்று ஸமாதானம் கூறிவிட்டு, அன்றைக்கே தன் வேலைமேல் கிளம்பிவிட்டார் சாஸ்திரி. இரவு 12-மணிக்கும், 3-மணிக்கும் இடையில் மதுரையை விட்டுப் போகும் வண்டி வடக்கு நோக்கியே போய்க்கொண்டிருந்ததால், ஸ்ரீநிவாஸன் அதிலேதான் போயிருக்க வேண்டும் என்று ஆராய்ந்து உணர்ந்து சாஸ்திரி அடுத்த வடக்குநோக்கிப் போகும் வண்டியில் புறப்பட்டு விட்டார்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்
## LADIES' PAGES
## ருக்மிணி அல்லது பக்தி நிலை
### பக்தி மலர்ந்த காதை
(தொடர்ச்சி)

"இப்பொழுது பார்த்தால்தான் தாங்கள் நாரதர் போலிருக்கிறீர்கள். மறுபடியும் சொல்லுகிறேன் : அந்தக் குரங்கை என்னசெய்கிறேன் பாரும்."

"இப்பொழுதுதான் எனக்கென்னுயிர் வந்தது. இனி எனக்கென்ன குறை. தாங்கள் மஹாபலவானுகி யாவரையுங் காத்து ரட்சிக்கும் பெருமை வாய்ந்தவரிருக்க எனக்கென்ன குறை."

* * * *

பவழந்தவழத் தனது கதிர் விளக்கி வரும் இளஞ் சூரியனது கிரணங்கள் தெருவெங்கும் பதிந்து விளங்கியது. யாதவர்தலைவன், எம்பெருமான் அன்று ஆயர் பாடியில் வெண்ணைத்தயிருண்டு அடியுண்டு பால லீலையில் விளங்கியவாறு, இன்று தன் மனைவியரது இல்லந் தோறும் சாரலீலையிற் பதிந்து தன்னுசை நாயகிகளின் கள்வாய் அமுதம் தன் கனிவாயிற்பதிந்து கருத்தொருமித்து விளங்கிய கோலங் களைந்து, தன் ஆஸ்தான மண்டபத்து வந்து எறினர். யாவரும் அங்கு வருவதன் முன்னமே காத்திருந்த நாரதர் தம்பிரான்முன் தன் தலையை நீட்டினர். அமலனும் தனது செந்தாமரை முகத்தில் சிறு நகையைக் காட்டினர். மேலும் திருவாய்மலர்ந்தனர் :—

"வாரும் வாரும் ! தாங்கள் நெடுநாழிகை காத்திருந்தீர். யான் வருவதற்குத் தாமஸமாய்விட்டது. என் அன்பரது மனந்துடிக்க அவர் காத்திருக்க எனக்கு மனம் ஒப்புவதில்லை. அதிலும் தம்போன்ற பெரியார் ஆப்த நேசர்களாகியவரிடத்தில் யான் முன்னமே வராது செய்த அபசாரத்தை மன்னிக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"தமது உருவம் ஓர் சடமாகிய சரீரத்திற்குள் புகுந்து விளையாடுவதுபோல் செய்யும் தமது மாயைக் கென்ன குறை? தங்களைக் காண இங்கும் வரவேண்டுமோ? தாங்களிங்கு செய்யும் பலவற்றி லொன்றியும் ஒன்றிற் பலவாயுங் காணும் லீலையைக் காணவே இங்கு வந்தேன். தன்யனுனேன். ஒன்றுமறியாத இப்பேதையிடம் தாங்களிவ்விதங்கூறல் தகுமோ? தயவுசெய்து என்னிடம் அன்புகொண்டு இவ்வாறு கூறுது அருள்செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்."

"அது கிடக்கட்டும். நான் கூறியது என்னவாயிற்று?"

"என்னவாயிற்று? அது தானே தெரியும்."

"என்ன தெரியும்?"

"தாங்கள் எண்ணிய விதமே."

"நான் எண்ணிய விதமா?"

"ஆம் அப்படியே."

"என்ன அது?"

"இன்னம் கொஞ்ச நேரத்திற்குள் தெரியும்."

"நீ சொல்வது ஒன்றும் விளங்கவில்லையே. என் அன்பன் அவ்வனுமானை அழைத்து வந்தீரா?"

"தாங்கள் கூறியதொன்ருவது நான் தவறியதுண்டோ?"

"ஆனுல் ஹனுமாரிங்குவந்து விட்டாகியது."

"இன்னமிங்கு வரவில்லை.—இனி வருவார்."

இவ்வாறிவர் பேசிக்கொண்டிருக்கும் ஸமயத்தில் கால் நடுங்க கை நடுங்க ஒன்றும் தெரியாது மயங்கி கிடுகிடுவென்ருேடிவரும் சப்தம் கேட்டது. "அது யார்? ஹனுமாரா?" என்ருர் கிருஷ்ணர்.

"என் அவ்வளவு கவலை? தங்களுக்குத் தெரியாதது போல் என் இந்த வேஷம்?" என்ருர் நாரதர்.

"யாரோ தங்களைக் காண வந்திருக்கிருர்" என்று வந்துரைத்தனன் வாயிற்காப்போன்.

"உள்ளே விடு" என்ருர் எம்பெருமான்.

அவரும் வந்தார்.

"யார் அது? நன்ருகத் தெரியவில்லை—அண்ணு! என்ன இந்த கோலம்? யாரோ வருவதாக வல்லவோ சொன்னுன் வாயிற்காப்போன். உமது அடையாளமே தெரியவில்லை. நேற்றைக்குள் என்ன விபரீதம் வந்துவிட்டது. என்ன அண்ணு ஸமாசாரம்? என் இப்படி மயங்கி ஒடிவந்தீர்? எனக்கு மிகவும் ஸங்கடமாக இருக்கிறது. தயவுசெய்து சொல்லும். இங்கு உட்காரும்—" என்று தான் எழுந்து தனது ஆஸநத்தைப் பலராமனுக்களித்து தான் நின்றுகொண்டு அவர்க்கு உபசாரம் செய்துகொண்டிருந்தனர்.

"யாரிவர்? இவர்க்கென்ன உடம்பு? என்ன கஷ்டம் வந்துவிட்டது இவர்க்கு?" என்ருர் நாரதர்.

"இவர் உமக்குத் தெரியவில்லையா? என் முன்னேன் ஸ்ரீபலராமன். வலியிற் சிறந்தோன். இங்கு என்ன ஸங்கடமோ அடைந்துவிட்டார். எனக்கு இன்னது என்று தெரியவில்லை. அடையாளங்கூட தெரியாமல் மாறிவிட்டார்."

"பலராமா! நேற்று சாயுங்காலம் அவரைக் கண்டு வந்தேன். எனக்குத் தேற்றறிவு கூறினர். இவர்க்கென்ன உடம்பு? வைத்தியர் யாருமிங்கில்லையோ?"

"கிருஷ்ணா! என்னவென்றடா சொல்லட்டும்! நேற்றிந்த நாரதர் என்னிடம் வந்து ஒரு சிறு குரங்கைப்பற்றிப் பேசினர். அவரைத் தொந்தரை செய்ததாம். அதைத் தொலைத்து விடுகிறேன் என்று சொன்னேன். உடனே சேனைத்தலைவனை நமது யாதவ சேனையுடன் அனுப்பினேன். ஒருவன்தான் திரும்பிவந்தான். என்னவென்றவன் சொல்லுகிருன். ஒரு கயிறுபோல் ஒன்று அச்சேனை முழுதையும் சுற்றிக்கொண்டு ஆகார வீதியில் எழும்பி எல்லாரையும் உதிர்த்துவிட்டதாம். மானிட மழைப் பெய்தாப்போல் எல்லாரும் பக்கத்து ஸமுத்திரத்தில் வீழ்ந்திறந்தார்களாம்.

## விசேஷக் குறிப்புகள்
## NEWS AND NOTES

மிஸ்டர் S. வெங்கோபாச் சாரியார் காலமாயினர்.—மதுரைக் காலேஜியில் 23 - வருஷகாலமாகப் பிரின்சிபலாகவிருந்த மிஸ்டர் S. வெங்கோபாச் சாரியார் ஜுலை 17வ காலை காலஞ்சென்றார் என்பதைக் கேட்டு நமக்கு ஆராத்துயரம் உண்டாயது. இவர் ஷை காலேஜின் அபிவிருத்தியின் பொருட்டு அதிக சிரத்தை எடுத்துக்கொண்டு உழைத்தமை யாவரும் மிகவும் பாராட்டத்தக்கது. இவர் மரணத்தினல் ஷை காலேஜுக்கு பெரும் நஷ்டமே.

* * *

நரிகளின் விசேஷதணம்.—அமெரிக்காவின் அலாஸ்கா என்னும் பிரதேசத்தில் வசிக்கும் நரிகள் கற்பிற் சிறந்தனவாம். ஆண் நரி யிறந்துபோனல் பெண் நரி மற்றோ ராண்நரியை விரும்புவதில்லையாம்; ஆண் நரியும் பெண் நரி இறந்து போனல் மற்றொரு பெண் நரியை விரும்புவதில்லையாம். எவ்விடத்தும் நரிகளது சுபாவ மிவ்வாறேயாம். ஸ்திரீ புருஷர்களுள் பெரும்பான்மையார் மறுமணமுடையவராக விருப்பது நரிகளின் குண விசேஷத்தை நோக்கும்போது நியாயமாகத் தோன்றுவதாமோ?

* * *

ஒரு வெண்கல வீடு.—சுவிட்சர்லாந்தைச் சார்ந்த நியூசாற்ற லென்னும் நகரில் ஆஸ்பத்திரி கட்டடக்கடைக்கால் தோண்டுகையில், வெண்கலத்தால் கட்டிய ஒரு வீடு காணப்பட்டது. அதில் ஒருஸ்திரீயின் முழுவெலும்பு அழிவின்றியிருந்தது. அதன் கைகளில் ஆறு வளையல்க ளிருந்தன; அவற்றுள் நான்கு வெண்கலத்தாற் செய்யப்பட்டவை. இந்த வீடு 600 வருஷங்கட்கு முன்னரமைக்கப்பட்டிருக்க வேண்டுமென்று அங்குள்ள பூதசத்துவ சாஸ்திரிகள் கூறுகின்றார்கள்.

* * *

புதுவகையான ஒரு தொட்டில்.—பிரான்சு தேசத்துள்ள பாரிஸ் நகரத்தில் புதுவகையாய்க் குழந்தையை வளர்த்தியாட்டுந் தொட்டில் மின்சார சக்தியினுதவியால் செய்யப்பட்டிருக்கின்றது. அது குழந்தை யழவாரம்பித்தால், அக்குழந்தை தூங்கும்வரை யாடுமாம். அதிலமைக்கப் பட்டுள்ள கிராமபோன் தாயார்பாடுவது போல் பாடுமாம், குழந்தை தூங்கிவிட்டால் தொட்டிலாடுவதும் கிராமபோன் பாடுவதும் நின்று விடுமாம்.

* * *

பிள்ளைபெறும் ஸ்திரீகளுக்குக் கிராண்டு.—ஆஸ்டிரேலியாவில் ஜனனவிகிதம் குறைவுபட்டு வருவதை யுத்தேசித்து அந்தத் தேசத்துக் கவர்ன்மெண்டார் பிள்ளைபெறும் ஸ்திரீகளுக்குக் கிராண்டு கொடுப்பதாக உத்தரவு செய்திருக்கின்றன ரென்று ஆஸ்டிரேலியா பார்லிமெண்டைத் திறக்கும்போது லார்டு டென்மென் கூறினாராம்.

ஒரு செம்புலியுடன் யுத்தம்.—காசிப்பூர் மகாராஜாவுடைய சகோதரராகிய குன்வார் ஆனந்தசிங் என்பவர் நெயினிடாலில் வேட்டையாடப் போயிருக்கும்போது திடீரென்று தானிருந்த இடத்திலிருந்து 100 கஜதூரத்துக்குள் ஒரு செம்புலியைக் கண்டாராம். கண்டமாத்திரத்திலே தன்கையில் வைத்திருந்த துப்பாக்கியினல் அம்மிருகத்தை ஒருதரம் சுட்டாராம். அப்படிச்சுட்டதினல் அம்மிருகத்திற்கு சொல்ப காயங்கள் ஏற்பட்டதே யொழிய மரணத்தையுண்டு பண்ணக்கூடிய இடத்தில் குண்டுபடவில்லையாம். அப்புலியானது நெருங்கி வந்துவிட்டது. மறுபடியும் சுட்டும் அதனலும் அம்மிருகம் விழவில்லையாம். அச்செம்புலியானது அவர் மீது தாவிவிழுந்து புருவத்திலும் கன்னத்திலும் காயங்களை உண்டாக்கி விட்டதாம். குன்வார் தன் இருகைகளையும் அம்மிருகத்தின் வாயிற்கொடுத்து அதை வாயை மூடவிடாமற் தடுத்துக்கொண்டாராம். இப்படி செய்யவும், அம்மிருகத்திற்கும் அவருக்கும் மல்யுத்தம்போன்ற யுத்தம் யேற்பட்டு கடைசியாய் அவர் அப்புலியை கீழேதள்ளி தன் கூடவந்திருந்த ஒருவனிடமிருந்து ஒரு வேட்டைக் கத்தியை வாங்கி அம்மிருகத்தைக் கொன்றுவிட்டனராம். அவ்வாறு அம்மிருகத்தோடு அவர் மல்யுத்தம் செய்ததில் அவருக்கு புருவத்திலும் கன்னத்திலும் அநேக பெருங் காயங்கள் உண்டாயிற்றாம்

* * *

மிருகங்களின் வயது.—மிஸ்டர் எம்மெட் காம்பல் ஹால் (Mr. Emmett Campbell Hall)என்பவர் மிருகங்களின் வயதைப்பற்றி அடியிற் கண்டவாறு எழுதியிருக்கிறாராம். உலகத்திலுள்ள ஜந்துக்களிலெல்லாம் அதிக நாள் உயிரோடு இருப்பது திமிங்கிலம், அம்மீன் 1000-வருஷம் வரை உயிரோடிருந்ததாகவும், கூவியர் (Cwier) என்பவர் கண்டுபிடித்திருப்பதாக சொல்லியிருக்கிறார். அதற்கடுத்தது யானை. யானையானது400-வருஷம்வரை உயிரோடிருந்ததாயும், ரிக்கார்டு இருக்கிறதாம். சிங்கமானது 70-வருடம் வரை ஜீவித்திருக்கிறதாம். ஒட்டகமும் நெடுநாள் ஜீவித்திருக்கும் மிருகங்களுள் ஒன்று. அது 100-வருஷம் வரையிலும்கூட உயிரோடிருந்திருக்கிறதாம். சில குதிரைகள் 60-வருஷம் வரை உயிரோடிருந்திருக்கிறதாம். ஆனல் சராசரியாய்ப்பார்த்தால் குதிரையின் வயது 25-ல் இருந்து 30 வரையில். மற்ற மிருகங்களில் பன்றி 20-வருஷமும், கரடி 20-வருஷத்திற்கு அதிகப்படாமலும், ஓநாய் 20-வருஷமும், நரி 14-முதல் 16-வருஷம் வரையிலும் இருந்திருக்கிறதாம். அணில் 7-அல்லது 8-வருஷமும், முயல் 7-வருஷமும், இருக்கிறதாம். கழுகுகளில் சிலதும், அண்டங்காக்கைகளும், 100-வருஷம் வரையிலும்கூட உயிரோடிருந்திருக்கின்றனவாம். ஆமையானது 107-வருஷம் உயிரோடிருந்ததாயும் கூறுகிறார்.

---

# விவேக போதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."——திருவள்ளுவர்

தொகுதி V } பரீதாபிஸு ஆவணிமீ : 1912-ஸு செப்டம்பர்மீ { பகுதி ३

## முடிவான நிலை

### THE FINAL STATE

முன்னர் எடுத்து விளக்கிய ஜீவன் முக்திக்கும் மேலாக ஒரு நிலை இருக்கின்றது என்று சாஸ்திரங்களால் வெளியாகின்றது. இதுவே மனிதன் உயிருடனிருக்கையில் அடையக்கூடிய முடிவான நிலை. ஜீவன் முக்திநிலை உள்ளபடி ஒருவனுக்குக் கைகூடிவிட்டால் அவன் இந்த முடிவான நிலையில் சேர்க்கப்படுவான். இந்த முடிவான நிலைக்கு விதேஹமுக்தி என்று பெயர். இந்நிலையை அடைந்தவனுக்கு பிரஹ்மவரிஷ்டன் என்று பெயர். இம்மாதிரியான நிலை மனிதனுக்கு உயிருடனிருக்கும்பொழுதே வரக்கூடியது என்பதைக் குறிக்கவே ஆலயங்களில் விக்ரஹங்கள் ஏற்பட்டுள்ளன. அவைகள் எவ்வாறு ஒருவித அசைவு முதலியன இன்றிப் பார்ப்பவர்கள் மனதில் நல்லெண்ணங்களை உண்டாக்கி அவரவர்கள் பக்குவத்திற்கேற்ப, த்யானம் உத்ஸவாதிகள் செய்யும்படி தூண்டி அவர்களை மேன்மை அடையும்படி செய்தும் தாம் அவைகளால் ஒரு மாறுதலும் அடையாமலிருக்கின்றனவோ அவ்வாறே இருப்பன் பிரஹ்மவரிஷ்டனும்.

ஸ்ரீமத் சங்காராசார்யர் முதலியவர்கள் இந்த விதேஹ முக்தியைப்பற்றிக் குறிப்பாகக் கூறிவிட்டனர். பொதுவாக ஜீவன் முக்தர்கள் ப்ராரப்தவசமாய்த் தமக்கு வந்த தேஹம் நழுவியதும் பரலோக யாத்திரைகளில் செல்லாது அங்கேயே விதேஹமுக்தி பதவியைப் பெற்று எங்குமுள்ள ப்ரஹ்மமே ஆகிவிடுகின்றனர் என்று மாத்திரம் கூறிவிட்டார்கள். இந்நிலை ஒருவன் உயிருடனிருக்கும்பொழுதே வரக்கூடியது என்பதை வெளிப்படையாக எடுத்துச் சொல்லாவிடினும் பிரஹ்மவரிஷ்டனை வர்ணிப்பதில் இந்நிலையையே வர்ணித்துமிருக்கிறார்கள். இம்மாதிரியேதான் கைவல்ய நவநீதத்திலும், 'அன்னியர் தம்மால் தன்னால் அறியாதோன் வரிஷ்டனுமே' என்று அவனை ஜீவன் முக்தருள் ஒருவராக வர்ணித்துவிட்டுப் பின்னர் 'மேவரும் ஜீவன் முக்தர் விதேஹமுக்தியும் நீ கேளாய்' என்று கூறுவதாலும், இதை விவரிக்கும் விதத்தாலும், வாசிப்போருக்கு விதேஹ முக்தி மரணத்தின் பின்னர்தான் வருவது என்ற எண்ணம் உண்டாகும். இப்படியிருந்தும் வாஸுதேவ மனனத்தில் உள்ள 'எங்கு தேஹஸம்பந்த மிருக்கிறதோ அங்கெல்லாம் துக்கமுண்டு. ஆதலால் விதேஹ முக்தியின் பொருட்டே ப்ரயத்தனம் செய்யவேண்டியது' என்ற வாக்கியத்தையும், வித்யாரண்யர் எழுதியுள்ள பஞ்சதச ப்ரகரணம் திருப்தி தீபத்தில் 'முக்தனை ப்ராரப்தம்கூட அணுகாது' என்று விஸ்தாரமாக வர்ணித்துள்ளதையும் நோக்கில் இந்த விதேஹ முக்தநிலை உயிருள்ளபோதே வரக்கூடியது என்பது தோன்றும். இந்நிலை சில ஜீவன் முக்தருக்கு உயிருள்ளபோது வருவதாயினும் பெரும்பாலார்க்கும் மரணத்தின் பின் வருவதாலும், விதேஹ முக்திநிலையை வர்ணித்தாலும் ஸாதாரண ஜனங்களுக்கு அது நிஸ்ஸாரமாகத் தோற்றிவிடலாம் என்ற எண்ணத்தாலும், ஜீவன் முக்திநிலையை ஒருவன் அடையுங்கால் அவனுக்கு விதேஹ முக்தி பின் தானே விளங்கிவிடும் என்ற எண்ணத்தாலும் ஆசார்யர் முதலிய பெரியோர்கள் இந்நிலையைப்பற்றி அதிகமாக விஸ்தரிக்காது விட்டார்போலும். அவர்களுக்குப் பின்னர் வந்தவர்கள் விதேஹ முக்தர் சிலரைக் கண்டு அதை விளக்கமாகக் கூறாதுவிட்டால் உண்மை கூறியதாக முடியாது என்று வெளிப்படையாகக் கூறிவிட்டனர்.

ஆகவே முடிவான நிலையாகி விதேஹ முக்தியிலிருப்பவர்கள் இக்காலத்தில் சிலர் இருப்பதனால் இதுவே முடிவான நிலை என்று கூறவேண்டி வந்தது. கும்பகோணம் மௌன ஸ்வாமிகளும், இப்பொழுது நாகப்பட்டணத்திலிருக்கும் மௌன ஸ்வாமிகளுமே இந்நிலைக்கு சாக்ஷி. இம்மாதிரியுள்ளவர்களைத் தர்சிக்கக் கிடைக்காத பலருக்காகத்தான் இந்நிலையை உணர்த்தும் விக்ரஹங்கள் கோயில்கள் அமைந்துள்ளன. நம் முன்னோர்கள் முடிவான நிலையை, ஊஹிப்போர் எளிதில் உணரும்படி அமைத்துள்ள ஆலயங்களின் சிறப்பை என்னென்று கூறுவது இதனால்தான் ஔவையும் "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்றனள்.



விவேக போதினி

தொ. 5.] பரீதாபி௵ ஆவணிமீ [பகுதி 3

# விக்கிரஹ ரஹஸ்யம்
## THE INNER MEANING OF IMAGES
### 10. தக்ஷிணாமூர்த்தி

ஒரு ஆலமரத்தடியில் உயர்ந்த ஜடாமகுடந் தரித்துப் புலித்தோலை உடுத்த ஒரு புருஷன் உயர்ந்த பீடத்தின்மேல் வீராஸனமிட்டு உட்கார்ந் திருப்பதாக அமைந்துள்ளது இவ்விக்கிரஹம். ஜடையில் பிறைச்சந்திரன் கங்கை முதலிய வைகள் காணப்படுகின்றன. வீராஸன அவஸரத் தில் கீழே தொங்கவிட்டிருக்கும் வலதுகால் ஒரு அஸுரனை நசுக்கிக்கொண்டிருக்கிறது. இடது கால் மேலே உயர்த்தப்பட்டு வலது முழங்காலின் மேல் வைக்கப்பட்டிருக்கின்றது. ஒரு வலது கையில் உடுக்கும் ஒரு இடது கையில் அக்னியும் காணப்படுகின்றது. மற்ற வலது கையில் சின் முத்ரையும், மற்ற இடதுகையில் ஏடும் அமைந் திருக்கின்றது. இவரைச்சூழ்ந்து நான்கு சிஷ்யர் கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு ஸநகாதி யோகிகள் என்று பெயர்; முறையே ஸநகர், ஸநந் தனர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்பதே இந்நால் வர்கள் பெயர். சிஷ்யர்கள் பெரியவர்களாகவும், குரு சிறு வயதுடையவராகவும் காணப்படுகின் றார்கள். இங்கு மௌனத்தையே உபதேசமாகக் காட்டப்பட்டிருக்கிறது. தக்ஷிணாமூர்த்திவிக்ரஹ அமைப்பைத் தாயுமானவர்:—

துங்கமிகு பக்குவ ஸநகன்முதல் முனிவோர்கள்
தொழுது அருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய சொல்லை ஒருசொல்லால் உணர்த்தியே
ஸ்வரூபானு பூதி காட்டிச்
செங்கமல பீடமிசைக் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்தி முதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே!
சின்மயானந்த குருவே!

என்று வர்ணித்திருக்கிறார்.

தக்ஷிணாமூர்த்தி விக்கிரஹங்கள் பலவிதமாகக் காணப்படும். சில தக்ஷிணாமூர்த்தி விக்கிரஹங் களில் வீராஸனத்திற்குப் பதிலாக யோகாஸன மும், சிலவற்றில் உடுக்கு அக்னிக்குப் பதிலாக, மான், மழு, பாசாங்குசம், வீணை, ஜபமாலை, முத லியவைகளும் காணப்படலாம். இவைகளின் பொருளை முன்னரே சிவலிங்கம், கணேசர் முதலிய விக்கிரஹங்களைப்பற்றிக் கூறிய இடத் தில் வெளியிட்டாகி விட்டது.

இங்குக் கூறப்பட்டிருக்கும் வர்ணனையில் வீரா ஸன அமைப்பில் கீழே தொங்கி ராக்ஷஸனை நசுக்கும் வலது கால், மேலே உயர்த்தி வலது முழந்தாளின்மேல் வைத்திருக்கும் இடதுகால், உடுக்கு, அக்னி, சிரத்திலுள்ள கங்கை, பிறைச் சந்திரன், புலித்தோலாடை ஆகிய இவைகளின் உட்பொருள்களை நடராஜ விக்ரஹத்தைப்பற்றி எழுதிய காலத்தில் எடுத்துக் கூறப்பட்டது. இங்கு ஆராயவேண்டியவை குரு. சிஷ்ய நிலை, மௌனம், சின்முத்திரை, கையில் பிடித்தி ருக்கும் ஏடு. இவைகளின் உட்கருத்தை எண்ணி ஈடுபட்டே ஸ்ரீமத் சங்கராசாரியர்:—

चित्रं वटतरोर्मूले वृद्धाशिष्या गुरुर्युवा ।
गुरोस्तुमौनं व्याख्यानं शिष्यास्तुच्छिन्त संशयः ॥

அதாவது 'ஆலமரத்தடியில் அமைந்துள்ள அதிசயத்தை என்னென்று சொல்வேன்! வயது முதிர்ந்த சிஷ்யர்களால் சூழப்பட்ட சிறுவய துள்ள குரு ஒருவர் இருக்கிறார். அவர் மௌனத் தால் உபதேசிக்கச் சிஷ்யர் ஸந்தேஹங்கள் பறந் தோடிப் போகின்றன' என்று ஆனந்த பாவசாகி,

मौनं वाक्या प्रकटित परब्रह्मतत्वं युवानं ।
वर्षिष्टान्तेव सदृषिगणैरावृतं ब्रह्मनिष्टं ॥
आचार्येन्द्रं करगलित चिन्मुद्रमानन्दमूर्तिं ।
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ॥

அதாவது,

சீர்பூத்த மௌனமதாய் அருமறை மாமுடிகள்
திகழ்த்து பரப்பிரம தத்துவனை அணியவவனை
நேர்பூத்த உயர்சிட விருடிகணப் பிரம
நிட்டர்கள் சூழ்தர நிறைமா மதியினைச்செங்கழுநீர்
தார்பூத்த குருபரனை சின்முத்திரைக்கை
தரித்தவனை ஆனந்த மூர்த்தியைத் தன்மயனை
யேர்பூத்த முதிதவதனனை யெந்த ஞான்று
மெழிலுறும் சீர்தக்ஷிணாமூர்த்தியை யேத்தெடுப்பாம்.

என்று மனதாரத் துதித்திருக்கிறார்.

இம்மாதிரியே ஈடுபட்டுத் திருவிளையாடற் புராண ஆசிரியராகிய பரஞ்சோதி முனிவரும்:—

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்றகேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவனை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

என்று தக்ஷிணாமூர்த்தியின் உட்பொருளை வெளியிட்டிருக்கிறார்.

இந்த விக்கிரஹம் குருசிஷ்ய பாவ ரஹஸ்யத்தை உணர்த்துகிறபடியால் இதற்கு ஞான பரமான ஆசார்ய பாவனைப்பொருளே மிகப் பொருத்தமாகும். பக்திபரமான பொருள் இல்லவே இல்லை என்றும் கூறிவிடலாம். முன் எடுத்துக்காட்டிய ஈடுபாடுகளை ஆதாரமாகக் கொண்டு இவ்விக்கிரஹத்தின் ரஹஸ்யத்தை ஆராயப் புகுவோம்.

தக்ஷிணாமூர்த்தி யௌவன புருஷனாகவும் சிஷ்யர்கள் 'நான்மறை யாறங்கமுதற் கற்றகேள்வி வல்லாரான' வயது முதிர்ந்தவர்களாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறார்கள். ஸாதாரணமாக அஜ்ஞானம் அனாதி, இப்படி இருந்தும் ஞானம் உதயமானதும் அது ஒளியைக் கண்ட இருளைப் போலவும், தீப்பொறியால் தாக்கப்பட்ட பஞ்சுப் பொதிகளைப்போலவும், இருந்தவிடம் தெரியாமல் பறந்தோடிப் போய்விடும் என்பது சாஸ்திர ரஹஸ்யங்களில் ஒன்று. உதயமான ஞானத்தையே உருவமாகக்கொண்டு 'வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய் எல்லாமா யல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டும்' திறன் வாய்ந்த குரு சிறுவயதுடையவராகவும்; அஜ்ஞானத்திற்கு உட்பட்டதாயும் உள்ளதை உள்ளபடி எடுத்துரைக்க முடியாது மயங்கும் வேதாதிகளில் தேர்ச்சியடைய ஆயுளை எல்லாம் போக்கிய சிஷ்யர்களைப் பெரியவர்களாகவும் இவ்விக்கிரஹத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இக்கருத்தை உள்ளடக்கியேதான் ஸ்காந்தத்தில் ஸுப்ரஹ்மண்யர் சிறுபிள்ளையாக விருக்கையிலேயே நீண்ட ஆயுள் பெற்று வயது முதிர்ந்து ஸகல ஸேனைகளாலும் சூழப்பட்ட சூரபத்மாதிகளை இருந்தவிடம் தெரியாமல் பறக்கடித்துவிட்டதாகக் கூறியிருக்கிறது.

இந்தச் சிஷ்யர்களுக்கு மௌனமூலமாக உபதேசம் நடக்கிறது. மௌனமென்றால் என்ன? அதனால் என்ன உபதேசம் செய்யமுடியும்? மௌனம் அநேகவிதம். அவைகளுள் வாக் மௌனம், க்ரியா மௌனம், உண்மை மௌனம் என்பவைகளே முக்கியமானவை. வாக் மௌனம் என்பது வாயால்மாத்திரம் பேசாதிருத்தல்: மனம் கிடந்து பதைத்துக்கொண் டிருக்கலாம். க்ரியாமௌனம், வாக்கு பதைத்து வெளியிட்ட போதிலும், மனம் பதைத்துக்கொண்டிருந்த போதிலும் அவஸரமாக ஒன்றையும் செய்து விடாமை. மனத்தைப் பதைக்கவொட்டாது தடுத்துக் கடமைகளைச் செய்துவிட்டு அமைதியுடனிருப்பதே உண்மையான மௌனம். ஒரு பாம்பை நம்முன் கருடன் கொத்தி எடுத்துப் போவதாக வைத்துக்கொள்வோம். அநியாயமாகக் கருடன் பாம்பை வதைக்கிறதே என்று பாம்பினிடம் விருப்பும், கருடனிடம் வெறுப்பும்

கொடிய பாம்பிற்கு இக்கதி வந்தது தகும் என்று மாறுன மனேநிலையும் நம் மனதில் ஏற்படாது, 'எந்த ப்ராணிக்கும் உயிர் வெல்லம், ஆதலால் நாம் பாம்பைக் கருடன் வாயிலிருந்து தப்புவிக்க வேண்டியது முக்கியம். அதைச் செய்ததன்மேல் சிபியைப்போல அதிக ஜீவகாருண்யத்துடன் இருக்க முடியுமானுல் இருக்கவேண்டும்'என்று எண்ணிய பாம்பை விடுவித்துவிட்டுப் பின்னர் இதைக் கவனியாதுஎப்பொழுதும்போல அமைதியுட னிருப்பதே உண்மையான மௌனத்திற் சேர்க்கும் முதல்படி. உலகில் ஏற்படும் ஸுகதுக்கங்கள் நியாயாந்யாயங்கள் இவைகளைக் காணும்பொழுது மனம் பதைத்து விருப்பு வெறுப்புக்கு இடங்கொடாது, அந்த ஸமயத்தில் நாம் செய்யவேண்டிய கடமைகளைச் செய்துவிட்டு ஒய்ந்திருப்பதாகிய மௌனமே ஒருவன் மனதில் குடிகொண்டிருக்கும் ஞானத்தின் வரம்பு, வெளி அடையாளம். முற்கூறிய இரண்டுவித மௌனமும் காரணத்தைக் கவனியாது காரியத்தை மாத்திரம் அழிப்பது. பாம்புப்புற்றை மேலே அடித்துடைத்து விட்டு உள்ளே இருக்கும் பாம்பைக் கொன்றுவிட்டதாக மதிப்பது போன்றது இம்மௌனங்களை மௌனமாக மதிப்பது. உண்மையான மௌனமோ விறகு ஒய்ந்து நெருப்பு அடங்குவது போன்றது: மனம் தன் வெளி வ்யாபாரங்களைப் பயனற்றவை என்று கண்டு தன் ஸ்வரூபம் உணர்ந்துஅடங்கிநிற்பது. இம்மாதிரியான சாந்தநிலையில் உள்ளதைப்பற்றி நின்று ஒன்றும் பேசாது இருந்து விடுதலே மௌனமூலமாக உபதேசம் செய்தல். இந்த மௌனத்தின் ஸ்வரூபத்தை ஸ்ரீமத் சங்கராசாரியர் தமது அபரோக்ஷாநுபூதி என்னும் நூலில் 'எது மனவாக்குக் கெட்டாததோ, எந்த மௌனம் யோகிகளால் அடையத்தக்கதோ அந்நிலையையே அடைய வேண்டும் என்று அறிந்தோர் மதிப்பதும், வாக்கால் சொல்ல முடியாதபடி அநிர்வாச்சியமாக உள்ளது பிரபஞ்சம் என்று மனஞ்சலியாது நிற்பதாகிய அறிஞரிடம் காணப்படும் நிலையும் உண்மை மௌனமாம். வாக்மௌனம் சிறுவர்களுக்கே தகுந்தது' என்று வெளியிட்டிருக்கிறுர்.

இங்கு தக்ஷிணுமூர்த்தி மௌனமாக நிலைத்த போதிலும் 'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி'ச் சொல்லாமல் சொல்லுகிறுர்' என்று கூறப்பட்டிருக்கிறது. இதனுல்தான் இம்மௌனத்தால் சிஷ்யர்கள் ஐயம் நீங்குகின்றனர். உலக வழக்கிலேயே 'ஏட்டுச்சுரைக்காய் கறிக்காகுமா?' என்பது போன்ற பழமொழிகளால் ஒருவன் வாக்கு ஒருமாதிரி, செயல் வேறுமாதிரி இருந்தால் அவன் வாக்கு நன்கு மதிக்கப்படாது என்பது தெரியவரும். ஆகவே ஒருவர் உபதேசம் செய்தால் அதன்படி அவர் நடந்து காட்ட வேண்டும். ஒருவன் வாய்திறந்து கூறிப் போதியாமல் தன் நடத்தையால் போதிக்கவேண்டியவைகளை நடத்திக் காட்டிவிட்டால் அதுவே சிறந்த உபதேசமாகும். ஆகவே இவ்விக்கிரஹத்தில் வாய்ப்பேச்சின்றி உள்ளதை உள்ளபடி பற்றி நிற்றலாகிய ஆனந்த பாவசநிலையில் குருவே இருந்து சிஷ்யர்களுக்குக் காட்டி, அவர்கள் மனதில் 'நாம் இந்நிலையை அடைந்து இவர்போ லிருக்கவேண்டும்' என்ற அடங்கா ஆவலை உண்டாக்குகிறுர். நடந்து காட்டுவதே மேலானதாயும், நன்றுகச் சீர்திருத்துவதாயும் உள்ள மௌன போதனை என்பதை வேதாதீதமாயுள்ள பொருளாக இருந்துகாட்டும் இம்மௌன நிலை குறிக்கின்றது. இம்மௌன ப்ரசங்கத்தைத்தான் சொல்லாமல் சொல்லுவது என்று கூறுவது. சொல்லாமல் சொல்லுவதன் லக்ஷணத்தைக் கைவல்ய நூலாசிரியர் :—

தன்பதி யல்லாப் பேர்கள் தம்மையல்ல னல்லனென்றுள், அன்பனைக் காட்ட நேரே அவள்வெட்கி மௌனமானுள், என்பது போல நீக்கி இதன்றிதன் றெனச்சேஷித்த, பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமல் பேசும்வேதம்.

என்ற பாட்டில் திருஷ்டாந்த பூர்வகமாக விளக்கியிருக்கிறுர். அதாவது உண்மை வஸ்து இதல்ல இதல்ல என்று தோன்றுபவைகளை எல்லாம் நேதி

களைந்து நீக்கி இவைகளைக் காணும் வஸ்துவாக விருந்து இதுதான் உண்மை வஸ்துவென்று வாய்விட்டுக் கூறுது(கூறமுடியாததலால்)நின்று விடுவதே சொல்லாமல் சொல்லுதல். இந்தப் பொருளை வேதாதீதமாய் 'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி' என்ற தொடரே நன்கு விளக்கும். ஆகவே இவ்வளவு சிறந்த மௌனத்தால் உண்மைப்பொருளைச் சொல்லாமல் சொல்லி உபதேசிக்கலாம் என்பதாயிற்று.

இவ்வாறு இவ்விக்கிரஹம் மௌனத்தாலேயே இப்பொருளை அடக்கியுள்ளதாயினும், இந்த ரஹஸ்யங்களைக் காட்டும் குறிப்புக்களும் இதில் அமைந்து கிடக்கின்றன. இவைகள்தான் சின் முத்திரையும் கையில் பிடித்திருக்கும் ஏடும். வேதாந்த சாஸ்திர ஆராய்ச்சிப் பயிற்சிகளின் பரிபாகத்தால் வருவது இந்த மௌனநிலை என்பதைக் கையிலுள்ள ஏடு விளக்கும்.மேலும்

> ग्रन्तमभ्यस्यमीधावी ज्ञानावज्ञानतत्परः ।
> पलालमिवदान्यार्थं त्यजेत् ग्रन्तमशेषतः ॥

என்பது அமிருதபிந்து உபநிஷத் வாக்கியம். சாஸ்திரங்களில் அடங்கியிருக்கும் ஞானப்பாஸ விஷயங்களைக் கிரஹித்துப் பின்னர் அவைகளை விட்டு அப்பாற்பட்டிருக்கும் பிரஹ்மத்தைப் பற்றி,தான்யத்தைக்கைக்கொண்டு வைக்கோலைத் தள்ளி விடுவதுபோலத் தள்ளிவிட வேண்டும் என்பதே இதன் கருத்து. சாஸ்திரத் தேர்ச்சியடைந்த ஸனகாதி யோகிகளைப்போன்ற சிஷ்யர்களுக்கு இந்த உபதேசம் மிக அவசியம். அவர் சாஸ்திர வாஸனையும் நீங்கி மேல் போக வேண்டியவர்கள்.

இனி சின்முத்திரை விஷயத்தை எடுத்துக் கொள்ளுவோம். இதனுள்தான் முற்கூறிய மௌனத்தின் ரஹஸ்யம் முற்றிலும் அடங்கியுள்ளது. இப்பதத்திற்கு ஞான அடையாளம் என்று பொருள்.இதைக் கண்டதுமே ஞானத்தின் ஸ்வரூபம் இன்னது என்பது வெளியாகும். இந்த அடையாளத்தின் சிறப்பு விளங்க சாஸ்திரங்களில் ஒரு திருஷ்டாந்தம் கூறுவதுண்டு. நாம் ஒரு சிறு ரத்னத்தைக் கையில் வைத்துக் கொண்டு போகுங்கால் வழியில் குப்பைகள் சேர்ந்திருந்த விடத்தில் அது கைதவறி விழுந்துவிட்டதாக வைத்துக்கொள்ளுவோம். உடனே அங்கேயே நாம் உட்கார்ந்து நமது கை முதல் மூன்று விரல்களை முக்கியமாக உபயோகப்படுத்தி அக்குப்பைகளைத் தள்ளிப்பார்த்து ரத்னத்தைக் கண்ட உடன் அதைக் கட்டைவிரல் ஆட்காட்டி விரல் நுனிகளுக்கிடையில் பொறுக்கி எடுப்போம்.இத்தருணத்தில் உண்டாகும் கையடையாளமே சின்முத்திரை என்னப்படுவது.இது அமைதிக்குறியைப்போலக் கையமைத்து முதல் மூன்று விரல்களை நேரே நிற்கவிட்டு ஆட்காட்டி விரலும் கட்டைவிரலும் நுனியில் ஒன்றுசேருங்கால் உண்டாகும் கையமைப்பு. ஆகவே இம் முத்திரையில் பிரிந்து நேராக நிற்கும் விரல்கள் நாம் ஆராயும் விஷயத்திற்குப் பொருத்தமில்லாதவைகளை நீக்குவதையும், மற்ற இரு விரல்கள் சேர்ந்திருப்பது விஷயஸம்பந்தமான ஸூக்ஷ்ம விஷயங்களை இவைகளுக்கிடையிலிருந்து தேர்ந்து எடுப்பதையும் குறிப்பாகக் காட்டி, உலகில் ஆய்ந்து ஓய்ந்து அறிதல் என்பதன் ஸ்வரூபம் இன்னது என்பதை விளக்கும். ஸாதாரணமாகப் பெரியோர்களும் கற்றோர்களும் அரிய ஸூக்ஷ்ம விஷயங்களை எடுத்துப் பேசுங்கால் இம்முத்திரையைக் கைக்கொள்வது வழக்கமாகவும் இருக்கிறது. ஆகவே தக்ஷிணாமூர்த்தி ப்ரபஞ்ச விஷயத்தில் கலந்து கிடக்கும் பரம்பொருளைத், தோன்றும் வஸ்துக்கள் எல்லாம் அல்ல அல்ல என்று நீக்கிப் பின் சேஷிக்கும்,ஸூக்ஷ்ம வஸ்துவாக உணர்ந்து நிலைபெறுவதே பரமநிலை என்று, தமது சின்முத்திரைமூலமாக மௌனத்தின் சிறப்பை உணர்த்துகிறார். மேலும் இம்முத்திரையில் வேறொரு சாஸ்திர ரஹஸ்யமும் அடங்கியுள்ளது. அமைதியாகவிருந்து ப்ரபஞ்ச ஸஞ்சாரத்தால் ஜீவனுக்கு ஏற்படும் மலம், விக்ஷேபம், ஆவரணம் (ஆணவம்)

காம்யம், மாயை) என்ற மூன்று தோஷங்கள் அப்பியாஸத்தால் நீங்குங்காலையில் சேஷிக்கும் ஆத்மாவே, அவன் அதுவரையில் உபாஸித்து வந்த கடவுளது நிஜரூபமான பிரஹ்மம் என்று இம்முத்திரை உண்டாகி நிற்கும் வழி போதிக்கும். ஆகவே இதன் மூலமாகத் தேறிவரும் சிஷ்யர்களுக்கு "பரஜ்ஞானம்பிரஹ்மம்," "தத்வமஸி," "அஹம் பிரஹ்மாஸ்மி" ஆகிய மஹா வாக்கியப் பொருள் ஸதா மனதில் ஊறிக்கொண்டிருக்கும் நிலைவரும். இதனால் அவர்களுக்கு ஞானநிஷ்டை எளிதில் கைகூடும்.

இந்த விக்கிரஹம் குறிக்கும் ரஹஸ்யத்தைச் சுருக்கிக் கூறுவோம். நல்ல முமுக்ஷுவான சிஷ்யர்களுக்குப் பரமாசார்யர்கள் உபதேசிக்கும் விதமும் செய்யும் உபதேசத்தின் ரஹஸ்யத்தையும் அடக்கியுள்ளது இந்த விக்கிரஹம். ஆசாரியன் நேராக வாய்மொழியால் பரம ரஹஸ்யத்தை முதலில் உபதேசித்தபோதிலும் பின்னர் அவர் கூறியபடி இருந்து காட்டி மௌனத்தால் பரமநிலையைக் காட்டும்பொழுதுதான் அந்த உபதேசம் நன்றாகச் சிஷ்யன் மனதில் வேரூன்றி அவரைப்போல் நிஷ்டை செய்து குரு சிஷ்யன் என்ற பேதம் நீங்கி இருவரும் ஏகமாகி நிற்கும் நிலையை அடையவேண்டும் என்ற ஆவல் அவனுக்குண்டாகும்படி செய்து அவ்வாறு நடக்கும்படி செய்யும். ஆகவே இதில் குரு சிஷ்யன் என்ற ஸம்பந்தத்தின் முடிவான நிலை நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் தான் இந்த விக்கிரஹத்திற்கு உத்ஸவாதிகள் கூடக் கோயிலில் இல்லை. இதன் சிறப்பை உணர்ந்தவர்கள் சிலரே இதன் முன்பு நின்று சற்றுத் துதித்துப் போவார்கள். இதுதான் இந்த விக்கிரஹத்தின் வெளிப்பொருள்.

இதுவரையில் கூறியவைகளிலிருந்து சிவன் கோயிலில் வழிபட்டு வரும் முக்கிய மூர்த்திகளாகிய சிவலிங்கம், நடராஜமூர்த்தி, தக்ஷிணாமூர்த்திகளின் சிறப்பு ஒருவாறு விளங்கி யிருக்கும். சிவலிங்கம் ஸத்மூர்த்தி : தக்ஷிணாமூர்த்தி சித்மூர்த்தி, நடராஜர் ஆனந்தமூர்த்தி. இம் மூன்றும் வழிபடுவோர்க்குத் தமது முக்கிய ஸ்வரூப மூலமாக ஆத்மா ஸச்சிதானந்த மூர்த்தி என்பதை உணர்த்தும் குருக்களாகின்றன. இவைகளுக்கு அப்பாற்பட்டதாகிய சிதம்பர ரஹஸ்யமே சின்மயானந்த மூர்த்தியால் மௌனப்ராஸங்கம் செய்யப்பட்ட 'மறைக்கப்பாலாயுள்ள வாக்கிறந்த பூரணம்'தான். இவைகள் எல்லாம், மூலமூர்த்தியும் எல்லோரும் முதலில் அனுபவித்து அறிந்து பழகக்கூடியதுமாகிய ஸத்நிலையை உணர்த்தும் சிவலிங்கத்தின் விளக்கங்களாதலால், இதை மூலலிங்கமாகவும் மற்றவைகளை இதற்கு ஸமமான முக்கிய மூர்த்திகளாகவும் சிவன் கோயில்களில் நம்முன்னோர் வழிபடும்படி ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

இனித் தக்ஷிணாமூர்த்தி குறிக்கும் ரஹஸ்யமான பரமார்த்தப்பொருளை எடுத்தெழுதுவோம். சாஸ்திரங்களிலே இரண்டு குரு ஒவ்வொருவருக்கும் உண்டென்று உற்று நோக்குவோருக்கு விளங்கும். 'ஸாதன சதுஷ்டய ஸம்பன்னனே முமுக்ஷு: இவனே வேதாந்த சிரவணாதிகளுக்கு அதிகாரி : இவன் குருவை அடுத்து மஹாவாக்கிய உபதேசம் பெற்று நிஷ்டைகூடி முக்தியைப் பெறவேண்டும்'என்பதுசாஸ்திரங்களின் துணிபு. ஆனால் ஸாதன சதுஷ்டயத்தில் சமாதிஷட்க ஸம்பத்தி என்னும் மூன்றும் ஸாதனத்தில் ஸமாதானம், சிரத்தை என்ற இரண்டு ஸாதனங்கள் இருக்கின்றன. இவைகளின் ஸ்வரூபத்தை:—

சிரவணப் பொருளைத் தானே சித்தம்சிந் திக்கு மாறு
ஸரஸமா வைக்குமித்தை ஸமாதானம் என்பார்மேலோர்
பரமஸத் குருநூல் அன்பு பற்றலே சிரத்தை யாகும்

* * * * *

என்று கைவல்ய நூலாசிரியர் நன்கு விளக்கியிருக்கிறார். இதனால் ஸத்குருவை அடையும் முன்னரே ஒருவனுக்கு ஒரு குரு இருத்தல் வேண்டும், அதனால் அவனுக்கு ஸமாதானமும் சிரத்தையும் உண்டாகி ஸத்குரு உபதேசத்திற்குத் தகுந்த அதிகாரியாகவேண்டும். இவ்விக்கிர

ஹத்திற்கு வெளிப்படையான பொருள் கூறிய விடத்தில் இப்பாட்டுள் புதைந்துகிடக்கும் வெளி குருநாதரைத்தான் எடுத்துப் பேசியது. இதற்கு மேலிருக்கும் உட்குருநாதரையும் இந்தத் தக்ஷிணாமூர்த்தி விக்கிரஹம் குறிக்கும். இதுதான் இந்த விக்கிரஹத்தின் பரம ரஹஸ்யமான பொருள். வெளிக்குருநாதர் என்ன நிஷ்டை செய்து காட்டியும் வாய்விட்டும் கூறவேண்டி வந்துவிடும். அவர் தான் தக்ஷிணாமூர்த்தியின் பரமரஹஸ்யப் பொருளை நன்கு விளக்கி, அதனால் சிஷ்யன் உள்ளத்தில் உண்டாகும் இடைவிடாப் பழக்க விசேஷத்தாலும், பலஜன்ம புண்ய பரிபாகத்தாலும் தக்ஷிணாமூர்த்தி உதயமாகி, வெளி ஆசார்யர் உபதேசத்தால் பக்குவமான இவனை உள்ளபடியுள்ள மௌன ப்ரஸங்கத்தால் சொல்லாமல் சொல்லி அந்த உபதேச நிலையை 'நினையாமல் நினைந்து' (நினைப்புமறப்பாக மாறிமாறி வாராது. மாறா அனுபவமூலமாக அந்நிலையிலேயே) நிற்கும்படிசெய்து அவன் பவத்தொடக்காகிய மூல அஞ்ஞானமற வேரறுத்துவிடுவார். இந்த அந்தராசார்ய உதயம், இவர் செய்யும் மஹா வாக்கிய உபதேசம், உண்டாகும் அஞ்ஞான நீக்கம் எல்லாம் ஒவ்வொரு முமுக்ஷுவின் உள்ளத்திலும் வெளி ஆசார்யர் செய்யும் 'ஸத் சிதானந்தம்' என்னும் அவாந்தர வாக்கிய உபதேசம், சிரத்தையோடு கூடிய சிஷ்யனது இடைவிடாப் பழக்கம் ஆகிய இவைகள் உதவியால் ஏற்படுபவைகள். இம்மாதிரி பொருந்தும் அனுபவ விசேஷத்தையே இவ்விக்கிரஹம்நம்போன்ற மனிதர்களுக்கு உணர்த்திக்கொண்டே இருக்கிறது.

வெளி ஆசார்யன் செய்யும் உபதேச விஷயம், உள்ளாசார்யன் உதயமாகும் காலம், உபதேசிக்கும் விஷயம் முதலியவைகளை நேரிடக் குருமுகமாக அறிந்து அப்யஸித்துத் தெளியவேண்டும். இப்படி இருப்பினும் வெளிக்குரு உபதேசிப்பவைகள், இன்னவைகள் அவைகளை அப்யஸிக்கும் முறை, பலன் இவைகளைக் கைவல்ய நவநீத ஆசிரியர் :—

ஞானங் காரணம் அறிபொருள் காரிய
நாமரூபப்பேய்கள்
ஆனதெப்படி அழிந்த தெப்படியென
வாய்குதல் பலனன்றே
மான மைந்தனே தீர்க்க ஸொப்பன
ஜகம்வந்ததும் பாராமல்
போனதும் நினையாமல் உன்போதமாய்ப்
பூரணமா யிருப்பாயே!

அஸத்தி லெம்மட்டுண்டு அம்மட்டும்
பராமுகமாகின யம்மட்டும்
நிஜத்தில் உள்விழிப்பார்வை யாலிப்படி
நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தில் உன்மனம் நின்று சின்மாத்திர
வடிவமாயிடில் மைந்தா
கசத்த தேஹத்தி லிருக்கினும்
ஆனந்தக் கடல்வடிவாயே!

என்ற பாட்டுக்களில் நன்கு காட்டி, வெளியாசார்யர் இவ்வாறு உள்ளாசார்யர் விஷயத்திற்குச் சிஷ்யனைத் தயார் செய்கிறார் என்பதைக் கூறி யிருக்கிறார். இதன் ரஹஸ்யத்தைக் குருமுகத்தாலும் அப்யாஸ முகத்தாலும்தான் நன்கு உணரவேண்டும்.

தக்ஷிணாமூர்த்தி விஷயமாகத் தாயுமானவர் அநேக பாடல்களைப் பாடியிருக்கிறார். அவைகளுள், சின்மயானந்தகுரு, கல்லாலின் என்றுள்ள பாகங்கள் முக்யமானவைகள். ஆகாரபுவனம் சிதம்பரரஹஸ்யத்தையும் எடுத்துக்கொள்ளலாம். ஸ்ரீமத் சங்கராசாரியர் தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் ஒன்று செய்து இவ்விக்கிரஹத்தின் விஷயத்தை நன்கு விளக்கியிருக்கிறார். இவைகளின் கருத்தை ஒட்டி தக்ஷிணாமூர்த்தியை அந்தராசார்யராகக்கொண்டு உள்ளவாறு வழிபட்டு வந்தால் வெளிகுருவும் கிடைத்து நமக்கு உள்குருவும் உதயமாகும் பாக்கியம் சீக்கிரம் வரும் என்பதற்கு ஸந்தேஹமே இல்லை.

## ஈகை

### MUNIFICENCE

அமிழ்தினு மினிய தமிழ்மொழியில் தழைத்து வரும் நீதிநூல்கள் பலவற்றுள்ளும் பெருமை பொருந்தியது திருக்குறள் என்பதை, பாவலர் பலரும் நன்கறிவார். மேலும் இந்நூல் ஆங்கிலம், இலத்தீன் முதலிய மேனாட்டுப்பல பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட் டிருப்பதனால், மேலைத் தேசத்தாரும் இதை உச்சிமேற் கொள்கின்றனர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உணரக் கிடக்கின்றது. இவ்வரிய பெரிய நூலினது சொற்செறிவு, பொருட் பொலிவு முதலிய பெருமைகளை இத்தன்மையவென எடுத்துரைக்க இயலாது இடைக்காடர்

"கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்"

என்று வியந்து கூறியுள்ளார். இவ்விதம் இடைக்காடனர் இயம்பியதற்கு ஆதாரமாக

"இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள"

என்னும் அருமைத் திருக்குறளை யாராயப் புகுவோம். இக்குறள் வெண்பாவிற்கு எழுவகையாய்ப் பொருள் காணலாம்.

1. பரிமேலழகர் கருத்து. இலன் என்னும்-யான் வறியன் என்று இரப்பான் சொல்லும், எவ்வம்-இளிவரவை, உரையாமை-தான்பிறர்கண் சொல்லாமையும், ஈதல்—அதனைத் தன்கண் சொன்னார்க்கு மாற்றாது ஈதலும், உள-உளவாவன, குலனுடையான் கண்ணே-குடிப்பிறந்தான் கண்ணே.

அதாவது தரித்திரனொருவன் ஓர் கனவானிடம்சென்று தன் குறைகளைக்கூறி யாசித்தால், தன்னிடம் இன்னான் வந்து இன்ன துயரமொழிகளைப் புகன்றான் என்று பிறரிடம் சொல்லிக் கொள்ளாது தன்னை வந்தடைந்தவனுக்குப் பொருள் வழங்கிப் போக விடுத்தலே உத்தமம். இத்தன்மை உயர்குடியிற் பிறந்தவனிடத்தே காணப்படும். இக்கருத்தை நனியமைத்து விநாயக புராணமுடையார்,

"இரப்பவன் இலனென் றூர
இயம்பிய எவ்வஞ்சொல் லென்று
இரப்பினும் பிறர்பாற் கூறாது
இரக்கமோ டீதன் மைந்தா!"

என்று திருவாய்மலர்ந்தருளினர்.

2. இப்பாவில் பல பொருள்படும் பாகம் "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்" என்பதே. காய்க்கு மரம் கல்லேறி படுமே யொழியக் காயாத மரம் கல்லேறி படாது. அதுவேபோல் நிரம்பவும் நிதியைப் படைத்த சீமான்களை யடுத்தே இரவலர்பலரும் யாசிப்பர். ஏராளமான செல்வச்சம்பத்தை யடைந்திருந்த போதிலும் சிலர் தங்களுக்கு இயற்கையாயுள்ள உலோப குணத்தால் ஏற்பவர்களைக் கண்டதும் "ஐயா! நான் என் செய்வேன்! என்னிடம் இதுபொழுது பணமில்லை. நீர் ஏதாவது கொடுக்க இசைவீரேல் நான் ஏற்றுக்கொள்ளத் தடையில்லை" என்று பொய் வார்த்தைகள் பலவும் பேசி வறியோர்களை வறிதே போகச்செய்கின்றனர். "இயல்வது கரவேல்" என்னும் அமுத மொழியை யவர்கள் அறியார்போலும். நான் இச்சமயம் இல்லாதவனா யிருக்கின்றேன் என்று உலோபிகளைப்போல் உரையாமல் 'ஏற்ற கைமாற்றாமை என்னானும் தாம் வரையாது ஆற்றாதார்க்கு ஈவதாம் ஆண்கடன்' என்பது இரண்டாவது பொருள். இதற்கேற்ப முற்கூறிய புராணமுடையார்,

"இரப்பவன் வாளாதேக இலனெனும் எவ்வம்கூறாது
இரப்பினை நிரப்பல் நன்றும்."

3. இலனென்னு மெவ்வமுரையாமை யீதல்—யான் இல்லேன் என்னும் இரக்க வார்த்தையை யாசகன் தனக்குச்சொல்வதற்கு முன்பே அவன் குறிப்பறிந்து கொடுத்தல். "தண்டாமல் ஈவது தாளாண்மை" என்ற ஔவை தனிப்பாடலும், "குறிப்பறிந்து ஈதலே கொடை" என்ற புலவர்க் கௌடதமாம் நைடதப் பாடலும், "தொல்லை இரவாமல் ஈந்த இறைவர்போல் நீயும் கரவாமலீகை கடன்" என்ற புறப்பொருள் வெண்பாவும் புகட்டு

வது உய்த்துணரத்தக்கது. குறிப்பறிந்தீயுங் குணமுடைய வள்ளலை இக்காலத்தில் காணக் கிடைப்பது அருமையினு மருமையே!

4. நான்காமுரை. இலனென்னும் இழி மொழியை இரப்பவன் தன்னிடம் தானம் வாங்கின பின்பும், வேறொருவனிடம் போய்ப் புகலா வண்ணம் அவனது வறுமை நீங்கவும், அவனுக்குச் செல்வம் நிரம்பவுந் திருப்தியுண்டாகவும் கொடுத்தல். 2, 3, 4 ஆகிய மூவுரைகளும், குறளினுரைகண்ட மற்றை யாசிரியர்களின் கருத்து என்பது பரிமேலழகரது குறிப்புரையால் வெளியாகிறது. சிலவிடங்களில் பிறவாசிரியர்களின் கருத்தை இப்பரிமேலழகர் மறுப்பதுபோல இக் குறளில் மறுத்திலர். ஆதலின் இவ்வுரைகளும் பொருத்தமுடையன வென்பதற்கு ஆக்ஷேப மில்லை.

5. யான் மிகவும் ஏழை என்ற இளிவரவை யாசகன் கூறியதும், அவனது வறுமை நீங்கி அவனையும் ஒரு கொடையாளி யாகும்படியான மிகுந்த பொருளை ஈதல்.

"அருத்தியின் இலனென் னுமுன் அளித்தலும், இலன் என் றப்பால்
உரைத்தில னுகச் சால உதவலும், எற்கின் றூனும்
வருத்தற இலனென் னுமை வழங்கிட வரைவில் செல் [வம்
பொருத்தலும் ஒன்றி னென்று புகழ்மிக விளங்கி நிற் [கும்"

எனக் கச்சியப்ப முனிவர் தமது புராணத்தில், மேற்கண்ட, 3,4,5-ஆகிய மூவுரைகளின் கருத்தை மிக அழகாய்ப் பொருத்தி யிருப்பதும் பெருமையுடைத்தே!

6. சில செல்வவந்தர்கள் "நாம் பிறர்க்குக் கிஞ்சித்தேனும் ஈயாதபட்சத்தில் பலரும் தூற்றுவரே! அந்தோ! இவர்களுக்கஞ்சியல்லோ பாடுபட்டுத் தேடிய பணத்தை வழங்கும்படி நேரிடுகின்றது. ஐயோ! தனமே! கைவிட்டுப்போகின்றாயோ" என்று மனம்வாடி ஈய இசைகின்றனர். "அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் பெற்றான் பொருள் வைப்புழி." "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது, ஊதிய மில்லை யுயிர்க்கு" என்ற ஆன்றோர் முதுமொழிகளை உணராதவரா யிருக்கின்றனரே! பெரிதும் பாவம்! எட்டிமரம் காயாதிருந்தென்ன, காய்த்துப் பலனென்ன? அங்ஙனமே ஈயாத புல்லர் இருந்தென்ன போயென்ன? பிறர்க்குதவிசெய்யாது பெருஞ்செல்வம் படைத்திருப்பதைக் காட்டிலும், பரம ஏழையா யிருப்பது மேலாகும் என்பதற்கு ஐயமில்லை.

ஆகவே பலருடைய அலர்மொழிக்கஞ்சியே னும் தியாகம் என்று வந்தவனை நாஸ்தி என்று சொல்லியனுப்பாமல் கொடுத்தல் என்ற ஓர். பொருளையு முணர்த்தும்.

7. சிலர் இரப்பவர்களைக் கண்டதும் "இவன் நமதுவீட்டின்கண் வந்துள்ளான்" என்றெண்ணித் தங்களுக்கு வாயில்வந்தபடி அவர்களை ஏசிப் பேசுவது வழக்கமாயிருக்கின்றது. அவ்விதம் யாசகனை இலனென்று ஏளனஞ்செய்யாது ஈதல் என்றும் பொருள் கொள்ளலாம்.

மேற்கண்ட 6, 7 உரைகளின் கருத்தைப் பின் வரும்பாடலால் பெரிதும் அறியலாகும்.

"நலமிகு செல்வம் பெற்றும்
நல்குர வினரைக் காத்தல்
இலன் அற மாதி சீர்த்தி
யிலன்எனப் பிறர்சொல் எவ்வ
வலனுரைக் கஞ்சி யேனும்
வறியனை இலனென் றெள்ளாது
அலர்புகழ் பயனும் வேண்டின்
ஆக்கையும் அளிக்க மைந்தா."

இம்மாதிரியான விசேஷார்த்தங்கள் பலவற்றையும் ஒருங்கே தருகின்ற சிறப்புப்பற்றியும், குறளின் சுருக்கத்தையும் பொருளின் பெருக்கத்தையும் பாராட்டி, இடைக்காடர் உரைத்த "கடுகு" என்பதை மாற்றி,

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்."

என்று சொல்லாலும் சிறப்புச் செய்தனர் ஔவையாரும்.

சிறு புன்னுனியில் தங்கியிருக்கும் நீரில் அருகிலிருக்கும் பெரிய பனைமரத்தின் நிழல் எவ்விதம் காணப்படுகின்றதோ அதுபோல் பரந்த பொருளைச் சிறிய குறளில் அமைத்தனர் என்னுங் கருத்துத் தோன்ற,

"தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தான்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட! வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி."

என்று கபிலரும் பெருமைப்படுத்தினது கருதத்தக்கதே!

இவ்விதமே பரந்த பொருளைத் தரும் குறள் வெண்பாக்களை யடுத்த சஞ்சிகையில் எடுத்தாளப்படும்.

எஸ். சுப்பிரமணியன்.

# ஆத்திசூடி விளக்கம்

## MORAL SAYINGS EXPLAINED

22 பருவத்தே பயிர்செய்.

தகுந்த காலத்தில் பயிர்த்தொழிலைச் செய் என்பது இதன்பொருள். அதாவது உழுது பயிரிட்டு அறுப் பறுத்து முடித்தலாகிய பயிர்த்தொழில்களை எல்லாம் தகுந்த காலங்களில் தவறாமல் செய் என்பதாயிற்று. எந்தக்கருமத்தையும் காலமறிந்து செய்தால்தான், பயன் படும். அவ்வாறின்றித் தகாத காலத்தில் எவ்வளவு முயற்சிசெய்தாலும்,முயற்சி வீணாகுமேயன்றிக்காரியம் நடந்தேறாது. ஆதலால் மற்றைய தொழிலைப்போலப் பயிர்த்தொழிலையும் செய்யவேண்டும் என்று இந்நீதி வாக்கியத்தில் ஔவை வெளிப்படையாகக் காட்டு கிருள்.

இதில் த்வனிக்கும் பொருளே மிகச் சிறந்தது. பயிர்செய்தல் என்பதை,

> இன்சொல் விளைநிலனு, வீதவே வித்தாக,
> வன்சொல் களைகட்டு, வாய்மை எருவட்டு
> அன்புநீர் பாய்ச்சி அறக்கதி ரீனவோர்
> பைங்கூழ் சிறுகாலைச் செய்.

என்ற பாட்டில் கூறப்பட்டிருக்கும் உருவகப்பயிர்த் தொழிலாகக் கொண்டால், சிறந்த பொருள் இந்நீதி வாக்யத்திலிருந்து வெளிப்படும். தர்மம் நடத்துவ தாகிய சிறந்த பயிர்த்தொழிலை இளமைப்பருவமாகி தகுந்த பருவம் முதல் செய்து வரவேண்டும். அதற் குத் தகுந்த காலம் இளமையாதலாலும், முதுமை யில் அதன் பழக்கத்தடிப்பால் மனோபலம் எற்பட வேண்மோதலால் இவ்வாறு கூறும்படியாயிற்று. இதற்கேற்பவே :—

> காலைச் செய்வோம் என்றறத்தைக்கடைப்பிடித்துச்
> சாலச் செய்வாரே தலைப்படுவர்—மாலை
> கிடந்தா னெழுத லரிதான்மற் றென்கொல்
> அரங்காலைச் செய்யாத வாறு.

என்ற அறனெறிச் சாரப்பாட்டும் உள்ளது.

மதவழியில் ப்ரயத்தனப்பட்டு வாழ்க்கைநோக் கத்தை உணர்ந்து தாக்கற்று நிற்றலாகிய சிறந்த தொழிலையும் பயிர்செய்தல் அலங்கார முறைமையில் குறிப்பதாகக் கொள்ளலாம். தாயுமானவ ஸ்வாமிகள் திருப்பாடல்களில்:—

> காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
> கண்டகங் காரமென்னும்
> கல்லைப் பிளந்து, நெஞ்சகமான பூமிவெளி
> காணத்திருத்தி, மேன்மேல்
> பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
> பதித்தன்பு நீராகவே
> பாய்ச்சியது பயிராகு மட்டுமோ மாயையவன்
> பறவையணு காதவண்ண
> நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
> நின்னன்பர் கூட்டமெய்த
> நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
> நின்னருட் பாரமென்று
> மாராரு மறியாத சூதான வெளியில்வெளி
> யாகின்ற துரியமயமே!
> அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
> யானந்த மானபரமே!

என்ற பாட்டில் ஞானப்பயிரிடும் விஷயம் நன்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது.இம்மாதிரியாகஞானப் பயிர்த் தொழிலையும் பருவத்தே செய்யவேண்டும் என்பதாயிற்று. செய்யவேண்டிய பருவம் யாது என் பதை ஆழ்வார், "கிளரொளி யிளமை"

என்ற பாட்டில் நன்ருகக் கூறிவிட்டார். ஆகவே ஒவ்வொரு காரியத்துக்கும் தகுந்தகாலம் உண்டு. கல் விக்கு இளமையே தகுந்த பருவம். இதைப்பற்றிப் பின் னர் எடுத்து விவரிப்போம். ஆதலால் எந்தக் காரியத்தை யும் தகுந்த ஸமயத்தில் செய்து முடிக்கவேண்டும். அப் பொழுதுதான் காரியம் ஸரிவர முடிவுபெறும்.

பருவத்தே பயிர் செய்யாது தகுந்த ஸமயங்களைத் தவறவிட்டதனுல் தீராத்துயரத்திற்கு ஆளாகி முடி வில் தானும் இறக்கும்படி நேர்ந்ததற்கு ஷேக்ஸ்பியர் மஹாகவி எழுதிய"ஹாம்லத்"நாடகமே தகுந்த திருஷ் டாந்தம். ஹாம்லட்டின் சிற்றப்பன் அவன் தகப்ப னைக்கொன்று ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டான். ரஹஸ்யமாக நடந்த இந்தக் காரியம் ஹாம்லட்டிற்கு அவன் தகப்பன் பிசாசால் தெரியவந்ததும் அதன் கட் டளைப்படியே அவன் தன் சிற்றப்பனைக் கொன்றுவிடு வதாகத் தீர்மானித்தான். ஊராருக்கெல்லாம் இந்தச் சிற்றப்பன்பேரில் ஸந்தேஹம்தான். இந்த ஸமயத் தில் பலர் அறிய ஹாம்லட் அவனைக் கொன்றிருந்தா லும் ஒரு கெடுதியும் வந்திராது. அவன் தாய் சிற்றப் பனைக் கல்யாணம் செய்துகொண்டிருந்ததாலும், ஒரு வேளை பிசாசம் கூறியது உண்மையாக விராமலிருந்து விட்டால் என்ன பண்ணுவது என்ற ஸந்தேஹத்

தாலும், தன் காரியத்தைத் தள்ளிவைத்து ஸுமார் இரண்டு மாதம் பைத்தியம்போல் வேஷம் போட்டுக் கொண்டு வீண்போக்கிவிட்டான். ஆனால் சிற்றப்பன் உளவை இதன் மூலமாக உணரவேண்டும் என்ற ஒரு நோக்கம்மாத்திரம் இவனுக்கு இருந்தது. சிற்றப்பனுக்குமாத்திரம் ஹாம்லட்டின்பேரில் ஸந்தேஹம்தான். அவன் உட்கருத்தை அநேகரை விட்டு அறிய முயன்ருன். ஹாம்லெட் அவ்வூர் மந்திரி பெண்ணுகிய "ஓபீலியா"விடம் காதல் கொண்டிருந்தான். அவள் மூலமாகவும் ஹாம்லெட்டின் வேஷரஹஸ்யத்தை உணரப் பார்த்தான் சிற்றப்பன். இப்படி இருக்கையில் சில நாடகக்காரர்கள் வர, அவர்களைக்கொண்டு தன் தகப்பன் இறந்த கதையை நாடகமாக நடிக்கும்படி ஹாம்லெட் ஏற்பாடு செய்து அதற்குச் சிற்றப்பன் தாயார் முதலியவர்களை அழைத்திருந்தான். நாடகம் நடக்கையில் அதில் அரசனைக் கொலைசெய்யும் காட்சி நடைபெறுங்கால் சிற்றப்பன் நடுநடுங்கி எழுந்தோடிவிட்டான், எல்லோரும் திடீரென்று போய்விட்டனர். இதனல் ஹாம்லெட்டிற்குச் சிற்றப்பன் குற்றம் தெரிந்ததுமல்லாமல், சிற்றப்பனுக்கு ஹாம்லெட் விஷயத்தில் உள்ள ஸந்தேஹம் திடப்பட்டுவிட்டது. எப்படியாவது ஹாம்லெட்டைத் தொலைத்துவிடவேண்டும் என்று தீர்மானித்துவிட்டான். அன்றிரவே ஹாம்லெட்டிற்கு அவன் தாயைக்கொண்டு புத்திமதி கூறச் சொல்லி அப்பொழுது வரும் ஹாம்லெட்டின் வாய்மொழியால் அவன் ரஹஸ்ய எண்ணங்களை உணர மந்திரியைத் தாயார் உள்ளில் ஒளிந்திருக்கும்படி செய்தான் சிற்றப்பன். பின்னர் தன் குற்றங்கள் ஞாபகம்வரத் தன்னை மன்னிக்கும்படி கண்ணை மூடிக்கொண்டு கடவுளை வேண்டிக்கொள்ளத் தொடங்கினன். அப்பொழுது தாயார் உள்ளுக்குப் போய்க்கொண்டிருந்த ஹாம்லெட் அங்குவர, சிற்றப்பன் தனிமையாக விருப்பதைக் கண்டு அவனைக் கொன்றுவிட யோசித்தான். 'இவன் பகவானை நினைத்து இருக்கிறன். இவனை இப்பொழுது கொன்றுவிட்டால் இவனுக்கு ஸ்வர்க்கமல்லவா வரும்? இவனுக்கு நரகம் வரும்படியல்லவோ கொல்லவேண்டும்' என்று எண்ணி நல்ல தருணத்தைத் தவற விட்டுவிட்டு தாயாரிடம் சென்ருன். இந்தத் தருணத்தைத் தவறவிட்டதால்தான் இவனுக்கு விளைந்த ஆபத்துக்கோ அளவே இல்லை. தாயாருடன் அவள் சிற்றப்பனைக் கல்யாணம் செய்துகொண்டிருப்பது தவறு என்று வெளிப்படையாகக் கூறிவருகையில், ஒளிந்து ஒருவன் கேட்டிருப்பது ஹாம்லெட்டிற்குத் தெரியவந்தது. அவன் ஒருவேளை சிற்றப்பனகவே யிருக்கலாம் என்று ஒரு எண்ணம்அவனுக்குத் தோன்ற திடீரென்றுகத்தியைஎடுத்து அந்தவிடத்தை நோக்கிக் குத்திவிட்டான். சவத்தை வெளியிலிழுத்து நோக்கவே, தன் காதலி தகப்பனதாக விருந்தது. என்னசெய்வான் பாபம்! இதனல் சிற்றப்பன் இவன் பித்தம்தெளிய இவனை வெளியூருக்கு யாத்திரை யனுப்புவதாகக் கூறி இவனை வழியில் கொல்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தான். தகப்பன் இறந்த துக்கத்தாலும் ஹாம்லெட்டிற்கு வந்த பைத்தியத்தால் ஏற்பட்ட துக்கத்தாலும் ஒபீலியா பித்துப்பிடித்து இறந்தாள். ஒபீலியாதமயன் "லீயார்டிஸ்" விரோதமும் ஹாம்லெட்டிற்கு வந்துவிட்டது. இதைச் சிற்றப்பன் அதிகப்படுத்தி விட்டான். தேசாந்தரம் அனுப்பப்பட்ட ஹாம்லெட் தப்பித் திரும்பி வர லீயார்டிஸ்ஸுக்கும் அவனுக்கு விளையாட்டாக ஒரு கத்திச் சண்டையை ஏற்பாடுசெய்து ஹாம்லெட்டைக் கொல்ல யோசித்துவிட்டான் சிற்றப்பன். கத்திச்சண்டையன்று விஷங்கலந்த பானம் ஒன்றைத் தயார் செய்து, கத்தியால் ஹாம்லெட்டு இறவாது தப்பித்துவந்தால் அதைக் குடிக்கக்கொடுத்துக் கொல்லவும் தயாராகி யிருந்தான் கொடியசிற்றப்பன். ஏற்கெனவே ஹாம்லெட் வாக்கால் புண்பட்டிருந்த தாயார் இதைக் குடித்து இறந்தாள். ஹாம்லெட்டிற்கு நல்ல கத்திக்காயமும்பட்டது. லீயார்டிஸ் ஹாம்லெட்டின் பெருந்தன்மையைக் கண்டு, தன்பேரிலும் காயம் பட்டுவிட்டதால் இறக்கும் முன் அவனுக்கு ஒரு உதவிபுரியஎண்ணி சிற்றப்பன் சதியாலோசனைகளை வெளியிட்டான். ஹாம்லெட்டிற்குத்தன் மரணம் அணுகிவிட்டது என்று கண்டு, அவசரமாகச் சென்று சிற்றப்பனைக் குத்தித் தள்ளி அவன் வாயில் மிகுதி இருந்த விஷபானத்தையும் வார்த்துவிட்டான். கொஞ்சநாழிகையில் ஹாம்லெட்டும் இறந்துபோனன். இங்கு ஹாம்லெட்டு முதலில் அகப்பட்ட தகுந்த காலத்தைச் சற்று அஜாக்ரதையாகக் குதர்க்கத்தால் விட்டுவிட்டதால் சிற்றப்பன் ஒருவன் இறக்கவேண்டியதற்குப் பதிலாக, தன் மாமனர், காதலி, மச்சினன், தாயார், ஸ்நேஹிதர்கள் முதலியவர்களை இழந்து முடிவில் தானும் இறக்கும்படி நேர்ந்தது. ஆகவே தகுந்த காலத்தில் நமது கடமைகளைச் செய்யாது விட்டால் பெருங்கேடு விளையும்.

பருவத்தில் பயிர்த் தொழில்களைப் பார்க்காத குடியானவர்களுக்கு நஷ்டம் ஏராளமாக ஏற்படும் என்று கூறவேண்டியது அவசியமில்லை. இதற்குத் திருஷ்டாந்தம் நமது முன்னரே ஏற்படுவதை எல்லோரும் காணலாம். இந்த விஷயமாகத்தான் ஆத்திசூடி வெண்பாவும் அமைந்துள்ளது.

உன்னட்டில் பொற்களந்தை யூரர்நன்னட் செய்த
பொன்னே விளையப் புகழ்பெற்ருர்—ஒன்னர் [பின்னர்
பயந்திடுவேற் புன்னைவன பார்த்திபா நீயும்
செயும்பருவத்தே பயிர்செய்.

இந்நீதி வாக்யத்தில் எந்தக் காரியத்தையும் தகுந்த காலத்தில் செய்ய வேண்டும் என்ற பொதுப்பொருளை ஔவை வெகு அழகாக அமைத்திருக்கிறள்.

---

நமது சந்தா நேயர்களுக்கு

சந்தா நேயர்கள் கடிதம் எழுதும்போதும் சந்தாத் தொகை அனுப்பும்போதும் தமது விலாஸத்துக்கெதிரே யிருக்கும் நம்பரைக் குறிப்பிட்டு எழுதக் கேட்டுக் கொள்ளுகிறேம். நம்பரைக் குறிப்பிடாத பக்ஷத்தில் வீண் காலதாமதமாகும். மானேஜர்.

## காலஞ்சென்ற ஜப்பான் சக்கரவர்த்தி அவர்கள்

## THE LATE MIKADO-THE EMPEROR OF JAPAN

"கண்ணெனப் படுவ மூன்று, காவலர் கல்வி * காமர், விண்ணினைச் சுழல வோடும் வெய்யவன் என்னும்பேரார் ; எண்ணினுன் றலைக்கண் வைத்த கண்ணஃ தில்லை யாயின், மண்ணினுக்கிருளை நீக்கும் வகை பிறி தில்லை மன்னு."

(* காமர்—அழகிய) —சூளாமணி.

### அரச நிலைமையின் சிறப்பு

உலகத்துக்கு அரசன், கல்வி, சூரியன் என்பன மூன்று கண்கள் என்றும், அம்மூன்றிலும் முதலில் சொல்லப்பட்ட அரசனேன்னும் கண் இல்லாவிட்டால் உலகத்திலுள்ள உயிர்ப்பிராணிகளைப் பாதுகாப்பதற்கு வேறு வழி ஒன்றுமில்லை என்றும் மேற்கூறிய சூளாமணிச் செய்யுளால் அறியப்படும். இவ்விலக்கணம், குடியரசும் (Republic) ஜனசுதந்தரமும் நாளுக்குநாள் அதிகப்பட்டு வரும் இக்காலத்தில் பொருத்தமுடையதாகுமோ எனச் சிலர்க்குச் சந்தேகந் தோன்றலாம். அதனைக் கீழ் எழுதப்படும் ஜப்பான் சக்கரவர்த்தியின் சரித்திரத்தினுல் அவர்கள் நிவிர்த்தி செய்துகொள்வார்கள் என்பதற்கு ஐயமில்லை.

### ஜப்பான் நாட்டின் இயற்கை யமைப்பும், முன்னைய நிலைமையும்

ஜப்பான் தேசமானது இங்கிலாந்தைப்போல நாற்புறமும் நீர் அரணுல் சூழப்பட்ட ஒரு சிறு தீவு என்பது நம் "போதினி" படிப்பவர் யாவர்க்கும் தெரிந்திருக்கலாம். சீதோஷ்ண ஸ்திதி முதலிய சில அம்சங்களிலும் இந்நாடு இங்கிலாந்தை ஒத்திருக்கிறது. இங்ஙனம் ஜப்பான் தேசமானது தனது இயற்கை யமைப்பினுலேயே, ஏற்றம் அடையத்தகுந்த நிலைமையில் இருந்ததெனினும், நம் சரித்திரத் தலைவராகிய முட்ஸுஹீடோ என்பவர் பட்டத்துக்கு வரும் முன்னர் அது மட்டற்ற குழப்பமுற் றிருந்தது. ஏறக்குறைய முந்நூறு வருஷங்களாக ஜப்பானில் "ஷோகன்" என்னும் பேரையுடைய ஒரு வம்சத்தாரே உண்மையில் அரசாட்சி செய்து வந்தார்கள். அவ்வரசர்கள் பெயரால் அரசர்களேயன்றிச் செயலால் அரசர்களல்லர். "ஷோகன்" என்பவர்கள் பரம்பரையாகச் சேனுதிபதிகளாயிருந்து வந்தவர்கள். அக்காலத்தில் போர்வீரர்கள் நேரே அரசனது உத்தரவுக்குக் கீழ்ப்பட்டவர்கள் அல்லர். அவர்கள் படிப்படியாகத் தமக்கு மேலுள்ள அதிகாரிகளுக்கே கீழ்ப்பட்டிருந்தனர். ஆதலின் சேனைத்தலைவனுன "ஷோகன்" என்னும் பட்டப்பேருடையவனது அதிகாரம் வரவர பலங்கொண்டது. சுமார் ஐம்பது வருஷங்களுக்குமுன் ஜப்பான் இந்நிலைமையில்தான் இருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில், ஐரோப்பிய வர்த்தகர்கள் ஜப்பானில் வியாபாரம் செய்வதற்குச் சில சுதந்தரம் வேண்டுமென்று "ஷோகனை" வற்புறுத்திக் கேட்டவண்ணமா யிருந்தனர்.

இவற்றையெல்லாம் கவனித்து வந்த ஜப்பானிய உயர்குலத் தேசாபிமானிகள் 'ஷோக'னுடைய அதிகாரத்தை முழுவதும் அடக்கி, அரசனையே சர்வாதிகாரியாக்கினுல்தான் நாட்டிற்கு நன்மை விளையுமென்றும், இல்லாவிடில் நாட்டில் இரண்டுகட்சி ஏற்படுவதின் பயனுக, தம் நாட்டினைப் பிறர் எளிதில் கவர்ந்துகொள்வர் என்றும் ஊகித்துணர்ந்து கொண்டனர். இங்ஙனம் உணர்ந்துகொண்ட உயர்குலத்தோர் ஒருங்கு சேர்ந்து, காலதாமதம் செய்யாது, நாட்டின் நன்மை கருதி, தங்களுள் ஒருவனுகிய "ஷோகன்" எல்லாப் பொறுப்பையும் இறைவனுக்கே கொடுத்துவிடவேண்டுமென்றும், அதுமுதல் ஜப்பான் தேசம் அரசராலும், அவர்தம் அமைச்சராலும் ஆளப்படவேண்டு மென்றும் தீர்மானித்தனர். இவர்களெல்லாம் ஒரே மனத்தினராயிருந்ததனுல், 300 வருஷ காலமாக அதிகாரஞ் செலுத்தி வந்த 'ஷோகன்' ஸ்தானம் சொற்ப காலத்தில் அடியோடே இல்லாமற் போய்விட்டது. இந்த விசேஷ மாறுதல் ஏற்பட்ட வருஷம் கி. பி. 1867. அவ் வருஷமே மாட்சிமை தங்கிய "முட்ஸுஹீடோ" அவர்களும் பட்டத்துக்கு வந்ததும்.

### சக்கரவர்த்தியின் வெளித்தோற்றம் (Personality)

நம் சக்கரவர்த்தியவர்கள் (ஜப்பானில் அரசர்க்கு மிக்கேடோ என்று பட்டப்பெயர் வழங்கும்) 1852-ஆம் வருஷம் நவம்பர் ௴ 3-ஆம் தேதி பிறந்தனர். ஆதலால் அவர் பட்டத்துக்கு வந்தபோது அவர்க்கு வயது பதினைந்தே. அவர் பார்ப்பதற்குக் கம்பீரமான தோற்றமுள்ளவர். ஜப்பானியர்களெல்லாம் குறுகிய வடிவினர். அவர்களில் இவர் 5-அடி 8 அங்குலம் உயரமுடையவராதலால், அந்நாட்டில் மிக உயர்ந்தவர் எனக் கருதப்பட்டனர். அவர் முகமும் கண்ணும் எப்போதும் 'குறுகுறு' என்றிருக்கும். தம்மிடம் வந்து பேசுபவரிடத்தில் அவர் இனிய முகத்துடன் மரியாதையாய்ப்



காலஞ்சென்ற ஜப்பான் சக்கரவர்த்தி

பேசுவார். அவர் பெரும்பாலும் ஐரோப்பியர் போலவே உடை தரிப்பார். ஆனல் அருங்கோடைகாலத்தில் ஜப்பான் பட்டு வஸ்திரங்களை அணிந்துகொள்வார்.

அவர்க்குப் பிரியமான ஆட்டங்கள்.

நம் மிக்கேடோ அவர்களுக்குத் தேகப்பயிற்சி செய்வதில் விசேஷ பிரியம் உண்டு. இவர் குதிரையேறிச் சவாரி செய்வதில் மிகச் சிறந்தவர். ஜப்பான் தேச முழுவதிலும் இவர்க்குச் சரியாகக் குதிரை சவாரி செய்பவரில்லையாம். 'குஸ்தி' (Wrestling) பயில்வதிலும் இவர் மிகத் தேர்ந்தவர். பல பேர்பெற்ற பயில்வான்களைத் தாமே தோற்க அடித்திருக்கிருர். ஒருமுறை "கவுண்ட் டேட்சு" என்பவருடன் செய்த குஸ்தியில் தாம் தோற்றுப்போன பிறகு, தாமே நேரிற் குஸ்தி செய்வதை நிறுத்திவிட்டன ரென்ருலும், குஸ்தி செய்பவரைப் பலவழியாலும் உற்சாகப்படுத்தினுர். இவர்க்குக் குதிரைப் பந்தாட்டத்திலும் (Polo) பிரியம் அதிகம். இவர் அரசராய்ப் பிறந்திராவிடில் சேனைத்தலைவராய் வந்து போரில் மிக்க வீரங்காட்டியிருக்கக்கூடுமென்று தோன்றுகிறது.

இவர் செய்த விசேஷ மாறுதல்

இவ்வரசர் பட்டத்துக்கு வருவதற்குமுன் ஜப்பான் தேசத்தில் ஐரோப்பிய நாகரீகம், பழக்கம் வழக்கம் இவை எவையும் வந்ததில்லை. அவை இயல்பாக வர இருந்ததையும் 'ஷோகன்' முதலியவர்கள் வரவொட்டாது தங்களாலான வரையில் தடுத்து வந்தனர். புதிய அரசரோ, தமது நுண்ணுணர்வினுல் அங்ஙனம் செய்வது அசாத்தியமென்பதையும், சாத்தியமாவதென்ருலும், அது சுத்தத் தப்பு என்பதையும் அறிந்துகொண்டனர். ஜப்பான் தேசம் தனது இயற்கை யமைப்பின் சிறப்பினுல் ஏற்றம் அடையவேண்டு மென்ருல், ஐரோப்பிய ஒழுக்கங்கள் பல அப்படியே ஜப்பானிலும் அமைய வேண்டுமென்னுங்கருத்து இளம்பிராயத்திலேயே நம் மன்னர் பெருமானுக்கு மனத்திற் பட்டது. அவ்வெண்ணம் அவர் மனத்தில் உதித்ததுதான் இப்போதைய ஜப்பானின் மஹோன்னத ஸ்திதிக்குக் காரணமென்பது சரித்திர வுணர்ச்சியுள்ளார் (Historians) எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததே. இவ்வெண்ணங் கொண்டவர், தாமிளவரசராய் இருக்கும்போதே (இவர் அரசானது பதினைந்தாம் வயதில் என்பது ஞாபகத்திருக்கவேண்டும்), ஐரோப்பாவிலுள்ள ஜர்மெனி, பிரான்ஸு, இங்கிலாந்து முதலிய நாடுகளுக்குச் சென்று திரும்பி வந்திருந்த ஜப்பானியர்களைத் தமக்குப் பலவித பாடங்களையும் போதிப்பதற்கு ஆசிரியர்களாக அமைத்துக்கொண்டனர்; தாம் அரசரானது முதல் ஐரோப்பியக் கல்வி விஷயத்தில் மிகுந்த ஊக்கங்காட்டி வந்தார்; இன்வாதுரா என்னும் இளவரசரையும், பல மாணுக்கர்களையும் ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் அனுப்பி, அங்கங்கு புதிதாகக் காணப்படும் ஒவ்வொன்றின் உண்மையினையும் உணர்ந்து ஜப்பான் தேசத்துக்கு ஏற்றதை யெல்லாம் குறித்துக்கொண்டு வரும்படி செய்தனர்; வேற்று நாட்டுக்குச் சென்று திரும்பியவர்களுடன் நெடுநேரம் கலந்து பேசி, அவர்கள் கூறும் விஷயங்களில் தமக்குச் சரியெனத் தோன்றுவனவற்றை யெல்லாம் ஜப்பானில் அனுஷ்டித்து வரும்படி கட்டளை பிறப்பித்தனர்.

"ஊற்றுநீர்க் *கூவலுள் உறையும் † மீனனுர்
வேற்றுநாட் டதன்சுவை விடுத்தல் மேவினுர்"

என சீவக சிந்தாமணியில் வேற்றுநாட்டின் சுவையுணராதார் ஊற்றிலுள்ள மீனெனக் கூறியதன் உண்மையினை இவர் நன்ருக உணர்ந்து கொண்டனர்.

இங்ஙனம் பிறநாடுகளிலிருந்து ஜப்பானில் அனுஷ்டானத்துக்கு வந்த விஷயங்களின் விவரம் வருமாறு:— கப்பல், கப்பற்படை இவற்றின் சம்பந்தப்பட்டவையெல்லாம் இங்கிலாந்திலிருந்து 'காப்பி' செய்யப்பட்டன. காலாட்படை, மருத்துவம் இவற்றைச் சார்ந்த எல்லாம் ஜர்மெனியிலிருந்து வந்தன; சங்கீதம், சித்திரவேலை முதலியன, இட்டாலி, பிரான்ஸு இந்நாடுகளிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டன; சட்டம், கல்வி, கைத்தொழில் முதலிய பல நாடுகளிலிருந்து வடிக்கட்டி இறுக்கப்பட்டவை. இம்மாறுதல்களைக் குறித்து 'மார்க்குவிஸ் இட்டோ' என்னும் முதல்தா மந்திரியானவர் மிக்கேடோ அவர்கள் பாலினின்றும் வெண்ணெயெடுப்பதுபோல, பல தேசங்களிலிருந்து அங்கங்குள்ள சிறந்தவற்றிலிருந்து அவற்றின் சாராம்சங்களைப் பிழிந்தெடுத்துவிட்டார் என்று சொல்லியிருக்கிருர்.

இம்மாறுதலின் பயன்

இம்மாறுதலினுல் விளைந்த பயனென்னவெனில் அதற்கு ஒரே மொழியில் நாம் மறுமொழி கூறிவிட

(* கூவல்-கிணறு; † மீன் அனுர்-மீனைப்போன்றவர்.)

லாம். அதாவது இக்காலத்திய ஜப்பானின் "முதன்மை" என்பதேயாம். ஜப்பான் மிகச் சிறிய நாடெனினும், சீர்திருத்தம் வாய்ந்த தன் சேனுபலத்தினல் தன்னிலும் பன்மடங்கு பெரியதாகிய சீனதேசத்தோடு இருமுறை தான் செய்த போரிலும் (1874-ஆம் வருஷத்திலும், 1894-ஆம் வருஷத்திலும்,) இணையில்லாத வெற்றிபெற்றிலங்கிற்று. 1904-ஆம் ஆண்டில் நடந்த ருஷிய-ஜப்பானிய யுத்த விவரங்கள் நேற்று நடந்தவைபோலிருக்கின்றன. அந்த யுத்தத்தில் ஜப்பானியர்களது கப்பற்படையும் காலாட் படையும் காட்டிய ஒற்றுமை, வீரம், ஒழுங்கு இவை பல ஐரோப்பியர்களால் இன்றும் புகழப்படுதலுமன்றி, அப்போரில் ஜப்பான் நற்பேர் பெற்று, உலகிலுள்ள உயர்தர நாடுகளில் தானும் ஒரு முதல்தரமான நாடாவதற்குக் காரணமாயிருந்தன.

இங்ஙனம் முன்னர்க் கூறிய மாறுதலின் பயனுக ஜப்பான் போரில் வெற்றி பெற்றது எனக் கூறுதல் குன்றக் (சுருக்கமாய்க்) கூறுதலேயாகும். ஏனெனில் நாட்டில் உட்குழப்பமின்றி, அமைதியெங்கும் பரவி வருவதால், நாடெங்கும், கல்வி, நல்லுணர்வு, வர்த்தகம் முதலிய செழித்தோங்கி, வருகின்றன. குடிகளும் சுபிக்ஷமாக வாழ்ந்து வருகின்றனர். இப்படிப்பட்ட அமைதியினல் அமையும் இன்பமும் மேற்கூறப்பட்ட மாறுதலின் பயனேயாம்.

### இவ்வரசர் செய்த ராஜாங்க மாறுபாடு

நம் "மிக்கேடோ" அவர்கள் பட்டத்துக்கு வருவதற்கு முன், ஜப்பான் அரசின் நிலைமை எப்படி யிருந்ததென முன்னர் கூறப்பட்டிருக்கிறது. அப்போது உண்மையில் 'ஷோகான்' அரசனுயிருந்தானெனினும் அரசனுடைய அதிகாரத்துக்கு அளவேயில்லை. அவன் கொடுங்கோல் செலுத்த விரும்பின், அதனைத் தடுப்பதற்குத் தக்க அதிகாரத்தை யுடையவர்கள் எவருமில்லை. இப்படி ஸ்வயாதிகாரம் முழுவதும் வாய்ந்திருந்த "முட்ஸுஹிடோ" என்னும் நமது அரசர், தங் குடிகளிடத்தில் ஐரோப்பியக் கல்வி முதலியவற்றைப் பரவச் செய்ததுக் கேற்ப, அவர்களுக்குத் தாமாகவே சுதந்தரங்களும் கொடுக்க முன்வந்தனர். அவருடைய இந்தச் செய்கைதான் அவரை உலகெலாம் புகழும் அலகிலாப் பெருமைக் குரியவராகச் செய்திருக்கிறது. எப்படியென்றல் உலகத்தில் தேசசரித்திரம் ஏற்பட்ட காலமுதலாக இதுவரையில், தான் செலுத்திவந்த தன்னதிகாரத்தை (autocracy) த் தன் குடிகளின் நன்மைகருதித் தாமுகவே சிறிதுசிறிதாய்க் குறைத்துக் கொண்டு, பிரஜைகளின் சுதந்தரத்தை அதற்குத் தக்கபடி படிப்படியாய் அதிகப்படுத்திய அரசர் வேறு யாருமிலர். பிரஜைகளின் பக்குவநிலை யறிந்து அவர்கட்கு நன்மை செய்பவனன்றே நல்வேந்தனுகும். இக் கருத்துப்பற்றியே தெய்வப்புலமைத் திருவள்ளுவனும்,

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்."

என இறைவனுக்கு இலக்கணம் வகுத்தனர். 1869-ஆம் வருஷத்திலேயே, அதாவது தாம் பட்டத்துக்கு வந்த இரண்டாம் வருஷத்திலேயே இவ்வரசர் ராஜாங்கத்தின் அமைப்பைக் குறித்துச் சில விசேஷ மாறுதல்கள் செய்வதாக உறுதிமொழி யளித்தனர். அங்ஙனம் அளித்தவர் அப்போதே அரசர்க்குப் பல வழியிலும் உதவி செய்வதற்கு ஒரு 'ஆலோசனை சபை' ஒன்று உண்டாக்கினர். இவ்வாலோசனை சபையும் அரசரும் சேர்ந்தே, தேசத்தில் முன்னர்க் கூறப்பட்டபடி, கல்வி, முதலிய பல விஷயங்களில் ஐரோப்பிய முறைகளைக் கைப்பற்றினர்கள். 1883-ஆம் வருஷம், நம் அரசர் மார்க்குவிஸ் இட்டோ என்பவருடன் கலந்து ஜப்பானிய அரசு, இன்ன இன்ன சட்டதிட்டங்களுக் குட்பட்டிருக்கவேண்டியதென ஒரு பட்டயம் பிறப்பித்தனர். அதுமுதல் ஜப்பான் அரசாட்சி, ஆங்கில அரசாட்சியைப்போல ஜன ஆட்சிக்குட்பட்ட அரசாட்சி (Limited Monarchy) யாக அமைந்திருக்கிறது.

1897-ஆம் வருஷத்தில் ஒரு அமெரிக்கா பத்திரிகையானது, ஒவ்வொரு அம்சத்தில் ஒவ்வோரரசர் சிறப்புற்றிருத்தல் கூடுமெனினும், பல அம்சங்களிற் சிறப்புற்றிருக்கும் இவர்க்கு இப்போது உலகில் அரசு செலுத்தும் அரசரில் ஒருவரும் ஒப்பாகமாட்டாரென்றும், அப்படி உவமை யுரைக்க விரும்பின், பண்டைச் சரித்திரத்தை ஆராய்ந்து, ரோமாபுரிக்கு அகஸ்டஸ் போலவும், இங்கிலாந்துக்கு ஆல்பிரட் (The Great) போலவும், பிரான்சுக்கு நேப்போலியன்போலவும், ஜப்பானுக்கு இம் "மிக்கேடோ" அவர்கள் இருக்கின்றனர் என்றும், உற்றுநோக்கின் இவர் மேற்கூறிய ஒவ்வொரு

வரிலும் உயர்ந்தவரென்றே கூறவேண்டும், என்றும் புகழ்ந்தெழுதி யிருக்கிறது.

### போர்வீரர்களிடத்து இவர்க்குள்ள பிரிவு

முட்ஸுஹீடோ என்பவர் தமது சேனையினைச் சீர்திருத்தி, சீனுமீதும், ருஷியாமீதும், சிறந்த வெற்றி பெற்றார் என முன்னர்க் கூறினோம். இந்த யுத்தங்களில் இவர் சேனையினது ஊக்கமும் திறமும் உலகு முழுவதும் புகழப்பெற்றன எனவும் கூறினோம். இவர் சேனை இத்துணைச் சிறப்புடையதாதற்குக் காரணம், அது நவீன முறைப்படி பழக்கப்பட்டது மாத்திரமன்று; சக்கரவர்த்தி எப்போதும் போர்வீரர் மாட்டுக் காட்டிவந்த அன்பும் அதற்கு ஒருசிறந்த காரணமாகும். அரசர் தமது அரண்மனையில் போரில் வீரங்காட்டி மாண்டுபோன போர்வீரர்களது படங்களை மாட்டி வைத்திருக்கிறாராம். சாமானிய காலாட் படையாட்களையும் தாம் நேரில் வரவழைத்து, அவர்களுடைய அன்னவஸ்திரம், முதலியவற்றைக் குறித்தும், யுத்தத்தில் ஏற்படும் அவர்களுடைய சுகதுக்கத்தைக் குறித்தும் நெடுநேரம் பேசிக்கொண்டிருப்பது அவருடைய வழக்கமாம். அச்சமயங்களில் வீரர்களும் ராஜவிச்வாசம் பொங்கிக் கண்ணீர் சொரிவாராம். அரசருக்குத் தம் படைவீரரிடத்திருந்த அன்பு இவ்வளவு எனினும், அப்படை வீரருக்கு அரசரிடத்திருந்த அபிமானம் இதனினும் பன்மடங்கு சிறந்தது. சாகுந்தறுவாயில் ஒவ்வொரு வீரனும், 'அரசன் நீடூழி வாழ்க'எனத் தன் மனமார வாழ்த்திப் பின் உயிர் விடுவன். ஒருவனும் தோற்றுத் திரும்ப விரும்பான். அப்படித் தோற்க நேர்ந்திடில், தானே தன் வயிற்றினைக் கிழித்துக் கொண்டு கொலை செய்துகொள்வான். அங்ஙனம் போர் முகத்துத் தோல்விக்கஞ்சி, தற்கொலை செய்து கொள்வது சிறந்த கௌரவமென ஜப்பானில் கருதப்படுகிறது. அரசன் இறந்த சங்கதி காதிற்பட்டவுடன் ஒரு போர் வீரன், 'மன்னன் மரித்தபின்னும் நான் வாழ்குவேனு'என்று சொல்லிக்கொண்டு அப்போதே தற்கொலை செய்துகொண்டான். இதனால் ஜப்பானியர்களின் அரச விச்வாசம் எவ்வளவு சிறந்ததென்பது எளிதில் அறியப்படும். சேனையே அரச செல்வத்திலெல்லாம் சிறந்தது என்றும், அச்சேனைக்குத் தலைவன் சரியானவனாக இருக்கவேண்டும் என்றும் திருக்குறளில்,

"உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாம் தலை"

(ஊறு - தடை ; வெறுக்கை - செல்வம்)

"நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்."

(தானை - சேனை)

கூறியிருப்பது ஜப்பான் சக்கரவர்த்திக்கும், அவர் சேனைக்கும் மிகப்பொருத்தமுடையதாகும்.

### பிரதிதினம் இவர் காலங்கழிக்கும் விதம்

இப்படிச் சிறப்பு வாய்ந்த நம் முட்ஸுஹீட்டோ சக்கரவர்த்தி நாள்தோறும் எப்படித் தமது பொழுதைப்போக்கிவந்தனர் என்பதைப் பலர் அறிய விரும்பலாம். அவர் தம் வேலைகளில் மிக்க ஒழுங்கு வாய்ந்தவர். வெளியாடம்பரத்திற் சிறிதும் விருப்பில்லாதவர். நல்ல புஸ்தகங்களைப் படிப்பதில் அவர்க்குப்பிரியம் அதிகம். அவர் ஒவ்வொரு நாளும் நெடுநேரம் படிப்பதுண்டு. காலையில் கீழ்நாட்டுக் காவியங்களைப் பாடங் கேட்பதுடன், மேனாட்டுக் கலைகளையும் தமது ஆசிரியர்களிடம் முறையே கற்றுவந்தனர். பிறகு ராஜாங்க சம்பந்தமான வேலைகளைப் பார்ப்பார். பிற்பகலில்செய்யுள் நூல்களையும், சங்கீதம் முதலிய அருங்கலைகளையும் மிக்க ஆவலுடன் படித்துவருவார். அவர் தாமே இரண்டொரு அரிய செய்யுட் பிரபந்தங்கள் செய்திருக்கின்றனராம். அரசர், தாம் கற்று வந்த பல விஷயங்களிலும், பல தேசங்களுடனும் பரஸ்பர சம்பந்தம் வாய்ந்த சட்டங்களில் (International law) நிபுணராயிருந்தமைபற்றி, சிலசமயங்களில், மந்திரிக்கும், ஆலோசனை சபையாருக்கும் தெரியாத விஷயத்தைக்கூட இவர் எடுத்துச் சொல்லுவாராம்.

### முடிபுரை

இவ்வளவு பெருமை மிக்க சக்கரவர்த்தியைப்பற்றிப் பத்திரிகையிற் படிப்பவர்க்கும் அவரிடத்தில் ஒருவித பக்தி ஏற்படும் ; அப்படியென்றால், ஜப்பான் தேசத்தார்க்கு அவரிடத்திலுள்ள அன்பின் மிகுதியைப் பற்றி ஆச்சரியப்பட ஏதுவேயில்லை. அவர்கள் இவ் அரசரைத் தெய்வமெனவே கொண்டாடுகிறார்கள். "ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் குறித்த நேரத்தில் பிள்ளைகளெல்லாரும் அரசர், அரசியர் இவர்களின் படத்தை வணங்கி வருகிறார்கள்" என்று காலஞ்சென்ற

W. T. ஸ்டெட் என்பவர் தாம் ஜப்பானைப்பற்றி எழுதியுள்ள புஸ்தகத்தில் கூறுகிறார்.

ஒரு அரசனுடைய ஆட்சியில், ஒரு நாட்டிற்கும் இவ்வளவு நன்மை யுண்டாகவில்லை என, உலகோர் யாவரும் ஒருங்கு புகழும்படி ஜப்பான் தேசத்திற் செங்கோல் செலுத்திய முட்ஸுஹீடோ என்னும் சக்கரவர்த்தி சென்ற ஜூலைமாதம் 30-ஆந் தேதி காலஞ் சென்றனர் எனக் கேட்டுத் துயரம் அடையாதவர்களும் உண்டா? இவரது மரண சமாசாரத்தைக் குறித்து, இங்கிலாந்தின் பிரத மந்திரி மிஸ்டர் ஆஸ்குவித் மிக உருக்கமுறப் பேசினர்; இந்தியா கவர்ன்மெண்டாரும், மூன்றுவாரம் இராஜாங்கமெங்கும் துக்கக்குறி காட்டப்படவேண்டுமென்று விளம்பரஞ் செய்தனர்.

ஜப்பான் நாடு சீர்கெட்டிருந்த காலத்தில் பட்டத்துக்கு வந்து 45 வருஷம் அந்நாட்டில் ராம ராஜ்யம் போற் செங்கோல் செலுத்தி, அந்நாட்டினை உலகிலுள்ள பல "நன்னாட்டின் முன்னாட்டு நாடு" * எனச் செய்த இவரை ஒரு அவதார புருஷர் என்றே எண்ண வேண்டும்.

"நெல்லு முயிரன்றே; நீரு முயிரன்றே;
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்"

(உயிர்த்து—உயிராக வுடையது)

எனப் புறநானூற்றிற் கூறியிருப்பது இவரிடத்தும், இவர் நாட்டினிடத்தும் மிகப் பொருத்தம் வாய்ந்துள்ளது.

### ஜப்பான் சக்கிரவர்த்தினி

இவ்வளவு சிறப்புடைய மன்னரை, மணவாளராக அடையும் பாக்கியம் பெற்றிருந்தும், இப்போது விதிப்பயனாக வைதவ்யம் அடைந்திருக்கும் அரசியாரைப் பற்றிய விவரங்களிற் சிலவற்றைச் சுருக்கிக் கூறி இதனை முடித்து விடுவோம்.

முட்ஸுஹீடோ சக்கரவர்த்தியின் ராணியாகிய ஹேரௌ கோ என்பவர் 1850-ஆம் ஆண்டிற் பிறந்தவராதலின், அரசரினும் இவர் இரண்டு வயது அதிகப்பட்டவர். தமது 19-ஆம் ஆண்டில் இவர்க்குக் கல்யாணம் நடந்தேறிற்று.

இளம்பிராயத்தில் இவர்க்கு உலக விஷயங்களை அதிகமாகக் கவனித்தறிந்துகொள்ளச் சமயம் நேர்ந்திலது எனினும், அரசியான பிறகு தம் நாயகர் ஏற்படுத்திய ஒவ்வொரு புதிய மாறுதல்களிலும், நமது ராணியாரும் மிக்க ஊக்கம் காட்டி வந்தனர். நவீன முறைகளைக் கைப்பற்றியவர்களில் நம் ராணியாரும் முதல்வராவர். இவரது உடைப்புக்கள் பாரிஸ், லண்டன் முதலிய இடங்களில் தயாராகி வருகின்றன. எனினும், தம் நாட்டு ஐதிகங்களில் இவர்க்கு மிக்க அபிமானம் உண்டு. ஜப்பானியர்களது க்ஷேமலாபமே இவரது மனத்தில் முதலாக இருக்கும் எண்ணம். ஜனங்களும், இவரைத் தம்முயிர்போலப் பாராட்டுகின்றனர். சீனவோடும்,ருஷியாவோடும் போர் நிகழ்ந்தபோது, அரண்மனையைச் சேர்ந்த ஒருவரும், ஆடம்பரத்திற்காகப் பொருட்செலவு செய்யக்கூடாதென்று இவர் ஏற்பாடு செய்தனர். தமது சொந்தப் பணத்திலிருந்து வேண்டுமளவு செலவு செய்து, போர்வீரர்களது சௌகரியத்தை அதிகப்படுத்தினர். காயம்பட்டுப்போகும் வீரர்களுக்குச் சிகிச்சை செய்யுந்தொழிலில் பல ஸ்திரீகளைப் பழக்குவித்தனர். தாமே, இவ்விஷய சம்பந்தமானவற்றையெல்லாம் மேற்பார்ப்பதற்கு "ரெட்கிராஸ் சொஸைட்டி" என்னும் தாதிகள் ஸங்கம் ஒன்றுண்டாக்கி அதற்குத் தலைவரா யிருந்து வந்தனர். இப்படி அரசியார் போர்வீரர்களிடத்துக் காட்டிய அன்புக்கும் அரசர் அவ்வீரர்கள்மீது காட்டிய அன்புக்கும், ஒன்றை ஒன்றுக்கு உவமையாகச் சொல்லலாமேயன்றி வேறு உவமை கூறுவது பொருந்தாது.

ஜப்பானிய அரசர்க்குப் பட்டமஹிஷியாகிய இவரைத் தவிர வேறு மனைவியர் பதினொருவர் உளர். அவர்களும் உயர்தர பிரபுக்களின் வம்சத்தைச்சேர்ந்தவர்கள். அவர்கள் சந்ததியாரும் பட்டத்துக் குரிமையுடையவர்கள். உதாரணமாக இப்போது இருக்கும் முதன் மனைவியாகிய ஹேரௌ கோவுக்குப் புத்திரர் இல்லை. ஆதலால் இரண்டாந்தர மனைவியின் புத்திரர் ஒருவரே இப்போது அரசராய் இருக்கிறார். ஜப்பான் அரசாங்க அந்தப்புர ரஹஸ்யம் இப்படிப்பட்டதெனினும், அரசனுக்குப் பட்டமஹிஷியிடத்திலாவது, பட்டமஹிஷிக்குச் சக்களத்தியின் பிள்ளை யிடத்திலாவது அன்பு சிறிதும் குறைந்திருக்கவில்லை. உண்மையில் தன் பிள்ளையை வளர்ப்பதுபோல அரசிளங்குமரனை ஹேரௌ கோ என்னும் சக்ரவர்த்தினியே வளர்த்து வந்தனராம்.

### புதிய ஜப்பான் சக்ரவர்த்தி

இப்போது பட்டத்துக்கு வந்திருக்கும் அரசர் யோஷி ஹீடோ என்பவர்க்கு 33-வயது ஆகிறது. இவர்க்கு நான்கு சகோதரிகளும், மூன்று புத்திரர்களும் இருக்கின்றார்கள். இவர்களுக்குச் சம்பத்து விருத்தியுடன் சந்தான விருத்தியும் கிடைத்திருப்பது இதனைப் படிப்போர்க்கெல்லாம் மிக்க திருப்தியை யுண்டுபண்ணும். இவர் அரசாட்சியில் ஜப்பான் தேசமானது மேன்மேலும் சிறப்புற்றோங்கிச் செழித்து வர வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை நாமெல்லோரும் ஏத்துவோமாக.

"அரசருங் குடிகளும் அம்ம! வேறலர்;
உரைசெயி னுயிருலாம் உடலம் ஆவரால்"-

மதிவாணன்.

வே. முத்துஸாமி ஐயர், பி. ஏ., எல். டி.

* மேற்கோள் நளவெண்பாவிலுள்ளது. நல்ல நாடுகளுக்கெல்லாம் முதலாவதாக நாட்டக்கூடிய நாடு என்பது பொருள்.

## பிராணிகளின் விருத்தாந்தம்
## BIOLOGY—A PRIMER

I. ஜீவவஸ்து:—(i) சேர்க்கையும் தொழில்களும் அமீபா (ii) மனுஷ சரீரத்தின் ஒற்றுமை.

ஜீவவஸ்து என்பது ஜீவனுக்கு ஆதாரமாக உள்ளது. தேகமானது ஜீவவஸ்துவினால் ஆக்கப்பட்டிருக்கிறது. வஸ்துவைப் பிரித்துப் பரிசோதிக்குங்கால் முக்கால் பங்கு ஜலமும் மற்றைய வஸ்துக்களில் கரிவாயுமிகுந்தும், பிராணவாயு, உப்புவாயு, கந்தகம், விஷவாயு முதலியவைகளும் சேர்ந்து காணும். இவைகள் என்ன அளவில் சேர்ந்திருக்கிறதென்பதையும் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனால் அப்படி லோகப்பொருள்களைச்சேர்த்து ஜீவவஸ்து உண்டுபண்ணினது உண்டா என்று கேட்டால் இன்னும்இல்லையென்று தான் சொல்லவேண்டும். ஜீவவஸ்துவின் தொழில்களை அமீபா என்னும் ஒரு ஜீவாசியின் சரித்திரத்தால் அறியலாம். கட்டுக்கடை ஜலத்தில் வசிக்கும் அமீபா மிகவும் சிறிய தேகமுடையது. பூதக்கண்ணாடி கொண்டு பார்த்தால்தான் தெரியும். ஜீவ்யதொழில்களாகிய சுவாசித்தல், உண்டுபெருத்தல், மக்கட்பேறு என்பவைகளை இவைகளிடம் கண்டபோதிலும் அவைகளுக்கேற்ற விவரமான குறிப்புகளை அவைகள் பெறவில்லை. அசைவுக்குக் காரணமாகிய மூளைவஸ்துவும், திரவ பதார்த்தத்தை உண்டுபண்ணும்படியான மற்றைய உறுப்புகளும் நம் திரேகத்தில் இருப்பது போல அமீபாபோன்ற ஜீவன்களிடம் கிடையா.

II. பிராணிகளின் பிரிவுகள்:—(i) பிராணிகளை மூன்றுவிதமாகப் பிரிக்கலாம். அமீபா போன்ற அற்ப ஜீவாசிகள், மலேரியாபோன்ற விஷசுரமுண்டாக்கும் மூளைக்கிருமிகளும் இவ்வினத்தைச் சேர்ந்தவை.

(ii) கடற்பஞ்சு,பவழப் பிராணி, முதலியவை இருதோல் அமைப்புடன் ஒரு துவாரமுள்ள ஒரு அறையுடன் விளங்கும்.

(iii) ஜீரணக்குழாயானது வாய், ஆசனத்துடன் ஒரு அறையின் வழியாய் ஊடுருவிச் செல்லும்படியான அமைப்பு. இவ்வித அமைப்பு வகையில் புழு, பூச்சி முதல் குரங்கு மனுஷன் வரையில் அடக்கலாம். நத்தை இனமும் இந்தப் பிரிவுச்குள் அடங்கும். மீன், ஊர்வன, பறவை, மிருகம் இவைகள் முதுகெலும்புள்ள பிராணிகளின் உட்பிரிவுகள்.

III. பிராணிகளின் ஜீவிய தொழில்களை எவ்வாறு நடத்துகின்றன வென்பதைச் சற்று கவனிப்போம்.

(i) சுவாசம்.—தரையில் வசிப்பன பிராணவாயுவை காற்றினின்றும், தண்ணீரில் வசிப்பன அதனுள் கலந்த பிராணவாயுவைத்தண்ணீரினின்றும் பெறுகின்றன. அற்ப ஜீவாசிகள் தேகத்தின் வழியாகவும், மீன் போன்ற ஜலசரங்கள் காதின்பக்கம் உள்ளே அமைந்திருக்கும் இரத்தம் நிறைந்த இரப்பைகளின் வழியாகவும் (Gills) மற்றவைகள் (மனிதன்போன்ற) தவளைக்கு மேல்பட்ட பிராணிகள் சுவாசப்பைகளினாலும் பிராண வாயுவைப் பெறுகின்றன.

(ii) உணவு.—நமக்கு உண்ண வாயும், விழுங்கத் தொண்டைக் குழாயும், ஜீரணிக்க வயிறும் குடல்களுமிருக்கின்றன. இவைகளோடு சமபந்தப்பட்ட கோளங்களிலிருந்து உமிழ்நீர் முதலிய திரவபதார்த்தங்களின் சேர்க்கையால் உணவு ரக்தம் உறுஞ்சி எடுத்துக்கொள்ளக்கூடியமாதிரி ஜீரணிக்கப்பட்டு உறுஞ்சி மிஞ்சிய சக்கையை மலமாகக் கழிக்கிறது. வாயும் வயிறுமுள்ள மற்ற பிராணிகளும் இப்படியே உண்டு ஜீவிக்கின்றன.

(iii) மக்கட்பேறு:—அற்ப பிராணிகள் அமீபாவைப்போல் தன் தேகத்தைப் பகுத்தும், மற்றைய பிராணிகள் சுக்லச்ரோயுனிதங்களை ஆண்பெண்ணாக வகுக்கக்கூடிய உறுப்புகளினின்றும் பெற்று அவைகளின் சேர்க்கையால் கருத்தரித்து விர்த்தியாகின்றன. ஆண் பெண் உறுப்புகள் ஒரு பிராணியினிடமே காணலாம். மண்ணுண்ணிப் புழு, அட்டை இவைகள் உதாரணம். ஆண் பெண்ணாகப் பிரிந்து மனிதன் போன்ற மற்றைய பிராணிகளில் பார்க்கிறோம். பிராணிகளில் பெரும்பான்மை முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. சிறுபான்மை மிருகங்களைப்போலக் குட்டிகளை உயிருடன் பெற்றுப் போஷிக்கின்றன.

IV. பிராணிகளைக் காணுமிடங்கள்:—

(i) உஷ்ணதேசப் பிராணிகள்

(ii) குளிர்தேசப் பிராணிகள்

(iii) கண்டங்களின் அபூர்வ ஜெந்துக்கள்.

பிராணிகளை உஷ்ணதேசப் பிராணிகளென்றும் குளிர்தேசப்பிராணிகளென்றும் பிரிக்கலாம். ஜலசரங்க

ளென்றும், பூசரங்களென்றும் விவரிக்கலாம். குளிர் தேசத்து பிராணிகள் அடர்ந்த ரோமங்கள் உடையன. (உ-ம்) நரி, கலைமான், காடி முதலிய மிருகங்களை வடக்கே போகப்போகப்பார்க்கலாம்.

யானை, புலி, சிங்கம், ஒட்டகம் இவைகளை உஷ்ண பிரதேசங்களில்தான் காணலாம்.

ஸீப்ரா (Zebra) என்னும் வரிக்குதிரையையும், ஜிராப் என்கிற ஒட்டச்சிவிங்கியையும், ஆஸ்திரிச் (Ostrich) என்னும் தீப் பறவையையும் ஆப்பிரிக்கா கண்டத்தில்தான் காணலாம். கங்காரு என்ற மிருகம் ஆஸ்த்ரேலியாவுக்கும், நீர்யானை அமெரிக்கா தேசத்துக்கும் உரித்தான பிராணிகள்.

மயில்கள் இந்தியாவைத்தவிர வேறு இடங்களில் காணக்கிடையா. ஜலத்தில் வசிப்பது ஜலசரம். பூமியில் வசிக்கும் பிராணிகள் பூசரங்கள் ஆகும். திமிங்கிலம், சுடற்பூனை, இவைகள் மீன்களைப்போல் ஜலத்தில் வசிப்பினும் மிருகஜாதியைச் சேர்ந்தன.

V. உற்பத்தி :—(i) வீட்டுப்பிராணிகள்.
(ii) காட்டுப்பிராணிகள்.

ஆடு, மாடு, குதிரை, நாய், பூனை, கோழி, வாத்து முதலிய பிராணிகள் மனிதனுல் பிடித்து வளர்க்கப்படு மாகையால் அவைகளை வீட்டுப்பிராணிகள் என்றும் சொல்லப்படும்.

யானை காட்டுப்பிராணியாயினும் மனிதனுல் பழக்கி வீட்டுப்பிராணி ஆக்கப்படுகின்றது. மற்றைய பிராணிகள் காட்டுப்பிராணிகள்.

N. S. ஜம்புநாதய்யர், B. A. L. T., F. Z. S.

---

வேஷம் போடுகிறவர்களை நம்பாதே.—சிலர் வயிற்றுப்பிழைப்பிற்காகப் பலவித வேஷங்கள் போடுவார்கள்; ஒருவர் தான் கீரையேசாப்பிடுகிறதென்றும், மற்றொருவர் தான் கிழங்குகளையே சாப்பிடுகிறதென்றும், அன்னத்தைவிட்டு அநேகநாளாகிவிட்டதென்றும் சொல்லிக்கொண்டு திரிவார்கள் ; அவர்களை நீ நம்பவேண்டாம். அப்படி அவர்கள் இவைகளை நிஜமாகவே துறந்து இருப்பார்களேயாகில் என் தற்புகழ்ச்சி செய்துகொள்ளவேண்டும்? அப்பேர்ப்பட்ட மகான்கள் இருக்கவேமாட்டார்கள் என்றல்ல நான் சொல்வது. அப்பேர்ப்பட்டவர்களை நம்முன் காண்பது மிகவும் அரிது. அப்படி உண்மையாகக் கீரையே சாப்பிடுகிறவர்களா யிருந்தபோதிலும் அம்மாதிரி போஜனம் செய்பவர்க ளென்பதைவிட வேறு ஒரு வித குணங்களையும் எடுத்துக் காட்டவில்லையே. ஆகையால் இவ்வாறு பேசுகிறவர்களெல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காக வஞ்சகங்கள் பேசும் வேஷக்காரர்களே யன்றி வேறல்ல.

## நியாயமஞ்சரி

## POPULAR MAXIMS EXPLAINED

### 48. कैमुतिक न्यायः

కైముతిక న్యాయః

கைமுதிக ந்யாயம்

தெரிந்துகொள்ள முடியாததும் ஸாதிக்க முடியாததுமான காரியங்கள் ஸித்தியாகும்படி நேர்ந்துவிட்டால் மற்றையக் காரியங்கள் கைகூடக் கேட்பானேன். இம்மாதிரியான விஷயங்களில் இந்யாயம் உபயோகப் படும். 'மலையை விழுங்குகிற மஹாதேவருக்குக் கதவு ஒரு அப்பளம்' என்று வழங்கிவரும் பழமொழி இந்யாயக் கருத்தை அடக்கியுள்ளது. எல்லாவற்றிலும் மிகக் கடினமானது தாயுமானவர் கூறுவதுபோல 'சிந்தையை அடக்கியே சும்மாவிருப்பது.' நாம் ஸாதாரணமாகச் சிந்தையை அடக்கி ஏதாவது ஒரு கார்யஸித்தி விஷயத்தில் முயலுகிறோம். சிந்தையை அடக்கிச் சும்மாவிருக்கும் திறன் நமக்கு வருமாயின் மற்றைய கார்ய ஸித்திகள் ஒரு லக்ஷ்யமா நமக்கு? இதுவே இந்யாயத்திற்கு மதவிஷயப்பொருத்தம். இந்யாய ஸாரத்திற்கேற்ப ஸ்ரீமத் சங்கராசார்யர் பரமநிலையை 'சிறந்த ஐச்வர்யம், மேலான தனம், பேரின்பம், இதைவிட அடையவேண்டியது ஒன்றும் இல்லை, இந்த ஆனந்தம் கடந்த ஆனந்தம் இல்லவே இல்லை. இதைக் கண்ட கண்ணுக்கு வேறு ஒன்றும் ஒரு பொருட்டாகப்படாது, இதை உணர்ந்தபின் உணரவேண்டுவது ஒன்றுமில்லை' என்று வர்ணித்திருக்கிறார். ஒரு மதாந்தராசாரியரும் 'முதல் பகவந்நிலையைத் தேடிப்பிடி, மற்றைய (இஹலோகச்சிறப்பு) எல்லாம் தாமே உன்னை வந்து அணுகும்' என்று இந்யாய ரஹஸ்யத்தை மதவிஷயத்தில் பொருத்தி வெளியிட்டிருக்கிறார்.

### 49. कोषपान न्यायः

కోషపాన న్యాయః

கோஷபான ந்யாயம்

முன்காலத்தில் ஒருவன் பேசுவது பொய்யா மெய்யா என்று அறிய ஒரு வழக்கம் உண்டு. அவனை ஒருநாள் உபவாஸம் (பட்டினி) இருக்கச் செய்து அடுத்த நாள் மூன்றுகையளவு தண்ணீர் குடிக்கும்படி செய்வது. அப்பொழுதெல்லாம் ஸுகமாக விருந்து அடுத்த நாள் இது அவனை மிகக் கஷ்டப்படுத்தியே தீர்க்கும். இம்மாதிரி முதலில் ஸுகமாக விருந்து

பின்னர் கர்மத்திற்கேற்பப் பலன் கொடுப்பவைகள் விஷயத்தில் இந்யாயம் உபயோகப்படும். 'சிரித்துக் கொண்டு செய்யும் கர்மபலன்களை அழுதுகொண்டே அநுபவிக்கவேண்டும்' என்று கெட்ட கர்மவிஷயமான பழமொழி இந்யாய ரஹஸ்ய விஷயத்தை வெளிப்படுத்தும். 'தெய்வ மிகழேல்' என்ற ஔவையார் கனிவான மொழியின் கருத்தைக் கவனியாது தான் தொழும் மூர்த்தியிடம் உள்ள பக்தியை ஆதாரமாகக்கொண்டு மற்றவர்கள் மூர்த்திகளைப் பழித்து மதத்வேஷம் உண்டாகும்படி செய்பவர்கள் எவ்வளவுதான் தாம் உலகில் உள்ள பொய்மத ஆராதனைகளைக் கண்டித்து, உண்மை மார்க்கத்தில் ஜனங்களை நிலைநிறுத்த முயல்கிறோம் என்று எண்ணியிருந்த போதிலும், முடிவில் அவர்கள் கொடிய நரக துக்கத்தை அநுபவிக்கும் படிதான் நேரும். இதற்கிணங்க ஒட்டக்கூத்தரும் தாம் எழுதிய உத்தரகாண்டம் திக்விஜயப் படலத்தில், ராவணன் யமனை எதிர்த்து அவன் பட்டணத்துள் புகுந்து பார்க்கையில்,

* * பலதெய்வம் பழித்துரைக்கும் பாதகரும் பரந்த தங்கள்
வாய்வழியே புழுச்சொரிய மாநரகக் கும்பியிடை மறுகக் கண்டான்

என்று கூறி இவ்விஷயத்தை வற்புறுத்துகிறார். இம்மாதிரி விஷயங்களே இந்யாய உபயோகத்தை நன்கு விளக்கும்.

### 50. क्रियाविकल्प न्यायः

క్రియావికల్ప న్యాయః

க்ரியாவிகல்ப ந்யாயம்

வஸ்து மாறுபாடின்றித் தொழில் மாறுபாட்டால் மாத்திரம் வேற்றுமை ஏற்படும் இடங்களில் இந்யாயம் உபயோகப்படும். ப்ரகிருதி தத்வ சாஸ்திரப்படி கரி, எழுதுகோல்தண்டு, வயிரம் ஆகிய இவைகள் பார்வைக்கு வேறாகக் காணப்பட்டபோதிலும் வஸ்து விஷயத்தில் ஒன்று தான் என்று வெளியாகிறது. ஒரு குடும்பத்தைச் சேர்ந்த பலர் பலவித வேலைகளில் அமர்ந்திருப்பினும் எல்லோருக்கும் குடும்பத்தை யாதொரு தடையுமின்றிப் பாதுகாத்து வரவேண்டும் என்பதே பொதுநோக்கம். இம்மாதிரியே மதங்கள் ஆராதனை மார்க்கங்கள் பலவிதமாயிருப்பினும், மனிதனுக்கு மோக்ஷஸுகம் கொடுத்து நிலையிலிருத்தவேண்டும் என்பதே பொதுநோக்கம். இது எல்லோருக்கும் உண்டு. இம்மாதிரி வெளித்தொழில்களில் பலவிதமாகி இருந்தும் உள்நோக்கம் ஒன்றாகவே இருக்கும் இடங்களில் இந்யாயம் உபயோகப்படும்.

### 51. खलेकपोत न्यायः

ఖలేకపోత న్యాయః

கலேகபோத ந்யாயம்

களத்தில் கிழம், பால்ய, சிசு இந்நிலையை உடைய புறாக்கள் ஏககாலத்தில் வந்து விழுந்து மடியும். இதுபோல எல்லோருக்கும் ஒரே காலத்தில் வரும் ஆபத்து ஸம்பத்து விஷயங்களில் இந்யாயம் உபயோகப்படும். பொதுவாக மரணம், வயது வித்யாஸம், கார்ய அவஸரம், காலநிலை முதலியவைகளை மதியாது ஈவு இரக்கமின்றி வரவேண்டியபொழுது வந்தே தீரும். இதையே, 'இலையுதிர, பூவுதிர பிஞ்சுதிரக் காய் உதிரக் கனியுதிர அடித்துத் தீர்க்கும் சண்டமாருதம்போல் மரணம் இவ்வுலகில் ஈவு இரக்கமின்றி உலவுகிறது' என்று வர்ணிப்பர் பெரியோர். இம்மாதிரியே ரயில் கப்பல் முதலியவைகளில் ஏற்படும் ஆபத்தால் ப்ரயாணிகள் கூட்டங்கூட்டமாகப் பரலோகம் போகும்படி நேருவதுமுண்டு.

### 52. खल्वाटबिल्वीय न्यायः

ఖల్వాటబిల్వీయ న్యాయః

கல்வாடபில்வீய ந்யாயம்

மொட்டைபில்வப்பழ ந்யாயம். இது காகதாளீய ந்யாயம் போன்றது. அதில் பழம் விழுந்து தற்செயலாய் ஆஹாரமாக ஏற்பட்டதையும், பனை மரத்து அடியில் நிழலுக்கு ஒதுங்கிய மொட்டையன் மண்டையில் பனம்பழம் விழுந்து உடைந்துபோனதையும்பற்றிக் கூறியுள்ளோம். அவைகளே இந்யாயவிஷய விளக்கமாகும்.

---

நேரில் மல்லுக்கு நிற்காதே — ஒரு மனிதன் உன்னைக் கெடுக்க ஆரம்பித்தால் நீ வெளியில் அவனிடத்திலே மிகவும் தாழ்ச்சியாய் இருந்து உள்ளுக்குள் அவனைத் திரும்பிக் கெடுக்க எவ்வளவு முயலவேண்டுமோ அவ்வளவும் முயலலாம்; அதிகமாய்ச் செய்ய நமக்குச் சக்தியிருந்தாலும் செய்யலாம்; இது ஒரு அவகுணமாகமாட்டாது. ஆனால் வெளியில் அவனிடம் அதிக சிநேகமாய்க் காட்டிக்கொண்டு உள்ளுக்குள் கெடுத்துக்கொண்டே வருவோமாகில் அப்பொழுது துர்க்குணமுள்ளவர்களாவோம்.

## தூங்கா விளக்கு

### THE UNDYING LIGHT.

ஓர் யுத்தவீரன்—அவன் தனது அரசனுக்காக நன்ருக உழைத்தான். வெகுநாள் உழைத்தான். நாட்டில், போர் எல்லாம் ஓய்ந்து அமைதி நிலேத்ததும், நாட்டிற்காக உழைத்து, உடம்பு முழுதும் யுத்தவடு நிறைந்த அந்த வீரனைக் கூவி 'இனி உன்னுல் எனக்காக வேண்டியதில்லே. உனக்கினிமேல் சம்பளம் கொடுக்கமுடியாது. உனக்குச் சேரவேண்டியதைப் பெற்றுக்கொண்டு, வீட்டைச் சேர். ஸம்பாதிக்க முடியாதவர்க்கிதற்குமேல் பணந்தரமுடியாது' என்று அரசன் கூறினன்.

எளிய வீரன் தான் என்ன செய்வதென்று தெரியாது தத்தளித்தான். தன் வீட்டைநோக்கி அடிவைத்துக்கொண்டு போகையில் வழியில் ஒரு பெரும் வனம் வந்து அடைந்தான். இரவு முந்தியதால், காலே முதல் ஆஹாரம் இல்லாமல் குற்றுயிராய் வந்தவன் அங்கு ஒரு மாடத்தில் தீபவொளி கண்டான். அவ்வீட்டிலிருப்பவள் ஒரு சூன்யகாரி. அவள் வீடுசென்று 'அம்மா! எனக்கேதாவது உணவு தாரும். என் காதடைக்கிறது. கொஞ்சம் ஆஹாரம் கொடுத்து படுக்கவும் கொஞ்சமிடம் கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் உங்கள் காலிலேயே ப்ராணனை விடவரும்' என்று கெஞ்சினன்.

'அஹ்ஹா! பலே! ஸேனையை விட்டுச் சொல்லாது ஓடிவந்தவனுக்கு வெறுமை அன்னமிடுவேன்! யார் அது செய்வார்? ஆனல் உன் நிலேமைக் கனுதாபப்பட்டு அன்னமிடுவேன். நான் சொல்லியவிதம் நடந்தால்தான் அதுவும்.'

'என்னே என்ன செய்யவேண்டும் என்று கட்டளேயிடுகிறீர்?'

'நாளே என்தோட்டம் எல்லாம் கொத்தி செம்மைப்படுத்த வேண்டும்'.

இதற்கு அவன் உடம்பட்டான். மறுநாள் தன்னுல் முடிந்தவரையும் உழைத்தான். ஆனல் ஸூரியன் அஸ்தமிக்கும் ஸமயம் ஆயும் அவனுல் முழுதும் செய்ய முடியவில்லே.

'ஹா! பார்த்தாயா! இன்றைக்கு? இதற்குமேல் நீ செய்யமாட்டாய்? இங்கு இன்றிரவு தங்கி அந்த மரத்தைவெட்டி எனக்குச் சுப்பலேத்தா' என்று அவள் சொன்னுள்.

வீரனும் அந்நாள் மரத்தை வெட்டினன். அன்று ஸாயங்காலம் கிழவி அன்றிரவும் இருக்கும்படிச் சொன்னுள்.

'நாளேக்கு நீ எனக்கு ஒரு அல்ப கார்யம் செய்ய வேண்டியது. என் வீட்டிற்குப்பின் ஓர் பாழுங்கிணறு உண்டு. அதில் என் தூங்காவிளக்கு விழுந்துவிட்டது. அது அவியாத விளக்கு. அதை நீ எனக்கு எடுத்துத் தரவேண்டியதுதான்' என்று மேலுங் கூறினள்.

மறுநாள் அவனேக் கிணற்றண்டை அழைத்துப் போய் ஓர் கூடையுள் உட்கார வைத்துக் கிணற்றுள் இறக்கினுள். அவனும் தூங்காவிளக்கைக் கண்டு எடுத்துக்கொண்டு தன்னே மேல் எடுக்கும்படி செய்கை செய்தான். அவளும் கட்டின வழியாய் கயிற்றை மேல் இழுக்க வீரனும் விளக்குடன்மேல் கிட்டத்தட்டக் கிணற்றின் மேற்சுவர் நிலேவருமுன், தன்கையை நீட்டி அக்கிழவி வீரன்கையிலிருந்து விளக்கைவாங்கப் பார்த்தாள். அவளுடையகெட்ட எண்ணத்தைக்கண்டு அவன் 'என்னே பூமிமேல் வரவிட்டால் அன்றி விளக்கைத் தரமாட்டேன்' என்ருன். அந்தச் சூன்யகாரிக்குக் கோபமிஞ்சியது. அவனேக் கிணற்றில் தள்ளிவிட்டு தன் வீடு போனுள். அவ்வீரன் கிணற்றின்கீழ் ஈரமாகிய சேற்றில் அமுங்கிக் கிடந்தான். தூங்காவிளக்கு எரிந்தவண்ணமாக இருந்தது. அதனுல் என்னப்ரயோஜனம். வயிற்றுக் கன்னமில்லாமல் அவன் கதை யமனூர்க்கு ஓலே எழுதுவதா யிருந்தது. சற்றுநேரம் என்ன செய்வதென்று சிந்தாஃக்ராந்தனுக விருந்தான். கடைசியாக ஒன்றுந் தோன்ருது விளக்கில் தொங்கிய தூண்டுகோலால் விளக்கைத் தூண்டினன். அதிலிருந்து சுடர்கள் கீழ் விழுந்தன. அப்பொழுது அங்கு ஒரு ஸேவகன் எதிர் வந்து,

'ஐயா! எனக்கென்ன வேலே இடுகிறீர். தயவு செய்யும்' என்ருன்.

'உன்னேயேன் நான் வேலேசெய்யச் செய்யவேண்டும்.'

'நீங்கள் கூறியதெல்லாம் நான் செய்துதான் தீர வேண்டும்.'

'ஆனல்ஸரி என்னேக் கிணற்றுக்கு வெளியில்விடு.'

அந்த ஸேவகன் வீரனேப்பாதாளமார்க்கமாய் தூங்காவிளக்கோடும் அழைத்துக்கொண்டு அந்தச்சூன்யகாரிசேமித்திருந்த பொருள்குவிய லிருக்குமிடத்தைக் காட்ட, தன்னுல் எடுத்துக்கொள்ளக்கூடிய பொருளே எடுத்துக்கொண்டு பூமிமேல் வீரன் வந்தடைந்தான். உடனே 'நீ போய் அக்கிழவி காலுங்கையுங் கட்டி ந்யாயவாதியின் முன்விட்டு ந்யாயம் நடத்து' என்ருன்.

அக்கிழவிக்கு முள்ளம்பன்றி வாஹனமிட்டு அவளை கூக்குரலிட கழுவிற்கு ஆவாஹனம் செய்து கழுகுக்கு இரை ஆக்கினன். பின் ஓடிவந்து,

'ஐயா எனக்கின்னம் என்ன வேலை இடுகிறீர் தயவு செய்யும்' என்றான்.

'இப்பொழுது எனக்கு உன்னால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. நான் கூப்பிட்டபொழுது வா.'

'நீங்கள் என்னைக் கூப்பிடவேண்டியதில்லை. இந்தத் தூங்காவிளக்கை சுடர்விழத் தூண்டினல் நான் வருவேன்' என்று சொல்லி மறைந்தான்.

வீரனும் தான் எவ்வூரில் இருந்து பிரயாணப்பட்டானோ அவ்வூரே அடைந்து ஒரு வீடுவாங்கி அங்கு அமர்ந்தான். வீட்டை நன்றாக அலங்கரித்துப் பார்வைக்கு மிக அழகியதாகத் தோன்றும்படிச் செய்தான். பின் தூங்காவிளக்கைச் சுடர்விழத் தூண்டினன்.

'ஐயா! என்ன வேலை இடுகிறீர்' என்று சேவகன் தோன்றினன்.

'நான் இவ்வரசனை மனஃபூர்த்தியாக வழிபட்டேன். என்னை அவன் தயையின்றித் துரத்தினன். அவனுக்குப் புத்தி வரும்படிச் செய்யவேண்டும்.'

'நான் என்ன செய்யவேண்டும்'

'இன்று இரவு அரசன் அந்தஃபுரம் சென்று அவன் மகளை எனக்கு இன்று ஊழியஞ்செய்யக்கொண்டுவா.'

'எனக்குச் செய்வது எளிதுதான். உமக்குத் துன்பத்தை உண்டாக்கலாம்' என்று சொல்லிக்கொண்டு மறைந்தான்.

அன்றிரவு அரசன் மகளைக் கவர்ந்து வந்தான்.

'அஹ்ஹா! வந்தாயா? வா. துடைப்பம் எடுத்து இவ்வறையை விளக்கு.' பெருக்கி ஆனதும் தனது கால் செருப்பை அவள் மேல் எறிந்து 'இதை நன்றாகத் துடை' என்றான். ஒன்றும் சொல்லாது அவ்வேலையும் செய்தாள். அறைக்கண் மூடிக்கொண்டே செய்தாள். காலை ஆனதும் மறுபடியும் அவளை அவள் அறையுள் சேவகன் ஒருவரும் அறியாது விட்டுவிட்டான்.

காலை எழுந்ததும் அந்த ராஜகன்னிகை தன் தகப்பனைப் பார்த்து 'என்ன கெட்ட கனாக்கண்டேன் நான்' என்று இரவில் தான் வீரன் வீட்டில் செய்ததெல்லாம் சொல்லிவிட்டு 'ஆனல் உடம்பெல்லாம் நான் வாஸ்தவமாகச் செய்தாற்போல் வலிக்கிறது' என்றும் சொன்னள்

'ஒருவேளை அது கனவாய் இராது. நிஸ்சயமாக நடந்திருக்கலாம். ஆகையால் நான் சொல்வதைக் கேள். உன் மடி நிறைய கடலையை வைத்துக்கொள். உன்னைக் கொண்டு செல்லும் வழி முழுதும் இறைத்துக்கொண்டே போ. அது வழியைப் பின் கண்டுபிடிக்க வழிகாட்டும்' என்று அரசன் கூறினன்.

இதை எல்லாம் அந்த ஸேவகன் ஒளித்துக்கொண்டே கேட்டிருந்ததினல் ஊரில் உள்ள தெருவெல்லாம்கடலையை இறைத்து இருந்தான். இரவு எல்லாம் வேலை செய்து வந்த ராஜகன்னியை யார் அவ்வாறு உழைக்கும்படி செய்திருக்கலாம் என்று அறிவது அஸாத்யமாகிவிட்டது. ஊரிலுள்ள சிறுவர்கள் எல்லாம் நேற்று இரவு கடலைமழை பெய்து இருக்க வேண்டுமென்று கூவிக்கொண்டு கடலையைப் பொறுக்கித் தின்றார்கள்.

'இன்று வேறு யோசனை செய்யவேண்டும். உன் படுக்கைக்குப் போகுமுன் உன் காலில் இருக்கும் ஒரு சிலம்பைவீட்டில்வைத்துவிட்டுப்போ. கொண்டுபோகப்படும் இடத்தில் மற்றொன்றை வைத்துவிட்டுவா. நான் அதைக் கண்டுபிடிக்கும்படிச் செய்வேன்' என்று அரசன் கூறினன். இதை முழுதும் ஸேவகனும் கேட்டுக்கொண்டிருந்தான்.

பொழுது போனதும் வீரன் அரசன் மகளைக் கொண்டுவரும்படி ஸேவகனோடு சொல்லினன். 'இன்றைக்கு என் மனம் அலைகிறது. என்ன செய்வது என்று தெரியவில்லை. நான் அப்பெண்ணைக் கொண்டுவரத் தடையில்லை. சிலம்பை அவர் இங்குக் கண்டுவிட்டால் உன் கதி என்னவாகும்' என்று ஸேவகன் மேலும் கூறினன்.

'நான் சொல்லியதை நீ செய்' என்று வீரன் மொழிந்தான்.

மூன்றுநாள் இரவும் அரசன் மகள் வீரன் வீட்டில் சிறு வேலைகள் எல்லாம் செய்தாள். காலைபொழுதுவிடிவதற்குமுன் அப்பெண் படுத்து உறங்கும் அறையுள் விடப்பட்டாள். அரசனவன் ஊர் முழுதும் சோதனை செய்து வீரன் வீட்டில் சிலம்பைக் கண்டு எடுத்தான்.

ஸேவகன் தூண்டியதால் ஊரைவிட்டோடப்போகும் பொழுது அரசனுடைய கொத்துவால் ஸேவகர் அவனைப்பிடித்து டாணாவிலடைத்தார்கள். ஓடிய அவஸரத்தில் தனது தாங்காவிளக்கை விட்டு மறந்து வந்த வீரன் கையில் கொஞ்சம் பணமிருப்பதைக் கண்டு அங்கு கண்ட தன்னினத்தான் ஒருவனைப் பார்த்து 'நான் இருந்தவீட்டில் சில சாமான்களை வைத்துவிட்டு வந்துவிட்டேன். அதைக் கொண்டு வந்தால் சில வரா

ஹூன்கள் தருவேன்' என்ருன். அவனும் சென்ற வைகளை எடுத்து வந்தான். பெட்டியுள் சேமித்து வைத்திருந்த தூங்காவிளக்கைக் கண்டதும் அவன் ஆனந்தத்திற்கு அளவில்லை. தான் தனியாயிருக்கும் பொழுது அவ்விளக்கை சுடர் விழும்படித் தூண்டி ஞன்.

உடனே ஸேவகன் 'பயப்பட வேண்டாம். ஒன்றும் தீங்குண்டாகாது. பொறுமையாக அவர் எங்கு அழைத்துப்போனலும் போங்கள். தூங்காவிளக்கை மாத்ரம் மறவாதிரும்' என்று மறைந்தான்.

மறுநாள்தான் விசாரணை. விசாரணை நடந்தது. அவனைக்கழுவிலேற்றும்படிஉத்தரவிட்டார்கள். அவன் ஒரு தப்பும்செய்யாதிருந்தும் அவனைத்தண்டித்தார்கள். அவனைக் கழுமரத்தின் அருகு கொண்டுபோகும் வழியில் எனக்கு ஒரு அபீஷ்டமிருக்கின்றது. என் கடைசி வரம் அது. அதைத் தாரும் என்றுஸேவகன்கேட்டான்.

'உனக்கென்ன வேண்டும்' என்று அரசன் கேட்டான். 'ஒன்றுமில்லை. நான் எப்படி இருந்தாலும் சாவடைவது நிச்சயம். எனக்கு மோக்ஷமுண்டோ இல்லையோ என்பதுமாத்ரம் ஸந்தேஹம். அதற்கோர் சகுனம் பார்க்கவேண்டும். அதுவும் ஒன்றுமில்லை. இந்த விளக்கைத் தூண்டி, சுடர்விழுந்தால் அதுபோதும். இதுதான்.'

'இதுதானு! ஆயிரம் தடவை செய்துகொள்.'

வீரனும் தனது விளக்கைத் தாண்டி சுடர்விழச்செய்தான். ஸேவகன் தோன்றி 'ஐயா நான் என்ன செய்யவேண்டும்' என்று கைபொத்தி வாய்பொத்தி வணக்கத்துடன் கேட்டான்.

'இந்த அநீதி நடத்தும் நியாயாதிபதிகளைக் கொல். அந்தக் கொலைபாதக அரசனை விடாதே' என்ருன் வீரன்.

அந்த ஸேவகன் எல்லாரையும் நொக்கி நுறுக்கி த்வம்ஸம் செய்தான். அரசனையும் மிக வருத்தி 'என் ராஜ்யம் என் பெண் இரண்டையும் உனக்குத் தருகிறேன் ; விட்டுவிடும்படிச் செய்' என்று கெஞ்சும்வரை வீரன் அவனை விடும்படி உத்தரவு கொடுக்கவில்லை.

இனிமேல் நான் கதை சொல்ல முடியாது. படிப்பவர்காள்! நான் இனி என்ன சொல்லவேண்டியிருக்கிறது. கதையின் முடிவை நீங்களே முடித்துக் கொள்ளலாம். நான் கதையை இனி வளர்க்கமாட்டேன். வந்தனம்! போய்விட்டு வருகிறேன்.

# வஸ்து தத்துவம்

## CHEMISTRY

### தண்ணீர் வகைகள்

### NATURAL WATERS

மழை ஜலம்.—சுபாவத்தில் அகப்படும் நீர்களுள் மழை நீரே மிகச் சுத்தமானது. அல்லாமலும், மற்ற நீர்களுக்கு மழைநீரே காரணமாயிருக்கிறது. பூமியின்மேல் பெய்கின்ற மழைஜலத்தின் ஒருபாகம் ஆறுகள், ஓடைகள் முதலியவை வழியாக ஓடுகிறது; ஒரு பாகம் பூமியின் வெடிப்புகள், துவாரங்கள் முதலியவைகளின் வழியாய் கீழே போய்த்தங்கி, மற்ருேரிடத்தில் ஊற்ருக மறுபடி வெளியே வருகிறது; மழை ஜலத்தில் சிறுபாகம் மரம் செடிகளால் குடிக்கப்படுகிறது; கொஞ்ச ஜலம் சூரிய வெப்பத்தினல் ஆவியாக மாறுகிறது. பூமியில் எல்லாவிடங்களிலும் மழை ஒரேமாதிரியாகப் பெய்வதில்லை. மலைப்பிரதேசங்களிலும், காடுகள் நிறைந்த விடங்களிலும் மழை அதிகமாகப் பெய்கிறது.

மழைஜலம் பூமியில் கிடைக்கும் நீர்களுக்குள் மிகச் சுத்தமானதா யிருந்தபோதிலும், இதிலும் அநேக அசுத்த வஸ்துக்கள் கலந்துவிடுகின்றன. மழைஜலம் ஆகாயத்தினின்று கீழே விழும்போது, நடுவிலிருக்கும் காற்றையும், அதிலுள்ள கரியமலவாயு முதலியவைகளையும், கரைத்துக்கொண்டு வருகிறது. அல்லாமலும்காற்றில் மிதந்துகொண்டிருக்கும் பொடிபோன்ற தூசிகளையும், மண்ணையும் சேர்த்துக்கொள்ளுகிறது. ஆனல் இப்படிக் காற்றிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட அசுத்தம் மிகச் சிறிதே. மழைஜலம் பூமியின் மேல் விழுந்து ஓடும்போது அத்தரையின்மேலிருக்கும் அசுத்தங்களை யெல்லாம் அடித்துக்கொண்டுபோகிறது. இந்த ஜலம் மிக அசுத்தமானது. அழுகின இலைகள், கறி, பட்சிகள், சிறு பிராணிகள் முதலியவைகளின் அசுத்தங்கள், ஆகிய இவைகள் பூமியின்மேல் விழுந்த மழைஜலத்தில் கலக்கின்றன. இந்த ஜலத்தைச் சுத்தி செய்ய, வடிகட்டுவது போதுமேயாயினும், இதைக் காய்ச்சி ஆவியாக்கி, மறுபடி ஆவியைக் குளிரச்செய்வதே நல்லது. இப்படிச்செய்தால், எவ்வளவு அசுத்தமான நீராயினும் மிகச் சுத்த நீராய்விடும். ஆனல் இம்மாதிரிச் செய்வது சாதாரணமாய் வீடுகளில் முடியாத காரியம். ஆகையால் நாம் எப்பொழுதும் தண்

ணீரைக் காய்ச்சி, பிறகு வடிக்கட்டிச் சாப்பிடுவதே மிகவும் நல்லது.

ஆற்றுநீர்.—பூமியின்மேல் விழுந்த ஜலம் தரையின் வழியாய்ப் பல நீர்த்தாரைகளாய் ஓடி, ஒன்று சேர்ந்து ஒரு சிற்ருறு ஆகின்றது. ஆகையால் ஆற்றின் நீர் தரையின்மேலிருந்த அசுத்தங்களையெல்லாம் அடித்து வரும். ஆறு ஓடிவரும் தரையானது உறுதியான பாறையாயும், மணலாயுமிருந்தால் அதிக அசுத்தங்கள் அந்நீரில் இரா. சாதாரணமாய் மண்ணையும், தழைகளையும், சில உலோக வஸ்துக்களையும் ஆற்றுநீர் அடித்துவரும். இந்நீரை முன் சொன்னதுபோல் சுத்தம் செய்துவிட்டால், நமது உபயோகத்துக்கு மிகச் சிறந்த நீராகும்.

ஊற்றுநீர்.—மழைஜலம் கீழே விழுந்து மணல் தரையின் வழியாய்ப் போகும்போது, மணலால் உறிஞ்சப்பட்டு நீர் பூமியின் கீழே போகிறது. பூமியிலுள்ள வெடிப்புகளின் வழியாகவும் நீர் கீழே போவதுண்டு. இந்த நீர் பூமியின் தரைமட்டத்திற்குக் கீழே ஓடிக்கொண்டிருக்கிறது. நாம் பூமியின் கீழ் தோண்டும்போது காணப்படும் ஜலம் இதுதான். சிற்சில தாழ்வான இடங்களில் சிறு துவாரங்களிருக்க, அவைகளின் வழியாய் இந்த நீர் மறுபடி பூமியின்மேல் ஊறி வருகின்றது. இதைத்தான் நாம் ஊற்றுநீரென்று சொல்லுகிறோம். இது கொஞ்சம் சுத்தமான நீர், பூமியின் கீழேபோய், அங்கு தங்கி,பிறகு மேலேவரும்போதெல்லாம் சிறு துவாரங்களின் வழியாய்ச் செல்லவேண்டியிருப்பதால், அந்த நீரில் தங்கியிருந்த களிமண், தழைகள் முதலியவை தடுக்கப்பட, நீர் மாத்திரம் வருகின்றது. ஆகையால் ஆற்றுநீர் கலங்கியிருக்க, ஊற்றுநீர்மட்டும் வடிகட்டப்பட்ட நீர்போல் தெளிவாயிருக்கிறது. ஆனல்இந்தஊற்றுநீரைமிகச்சுத்தமான நீரென்று சொல்லமுடியாது. இந்த நீரில் மண் தூசி முதலிய அசுத்தங்கள் இல்லாவிட்டாலும், இதுபோகும் பூபாகத்திலுள்ள உப்பு முதலிய வஸ்துக்களைக் கரைத்துக் கொண்டு வருகிறது. இந்நீர் சாதாரணமாக உப்பு, சீமைச்சுண்ணும்பு, மஹாக்நீஷச்சுண்ணும்பு, நவாச்சாரம் முதலிய வஸ்துக்களைக் கரைத்துக்கொண்டு வருகிறது. ஆனபோதிலும் இது சற்றுச் சுத்தமான நீர்தான். இதைக் காய்ச்சி நாம் உபபோகிக்கலாம்.

கடல் நீர்.—சுபாவத்தில் கிடைக்கின்ற நீர்கள் எல்லாவற்றிலும் கடல்நீர் மிக அசுத்தமானது. கடலில் வந்து விழுகிற ஆறுகளெல்லாம் பூமியின் வழியாய் ஓடி வரும்போது, அங்கங்கு இருக்கும் வஸ்துக்களையெல்லாம் கரைத்து வந்து கடலில் தள்ளுகின்றன. இப்படிக் கடலில் தங்கும் வஸ்துக்கள் அதிகரிக்கின்றன. ஆனல் சூரிய வெப்பத்தினுல் கடல் நீர் ஆவியாக மாறும்போது, நீர்மாத்திரம் குறைவதே தவிர அதிலுள்ள வஸ்துக்கள் ஆவியாக மாறி போகவில்லை. ஆகையால் கடலிலுள்ள அசுத்த வஸ்துக்கள் வரவர அதிகரிக்கின்றன.

கடல்நீரில் ஏராளமாயிருக்கும் வஸ்து கடலுப்பு. இந்த உப்பு நமக்கு ஒரு மிகவும் உபயோகமுள்ள வஸ்து. உப்பில்லாமல் ஒரு மனிதனும் வசிப்பதில்லை. இதைத் தவிர பொடாஸ் உப்பு, மஹாக்நீஷ உப்பு, சீமைச்சுண்ணும்பு முதலியவைகளும் கடல் நீரில் கரைந்திருக்கின்றன. நூறு பங்கு கடல் நீரின் எடையில், சுமார் $2\frac{3}{4}$ பங்கு சாதாரண கடலுப்பும், சுமார் $\frac{3}{4}$ பங்கு பாக்கி உப்புகளுமிருக்கின்றன. இக் கடல் நீரைக் காய்ச்சி ஆவியாக்கி, மறுபடி இந்த ஆவியை நீராகக் குளிரச்செய்தால், இது நல்ல சுத்த நீராகும். இதை நாம் குடிப்பதற்கும், சமையல் செய்வதற்கும் உபயோகிக்கலாம். கப்பல்களில் பிரயாணம் செய்யும்போது, மனிதர்கள் கடல்நீரை இம்மாதிரி சுத்தம் செய்துதான் உபயோகிக்கிறார்கள்.

M. R. சுப்பிரமணிய ஐயர் பி. ஏ., எல். டி.

பக்தியுள்ள தாயின் ஜெபம்.—நியுயோர்க்கிலுள்ள சாமர்வில்லி என்னுமிடத்தில் ஒரு துஷ்ட வாலிபனையுடைய ஒரு பக்தியுள்ள தாயிருந்தாள். ஒருநாள் அந்த அம்மாள் அன்றுமாலை தன் மகனை வெளியே எங்கும் போகாமல் தன்னேடிருக்கும்படி மிகவும் கெஞ்சிக்கேட்டாள். அதற்கு அவன், அம்மா நான் உங்கள் வார்த்தையின்படி செய்யமுடியாது; வெளியே நான்போய் என் சிநேகிதரோடு சந்தோஷமாயிருந்து விடிந்த பிறகு வருவேன் என்றான். அதற்கு அந்த அம்மாள், என்மகனே! நீ வீட்டுக்குத் திரும்பி வரும்வரையில் நான் தூங்காமல் கடவுளை உன்னைக் காப்பாற்றும்படி உனக்காகச் செபித்துக் கொண்டே இருப்பேன் என்பதை நீ நினைத்துக் கொண்டு போ என்று சொன்னுள். அப்போது மகன் தன் தாயை ஏசிப்பேசிச் சபித்து வீட்டைவிட்டுப் போய் அன்று இரவெல்லாம் தன் கெட்டதோழனேடு துர்ச்சனமா யிருந்து விடியற்காலை நாலுமணிக்கு வீட்டுக்குத் திரும்பி வந்து சன்னல்தட்டுகள் வழியாய் வீட்டில் விளக்கு எரிவதையும் தன் தாயார் தூங்காமலிருந்து தனக்காகச் செபித்துக்கொண் டிருப்பதையும் பார்த்து அவள் செய்த ஜெபத்தை உற்றுக் கேட்டுக் கொண்டிருந்து பிறகு தன் அறையில்போய்ப் படுத்துக்கொண்டான். தூக்கம் வரவேயில்லை. தாயின் ஜெபத்துக்குச் செவிகொடுத்து அவன் மனதில் நல்லெண்ணமுண்டாகக் கடவுள் தூண்டினர். அவன் மனம் வாதனைக்குள்ளாகித் தன் சீர்கெட்ட ஜீவியத்தை நினைத்துத் துக்கப்பட்டுக் கண்ணீர்விட்டு நல் வழிக்குத் திரும்பினன்.

# கல்யாணி

## KALYANI *

### 4-ம் அதிகாரத் தொடர்ச்சி

மனோகரமான ஒவ்வொரு இடத்தைப்பற்றியும் ஒவ்வொரு ஐதிகம் புராண கதைகளில் சொல்வது போல், இந்த ஊற்றிற்கும் அற்புதமான கதையொன்றுண்டு. அநேக வருஷங்களுக்கு முன் இவ்விடத்திற்குச் சமீபத்தில் ஒரு புனபதி வேட்டையாடிக் கொண்டிருக்கையில் அழகிய ஒரு பெண்ணை அங்கே கண்டு மயங்கினன். பிறகு இருவரும் அடிக்கடி சூரிய அஸ்தமன சமயத்தில் அங்கே சந்திப்பார்கள். அவளுடைய தேககாந்திபோல் மன ஒளியுமிருந்ததால் அவளிடத்தில் அவனுக்கு அதிக ஆசை பிறந்தது. பிறாறியாமலிருந்ததால் இன்பச்சுவை விருத்தியாயிற்று. அவள் எப்பொழுதும் அவ்வூற்றிற்குச் சமீபத்திலேயே தோன்றி மறைவாள். அவளுக்கும் அதற்கும் பிறரால் அறியக்கூடாத சம்பந்தமொன்றிருப்பதாக அவன் தீர்மானித்தான். அவர்கள் சகவாசத்திற்கும் அவள் ஏற்படுத்திய சில நிபந்தனைகள் அதில் பரமரகசியம் ஒன்றிருப்பதாகச் சூசிப்பித்தன. வாரத்தில் ஒருமுறைதான் சந்திக்கவேண்டும். அது வெள்ளிக்கிழமையா யிருக்க வேண்டும். பக்கத்துக் கிராமக்கோவிலில் சந்தியா கால பூஜை மணி அடித்தவுடன் அவள் போய்விட வேண்டும். இவ்விதம் நடந்துவந்ததை அவன் குலகுரு அறிந்து, அது ஒரு பிசாசாயிருக்க வேண்டுமென்றும், அதனுடன் சகவாசஞ்செய்வதால் இம்மை மறுமைகளுக்குத் தீங்கு நேரிடுமென்றும், சொல்லித் தன்னுடைய அபிப்பிராயத்தை வற்புறுத்தி நிலைநிறுத்தமோகினியுடன் சம்பந்தமுடையவர்கள் பட்டபாடுகளைக் காட்டப் புராணங்களிலும் கதைகளிலுமிருந்து அத்தாட்சிகள் கூறி, குறித்த நாழிகைக்குமேல் கொஞ்சம் தாழ்ந்தால் அப்பிசாசின் மெய்யுருவம் வெளிப்படுமொகையால் அவ்விதம் செய்து பரீக்ஷிக்க வேண்டுமென்று சொன்னான். தன் குரு எதிர்பார்ப்பது நடக்கமாட்டாதென்கிற நம்பிக்கை அவனுக்கிருந்தாலும், அப்படிச் செய்வதால் யாது நேரிடுமென்பதை யறியும் ஆசையால் அப்புனபதி அதற்கிணங்கினன்.

குறித்த காலத்தில் வழக்கம்போல் ஒருநாள் தலைவனும் தலைவியும் சந்தித்தார்கள். முன்செய்த ஏற்பாட்டுப்படி காலசந்தி மணியடிக்கச் சிறிது காலம் தாமதித்தது. அப்பொழுது அம்மோகினியின் வெளித்தோற்றம் மாறுதலடையாவிட்டாலும், திடீரென்று ஏங்கிச் சத்தமிட்டெழுந்து, தலைவன் தன்னைத் தழுவியிருந்ததை நீக்கிக்கொண்டு, தான் போவதாயும் திரும்பி வரப்போகிறதில்லையென்றுஞ் சொல்லி அவ்வூற்றில் முழுகிக் கண்ணுக்குத் தோற்றாமல் மறைந்தனள். அவளதில் இறங்கவே இரத்தத்தால் சிவப்பாகிய நீர்க்குமிழிகள் தோன்ற, மனந்தடுமாறி அந்தப் பிரபு தன்னுடைய ஆய்ந்தறியாத அவிவேகச்செய்கையால் அத்புதமும் இரகசியமுமான அப்பெண்மணி இறந்தனளென்று கண்டான். அவள் ஸௌந்தரியத்தைப்பற்றி ஞாபகமும் தான் செய்ததைப்பற்றிய அனுதாபமும் அவனை வருத்த, அதற்கு இரண்டொரு மாதங்களுக்குள் ஒரு யுத்தத்தில் அவன் தன்னுயிரைத் துறந்து அதற்குப் பிராயச்சித்தஞ் செய்தவனானன். ஆனல் அவனிறப்பதற்கு முன்னமேயே தன் காதலியின் ஞாபகார்த்தமாக அவள் வாசஸ்தலமாகத் தோற்றிய அப்புனித ஊற்றை மற்றவர்கள் தொட்டு அசுத்தமும் அழுக்குமாக்காதபடி அழகான ஒரு கட்டடம் கட்டி அதைப் பத்திரப்படுத்தினன். அக்கட்டடம் உடைந்த துண்டுகள்தான் இப்பொழுது பக்கத்தில் சிதறிக் கிடந்தவை. அதுவே புனபதி வமிச நாசத்திற்கு அங்குரார்ப்பணமாயிற்று.

அவ்வூற்றைப்பற்றிச் சாதாரணமாகச் சொல்லுகிற கதை இது. அவனுக்குத் தன்னிடத்தில் ஆசையில்லை என்ற சங்கையால் அவளைக் கொன்று அவன் அதில் எறிந்ததாகக் கூறுவர் சிலர். சிலர் அது அன்னிய சமயத்தவரின் கட்டுக்கதை யென்றனர். ஆனல் அது புனபதி வமிசத்தினர்க்கு ஆபத்து ஸ்தலமென்றும், அதன் சமீபத்தில் போவதும் அவ்வூற்றுச்சலத்தைக் குடிப்பதும் அவர்களுக்கு அனிஷ்ட சூசகமென்றும் சகலரும் சொன்னர்கள்.

இந்த அமங்கல இடத்தில், இறந்தவள்போல் அதிக நேரம் மூர்ச்சையற்றிருந்த கல்யாணி மயக்கம் தெளிந்தாள். சீரணமாயிருந்த சுவரின் ஒரு பக்கத்தில் அவள் முதுகைச் சாத்திவைத்திருந்தது. மயக்கம் நீங்க அவளைப் பாதுகாத்துக்கொண்டு நின்றவன் தெளித்த அபரிமிதமான தண்ணீரால் நனைந்திருந்த ஆடைநீர்சொட்டிக்கொண்டு அவளுடைய அழகிய மிருதுவான மேனியில் ஒட்டியிருந்தது.

அவளுக்கு ஸ்மரணையுண்டானதும், தன் மூர்ச்சைக்குக் காரணமாகிய அபாயம் ஞாபகத்திற்கு வந்தது.

* An adaptation of Sir Walter Scott's **Bride of Lammermore.**

வரவே தன் பிதாவைப்பற்றிய ஸ்மாரகமுண்டாயிற்று. சுற்றிப்பார்த்தாள். அவனைக்காணவில்லை. "என் பிதா, என் பிதா" என்று சொல்ல மாத்திரமே அவளால் முடிந்தது. "வீரசேனன் சௌக்கியம். க்ஷேமமாயிருக்கிறான். சற்று நேரத்தில் உன்னிடம் வந்து சேருவான்" என்று ஒரு அன்னியன் பக்கத்தில் நின்று சொல்வதைக் கேட்டாள்.

"நிச்சயந்தானா! அந்தக் காளை எங்களுக்கு அதிகச் சமீபத்தில் வந்திருந்தது. என்னைத்தடுக்காதே. என் தகப்பனைத் தேட நான் போகவேண்டும்" என்று சொல்லிக் கல்யாணி எழுந்தாள். ஆனால் தான் நினைத்ததை முடிக்கப் போதுமான பலமில்லாதிருந்ததால் அவள் சாய்ந்திருந்த கற்சுவரில் விழுந்து காயப்படாமலிருக்க, அவள் பக்கத்திலிருந்த அன்னியன் அவளைத் தன் கைகளில் ஏந்திக்கொள்ளாமலிருக்க முடியவில்லை. ஆகிலும் அழகுள்ள ஒரு பெண்ணுக்கு அபாயம் வாராமல் ஒரு வாலிபன் இடை விலக்குகையில் சாதாரணமாயுண்டாகாத க்ஷணிக அப்பிரியத்துடன் அவன் அவளை ஏந்தினான். ஏனெனில் திடகாத்திரனாகிய அவ்வாலிபன் அற்பமாகிய அவளைத் தூக்கமுடியாதவன் போல, ஒரு நிமிஷங்கூட அவளைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டிருக்க வேண்டுமென்ற மோகம் சற்றுமற்றவனாய் அவள் முன்னிருந்த கல்லின்மேல் அவளைச் சடக்கென வைத்துவிட்டுச் சில அடிதூரத்தில் நின்றுகொண்டு "வீரசேனன் க்ஷேமமாயிருக்கிறான். இப்பொழுதே இங்கே வருவான். அவனுக்காக நீ வருந்தவேண்டாம். நல்லூழினால் ஆச்சரியமாக அவன் காப்பாற்றப்பட்டான். நீ அதிகமாகக் களைத்திருக்கிறாய். என்னிலும் அதிகத் தகுதியான உதவி வருகிறவரை நீ எழுந்திருக்க நினைக்கக்கூடாது" என்று மறுபடியும் பரபரப்புடன் சொன்னான்.

அப்பொழுது பூரணமான போதம் திரும்பி வந்துவிட்ட கல்யாணி திரும்பி அன்னியனைக் கவனமாகப் பார்க்க இயற்கையாய் நேரிட்டது. ஆசிரயம் அவசியமான ஒரு கன்னிகைக்குக் கைகொடுத்துதவ மனமற்றவனுக்கவாவது அல்லது அவனுடைய சகாயத்தை அவள் மறுதலிக்கத் தூண்டக்கூடிய தோற்றமாவது அவனிடத்திலில்லை. அவன் தரித்திருந்த வேட்டையுடுப்பால் அவன் பெரிய அந்தஸ்துள்ள வமிசத்தனென்று தெரிந்தது. தலையில் போட்டிருந்த குல்லா முகத்தை அநேகமாக மூடியிருப்பினும், சற்றுக் கடுகடுத்த முகமும், அழகும், லாவண்யமும், கம்பீரமுமுடைய தேகமும் உடையவனென்று கண்டாள். இராசபமான மனச்சஞ்சலத்தினாலோ அல்லது எப்பொழுதும் மனவெறுப்புச் சிந்தையிலிருப்பதாலோ வாலிபத்தின் முககாந்தியும் கபடமற்ற உல்லாசமும் ஜ்வலிக்க வேண்டிய அவன் முகம் பொலிவிழந்திருந்தது. அவன் முகத்தைப் பார்த்தால் அவனிடத்தில் கருணை அல்லது பயபக்தி அல்லது சந்தேகம் அல்லது வினோதம் தோன்றாமலிராது.

விவரிக்க இவ்வளவு நேரஞ் சென்ற சாயலைக் கல்யாணி ஒரு நிமிஷம் பார்த்தவுடன் தெரிந்துகொண்டாள். அந்த அயலவனுடைய கண்களை அவள் கண்கள் சந்தித்தவுடன் நாணத்தாலும் பயத்தாலும் தரையை நோக்கித் தலைகவிழ்ந்து நின்றாள். ஆனாலும் பேசவேண்டிய அவசரமிருந்தது. அல்லது அவள் அவசரமிருப்பதாக நினைத்தாள். பதறிய பேச்சுடன் தன்னையும் தன் பிதாவையும் காப்பாற்றின மகா புருஷன் அவனாகத்தானிருக்கவேண்டுமென்ற நிச்சயத்துடன் தன்னுடைய ஆச்சரியமான இரட்சண்யத்தைப் பற்றிச்சொல்லத்தொடங்கினாள்.

நன்றியறிதலைக் காட்டும் அவள் வார்த்தைகளைக் கேட்கக் கூசியவனைப்போல் சடக்கென "அம்மா! உன்னைக் குலதேவதையாக மதிக்கக்கூடியவர்களின் ஆதரவுக்குள் உன்னை விடுகிறேன்" என்று கடுஞ்சொல்லாகாவிட்டாலும் கண்டிப்புடனும் ஆனால் அதிக இனிமையாயும் பதில் சொன்னான்.

அவன் மறுமொழியின் உபயார்த்தத்தைக் கண்டு ஆச்சரியமடைந்து கபடமும் நடிப்புமில்லாத க்ருதஜ்ஞதையுடன் தன்னைக் காப்பாற்றினவனுக்குப் பிழை செய்தல் என்கிற எண்ணத்தை வெறுத்தவளாய், "எங்களுக்கு நீர்செய்த நன்றிக்காக உமக்கு நான் வந்தனம் அளித்த வார்த்தைகள் உசிதமாகவில்லைபோலிருக்கின்றன. நான் சொன்னவை எனக்கு ஞாபகமில்லை. அப்படித்தானிருந்திருக்கவேண்டும். என்னுடைய பிதா, மந்திரி, வருகிறவரை இருந்து அவனுமக்கு வந்தனமளித்து உமது பெயரை அவன் தெரிந்துகொள்ள இடம்கொடுக்க விரும்புகிறேன்" என்றாள்.

"என் பெயர் அவசியமில்லை. உன் பிதா—இல்லை, வீரசேனன்—கூடிய சீக்கிரத்தில் அதைத் தெரிவதால் எவ்வளவு பிரியப்படுவானோ அவ்வளவும் பெரும்படி தெரிந்துகொள்ளுவான்" என்றான்.

"நீர் அவன் விஷயத்தில் தப்பபிப்பிராயம் கொண்டிருக்கிறீர். தனக்காகவும் எனக்காகவும் அவனும்மி

டத்தில் நன்றியறிதலுள்ளவனுக விருப்பான். உமக்கு என் பிதாவைப்பற்றித் தெரியாது. அல்லது அவன் அம்மிருகத்தின் கோபத்திற்கு ஆளாயிருக்க அவன் சுகமாயிருக்கிருனென்று கதைசொல்லி என்னைவஞ்சிக்கிறீர்" என்றுள்.

இந்த எண்ண முதித்தவுடன், தரையிலிருந்து குதித்தெழுந்து ஆபத்து நேர்ந்த சோலையை நோக்கிச் செல்ல முயன்றுள். அவளுக்குதவி செய்ய விருப்பம் ஒருபக்கத்திலும் அவளிஷ்டம்போல் அவளை விட்டு விடப் பிரியம் மற்றொரு பக்கத்திலும் அவனை இழுக்க அவன் கொஞ்சம் தாமதிக்கிறதாகத் தோற்றினுலும், சாதாரண பூததயையால் அவன் அவளைப் போகக் கூடாதென்று பிரார்த்தித்துத் தடையுஞ் செய்தான்.

"அம்மா! உயர்குலப் பிறப்பையுடைய நான் ஆணை யிடுகிறேன். நான் சொல்வது உண்மையே. உன் பிதா க்ஷேமமா யிருக்கிருர். காட்டுமிருகங்கள் மேய்ந்த இடத்திற்குப் போக நீ முயன்றுல் பெரிய அபாயத்திற் குள்ளாவாய்" என்றுன். அவன் சொன்னதையும் கவனியாமல் அவள்போக ஆரம்பித்த பொழுது "நீ போகத்தான் போகிருயானுல், உனக்கு ஊன்றுகோலாக நானிருப்பது அதிக உசிதமில்லை யானுலும் என் கையைப் பிடித்துக்கொண்டு நட" என்றுன்.

அவன் சொன்ன சூசனையைக் கவனியாமல் அவனுடைய வார்த்தையைப் பிடித்துக்கொண்டு "நீர் ஒரு ஆண்பிள்ளையானுல், குலீனரானுல் என் பிதாவைக் கண்டுபிடிக்க எனக்கு உதவி செய்யும். நீர் என்னை விட்டுப்போகக்கூடாது. என்கூடப் போகவேண்டும். நாமிங்கே பேசிக்கொண்டிருக்கையில் அவன் ஒரு வேளை அங்கே இறந்துகொண்டிருப்பான்" என்றுள்.

நியாயம் சொல்லுவதையும் மன்னிப்புக் கேட்பதையும் அங்கீகரியாமல் அன்னியன் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண் டெழுந்தாள். அந்த ஆதாரமில்லாவிட்டால் அவளால் நடக்கமுடியாது. அவன் தன்னை விட்டுவிட்டுப் போகாமலிருக்க அவன் கையைப் பிடித்திழுத்துக்கொண்டு அவள் போகையில், முனியம்மாளுடைய வேலைக்காரியும் தான் உதவிக்காக அழைத்து வந்த இரண்டு மரம்வெட்டுகிறவர்களும் தன்னைப் பின்தொடர வீரசேனன் அங்கே வந்தான். தன் கையில் பழக்கமாகத் தொங்கிக்கொண்டு வருவதுபோல் அயலான் ஒருவன் கையில் தன் மகள் தொங்கிக்கொண்டு வருவதைக் கண்டால் அவனுக்கு மற்ற காலங்களி லுண்டாயிருக்கக்கூடிய பிரமிப்பை அப்பொழுது அவளைக் கண்டவுடன் ஜனித்த சந்தோஷம் வென்றது. ஆனந்தத்துடன் அவளைக் கட்டித் தழுவிக்கொண்டு "கல்யாணி! என் கண்ணே! தப்பிப்பிழைத்தாயா" என்று கேட்கத்தான் அவனுல் முடிந்தது.

"சுவாமி கிருபை செய்தார். நான் க்ஷேமமாயிருக்கிறேன். நீரும் க்ஷேமமாயிருக்கிறதைக் கண்டு எனக்கு அதிகப் பூரிப்புண்டாகிறது. ஆனுல் இந்தக் கனவான் என்னைப்பற்றி என்ன நினைப்பார்" என்று சொல்லி அவன் கையை விட்டுவிட்டு ஒதுங்கிநின்றுள். உடனே அவள் முகக்குறியால் தான் உதவியைப் பிரார்த்தித்துக் கட்டாயப்படுத்திய சுவாதீனத்தை எண்ணி நாணினுளென்பது விசதமாயிற்று.

"தன்தேகபலத்தாலும் மனத்திடத்தாலும் என் குழந்தையின் பிராணனையும் என் பிராணனையும் காப்பாற்றி, ஒரு மனிதன் மற்றொருவனுக்குச் செய்யக்கூடிய அதிக மேலான உதவிசெய்த அம்மகா புருஷனுக்கு மிக்க நன்றியறிதலுடையவனு யிருக்கிறேனென்று நான் வற்புறுத்திக் கூறுவதால் அவருக்கு நாம்கொடுத்த தொந்தரைக்காக அவர் பச்சாத்தாபப்படமாட்டாரென்று நம்புகிறேன். நாம் அவரை ஒன்று பிரார்த்திப்போம்......" என்றுன்.

"பிரபுவே! என்னிடத்தி லொன்றும் பிரார்த்திக்க வேண்டாம். நான் புனபதி" என்று கண்டிப்பாயும் திட்டமாயும் சொன்னுன்.

ஆச்சரியத்தால் ஒருவரும் பேசவில்லை. சித்த விகாரங்களுண்டாயின. மாதவன் தன்னுடையால் தன்னை மூடிக்கொண்டு நன்றுய் வெளிக்குக் கேட்காததும் அப்பிரியமாகப் பேசப்பட்டதுமான சில உபசார வார்த்தைகளைக் கல்யாணியிருந்த பக்கந் திரும்பி முணுமுணுத்துவிட்டு அவர்களை விட்டுத் திரும்பி உடனே சோலைக்குள் சென்று மறைந்தான்.

தனக்குண்டாகிய க்ஷணிகமான ஆச்சரியம் நீங்கியவுடன் "புனபதியா! அவர் பின்னுலே ஓடுங்கள். அவரை நிறுத்துங்கள். ஒரு நிமிஷம் என்னுடன் பேசும்படி அவரைப்பிரார்த்திபுங்கள்" என்று வீரசேனன் சொன்னுன்.

உடனே இரண்டு காட்டாட்களும் அவனைத் தேடி ஓடினுர்கள். அவர்கள் சீக்கிரம் திரும்பவந்து குழப்பத்துடனும் அவலக்ஷணமாயும் அவன் திரும்ப வரமாட்டேனென்று சொல்லிவிட்டான் என்றுர்கள்

வீரசேனன் அவர்களிலொருவனைத்தனியே அழைத்துப் புனபதி என்ன சொன்னுனென்று விபரமாய்க் கேட்டான்.

இனிமையில்லாத சங்கதியைச் சொல்லப் பிரியப்படாத அந்த மனிதன் அவன் திரும்பிவரமாட்டேனென்று சொன்னுனென்று மாத்திரம் சாவதானமாகச் சொன்னுன்.

"இல்லை. அவன் அதிகம் சொல்லியிருக்கிருன். அதென்னவென்று எனக்குத் தெரியவேண்டும். ஒளியாமல் சொல்" என்ருன்.

"ஐயா! அவன் என்னவோ சொன்னுன். அதைக் கேட்டால் தங்களுக்குப் பிரியமாயிருக்க மாட்டாது. ஆனல் அவன் ஒரு தீங்கும் கருதவில்லை என்று நான் உறுதியாகச் சொல்வேன்" என்று கீழே குனிந்து கொண்டு அந்த வேடன் சொன்னுன்.

"அது உனக்கென்ன! அவன் சொன்ன அதே வார்த்தைகளையே கேட்கப் பிரியப்படுகிறேன்" என்று வீரசேனன் சொன்னுன்.

"சரிதான். அவனும் நானும் இனிச் சந்திக்க நேரிடும் காலத்தில் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிவதாலுண்டாகக் கூடிய அவ்வளவு சந்தோஷம் நாங்கள் சந்திப்பதால் அவன் அடைய மாட்டானென்று வீரசேனனுக்குச் சொல் என்று சொன்னுன்" என்ருன்.

"சரிசரி! இராஜாளிப் பந்தயத்தில் நாங்கள் வைத்திருக்கிற சபதத்தைக் குறித்துச் சொன்னுனென்று நினைக்கிறேன். அதனல் ஒன்றுமில்லை" என்று வீரசேனன் சொல்லிவிட்டுத் தன் மகளைத் திரும்பிப்பார்த்தான். அதுவரை வீட்டிற்கு நடந்துபோகக் கூடிய தைரியம் அவளுக்குண்டாயிற்று. ஆனல் எல்லாச் சங்கதிகளும் அவள் மனத்தில் பதியக்கூடிய தன்மையுடையவளாகையால், அப்பொழுது கண்ட பயங்கரமான காட்சிகளெல்லாம் அவள் ஞாபகத்தில் நன்ருய்ப் பதிந்து, தேகத்தில் நரம்புத் தளர்ச்சியாலுண்டான கெடுதியிலும், அதிகக் கெடுதியை அவள் மனதிலுண்டாக்கின. கனவிலும் நனவிலும் பயத்தினுலுண்டாகும் தோற்றங்கள் அந்த உக்கிரமான மிருகத்தின் உருவத்தையும் ஓடிவரும்பொழுது அது செய்த பயங்கரமான தொனியையும் அவளுக்கு ஞாபகப்படுத்தின. தனக்கும் நிச்சயமாகத் தனக்கு நேரிடக் கூடியதாயிருந்த மரணத்திற்கும் மத்தியில் தோற்றியது முகத்திலும் வடிவிலும் பிறப்பின் மேன்மையும் கவுரவமும் பிரகாசித்துக்கொண்டிருந்த மாதவன் உருவமே. ஒரே மனிதனைப்பற்றி, அதிலும் அனுகூலமாகிய ஒரே மனிதனைப்பற்றி, அடிக்கடி நினைக்க நேரிடுவது ஒரு கன்னிகைக்கு அபாயகரமானதே.ஆனல் கல்யாணி யிருந்த நிலைமையால் அந்நினைவு விலக்க வொண்ணுததாயிருந்தது. மாதவனைப்போல் ஆச்சரியமும் அசாதாரணமுமான சாயல்களும் நடையுமுடைய வேறெருவ வாலிபனை அவள் பார்த்ததேயில்லை. அவைகளில் அவனுக்கு ஒப்பும் உயர்வுமுள்ள ஆயிரம் பேரை பார்த்தாலும், ஆபத்து, அதன் விமோசனம், நன்றியறிதல், ஆச்சர்யம், விநோதம் இவைகளின் ஞாபகம் அவர்களொருவரிடத்திலுமுண்டாகாது. அவனுடைய வடிவழகுக்கும் நடை அழகுக்கும் தகுதியற்ற ஆச்சரியமான அசாதாரண அடக்கமும் சமயோசித உபசாரணையின்மையும் அவள் மனதில் அவன் ஞாபகம் பதியக் காரணமானதால் "விநோதம்" என்று கூறப்பட்டது. மாதவனைப்பற்றியும் அவனுக்கும் தன் தகப்பனுக்குமுள்ள விவாதங்களைக் குறித்தும் கல்யாணிக்கு ஒன்றும் தெரியாது. அவ்விவாதங்களாலுண்டாகிய கோபமும் மனக்கசப்பும் அவள் சாந்தையாகையால் அவளுக்குத் தோற்றியே யிருக்கமாட்டா. ஆனல் அவன் மேன்மையான குலத்திற் பிறந்தவனென்றும் கவுரவமும் செல்வமுமுள்ள வமிசத்தில் ஜனித்தாலும் ஏழையாய்ப் போய்விட்டானென்றும் அவளுக்குத் தெரியும். தன் பிதாவின் அரண்மனையையும் இராச்சியத்தையும் புதிதாயடைந்தவன் காட்டப்போன நன்றியறிதலை வெறுத்து விலக்கிய பெருமை வாய்ந்த அவன் மன நிலையை மெச்சி அனுதாபங்கொண்டாள். அதைத்தான் அறிந்துகொண்டாள். முரடர்களின் கோபத்தைச் சமனஞ் செய்ய உபயோகிக்க ஸ்திரீகள் நன்ருயறிந்திருக்கிற மனேகர வியாபாரங்கள் போன்றவைகளால் மனம் கரையும்படியும் அதிகச் சாந்தமாயும், சாவதானமாயும் தன் தகப்பன் அவனைப் பிரார்த்தித்திருந்தால், ஒருவரையொருவர் நன்ருயறிந்து நண்பர்களாவதை மாதவன் விலக்கியிருப்பானு என்ற கேள்வி அவள் மனத்திலுண்டாகிய, அபாயமான கேள்வி. அந்த எண்ணமும் அபாயம், அதனல் விளையும் பயனும் அபாயம்.

தோட்டாற் சுருங்கிபோலிருக்கும் கன்னிகைகளுக்கு அபாயகரமான மனமயக்கத்தில் கல்யாணி யிருந்தாள். வேறிடங்களுக்குச் சென்று, அந்த முகத்தைத் திரும்பிப் பாராமல் புதுமுகங்களைப் பார்த்துக்கொண்டு சில காலஞ் சென்றால், சிலர் விஷயத்தில் நேர்வதுபோல இவளுக்கும் அம்மயக்கம் ஒழிந்திருக்கலாம் என்பதுண்மையே. ஆனால் அவள் அதே இடத்திலிருந்தாள். அவள் மயக்கம் மாற வேறு விஷயங்களுமில்லை. அவள் தாய் வீரசேனை இராஜதானியிலிருந்தாள். அவள் தகப்பன் ஜனங்களுடன் சாதாரணமாகக் கலந்து திரிபவனல்ல. படாடோபத்திற்காகவும் காரியாநுகூலத்திற்காகவும் சிலவேளை சிலரை வீட்டிற்கழைக்கிறதுண்டு. ஆகையால் கவுரவமுள்ள மற்றக் கனவான்களைப் பார்க்க மார்க்கமில்லாததால் கல்யாணியின் மனத்திற் குடிகொண்ட மாதவனுருவத்தை ஒத்து மற்றொன்று தோன்ற இடமில்லை.

இந்நிலையிலிருக்கையில், அவிவேகத்தால் தன் மனத்தை விட்டகலாமலிருக்கும்படி தான் விட்டுவிட்ட சங்கதியைப்பற்றிப் பேசச் செய்யலாமென்று நம்பி அடிக்கடி முனியம்மாள் வீட்டிற்குக் கல்யாணி சென்றாள். ஆனால் அவள் அபீஷ்டத்தை இவ்விஷயத்தில் அவள் பூர்த்தி செய்யவில்லை. அவனுடைய குடும்ப விஷயத்தைப்பற்றிக் கிழவி அடிக்கடி மனக்கசிவுடன் பேசுவாள். ஆனால் மாதவனைப்பற்றி அதிகம் பேசுகிறதில்லை. பேசின சில வார்த்தைகளும் கல்யாணி எதிர்பார்த்த அளவு அனுகூலமாகவுமில்லை. அவன் கடுமையும் பகை சாதிக்கிற குணமு முடையவனென்றும் தனக்குச் செய்த தீங்கை மன்னிக்காமல் சலம் சாதிக்கிறவனென்றும் சூசிப்பித்தாள். இதையும், தன் தகப்பனிடத்தில் மாதவனைப்பற்றி ஜாக்ரதையாயிரு" என்று சொன்னதையும் சேர்த்து யோசித்துக் கல்யாணி அதிக பயத்துடனிருந்தாள்.

ஆனால் முனியம்மாள் அப்படி எச்சரித்த கொஞ்ச நேரத்தில் அவன் தன் பிதாவினுயிரையும் தன்னுயிரையும் தப்பவைத்தானது அவன் களங்கமற்றவனென்று காட்டுகிறது. முனியம்மாள் சொல்லுகிறபடி அவன் பழிவாங்கவேண்டு மென்னும் எண்ணமுடையவனா யிருந்தால் அதை நிறைவேற்ற வேறொன்றும் செய்யவேண்டியதில்லையே. காலோசிதமும் நல்முடிவு முடையதாகிய அவனுதவியை ஒரு க்ஷணநேரம் செய்யாமலிருந்திருந்தால் அவனென்றும் செய்யாமலே அவன் கோபத்திற் கிலக்கானவன் பயங்கரமான மரணத்தை நிச்சயமாக அடைந்திருப்பானே. ஆகையால் இரகசியமான தப்பெண்ணத்தினாலோ அல்லது கிழத்தனத்தாலும் துரதிர்ஷ்டத்தாலு முண்டாகும் சந்தேகத்தாலோ முனி இப்படிச் சொன்னாளென்றும் அது மாதவனுடைய கருணை நடைக்கும் கம்பீர சுபாவத்திற்கும் தகுதியற்றதென்றும் கல்யாணி எண்ணினாள். இந்த எண்ணத்தில் முழுநம்பிக்கை யுடையவளாய் அதிகாலையில் சூரிய ரச்மியில் முத்துப்போல் பிரகாசிக்கிற பனித்துளிகளையுடைய அழகி ஆனால் சற்று நேரத்தில் ஒழிந்துபோகிற சிலம்பி நூல்வலைபோல், கல்யாணியும் பின் அடைய எண்ணும் சுகானுபவங்களையெல்லாம் தன் மனத்தில் வீணான மனோராச்சியஞ் செய்து ஆனந்த மடைந்துகொண்டிருந்தாள்.

அவள் தகப்பனும், மாதவனும், நடந்த விசித்திரமான சங்கதியைப்பற்றி அடிக்கடி ஆழ்ந்து யோசனை செய்துகொண்டிருந்தார்கள். வீட்டிற்கு வந்தவுடன் வீரசேனனுக்கு முதல்வேலை வைத்தியனை அழைத்து நேர்ந்த அபாயமும் பயங்கரமுமான நிலையினால் தன் மகளுக்குக் கெடுதி ஒன்றும் சம்பவிக்கவில்லையா என்பதைப்பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்வதாயிருந்தது. அது நிச்சயமானவுடன், காலஞ்சென்ற புனபதியின் கருமகைங்கரிய காலத்தில் நடந்த விஷயத்தைப்பற்றித் தான் முன்னெழுதி வைத்திருந்த "யாதாஸ்தை"த் திருத்த ஆரம்பித்தான். மெய் பொய்களை மாறாட்டும் சாமார்த்தியத்தில் வளர்ந்து, எந்தக் கக்ஷிக்காக "வக்காலத்து" வாங்குகிறானோ அந்தக் கக்ஷி ஜயிக்கவேண்டிய அகடவிடங்களில் கை பழகிய ஒரு வக்கீல் அவனாகையால் முதலில் உண்மைக்கதிகமாகப் பாராட்ட நினைத்த கலகத்தைக்குறைத்து அமுக்கியமாகக் காட்டுவது அவனுக்கொரு தொந்தரையான வேலையாகவில்லை. உலகப்பழக்கம் குறைந்த கோபிகளான வாலிபர் விஷயத்தில் சாமோபாயங்களைக் கைக்கொள்ளவேண்டிய அவசியத்தை சஹகாரிகளான மந்திரிகளுக்குப் போதித்தான். அந்த வேலைக்காக நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தன் நடத்தை அனுவசியமாகக் கோபமூட்டக்கூடியதாயிருந்த தென்பதையும் எழுதாமல் விடவில்லை. இது அவன் பயிரங்கமாக எழுதிய யாதாஸ்து. இதுவிஷயத்தில் நடவடிக்கை

கள் நடத்தவேண்டிய தனது சொந்த நண்பர்களுக்கு அனுப்பிய கடிதங்களில் அதிலும் அதிக அனுகூல மாகவே எழுதியிருந்தான். கரும கைங்கரியத்தில் சாதாரணமாக ஜனங்களுக்குள்ள பயபக்தியையும் பூஜ்யதையையும் அனுசரித்து, தன் தகப்பனுடைய கைங்கர்யத்திற்கு இடையூறுண்டாகாமல் செய்ததற்காக மாதவனைக் கண்டிப்பதை ஒருவரும் பிரியப்படமாட்டார்களாகையால், அவனுக்குத் தயைசெய்வது காரியசாதகமாயும் லோகரஞ்சிதமாயு மிருக்குமென்று காட்டினன். கடைசியாக இவ்விஷயத்தில் கடினமான நடவடிக்கை நடத்தக்கூடாதென்பது தன்னுடைய முக்கிய வேண்டுகோளென்று தயாளமும் பெருந்தன்மையுமுடையவன்போல் எழுதினன். ஒரு காலத்தில் கவுரவமா யிருந்த அந்தச் சமஸ்தானம் தற்கால நிலைக்கு வரக்காரணமாகிய நீடித்த வியாச்சியங்களில் தான் ஜயித்ததால் அவர்கள் விஷயத்தில் தானிருக்கிற ஸ்திதியைச் சாதுர்யமாகச் சூசிப்பித்து, தான் நியாயமாயும் சட்டப்படிக்கும் தன் பாத்தியதையை ஸ்தாபித்தாலும் தன்னல் அக்குடும்பத்திற்குண்டான பிரதிகூலத்திற்குப் பிரதிபலன் அளிக்க மார்க்கமிருந்தால் அது தனக்கு அதிகத் திருப்தியாயிருக்குமென்றும் ஒத்துக்கொண்டான். ஆகையால் அது காரணமாக வேருெரு கெடுதியும் விளையக்கூடாதென்பது தன் சொந்தமான முக்கிய பிரார்த்தனையென்றும், தன்னுடைய அனுகூலமான எழுத்தாலும் மத்யஸ்தத்தாலும் அது நன்மையாக முடிந்ததென்னும் பெருமை தனக்குக் கிடைக்க வேணுமென்றும் குறிப்பித்தான். இந்தக் குழப்பத்தைப் பற்றித் தன் மனைவிக்கு அவனெழுதாமலிருந்தது ஆச்சரியம். ஒரு காட்மோட்டால் கல்யாணிக்குண்டான பயத்தைப் பற்றி எழுதினவன் விநோதமும் பயங்கரமுமான இச் சம்பவத்தைப்பற்றி விவரமாய் எழுதவேயில்லை.

தாங்களெதிர்பாராத விதத்தில் வந்த கடிதங்களைக் குறித்து, மற்றைய மந்திரிகளுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. ஒருவரோடொருவர் கலந்து பேசி, ஒருவர் சிரித்தார். ஒருவர் புருவத்தை நெறித்தார். ஒருவர் ஆச்சரியந்தானென்ருர். மற்ருெருவர் "இவ்வளவு தானு அவர் கடிதங்கள். இவ்வளவு கடிதங்களிலும் சங்கதியின் மூலம் வெளிப்படவில்லையே. என்ன ஆச்சரியம்" என்ருர்.

வேறு கடிதங்களிருக்குமென்று அக்கேள்வியால் யூகிக்க வேண்டியிருந்தாலும் அவைகளுக்கு எதிராக வேறு காகிதங்கள் வரவில்லை.

தலை நரைத்த ஒரு கிழமந்திரி "சரிதான். ஆட்டுத்தோல் சந்தைக்கு வந்ததுபோல் குட்டியின் தோலும் வரும் என்பதை வீரசேனன் அறிந்திருப்பானென்றிருந்தேன்" என்ருர்.

"நாம் எதிர்பாராததா யிருந்தாலும் அவனிஷ்டம் போல் விடுவோம்" என்ருர் மற்ருெருவர்.

"பிடிவாதக்காரனுக்குப் பிடித்ததே பிடி" என்ருர் இன்னொருவர்.

"இன்னும் ஒரு வருஷத்தில் தெரியும். மாதவன் அவனை ஆட்டிவைத்து விடுவான்" என்ருர் ஒருவர்.

"ஐயோ! அந்த ஏழை வாலிபனல் என்னசெய்ய முடியும். எல்லாவற்றையும் வீரசேனன் பிடுங்கிக் கொண்டானே" என்ருர் மற்ருெருவர்.

"ஆஸ்தியில்லையானல் ஆளில்லையோ" என்ருர் இன்னுமொருவர்.

"இவ்விதம்பேசுவதில் பயனென்ன. அவன் நினைத்தபடி செய்யட்டும்" என்ருர் ஒருத்தர்.

"சரி! நாம் நான்கு பேரிருக்கிருேம். சாகக்கிடக்கும் சாம்பன் பிரபுவையும் சேர்த்து நாம் 5 பேர் பஞ்சாயத்தில் அவ்விதம் தீர்மானித்தோ மென்பதை வீரசேனனுக் கெழுதியனுப்பு" என்று ஒருவர் அங்கே யிருந்த ஒரு உத்தியோகஸ்தனுக்குக் கட்டளையிட்டார்.

"கனவான்களே! அந்தத் திரிதலையான கந்தப்பிரபுவின் சொத்து யாருக்குச் சேருகிறது. பொக்கிஷதாரைச் சேரவேண்டியதுதானே" என்ருர் ஒரு பிரபு.

"சரி சரி. அவர் கொண்டுபோகிறது. நான் ஏமாந்திருக்கிறதா. அது எனக்கென்று வைத்திருக்கிறேன்" என்ருர் மற்ருெரு மந்திரிப்பிரபு.

"கட்டுச்சோற்று மூட்டையை அவிழ்க்குமுன் நாய் வாயை நக்குவது போலிருக்கிறீர். இன்னும் அபராதமே போடவில்லையே" என்ருர் மற்ருெரு பிரபு.

"அதற்கென்ன! "பேனு" வினல் இரண்டிழுப்புத் தானே. சென்ற 30 வருஷங்களாக இராஜாங்கத்திற்குச் செய்யாததெல்லாம் செய்து படாதபாடெல்லாம் பட்டு நல்லது சொன்னுலும் கெட்டது சொன்னுலும் விடாமல் இரவும் பகலுமுழைத்துக் கஷ்டப்பட்டு நாக்கு உலர்பவனுக்கு அப்பொழுதைக் கப்பொழுது தொண்டையை நனைக்கக் கொஞ்சமாவது வேண்டாமா" என்ருர் இன்னொரு மந்திரி.

"ஆம் ஆம்! உம்முடைய தாகத்தைத் தணிக்கப் போதுமானதென்று நாங்கள் நினைத்தாலாவது அல்லது உம்முடைய தொண்டையில் போட்டதை உள்ளே இடித்துத் தள்ளக் கொட்டைக்குச்சு வேண்டியதாக எங்களுக்குத் தெரிந்திருந்தாலாவது அது நியாயந் தான்" என்ருர் மற்ருெரு பிரபு.

அக்காலத்து அமைச்சரின் அழகிருந்தபடி இது!

S. V. கள்ளபிரான் பிள்ளை, பி. ஏ.

## உல்லாஸன் சரிதம்
## ADVENTURES OF ULYSSES
### பத்தாம் அத்தியாயம்
(தொடர்ச்சி)

அந்நா ரின்று நாளை யழிவதற் கைய மில்லை
உன்னா சுனக்கே தந்தே ஞாதி யூழி காலம்
பொன்னரி சுமந்த பீடத் திமையவர் போற்றி செய்ய
மன்னவ னாக யானே சூட்டுவன் மகுட மென்றான்.

பொழுது விடிந்தவுடன் வழக்கம்போலப் போஜனப் பிரியர்களான பிரபுக்கள் அரண்மனைக்கு வந்தார்கள் அங்கு ஆயுதங்களெல்லாம் செவ்வைப்படுத்தி வைத்திருத்தலைக் கண்டு உள்ளுக்குள்ளே பயந்த கனவான்கள் தலைமகனைக் கேட்க அவன் பிதாவின் ஆக்ஞைப்படி "துருப்பிடித்தவைகள் சுத்தஞ்செய்யப்பட்டுள்ளன" வென்றான். மூடர்களான பிரபுக்கள் அவன் சொன்னதை நம்பி வயிற்றுக் காரியத்திற் சாரம்பித்தார்கள். அன்று வழக்கத்துக்கு மாறாக உல்லாஸனுக்குப் பிரத்யேகமாய் ஒரு ஆஸனம் அளிக்கப்பட்டு அதினின்று தன் ஆகாரத்தை யுண்ணும்படி தலைமகன் ஏற்பாடு செய்திருந்தான். பிச்சைக்காரன் பந்தியிலுட்கார்ந்ததைப் பார்த்த பொறாமைக்காரர்கள் மனங் கொதித்தது. அவர்களில் பிலாஷனென்றொருவன் ஜீவ காருண்யமுடையவனா யிருந்தான். இவன் உல்லாஸனிடத்திற் சென்று "முதியோரே, உமது வரவு நல்வரவாகுக. உம்மை, இங்குள்ளார் படுத்திவைத்திருக்கிற பாட்டைக் கண்டு என் மனம் புண்ணாயிற்று. ஊழ் உத்தமரையும் வருத்தாமல் விடுவதில்லை. ஒருகால் உல்லாஸனும் உம்மைப்போல் உலகிலெங்கேயோ உழல்கின்றார். விதிசெய்யும் விபரீதங்களை என்னென்று சொல்வது?" என்று அனுதாபப்பட்டுச் சொன்னான்.

பிச்சைக்காரனை உல்லாஸனுக்கு உவமித்த நிமிஷமே காமப்பேய் பிடித்த பிரபுக்கள் வெறிகொண்டவர் போலக் குலுங்கக் குலுங்க நகைத்து ஆரவாரித்தார்கள். மினேர் வாவின் ஆக்ஞையால் இவர்கள்களிப்பில் அச்சமும் கலந்து நின்றது. இச்சமயத்தில் அவர்களி லொருவன் "உங்களுக்கு வெறி பிடித்ததோ? என் இப்படிச் சிரிக்கின்றீர்கள்? உங்கள் இறைச்சியில் இரத்தம் ஓடுகின்றது பார்த்தீர்களா? பகற்காலம் நள்ளிரவாயிற்றே; ஆரவாரிக்கின்றீர்களே, உங்கள் கண்களில் நீர் பெருகுகின்றதே. கூடம் முழுதிலும் பேய்க்கூட்டமாயிருக்கின்றதே. இந்த இடம் பூதப்பிரேதங்களால் நிரம்பியிருத்தலால் நரகமென்றே சொல்லலாம்," என்றும் தீர்க்கதரிசியைப்போற் பேசினான். மதிகெட்டுப் போன மற்றவர் அவனைப் பரிகவித்து "இவனொரு பைத்தியக்காரன். இவனைக் கடைச்சந்தியில் கொண்டு நிறுத்தல் வேண்டும்" என்றார்கள்.

தீர்க்க தரிசியாய்ப் பேசினவன் யூரிமாகஸ் என்பவனை நோக்கி, "அடா, மூடா, எனக்குக் கண்களும் கால்களுமிருக்கின்றன. வெளியில் ஸ்வயமாகவே போவேன். தைவ ஸம்மதமானதை உங்களுக்குச் சொல்லுதல் கழுதையின் காதில் உபதேசஞ் செய்ததுபோலாயிற்று. உங்களுக்கு நாசம் ஸமீபித்திருப்பதால் மதிகெட்டுப் போனீர்கள். பிச்சைக்காரன் தைவானுக்ரஹம் பெற்றவனென்று நீங்கள் கடிதிலறிவீர்கள்" என்று சொல்லிவிட்டு வெளியிற் போனான்.

சோற்றுப் பிரபுக்கள் உணவுப்பாத்திரங்களில் தீனி பரிமாறப்பட்டவுடன் அத்தீனியில் லக்ஷியம் வைத்து வயிறார வுண்டு களித்திருக்கையில் தலைமகன் மினேர்வாவின் ஏவலினால், "பிரபுக்களே, உங்களுக்கு நான் அறிவிப்பதொன்றுண்டு. என் பிதா உல்லாஸனுடைய வில் இங்குள்ள ஆயுதசாலையில் வெகு காலமாய் நாணேற்றப் படாமலிருக்கின்றது.

'அன்றுமுத லின்றளவு
மாருமிந்தச் சிலையருகு
சென்றுமிலர் போயொளித்தார்
தேர்வேந்தர் திரிந்துமிலர்;

என் தாயை மணம்புரிய நினைப்பவர் இச்சிலையை வளைத்து நாணேற்றிக் குறியில் அம்பு எய்வாராயின் அவரை அவள் அங்கீகரிப்பாள். உங்களிலிஷ்டப்பட்டவர்கள் வில்லை யெடுத்து வளைத்தலாகும்" என்றான்.

தலைமகன் இவ்வாறு பேசின தருணத்தில் பனிலோபியும் ஸர்வாபரண பூஷிதையாய்ச்சபையில்வந்து நின்றனள்.

கொல்லும் வேலுங் கூற்றமு
மென்னும் மிவையெல்லாம்
வெல்லும் வெல்லும் மென்ன
மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லுந் தன்மைத் தன்றது
குன்றுஞ் சுவருந்திண்
கல்லும் புல்லுங் கண்டுரு
கப்பெண் கனிகின்றாள்.

இழைகளுங் குழைகளு மின்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய வெனினு மிப்பாவை தோன்றலால்
அழகெனு மழகுமோ ரழகு பெற்றவே.

சபையிலிருந்தோரை நோக்கிப் பனிலொபி சொன்னதாவது :—" புருஷசிரேஷ்டர்களே, என் பிராணநாதன் ந்ரோஜா நகரஞ் சென்றபொழுதே என்னழகும் போயிற்று. என் மகன் சொன்னபடி எனக்குச் சம்மதம். "

தலைமகன் தன் மாதாவைச் சபையினின்று அந்தப்புரத்திற்குப் போகலாமென்று சொல்ல, அவளும் அப்படியே செய்தாள். உல்லாசனுக்கும் அவன் சத்துருக்களுக்கும் பெரும்போர்விளைவது நிச்சயமாயிருந்ததால் பெண்பாலர் அங்கிருப்பது அயுக்த மென்றெண்ணித் தலைமகன் அவ்வாறு செய்தான்.

அந்தீனன், யூரிமாகஸ் முதலிய பிரபுக்கள் வில்லைத் தூக்கி வளைக்கப் பார்க்கையில் கீழேவீழ்ந்து அவமானப்பட்டனர். உல்லாஸன் தலைமகனைப் பார்த்து, " ராஜகுமாரரே, பிரபுக்கள் பிரயத்தனங்கள் பாழ்த்துப் போயின ; பிச்சைக்காரனை எனக்கு இடங்கொடுப்பீராயின் நான் ஒருகை பார்க்கின்றேன்" என்றான்.

பிரபுக்கள் உல்லாசனைத் திட்டி "உயர்ந்தோர் தொழிலைத் தாழ்ந்தவர் விரும்பல் தகுதியன்று. வில்லைப் பிக்ஷு தொடலுமாகாது" என்று மறுத்தார்கள்.

தலைமகன் "வில் என்னுடையது: எனக்கிஷ்டமானவர் கையிற் கொடுப்பேன். அதைத் தடுக்க ஒருவருக்கும் அதிகாரமில்லை" என்று சொல்லி பிக்ஷுவாகிய உல்லாசனிடத்தில் வில்லைக் கொடுத்தான். வில்லைக் கையிலெடுக்கு முன்னரே ஸபையின் கதவுகளெல்லாம் சாத்தப்பட்டன. பொறியிலகப்பட்ட எலிகள் போலப் பிரபுக்கள் திகைத்து நிற்கையில் உல்லாஸன் வில்லை வளைத்து நாணேற்றிக் குறிவைத்த பொருசாத்தாலடித்துத் தன் மகனை நோக்கி " பிக்ஷு கையில் வில்லைக் கொடுத்ததினுலுமக்குக் குறைவொன்றும் வாமற் பாதுகாத்துவிட்டேன். இனி நம்மிருவருக்கும் வேறு வேலைகளுள ; அவற்றைச் செய்வோம் " எனவே, உல்லாஸன் கருத்தையறிந்த தலைமகன் தன் னாயுதத்தைக் கையிலெடுத்துக் கொண்டான். அப்பனும் மகனுமாய் மஹா பதிவிரதையான பனிலோபியைப் பாணிக்கிரஹணஞ் செய்ய வந்திருந்த பரமசண்டாளர்களை எமனுக்கிரையாக்கிச் சவங்களை வெளிப்படுத்தி ஸ்நானஞ்செய்து உல்லாஸனும் தலைமகனும் ராஜசபைக்குத் திரும்பிவந்தனர். இதற்குள் மணமகர்களாய் வந்திருந்தோரெல்லாரும் பிக்ஷுவினுலும் தலைமகனுலுங் கொல்லப்பட்டாரென்னுஞ் செய்தி பனிலொபியின் காதிற் பட்டு, அதை அவள் நம்பாமல் நேரில் பார்க்க நினைந்து ஸபைக்கு வந்தாள் பிக்ஷு வேஷமாறி உல்லாஸன் தன் ஸ்வரூபத்தை யடைந்து அவன் பக்கலில் தலைமகன் நிற்றலையுங் கண்ட பனிலொபி,

நெஞ்ச மெலிவே னினது தடந்தோளுங்
கஞ்சமலர் முகமுங் காணமல்—எனவும்,
மன்னவனே யிப்பிறப்பிற் கண்டு மணந்திலனேல்
இன்னமொரு பிறப்பி லானுலு மேழையேன்
றன்னந் தனியே யிருந்துதவ மாற்றியுமுன்
பொன்னகல முள்ளுருகப் புல்லுவேன்

எனவும், சொல்லி உல்லாஸனைத் தொழுதுநிற்கையில்,

பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர் தம்முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர் ;
மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினர்.

தலைமகனும் பனிலொபியும் நாட்டிலுள்ளா ரனைவரும் அரசன் வருகையாற் களிகூர்ந்தாரென்று சொல்லவும் வேண்டுமோ ?

நல்வினை யடைந்த காலை நனிநலந் திளைப்பர் நன்மை
யல்வினை யடைந்த காலை யல்லலிற் றுளைவ ரெல்லாந்
தொல்வினை வழிய வாகுந் தோன்றனு பவங்க டந்தம்
புல்வினை யாலென் றெண்ணல் புலமையோ ரிடத்தின் [றாமால்.

உல்லாஸன் சரிதம் முற்றிற்று.

---

ப்ரஹ்மாந்வேஷணம்:—கள்ளனெருவன் ஓர் இருட்டறையினுட் புகுந்து அங்குள்ள பலவகைப் பொருள்களையும் தொட்டுக்கொண்டே போய், மேஜையொன்றின்மேல் தன் கைபட 'ஈதல்ல' வென்று அப்புறம் சென்று, அங்கே நாற்காலி யொன்று கையிற்பட 'இதுவுமல்ல' என்றிவ்வாறு அவ்வறையிலுள்ள வஸ்துக்களையெல்லாம் ஒவ்வொன்ருய்ப் பரிசோதனை செய்து பார்த்து விலக்கி, கடைசியில் ஆஸ்தி நிறைந்த பெட்டியானது அவன் கையில் அகப்பட்டவுடனே 'இதோ இருக்கிறது' என்று சொல்லிக்கொண்டு மகிழ்கின்றான். இதனுடன் அக்கள்ளனது சோதனை முடிந்துவிட்டது. இதைப்போல்தான் ப்ரஹ்மாந்வேஷணமும் (ப்ரஹ்மாந்வேஷணம்—ப்ரஹ்மத்தைத் தேடுதல்,)

## நாகாநந்தம்

## NAGANANDAM : A CLASSICAL DRAMA

கருடன்.—மதியுருக் கண்டதும், மயங்கி நடுங்கி
கதிகுறைந் துரைதரும் கதிர்மணிச் சேடன்
என்பால் ஒடுங்கி பயமுற லேண்மையும்
மன்படு மன்பொடென் முன்னவன் விரிந்து
வானெரிக் கொழுந்து வளர்தர பராஅய்
தான்பெறு சகடுந் தயங்கி
வான்பெற ஒடுங்கி
கிடுகிடுத் தடிபெயர்ந்து கீழ்வீழ்ந் திடருற
படுகதிர் படரெனைப் பார்த்து நடுங்கி; அதான்றி,
வருஉம் வழிதொறும் வளர்முகிற் றொகைதாம்
விரீஇய வென்சிறை வளர்பெற மிசைசெயாஅ
றெய்த லுறங்கப் பெய்பாண் அலைமுழங்கி
தைவரு மலயத் தண்ணிழற் றீண்டு
தவரு அரவூன் அவாவின் நுகர்வான்
வந்தனன் சிறையிருள் வயங்கி
சந்தனத் தருப்பொழி லியாண்டு நிறைத்தே !

நாயகன்.—(ஸந்தோஷத்துடன்)

அருளி லார்க்கிலா அவ்வுடற் றன்னை
அரவைக் காத்திடு மறத்தின் மெய்ம்மையின்
வரும்பிறப் பெஃதினு பெருகவெப் பவத்தினும்
பிறத்தின் பிறர்க்கருள் செம்மையி னுதவவே.

கருடன்.—(நாயகனைப் பார்த்து)

உற்றெனைக்கண் டிற்று ரத்தி
ரத்த மெற்றி கக்கிடா
புற்ற ரைத்த னற்பு யிர்த்தி
டச்செய் கிற்கும் பெட்பினன்
கற்ற லத்த சர்ப்ப னைக்கொற்
செல்லின் கன்றிச் * சுச்சினன்
குற்றி யெற்றி கொத்தி பற்சு
வைத்து துப்பன் ஒல்லினன் !

(நாயகனை அலகால் கவ்விக்கொள்ளல்—நேபத்யத்தில் வாத்யகோஷமும் பூமாரியும் பொழிதல்.)

கருடன்.—(ஆச்சரியத்துடன்) அஹோ ! என்ன பல்லிய முழக்கமிது. என்ன வாத்திய கோஷம் ! என்ன மலர்மாரி ஈது ! (வானத்தைப் பார்த்து செவிசாய்த்து).

தம்மிடை நறுமணந் தார்வண்டிற் களிதர
விம்மி மீமிசை மலர்மழை பெய்வதென்?
வானின் வயங்கு முரசொலி பரந்து
கானெங்கும் விளங்கி கவர்வதென் ?—கண்டனன்
விசைபட வந்தவென் வேகத் தலண்ட
அசைதரு காற்றதே ! அவ்வொலி தானும்,
பொழிநாட் காண உருஉமிடு
பொழிக் கொண்டல் உடற்றன தகைத்தே.

நாயகன்.—(தனக்குள்)

பாக்கியப் பெருக்கின் பலனெனக் கின்று
முடித்ததென் சிந்தையின முடிந்த எண்ணமே.

கருடன்.—(நாயகனை அலகான் பற்றிக்கொண்டு)

நாகரைக் காக்க வாகைக் கொளுமிவ்
வியக்குரு அன்னான் பயிலென் பசிப்பிணி
முற்று மற்றிடச் செயும் மொய்ம்பினன்
பற்றினை விட்ட பாரிய னிவனே !

யான் இந்த நாகனைக் கௌவிக்கொண்டு மலயத்து உச்சியிலுட்கார்ந்து அங்கு என்னிஷ்டப்படி உண்பேன்.

(ஜீமுதவாஹனனைக் கவ்விக்கொண்டு போதல்.)

### களம் 5 அங்கம் 1

### கௌரி ஆலயம்—ஜீமுதகேதுவின் ஆச்ரமம்

(பிரதிஹாரன் வரல்)

பிரதிஹாரன்.—ஆசைக்குகந்தவன் உய்யான வனத்திற்குப் போயினும், அவ்வாசை,கேடுவருமோ என்றுதான் எண்ணச் செய்யும் ; பெருங்காடு சென்றாலோ? அதிலும் துன்பத்திற்கிடமாகி நெருங்கிவிளங்கும் பாழுமாரணியத்துள் போனாலோ? நித்தம்நித்தம் துன்பமடைதலைக் கண்டுகொண்டிருக்குமிடம் போனாலோ?—ஏன்? மனம் கேடு வருமோ என்றெண்ணுதிருக்குமோ ?—அதுதான்—அரசன் விசுவாஸு,ராஜகெம்பீரன்—தன் மருமகன் கடற்கரையிடம் சென்றவர் வாக்காணுது வருந்துகிறார். மனக்கவலை படுகிறார். ஐயோ ! பாவம் என்ன செய்வர் ? என்னை அவர் 'ஸுநந்தா ! நான் என் மருகன் கடலோரம் சென்றதாகக் கேள்விப்பட்டேன். அவ்விடமெங்கும் கருடன் பயமே விளங்குகிறது. அந்த ஸமாசாரம் கேட்டதுமுதல் என் மனம் குமுறுகிறது. வருந்துகிறது. துரிதமாய்ப் போய் அவர் வீடு வந்து சேர்ந்தாரா, இல்லையா என்பதைக் கண்டு வா' என்று பார்த்து சொன்னார். (நடந்து முன் நோக்கி) அகோ ! இதோ ஜீமுதவாஹனரது தந்தை ராஜச்ரேஷ்டன் ஜீமுதகேது தன் மனைவியுடனும் மருமகளுடனும் தன்ஆச்ரமத்தின் வெளிப்புறம் ஜபத்திலமர்ந்திருக்கின்றனர்.மேலும்—மடிப்பு மடிப்பாகக்காற்றில் படர்ந்தலைக்க வெண்ணுரை அசைந்தசைந்தொதுங்குவதுபோல் விளங்கும் வெண்பட்டு முத்தரீயமும் அணிந்துவிளங்க அவர்பால் புனிதவுருவும் ஒழுங்கும் அருவிபோல் பாயும் லாவண்யப்பெருக்கில் கற்பின் பெருக்கு மயங்கி கங்கைப்பெருக்கின் இடையறாது வரும் புண்யத்தொகுதியைத் தலைவனரிட மயங்க விளங்கும் அவர் பத்நியாகிய அரசி தன் தலைவனாகிய அந்த ஜீமுதகேதுவை முன்னீர்த் தலைவனுக்கு ஸமானம் செய்வள். அவன் பக்கிலிருக்கும் இவ்வெள்ளிய மலைய மலையும் கடற்கரையையே சிவனும்—அவனா யான் அடைவன்,

* சுச்சு = பறவைமூக்கு.

# மாணவர் பக்கங்கள்

## STUDENTS' PAGES

## வியாஸ விதானம்

## Essay writing

### IV. ஆராய்ச்சி வியாஸங்கள்

### REFLECTIVE ESSAYS

### இலக்கிய விஷயங்கள்—வேர்ட்ஸ்வோர்த்.

### Literary Subjects—Wordsworth.

குறிப்பு.—முகவுரை : காலம் முதலியன—வாழ்க்கையும் மனோநிலையும் — சிறப்பு — குறைகள்—முடிவுரை : பொது அபிப்பிராயங்கள்.

இங்கிலாந்தில் வடமேற்கு பாகத்திலிருக்கும் மலை ஏரிகள் நிறைந்த ரமணீயமானவிடத்தில் ஸாதாரண நிலையிலுள்ள குடும்பத்தில் பிறந்தவர் இம்மஹா கவி. இம்மாதிரி பிறந்து சிறந்த கற்பனை சக்தியும் அமையப்பெற்றிருந்ததனாலே இவர் மனதில் முதல் முதற்கொண்டே ஒருவிதமான உறுதி குடிகொண்டிருந்தது. இவருக்குக் குடும்பப்பற்றும், ஒருவித தெய்வபக்தியும் இருந்ததால் இந்த உறுதி வீண் அஹங்காரமாக மாறாது அளவுள் அடங்கியே கிடந்தது. இவர் கவி பாடும் நிலைக்கு வருவதற்கு முன்னரே, ஆங்கல நாட்டில் ஒருவிதமான விருத்தத்திலேயே விஷயங்களைப் பொருத்திப் பாடுவதே சிறந்ததென மதிக்கப்பட்டு எல்லோரும் அவ்வாறே பாக்களை மதித்து வந்தனர். பா ஒழுங்குமாத்திரம் மிஞ்சியதே ஒழிய கவிகள் வரவர விஷயச்சிறப்பைக்கூடக் கவனியாது நின்றுவிட்டனர். மேலும் நாகரீக ஸம்பந்தமான விஷயங்கள், நாகரீகம் மிகுந்து உயர்ந்த குடிப்பிறந்தோர் விஷயங்கள் ஆகிய இவைகளே பாக்கள் விஷயமாக எடுத்து ஆளப்பட்டு வந்தன. இந்த ஸந்தர்ப்பங்களுக் கிடையில் வேர்ட்ஸ்வோர்த் தமது பாக்களை வெளியிட்டார். இதன் முகவுரையில் ப்ரவிஷயத்திற்காக உண்மையை மாற்றலாகாது, ஸாதாரண குடியானவர்கள் வாழ்க்கையிலும் மேலான கற்பனரஸம் நிறைந்த விஷயங்கள் காணப்படுவதால் அவைகளும் செய்யுள் விஷயங்களாகத் தகுந்தவைகளே,நாம் ஸாதாரணமாகப் பேசுவதில் உபயோகிக்கும் நடைசிறந்த பாஷைநடை என்பதே அவரது பிரதமக்கொள்கைகள் என்றும், அதன்படியே அப்பாக்கள் வரையப்பட்டிருக்கின்றன என்றும்கண்டிருந்தது. ஆனல் காலவிஷயங்களுக்கேற்ப அப்பொழுதிருந்த செய்யுள் எழுதும் முறையைக்கண்டிக்க இவர் செய்யுள் விஷயங்களுக்கும் வசனவிஷயங்களுக்கும் யாதொரு பேதமும் இல்லை,அம்மாதிரியேதான் பாஷாநடை விஷயமும் என்றுகூறி ஸ்தாபித்திருந்தார். இவைகளைக் கண்டதும் அக்காலத்தில் இலக்கியம் சீர்தூக்குவோர் வேர்ட்ஸ்வொர்த் செய்யுள்களை முற்றிலும் பழித்துக் கூறினர். வேர்ட்ஸ்வொர்த் பிடிவாதமாகவே ஸ்ருஷ்டி விசித்திரம், ஸாதாரண ஜனங்கள் வாழ்க்கை இவைகளையே தமது செய்யுள் விஷயங்களாக வைத்து எழுதத் தொடங்கிவிட்டார். இவர் ஜனனபூமி, ஜனித்தகுடும்பம், வாஸஸ்தானம் இவைகள் எல்லாம் இவ்வேலைக்குத் தகுந்தவைகளாகவே இருந்தன.

ஆங்கில கவிகளில் கற்பனரஸம் சிறந்த கவிகளுள் இவர் ஒருவர். ஸாதாரணமாக அலைந்து திரிந்து பாடுபட்டு ஜீவிக்கும் நாட்டுப்புறத்தவர்கள் ஸ்ருஷ்டி வைசித்ரியத்தை உள்ளபடி காணும் நிலையிலிருப்பதால் அவர்கள் நடவடிக்கைகளையே இவர் தம் செய்யுள் விஷயமாகக் கொண்டார். செய்யுள் விஷயங்கள் மனஸ் ஸமாதானம், கடவுளையே ஆதாரமாகக் கொண்டிருத்தல், இந்நிலையை ஸ்ருஷ்டி விசித்திர ஆராய்ச்சியால் திடப்படுத்தல் ஆகிய இவைகளை நம்முள்வளர்க்கும் திறனுடையவைகளாக இருக்கவேண்டும் என்பதே இவர் முக்கியக்கொள்கை. இந்நிலையை அடைய ஸஹாயம் செய்ய ஸ்ருஷ்டி விசித்ரத்துள் ஊடுருவிப் பரவிநிற்கும் அந்தராத்மா ஒன்றுள்ளது. அது நமது ஆத்மாவைப்போன்ற லக்ஷணமுடையது. ஆகவே நாம் ஸ்ருஷ்டி விசித்ரத்தை ஊன்றி நோக்குங்கால் அதனோடு ஆனந்திக்கும் நிலை நமக்கு வருவதோடுங்கூட அதனுள்ளிருக்கும் ஆத்மாவுக்கும் நமது ஆத்மாவுக்கும் சேர்க்கை ஏற்பட சாந்தம் பிறக்கும், என்ற விஷய விஸ்தாரமே அவர் செய்யுள்களின் ஸூக்ஷ்ம விஷயம். இந்தக் கலப்பு ஏற்பட எப்பொழுதும் ஸ்ருஷ்டி விசித்திரத்தில் நமது கற்பனை சக்தியை ஸஹாயமாகக்கொண்டு ஈடுபட்டு மெய்ம்மறந்து பழகவேண்டும்; அதைப்பற்றிப் பாடியாடி ஓயவேண்டும் என்பதையே இவர்விஸ்தரிக்கிறார். இந்த அற்புத விஷயம் குழந்தைகளுக்கு நன்றாய் அனுபவத்திலிருக்கும் அவைகள் மேலான நிலையிலிருந்து மரணம் என்னும் உறக்கம் அல்லது மறதியைத் தாண்டி அந்நிலைக்கு மாறான இவ்வுலக வாழ்க்கையுள் வருவதால் இதில் முதலில் மனம் பற்றாது முன்னிலையின் அழிவற்ற திசைமுதலியன அடிக்கடிதோன்றிக்கொண்டிருக்கும். வரவர மனிதன் வயது முதிர இவ்வுலக அனுபவங்கள் அதிகமாக தன்னிலைமறந்து விஷயத்தில் அழுந்தி 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்று மூழ்கி விடுகிறான். இதிலும் சிற்சில விஷயங்கள் இவன் பூர்வ நிலையை ஞாபகப்படுத்த வந்துசோ, ஸ்ருஷ்டி வைசித்ராதிகள் மூலமாக மனங்குவிந்து இவன் மேன்மை பெறுவன் என்பதே மானிட வாழ்க்கைப்பற்றிய இவர் அபிப்பிராயம். இவைகளையே இவர் தம் அனுபவத்தை ஒட்டி வெகு அழகிய செய்யுளில் வெளியிடுகிறார். வ்யாபாரம் இவ்வுலக இன்பம் ஆகிய இவைகளே சதமென நம்பித் தொழிற்படும் ஆங்கிலர்களுக்கு இவைகள் எல்லாம் சிறந்தனவாகப் படமாட்டா.வேதாந்த சாஸ்திர ரஹஸ்யம் விளங்கக்கூடிய மனமுள்ள இப்பாதகண்ட வாஸிகளுக்கு இவைகளின் சிறப்பு அதிகமாக விஸ்தரிக்காமலே விளங்கும்.

இவர் காவியங்களின் சிறப்பு அநேக விதத்தைப் பொருத்ததாக விருக்கிறது. (1) இவர் பாஷை நடை தெளிவாயும் எளிதாயும் கார்யகாரண ஸம்பந்தத்திற்கு முற்றிலும் பொருந்தியதாயும் இருக்கும். (2) வீண் கைச்சரக்கு ஆகாயபாண முதலியன ஒருநாளும் இவர் விடவே மாட்டார். அனுபவத்தை ஒட்டியே உள்ளதை உள்ளபடி நேராக வெளியிடுவார். (3) இவர் கவி விஷயங்கள் பொருள் நிறைந்தனவாகவே இருக்கும். இவைகள் வேறு புத்தகங்கள் அல்லது கல்விப்பயிர்ச்சி முதலியவைகளால் ஏற்பட்டவைகளல்ல, எல்லாம் தமது ஸொந்த ஆராய்ச்சி, அனுஸந்தான முதலியவைகளையே ஆதாரமாக உடையன. இவைகள் புதியவைகளாகவே காணப்படும். (4) ஸாதாரண நடைக்கு இடையே திடீரென்று அமையும்சொற்சுவை பொருட்சுவை நிறைந்த அடிகள் இவர்கவிகளில் நமது கவனத்தைப் பதித்துவிடுகின்றன. (5) யுக்தி, உருக்கம் நிறைந்த ஸாக்ஷித்வநிலை இவர் காவ்யங்களில் நன்கு வெளியாகும். (6) ப்ரபஞ்ச விசித்ரத்துள் ஒளிரும் பரஞ்ஜ்யோதி விஷயமான உணர்ச்சி, அதைப்பற்றி நன்ருக வர்ணிக்கும் சக்தி ஆகிய இவைகளே இவர் செய்யுளுக்கு உண்மையான கம்பீரம் வரும்படி செய்கின்றன. இந்த ஆறு விஷயங்களும் இக்கவியின் சிறப்பிற்கு முக்கிய காரணம்.

இவருக்குச்சிற்சில குறைகளும்இருக்கின்றனஎன்று மதிப்பர் சிலர். இவர் பாஷைநடை ஒரே மாதிரியாகவிராது சிலவிடத்தில் மழுங்கியும் சிலவிடத்தில் திடீரென்று உயர்ந்தும் காணப்படும். சிறு கவிகளில் ஒழுங்காயும், பெரிய காவியங்களில் பாஷை நடை நடுநடுவே சிதைந்தும் காணுகிறது. இதை ஒரு குற்றமாகக் கொள்வர். இதற்கு இக்கவியே தாம் எழுதிய கிரந்தங்கள் ஒன்றில், விஷய காம்பீர்யத்தைப்பொருத்தது என் பாஷை காம்பீர்யம் என்று கூறி யிருக்கிருர். சிற்சில காரியங்களில் வெகு ஸாதாரண விஷயங்களைப் பெரிதாகக்கூறி எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இது அனுவசியம் என்பர். நாடக ஒழுங்கு இவருக்குப் பிடிபடவில்லை. இருவர்கூடிப்பேசுவதாகக்கூறுமிடத்து பாஷை மாறுபாடு இன்றி ஒரேமாதிரி கூறுவதால் ஒருவர் வாக்கென்றே வாசிப்போருக்குத் தோன்றிவிடும். இந்தக் குறை அவர் கவிகள் சிலவற்றில் ஏராளமாகக் காணப்படும். ஸாதாரண விஷயங்களை வர்ணிக்கப் புகுமிடத்து இவர் எப்பொழுதும் தம் மனோநிலைப்படி அதனுடன் முற்றும் பொருந்தாத பெரிய விஷயங்கள் கற்பனைகள் முதலியவைகளை அமைத்துக் கூறிவிடுகிருர்.

இங்குக் கூறியவைகள் உண்மையான குற்றங்களாக விருப்பினும் அவைகளுக்கு அவர் தோன்றிய காலமும், பிறர் முதலில் வரம்பு கிடந்து அவர் கவிகளைப் பழித்ததும், அதனல் அவருக்கு ஏற்பட்ட பிடிவாதமுமே காரணங்கள். இவைகளைவிட முன்னர் கூறியுள்ள சிறப்பு விஷயங்கள் மிகுந்த ஆற்றலுடையவை. இவர் வெளியிட்டிருக்கும் கவிகளிலிருந்து மனிதன், ஸ்ருஷ்டி விசித்ரம், மானிட வாழ்க்கை இவைகளைப்பற்றிய அருமையான விஷயங்களை அறிவுடையோர் அறிவதுபோல மற்றைய கவிகளிலிருந்து அதிகமாகக் கிரஹிக்க முடியாது. நாகரீகம், தேசாசாரம் முதலியவைகளால் மாறுபட்டிராத மானிட வாழ்க்கை ஸ்ருஷ்டி விசித்திரம் இவைகளைப்பற்றியே இவர் பாடி இருப்பதால், உலகம் முழுவதும் உள்ள ஜனங்களது பொது வாழ்க்கை, தன்மை முதலியன நன்ருகத் தெரிய வரும். மேலும் ஸ்ருஷ்டி வைசித்ரியத்தில் இவர் ஈடுபட்டு சிற்சில ஸமயங்களில் அறிவு, அனுபவமாகி, அனுபவ உணர்ச்சியும் அழிந்து நிற்கும் நிலையானது, வேதாந்த முடிவாகிய பிரஹ்மமேயாகி நிற்றல் என்னும் நிலை சுத்த கல்பனுவிஷயத்தில் ஈடுபட்டு நிற்கவல்ல ஒவ்வொருவனுக்கும் சற்று அனுபவத்திற்கு வரக்கூடியது; அது வீண் மனோராஜ்யமல்ல என்பதை இப்பரத கண்டத்தவர்களுக்கும், ஆழ்ந்த அறிவுடைய வெளிநாட்டாருக்கும் நன்கு விளக்கும். இவர் கவிதைகளை வாசிப்பவர்கள் மனம் மாறிவிடுகின்றது என்பது படித்தவர் அனுபவமாதலால் இவரிடம் சொற்குற்றம் போன்ற சிற்சில விருந்தபோதிலும் பொருட்சிறப்பு அவைகளுக்கு மேலாக நின்று இவரைப் பெருங்கவி என்று மதிக்க இடங்கொடுக்கும்.

இம்மாதிரியே விவரிக்கக்கூடிய
வியாஸ விஷயங்கள் :—

| | |
|---|---|
| 1. ஷேக்ஸ்பீயர் | 6. ஹோமர் |
| 2. மில்டன் | 7. சாஸர் |
| 3. மெகாலே | 8. காம்பெல் |
| 4. ஷெல்லீ | 9. ஸ்காட் |
| 5. பைரன் | 10. லாங்பெல்லோ |

போதுக்குறிப்பு.

1. முகவுரை : காலம் முதலியன.
2. வாழ்க்கையும் மனோநிலையும்.
3. சிறப்பு.
4. குறைகள்.
5. முடிவுரை : பொது அபிப்பிராயங்கள்

## மொழிபெயர்ப்பு விளக்கம்
## Translation Models

### Why does not the water fall out of a quickly revowing bucket ?

We must remember that every substance, whether it be a solid or a liquid, tends to remain in the same position unless some force is applied to it to move it, The force of gravity keeps the water in the bucket when the bucket is at rest, and attracts both the bucket and the water to the earth, When we swing the bucket over our heads, gravity would cause the water to fall out if we held the bucket still, but by keeping it moving, we bring other forces into action which act in other directions, and tend to make the water press against the sides of the bucket. If the water could get out, it would not fall straight down to the earth, but would go on some distance in the direction in which the bucket is moving at the moment, and would gradually come to the earth, So that the water stays in the bucket as the result of the several different forces acting upon it while it is being swung quickly round and round.

### விரைவாய்ச் சுழலும் சிறு தோட்டியிலிருக்கும் தண்ணீர் கீழே விழாதிருப்பானேன் ?

திடதிரவப்பொருள் ஆகிய எல்லாம் தம்மை அசைக்கக்கூடிய ஒரு சக்தியின் சேர்க்கை இல்லா திருக்கும் வரையில் இருந்த விடத்திலேயே நிலைத் திருக்கும் தன்மை உடையன, என்பது நமக்கு ஞாபகத் திலிருக்கவேண்டும். சிறு தொட்டி அசைவற்றிருக்குங் கால் பூமியாகர்ஷண சக்தி அதனுள்ளிருக்கும் தண் ணீரை உள்ளேயே நிற்கும்படி செய்து, அதையும் தண்ணீரையும் பூமியைநோக்கி இழுத்துக்கொண்டி ருக்கும். இதைச் சுழற்றுகையில் தலைக்குமேல் வரும் பொழுது நிறுத்திவிட்டால் பூம்யாகர்ஷணசக்தி தண் ணீரைச் சிதறிவிழும்படி செய்துவிடும். ஆனல் அந்தத் தொட்டியைச் சுழற்றிக்கொண்டே இருந்தால், வெவ் வேறு புறம் நோக்குவதும் அதனல் தண்ணீரைத் தொட்டியின் பக்கங்களில் ஒட்டிக்கொள்ளும்படி செய் வதுமான சக்திகளைத் தொழிற்படும்படி செய்கிறோம். இக்காலங்களில் தண்ணீர் கொஞ்சம் வெளியேறி விட் டால், நேராக அது பூமியின்மேல் விழாது: அத்தரு ணத்தில் தொட்டி சுற்றும்பக்கம் கொஞ்சதாரம்போய்ப் பின்னர் மெதுவாகப் பூமியிலிறங்கும். ஆகவே தொட்டி சுற்றுங்கால் தண்ணீர் அதனுள் நிற்பது அப்பொழுது ஏற்படும் பலவிதமான அநேக சக்திகளின் காரியம்.

## சிறுவர்களுக்கான பக்கங்கள்
## CHILDREN'S PAGES

### உண்மை உயர்வு அல்லது வாஸுதேவ சாஸ்திரி
### TRUE GREATNESS OR VASUDEVA SASTRI

### அத்தியாயம் 15
### ஒரு விதவையைத் தேற்றியது

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவாரோ? மாநிலத்தீர்!—வேண்டா
நமக்கும் அதுவழியே, நாம்போமளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்.

மதுரையில் இவ்வாறு இருக்க, திண்டுக்கல்லில் பெரிய கார்யங்கள் நடந்தேறிக்கொண்டிருந்தன. கடு கடுப்பான முகத்தை உடைய கிழவராயும், காட்டுப் பூனை என்ற பட்டப்பெயர் பெற்றவராயும் உள்ள நமது தோழர் நாயன்ன சாஸ்திரிகள் விஷயம் வாசிப் பவர்களுக்கு ஞாபகமிருக்குமே. தனது பிள்ளை கண்ணு மூலமாக அவன் திடீரென்று பெரும் பணக்கார னுக முயல்வதாக முன்னரே கூறியுள்ளோம். 'இறந்து போன கிருஷ்ணன் தாயார் எனக்குத் தமக்கை முறை யாகவேண்டும். அவள் என்னிடம் மிகுந்த அன்புபாரா ட்டி வந்தாள். புதிதாக ஏற்படுத்தப்படும் அவள் கணவன் உயில்படி அவளை எப்படியாவது என் பிள்ளையை ஸ்வீ காரம் எடுத்துக்கொள்ளும்படி முதலில் தூண்டிவிட வேண்டும். மேலும் அந்த நூதன உயிலில் குடும்ப ஸொத்து முழுவதும் கிருஷ்ணன் தகப்பன் ஸ்வந்த ஸம்பாத்தியம் என்றும்; ஆதலால் அவர் இஷ்டப்படி அதை விநியோகப்படுத்தலாம் என்றும்; கிருஷ்ணன் குழந்தைமுதல் நோயாளியாக விருந்தமையால் அவன் தாயாருக்குப் பின் ஜீவித்திருந்தால்தான் ஸொத்து அவனைச் சேரவேண்டும் என்றும், அல்லது கிருஷ் ணன் தாயார் வழியாக அவள் ஸ்வீகாரம் எடுத்துக் கொள்ளும் பிள்ளையைச் சேரவேண்டும் என்றும் வெளிப்படையாகக் கண்டுவிடவேண்டும்' என்பதே இக்காட்டுப்பூனையின் கொடிய மனோராஜ்ய விஷயம். இவ்வாறு எல்லாம் ஏற்பாடு செய்துவிட்டுத் தகுந்த ஸமயத்தில் கிருஷ்ணன் தாயாருக்கு இந்த விஷயம் தெரிவிக்கப்பட்டது. அவள் ஸம்மதத்தின்பேரில் திருட்டுக் கையெழுத்திடுவதில் தேர்ந்த ஒருவன் உதவி யால் பழயதுபோலத் தோற்றும்படிசெய்த காகிதம்

ஒன்றில் இந்த விசித்திர உயில் வரையப்பட்டது. பின்னர் அநேகருக்கு லஞ்சம் தகுந்தபடி கொடுத்து இதில் ஸாக்ஷிக் கையெழுத்துகள் ஏற்படுத்தப்பட்டன. ஸ்வீகாரம்கூட நடந்தேறியிருக்கும். ஆனால் மூன்று மாதம் வரையில் இதற்கு நல்ல நாள் அகப்படாததால் இதைத் தள்ளிவைக்க வேண்டி வந்தது. லக்ஷ்மிக்கு இந்த விஷயம் ஒருவாறு தெரியவர அவளுக்கு மிகுந்த துக்கம் உண்டாகிவிட்டது ந்யாயப்படி தனக்கே வந்து சேரவேண்டிய ஸொத்து போய்விடுமே என்பதால் எழுந்ததல்ல இந்தத் துக்கம். இவ்விஷயத்தில் சேர்ந்திருக்கும் மனிதர்களின்கெட்ட எண்ணம் இழிவு முதலிய துர்க்குணங்களே இவள் மனதை ஓயாது புண்படுத்தியது. இவ்விஷயத்தை இவள் ஒருவரிடமும் ப்ரஸ்தாபிக்காது துக்கத்தை உள்ளேயே வைத்துக்கொண்டு உருகிக்கொண்டிருந்தாள்.

ஓர் இரவு அவள் தன் உள்ளில் அழுதுகொண்டிருந்தாள். புது உயில் விஷயம் அவளுக்கு ஞாபகம் வந்துவிட்டது. விக்கி அழுதுகொண்டு, " ஆ! உலகம் எவ்வளவு கொடியதாகிவிட்டது! பாழும் உலகம்!! என் அன்பே! என் கண்ணே! இவ்வுலகை விட்டு இவ்வளவு விரைவில் நீர் நீங்கியது நல்லதே! உமது சிறு வாழ்நாளைக்குள் கொடுமை துரதிர்ஷ்டம் முதலியவைகளைக் கண்டு வருந்தாது போய்விட்டதே உமக்கு மேன்மை. எப்படி யிருந்தபோதிலும் நீர் மறுபடி இங்குத் திரும்பி வரவேண்டுமென்று எனக்கு விருப்பமே வாராது. என் துக்கம், தனிமை, கையற்ற நிலை ஆகிய இவைகள்கூட எனக்கு இந்த விருப்பத்தை உண்டாக்கா. ஸத்யவானை ஸாவித்ரிக்குத் திருப்பிக் கொடுத்ததுபோல யமதர்மராஜனே என் எதிரே வந்து உம்மைத் திருப்பிக் கொடுப்பதாக மன்றாடினாலும் 'வேண்டாம்! இங்கே நாங்களிருவரும் சேரவேண்டியதில்லை! எங்களைச் சேர்த்துவைக்க உமக்கு மிகுந்த ஆவலிருக்குமாயின் என்னையும் எடுத்துப்போய்க் கணவனுடன் சேர்த்துவையும்' என்பேன். இச்சிறந்த வரத்தைத் தரமாட்டேன் என்று அவர் மறுத்தால் 'மேல் மேலும் அதிக ஆனந்தம் கொடுக்கும் உயர்ந்த பதவிக்கு, என் நற்குணம் அவாது அளவிடமுடியாப் புண்யங்கள் இவைகளை முன்னிட்டு என் கணவரைக்கொண்டு சேரும். நான் படும் பாடுகள் செய்யும் விருதங்கள் என் கணவருக்கு ஸஹாயம் செய்யுமாகில் இப்பொழுது படுவதுபோல ஆயிரமடங்கு கஷ்டப்பட நான் தயார். அவர் ஆனந்தப்பட வேண்டும் என்பதே என் முக்கிய ஆவல். என் உயிரைவிட இஷ்டமாயும், என் மன்மதனாயும், என் ஆனந்தமாயும் இருந்த அவர் ஸுகமே என் ஸுகம்' என்று மன்றாடுவேன்.

" ஆ! கிருஷ்ணா, கண்மணீ! பிறர் உன் பெயரை உச்சரிக்குங்கால் எனக்கு வந்த ஆனந்தத்திற்கு அளவேயில்லை. உன் விஷயத்தில் திருப்தியுடன் உன் பெயரைக் கூறித் துதிக்குங்கால் என் மனம் ஆனந்த பரவசமாகிவிடும் என்று கூறவும் வேண்டுமோ? அதை எவ்வளவு பெருமையாகப் பாராட்டி வந்தேன். உன்னைக்காண்பதுவே ஆனந்தம், உன்னுடன் பேசுவது ஸ்வர்க்கம், இனிமையான குரல், பக்தி முதலியவைகள் நிறைந்த மொழிகளால் நீ வசனிப்பதைக் கேட்பது ஸ்வர்க்கத்தினும் சிறந்ததாக எனக்குத் தோன்றுமே! பகலில் உன் மிருதுவான பாதம் பட்ட தூளிகள் எல்லாம் வானுலகு ஏறி இரவில் நக்ஷத்திரங்களாகின்றன என்று தோன்றும். உமது மூச்சுக் காற்று மிகப் பரிசுத்தம் என்று எனக்குத் தோற்றும். மலைபோலக் கம்பீரமான உமது மார்பில் சாய்ந்தால் உண்டாகும் ஆனந்தத்தை என்னென்று சொல்லுவேன்! ஆ! ஹா! பார்வதிக்குக்கூடக் கைலாஸத்தில் இந்த ஸுகம் இருக்குமா? கிருஷ்ணன் என்ற பெயர் உமக்கே தகும்! எனக்கு நீர்தான் கிருஷ்ணன். நான் உம் விஷயத்தில் ருக்மிணி, ஸத்யபாமை, கோபிகள் முதலியவர்கள் எல்லோரையும்போலப் பற்றுடையவளாக விருந்தேன்.

" வீண் பேச்சு! நான் வேஷக்காரி, வெட்டிப்பேச்சு மாத்திரம்தான்! உமக்கு மரணம் அணுகிவிட்டது என்று உணர்ந்ததும் உமக்கு முன் நான் உயிரைவிட்டிருக்கவேண்டாமா? உம்மேலிருந்த காதலைப் பூர்ணமாக வெளியிட அந்த ஸமயம் ஒன்றுதான் ஏற்பட்டது, அதையும் தவற விட்டுவிட்டேனே! இனி ஏது! அம்மாதிரி காலம் வருவதேது!! இப்பொழுது வாய்கொண்டமட்டும் வம்பு பேசுவதால் பயன் என்ன? எனது காதலுக்கு ஆலயம் போலவும், உமது கம்பீரமான ஆத்மாவை அடக்கி இருந்ததாகவும், உள்ள உமது தேகம் சிதையில் என் கண்முன் வெந்ததே! அதன் அழகை நான் அநேகநாள் உள்ளன்புடன் அனுபவித்ததில்லையா? அது வெந்து நீராவதைக்

கண்ட உடன் அந்த நெருப்பிலேயே நான் மூழ்கியிருக்கலாகாதா? மதிமோசம் போய்விட்டனே! மடத்தனமாக. உலகக் கொடுமைகளை எல்லாம் கண்டு கலங்கும் பாவியானேன்! என்னைத் தற்கொலை செய்து கொள்ளக்கூடாது என்று என் வீணைத் தடுக்கிறீர்? ஆ கொடிய பிதாவே!' என்று இவ்வாறு லக்ஷுமி ஓர் இரவு உருகி அழுதுகொண்டிருந்தாள்.

இவ்வாறு சொல்லி வாய் மூடுமுன் கதவை யாரோ மெதுவாகத் தட்டியதுபோன்ற சப்தம்ஒன்று கேட்டது. திறந்து பார்ப்பாளோ அவள் அருமைத் தகப்பனரே அங்கு நிற்கக் கண்டாள்! அவள் கண்ணீரில் மூழ்கித் தத்தளிப்பதை கண்ட உடன் வாஸுதேவ சாஸ்திரிக்கும் கண்ணில் கரகரவென்று நீர் ததும்பத் தொடங்கி விட்டது. அவைகளை அடக்க அவரால் முடியவில்லை. பின்னர் அவைகளை ஒருவாறு அடக்கிக்கொண்டு மிருதுவான வாக்குக்களால் அவளைத் தேற்றத் தொடங்கினர். அவராலன்றி வேறு எவரால் இவ்வளவு பரிவுடனும் ஆழ்ந்த பொருளுடனும் கூடிய மொழிகளை எடுத்தாள முடியும்.

லக்ஷ்மி.—அப்பா! அப்பா! நான் இறக்க என் இடங்கொடுக்க மாட்டேன் என்கிருய்?

வாஸுதேவ சாஸ்திரி.—குழந்தாய்! அவஸரப்பட்டு விடாதே! கடவுள் அருளால் நீ இங்குவந்து பிறந்துவிட்டாய், எப்பொழுது உன்னை இங்குவிட்டு நீக்கவேண்டும் என்பது அவருக்குத் தெரியும். உனக்கு இன்னும் இறக்கவேண்டிய யோக்யதை வரவில்லைஅம்மா!

லக்ஷ்மி.—அப்பா! நீ எப்பொழுதும் சிறந்த ஞானத்தை எடுத்து வெளியிடுகிருயே! உனக்கு நிகர் இம்மூவுலகிலும் உண்டோ? எங்கள்பாடுதானே திண்டாட்டமாக விருக்கிறது! (என்று விக்கி அழத்தொடங்கினள்).

சாஸ்திரி.—அழாதேபெண்ணே! வேண்டாம் அடக்கிக்கொள். துக்கம் எப்பொழுதும் எனது என்ற பற்றுல்தான் ஏற்படுவது. இப்பற்று நீங்கியவிடத்தில் துக்கம் ஏது? ஸுகதுக்கங்கள் நமது மனத்தைப் பற்றியவைகளே ஒழிய வெளிவிஷயங்களல்ல.

லக்ஷ்மி.—எனக்குச் சாகவேண்டிய யோக்யதை இல்லை என்றுல், இவ்வுலகில் சாகத்தகுந்தவர்கள் யார் தான் இருக்கிறுர்கள்? சொல்லேன் பார்ப்போம்.

சாஸ்திரி.—லக்ஷ்மி! கண்ணே!! உயிருள்ள காலத்திலேயே எவன் செத்தாரைப்போலிருக்கிருனே அதாவது துக்கம் மமகாரம் முதலியவைகளிலிருந்து விடுபட்டிருக்கிருனே அவனே சாகத் தகுந்தவன். நான் சொல்வதைச் சற்று நம்பி ஊன்றிப்பார். பெண்ணே! நீ பெரிய காரியங்களை ஸாதிக்க இவ்வுருவம் தாங்கியிருக்கிருய். கூடிய சீக்கிரத்தில் உலக ரஹஸ்யங்கள் உனக்கு நன்கு வெளியாகும்.

இதைக் கேட்டதும் லக்ஷ்மிக்குப் பொய் உயில் விஷயம் ஞாபகம் வந்துவிட்டது. உடனே அவளைச்சுற்றி தலைவிரித்தாடும் சதியாலோசனைகளைத் தகப்பனருக்குத் தனக்குத் தெரிந்தவரையில் தெரிவித்தாள்.

சாஸ்திரி.—என்ன பயம் உனக்கு! தைர்யமாயிரு. எது நடந்தாலும் நமது நன்மைக்கேதான் என்று மதித்துத் தேறியிரு. நமக்குக் கிடைக்காத வஸ்துக்களை விரும்பவும் வேண்டாம்; நமக்குக் கிடைப்பவைகளை வெறுக்கவும் வேண்டாம். கார்யங்கள் முறைப்படி நடக்கட்டும்; அவைகளை நடத்துவிப்பவர் ஈசன். எல்லாம் எனையாளும் ஈசன் செயல். மேலும் ஸொத்துக்களை அவர்கள் அனுபவித்தால் என்ன நாம் அனுபவித்தால் என்ன? மமகாரம் நீக்க முயல்பவர்களுக்கும் நீங்கியவர்களுக்கும் இதனல் என்ன பேதம் வந்துவிடும்? எல்லோரும் ஸுகப்படவேண்டியதுதானே! நீ வீணை என் அழுது கரைந்து போகிருய்?

லக்ஷ்மி.—அப்பா! உமக்கு என்ன உதாரகுணம்!! இப்பாழுலகம் கொடியதல்லவா? என்ன வெகு தாராளமாகக் கூசாது கூறிவிட்டீரே!

சாஸ்திரி.—என் கண்மணீ! நான் சொல்வதில் நம்பிக்கை வை. இவ்வுலகம் கொடியதல்ல என்று நீயே உன் வாய்விட்டுக் கூறும் காலமும்வரும். நாம் உலகை நோக்கும் நிலைமாறுபாடுகளால் உலகம் விதம்விதமாகத் தோற்றும். இவ்வளவுதான். நாளாக நாளாக இவைகள் தாமே உனக்கு விளங்கிக்கொண்டே வரும்.

இதன் பின்னர் சாஸ்திரி மதுரையில் நடந்திருந்த அலங்கோலங்களை எடுத்துரைக்க, ருக்மிணிக்கு வந்த ஆபத்தை எண்ணி அவளுக்காகக் கொஞ்சம் அழுதாள் லக்ஷ்மி. பிறகுதாம் புறப்பட்டு வந்திருக்கும் வேலையையும் தெரிவித்தார். கொஞ்ச நாழிகை இவ்வாறு பேசிக்கொண்டிருந்துவிட்டு முடிவில் போய்வருவதாகச் சொல்லிக் கொண்டெழுந்தார்.

சாஸ்திரி.—நான் போய் வேலையை முடித்துக்கொண்டுவந்து சேருகிறேன். மனதைத் தேற்றிக்கொண்டு தைர்யமாகவிரு. உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டும் என்று தோன்றும்போதெல்லாம் என்னையும் என் வாக்குக்களையும் ஞாபகப்படுத்திக்கொள். அதெல்லாம் இருக்கட்டும். எனக்காகவாவது நீ உயிருடன் இரு. அப்பாவை அனுதையாக்கி ஆலாகப் பறக்க விட்டுவிட்டு ஓடிவிடாதே யம்மா! நான் என்ன சொல்லப் போகிறேன் இதைவிட'

என்று மிக உருக்கமாகக் கூறிவிட்டுத் திண்டுக்கல்லிலிருந்து வடக்கே போகும் அடுத்த ரயில் வண்டியில் சாஸ்திரி புறப்பட்டுவிட்டார்.

## ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

### LADIES' PAGES

### ருக்மிணி அல்லது பக்தி நிலை

### பக்தி மலர்ந்த காதை

(தொடர்ச்சி)

"இவன் மாத்ரம் அந்தப்பாசத்திற்குள் இருந்து தவறிப் பிழைத்து வந்தாலும். அந்தக் குரங்கு என்ன பாடு படுகிறதாம். இந்த நாரதன்தான் சொன்னான். நான் என் பெயரை மாற்ற வேண்டுமாம். இல்லாவிடில் அதோடு சண்டைசெய்ய வேண்டுமாம். என்ன அழகு. நாம் ஒரு மிருகத்தோடா சண்டை செய்வது? கேவலம் ஓர் மரத்திலிருந்து மரம்பாயும் ஒரு குரங்கோடா சண்டை செய்வது? அது நமக்குப் பெருமையா? அல்லது அழகா? என்ன செய்வது. நீதான் யுக்தியிற் சிறந்தவன். யோசித்துப் பதில் கூறு."

"என்ன? ஒரு குரங்கு உன் பெயரை மாற்றச் சொன்னால் அது கேவலமாகவா இருக்கும்? அதுவும் ஒரு சேனைமுழுதையும் ஆகாசவீதியில் தெறித்துவிட்டதைப் பார்த்தால் எனக்கென்னமோ பயமாகத்தான் இருக்கிறது. அது பெயரை ஏன் மாற்றச்சொல்லுகிறது?"

"நான் பலராமன் என்கிற பெயரை ராமன் என்று மாற்ற வேண்டுமாம். அதற்குக் காரணம் நான் பலசாலியல்ல என்கிறதாம். அப்பெயரோடு இருந்தால் அதனோடு சண்டை செய்யவேண்டுமாம்."

"அதற்கு உன் பெயரில் பல என்னும் அடைமொழியை எடுக்கவேண்டும் என்று அல்லவா எண்ணம். அதை எடுத்தால் உனது பிரதாபத்திற்குக் குறைவல்லவா? ஒரு சிறு குரங்கிற்குப் பயந்து பெயரைமாற்றினன் என்றல்லவா யாவரும் எளனஞ் செய்வர்."

"அதுதானே யானுங் கூறுவது. சண்டை செய்வதென்றால் அதுவும் ஆண்மைக்குக் குறைவேயல்லவா?"

"என்னமோ அப்பா? தாங்கள் கூறுவதைக்கேட்டால் நாம் நிர யோசியாது ஒன்றும் செய்யக்கூடாது. என்ன செய்யலாம். பெயரை மாற்றினால் உன்னுடைய வீரப்பிரதாபத்திற்கே குறைவு மானக்கேடு. சண்டை செய்வதென்றால் ஒரு குரங்கைக்கொல்ல என்ன ஆர்பாடம் என்பார். இன்னது சொல்வது என்று எனக்குத் தோன்றவில்லை. நாரதா! நீ என்ன சொல்கிறாய்?"

"நான் என்ன சொல்வது. நான் முன்னமே அதன் வால் ஒன்றே போதும் என்று சொல்லியிருக்கிறேன். வீறு என்றிவர் கூறியது அவர் வால்தான். வால் என்றால் வாலா அது. அது எத்தனை நீளம் வளரும்! எனக்கிவர் பெயரை மாற்றுவதே நலம் என்று தோன்றுகிறது. அக்குரங்கோடு போய்ச் சண்டை செய்தாலும் அண்ணா பிழைப்பது அப்படி இப்படித்தான். அதன் வாலே அந்த வேலை செய்யும். பேரை மாற்றினால் என்ன குற்றம்? பலராமர் என்பதை ராமர் என்று மாற்றுவதால் தங்களுக்குப் பலமில்லை என்று ஏற்பட்டு விடுமோ? அது எப்படி முடியும். தங்கள் பலம் குறையவே குறையாது. பெயரை மாற்றாது சண்டைசெய்து தோல்வியடைந்தால் எல்லாரும் பரிகஸிப்பதைவிட நாமே பெயரை மாற்றிக் கொள்வது நன்றென்று எனக்குத் தோன்றுகிறது" என்றார் நாரதர்.

"எனக்கும் அப்படித்தான் அண்ணா தோன்றுகிறது. என்ன செய்வது. வேறு வழியில்லை," என்றார் கிருஷ்ணரும்.

சிந்தாஃகிராந்தனாய் பலராமர் ஆஸனத்தில் சாய்ந்து மயங்கி இருந்தனர். அவர் உடல்முழுதும் இளைத்து சிந்தனையே மேலிட்டிருந்தனர். அப்பொழுது ஸ்ரீ பெரிய திருவடிகள் கண்ணபிரான்முன் தோன்றினார்.

"நல்ல ஸமயத்தில் வந்தாய். இந்நகர்க்குப்புறத்தில் ஒரு குரங்கு வந்திருக்கிறதாம். அதை யாரோ போய்த் துரத்தப் பார்த்தாராம். முடியவில்லையாம். நீதானப்பா அதைத் துலைக்கவேண்டும்" என்று கண்ணபிரான் திருவாய் மலர்ந்தார்.

"உங்களுக்கென்ன வேலை. குரங்கையடி, எலியைப் பிடி, என்பதைத் தவிர. ஊருக்கு வெளியில் குரங்கு வந்தால் அதைப் பிடிக்க நான் ஓர் குரங்காட்டியோ? தெரியாமல் உம்மிடம் அமர்ந்தேன். தக்கபடி எனக்கு வேலையிடாமல் என்னை ஏன்பரிகாஸம் செய்கிறீர்கள்?"

"ஏன் அப்பா இந்தக் கோபமுனக்கு? நான் தகுந்தவன் நீயென்று முன்னமே யோசித்துதான் சொன்னேன். உன்னுடைய வீரப்ரதாபம் நம்மினும் சிறந்தது என்று எண்ணிக் கூறினேன். உன்னை நான் என்றைக்காவது பரிகஸித்ததுண்டா?"

"இப்பொழுதுதான் செய்கிறீரே?"

"அதோ பார் அங்கு பலராமரை. என்னமாக மயங்கிக் கிடக்கிறார். அந்தக் குரங்கின் வேலை அது. நான் உன்னைப் பரிகாஸம் செய்யவில்லை. நீ புத்திசாலி. ஸமயோசித பலவான். என்னைக்காட்டிலும் சக்தியுள்ளவன் என்று எண்ணிச் சொன்னேன். தயவு செய்து எங்களைக் காப்பாற்றும். உன்னைவிட்டால் எங்களைக் காக்க வேறு யாரால் முடியும்."

"தாங்கள் சொல்வது நியாயம். அன்று அந்த அம்ருத கலசத்தை எடுத்துவந்ததை விடவா இது கஷ்டம். நிச்சயமாகப் பெரிய திருவடிகள் உங்களது மான ஸம்ரக்ஷணம் செய்வர்" என்றார் நாரதர்.

உள்ளம் சற்றே குளிர, கருடாழ்வார் "நான் போய் என்ன செய்ய வேண்டியது?" என்றார்.

"ஒன்றும் வேண்டியதில்லை. அவர் என்னைக் காண வந்திருக்கின்றனர். நான் கூப்பிட்டதாகச் சொன்னால் தானே வருவார். இதுதான் தாங்கள் தயவு செய்து செய்யவேண்டும்."

"முன்னம் என்னவென்னவோ சொன்னீரே. இவ்வளவுதானா?"

" இதுதான். இது செய்தால் போதுமப்பா ! "

" இதற்கென்ன ? இதோ அழைத்து வருகிறேன் ஒரு க்ஷணத்திற்குள் " என்று சொல்லிக்கொண்டு கருடன் சென்றான்.

" பலராமா ! அங்கு வந்திருப்பது இப்பொழுது தான் ஞாபகம் வருகிறது. நேற்று சாயங்காலம் அவரைக் கண்டேன். உன் பயம் ஒழி. அவரை நான் பார்த்து ஏதாவது சொல்லி ஸமரஸஞ் செய்யப் பார்க்கிறேன்."

பாலஸூரியனது பொன்கதிர் விளங்கும் கோபுரவாயிலை விட்ட பெரிய திருவடிகள் மிகு லேசாக நடந்தார். பொழில்கள்தோறும் விளங்கும் கொடிப்புணர்ந்து விளங்கும் மரங்களின் செழிப்பைக் கண்டு பிரமையிலாழ்ந்திருந்தான். " ஒரு அல்பக் குரங்கை, மரம்விட்டு மரம் பாய்ந்து கொடிக்கிளையில் தலைகீழாக ஊசலாடும் ஒரு சிறு மந்தியை மஹாபலவானென்று எண்ணி என்னை அழைத்துவரச்சொன்ன அந்த கண்ணனது மொழிகள் என்ன மொழி ! அவர்க்கிப்படித்தான் எப்பொழுதும் ஆழ்ந்த யோசனை என்பதே கிடையாது. நான் ஊழியஞ்செய்தால் தக்கவிடம் தகாதவிடமென்று அறியாது காலாகாலங்களிலில்லாமல் அனுப்புகின்றனன். வீண்வேலையன்றி வேறுவேலை கிடையாது. ஒரு குரங்கைத் தன்னிடம் அழைத்துவரவேண்டுமென்றால் நானா இதற்காள் ? இவர்க்குக் குரங்கிடமும் காடியிடமுமே வேலை. முன் ஜாம்பவான் என்னுங் காடியை யழைத்துவா வென்று சொன்னாப் போல் ஞாபகம் எனக்கிருக்கிறது. இப்பொழுது குரங்கை அழைத்துவர வேண்டுமாம். நான் முடியாது என்று மறுத்துவிடுவேன். சொல்வதற்குள் தட்டிக் கொடுத்து என் வாயெடுக்க வொட்டாமல் செய்துவிடுகிறான். என்ன செய்வது. எனக்கிவ்வாறு வேலை செய்வது மிகவும் அவமானமாக இருக்கிறது. அவரை விட்டு விலகவும் மனம் வரவில்லை—" என்றிவ்வாறு தன் மனத்தில் தோன்றியவாறு எண்ணிக்கொண்டு ஆழ்ந்து விளங்கினர்.

பின் வயல்களில் பண்பாடும் தேரை யினத்தையும் சங்கினத்தையுங் கண்கொண்டு கவனியா நிற்பர். அணில் வாலென முதிர்ந்து தொண்டைக் கதிராய் விளங்கும் நெற்பயிரைப் பார்த்து குதூஹலிப்பர். இடையே ஓடும் சிற்றருவிகளில் துள்ளிக்குதிக்கும் வானவில்லெனச் சித்திரமமைந்தமீனினத்தைதக்காணக் காணக்கூத்தாடுவர். ஓடிவரும் நீர்ப்பெருக்கில் இடையறாது அலைக்கும் ஒலியில் தன்னொலிமயங்க எக்கலிப்பர். பித்து பிடித்ததுபோல் கூத்தாடுவர். மற்று, தான் எந்த வேலையாக வந்ததென்பதாவது போக வேண்டிய எண்ண மிருந்ததாகவாவது தோன்றவில்லை. அவர்க்கு அக்குரங்கின்பால் இருந்த அலக்ஷியம்தான், வந்த கர்மத்தையே மறக்கச் செய்தது.

# விசேஷக் குறிப்புகள்

## NEWS AND NOTES

சென்னைப் புதுக்கவர்னர்.—இப்போது சென்னை ராஜதானிக்குக் கவர்னராக நியமிக்கப்பட்டுள்ள லார்ட் பெண்ட்லண்ட் அவர்கள், தமது பத்தினியாருடனும் இரண்டு குழந்தைகளுடனும் செப்டம்பர் மாதம் 28-ந் தேதி லண்டனிலிருந்து ஸிம்லா என்னும் கப்பலில் புறப்பட்டு அக்டோபர் மாதம் 28-ந்தேதி சென்னை வந்து சேருவார் என்று தெரிகிறது.

* * *

ஆகாயக்கப்பலில் விவாகப்பவனி.—மெஸ். டிறும் என்னும் ஓர் பிரான்சியன், பிரான்சிலிருந்து ஆகாயக் கப்பல் மார்க்கமாய் இங்கிலாந்துக்கு மணக்கோலத்தோடு சென்று விவாகம் முடித்து அப்பால் அந்த ஆகாயக்கப்பலிற் றானே மணவாளியையு மேற்றியழைத்துக்கொண்டு பிரான்சுக்குச் சென்றனன்.

* * *

கடல்நீரில் பொன்.—நியூயார்க்கில் வசிக்கும் ஆஸ்டிரியா தேசத்து ரசாயன சாஸ்திரியான டாக்டர் ஆஸ்கார்மாகேல் என்பவர் 4,84,009 பவுண்டு செலவு செய்து யந்திரங்களமைத்தால் வருடத்திற்கு 260,000 பவுண்டு மதிப்புள்ள பொன், கடல் நீரினின்றும் எடுத்தல் கூடுமென்று கூறுகின்றனர் ; இவர் தினமொன்றிற்கு 60 பவுண்டு செலவு செய்தால் 720 பவுண்டு மதிப்புள்ள பொன் எடுத்தல் கூடுமென்றும், அங்ஙனம் செய்வதால் தினமொன்றிற்கு 660 பவுண்டு லாபங் கிடைக்குமென்றுங் கூறுகின்றார்.

* * *

மிஸ்டர் A. O. ஹியூம், ஐ. ஸி. எஸ்., காலமாயினர்.-இந்தியன் காங்கிரஸ் மகாசபைக்குப் பிரதான புருஷராகக் கருதப்பட்டு வந்த மிஸ்டர் A. O. ஹியூம் சில மாதங்களாக வியாதியாயிருந்து காலமாயினர். இவரது ஜீவியச் சுருக்கம் நமது போதினியில் பின் வெளி வரும்.

* * *

கிழவனாகாதிருப்பதற்கான ஒரு புது முறை.—மெட்சினிகால் என்னும் ஒரு பிரபல டாக்டர் கிழத்தனமுண்டாவதற்குக் காரணம் தேகத்திலுள்ள சில சிறு புழுக்களின் விஷமேயாமென்றும், அப்புழுக்கள் சர்க்கரையில் பிழைத்திருப்பதில்லை யென்றும், தேகத்தில் சர்க்கரை யுண்டாகுமாயின் இப்புழுக்க ளிறந்து போமென்றும் டாக்டர்கள் கூடிய ஒரு பெருஞ்சபையில் கூறினர். இவர் தேகத்தில் சர்க்கரையை யுண்டாக்கக்கூடிய புழுக்களைக் கண்டுபிடித்திருக்கின்றார். இப்புழுக்களை அவர் ஒரு வெள்ளை எலியின்மீது விட்டுப் பரீட்சைசெய்துபார்த்தார். அதற்குக் கிழத்தனமுண்டாகவில்லையாம். இனி யப்புழுக்களை மனித சரீரத்திற் செலுத்திப் பரீட்சை செய்ய வுத்தேசித்திருக்கிறாராம்.

ஒரு தீவில் புதையுண்டுள்ள பெருஞ்சொத்து.—வெனிசுவீலன் கடற்கரைக்கு 400-மைல் தூரத்தி லுள்ள காலப்பாகோ என்னுந் தீவிற்கு வடக்கே யுள்ள கோக்கோ என்னுந் தீவில் சுமார் 120-லட்சம் பவுண்டு மதிப்புடைய சொத்துக்கள் பூமிக்குள்ளிருக்கின்றனவாம். இவை பல வருஷங்களாகக் கடற் கொள்ளைக்காரர்களால் புதைக்கப்பட்டனவாம். இச் சொத்துக்களைக் கண்டுபிடித்தெடுக்கச் சிலர் துரைத் தனத்தாரின் அதிகாரம் பெற்று அங்குச் சென்றிருக்கின்றனர்.

* *

ஒரு விசித்திரப் பிரதிமை.—ஜப்பானில் சில காலங் கட்குமுன் ஒரு கனவா னிறந்துபோனர். அவரது ஞாபகார்த்தமாக ஒரு சிற்பசாஸ்திரி மின்சாரக் கருவி யமைத்து ஒரு பிரதிமை செய்து வைத்திருக்கின்றார். அது வாயைத் திறக்குமாம், மூடுமாம், கையைத் தூக்குமாம், முடக்குமாம், அந்தக்கனவான் செய்த பிரசங்கங் களை கிராமபோனிலமைத்து, அதனை யப்பிரதிமை யின் பின்புறத்தில் வைத்திருக்கின்றனர். அது பாடும் போது அப்பிரதிமை வாயைத் திறப்பதும் மூடுவது மாக விருப்பதையும் கையைத் தூக்குவதும் முடக்கு வதுமாக விருப்பதையும் பார்த்தால் அவரே பிரத்தி யட்சமாகப் பிரசங்கம் செய்வதுபோலிருக்குமாம்.

* *

சுரங்க வெடிப்பால் நேர்ந்த விபத்து.—இங்கிலாந்து தேசத்துக் கன்னிஸ்ய ரோகாசுக்கருகேயுள்ள டெனுபி சுரங்கத்தி னிரண்டிடங்களில் வெடிப்புண்டாயது. பின்வந்த சமாச்சாரத்தால் அச்சுரங்க விபத்திலிறந்தவாது தொகை 79 என்று தெரிகின்றது. நமது சக்கரவர்த்தியவர்கள் சுரங்கத்தின் வெடிப்புண்டாகிய விடத்திற்கு நேரேசென்று சுரங்கத்தினுள் 1000 அடி பரியந்தம் பூமிமட்டத்திற் கிறங்கிப்பார்த்து, தமது அநுதாபத்தைத் தெரிவித்தார்.

* *

பூகம்ப விபத்து.—இம்மாதம் ஐரோப்பா கண்டத்தின் கீழப்பாகத்தில் ஓர் பூகம்பமுண்டாயிற்று. கான்ஸ்டான்டிநோபிலின் அருகேயும் ஒரு நீடித்த பூகம்ப முண்டாயிற்று; சோர்லு என்னுமூரில் பூகம்பத்தால் ஒரு விளக்குக்கூண்டு விழுந்து விட்டது. 300 வீடுகள் தீப்பற்றி விழுந்தொழிந்தன. மார்மோராக் கடலில் தென்கரையிலுண்டான பூகம்பத்தால் அநேககிராமங்கள் பாழ்பட்டுப்போயின; அளவிறந்தன பேர் மாண்டனர். சானக்கிலுண்டான பூகம்பத்தால் அங்கொரு கிறிஸ்தவக்கோவிலும் மகம்மதிய மசூதியுமிடிந்துபோயின. கானேவிலும் ஹோராவிலுமுள்ள கடற்கரை விளக்குக்கூண்டுகள் பூகம்பத்தால் இடிந்துவிழுந்து பூமிக்குள் மறைந்துபோயின, அங்கு அநேக கிராமங்கள் தீப்பற்றி யெரிந்தொழிந்தன. ஹோராவில் 80 பேரிறந்தனர். 300 பேர் காயமடைந்தனர். மிரியோ பியடாவில் 300 பேரிறந்தனர். 600 பேர் காயமடைந்தனர். அங்கு இரண்டு கிராமங்கள் பூமிக்குள் மறைந்து போயின என்று தெரியவருகிறது.

பம்பாய்க் கவர்னர் நியமனம்.—தற்போது பம்பாய்க் கவர்னராக விருக்கும் ஸர் ஜார்ஜ் கிளார்க் அவர்கட்குப் பின் லார்ட் செம்ஸ் போர்ட் அவர்கள் பம்பாய்க் கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கின்றார்.

* *

ஸ்டாம்பு விற்பனை.—சென்னை ராஜதானியில் சென்ற வருஷத்தில் 1-கோடியே 27-இலட்ச ரூபாய்க்கு மேற்பட ஸ்டாம்பு விற்பனையா யிருக்கின்றது.

## புஸ்தக விமர்சனம்

## REVIEWS OF BOOKS

கல்யாணி.—இது ம-ா-ா-ஸ்ரீ, R. S. நாராயண ஸ்வாமி அய்யர் பி.ஏ., பி.எல்., அவர்கள் எழுதியது. துப்பறியும் நவீனங்களின் பகுப்பில் சேர்ந்த இக்கதை மிகு லாவண்யமாகவும் செம்பாகமாகவும் எழுதப்பெற்றுள்ளது. படிப்பவர் மனதைக்கவரும் தன்மை வாய்ந்தது. இத்தகைய கதைகளை யாவரும் விரும்பாதிருக்க முடியாது.

* *

பிரேமகாந்தன்.—இது "தாமரைப்பெண்" எழுதியது. தனது காலத்தை நல்லதாகச் செலவிடச் செய்யும் பெண்மணி யொருவள் எழுதுமிந்நூலில் பக்தியே மேலிட்டு விளங்குவது. இது அம்மாது இரண்டாவதாக எழுதும் நூல். முதலில் எழுதிய கோமளம் காஞ்சியாத்திரை என்னும் நூலினும் ஒழுங்கு படிந்து நடை சிறந்து விளங்கினும், மிகைபட மேற்கோள் கொண்டு விளங்குகிறது. மற்றும் வெளிவரும் நூல்களில் இதையும் கவனித்து எழுதுவாளாயின், தான் மனத்திற்கொண்டதைஎண்ணியவிதம் கையால்தீட்டும் தன்மை எளிதில் அடைவள். யாம் கூறும் இக்கூற்று அபிமானமே. எழுதுவோர் விருத்தியைக் குறித்தன்றி வேறன்று. இதை யுள்ளங்கொண்டொழுகல் நலமென எமக்குத் தோற்றுகிறது.

* *

ஜனகா மோஹன சாதுரியம் அல்லது எலிபிடிக்கும் பொறி, சுகுமாரதிலகம், நாகரீக பாரிஜாதம் : ம-ா-ா-ஸ்ரீ S. G. இராமாஞ்சலுநாயுடு அவர்கள் இயற்றிய இவை நன்ருக எழுதப்பட்டுள்ளன. ஹாஸ்ய ரஸம் நிறைந்து விளங்குவன, சிறுவர்கள் யாவரும் விநோதத்துடன் படிக்கக்கூடியவை. சித்திரப்படங்கள் நன்ருக அமைந்திருப்பின் நலமாயிருக்கும்.



ஆலன் ஒ. ஹியூம்.

# விவேக போதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."——திருவள்ளுவர்

தொகுதி V } பரீதாபி௵ புரட்டாசிமீ : 1912-௵ அக்டோபர்மீ { பகுதி 4

## ஈஷணாத்ரயம்

### THE THREE DESIRES

ஈஷணை என்னும் பதத்திற்கு ஆசை என்று பொருள். இவைகள் முக்யமாக மூன்று உண்டு. அவை யாவன: தாரேஷணை, தனேஷணை, புத்ரேஷணை என்பவைகளே. இவைகளுக்கு முறையே பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை என்று பெயர். இவைகளின் ஒழுங்கு மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்று தமிழ் சாஸ்திரங்களில் வழங்கி வருகிறது. இவைகளைச் சற்று மாற்றி பட்டினத்துப் பிள்ளையார் அன்னவிசாரம், ஸ்வர்ணவிசாரம், மாதரைப்பன்ன விசாரம் என்று கூறி ஸாதாரண மனிதர்களுக்கு இவைகள் இம்முறையே மனத்தில் தோன்றுகின்றன என்று வற்புறுத்துகிறார். இம்மாதிரி மூன்று விசாரங்களை வைத்து மனிதன் வாழ்நாள் எல்லாம் வீணாகி அவன் தவித்துத்தேற இடம் ஏற்படுத்திவிட்டார் ஈசன். இக்கருத்தைத்தான் பட்டினத்தடிகளும் 'என்ன விசாரம் வைத்தாய் இறைவா கச்சி யேகம்பனே!" என்று வியந்து வெளியிட்டிருக்கிறார்.

இவ்வீஷணைகளுள் எது ஒன்றிருந்தபோதிலும் மற்றவிரண்டும் வந்து சேர்ந்துவிடும். ஸகலமும் துறந்து சுகப்பிரஹ்மம் தகப்பனார் வீடுவிட்டு வெளியேறிப் போன காலத்தில் வ்யாஸர் புத்ரேஷணையால் இழுக்கப்பட்டு 'சுகா! சுகா!!' என்று கதறிக்கொண்டு பின் தொடர்ந்தார். சுகர் பின் திரும்பி நோக்காது முன்சென்றார். இவர்கள் ஒரு குளக்கரை வழியாகப் போக வேண்டி வந்தது. நிர்வாணிகளாகச் சில தேவமாதர்கள் அங்கு ஜலக்ரீடை செய்துகொண்டிருந்தனர். 16 வயது யௌவன புருஷரான சுகரைக் கண்டதும் அவர்களுக்கு யாதொருவிகாரமும் உண்டாகாததால் அவர்கள் ஜலக்ரீடையிலேயே இருந்துவிட்டனர். பின்னர் வந்த வ்யாஸ மஹரிஷியைக் கண்டதும் கரையேறி வஸ்த்ரங்களை உடுத்திக்கொண்டனர். இதற்குக்காரணம் என்ன என்று வ்யாஸர் கேட்க, 'உமது பிள்ளை எல்லாம் துறந்தவன். உமக்கோ இன்னும் புத்ரேஷணை விடவில்லை. மற்ற ஈஷணைகள் இல்லாமல் போகுமா? உம்மைக்கண்டதும் எங்களுக்குஜலக்ரீடையிலிருக்கமனம்தாளவில்லை'என்றனர். உலகவிஷயமாகப் பார்க்கிலும் மூன்று ஈஷணைகளுள் ஒன்றிருந்தால் மற்றிரண்டும் வந்துசேர்ந்துவிடும் என்பது எளிதில் விளங்கும்.

இவ்வீஷணைகளுக்கே உட்பொருள் ஒன்றுண்டு. மண்ணாசை அதற்காதாரமாகிய ஸ்தூலதேஹப்பற்றையும், பெண்ணாசை ஸூக்ஷ்மதேஹம் அதாவது மனப்பற்றையும், பொன்னாசை ஆபரணாதி ரூபபேதங்களுக்குப் பொன் ஆதாரமாக விருப்பதுபோல முற்கூறிய இரண்டு பற்றுக்களுக்கும் காரணமாகிய காரண தேஹப்பற்றென்றும் கூறுவர் பெரியோர். ஸாதாரணமாக மண்ணாசை முதலியவைகளை விட வேண்டும் என்று கூறும் சாஸ்திரப்படி நாம் அவைகளைவிட முயன்றால் அவைகளை வரவரக் குறைத்துக்கொண்டே வரலாம், அவ்வளவுதான்: முற்றிலும் விடமுடியாது. ஆனால் குருவாக்கின்படி நிஷ்டையிற் பழகி மூன்று தேஹத்திற்கும் அப்பாற்பட்டு நின்றால் குறைந்துவரும் இவ்வீஷணைகள் ஒழுங்காகத் தாமே கழன்றுகொண்டு வர நாம் இவைகளிலிருந்து முற்றிலும் விடுபடுவோம். ஆகவே நிஷ்டைசெய்யாச் சமயங்களில் வைராக்கியத்தை மேற்கொண்டு இவைகளிலிருந்து ஒதுங்கியும், நிஷ்டையில் இவைகளை முற்றிலும் மறந்து அப்யாஸம் செய்தும் இவைகளிலிருந்து நாம் விடுபட முயலவேண்டும். 'கிருஷ்ணா! மனம் சஞ்சலமுடையது; எப்படிப்பட்டவரையும் கலக்கிவிடும்; மிகுந்த பலமும், திடமும் உடையது. அதை அடக்க முயலுவது காற்றை அடக்க முயலுவதுபோல அஸாத்யமாக முடியுமல்லவா?' என்று கேட்ட அர்ச்சுனனுக்கு, இதுவரையிலும் இங்கு கூறப்பட்டுள்ள கருத்தை உள்ளடக்கியே பகவானும் 'மனத்தை அடக்குவது மிகக் கடினம்,ஸம்சயமே இல்லை. ஆயினும் அதன் சஞ்சலத்தை அப்யாஸத்தினாலும் வைராக்யத்தினாலும் ஸாவதானமாக அடக்கமுயலவேண்டும்' என்று மறுமொழி கூறியிருக்கிறார்.



விவேக போதினி

தொ. 5.] ஸ்ரீ தாபிஷூ புரட்டாசிமீ [பகுதி 4

# ஸ்ருஷ்டி விஷயம்

## 1. மகாப்பிரளயம்

## THE PRALAYA STATE

விசித்திரமான தோற்றத்தோடு கூடிய இப் பிரபஞ்சத்தை நோக்குபவர் ஒவ்வொருவரும் 'இது எவ்வாறு, எதிலிருந்துண்டாயிற்று?' என்ற கேள்வியைக் கேட்காமலிருக்கிறதில்லை. இந்தக் கேள்விக்கு எல்லோரும் தங்களுக்கேற்றபடி விடை கொடுக்கவும் முயலுகிறார்கள். இந்தச் சேதனசேதன ரூபமான பிரபஞ்சம் எப்படி உண்டாயிற்று? இது ஸர்வ வல்லமையுள்ள கடவுள் என்ற ஒரு வஸ்துவால் சிருஷ்டிக்கப்பட்டதா? அல்லது, இதிலடங்கிய அணுக்களின் ஸ்வபாவத்தால் உண்டானதா? முன் சொன்னபடி உண்டாக்கப்படுகிறதானால், கடவுள் இந்தப் பிரபஞ்சத்தைச் சூனியத்திலிருந் துண்டாக்கினாரா? அல்லது அசித்தாகிய பிரபஞ்சம் முதலில் குழப்பத்தோடு உருவில்லாமல் கிடக்க, அதை அவர் ஒழுங்குபடுத்தி உருவோடு தோன்றும்படி செய்தாரா? பின் சொல்லியபடி பிரபஞ்ச முண்டாகின்றதானால், இது உண்டாகும்படி செய்யும் அணுக்களின் ஸ்வபாவமும், ஸ்வரூபமும் என்ன? அவைகள் எப்படி உண்டாயின? அவைகள் இல்லாமலிருந்த காலமும் உண்டா? அல்லது அவைகள் எக்காலத்திலும் இருப்பவைகளா? கடவுள் ஒருவர் உண்டானல் அவர் எப்பொழுதாவது உண்டானவரா? அவருக்கு அந்தமுண்டா? தேகந்தோறும் வெவ்வேறாய்த் தோன்றும் ஜீவாத்மாவின் ஸ்வரூபம் என்ன? என இவைபோன்ற அளவிறந்த கேள்விகள் நமது மனதில் அடிக்கடி உதிக்கின்றன. இவைகளை எல்லாம் இங்கு எழுதப் புகுந்தால் விஷயம் மிகவும் விரியும். ஆகையால் யுக்திக்கும் அநுபவத்திற்கும், புதிய பிரகிருதிசாஸ்திரங்களுக்கும் ஒத்தனவாயும், நமது சாஸ்திரங்களில் தொன்றுதொட்டு உள்ளனவாயும், சரியானவையாயும் உள்ள பிரபஞ்ச உற்பத்தி, சிருஷ்டிக்கிரமம், இவ்விஷயங்களைப்பற்றி இங்குத் தொகுத்துக் கூறுவோம். இந்தச் சிருஷ்டி விஷயத்தைப்பற்றி நன்றாய் அறிந்துகொண்டால் நமது ஜீவதசையில் நேரிடும் கஷ்டமான நிலைகளிலும், மதவிஷயங்களில் வரும் இதுபோன்ற ஸங்கடநிலைகளிலும், உள்ளபடி அறிந்து நேர்வழியில் நடக்கவேண்டிய ஞானம் நமக்கு உண்டாகும்.

சிருஷ்டிக்கிரமத்தைத் தெரிந்துகொள்வதற்கு முன், மூன்று புதிய சொற்களின் பொருளை நன்றாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். இது நன்றாய் விளங்குவதற்கு ஒரு செடியின் திருஷ்டாந்தத்தை எடுத்துக்கொள்ளுவோம். அந்தச் செடி நன்றாய் வளர்ந்து செழிப்பதற்கு அதன் அணுக்கள் எலலாம் ஒற்றுமையாய் வேலை செய்தல் வேண்டும். சிறந்த குடும்பங்கள் ஒழுங்காய் நடத்தப்படும்பொழுது இதுபோலவே அதிலடங்கிய ஒவ்வொருவரும் ஒற்றுமையோடு உழைத்தல் வேண்டும். இம்மாதிரியான ஒற்றுமையாலே தான் குடும்பங்கள் எல்லாம் சீக்கிரத்தில் நல்ல நிலைக்கு வரும். இதுபோலவே செடி வளர்ந்து தழைப்பதற்கும் அதன் அணுக்கள் தம்முள் ஒற்றுமையாக இருக்கவேண்டியது அவசியம். இதுபோலவே ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர் வரையில் எல்லா உயிர்களையும் உற்று நோக்குங்கால் மூன்று விஷயங்கள் வெளியாகின்றன. அவ்விஷயங்கள் பின் வருபவைகளே: (1) ஒற்றுமை (அல்லது தெளிவு) என்பது வஸ்துக்கள்

செழித்து வாழ்வதற்குச் சகாயமானதாயும், (2) பொருத்தமின்மை (அல்லது மோஹம்) என்பது வஸ்துக்களை நாசம் செய்வதற்குச் சகாயமானதாயும், (3) பிரவிருத்தி (அல்லது மாறுதல்) என்பது முன் சொன்ன நிலைகள் இரண்டும் இருப்பதற்குக் காரணமாகியும் இருக்கின்றன. உலகத்தில் காணப்படும் ஸகல விஷயங்களிலும் இம்மூன்று நிலைகளையும் எப்பொழுதும் காணலாம். ஆனால் ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொன்று மேலாகி நிற்கும். செடிகள் பட்டுப் போகும் காலத்தில் அதில் அடங்கி இருக்கும் வஸ்துக்களே முழுவதும் நாசமடைவதால் அப்பொழுது பொருத்தமின்மை அல்லது மோஹம் என்ற நிலை ஓங்கி நிற்கிறது. ஒருவனுக்குச் சுகம் உண்டாவதற்கு அவன் தேகத்தின் பாகங்கள் எல்லாம் ஒற்றுமையாய் வேலை செய்ய வேண்டும். ஒற்றுமையின்றி வேலைசெய்யுமாயின், வியாதி பலக்குறைவு முதலிய துக்கங்கள் உண்டாகும். ஆகவே ஒற்றுமைக்குச் சுகம் என்ற பெயரும், மோஹம் என்பதற்குத் துக்கம் என்ற பெயரும் பொருந்தும். இவ்விரண்டு நிலைகளும் பிரவிருத்தி அல்லது மாறுதல் என்ற நிலையின் தொழிலாலன்றி உண்டாவதற்கு இடமில்லை. முன் சொன்ன செடியின் விஷயத்தில், முளைக்குங்கால் பிரவிருத்தி என்பது ஓங்கியும், மற்றிரண்டு அடங்கியும் இருக்கின்றன. முளைவிட்டுச் செழிப்பதில் ஒற்றுமையும், நாளுக்கு நாள் சீக்கிரம் விருத்தியாவதில் பிரவிருத்தியும், பழைய விரையுடைந்து நாசமாவதில் மோஹமும் வெளிப்படும். இதுபோல நல்ல செடியாய்ச் செழித்து வளர்ந்து கொண்டிருக்கும்பொழுது ஒற்றுமை ஓங்கியும், மற்றிரண்டு ஒடுங்கியும் இருக்கின்றன. இந்தச் செடி யழியுங்காலத்தில் மோஹம் ஓங்கியும் மற்றிரண்டு ஒடுங்கியும் இருக்கின்றன. இம்மூன்றிற்கும் நமது சாஸ்திரங்களில் குணங்கள் என்றும், ஒற்றுமை, மாறுதல், பொருத்தமின்மை என்பவைகளுக்கு முறையே ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் என்றும், பெயரிட்டு, அவைகளை முறையே வெளுப்பு, சிவப்பு, கறுப்பு என்ற வர்ணங்களாகவும் உருவகப்படுத்தி இருக்கிறார்கள். உயிர்ப்பிராணிகளை உற்று நோக்குங்கால் இக்குணங்கள் முறையே சுத்தம் அல்லது தெளிவு என்ற நிலையாகவும், சுறுசுறுப்பு என்ற நிலையாகவும், மந்தமல்லது சோம்பல் என்ற நிலையாகவும் காணப்படும். ஆகவே உலகத்தில் ஸ்தாவர ஜங்கம ரூபமாகிய ஸகல விஷயங்களிலும் இம்முக்குணங்களும் எப்பொழுதும் காணப்படுகின்றன. ஆனால் ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொன்று ஓங்கியும் மற்றிரண்டு அடங்கியும் இருக்கும். இதற்கேற்பவே கைவல்லிய நூலாசிரியரும்:—

"உத்தமம் வெளுப்புச் செம்மை யுரைத்திடு
கறுப்பு மாகும்
சத்துவ குணத்தி னோடு ரஜோகுணந்
தமோகு ணம்தான்
சுத்தமோ டழுக்கி ருட்டாச் சொல்லுமுக்
குணமு மூன்றாய்
ஒத்துள வேனுந் தம்முள் ஒருகுணம்
அதிக மாமே"

என்று எடுத்துரைத்திருக்கிறார்.

சிருஷ்டியைப்பற்றிச் சொல்லப் புகுங்கால், முதலில்சாதாரணமானவர்கள்கடவுள்தனதுஸர்வ வல்லமையால் எண்ணின மாத்திரத்தில் திடீரென்று சூனியத்திலிருந்து இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துவிட்டார் என்று எண்ணலாம். இதற்கும் சாஸ்திரத்தில் வெளியிட்டிருக்கும் உண்மைக்கும் வெகுதூரம். மதவேறுபாடுகளை வேறு இடத்தில் விஸ்தரிக்கப்போகிறோம். ஆகையால் தற்காலத்தில் இவ்விஷயத்தில் கடவுள் ஜீவாத்மா உலகத்திற்குக் காரணமான அசித்து ஆகிய இவைகள் அநாதியாய் இருப்பனவாக வைத்துக் கொள்வோம். இப்படி ஒத்துக்கொள்ளாவிட்டால் யுக்திக்குப் பொருந்தாத கொள்கைகளுக்கு இடமுண்டாகும். கடவுள் இல்லாமலிருந்த காலம் ஒன்றுண்டு என்று ஒப்புக்கொண்டு அவர் வேறொன்றால் சிருஷ்டிக்கப்பட்டார், என்றால், எல்லா மதங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட

ஓர் அஸ்திரத்தை மந்திரித்து அதைக் கிணற்றில் எறிந்தார். உடனே அது பந்தைக் கரைமேல் கொண்டுவந்து சேர்த்துவிட்டது, இதன் மூலமாக துரோணாசாரியர் பாண்டவ கௌரவர்களுக்கு ஆசாரியரானார்.

***

அடாது செய்தவர் படாது படுவர்.—விச்ரவஸ் என்ற ஓர் மகரிஷி இருந்தார். ஒரு அஸுர பெண் தனக்கு மஹா பராக்ரமமான குழந்தைகள் உண்டாகவேண்டுமென்று ஓர் அசுர முகூர்த்தத்தில் அவரிடம் வந்து யாசித்தாள். இந்தச் சமயம் அனுக்கிரஹம் செய்யக்கூடிய நல்லஸமயமல்லவே என்று ரிஷி எவ்வளவு தூரம் புத்திமதி கூறியும் கேளாத அப்பெண்ணுக்குக் குழந்தைகள் உண்டாகும்படி அநுக்ரஹித்தார். அவளிடத்தில் உண்டானவர்களுள் ராவணன் மூத்தவன். அவன் பிரம்மதேவரைக் குறித்துக் கொடுமையாத தவம் இருந்து சிறந்தவர்களைப் பெற்ற மகாபலவானானான். அந்த கர்வத்தால் அவன் புத்தி அதர்மத்திலேயே பாயத் தொடங்கிவிட்டது. முதலில் தகப்பனார்உத்தரவுக்கு மீறி தன் தமயன் முறையிலிருந்த குபேரனோடு சண்டையிட்டு அவன் புஷ்பக விமானத்தைப் பிடுங்கிக்கொண்டு லங்காபட்டணத்தைவிட்டு அவர்களைத் துரத்தி விட்டான். பின்னர் ராவணன் லங்கைக்கு அரசனானான். அங்கிருந்துஅவன்செய்தஅதர்மங்களுக்கு குறைவேயில்லை. பரஸ்திரீகளை உபத்திரவித்தல், ரிஷிகள் தவங்களை அழித்து அவர்களை கொல்லுதல், திக்கு திக்காய் சென்று அங்குள்ள அரசர்களை வலுச்சண்டைக்கு இழுத்து அபஜெயப்படுத்தல் முதலிய கொடுந்தொழில்களில் அவன் விடாது முயன்று கொண்டுவந்தான். வர பலத்தால் அவனுக்கு சென்றவிடமெல்லாம்ஜயம்வந்துகொண்டிருந்தது. இதனால் அவனுக்கு அதர்மகாரியங்களில் அதிக ஊக்கம் உண்டாயிற்று. அப்படியிருந்தும் சென்றவிடங்களிலெல்லாம் பெரியோர்களில் சிலர் அவன் உபத்திரவம் தாங்காது சபிக்க அந்தச் சாப மூட்டைகள் அதிகரித்துக் கொண்டே வந்தன. இதைக் கவனியாது மிகுந்த உத்ஸாகத்துடன் ராவணன் அதர்மத்தில் முனைந்து வேலை செய்யத் தொடங்க அவன்உணராமலே அவன்பலம்குறைந்து கொண்டு வந்தது. பலநாள் திருடன் ஒருநாள் அகப்படுவானென்ற கதையாக எங்கும் அதர்மம் செய்து ஜயமடைந்து வந்த ராவணன் பரம்பொருள் அவதாரமான ராமர் விஷயத்தில் அதர்மம் செய்ய எண்ணி அவர் தர்மபத்தினியாகிய ஸீதையையிலங்கைக்கு. கவர்ந்து சென்றான். அங்கு அவளை சிறையில் வைத்து தொந்தரை செய்தான். லோகமாதாவாகிய சீதாபிராட்டியார்க்கு செய்த துன்பமே பின்னால் அவனுக்கு யமனாகவந்து இராமபிரானது மூலமாக அவன் ஊர் உறவு எல்லாமழிய கொல்லப்பட்டான்

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

## த்ரௌபதி அல்லது மனத்தினிலை

### 4. அவைநடு வுற்ற காதை

ஒழிக்கவேண்டுமென்று அரக்கு மாளிகையிற் கொளுத்தி அழித்து விட்டோமென்றிருக்க பாண்டவர்களோ மச்சயந்திரத்தை அர்ஜுனன் மூலமாக அடித்து த்ரௌபதியை மணந்தார்களென்று த்ருதராஷ்ட்ரனுக்குத் தெரிந்தது அரசமரத்துப் பேய் அடித்தாலும் துலையாதென்றாற்போல பாண்டவர்கள் அழியாதிருப்பதைக்கண்டு மனவெறுப்பொருபக்கம் நிற்க, விதுரர் த்ரோணர் பீஷ்மர்முதலியோரது வேண்டுகோளாலும் த்ருபதனது கோட்பாட்டினாலும் ஒருவாறு த்ருதராஷ்ட்ரன் பாண்டவர்களுக்குப் பாதிநாட்டை யளிக்கஒத்துக்கொண்டான். இந்த்ரபிரஸ்தம் என்னும்தலைநகர் ஒன்று உண்டாக்கி அதில் தருமர் தனது தம்பிமாரோடும் த்ரௌபதையோடும் அரசு செலுத்தி வந்தனர்.

இவ்வாறிருக்க நாரதரென்னும் மஹாரிஷி அவ்விடம் வந்து தருமரை நோக்கி ‘ஸுந்தோபஸுந்தரென்னும் இரண்டு ராக்ஷஸர்கள் ஓர் பெண்மேல் மோஹங்கொண்டு என்றும் இணைபிரியாதவர்கள் அப்பெண்ணால் பிரிந்து மனங்கெட்டு ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டு மாண்டுள்ளார்கள்’ என்னும் கதையைக் கூறி ‘ஹே! தருமபுத்ர! நீங்கள் ஐவரும் ஒரே மடைந்தையைப் பத்தினியாக அடைந்திருக்கிறீர்கள். அது ஓர்வேளை மனத்தைப் பிரிப்பதற்கு ஹேதுவாக இருப்பினும் இருக்கலாம். அடைந்து பின் ஒழிக்கலாமென்பதைக் காட்டிலும் அவ்விதமான கார்யங்களைத் தடுத்தலே நன்மைபயக்கும். ஆகையால் உம்முள் த்ரௌபதையின் விஷயத்தில் சில நிபந்தனைகள் செய்துக்கொண்டு தவறின்றி அவைகளை அநுஸரித்து வரவேண்டும்” என்றார்.

பின் தருமர் நாங்கள் என்னசெய்யவேண்டுமென்று வணங்கிக்கேட்க “நீங்கள் சில முறைமைகொண்டு வாழவேண்டும். உம்முள் ஒருவருள் ஒருவர்க்கு மனவேறுபாடில்லாது இருப்பதற்கு நான் சொல்லியவண்ணம் செய்வீர்களானால் நன்மையாயிருக்கும். த்ரௌபதை ஒவ்வொரு வருஷம் ஒவ்வொரு கணவனோடு வாழவேண்டும். அவ்வவ் வருஷங்களில் மற்றையோர்களைக் கணவர்களாகப் பாவிக்கக்

கூடாது. நீங்களும் அவ்வாறே இருக்கவேண்டும். வருஷமுடிந்ததும் மற்றொருவனைக் கணவனாகப் பாவிக்கவேண்டும். இவ்வாறே ஐவரையும் வருஷத்திற்கொருவரை பர்த்தாவாக அடைந்து கிரமமாக வாழவேண்டியதவள் கடமை. நீங்களும் அவள் ஒருவனைப் பர்த்தாவாகப் பாவித்து அவனோடு ஏகாந்தமாக இருக்குங்காலத்து மற்றைய நால்வரில் ஒருவர் காணும்படி நேரிடுமானால் நிபந்தனைக்கு மாறுபாடாக நடந்ததற்காகப் பன்னிரண்டு வருஷம் தீர்த்தயாத்திரை செய்து அப்பாபத்தைப் போக்கிக் கொள்ளவேண்டும். பாபம் என்பதை ஜாக்ரதையோடு கவனியுங்கள். அவள் ஒருவனோடு இருக்க அவனுக்கு மனைவியானாளே ஒழிய உங்களைவரையு மணந்திருப்பினும் எல்லாருக்கு மனைவியாகமாட்டாள். இதுதான் உமது நிபந்தனை. அதைத் தவறுவது பாதிவ்ரத்ய பங்கதோஷத்திற்குக் காரணமாகும். இதனை நீங்கள் அனுஸரிப்பதே அவளுக்கும் 'ஐவரையடைந்தாளிவள்' என்னும் பழி சேராதிருப்பதற்கும், உமக்கும் 'ஐவரும் ஒருவளையே மணந்தார்' என்னும் இழிவு வாராதிருப்பதற்கும் வரையறை ஆகும்'' என்று நாரதர் சொல்லிய மொழிகள் எல்லார்க்கும் நியாயமென்றுபட அவர் கூறிய ஒழுங்கின்படி ஒழுகிவந்தனர்.

இவ்வாறொழுகுநாளில் ஓர்நாள் ஓர் எளியவனுக்குதவிசெய்யும் பொருட்டுத் தனது வில்வேண்டியிருந்த காலத்துத் தருமரும் த்ரௌபதையும் ஏகாந்தமாக விருந்த காலமாயிருந்தும், தான் ஓர் ப்ராஹ்மணனுக்குதவிசெய்வதற்காகப் பன்னிரண்டு வருஷம் தீர்த்தயாத்திரை செய்யவேண்டி வருமாயினும் ஆகட்டும் என்று உட்சென்று வில்லை எடுத்ததோஷத்திற்கு, தீர்த்த யாத்திரைசெய்து பலமனைவிகளை அடைந்து வந்தனன். இதற்குள் நாரதர் தரும புத்திரரைப் பாண்டுவின் கோரிக்கைப்படி தருமனை இராஜஸூய யாகஞ் செய்யும்படிச் சொல்ல அவரும் தனது தந்தை இந்திர பதவியை அடையும் பொருட்டு யாகத்தை நன்றாகச் செய்தனன். அதிலொரு விஷயம் நடந்தது. இராஜஸூயயாகத்தில் கொலையாவது மனத்தைக் குதூஹலத்திலிருந்து தடுக்கும் வேலைகளையாவது செய்வது தகாது. ஆனால் அவ்வாறு இங்குச் செய்ய முடியவில்லை. அவ்யாக முடிவில் யார்க்கு அக்ரபூஜை அளிக்க வேண்டும் என்றுகேட்க பீஷ்மர் மானிடவுருவில் மயங்கி வளரும் மாயக்கண்ணனே அதைப் பெறத் தகுந்தவனென்றான். இது எல்லாருக்கும் நன்றெனப்பட்டது; ஆயினும் சேதி தேசத்தரசனாகிய சிசுபாலனது மனத்தைச்சுட்டது. "நன்று நன்று! அரசர்களெல்லாமிருக்க ஓர் ஆட்டிடையனுக்கு அக்ரபூஜை அளிப்பது! இந்திர ஜாலத்தில் வல்லவன் இவனுக்கு அக்ரபூஜை! இவன் பெருமையை யார் அறியார்! கோவியர்களது கற்பை யழித்தவன். திருடன். உரலிற் கட்டுண்டவன். பலரால் அடியுண்டவன். பெண்களது சேலையைக்கவர்ந்த திருடன். ஸ்த்ரீலோலன். காமி. வம்பன். நெறியற்று திரிபவன். தாயையும் அடக்கும் தறிதலை. இவனை அறியாதவர் யார். இவனுக்கு அக்ரபூஜை! அரசர்க்கு இது முறைமை! நன்று! நன்று!—'' என்று பலவாறு உளற கோபங்கொண்டு அவன் சிரத்தை ஸ்ரீ வாஸுதேவன் தனது சக்ராயுதத்தால் துண்டித்தனர். ஆனால் தருமருக்கொன்று ஞாபகம் வந்தது. அது நாரதர்சொல்லியமொழி யாகத்தில்யாதேனும்தடையுண்டானால் எல்லா க்ஷத்ரியரும் மாளும்படியான ஒரு கொடியயுத்தம் நடக்குமென்பதே. வியாஸரிடம் தனது மனக்குழப்பத்தைத் தருமர் கூறியதும் "கவலையுறேல், அதனால் என்னபயன். பதின்மூன்று வருஷங்களிற்குப் பின் உன் மூலமாகவே ஓர் பெரும்யுத்தம் நடக்கும். நீ மனம் தளர்வதில் பிரயோஜனமில்லை'' என்று சொல்ல தருமருக்கு இன்னமும் மனநோய் அதிகமாகிறது.

இவ்வாறு இங்கு இருக்க த்ரௌபதிக்கு மிகச்சந்தோஷமாகி காலம் நடந்து வந்தது. தான் பட்டமஹிஷியாக இருந்து இராஜஸூய யாகத்திற்குத் தலைவியாக இருப்பது, தனது நாயகர்களை எல்லாம் வணங்குகிறார்களென்ற ஓர் எண்ணம், தனக்கு நிகரானவர்கள் குணத்திலாவது, அழகிலாவது பொருளிலாவது இல்லை என்னும் மனத்தின் நிலைமை, பெண்பாலார் எல்லோரும் தன்னை வணங்குகின்றனர் என்னும் பெருமை—இவை முதலாகிய குணங்களும் அக்குணங்களோடு ஸம்பந்தப்பட்ட செயற்கையும் அவளை ஓர் உத்ஸாக நிலையில் இருக்கும்படிச் செய்தது. அது எல்லாரையும் பரிஹஸித்தல், எளியோர் வருந்துவதில், அவர் வருந்தவேண்டும் என்ற எண்ணம் இல்லாவிடினும், அவர் படும் பாதைகளில் வேடிக்கைப் பார்த்தல் முதலாகிய குணங்களில் திரும்புவது அதிசயமன்று. த்ரௌபதியும் இவ்வழிக்கு முற்றும் இல்லாவிடினும், கொஞ்சமேனும் ஆளாகவில்லை என்று யார் தைரியமாகக் கூறுவார்கள். அவ்வாறு அவள் ஒழுங்குபடாதிருப்பின் துர்யோதனன் யாகசாலையைப் பார்த்துவரும் காலத்தில் மேடுபள்ளம் தெரியாது ஸ்படிகத்தில் ப்ரதிபலனமாகையால் உள்ளது இல்லது தெரியாது தத்தளித்து வருங்காலத்தில் அவனைப்பார்த்துப் பகபகவென்று சிரிப்பாளானால் ஓர் வேளை அது ஸ்த்ரீகளின் விநோதகுணமோ? ஒருவன் கஷ்டப்படுவதைப் பார்த்து ஆனந்திப்பதும் ஆகுமோ? அதனால் கேடு வராதோ? என்னமோ பார்ப்போம். பின்னால் தெரியாது போய்விடுமோ?

"கணவன் அடித்தது படவில்லை சக்களத்தி சிரித்தது பொறுக்கவில்லை'' என்றார்போல தான் தத்தளித்து நடப்பதைக் கண்டு எல்லாரும் நகைப்பினும் த்ரௌபதி நகைத்ததைப் பார்த்துதுரியோதனன் மனம் பொறுக்கவில்லை. அவளை ஏளனஞ் செய்யவேண்டும் என்ற எண்ணமே அவன் மன

முழுதுங்குடிகொண்டது. அதை எவ்வாறு செய்வது; எவ்விதம் செய்வது என்பதையே ஆலோசித்துக் கொண்டிருந்தான். மேலும் எல்லோரும் தன்னைக் கண்டு சிரிக்க தருமன் தனக்குதவி செய்யும்படியாயிருந்ததே என்று எண்ணுமல் அவனுக்கும் அவனேடு சேர்ந்தயாவர்க்கும் கெடுதி செய்வதெவ்வகை என்று யோசித்துக்கொண்டு பாரம் மேற்கொண்டவன்போல சிந்தனையிலாழ்ந்து வெகு ஜாக்ரதையாக அடிபெயர்த்து நடக்கலானன். சில ஸமயம் ஏதோ ஓர் நிச்சயமான வழித்தோன்றிவிட்டதென்ற ஆர்வமடைந்தவன்போலக்குதித்து நடப்பானுயினும் தன்னை அவமதித்தாளல் லவா என்ற எண்ணம் அவன் மனதிற் பாய்ந்து வேலைசெய்ய தன்வசம் தனக்கில்லாதவன் போல் நடக்கலானன். பின் தனது விடுதி சேர்ந்து ஹஸ்தினபுரஞ் சேர்ந்தான்.

அஸ்தினபுரி மிக்க வளப்பமோடு அலங்கரிக்கப் பட்டிருந்தது. தெருவின் வரிசையும், அவைகளில் எங்கும் பூரணகும்பம் பொலிவோடு விளங்குவதும், கோட்டையின் உச்சியில் பாம்புக்கொடி காற்றிலலைவதும், அகழிமுற்றும் விசாலித்தாழ்ந்து இயற்கையுஞ் செயற்கையுங் கலந்து திகழ்வதும், உய்யானவனங்கள் முழுதும் புதிதாகச் செய்குன்றுகளியற்றி அவற்றின் உச்சியில் நீரூற்றுகள் மேற்பாய்ந்து நீருவியாய் விழுவதும், எங்கும் தோரணங்களும் மயிற்பிச்சங்களும் ஆலவட்டங்களும் பரவி பந்தலில் புணர்ந்திருப்பதும், பாதைகள் முழுதும் செப்பஞ் செய்யப்பட்டு ஓர்பெரும் ஆஸ்தான மண்டபத்திற்குச்சேரும்படி திருந்தப்பட்டிருப்பதும் யாவர் வருகையையோ எதிர்ப்பார்த்தாற்போல இருந்தது. அன்றி மண்டபமும் பலவித அரசசின்னங்களும் இருப்பிடங்களும், ஆஸனபந்திகளும் அவற்றிற்கு எதிரில் உயர்ந்தமேடையில் விளங்கும் அரியாஸனமுமிவை எல்லாம் பார்த்தவர்கள் பிரமையுள் ஆழ்ந்து விடுவாராயினர். அதில் அநேக ஜன ஸமூஹத்தோடும் பெரும் இரைச்சலோடும் அநேகர் வந்திருங்கினர்கள். தருமன் முதலியோரும் த்ரௌபதி முதலியோரும் மிக்க முகமனேடு அங்கு அழைக்கப்பெற்றூர்கள். இவர்கள் இந்திரபிரஸ்தத்திலிருந்து துரியோதனநியர்களின் வேண்டுகோளின் மேல் வந்தவரே ஒழிய வேறில்லை. வஸந்தகாலத்தில் தருக்களின் ஸமூஹத்திலும் கொடிகளின் கட்டங்களிலும் மலையினுயரங்களிலும், பசேலென்று பூத்து நிற்கும் மரக்கூட்டத் தொகுதிகளிலும், மேலுயர்ந்தோங்கி பனிமூடிய உச்சிகளிலும் கவனத்தைச் செலுத்தி, மான்பிணை முதலிய அரிய மிருகங்களோடு விளையாடவும் கொடியமிருகங்களோடு வேட்டையாடவும் உத்ஸாகத்தோடு பொழுதுபோக்கவும் இவர்களைத் துரியோதனன் அழைத்ததாகத் தெரியவரும். விளையாட்டே வினையாய் முடியுமென்பது மாத்திரம் என்றேனும் பொய்த்ததுண்டோ? அது அனுபவித்தவர்க்கே தெரியும், (தொடரும்)

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

உபாத்திமைச் சங்கம், திருமங்கலம்.—இச்சங்கத்தின் முதலாவது ஆண்டின் மஹோத்னவம், ஸெப்டம்பர்மீ 24வ சனிக்கிழமை பகல் 1-மணிக்கு ஷை ஹைர்போர்டுஸ்கூல் கட்டடத்தில் வெகுவிமர்சையாய்க் கொண்டாடப்பட்டது. ஸ்கூல் இன்ஸ்பெக்டர் மிஸ்டர். R.G. க்ரீவ், அவர்கள், M.A., அக்ராஸனம் வஹித்தார்:—முதலில், அச்சங்கத்தின் 1910-ம்வூ ஆகஸ்டுமீ 31வ முடிவாயுள்ள ஆண்டில் அபிவிருத்தி விஷயங்களைப்பற்றிய ரிபோர்டு அச்சங்கத்தின் அக்ராஸனுதிபதியான ம-ா-ா-ஸ்ரீ, வி. பி. சுப்ரமண்ய அய்யர் B.A. அவர்களால் வாசிக்கப்பட்டது. பிறகு ஷை சங்கத்தின் செக்ரடிரியும், அவ்வூர் போர்ட் ஸ்கூல் ஹெட்மாஸ்டருமான ம-ா-ா-ஸ்ரீ, வி, சுந்தரேசசாஸ்திரிகள் அவர்கள் (Solar System) ஸூர்யனும் அதைச் சுற்றிய கிரஹங்களும் என்பதைப்பற்றி அங்குக் கூடியிருந்த உபாத்திமார்களுக்கும் பிள்ளைகளுக்கும் சித்ரப்படங்கள் மூலமாக எடுத்துச் சொன்னபின், ம-ா-ா-ஸ்ரீ, அமெரிக்கன் மிஷன் ட்ரெயினிங் ஸ்கூல் ஹெட்மாஸ்டர் S. சின்னய்யா, B.A., அவர்கள், ஸன்மார்க்கப் பயிர்ச்சியைப்பற்றி வெகு தெளிவாய் எடுத்துச் சொன்னர். பிறகு Mr. R. G. க்ரீவ் அவர்கள் அங்குக் கூடியிருந்த உபாத்திமார்களுக்கு தான் சொல்லவேண்டியவை முழுவதும் தமிழில் சொல்லமுடியாதென்றும், தான் இங்கிலீஷில்பேசப் போவதை அங்கிருந்த மதுரை காலேஜ் ம-ா-ா-ஸ்ரீ ஏ. ராஜாராம் அய்யர் அவர்கள் தமிழில் தெளிவாய்ச் சொல்லுவாரென்றும் சொன்னர். எலிமெண்டரி பாடசாலைகளின் உபாத்திமார்கள் நடந்து கொள்ள வேண்டியதைப்பற்றிச் சில புத்திமதிகள் இங்கிலீஷில் கூறினர். பின் நடக்கவேண்டியவர்களுக்குத் தான் இருக்கக்கூடவில்லைஎன்றும் ம-ா-ாஸ்ரீ ராஜாராம் ஐயர் அவர்கள் தான் இங்கிலீஷில் பேசியதை அவர்களுக்குத்தமிழில் எடுத்துச்சொல்லும்படி சொல்லிவிட்டு, 2½மணிக்கே மதுரைபோய்விட்டார். சங்கமும் சொற்பகாலத்துக்கு கலைந்து மறுபடி 3-மணிக்குக் கூடியதும், ம-ா-ா-ஸ்ரீ ஐயரவர்கள் இன்ஸ்பெக்டர் பேசியதைத் தெளிவாய் தமிழில் எடுத்துச்சொன்னர். கிராமோ போன், பாட்டுக்கச்சேரி முதலியவைகள் பிற்பாடுநடந்தன. அன்றைக்காகத் தயார் செய்யப்பட்ட நான்கு திருடர்கள் எனும் கதைநாடகரூபமாக, திருமங்கலம் பள்ளிகூடச் சிறுவர்களால் வெகுஅழகாக நடித்துக் காண்பிக்கப்பட்டது நாடக விருத்தியையே கைக்கொண்டவர்களைக் காட்டிலும், அச்சிறுவர்கள் ஆக்டு செய்தது ஒவ்வொன்றும் வியப்பைத் தந்தது. இதைப்பார்க்க அவ்வூர் ஜனங்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். ஆரம்பம் முதல் முடிவுவரை மிகவும் திருப்தியாகவே இருந்தது. இச்சங்கத்தின் கொண்டாட்டத்தை ஸரிவர

நடத்த ம-ா-ா-ஸ்ரீ, வி. பி. சுப்ரமண்ய அய்யரவர்கள், ம-ா-ா-ஸ்ரீ, கிருஷ்ணசாமி அய்யரவர்கள், ம-ா-ா-ஸ்ரீ, வி. சுந்தரேச சாஸ்திரிகள், இவர்கள் எடுத்துக்கொண்ட சிரத்தையும், சிரமமும், மெச்சத்தக்கதே.

***

இராமநாதபுரம் ராஜாவும், தமிழ்ச்சங்கமும்.—சீரும் செல்வமும் ஒருங்கே ஓங்கிவளரும் பாரத தேசத்து பாண்டிநாட்டின் கண்ணே ராமனாதபுரம் சமஸ்தானமொன்றுளதல்லவா? இச்சமஸ்தானத்திற் கிறைவராயமருபவர், நல்ல விவேகசாலிகளாயும் மிக்க கற்றவர்களாயு மிருந்தே வந்திருக்கிறார்கள். காலஞ்சென்ற பாஸ்கர சேதுபதி மகாராஜாவும், கற்றோரை யாதரித்தது மன்னியில், தமிழை வளர்க்க மிகுந்த பிரயாசை யெடுத்துவந்தார். வித்வான்களின் குழாம் என்று பொலிவுபெற்று விளங்கும் அவர்காலத்தில், அநேக அரியநூல்க ளச்சிடப்பட்டன.

நிற்க. அவருக்குப் பின்னால் சென்ற மாதத்தில் சிம்மாசனமேறிய இளவரசும் மிகுந்த புத்திசாலியாக விருப்பதோடு வித்வக்கூட்டத்தை யாதரித்து வருவதாயும் தாய் பாஷையின் மீது, மிகுதியும் ஆசையுடையவராயும், இராமனாதபுரத்திலேயே ஒரு தமிழ்ச்சங்கம் ஸ்தாபிக்கத் தீர்மானித்திருப்பதாயும், மதுரையினின்றும் வெளிவரும் "வித்யா பானு" ப்பத்திரிகையின் மூலமாயறிந்த நாம் மிகுதியும் சந்தோஷிக்கிறோம். அதிபால்யத்தில் இத்தகைய சிறந்த குணமேற்பட்டது சாலவு மெச்சத்தக்கதே. சென்ற சில வருடங்களாய் ஆதரிப்பாரின்றி, வெளி நாடுகளிலலைந்து திரிந்த, வித்வ கோஷ்டிகளுக்கொரு ஆதாரவு ஏற்பட்டது ஆனால் பாத்திரமறிந்து, கொடுப்பன கொடுத்து கடைசிவரை நிதானமாயிருந்து வரப் பிரயாசப்படுவதுதான் அவருடைய முக்கிய கடனாக விருக்கவேண்டும். ஆதரிப்பாரின்றித் தத்தளிக்கும் தாய்ப்பாஷையைப் புரக்க வந்த இப்புண்ணியருக்குக் கடவுள், நீண்ட ஆயுளையும், பூரண சௌகரியத்தையுமளிக்குமாறு, கருணையங்கடவுளைப் பூராமனதுடன் நாம் வழிபடுகின்றோம்.

***

"கீழைந்தேச இராணி"—கற்குத்தாவைக் கிழக்குத்தேசங்களுக்கெல்லாந் தலைஸ்தானமாக்கி வைப்பதற்கு இந்திய அரசாட்சியார் முயற்சிக்கின்றனர். இராசமாளிகைகள் கோட்டை கொத்தளங்கள் யாவையும் அரணிப்பாக்குவதற்கு யோசனை நடக்கின்றது. 15 மைல் விஸ்தீரணத்துக்கு நகரி பருப்பிக்கப்படும். இதற்கெல்லாம் 8,25,00,000 ரூபாய் மதிப்பிட்டிருக்கிறார்கள். எல்லாம் முடிந்தபின் கிழக்குத்தேச இராணி என்னத்தக்க சிறப்புப்பெற்று விளங்குமாம்.

***

கள்ளரைத் திருத்தல்.—இந்தியாவிலே கள்ளச் சாதி என ஒருசாதி யுண்டு. இந்தச்சாதியில் 30 இலட்சக்குடிகள் வரையிலிருக்கிறார்கள். களவு தொழிலே இவர்களுக்குப் பிறவித்தொழிலாகும். இப்படிப்பட்டவர்களை முற்றும்த்திருத்தி நயப்படுத்தும்படி இரட்சண்ணிய சேனைத்தலைவராகிய ஜெனரல் பூத் அவர்கள் துணிந்திருக்கிறார். இந்தநோக்கத்துக்காக அவர்களைத்தமது பொறுப்பில் விடவும், குடியிருப்புக்கும், பயிர்ச்செய்கைக்குந் தேவையான நிலங்களை அவர்களுக்குப்பிரித்துக்கொடுக்கவும், இந்தியதாரிய மந்திரியாகிய மோளி அவர்களைச் ஜென்ரல் பூத் அவர்கள் கேட்டிருக்கிறாராம்.

***

ஓர் பெரிய போர்க்கப்பல்.—உலகத்திலுள்ள போர்க்கப்பல்கள் எல்லாவற்றுள்ளும் பெலத்தாலும் பருமனாலும் முதன்மை பெற்றுள்ள போர்க்கப்பல் பிரித்தானிய இராச்சியத்துக்குச் சொந்தமானதாயிருக்கின்றது. இதுபுதிதாயமைக்கப்பட்டுச் சென்ற மாதம் 20ந்திகதி கடலிலிறக்கப்பட்டது. இறக்கப்பட்ட காட்சியைப்பார்க்க 40,000 ஜனங்கள் துறைமுகத்திற் கூடினார்கள்.

***

பேதி.—ருஷியா தேசத்திலே பேதிநோய் ஒரு வாரத்தில் மாத்திரம் 7000 பேருக்குண்டாகி, 3000 பேரை வௌவிற்று.

***

மரணதண்டனை யின்மை.—ருஷியாதேசத்திலே தூக்கிக்கொல்வது வேறெவ்வகையாவது மரண தண்டனை செய்யும் வழக்கமில்லை. கடுங்குற்றவாளிகளும் இராசதுரோகிகளும் சீபேரியா தேசத்துச் சுரங்கங்களுக்கு அனுப்பப்படுகிறார்கள். இராணுவப் பகுதியைச்சேர்ந்தோர்க்குள் இராசதுரோகம் முதலான கடுங்குற்றங்கள் காணப்படுமாயின் அவர்களைப்

பீரங்கிவாய்க்கிலக்காகவைத்துச் சுட்டுக் கொன்று போடுவார்களாம்.

***

துடிவெறியைவிட மருந்து.—மதுபானிகள் தம் தாகத்தை யடக்க விரும்பினுல் திறமான அப்பிள் பழம் புசித்தல் நல்லதென ஓர் வைத்தியர் கூறுகின்ருர். அதன் சாரத்துக்கு இவ்வகைச் சக்தியுண்டாம். இலேசான வழியாயிருப்பதால் விரும்பினோர் சோதித்தறிக.

***

அமெரிக்காவுக்குச் செல்லும் இந்தியர்.—இந்தியரிற் பெருந்தொகையானேர் அமரிக்காவிற் பிழைக்கச்சென்றிருக்கிருர்கள். பின்னு மனேகர் அங்கே போகிருர்கள். கலிபோர்ணியாவில் மாத்திரந் தற்பேதிருப்போர் தொகை பதினுயிரத்துக்கு மேலாம். கணடாதேசத்தில் குளிர் தாங்க முடியாததலால், அங்கு செல்வோர்தொகை அதிகமல்லவாம். இந்தியர்காலத்துக்குக்காலம் அதிகம் அதிகமாய்ப்போய்ச் சேருவது அமரிக்கருக்கு மிகுந்த வெறுப்பைக்கொடுக்கின்றது. அவர்கள் ஜப்பானியர், சீனர் முதலானவர்களுக்கு காட்டும் வெறுப்பைவிட இந்தியருக்கே அதிகவெறுப்புக் காட்டுகின்ருர்களாம்.

***

அநுதாபக் கடிதங்கள்.—இதுவரையில் அலெக்சந்திரா மகாராணியவர்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டிருக்கிற அநுதாபத் தந்திச் செய்திகள் 11,000. கடிதங்கள் 15,000.

***

சர்க்கரையின் குணம்.—பலத்தையூட்டுவதிற் சர்க்கரை சிறந்தபண்டமென்று இப்போது ரூபகாரமாயிருக்கின்றது. யுத்தகளத்திலிருக்கிற ஜெர்மன்போர்வீரர்களுக்குரிய ஆகாரத்திற் சர்க்கரையும் ஒன்ருகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. மேலும் அதிகமாய்ச்சர்க்கரைசேர்ந்தபண்டத்தைச்சாப்பிடும்போது மஸ்துண்டாக்கும்படியான வஸ்துக்களின்மேல் விருப்பங் குறைந்துபோகிறதென்றுஞ் சொல்லப்படுகிறது.

***

அதிக உயரத்துக்குப்பறந்த ஆகாயவிமானம்.—இங்கிலாந்து தேசத்தவரான மெஸ்டிரெச்சல் என்னும் ஓர் துரைமகன் சிலநாட்களுக்கு முன்னே தனது ஆகாயவிமானத்தை மிக உச்சத்துக்குச் செலுத்திச் சென்ருன். விமானம் அதி உயரத்தில் முகில்களினூடே சென்று மறைந்துவிட்டதாற் கீழ்நின்று காட்சி பார்த்தோர் கண்களுக்குச் சிறிதும் புலப்படிலது. ஆகையால் அவருக்கும் விமானத்துக்கும் ஏதோ அபாயமுண்டாயிருக்க வேண்டுமென அவர்களெண்ணிக்கொண்டிருக்க அவன் ஒருமணி நேரத்தின்பின் 15 மைல் தூரத்துக்கப்பாற் சேமமாய்த் தரையிலிறங்கினன். ஆகாயத்தில் 6000 அடி உயரத்துக்குமேலே சகித்தற்கரிய குளிரிருந்ததாகவும், அந்தப்பகுதியிலே விமானத்தின் கெதி மிகத்தணிவாயிருந்ததாகவும் இவர் தெரிவித்திருக்கிருன். இதுவரையில் இவ்வளவு விரைவாய்ஆகாயவிமான மூலம் மேலெழுந்தவரும், அதிக உயரத்துக் கெழுந்தவரும் எங்குமில்லையாம்.

---

## புத்தகக் குறிப்பு

### மாம்பழம்

மாம்பழம்.—ஒட்டு மாம்பழக்கன்று செடிகளை பயிர் செய்து வியாபாரஞ் செய்யும் சேலம் அப்துல் ரஹிமான் சாயபு அவர்களின் வேண்டுகோளிற்கிணங்கி, பலபாஷாந்திரக்ரந்த ஸாரங்களைக்கொண்டும், அனுபவஞானத்தைக் கொண்டும், தென்னிந்தியவியவஸாயப் பத்திராதிபரும், பென்ஷன் வியவசாய இன்ஸ்பெக்டருமாகிய ஜீ. ராஜுகோபால் நாயுடு அவர்களால் எழுதப்பட்டது. இப்புத்தகம் இதில் மாமரவகைகளும் அவைவிளையு மிடங்களும்; நாற்றைவளர்க்கும் விதமும் அவற்றின்பேதமும, ஒட்டுகட்டுதலின் விதமும், பயனும்; சூட்டுக்கொடியதும் அதற்கிடவேண்டிய உரம் முதலிய விசேஷங்களும், விருத்திசெய்யும் வகையும், பலபேதமும் அவற்றிற்குக் காரணம்; மகாவினத்தைக் கெடுக்கும் புழுக்களை ஒழிக்கும் விதமும் பருக்கவைக்கும் விதமும், அவற்றின்பயோகள் மாத்திரங்கூறுதலன்றி பழத்தை தேனித சுவைத்து வைத்தல் முதலிய பாகங்கள் செய்யும்வகையும், மாமர இனங்களின் உபயோகமும் கூறப்பட்டுள்ளது. இது விவசாயிகளுக்கு உபயோகமானது. முக்கியமாக மாந்தோப்புடையவரிட மிருக்க வேண்டியது. பல சித்திரங்களைக் கொண்டு விளக்கப்பெற்றுள்ளது. விலை அணு 7

# விவேக போதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி III } ஸாதாரணஹூ ஐப்பசிமீ 1910–ஹூ நவம்பர்மீ { பகுதி 5


## கர்வம்

### PRIDE

ஒருவன் தன்னைப்பற்றிச் சிறந்த அபிப்பிராயம் கொண்டிருக்குங்கால் இருக்கும் மனோ நிலைக்கே கர்வம் எனப்படும். தாம் ஏதாவது சிறந்த தொழில் செய்யுங்காலத்திலாவது அல்லது தம்மிடத்தில் ஏதாவது ஓர் சிறந்த சக்தி அல்லது குணம் இருக்கின்றது என்பதை உணர்ந்த காலத்திலாவது இது ஸாதாரணமாகஎல்லோருக்கும் நிகழும் மனோநிலை. இது சிற்சில லௌகிகர்களிடம், முகத்தின் அழகாலும் நடை உடை பாவனைகளாலும் வெளியாகும். மனத்தின் தொழில்களை உணரும் திறமை வாய்ந்தவர்களிடம் இது உள்ளே மறைந்து கிடக்கும். நிஷ்டாபரராகிய மஹா ஞானிகளிடத்தில் இது அதிஸூக்ஷ்மமாக இருக்கும். ஸாதாரணமாக வெளியில் அடிக்கடித் தோன்றும் இந்நிலைக்கு கர்வம் என்றும், மறைந்து கிடப்பதற்கு அகங்காரம் என்றும் பெயர்.

ஸாதாரண ஜனங்களுக்கு ஸாதாரண ஸமயங்களில் ஆத்மஸ்துதி ரூபமாகவும், தம்மைத் துதித்தால் வரும் ஓர்வித ஸந்தோஷ ரூபமாகவும் இந்தக் கர்வம் வெளியாகும்; வேறு சிலஸமயங்களில் தமது சக்தியைப் பிறர் ஸந்தேகிக்கின்றனர், குற்றங் கூறுகின்றனர், மதியாது நடக்கின்றனர் என்று அவர்களுக்குத் தோற்றுங்கால், இக்கர்வம், கோபம் பாநிந்தை இந்த ரூபமாக வெளிவரும். அப்பொழுது இக்கர்வத்தால் விளையும் கேட்டிற்கு அளவே இல்லை. எவ்வளவு நல்லவனுயிருப்பினும் குற்றங்கூறுங்கால் கோபிக்காமலும், துதிக்குங்கால் ஸந்தோஷிக்காமலும் இருக்கமாட்டான். இம்மனோ நிலைகள் எல்லாம் கர்வ ஸூக்ஷ்மமாகிய அகங்காரத்தின் காரியமே. நன்றாகக் கற்றவர்களிடத்தும், கற்றபடி நடக்க முயலுபவர்களிடத்தும், சாந்தமான மஹான்களிடத்தும் இவ்வஹங்காரம் அதிக நுட்பமாக மறைந்து கிடக்கும். இது அப்போதைக்கப்போது அவர்கள் கூறும் வார்த்தைகளில் குறிப்பாக வெளியாகும். அவமதிப்பு முதலிய கொடிய நிலைகளை அடையுங்கால் மஹான்கள் சபிப்பதும், 'பெரியவர்களை அவமதிக்காதே மிகுந்த கேடுவரும்' என்று நேரிடக் கூறுவதும், 'நாம் கோபித்துக் கொள்ளுவானேன், அக்கொடியவனைப் பார்த்துக்கொள்ளக் கடவுளிருக்கிறார்,' என்று கூறுவதும், 'கொடியவர்கள் தூஷித்து நமது பாபத்தைக் கவர்ந்து போகின்றார்கள்,' என்று வாய் விட்டு வேண்டியவர்களிடம் கூறுவதும் இந்த ஸூக்ஷ்ம கர்வத்தின் ரூபபேதங்களே. ஆதலால் தான் ஓர் கவி 'கர்வம் கடைசிவரையில் உயர்ந்தோரிடம் இருக்கும் குணக் குறைவு' என்றார். இதையுணர்ந்து எக்காலத்திலும், எவ்வளவு தகுந்த முகாந்தரங்கள் இருந்தபோதிலும், கர்வத்தினது ரூபாந்தரங்கள் எதற்கும் இடங் கொடுக்கவேகூடாது.

ஸாதாரணமாக நம்மைச் சுற்றிலும் உள்ள அளப்பரும் ஸ்ருஷ்டி விசித்திரத்தை உள்ளபடி உணரமுடியாமலும் அது இவ்வாறிருக்கின்றது என்பதை மறந்தும் மயங்கிய காலத்திலேயே இக்கர்வம் நம்மை வந்து கவர்ந்துகொள்ளும். இந்த ரகஸ்யத்தை உற்று நோக்கி மனனம் செய்துவந்தால் நாம் எவ்வளவு சிறந்தவைகளை எவ்வளவு எளிதில் செய்தபோதிலும் எல்லாம் ஸ்ருஷ்டி விசித்திரத்தை விடச் சிறந்தவையாக இருக்க முடியா ஆதலால் கர்வப்படக் காரணமில்லை என்பது விளங்கும். ஒரோர்வழியில் உள்ள சிறப்பால் ஸாதாரணமாகக் கர்வம் நமக்கு உண்டாகுமாயின் ஔவையார் கூறியபடி,

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கரையான்
தேன்சிலம்பியாவர்க்கும் செயலரிதால்-யாம்பெரிதும்
வல்லோமே என்று வலிமைசொல வேண்டாம்காண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது.

என்பதை மனனம் செய்து அதைத் தொலைக்க வேண்டும். மேலும் 'வல்லவனுக்கு வல்லவன் உலகில் உண்டு' என்ற பழமொழியின் பொருளும் நமக்கு ஸஹாயமாகும். மனிதராய்ப் பிறந்த நாம் சிறந்தவைகளைச் செய்யக் கடமைப் பட்டவர்கள்; மேலும் எங்கும் பரம்பொருளே பரவி நிற்றலால் அவனன்றி ஓரணுவும் அசையாது. ஆதலால் கர்வப்படக் காரணமில்லை என்று அடிக்கடி மனனம்செய்தால் நாளடைவில் இக்கர்வம் தலை எடுக்காமலே அழிய, நாம் பரிசுத்தராவோம்.

# விவேக போதினி

தொகுதி 3] ஸாதாரணஹூ ஐப்பசிமீ [பகுதி 5

## முக்கிய உபநிஷத்துக்கள்

### THE PRINCIPAL UPANISHADS

### VII. தைத்ரீய உபநிஷத்து 1.

### THE TAITHRIYA UPANISHAD

தக்ஷிணதேசத்திய பிராஹ்மணர்களிற் பெரும் பாலாரலும் இந்த உபநிஷத் அத்யயனஞ் செய்யப்பட்டு வருவதால், இது மற்றைய உபநிஷத்துக்களைவிட அதிகமாக வழங்கி வருகின்றது. மேலும் இவ்வுபநிஷத்தில் ஓர்விதச் சிறப்பும் உண்டு. மற்றைய உபநிஷத்துக்களெல்லாம் பிரஹ்மத்தைப்பற்றி மாத்திரம் கூறுகிற்கும். இதுவோ அவ்வாறின்றிக் கர்மகாண்டத்திற்கும் ஞானகாண்டத்திற்கும் இடையே நின்று கர்மகாண்டத்தின் நோக்கங்களை வெளியிட்டு முமுக்ஷுவை, எளிதில் ஞானகாண்டத்துள் சேர்க்கத் தகுந்ததாகிய உபாஸனகாண்டமென்ற ஒன்றை முதலில் எடுத்து விரித்துக்கூறிப் பின்னர் பிரஹ்ம விஷயத்தைப்பற்றி விஸ்தரிக்கின்றது. இந்த உபாஸன பாகத்தில் கர்மங்களைச் சிரத்தையுடன் செய்யும் விதம், நல்லொழுக்க முறை, உபாஸன விதம், இவைகளால் அடையக்கூடிய சித்தசுத்தியாகிய பலன் என்னும் இவற்றை எடுத்து விளக்கி இவற்றிலிருந்து ஆசார்ய உபதேசமாகிய ஞானத்தைப்பெற ஓர் சிஷ்யன் பக்குவமாகும் விதத்தை நன்ருகக்காட்டப்பட்டிருக்கிறது. இந்த உபநிஷத் பாகத்திற்கு சீக்ஷாவல்லி என்று பெயர். அடுத்தபாகத்திற்குப் பிரஹ்மானந்தவல்லி என்று பெயர். இதில் பிரஹ்மஸ்வரூபமும் அதைச் சென்றடையும் முறைகளும் எடுத்துக் காட்டப்படுகின்றன. மூன்ருவது பாகத்திற்குப் பிருகு வல்லி என்று பெயர். இதில் ஓர் குரு சிஷ்யனுக்குத் திருஷ்டாந்த பூர்வமாக முன் வல்லியிற் கூறியவிஷயங்களை விளக்கும் வழி காட்டப்பட்டிருக்கிறது. இவ்வாறு இவ்வுபநிஷத்து ஞானகாண்ட பாகமாகிய பிரஹ்ம விஷயத்தையும், உபாஸன காண்டமாகிய கர்மகாண்ட ரஹஸ்ய பாகத்தையும் அடக்கியிருப்பதால் இது மிகச்சிறந்ததாகின்றது. கர்மகாண்டத்தில் பழகியவர்கள் எளிதில் இவ்வுபநிஷத் மூலமாக உபாஸன நிலையை அடைந்து பின்னர் ஞானநிலையில் நிலைபெறலாம். நம்மதங்களில் குற்றங் கூறுபவர் சிலர், தைத்ரீய உபநிஷத் பின்னிரண்டு வல்லியே ஒழிய,முதல் வல்லியை அடக்கியுள்ளதல்ல என்று வீண் தர்க்கம் செய்யத்தொடங்குகின்றனர். நாம் முன்னர் கூறியிருக்கும், 'சீக்ஷாவல்லி உபாஸன பாகமே ஒழிய கேவலம் கர்மகாண்டபாகமன்று. கர்மகாண்ட ரஹஸ்யத்தை உணர்ந்து உபாஸனையில் பழகுவதே ஞானத்திற்கு முதல்படி' என்பதை அவர்கள் கவனித்தால் குதர்க்கம் செய்வதை நிறுத்தி இவ்வுபநிஷத்தின் சிறப்பில் ஈடுபடுவார் என்று நம்புகிருேம்.

I. சீக்ஷாவல்லி:—சீக்ஷை என்ற பதத்திற்கு,எழுத்துக்களின் மாத்திரை உச்சரிப்பு முதலியவைகளைப் பற்றிக் கூறும் சப்த சாஸ்திரம் என்று பொருள். இந்தப் பாகத்தில் வேதாத்யயனமாகிய பிராஹ்மணாது முக்ய கடமையை முன்னிட்டுக்கொண்டு ஞானம் பெற ஒருவன் அவசியம் செய்யவேண்டிய கடமைகளாகிய உபாஸனை, தியானம், ஸ்தோத்ரம், ஸத்கரம் முதலிய நல்லொழுக்கங்கள் எல்லாவற்றையும் இவ்வுபநிஷத்து எடுத்துக் கூறும்.

(1) முதலில் இந்த வல்லியில் சிஷ்யன் ஒவ்வொரு தேவதையின் பெயரைச்சொல்லி அதற்கு நமஸ்காரம் செய்துத்தானும் தன் ஆசாரியனும் நெடுங்காலம்வாழத்தான்,வேத ரஹஸ்யத்தை உணர்ந்து வித்திபெற வேண்டும் என்று

வேண்டுகிறான். இவ்விடத்திலேயே சிஷ்யன் மெதுவாகக் கர்மகாண்ட நிலையை விட்டுப்பெயர்வதற்கு முயலுகிறான். கர்மகாண்டத்தில் சிஷ்யன், யாகஹவிர்ப்பாகஞ் சென்றடையும் தேவதைகளே சிறந்தவர்கள், அவர்களால் வரும் நன்மைகளே புருஷார்த்தங்கள் என்று கொண்டு கர்மங்களில் பழகிப்பின்னர் இவ்வுபாஸனை கண்டத் தொடக்கத்தில், அந்த தேவதைகளுக்கு ஆதாரமாயிருக்கும் பரவஸ்துவாகிய ரஹஸ்யத்தை உணரத் தனக்குக் குருவுடன் நோய் அற்ற நீடிய வாழ்வு வேண்டும் என்று தேவதைகளையே பிரார்த்திப்பது அவன் மனோநிலையின் ஏற்றத்தைக் காட்டுகிறது. தன் சிஷ்யன் அதிமேதாவியாகி உலகில் சிறப்புற்று விளங்குவதைக் கண்டு பொறாமை கொண்டு மனமழிந்து அவனை அவமானம் செய்யத் தீர் எண்ணங் கொள்ளும் சில உபாத்தியாயர்களைப் போல, தேவதைகள் எவ்வளவு நல்லவர்களாயினும், கர்மகாண்டத்தில் தம் கீழ் இருந்தவர்கள் இப்பொழுது தமக்கு மேல் செல்ல எண்ணுவதைக்கண்டு பொறாமைகொண்டு அவர்களுக்கு வியாதி, மனச்சஞ்சலம், முதலிய பெரிய தடைகளை உண்டாக்கித் தடுக்க எண்ணும் துர்க்குண முடையவைகளே. இந்த வேதரஹஸ்யத்தையே புராணங்களில் தவம்செய்ய எண்ணுபவரது மனோநிலையைக் கலைக்க பல வழிகளில் முயலும் இந்திரன் முதலியோர் கதைகளாக உருவகப்படுத்தி இருக்கிறது. எப்படி இருந்தபோதிலும் உபாஸனையில் நிலை பெறச்செய்ய கர்மமே இதுவரையில் ஸஹாயமாக இருந்ததால், சிஷ்யன், கர்மங்கள் சென்றடையும் தேவதைகளை வணங்கி அவர்கள் தனக்கு ஞானவழியில் யாதொரு தடையையும் செய்யாமலிருக்கும்படி பிரார்த்திக்க வேண்டிய து நியாயமே. முதலில் சிஷ்யன் தேவர்கள் செய்யக்கூடிய கெடுதிகளைத் தடுக்க எண்ணி இவ்வாறு துதித்தபோதிலும், பின்னர் அவனுக்கு உண்டாகும் ஞானத்தால் அவனுக்குத் தான் நடந்துகொண்டமாதிரி தவறெனத் தோன்றுது. ஞான நிலையில் எவ்வுயிரையும் தன்னுயிர் போலப் பார்க்குங்கால் தேவதைகளையும் புண்படுத்தாது தான் நடந்துகொண்டு மேன்மை அடைந்தமாதிரி நியாயம் என்று ஏன் அவனுக்குத் தோன்றாமல் போகும்?

(2, 3 & 4) இதன் பின்பு எழுத்து, உச்சரிப்பு, மாத்திரை, பிரயத்தனம், ஸ்வரபேதங்கள் என்னும் இவைகளைப்பற்றிக் கூறி, இவைகளாலாகிய வேதமாகிய ஸம்ஹிதை என்பதை ஓர் பிரதீகையாக (அடையாளமாக)க் கொண்டு அதை ஐந்து ரூபமாகத் தியானம் செய்யும் வகை கூறப்படுகிறது. இம்மாதிரியான வேத சப்தங்களின் அமைப்பை ஓர் குறியாகக் கொண்டு தியானிப்பதே, இப்பொழுது அவைகளின் கருத்துக்கள் அடங்கிய விக்கிரஹாராதனத்திற்கு மூலம். வேதத்தில் விக்ரஹாராதனம் இல்லை என்று கூறும் அறிவிலிகள் இவ்வுபநிஷத் பாகத்தையும் இதில் அடையாளமாகக் காட்டப்படும் பிரதீகைகளையும் நன்கு

| தொ. | வஸ்து. | அடி. | இடை. | முடிவு. | சேர்க்கும் கருவி. |
|---|---|---|---|---|---|
| உபா | ஸம்ஹிதா | ஸம் | ஹி | தா | |
| 1 | உலகம் | பிருதிவி | ஆகாசம் | ஸ்வர்க்கம | வாயு. |
| 2 | தேஜஸ் | அக்னி | அப்பு | ஆதித்யன் | மின்னல். |
| 3 | ஞானம் | குரு | வித்யா | சிஷ்யன் | போதித்தல். |
| 4 | பிரஜை | மாதா | பிரஜை | பிதா | உண்டாக்குதல். |
| 5 | ஆத்மா | அடிவாய் | வாக்கு | மேல்வாய் | நாக்கு. |

ஆராய்ந்து தெளிவார்களாக. இதை ஆராதிக்கும் ஐந்து விதங்களாவன, பிரபஞ்சம், தேஜஸ், ஞானம், பிரஜை, ஆத்மா, ஆகிய இவைகளே. ஸம்ஹிதை என்பதைத் தியானம் செய்யும் வகையினை முன்காட்டியிருக்கும் அட்டவணையிற் காண்க. இங்குக் குறித்தவாறு உபாஸிப்பவன் இகபரம் இரண்டிலும் ஸுகமாக விருந்து பிரஹ்மதேஜஸ் நிறைந்தவனாவான். இம்மாதிரியான விஷயங்களைப் பெற்று முதலில் உலகில் தேறிய பின்னரே, சிஷ்யனுக்கு உள்ளபடி வைராக்யம் உண்டாக அவன் ஞானம் பெற அதிகாரியாவான். மேலும் இம்மாதிரியான தியானத்தால் மனம் ஒரு வழிப்படும். ஞானம் கைகூட உலகில் ஓர்விதமான கவலையற்ற நிலைவேண்டும். இது உண்டாவதற்குச் சிஷ்யன் முதலில் இந்தத் தியானம் செய்ய வேண்டியது அவசியமே. இந்தத் தியானத்தின் முடிவில் 'நோயற்றும் ஐச்வரியம் நிறைந்தும் உள்ள வாழ்வையும், உண்மை ஞானத்தையும் கொடுக்க வேண்டும்' என்ற பிரார்த்தனைகளடங்கிய மந்திரங்கள் காணப்படும்.

(5 & 6) இதன் பின்னர் வையாஹ்ருதி உபாஸனைகள் கூறப்பட்டிருக்கிறது. இதில் பூ, புவ,

| நெ. | வையாஹ்ருதிகள் | உலகம். | தேவதை | வேதம் | வாயுக்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | பூ: | பூமி | அக்னி | ருக் | பிராணன் |
| 2 | புவ: | அந்தரிக்ஷம் | வாயு | ஸாமம் | அபானன் |
| 3 | ஸுவ: | ஸ்வர்க்கம் | ஆதித்யன் | யஜுஸ் | வ்யானன் |
| 4 | மஹ: | ஸூர்யன் | சந்திரன் | ஓம் | அன்னம் |

ஸுவ.; என்பவை மூன்று. மஹர் என்பது நான்காவது; உயர்ந்தது. இது மாஹசமஸர் என்ற ருஷியால் உணரப்பட்டதாம். இவைகளை உபாஸிக்கும் விதம் மேலே காட்டிய அட்டவணையிலிருந்து அறியலாம். இவ்வையாஹ்ருதிகளைப் பிரஹ்மமாகவும், ஆத்மாவாகவும், மதித்து மற்றைய தேவதைகளை இவைகளின் அங்கங்களாகக் கருதவேண்டும். இங்குக் கூறப்பட்ட பிரஹ்மம் பிரபஞ்ச காரணமாகிய ஸகுண பிரஹ்மமே. இதன் பின்பு யோகசாஸ்திரப்படி பிரஹ்மத்தை ஹ்ருதயாகாசத்தில் தியானம் செய்து, பின்னர் வையாஹ்ருதிகளைத் தேவதைகள் உருவாகக் கருதித் தியானம் செய்து, முடிவில் அடையும் பலன் கூறப்படுகிறது. (இதில் பிராசீனயோக்யன் என்ற ஓர் சிஷ்யன் பெயர் காணப்படுகிறது).

7. இதுவரையில் வேதத்தைப் பிரபஞ்சம் முதலியவற்றிற்குக் குறியாகக்கொண்டு தியானம் செய்யும் வகை கூறி, இனி இந்தத் தியானம் நிலைபெறப் பிரபஞ்ச முதலியவைகளை வேதத்தின் உருவமாகக்கொள்ளும் உபாஸனை பின்னர் கூறப்படுகிறது. பங்தி என்பது ஓர்வித வேதசந்தஸ் (விருத்தம்). இதற்கு எவ்வெட்டு எழுத்துக்களாலாகிய அடிகளாக ஐந்தடியிருக்கும். பிரபஞ்சமும் ஐந்தன் கூட்டமாதலால் அதையும் பங்தி எனக்கொண்டு வேதமாகப் பாவிக்கலாம். இம்மாதிரியே ஒருவன் ஜீவாத்மாவையும் பாவிக்கலாம். பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம், முக்ய திக்குகள், உபதிக்குகள்; அக்னி, வாயு, ஆதித்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள்; அப்பு, செடி, மரம், ஆகாசம், ஆத்மா என்னும் இவைகளே அண்டத்தில் காணப்படும் ஐந்தன் கூட்டம். இம்மாதிரியே ஐந்து வாயுக்களும், ஐந்து இந்திரியங்களும்; தோல், மாம்ஸம், சதை, எலும்பு, மூளை என்னும் இவைகளும் பிண்டத்தில் காணப்படும் ஐந்தன்கூட்டம். ஆதலால் பிரபஞ்சத்தை வேதத்தின் உருவமாகப் பாவித்து ஸித்திபெற முயலவேண்டும்.

8. இதில் ஓம் என்ற பிரணவத்தின் தியானம் விஸ்தரிக்கப்படுகிறது. ஓம் என்பதே பிரஹ்மம். இதுவே எவ்விதக்காரியங்

களிலும் யாகத்தில் உபயோகப்படும் சொல். ஓம், என்பது ஸம்மதக்குறி, உத்தரவுக் குறி. ஸாமம் கூறுவதும் ருக்சொல்லுவதும், அத்வர்யூ பதில் உரைப்பதும், பிரஹ்மா உத்தரவளிப்பதும், ஆஹுதி கொடுக்கச்சொல்வதும் ஓம் ஆலேயே தொடங்கவேண்டும். வேதாத்யயனம் சொல்லுபவர்களும் இப்பதத்தாலேயே தொடங்கல் வேண்டும். பிரஹ்மத்தை அடையவேண்டும் என்று கருதி எல்லாமாகி நிற்கும் ஓம் என்பதை உச்சரிப்பவன் எண்ணம் நிறைவேறும்.

9. இப்பாகத்தில் உபாஸகன் கடமைகள் எடுத்து விஸ்தரிக்கப் படுகின்றன. நியாயம், ஸத்யம், தபஸ், தமை, அக்னி, அக்னிகர்மங்கள், அதிதிகள், மனித ஸம்பந்தம், பிள்ளை பெறுதல், வம்சவிருத்தி செய்தல், ஆகிய இவை விஷயமானவைகளைச் செய்து, இவைகளைப் பற்றி உணர்ந்து, இவைகளைப் போதிக்கவும் ஒருவல்லவனாக இருத்தல் வேண்டும். இதனாலே உபாஸனை செய்பவன் தனது கடமைகளை விடவேகூடாது என்பது விளங்கும். முற்கூறிய கடமைகளுள் சிலவற்றைச் சிற்சிலர் சிறந்ததெனமதிப்பர். ரதீதரர்பிள்ளை, ஸத்யவசஸ் ஸத்யமே சிறந்ததென்றும், புருசிஷ்டர் பிள்ளை, தபோனித்யர் தபஸே சிறந்ததென்றும்; முத்கலர்பிள்ளை நாகர், உணர்தல், போதித்தல் ஆகிய இவைகளே சிறந்தவை என்றும் மதிக்கின்றனர்.

10. இந்தப் பாகத்தில் ஞானம் வேண்டும் என்று பிரியப்படும் சிஷ்யன் ஜபிக்கவேண்டிய மந்திரம் கூறப்படுகிறது. இதை உணர்ந்தவர் திரிசங்கு என்ற ரிஷி, '(பிரபஞ்ச) விருக்ஷத்தைத் தாண்டுபவன் நான். என்கீர்த்தி மலையின் கொடுமுடி போன்றது (எங்கும் விளங்குவது) பரம்பொருள் என்னைப் பரிசுத்தமாக்கிவிட, ஸூர்யனுள் இருக்கும் வஸ்துவைப் போல நானும் அழிவற்றவனானேன்! நானே தேஜஸ் நிறைந்த ஐச்வரியம்! சிறந்த ஞானத்தால் எனக்கு அழிவில்லாமலும், நிலைத்திருக்கவும், கூடிய நிலை வந்து விட்டது!' என்பதே அம்மந்திரத்தின் பொருள். இதில் விடுபட்ட திரிசங்கு ரிஷி தமது அனுபவத்தை மெய்ம்மறந்து வெளியிட்டபோதிலும், இந்நிலையை அடையாது அதை அடைய ஆவல்கொண்டிருக்கும் முமுக்ஷுவும் இதை மிகுந்த சிரத்தையோடும் பக்தியோடும், ஒழுக்கத்தோடும் தியானித்துவந்தால் முடிவில் அவனுக்கு ஞானநிலை கைகூடுவது எளிதாகும்.

11. இங்கு ஆசார்யன் சிஷ்யனை நோக்கி அவன் செய்ய வேண்டிய கடமைகளைத் தொகுத்துக் கூறுகிறார். 'உண்மையை உரை. அறஞ்செய விரும்பு. கல்வியது கைவிடேல். பொருளைக் குருதக்ஷிணையாகக் கொடு. பிள்ளை பெறுமலிராதே. இந்தக் கடமைகளை விடவே கூடாது. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். ஆசாரியனும் அதிதியும் அத்தகைத் தெய்வமே. ஸத்கர்மத்தையும் பரோபகாரத்தையுமே செய்ய வேண்டும். நம்மை விடச் சிறந்தோர் முன்னிலையில் மூச்சுக்கூட விடக்கூடாது. சிரத்தையாயும், தாராளமாயும், அடக்கமாயும் தானம் செய். கொடுக்குங்கால் மனதில் ஓர்வித அச்சமும், அன்பும் இருக்கவேண்டும். ஸந்தேஹம் வருங்காலும் பாபிகளோடு ஸம்பந்தப் படுங்காலும் சிஷ்டாசாரத்தையே பின்பற்று. இதுவே வேதரஹஸ்யமானபுத்திமதியும் கோட்பாடும். இதன்படி நீ நட, என்று இவ்விரு பாகங்களிலும் வேதம் நன்னடக்கைக் கோட்பாடுகளை எல்லாம் வெளிப்படையாகக் கூறியிருக்கிறது. இவைகளையே பின்னர் புராணங்கள், கதைகள் ரூபமாக உருவகப்படுத்தி எல்லோரும் எளிதில் உணரும்படி செய்கின்றன.

12. இங்கு ஆதியில் கூறிய தேவதாப் பிரார்த்தனையே மறுபடியும் காணப்படுகிறது. இதுவரையில் த்யானம் நடத்தை முதலியவைகளை உள்ளபடி உணர்ந்த சிஷ்யன் மன

முதிர்ச்சி அடைய அவன் மனத்தில் முன்னர் இருந்த பயம் குறைந்து, ஓர்வித அன்போடு தேவதைகளை இங்கு அவன் முற்கூறிய மந்திரத்தாலேயே துதித்து ஞானம்பெற அதிகாரியாகிறான்.

இதுவரையில் கூறிவந்த சிக்ஷாவல்லியின் சுருக்கத்தை எடுத்துக் காட்டுவோம். இதில் 12-அனுவாகங்க ளிருக்கின்றன: அவைகள் (1) தேவதைகளால் கேடு விளையாமலிருப்பதற்காகச் செய்யப்படும் துதியும், (2) வேதஸ்வர உச்சாரணம் முதலியவைகளும், (3) ஸம்ஹிதையை ஐந்துவிதக் குறிகளால் தியானிக்கும் விதங்களும், (4) நோயும் கவலையுமற்ற வாழ்வு வேண்டும் என்னும் பிரார்த்தனையும், (5) நான்கு வையஹ்ருதிகளை நான்கு விதமாகத் த்யானம் செய்யும் ஒழுங்குகளும்,(6) பிரஹ்மத்தைஹ்ருதயத்தில் தியானம் செய்யும் வகையும், (7)தோற்றரூபத்தில் பிரஹ்மத்தைத் தியானம் செய்யும் வகையும், (8) பிரணவத்தியானமும், (9) உபாஸகன் கடமைகளும், (10) அவன் ஞானம் அடைய ஜபிக்கவேண்டிய மந்திரமும், (11) அவன் கடமை முதலியவைகளின் சுருக்கமும், (12) முதலில் கூறப்பட்ட பிரார்த்தனையுமே. இவ்வாறு இருப்பதால் கேவலம் கர்மகாண்டம் என்று கூற முடியாததாயும், ஞானகாண்ட ரஹஸ்யங்கள் ஆங்காங்கு வெளிப்படையாக ஆற்றுமணலில் தங்கச் சன்னங்கள் போல பிரகாசிக்கப் பெற்றதாயும் உள்ள இப்பாகத்தை உபநிஷத் பாகமென்று கூற என்ன தடை? இத்தகைய உபாஸனை பாகம் இவ்வுபநிஷத்தில் இவ்வாறு விரிந்து கிடப்பதால்தான் இது எல்லா உபநிஷத்துக்களையும் விட மிகச் சிறந்ததென்று மதிக்கப்பட்டுப் பிராஹ்மணருள் பெரும்பாலராலும் அத்யயனம் செய்யப்பட்டு வருகிறது. இவ்வுபநிஷத்தின் சிறப்பை மேலுள்ள இரண்டு வல்லிகளிலும் நன்றாகக் காணலாம்.

## முற்காலத்திய வழக்கங்களிற் சில

### SOME ANCIENT CUSTOMS

புறநானூறு முதலிய பழைய தமிழ் நூல்களைக் கொண்டு அறியக்கூடிய முற்காலத்திய வழக்கங்களுட் சில இங்கு எடுத்துக் கூறுவாம்:—

1. அரசர்களில், யுத்தத்தில் இறவாமல் நோயால் இறந்தவர்களைச் சுவர்க்கம் புகுவிப்பதற்காக அவர்களுடம்பைத் தருப்பையிற் கிடத்தி வாளாற் பிளத்தல் வழக்கமாம். நான்கு வேதங்களையும் கற்றுவல்ல அந்தணர் பசிய தருப்பைப் புல்லைப் பரப்பிக் கிடத்த "உண்மையான போர்வீரராய வேந்தர் செல்லும் உலகத்திலே செல்க" என்று அவ்வுடலை வாள் வீசிப் பிளத்தல் வழக்கமாம்.

2. அரசரது அரண்மனை வாயிலில் பள்ளியெழுச்சிக் காலத்தில் வலம்புரிச்சங்கம் ஊதுவது வழக்கம்.

3. இறந்தவர் உடலைத் தகிப்பித்தல் வழக்கம்.

4. அரசர், பகைவர் ஊரைக் கொளுத்தலும், பாணர்க்குப் பொற்றாமரை முதலிய பரிசளித்தலும், வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

5. படைக்கலம் பயில்வோர் முருக்க மரத்தாற் செய்த தூணத்தை இலக்காகக் கொண்டு அதன்கண் ஆயுதங்களைச் செலுத்திப் பயில்வது வழக்கம்.

6. பகைவர் ஊரை அழிப்பதற்கு முன், பசு, பசுபோலுஞ் செந்தன்மை பூண்டுள்ள அந்தணர், மகளிர், நோயாளிகள், பிண்டோதகக் கிரியையைப்பண்ணும் பொன்போலும் பிள்ளைகளைப் பெறாதவர் ஆகிய இவர்களை ஒருபுறம் விலக்கியே ஏனையவற்றை அழிப்பது வழக்கம்.

7. ஊர் காப்பவர் நள்ளிரவில் விளக்குக் கொண்டு நகர் சோதனை செய்வது வழக்கம்.

8. பகையரசர் கொடுத்த திறைகளை அரசர் பரிசிலர்க்குக் கொடுத்தலும், பகைவருடைய அரணிற் கொண்ட பொருள்களை அவர்களுக்குக் கொடுத்தலும், பகைவருடைய நாட்டின்கணுள்ள ஊர்களைச் சுட்டழித்தலும், பகைவருடைய நாட்டு வயலில் தமது குதிரை முதலியவற்றைச் செலுத்தலும், அவ்வயல்களைக் கொள்ளை யூட்டுவித்தலும், பகைவரது நாட்டையும் அரண்களையும் அழித்துக் கழுதையேரால் உழுது வரகு, கொள் முதலியவற்றை விதைத்தலும், பகைவருடைய பொருள்களைத் தம் வீரரால் கொள்வித்தலும், பகைவர்களது கிரீடத்திருந்த பொன்னால் தமது காலுக்குக் கழல், செய்வித்துப் புனைந்துகொள்ளுதலும், பகைவருடைய முரசத்தை வெளவுதலும், பகைவருடைய யானையின் நெற்றிப் பட்டப் பொன்னினால் தாமரை செய்வித்து அதைப் பாணர்க்குச் சூட்டுதலும் வழக்கமாம்.

9. போரில் புறங்கொடாது இறந்த வீரர்களது ஞாபகார்த்தமாகச் சிலையை நாட்டி, இறந்தவர் பெயரை அதன்கண் எழுதி, அக்கல்லுக்குச் சிவந்த மாலை, மயிற்பீலி முதலிய சூட்டி, அதற்கு மது நிவேதனஞ் செய்து அதைத் தொழுது வழிபடுதல் வழக்கமாயிருந்தது.

10. கணவனை யிழந்து மகளிர் அழுகை ஆரவாரத்துடனே தமது கூந்தலைக் களைவதும், கைவளை முதலிய அணிகலன்களை நீக்குவதும் அல்லியினிடத்துண்டாகும் புல்லரிசியை உண்ணுவதும், பாயின்றிப் படுப்பதும் வழக்கம். இது,

கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉப் போலப்

புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே—என்னும் 'புறநானூறு' என்னும் நூலிலுள்ள 261-வது செய்யுளால் விளங்கும். கணவன் இறந்துபட சிலமகளிர் தீப்பாய்தலும் வழக்கம். பூதபாண்டியனது தேவி பெருங்கோப்பெண்டு என்பவள் தீப்பாயும்போது அவள் பின்வருமாறு சொல்லியதாக மேற்சொன்ன நூலில் ஒரு செய்யுள் இருக்கின்றது. "சான்றோர்களே! நின் தலைவன் இறந்தான். ஆதலின் நீயும் தீப்பாய்ந்து இறந்து படு என்றல்லவோ நீங்கள் எனக்குப் புத்திமதி சொல்லவேண்டும். அப்படிச் சொல்வதைவிட்டு 'இறத்தலைத் தவிர்க'என்கிறீர்களே. நெய்யில்லா உண்டியை உண்டும், பருக்கைக்கற்கள் பரப்பப்பட்ட படுக்கையில் பாயில்லாமற் படுத்தும், கைம்மை நோன்பால் வருந்தும் பெண்டிருள் ஒருத்தி அல்ல நான். என் கொழுநன் இறந்து பட்டானாக, தீயும் தாமரைத் தடாகமும் இனி எனக்கு ஒரே தன்மைத்து."

11. அரசர் சிவாலயத்தை வலம் வருகையில் அவர்கள் கொற்றக்குடையைத் தாழ்த்தல் வேண்டுமாம். ஒரு பாண்டிய ராஜனை ஒரு புலவர் பின்வருமாறு வாழ்த்துகின்றார். "வடதிசையில் இமயமலை வரையும், தென்றிசையில் கன்னியாறு வரையும், கீழ்த்திசையினும் மேற்றிசையினும் கடலளவும் உன் புகழ் பெருகுக. துலாக்கோல் போல நீ நடுநிலைமையி னின்றும் தவறாத ஒழுக்கத்தை மேற்கொண்டிருக்க. நினது படை குடி முதலிய அங்கங்கள் விளங்குக. உனது வெற்றிக் குடை முனிவரால் பரவப்படும் மூன்று திருநயனத்தையுடைய சிவபெருமானது கோயிலை வலம் வரும்போது தாழ்க. உனது மாலை உன்பகைவரது நாட்டைச்சுடும் புகை உறைத்தலால் வாடுக. நீ சூரிய சந்திரரைப்போல என்றும் நிலைபெற்று வாழ்க.

வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம்.ஏ.

## வியாஸ விதானம்

**ESSAY WRITING**

### I. வர்ணனையுள்ள வியாஸங்கள்
### DESCRIPTIVE ESSAYS

### 5. ஸாதாரண செயற்கைப் பொருள்கள்—கடிகாரங்கள்

### Common artificial things—*Clocks &c.*

தோற்றம்.—இனங்கள்—உபயோகிக்கும் விதம்—உட்பாகம்; அவைகளின் உபயோகம்—எச்சரிக்கை—முன்னவர்கள் இவை இல்லாதிருக்கையில் இருந்த நிலை.

கடிகாரம் என்பது காலத்தை அளவிட ஏற்பட்ட ஒரு கருவி. இதில் வட்டமாயும் வெளுப்பாயும் உள்ள ஒரு முகப்புத் தட்டிருக்கும். அதன் ஓரத்தில் கூடிய வரையில் பெரிதாய் கறுப்பாக 1-முதல் 12-வரையிலுள்ள எண்கள் வரைந்திருக்கும். இவைகளுள் ஓரெண்ணுக்கும் அடுத்த எண்ணுக்கும் இடையே எங்கும் ஒரே மாதிரியாக இடைவெளியிருப்பதோடு ஒவ்வொரு இடைவெளியும் 5-ஸமபாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும். பிரிக்கப்பட்ட முகப்புத்தட்டு முழுவதும் 60-ஸமபாகங்களாகி இருக்கின்றது. இந்த வட்டத்தட்டின் மத்தியில் சேர்க்கப்பட்டதாக இரண்டு முள்ளுகள் காணப்படும். அவைகளுள் ஒன்று நீண்டதாகவும் மற்றொன்றைவிட வேகமாகச் சுற்றி வருவதாகவும் காணப்படும். நீண்ட முள்ளுக்கு நிமிஷமுள் என்றும், குறுகியதற்கு மணிமுள் என்றும் பெயர். நிமிஷமுள் 12-இல் இருக்குங்கால் மணிமுள் ஏதாவது ஒரு எண்ணிலிருக்கும்படி அமைக்கப்பெற்று, இவைகள் உள்ளே இருக்கும் சக்கரங்கள் சுற்ற இருவித வேகங்களோடு தள்ளப்படுகின்றன. அப்பொழுது நிமிஷமுள் 12-இலிருந்து புறப்பட்டு மறுபடியும் 12-க்கு வரும் காலத்தில் மணிமுள் முன்னிருந்த எண்ணிலிருந்து அடுத்த எண்ணுக்குப் போய் நிற்கும். ஆகவே நிமிஷ முள் 60-ஸமபாகம் போகும் காலத்தில் மணிமுள் 5-ஸமபாகம்தான் போகும்; அதாவது நிமிஷ முள் மணி முள்ளைபோன்ற 12-மடங்கு வேகமுள்ளது. கடிகாரங்கள் தூசிபடிந்து கெடாமலிருக்க முன்புறம் கண்ணாடியாலும், பின்புறம் நல்ல மூடிகளாலும் மூடப்பட்டிருக்கும்.

கடிகாரங்களில் அநேக விதம் உண்டு. இவைகள், பெயரையும் அவைகளின் பருமனையும் உள்ளிருக்கும் சக்கரமுதலியவைகளின் அமைப்பையும் பொறுத்தவை. எப்படியாயினும் பொதுவாகக் கடிகாரங்களைத் தோற்றமாத்திரத்தில் இரண்டுவிதமாகப் பிரிக்கலாம். அவைகள் தொங்கலால் தூண்டப்படும் கடிகாரங்கள், எஃகுச் சுருளையால் தூண்டப்படும் கடிகாரங்கள், என்பவைகளே. முதல் வகுப்பிலுள்ளவைகளுக்கே கடிகாரங்கள் என்று பெயர்; இவைகளை வாரத்திற்கு ஒருதரம் தூண்டினால் போதும். இரண்டாம்வகுப்பிலிருப்பவைகளுக்குக் கைக்கடிகாரங்கள் என்று பெயர்; இவைகளை ஒரு நாளைக்கு ஒருதரம் தூண்ட வேண்டும்.

இவ்விருவிதமாகக் காணப்படும் கடிகாரங்களை உபயோகிக்கும் விதம் எப்படி என்பதைப்பற்றி விவரிப்போம். இவைகளைத் தூண்டுவதற்கு வாரத்திற்கு ஒருதரமாவது அல்லது ஒரு நாளைக்கு ஒருதரமாவது சாவி கொடுக்க வேண்டும். உடனே இவைகள் ஓடத் தொடங்கும். பெரியமுள் முற்குறிப்பித்தபடி வேகமாயும், சிறியமுள் வேகக் குறைவாயும் போகும். மணிக்குத் தொடக்கம் 12-என்ற எண்ணே. அப்பொழுது நிமிஷமுள் 12-இல் இருக்க மணிமுள் 7-இல் இருப்பதாகக் கொள்ளுவோம். மணி அப்பொழுது 7-என்று சொல்லப்படும். பெரிய முள் நகர்ந்து 4-இல் வருவதாகக் கொள்ளுவோம். வட்டத்தில் காணப்படும் 60-ஸம இடை வெளியுள் ஒவ்வொன்றிற்கும் நிமிஷம் என்று பெயராதலால், அப்பொழுது 20-

நிமிஷங்களாயிருக்கும். மணிமுள் 7-இல் இருந்து புறப்பட்டுப்போய் 7-க்கும் 8-க்கும் இடையிலிருப்பதால் அப்பொழுது மணி 7-அடித்து 20-நிமிஷம் ஆய்விட்டது என்று சொல்லப்படும். முன்னர் நிமிஷமுள் 12-இல் இருக்குங்கால் இம்மாதிரியே மணிமுள் எந்த எண்ணிலிருந்து புறப்பட்டதோ அது மணியையும், நிமிஷமுள் அப்பொழுது இருக்கும் எண்ணுக்கு 12-இல் இருந்து பிரதக்ஷிணமாக எவ்வளவு நிமிஷ இடை இருக்குமோ அதுவே அதிகமாக ஆகி இருக்கும் நிமிஷத்தையும் உணர்த்தும். தவறாது மாத்திரம் கடிகாரத்திற்குச் சாவி கொடுத்து வந்தால் ஒவ்வொரு சமயத்திலும் இதிலிருந்து ஸரியான மணியையும் நிமிஷத்தையும் அறியலாம். இதனாலேயே இம்முள்ளுகளுக்கு முற்கூறிய பெயர்களும் ஏற்பட்டன.

இக்கடிகாரங்களின் உட்புறத்தில் அநேகம் பற்களுடைய சக்கரங்கள் காணப்படும். இவைகளுள் பெரிதாகிய ஒன்றோடு ஓர் கிண்ணம் ஸம்பந்தப் பட்டிருக்கும். இதனுட்புறம் பட்டையான எஃகுச் சுருளையால் நிரப்பப்பட்டிருக்கும். இதன் ஒரு நுனி மத்தியிலிருக்கும் இரும்பு ஆணியில் கட்டப்பட்டிருக்கும். இந்த ஆணியில்தான் சாவியை மாட்டிக் கடிகாரத்திற்குச் சாவி கொடுப்பது. சாவி கொடுத்தவுடன் அக்கிண்ணத்திலிருக்கும் எஃகுச் சுருளை சிறிது சுற்றளவில் குன்றிவிடும். உடனே இதன் இயற்கையால் இது அகலத் தொடங்க கிண்ணச் சக்கரம் சுற்றத்தொடங்கும். இது மற்றைய பற்சக்கரங்களோடு ஸம்பந்தப்பட்டிருப்பதால் அவைகள்ால் மெதுவாக ஒருநாளிலாவது, ஒரு வாரத்திலாவது முன்போலாகும். இவ்வாறாகும்பொழுது மற்றைய சக்கரங்கள் மூலமாக இந்தச்சுற்றும் வேகம் ஒழுங்குபடுத்தப்பட்டு முன்வட்டத்தின் மேலிருக்கும் முட்களை முற்கூறிய இருவித வேகங்களுடன் ஓட்டும். சாவி சக்கரத்தைச் சுற்ற இடந்தருவது தொங்கல் அல்லது அதற்குப்பதிலாகக் கைக் கடிகாரத்திலிருக்கும் சிறிய எஃகுச் சுருளை. இக்கைகளின் அசைவால் பெரிய எஃகுச்சுருளை ஒழுங்காகப் பிரிந்துகொண்டும், அது அவ்வாறு பிரிவதால் இவை ஒழுங்காக ஆடிக்கொண்டும் இருக்கும்.

இவ்வளவு நுட்பமான சக்கரங்களாலாகிய கடிகாரங்கள் இக்காலத்தில் மிகமலிந்து விட்டன; ரூ. 3-க்குக்கூட அகப்படும். ஆயினும் 20 அல்லது 25-ரூபாய் கொடுத்து வாங்கப்படும் கடிகாரங்கள் நல்லகடிகாரங்கள். அவற்றை ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டிருந்தால் சற்றேறக்குறைய 20-அல்லது 25-வருஷம் வரை ஸரியாக மணிகாட்டி வரும். கடிகார விஷயத்தில் நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய ஒழுங்குகள் சிலவுள: அவையாவன (1) கடிகாரத்திற்கு ஒழுங்காகத்தவறாது சாவி கொடுப்பது; (2) சாவிகொடுக்குங்கால் முடிவில் பலமாகச் சாவியைத் திருகாதிருப்பது. வலிவுடன் திருகினால் பெரிய எஃகுச்சுருளை முறிந்து விடும்; (3) கடிகாரத்தை கீழேயாவது ஜலத்திலாவது போடாதிருத்தல்; (4) தூசி படியும்படியான இடத்தில் வைக்காதிருப்பது; (5) முள்ளுகளைப் பின்னே திருப்பாதிருப்பது ஆகிய இவைகளே.

முற்காலத்தில் கால அளவை உணர இம்மாதிரியான நுட்பயந்திரங்களில்லை. நம் முன்னோர்கள் பகலில் ஸூர்யன் இருக்கும் இடத்தாலும், நிழலின் நீளத்தாலும் காலத்தை அளவிட்டும், இரவில் நக்ஷத்திரங்களின் நிலைகளாலும், பக்ஷிகளின் சப்தங்களாலும் காலத்தை அளவிட்டும் வந்தனர். மற்றும் சில ஜாதியார் நாழிகைவட்டிலாலும் உடுக்கை போன்ற குவளையுள் மணலிட்டு அது அடிக்குவளையில் விழும் நேரத்தாலும் காலத்தை அளந்துவந்தனர். இந்தக்கருவிக்கு மணற்குவளை என்றுபெயர். இம்மாதிரி அநேகவிதக் கஷ்டங்களினால் சிலம்தேர்ச்சி அடைந்தவர்களால்மாத்திரம் காலத்தை ஒழுங்காக முற்காலத்தில் அளவிட முடிந்தது. இப்

பொழுது கடிகாரத்தின் ஸஹாயத்தால் எல்லோருக்கும் காலத்தின் அளவை உணரும் திறன் உண்டாகிவிட்டது.

[இம்மாதிரியே விவரிக்கக் கூடிய
வியாஸ விஷயங்கள்

| | |
|---|---|
| 1. தூரதிருஷ்டிக்கண்ணாடி | 6. தீப்பெட்டி |
| 2. நாற்காலி | 7. துப்பாக்கி |
| 3. வண்டி | 8. அலமாரி |
| 4. த்விசக்ரவண்டி | 9. அச்சுயந்திரம் |
| 5. புஸ்தகம் | 10. விளக்கு |

போதக் குறிப்புகள்

(இக்குறிப்புக்களுள் சிற்சில எல்லா வியாஸங்களிலும் விஸ்தரிக்க முடியாமலும் இருக்கலாம்.)

1. தோற்றம்,
2. இனங்கள்.
3. உபயோகிக்கும் விதம்.
4. உட்பாகங்களும், அவைகளின் உபயோகங்களும்.
5. எச்சரிக்கைகள்.
6. இவ்விஷயத்தில் முன்னோர்கள் இருந்த நிலை].

நிச்சயமாய் தெரிந்ததைமட்டும் தெரியும் என்று சொல்,—இது பெரும்பாலும் சில சிறுவர்களிடமிருக்கிறதில்லை. நம்மை யாராவது ஒருவன் எவ்விதமாயாவது ஒரு சமாசாரம் கேட்பானேயானால் அது நமக்குத் தெரிந்தாற்றான் தெரியும் என்று ஒப்புக்கொண்டு மறுமொழி சொல்ல வேண்டும்; தெரியாமலிருக்கையில் தெரியும் என்று சொல்ல வேகூடாது. பல பெயர்கள் பல தடவைகளில் மோசம் போயிருக்கிறார்கள். ஒருவன் தனக்கு ஒரு விஷயம் தெரியாமலிருக்க மற்றொருவன் கேட்கும் போது தெரியும் என்று சொல்லி அதை அவன் நம்பி அந்நம்பிக்கையின்மேல் நடந்து கடைசியாய் அது அவனுக்குத் தெரியாது நாம் மோசம் போனோம் என்று அம்மற்றொருவன் எண்ணும்பொழுது நமது கௌரவம் என்னவாயிற்று. ஆகையால் நமக்குத் தெரிந்ததைதான் நாம் தெரிந்ததாகச் சொல்ல வேண்டும்; தெரியாததைத் தெரியும் என்று சொல்ல வேகூடாது. இதனால் பெருத்த அவமானங்கள் நேரிடும்,

# ஸ்ரீமத் சங்கராசாரியர்

## SRI SANKARACHARYA

ஸ்ரீமத் சங்கராசாரியர், கொச்சிஷோரனூர் இருப்புப் பாதையில் ஆல்வாய் என்ற ஊருக்கு அருகாமையில் 5,6-மைல் கிழக்கேயிருக்கும் காலடி என்னும் கிராமத்தில் சுமார்*2400-வருஷங்களுக்கு முன் அவதரித்தவர். இவர் தாய் தந்தையருக்கு முறையே ஆர்யாம்பாள் என்றும், சிவகுரு வென்றும் பெயர். இவர்கள் மகாசிவபக்தர்களா யிருந்தனர். பரமசிவமே இவர்கள் பக்திக்கு மெச்சி இவர்களிடம் ஸ்ரீமத் சங்கராசாரியராக அவதரித்தாரென்று இவரைப் பற்றிய சரித்திரங்கள் கூறும். இவர் இளமைப் பிராயத்திலேயே மிகுந்த புத்தி நுட்பமுடையவராயிருந்து ஸகல சாஸ்திரங்களையும் வெகு சீக்கிரத்தில் கற்றுணர்ந்தார். இளமையிலேயே இவர், தம் தகப்பனாரை இழக்கும்படி நேரிட்டது. பின்னர் தாய்க்கு உதவியாக இவர் வளர்ந்துவரும் காலத்தில் இவரது கல்யாண பிரஸ்தாபம் ஏற்பட, தமக்குத் துறவறத்திலேயே மனம் இருக்கிறதென்றும், ஆதலால் விவாகம் வேண்டாம் என்றும் மறுத்தார். அப்பொழுது இவர் தாயார் மிகுந்த துக்கப்பட அந்த வார்த்தையை அவ்வளவில் நிறுத்திவிட்டார். கொஞ்சநாள் கழிந்தபின்னர் இவரும் இவர் தாயும் அருகாமையிலிருந்த ஆற்றுக்கு நீராடச் சென்றனர். அங்கு ஓர் முதலை இவர் காலைக் கவ்விக்கொள்ள "எனக்கு முடிவுகாலம் வந்துவிட்டது, இப்பொழுதாவது ஆபத் ஸந்யாஸம் வாங்கிக்கொள்ள அனுமதி கொடுக்க வேண்டும்" என்று தாயை வருந்திக் கேட்

* இவர்காலம் சுமார் 1200-வருஷங்களுக்கு முன்புதான் என்று இக்காலத்தவர் மதித்திருக்கின்றனர். ஆனாலும் சுமார் 2400-வருஷங்களுக்கு முன்னர் இவரது அவதாரகாலம் இருக்கவேண்டும் என்பதற்கு தகுந்த ஆதாரங்கள் இருக்கின்றன வென்று இவ்விஷயத்தில் நூதனமாய் ஆராய்ச்சி செய்தோர் அபிப்பிராயப்படுகின்றனர்,

டார். இந்தக் கஷ்ட ஸமயத்தில் தாய் மன மிரங்கி அனுமதி கொடுக்க இவர் மனதினு லேயே ஸந்யாஸத்துக்குரிய மந்திரங்களையெல் லாம் தியானம் செய்துகொண்டு ஸந்யாஸி யாகத் தீர்மானித்தார். முதலையும் இவரை விட்டுவிட்டது. கரை ஏறியதும் தாயாரைத் தம் உறவினரிடம் ஒப்புவித்து அவள் முடிவு காலத்தில் தாம் எப்படியாவது வந்து உதவுவ தாக வாக்களித்துக் குருவைத் தேடிக்கொ ண்டு தேச ஸஞ்சாரஞ்செய்யப் புறப்பட்டனர்.

போகும் வழியில் அநேகம் வித்வான்கள், சிறு வயதாயிருப்பவர் ஸந்யாஸம் கொள்ள லாகாது என்று விஸ்தாரமாக இவருடன் வாதிக்க இவர் சுருதி, யுக்தி முதலியவற் றால் வெகுநேரம் அவர்களுடன் தர்க்கஞ் செய்து "ஸந்யாஸ ஆச்ரமம் மிகச் சிறந்தது; மோக்ஷத்திற்கு முக்கிய ஸாதனம்; இதை யடைய,வயது முக்கியஸாதனமாகமாட்டாது. எவ்வயதில் இருந்தாலும் தகுந்த சாஸ்த்ர



ஞானத்தின் பேரில் உலகவிஷயங்களில் உண் மையான மாறா வெறுப்பு ஏற்பட்டால் அப் பொழுதே ஸந்யாஸம் கொள்ளலாம்" என்று முடிவுகூறி அவ்வித்வான்களை வாய் எடுக்க வொட்டாமற் செய்தார். அவர்களிடமிருந்து ஸந்யாஸப்பிரதிஷ்டாபனாசாரியர் என்ற பட்டப் பெயர் பெற்று வடக்கே செல்லுகையில்

நர்மதா நதி தீரத்தில் ஸ்ரீ கோவிந்த யோகி என்ற யதீசுவரரைக்கண்டு அவரிடம் சிஷ்யனாக அமர்ந்து நிஷ்டை பழகி ஸித்திபெற்றார். இவரிடத்தும் இவர் குருவாகிய ஸ்ரீ கௌடபாதரிடத்தும் தமக்குள்ள நன்றியறிதலை சங்கராசாரியர் தாம் பின்னர் செய்த கிரந்தங்களில் அடிக்கடிக் காட்டியிருக்கிறார்.

ஆசாரியரது ஆஞ்ஞைப்படி காசிக்ஷேத்திரம் அடைந்து அங்கு அவர் சிஷ்யர்களை அங்கீகரிக்கத் தொடங்கினர். அங்கே இவருக்குப் பத்மபாதர், என்ற ஒரு சிறுவரும் சிஷ்யராக வந்து அமர்ந்தார். இங்கு தான் சங்கராசாரியர் தமது வியாக்யானங்களையும் அற்புதமான சிறிய சுலோகங்களையும் இயற்றியது. இங்குத் தான் இவர் ஓர் பறையனைத் தூர விலகு என்று கூறின காலத்து, அவன் கேட்ட அத்வைதக் கேள்விகளுக்குப்பதிலாக "பிரபஞ்சத்தை அத்வைத திருஷ்டியால் உணருபவன் எவனோ அவன் சண்டாளனாயினும் துவிஜனாயினும் என் குருவே" என்று முடிவுபெறும் மனீஷா பஞ்சகம் என்ற ஐந்து சுலோகங்களையும்; அநியாயமாய்த் தனது ஆயுள் முழுவதையும் இலக்கணப் பயிற்சியில் வீணாகக் கழித்த ஒருவனை நோக்கி பஜகோவிந்தம் என்று முடிவு பெறும் சுலோகங்களையும் இவர் வெளியிட்டார். காசி க்ஷேத்திரத்தில் இவருக்கும் மஹாஞானியான ஓர் கிழப் பிராஹ்மணருக்கும் பிரஹ்மஸூத்ர பாஷ்ய விஷயமாக வெகு தர்க்கம் ஏற்பட முடிவில் தகுந்த ஆதாரங்கள் காட்டி சங்கராசாரியர் அவரைத் திருப்திபடுத்தினர். வியாஸரே கிழவர் ரூபமாக வந்து சங்கராசாரியரது அறிவின்நுட்பத்தைக் கண்டு ஆனந்தித்தார் என்று ஸ்ரீ சங்கரர் சரிதைகள் கூறும்.

பின்னர் காசி க்ஷேத்திரத்திலிருந்து இவர் அத்வைத ஸித்தாந்தத்தைப் பரவச்செய்ய வெளியேறினர். பிரயாகையண்டை வருங்கால், அங்கு மாறு வேஷம் பூண்டு பௌத்த மதத்தின் குற்றங்களைப் பௌத்த குருக்களிடமிருந்தே தெளிவாகத் தெரிந்து கொண்டு பின்னர் அவைகளை எடுத்துக்காட்டிப் புத்த மதத்தைக் கண்டித்து வேதத்தின் கர்மகாண்ட பாகங்களே மிகச் சிறந்தவை; அவைகளே ஈசுவரனைவிடச் சிறந்தவை என ஆரியதருமத்தை நிலை நிறுத்திய குமாரில பட்டரைக் கண்டார். அவர் அப்பொழுது சுற்றிலும் உமி முதலியவைகளால் மூடப்பட்ட நெருப்பில் பாதி எரிந்து கொண்டிருந்தார். இம்மாதிரி செய்யக் காரணம் என்னவென்று சங்கராசாரியர் கேட்க, அதற்கு அவர் "நான் என் குருக்களாகிய புத்தர்களுக்குத் துரோகம் செய்தேன், கர்மங்களின் சிறப்பை நிலைநிறுத்த ஈசுவரனைக் கூட லக்ஷ்யம் செய்யாது விட்டு விட்டேன்; இவ்விரண்டு பாபங்களுக்கும் இதுவே பிராயச்சித்தம்' என்றார். பின்னர், அவருடன் சாஸ்திர ஆராய்ச்சி செய்யவேண்டும் என்ற சங்கரரை நோக்கி "எனக்கு மரண காலம் வந்துவிட்டமையால் என்னால் ஒன்றும் செய்யமுடியாது. ஆதலால் மாஹிஷ்மதி என்ற பட்டினத்தில் என் சிஷ்யன் மண்டனமிச்ரன் என்னும் ஒரு மஹா வித்வான் இருக்கிறான். அவனை நீர் திருப்தி செய்தால் என்னைத் திருப்தி செய்ததற்கு ஸமானம்" என்று கூறி தேகம் நீங்கினர். இவரது நேர்மையையும் மனநின் சுத்தியையும் கண்டு மிகுந்த அன்பு கூர்ந்து சங்கரர் சற்று வியப்படைந்தார்.

கொஞ்ச நாளைக்கெல்லாம் மாஹிஷ்மதிக்கு வந்து மண்டனமிச்ரரோடு வெகுநாள் வாதம் செய்து அவரைத் திருப்திப்படுத்தி ஸந்யாஸியாக்கினர். அப்பொழுது அவர் பெண்சாதியாகிய பாரதி தேவியும், துறவறம் பூண்டு சங்கராசாரியரோடு கணவன் பின்னே புறப்பட்டாள், மண்டனமிச்ரருக்கு இந்த ஆச்ரமத்தில் ஸுரேசுவர ஆசார்யர் என்ற பெயர் வந்தது. பின்னர் சங்கரர் தக்ஷிணதேசத்தை நோக்கிப் புறப்பட்டார். இதற்குள் இவருக்கு தோடகர், ஹஸ்தாமலகர், என்ற இரண்டு

சிஷ்யர்களும் ஏற்பட்டார்கள். இவர் போன வழியில் அநேக கொடிய வழக்கங்களுடைய மதஸ்தர்கள் எதிர்பட்டனர். அவர்களது மதங்களும் வழக்கங்களும் இன்னவையென்று அவர்களிடமிருந்தே ஸாவதானமாகத் தெரிந்து கொண்டு அவர்களிடம் இருந்த கெட்ட பழக்கங்களை யெல்லாம் வேதங்கள் முதலியவைகளிலிருந்து தகுந்த ஆதாரங்களைக் காட்டி மறுத்து, அவர்கள் ஆராதனையை நிலை நிறுத்தி, அது சென்று முடியும் நிலையாகிய அத்வைத நிலையை நன்கு விளக்கி மதத்துவேஷங்களை ஒடுக்கி அவர்களை யெல்லாம் சீர்திருத்தினர்.



பின்னர் தேற்கே துங்கபத்ராநதி உற்பத்தி ஸ்தானத்தருகில் அவர் வந்து சேர்ந்தார். அங்கு அவர் சிருங்கேரி எனும் இடத்தில் ஓர் மடத்தை ஸ்தாபித்து அதில் தமது சிறந்த

சிஷ்யரான ஸுரேசுவர ஆசாரியாரை அதிபதியாக ஏற்படுத்தினர். அங்கு அவர் கொஞ்ச காலம் தங்கியிருக்க அப்பொழுது கூடவேயிருந்த பாரதி என்பவளுடைய ஒழுக்கம், பரிசுத்தம் முதலிய சிறந்த ஆத்மகுணங்களைக் கண்டு அவளது பிற்காலத்தில் அவளை அங்கேயே ஆராதிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தார். இன்னும் அவள் சாரதாம்பிகையாக அம்மடத்துள் ஆராதிக்கப்பட்டு வருகிறாள்.

இங்கு இருக்கையில் இவர் தாயாரது அபாய நிலை இவருக்குத் தெரியவந்தது. உடனே சிஷ்யர்களை விட்டு விட்டுத் தாம் தனியாகக் காலடிவந்து சேர்ந்தார். அங்குச் சாகும் தருணமாயிருந்த தாயாருக்குத் தகுந்தபடி உபதேசங்கள் செய்து ஸுகமாக அவளைப் பரலோகம் சேர்ப்பித்து, விட்டு அவளுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச் செய்ய யத்தனித்தார். அங்கிருந்த பிராஹ்மணர்களெல்லோரும் ஸந்யாஸிக்குக் கர்மம் செய்ய அதிகாரம் இல்லையென்று கூறி இவருக்கு ஸஹாயம் செய்யாது ஒதுங்கி விட்டார்கள். தாமே தம்மால் இயன்ற மட்டும் தாய்க்குச் செய்ய வேண்டியவைகளை ஸரிவரச் செய்து முடித்து, தம்மைக் கஷ்டப்படும்படி விட்டுவிட்டவர்களது ஒழுக்கங்களை மாற்றிவிடவேண்டுவதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்தார். இவர் தாய் விஷயத்தில் ஸஹாயமில்லாததால் எந்த எந்த மாதிரிஎல்லாம் செய்யும்படி நேர்ந்ததோ அந்த அந்தமாதிரியாக இவரைத் தடுத்தவர்களெல்லாம் எப்பொழுதும் செய்துவர ஏற்பாடுகள் செய்தார்.

இதன் பின்னர் இவர் தக்ஷிண தேசத்தின் கீழ்க்கரையோரமாக யாத்திரை செய்யப்புறப்பட்டுத் திருவானைக்காவல், காஞ்சிபுரம், திருவொற்றியூர் முதலிய இடங்களிலிருந்த சாக்தேயர்களைக் சீர்திருத்திக் கொண்டு ஜகந்நாதம் வந்து அங்கு ஓர் மடம் ஏற்படுத்தினர். பின்னர் ஆரியாவர்த்தம் வழியாக யாத்திரை செய்து அங்கிருந்தகொடிய மதஸ்தர்களைச் சீர்திருத்தித் துவாரகை வந்து அங்கும் ஓர் மடம் ஏற்படுத்தினர். பின்னர் காஷ்மீரம் சென்று அங்கிருந்த பௌத்தர் முதலியோரை ஜயித்து வியாஸ பௌர்ணிமையன்று ஸர்வஞ்ஞபீடம் ஏறி, மிகச்சிறப்புற்று விளங்கினர். இவ்வாறு மடங்களைச் சீர்படுத்திக்கொண்டு ஆஸாம் தேசத்தில் காமரூபம் என்ற பட்டினம் வந்து அங்கிருந்த அபிநவகுப்தன் என்ற பெரிய சாக்தேயனை எதிர்த்து, தோல்வியுறச் செய்தார். இதனால் அவன் கோபங்கொண்டு சங்கராசாரியர் மேல் ஆபிசாரப்பிரயோகம் செய்து அவருக்கு மூலவியாதி வரும்படி செய்துவிட்டான். இதனால் வரவர இவர் பலம் குறைந்து கொண்டே வந்தது. இதைப் பத்மபாதர் உணர்ந்து தகுந்த மந்திரங்கள் மூலமாக இதை மாற்றிவிட்டார். ஆயினும் இந்த வியாதியின் வேகம் முற்றிலும் போகவில்லை. தேகம் தளர்வதைக்கண்ட ஆசாரியர், பதரிகாசிரமம் சென்று அங்கோர் மடம் ஏற்படுத்தி அருகாமையில்ஓர்நாராயணக்ஷேத்திரத்தையும் கட்டிவைத்தார். பின்னர் கேதாரம் வந்து இளம் பிராயமாகிய 32-ம் வயதில் ஸித்தி பெற்றார்.

---

பேச்சியின் மத்தியில் தடுக்காமை.—ஒரு மனிதன் பேசிக்கொண்டிருக்கையில் நாம் வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டாவது அல்லது வேறு விதமான சம்பாஷணைகளை ஆரம்பித்தாவது அவன் பேச்சைத் தகையக்கூடாது. இந்தச் சமாசாரம் ஒரு இளங்குழந்தைக்குக்கூட தெரிந்த விஷயம்.

ஒரு சங்கத்தில் போய் உட்கார்ந்தால் நமக்கு இன்ன சங்கதி தெரியுமென்று சொல்லி அதைப் பற்றி வாதிப்பதைக்காட்டிலும் அவர்கள் எந்தச் சங்கதியைக் கொடுத்து வாதிக்கச் சொல்லுகிறார்களோ அதை அங்கீகரித்துக்கொண்டு வாதிப்பது நலம், ஏனெனில் நாமே ஒரு விஷயத்தைத் தடுத்து வாதிக்க எத்தனித்துப் பின்னால் பின்வாங்குவதைப்பார்க்கிலும், இதரர்கள் சொன்ன சங்கதியில் சரிவரப் பேசத்தெரியாமல் பின்வாங்குவது அவ்வளவு மரியாதைக் குறைவல்ல. நமக்குச் சுவயமாய்ச் சக்தியிருக்கும் பக்ஷத்தில் எதிலும் சரிவர விளங்கும்.

# மாட்சிமை தங்கிய இந்திய சக்ரவர்த்தினி மேரி மஹாராணியார் *

## HER GRACIOUS MAJESTY QUEEN MARY

(*A Life-sketch*)

"தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று" என்று

பெரு நாவலர் சொன்னதின் பொருள், பிறத்தலுக்கு முக்கிய பிரயோஜனம் கீர்த்தியாம்; கீர்த்தி பெறாமல் வாழ்நாட்களைக் கழித்தலினும் பிறவாமலிருத்தல் நலமென்பதாம். நமது நாட்டிற்குத் தற்காலம் சக்கிரவர்த்தியாயிருக்கும் ஐந்தாவது ஜார்ஜ் என்பவருக்குப் பட்டமஹிஷியான மேரி என்னுஞ் சீமாட்டியின் சரித்திரத்தை நோக்குங்கால் புகழுடம்பு ஓம்புதற்கே அவதரித்த பெண்மணி யென்றே சொல்லலாகும். புண்ணியவசத்தால் ராஜ ஐசுவரியம் கிடைப்பது உண்மை. "விளையும் பயிர் முளையிலே" என்னும் முதுமொழியும் பொய்த்துப் போவதில்லை. முளையைச் சரிவரப் பரிபாலிக்காவிடின் பயனுண்டாகா தல்லவா? நமது மஹாராணி அவர்கள் குலத்திலும் குணத்திலும் உயர்ந்தவரா யிருந்ததோடு நல்லொழுக்கமும் அவருடன் செழித்து வளர்ந்தமையால் இப்போதடைந் திருக்கும் உத்தம பதவி அவர்கட்குத் தகுந்ததாக ஏற்பட்டது. சிறு பிராயமுதல் இந்தச் சீமாட்டியின்சரித்திரம் எல்லோரும் மெச்சும்படி யிருத்தலால் அதனைச் சற்று விஸ்தரித்தே இங்குச் சொல்லுவோம்.

இங்கிலாண்டில்1760-ம்ஆண்டுமுதல்1820-ம் ஆண்டுவரையில் மூன்றாவது ஜார்ஜ் என்னும் அரசன் ஆண்டுவந்தார். அவருடைய தௌஹித்ரி டசேஸ் அப் டேக் என்பவர் காலஞ்சென்ற விக்டோரியா மஹாராணி அவர்களுக்கு அத்தையின் பெண்ணாகவேண்டும். மேரி மஹாராணி அவர்கள் மேற்சொன்ன டசேஸ் அப் டேக் என்பவரின் ஸ்ரீமந்த புத்ரியாக 1876-ஆ மேமீ 26வயில் அவதரித்தனர்.

தாயைப்பார்த்து பெண்ணைக் கொள்ளவேண்டுமென்று பெரியோர் சொல்வது வாஸ்தவம் என்பது மேரி மஹாராணியின் சரிதையால் நன்றாய் விளங்கும்.

நமது மஹாராணி அவர்களின் தாயார் தெய்வ பக்தி மிகுதியா யுடையவர். குடித்தன வேலைகளைச் செய்து முடித்த பின்னர் "பைபில்" என்னும் கிறிஸ்தவ வேத புத்தகத்தைப் படித்து அதன் ரகஸ்யார்த்தங்களைச் செவ்வையாயுணர்ந்து வேதோக்தமான காரியங்களையே தானுஞ் செய்து தன் மக்களுக்கும் அந்த நற்பழக்கமே படியும்படி செய்து வந்தார். அங்கிலேய ராஜவம்சத்தைப்பற்றிய ஒரு ஐதிகமுண்டு: அதாவது— பூர்வத்தில் இஸ்ரேல் ஜாதியாருக்கு அரசனாயிருந்த டேவிட் என்னும் புருஷனிடத்தினுதித்தவர்கள் என்பதாம். இஸ்ரேல் ஜாதியார் தெய்வகடாக்ஷம் பெற்றவர்கள். ஆதலின் அங்கிலேய அரச வம்சத்தாரும் தெய்வகடாக்ஷம் பெற்றுப் பெரியநாடுகளுக்கு எக்காலத்திலும் அரசுரிமையை யுடைத்தாயிருக்கின்றனர். இந்த அபிப்பிராயம் மேரி மஹாராணியின் தாயாரின் மனத்தில் நன்றாய்ப் பதிந்திருந்தது. அதற்கொத்தவாறாகவே, புத்ரியும் ராஜஸம்பத்தைப் பெற்றிருக்கின்றனர்.

இளம் பிராயமுதல், நமது மஹாராணி அவர்களுக்கு ஏழைகள் குடித்தனம் நடக்கும் மாதிரியைத் தெரிந்து கொள்ளுகிற பழக்கம் உண்டாயிருந்தது. செல்வத்தில் உதித்தவர்களுக்குப் பெருமையுண்டாவது அச்செல்வத்

* W. T. ஸ்டெட் என்பவர் பிரசுரம் செய்துவரும் பத்திரிகையின் ஸகாயத்தாலும், டௌன் ஹைஸ்கூல் பிரதம தமிழ்ப் பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ, K. நாராயணசாமி அய்யர் செய்த வெண்பாவின் ஸஹாயத்தாலும் இச்சரித்திரம் எழுதப்பட்டது.

தைப் பாத்திரமறிந்து பகுத்தலாலே என்னும் வாஸ்தவஞானம் உடையவராயிருந்தனர் அவர் அன்னைக்கும் அதுவே சம்மதமான காரியம். ஏழைகளிடத்தில் இரக்க முண்டாகும் மார்க்கத்தை உயர்ந்த பதவியிலுள்ளவர்கள் தேடுவாராயின் உலகத்தில் துக்கம் கஷ்டம் இரண்டும் இல்லாமலே போய்விடும். நமது நாட்டுச் சீமாட்டிகளைப்போல அறையிலடைபட்டிராமல் வீட்டிற்கு வெளிப்புறத்தில் பாதசாரியாகவாவது குதிரைமேலாவது அடிக்கடிப் போவதுண்டாம். அக்காலத்தில் வேலைக்காரர்கள் யாரையாவது கண்டால் குலப்பெருமையை எள்ளளவேனும் பாராட்டாமல், குசல பிரச்னம் செய்து குளிர்ந்த முகத்தோடு பேசுவார்களாம். இதுவன்றோ பின்வரும் க்ஷேமத்திற்கு ஸூசனையாயிருந்தது.

நமது நாட்டுச்சிறுமியரைப்போலிராது, இங்கிலீஷ், ஜர்மன், ப்ரெஞ்சு, இடாலியன், என்ற நான்கு பாஷைகளிலும் விசேஷ பாண்டித்யத்தை யடைந்தார். ஷேக்ஸ்பியர் முதலான சிரேஷ்ட கவிகளின் கிரந்தங்களை வாசிப்பதிலும், அர்த்தத்தை அறிந்து களிப்பதிலும் காலங்கழிக்க அவர்கட்கு மிகப்பிரியம். வயது வளர வளர தேகதிடமும் புத்தி கூர்மையும் விருத்தியாய்க் கொண்டே வந்தன. வேலை செய்து ஜீவனஞ்செய்யும் ஸ்திரீகளின் சங்கத்தைப்பற்றியும், ராஜாங்கத்தார் ஏழைகளுக்கு ஸகாயமாகச் செய்திருக்கும் சட்டங்களைப் பற்றியும் மேரி மஹாராணி அவர்கள் ஐயமறக் கற்றிருந்தார். ஸங்கீத ஞானமும் மிகுதியாக உண்டு. பெண்களுக்கு வேண்டிய ஸகல ஸத்குணங்களும் மேரிமஹாராணி அவர்களை உறைவிடமாகக் கொண்டனவென்று உறுதியாய்க் கூறலாம்.

இச்சீமாட்டி தீனசரண்யை என்பதற்கு எல்லாரும் அங்கீகரிக்கும்படி ஒரு திருஷ்டாந்தம் உண்டு. ஏழைகள் அங்கிலேய தேசத்தில் குளிரால் பீடிக்கப்பட்டுத் துன்பமடைய அவர்களுக்கு உபகாரமாக நமது மஹாராணியார் அவர்கள் 13,000-ஆடைகள் சேகரித்துக் கொடுத்திருக்கிறார்கள்.

காலஞ்சென்ற நமது சக்கிரவர்த்தியவர்கள் தமது மருமகளிடத்திலிருந்த பூததயையைக் கண்டு களிகூர்ந்தாரென்றும் கூறுப.

## திருமணம்.

முதலில் மேரி அம்மாளைத் தற்காலத்தில் சக்கிரவர்த்திப் பட்டத்தைப் பெற்றிருக்கிறவருடைய ஜேஷ்ட பிராதாவாகிய (Duke of Clarence) என்பவருக்கு மணம் புரிவிப்பதாக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. 1892-ம் வருஷ ஆரம்பத்தில் அவ்விராஜ குமாரன் பரமபதமடைந்தார். சிறிது காலம் விவாகப்பேச்சுக்கள் நின்றேபோயிருந்தன. அக்காலத்தில் ஓர் கவிப்பெண் எழுதியதை இங்கு மொழிபெயர்த்தெழுதுவோம்.

“தமது பாதம் சிங்காதனத்தை ஏறுவதற்கிருந்தது. அரச குமாரரைப் பாணிக்கிரஹணம் பண்ண இருந்தீர். மகுடமும் தமது சிரஸிற் பதிய இருந்தது. நாடெங்கும் தமக்கு ஆசி கூறப்பட்டுக்கொண்டிருந்தது. இச்சமயத்தில் இடிவிழுந்தாற்போல தாம் உத்தேசித்த நாயகருக்கு யமதூதன் வந்து தம் மனத்தை வருத்தினான். மகுடமும், சிங்காதனமும், ராஜ்யமும், தாம்பத்யமும் போயின. எல்லாம் சொப்பனம் போலாயிற்றே. இது என்ன பாவம்!” மேரி மஹாராணி அவர்களுக்கு அக்காலத்திலுண்டான துக்கத்தை என்னென்று சொல்வோம்?

மேற்குறித்த கருத்தமைந்த வெண்பா

*“வண்குடியின் மேரியுனை மக்கள்தாம் வாழ்த்தியதும்*
*பண்பமைசிங்காதனந்தான் பற்றியதும்-நண்பரைய*
*மைந்தனின்கைபற்றுவதும் மாமுடிநீ தாங்குவதும் [ன்*
*முந்தைவினை நீக்கியவாமுன்”*

ஜேஷ்ட பிராதாவுக்கு நிச்சயம் பண்ணப்பெற்ற மாதுசிரோமணி அவர் இறந்த

பின் இளையவரை மணம் புரிந்தனர். மேற்கு நாட்டிலுள்ள கிறிஸ்தவர் ஆசாரத்திற்கு இவ்வகைக் கலியாணம் விலக்கே அல்ல. நியாயத்திற்கும் ஒத்ததாகவே யிருக்கிறது. நமது காருண்ய சக்கிரவர்த்தினியா யிருந்த விக்டோரியா சீமாட்டியும் மேரியை அன்றி வேறொருவரும் அங்கிலேய நாட்டில் இராணிப் பட்டம் பெறுதற்குத் தக்கவரல்லரென்று அபிப்பிராயங் கொண்டிருந்தமையால் மேரி அம்மாள் ஜார்ஜ் என்னும் இளவரசருக்கே வாழ்க்கைப்பட்டுப் பட்டமஹிஷிப் பதவியையும் அடைந்திருக்கின்றனர்.

கிருஹஸ்தாச்ரம தர்மங்கள் ஸரிவர நடத்தப் பெறுவதற்கு மனையாட்டியிடத்தில் இருக்க வேண்டிய குணங்களையும் செய்கைகளையும் ஆராய்வோமாயின் அவற்றிற்குக் கணக்கில்லை. மேரிப் பெருமாட்டி யிடத்தில் அவை குடிகொண்டிருக்கின்றன வென்றால் அவ் விலக்குமியைமனைவியாகக்கொண்ட நமது சக்கிரவர்த்தியின் பாக்கியத்தை என்னென்று கூறுவது? "குடித்தனமோ துரைத்தனமோ" என்பார்களே. குடித்தனத்தில் தேர்ந்தவர்களே துரைத்தனத்துக்கும் தகுதியுள்ளவர்கள் ஆதலின் மேரி அம்மாளே அரசியாதற்குரியவர்.

நமது அரசிக்கு இப்போது ஐந்து பிள்ளைகளும் ஒரு பெண்ணுமிருக்கிறார்கள். மக்கட்பேறு பெரும்பாக்கியந்தான். அம்மக்களை நல்வழிப்படுத்தல் அதனினும் பெரிய பாக்கியம். "எனக்கேன் இத்தனை குழந்தைகள் பிறந்து என் வாணாளை வருத்துகின்றன?" என்று துக்கிக்கிற மாதாபிதாக்கள் அநேகர் உண்டு. ஞானஹீனமான மாதாபிதாக்கள்தான் இவ்வாறு கூறுவார்கள். ஸன்மார்க்கமறிந்த மாதாபிதாக்கள் மக்களைத் தெய்வத்தின் கொடைகளாகப் பாவித்துத் தம்முடைய ஒழுக்கங்களைக் கற்பித்துச் "சான்றோரென்கை ஈன்றோர்க்கழகு" என்னும் முதுமொழியைக் கைப்பற்றிக் கடவுளை நோவாமல் எப்பொழுதும் அவருடைய கருணையை நினைந்து நினைந்து நன்றி பாராட்டுவார்களன்றோ? நமது மஹாராணி அவர்களும் அத்தன்மையை உடையவர் என்பதற்குச் சாட்சி வேண்டுவதில்லை. "இன்சொலாலன்றி யிருநீர் வியனுலகம், வன்சொலாலென்று மகிழாதே" என்ற ஆன்றோர் வாக்கை மறவாமல் மக்களை இன்சொலாலேயே நன்னெறியி லொழுகச்செய்து களிக்கின்றனர் தம்மக்களில் எவராவது சற்று மூர்க்ககுணத்தைக் காட்டுவாராயின் அவரைத் தன் முதுகின் மேலிட்டு இன்சொற் சொல்லி ஒழுங்குபடுத்துவர். ஸாமானிய ஜனங்கள் தம்மக்களை முதுகில் தூக்கிக்கொண்டு போதல்போல், நமதரசியும் தூக்கிக்கொண்டு போவார். ஸாத்வியினுடைய சரீர ஸ்பர்சத்தாலேயே நல்ல ஸ்வபாவங்கள் குழந்தைகளுக்கு அந்தக்ஷணமே படிந்து விடுகின்றனபோலும்.

மேரி மஹாராணி வீட்டிற்குள்ளே எப்பொழுதும் அடைபட்டிருப்பதில்லை. காற்று உலாவுமிடத்தில் தாமும் தம் மக்களும் உலாவுவதுண்டு. மக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கைத்தொழில் பயின்றவர். அவ்வாறு தம் கையாற் செய்தபொருளை ஏழையாயிருக்கிறவருக்குக் கொடையாகத் தருகிறது வழக்கம்.

இளங்குமாரர்களில்ஒருவர் உபாத்தியாயினிக்குக் கீழ்படியாமல் பிடிவாதம் பண்ணினபொழுது உபாத்தியாயினி "இளவரசரே, இத்தனை விளையாட்டுக் கருவியை வைத்துக்கொண்டு முரட்டுத்தனஞ் செய்கின்றீரே. அதோ இருக்கும் ஏழை பிள்ளைகளுக்கு ஒரு மரப்பாவை கூட இல்லையே. உமக்குரிய பதுமைகளில் இது தேவையில்லை யல்லவா? இதை அவனுக்கு நான் கொடுத்து விடட்டுமா?" என்று கேட்க இளவரசர், "எனக்கு உபயோகமில்லாததையா பிறருக்குத் தருதல் பெருமை? நான் மிகவும் விரும்பிய இந்தப் பதுமையை

அவனுக்குக்கொடுத்தல் வேண்டும்," என்பார் "நன்றாயிருந்தாலுங் கொடுப்பார்களா?" என்றபடி நடக்காத இளவரசன் பட்டத்துக்கு வருவாராயின் நாம் என்ன பெரு நன்மைகளைத் தாம் அடையமாட்டோம்?

வெகுநேரம் பாடம் படிப்பதில் குழந்தைகளை மடக்கிவைக்க மஹாராணியவர்கள் ஸம்மதிப்பதில்லை. அவ்வாறு மடக்கிவைத்தல் புத்திக்கு மந்தத்தையும் தேகத்திற்கு நோயையும் தருமென்பதாம். ஒவ்வொரு குழந்தையும் ஸ்வயநயம் பாராட்டாமலும், தன்னையடக்கி நடக்கவும் கற்பிக்கப்பட்டிருக்கிறது.

வேலைக்காரர்களுக்கு ஒய்வு காலங்கொடுத்து அவர்களும் ஸந்தோஷ மடைதற்கு இடங்கொடுப்பதுண்டு.

நமது மஹாராணியவர்களுக்கு ஸங்கீதஞானமுண்டென்றோம். சிங்காரப் பாட்டுகள் பாடுதலேயில்லை. கடவுள் துதியாயிருக்கும் கீதங்களையே செவ்வையாயும் பக்தியாயும் பாடுவார்களாம்

நமது சக்கிரவர்த்தியும் அவர் பட்டமஹிஷியும் நீடூழிகாலம் நம்மையாண்டு வாழ்க, வாழ்க.

இச்சரித்திரத்தை நாம் எடுத்துரைக்கப் புகுந்தது பின்வரும் ஒரே காரணம் பற்றியென்க. ஆரியப்பெண்கள் இந்நாட்டில் கல்வி,ஒழுக்கம், தயா,தாக்ஷணியம் முதலிய உத்தமமான பொருள்களை யடைய முயலாமல் மௌட்டியத்தில் மூழ்கிப் பொன்னிலும் ஆடையிலும் ஆடவர் தேடும் பொருளை அழித்துச் சீர்குலைந்து புகழற்று வாணாளை வீணாளாக்காமல் இகபர ஸாதகமானவற்றில் புத்தியைச் செலுத்தி மேன்மையை அடையவேண்டு மென்பதே.

கே. வெங்கட்ராம அய்யர்.

## நடுக்கங்கற்க நடந்தசிறுவன்

### THE BOY THAT LEARNT TO SHUDDER

ஓர் தகப்பனுக்கிரண்டு பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் மூத்தவன் புத்திமான். அவனுக்கு எதையுஞ் செய்யுந் திறமை யுண்டு. இளையவன் மந்தன், மடையன். கல்வியென்பது அறியாத நிரக்ஷரகுக்ஷி. அவனைக் கண்ட பொழுதெல்லாம் ஜனங்கள், 'குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக்காம்பு' என்று சொல்வது வழக்கம்.

எதையுஞ்செய்ய மூத்தவனே வரவேண்டியது. ஆனால் அவனைத் தன் தகப்பன் மாலை வேளையிலாவது, இருட் காலத்திலாவது, ஊர்க்கு வெளியிலிருக்கும் இடுகாட்டுக்கு அருகிலுள்ள வழியிலாவது போகும்படிச் சொன்னால், "அப்பா, என் உடல் நடுங்குகிறது" என்று பயந்து சொல்வான். சாயுங்காலங்களில் எல்லாமானதும் இரவில் உண்டு படுக்கைக்குப் போகும்பொழுது வீட்டில் எல்லாருங்கலந்து கதைகள் சொல்லுங்காலத்திலேதாவது மனத்தைப் பயத்துக்குள்ளாக்கிப் பீதி உண்டாக்கக்கூடிய ஸமாசாரம் ஏதேனும் வந்தால் கூட்டமுழுதும் "உடல் நடுங்குகிறது, நிரம்ப பயமாயிருக்கிறது" என்று சொல்வார்கள். இக்காலங்களிலெல்லாம் மூலையொன்றில் பதுங்கிக்கிடக்குஞ் சிறியவன் அவர்கள் எதைப்பற்றிப் பேசுகிறார்கள் என்றாவது என்ன பேசுகிறார்கள் என்றாவது அறியாமல் திகைப்பான். "அவர்களெல்லாம் எங்களுடம்பு நடுங்குகிறது, மனங்கலங்குகிறது என்று சொல்லுகிறார்கள், அது என்னவாகவிருக்கலாம். ஒருவேளை அது எனக்குத் தெரியாத ஓர் வித்தையாய் இருக்கலாம்" என்று எண்ணுவது வழக்கம்.

இப்படி இருக்க ஓர் நாள் தகப்பன் சிறுவனை நோக்கி "நீ பெரும் மூடன். மூலையிற் பதிவாய்; கற்க அறியமாட்டாய். நீ இருப்பது எனக்

கோர் பாரமாகவிருக்கிறது. உன் தமையன் நன்றாகக் கற்று வருகிறான். உனக்குச் சொல்வலதை எல்லாம் ஓர் காதால் வாங்கி மறுகாதால் விட்டு விடுகிறாய். உனக்கு எத்தனை நாளைக்கு வீணுகப் பிண்டம் படைப்பது? போதும். என் எதிரில் நிற்காதே. ஏதேனுங் கற்று உன் உணவிற்கு வழி தேடினாலன்றி என் எதிரில் வாராதே போ" என்றார்.

"எனக்கும் அப்படித்தான் அண்ணா பட்டது. நானும் ஏதேனும் கற்கவேண்டுமென்று ஆவலாயிருக்கிறேன். ஆகையால், நடுக்கங் கற்க நான் அறியவேண்டும். அது இன்னதென்றே என்னால் அறியமுடியவில்லை" என்று சிறுவன் கூறினான்.

இதைக் கேட்டுத் தமையன் பல்லெல்லாம் தெரியச் சிரித்தான். தந்தை கவலைப்பட்டு "உனக்கு நடுக்கமின்னதென்று தானே தெரியவரும். உன் ஜென்மத்தில் பிழைப்பு, உழைப்பு இவை யொன்றும் அறியமாட்டாய். ஒரு காசு உன்னால் ஸம்பாதிக்க முடியாது" என்று நெட்டுயிர்ப்புவிட்டான்.

மனமுறிந்தவனாகித் தன் மகனது ஸ்திதியைக் குறித்துத் தன் அன்பரிடமெல்லாங் கூறி வியஸனமுற்ற காலத்தி லொருவர் 'உன் மகனை அவன் வழியே நடப்பித்துப் பின் நம் வழி நடக்கச் செய்யவேண்டும்; ஆகையால் அவனுக்கு நடுக்க மின்னதென்று அறிவிக்கவேண்டும். அதற்கு அவனை என்னுடன் அனுப்பும். அவனை என் ஸ்நேகிதனாகிய மந்திரவாதியிடம் விட்டு நடுக்கமின்னதென்றறியச் செய்கிறேன்" என்றான். அதைக்கேட்டு மிக்க ஸந்தோஷத்தோடு எவ்வாறேனும் அவன் விருத்தி அடையவேண்டும் என்று தன்மகனை அவனிடம் ஒப்புவித்தான்.

மந்திரவாதியிடம் அச்சிறுவன் ஒப்புவிக்கப்படவே நடுராத்திரியில் மயானத்திற்குச் சென்று சில மயான வஸ்துக்களைக் கொண்டுவரும்படியாகச் சொன்னான். தனியாகவே சென்று கேட்டவை எல்லாம் கொஞ்சமேனும் பயமில்லாமல் எடுத்து வந்தான். வந்ததும் மந்திரவாதி 'நடுக்க மின்னதென்று தெரிந்ததா?" என்றான். மிக வியஸனத்தோடு சிறுவன் "தெரியவில்லையே" என்றான்.

"ஆனால் இன்று நீ உணர்வாய். மயானத்தில் பிணமெரியுங் காலத்தில் பக்கத்தில் இருந்து ஜாக்கிரதையாகக் கைகால்களை வீசி எறியும் பிணத்தின் மண்டை ஓட்டை எடுத்துவருவாய். ஆனால் இடையே அங்குச் சில பேய்கள் வந்து பயத்தை யுண்டாக்கும். அதைக்கண்டு பயப்படாமல் வா. அப்பொழுது நடுக்கம் இன்னதென்று அறிவாய்" என்று மந்திரவாதி கூறினான்.

சிறுவன் அவ்விராத்திரி மிக உத்ஸாகத்தோடு, எரியும் பிணத்தினருகு உட்கார்ந்து, புலால் நாற்றம் வீசும் புகையின் திரளை ஒதுக்கிக்கொண்டு, கைகால்களை யெல்லாம் எரியின் பரவலால் வீசி எறிதலை விசித்திரமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். இடையே எதிரில் ஓர் உருவம் மயிர் அங்கி போர்த்து மஹா விகாரமாகி வெண் கோரப்பற்களைக் காட்டிக் குட்டைக்கால்களால் அசைந்து ஒதுங்கி யொதுங்கி அவனருகு வந்தது.

சிறுவன் அதை நோக்கி "நீ யார்? உனக்கிங்கென்ன வேலை. என் வேலையைக் கெடுக்க நீ யேன் இங்கு வந்தாய்" என்று கேட்டான். பதில் ஒன்றுமில்லை. மறுபடியும் "நீயார்? ஏன் இங்குவந்தாய். பதில் சொல்" என்றான். அப்பொழுதும் பதில் ஒன்றும் இல்லை. மற்றுமொருமுறை அவ்வாறே கேட்டான். அப்பொழுதும் பதிலில்லை. மிகக் கோபத்தோடு அச்சிறுவன் "பதிலும் சொல்லுவதில்லை. வாயும் திறப்பதில்லை. உனக்கென்ன இங்கு வேலை. ஓடிப்போ. இல்லாவிட்டால் உன் மண்டையை உடைத்து அம்மண்டையை எடுத்துக்கொண்டு போவேன், மந்திரவாதிக்குக் காட்ட" வென்று கூறிக்கொண்டெழுந்து

அப்பேயை அடிக்க எழும்பி, இச்சிறுவனை வெருட்ட எண்ணி இவ்வடிவங்கொண்டு வந்த மந்திரவாதியை மோதிக் கீழே தள்ளிவிட்டு மண்டை ஓட்டை எடுத்துக்கொண்டு வீடு சேர்ந்தான்.

பொழுது விடிந்ததும் மந்திரவாதியின் மனைவி கணவனைக் காணாது "இன்னும் என் கணவன் வீட்டிற்கு வரவில்லையே. யாது காரணமோ அறியேன். நீ அவரை எங்கேயேனுங் கண்டதுண்டோ" என்று சிறுவனைக் கேட்டாள். அதற்கவன் "அவரை நான் இராத்திரிமுதல் காணவில்லை" என்றான். "நேற்று இராத்திரி சுடலைக்குப் போவேன் என்று போனார்" என்றாள். "அப்படியாகில் இரவில் ஒரு உருவம் வந்தது. அது அவர்தானோ என்னமோ தெரியாது. அந்நள்ளிருளில் வந்ததால் திருடனாயிருக்கலாமென்று எண்ணி பல முறை யாரென்று கேட்டேன். பதில் சொல்லாமையால் நான் மோதி அவரை அங்குக் கீழேதள்ளினேன். ஒருவேளை அவராயிருக்கலாமோ என்னமோ பாரும்: அவராயிருந்தால் நான் வேண்டுமென்று செய்யவில்லை. என்னை மன்னிக்கவேண்டும்" என்று மிக்க வணக்கத்தோடு சொன்னான்.

மிக்க ஆத்திரத்தோடு அவளங்குச் சென்று கணவன் காலொடிந்திருப்பதைக் கண்டு கவலையுற்று சிறுவனது தந்தையிடஞ் சென்று "இந்த அநியாயமுண்டா! உலகத்திற் கொக்குமா! காலையா ஒடித்து விடுவது. இதுவும் என் தலைவிதியா! உன் மகன் செய்த அநீதியைப் பாரும்! இது அடுக்குமா! இப்பாழா போவானால் வந்ததைப் பாரும். என் கோலமிது" வென்று அழுதாள். இதைக் கேட்டதும் "அப்பா! உன்னால் எனக்கு வந்தபெயர் போதுமடா! என்னெதிரில் நில்லாதே. இவ்வைம்பது ரூபாயைக் கொண்டு நீ எங்கேனும் தொலைந்து விடு. என் எதிரில் நிற்கவேண்டாம். என்னை உன் தகப்பனென்று எங்கும் சொல்லவேண்டாம். உன்னை மகன் என்று சொல்வதே எனக்கு மானக்கேடாய் இருக்கிறது. என்று மிகக் கோபத்துடன் அச்சிறுவனைக் கழுத்தைப்பிடித்து நெட்டித்தள்ளினான்.

"அண்ணா கொஞ்சம் பொறுத்துக்கொள்ளும். இதோ நான் போய் விடுகிறேன். ஆனாலும் நான் நீங்கள் எண்ணிய விதம் துஷ்டத்தனம் செய்தவனல்ல. நான் நிரபராதி. நான் அடித்தபொழுது அவரின்னாரென்றே தெரியாது. யாரோ துஷ்டன் இராத்திரிவேளையில் ஸஞ்சாரஞ் செய்கிறானென்று அடித்தேன். அவர் வேஷமும் அவரை அறியும்படியாக இருக்கவில்லை. நான் மூன்றுமுறை நீ யாரென்று கேட்டேன்; பதிலே இல்லை" என்று சிறுவன் கூறினான்.

"சீ! போ! உன்னால் எனக்கெப்பொழுதும் தொந்தரையே தவிர மற்றொன்றும் இல்லை. இவ்வாசலில் உன் நிழல்கூட வீழவிடவேண்டாம். இந்தக்ஷணமே ஓடிவிடு" என்று உரத்து தகப்பன் கூவினான்.

"ஸரி நான் போகிறேன். கோபம் வேண்டாம். நான் நடுக்க மின்னதென்று கற்கவேண்டும். அதன் மூலமாகவாவது ஸம்பாதிக்க வழிதேடுவேன்." என்று சொல்லி ஊரைவிட்டு 50-ரூபாயை இடுப்பில் செருகிக்கொண்டு "எப்பொழுது நடுக்கமின்னதென்றறிவேன், நடுக்கமின்னதென்று எப்பொழுது அறிவேன்" என்று உரத்துச் சொல்லிக்கொண்டே வழிநடந்தான்.

வழியில் இவன் செயலைக்கண்ட ஓர் மனிதன் 'உன் மனத்தில் என்ன குறை' என்றான். 'ஒன்றுமில்லை. நடுக்க மின்னதென்று என்னால் அறிய முடியவில்லை. அதை இன்னதென்று கற்கவேண்டுமென்பதுதான் குறை' என்று சொன்னான்.

இதைக்கேட்ட அம்மனிதன் வழியில் இருந்த கழுமரத் தருகு ஓர் மரத்தின் கிளையில் ஏழு திருடர்களைத் தூக்கிட்டு இருப்பதைக் காட்டி 'இங்கு நீ இன்று தங்கிஇருந்தால் நடுக்கமின்னதென் றறிவாய்' என்றான். சிறுவனும் ஸந்தோஷத்துடன் அன்றிரவு அங்குத் தங்குவதாகவும் தான் நடுக்கமின்னதென்று கற்றால் தன்னிடமுள்ள ஐம்பது ரூபாய்களை அவனுக் களிப்பதாக வாக்களித்து அவனை அனுப்பினான். இரவு மிகவும் குளிராய் இருந்ததால் குளிர் காய அங்கிருந்த கட்டைகளை எல்லாம் கூட்டி எரி ஒன்றுண்டாக்கி ஸந்தோஷமாகவிருந்தான். ஆனால் காற்று நாலாபக்கங்களினால் வீசியதால் மரத்திலிருந்து தொங்கிக் கொண்டிருக்கும் பிணங்கள் ஒன்றோடொன்று உராய்ந்து அசைந்துக் கொண்டிருந்தன. இதைக்கண்ட அச்சிறுவன் மிக்க அன்போடு "சீ முட்டாள்களே! என் வீணாகச் சண்டையிடுகிறீர்கள். உங்களுக்குக் குளிராயிருந்தால் என்னோடு குளிர்காயும்" என்று சொல்லிக் கொண்டவைகளை மரத்தினின்று இறக்கி நெருப்பருகு வீழ்த்தி ஸுகமாகக் குளிர் காய்ந்துக்கொண்டிருந்தான்.

ஆனால் காற்று மிக வீசிபதால் தீ நாலா பக்கங்களிலும் படர ஆரம்பித்தது. இதைக் கண்ட சிறுவன் அப்பிணங்களை நோக்கி 'மூடர்களே! ஜாக்கிரதைபாக இருங்கள். நெருப்பு உடம்பைக் கொளுத்திவிடும்' என்று சொல்ல அவை அசைவற்று இருந்தன. அன்றியும் அவற்றிடத்து துணிகளிலும் நெருப்புப் பற்றிக்கொண்டது. இதைக் கண்ட சிறுவன் "சீ! உங்களுக்கிங்கிருக்கத் தகுதி அல்ல. முன்னிருந்த இடம்தான் ஸரி" என்றவைகளை மறுபடியும் தூக்கிவிட்டான். பின்பு தூக்கம் கண்ணை ஒடுக்கிக்கொண்டு வந்ததால் மெய்ம் மறந்து தூங்கினான்.

காலையானதும் அம்மனிதன் வந்து "நடுக்கமின்னதென்று அறிந்திருப்பாயென்று எண்ணுகிறேன்" என்றான். "அது-தான்-இல்லை" என்று சிறுவன் கூறினான். பின் அம்மனிதன் தன்வழியே போனான். சிறுவனும் வழி நடந்துக் கொண்டிருந்தான்; இடையே ஓர் வண்டிக் காரனிவனுடைய கூச்சலைக் கேட்டு 'நீயார்' என்றான். 'எனக்குத் தெரியாது' என்றான். 'உன் பெயர் என்ன?' 'அதுவும் தெரியாது.' 'உன் தகப்பன் பெபராவதென்ன?' 'அது சொல்ல முடியாது.' 'உன் ஊரெது?' 'அதுவும் சொல்லமுடியாது.' 'நீ மொணமொணப்பது என்ன' என்றான். 'ஒன்றும் இல்லை. எனக்கு நடுக்கம் இன்னதென்று தெரியவில்லை. அது தெரியவில்லையே என்று மொணமொணக்கின்றேன்" என்றான். "நிரம்ப நன்றாயிருக்கிறது உன் கதை. ஸரி. வாயை மூடு. என் வண்டியில் ஏறிக் கொள். உனக்குத் தங்கத்தகுந்த இடத்தில் விட்டுவிட்டுப்போவேன்" என்றான். ஸரியென்றவ்வண்டியி லேறிக்கொண்டு ஓர் ஸத்திரத்தை அடைந்தான்.

அவ்விடத்திலும் நடுக்கமென்பது இன்னதென்று என்று அறிவேன் எனவே த்யானஞ் செய்துகொண்டிருந்தான். இதைக் கேள்வியுற்று, அருகிலறையுள் இருந்த அந்த ஸத்திரத்தின் தலைவன் "உனக்கென்ன பைத்தியமா" என்றான். "இல்லை எனக்கு நடுக்கமென்பது இன்னது என்று தெரியவில்லை. அதை நான் அறிய வேண்டுமென்று ஆவலாய் இருக்கிறேன்" என்றான். அதற்கு அந்த ஸத்திரக்காரன் உனக்கு நிஸ்சயமாக அவ்வெண்ணம் இருக்குமானால் இவ்வூருக்கருகாமையில் மாந்திரிகத்தால் வயப்படுத்தப்பட்ட ஓர் அரண்மனை இருக்கிறது. அதில் நித்திரை செய்தால் நீ நடுக்கமின்னதென்று அறிவாய்" என்று சொன்னான். அவன் மனைவி "உமக்கென்ன ஆலோசனை இல்லை போலிருக்கிறது. பாழும் வீட்டிற்கு இவ்வழகிய பாலனையா அனுப்புவது"? என்றான். சிறுவன் அஞ்சாது "அது எதுவாயினும் பயமில்லை. எமனேதான் வரட்டு

மே. அவனையும் நான் பார்த்துக் கொள்வேன். நான் கற்றுக்கொள்ளத்தானே வந்திருக்கிறேன்" என்றான். "ஆனால் ஸரி அவ்விடத்து நீ மூன்று இராத்திரி படுத்துத் தூங்கி மீண்டு வந்தால் இவ்வூர் அரசன் மகளை மணம் செய்துக் கொள்ளலாம்" என்றான். சிறுவனும், "ஆனால் நான் அரசனை நேரில் காண்பேன்" என்று சொல்லிவிட்டு நாளை நடுக்கமின்னதென்று அறியலாகும் என்னுமாசையால் நித்திரையின்றி இரவுமுழுதுங் காலங்கழிக்கவாரம்பித்தான்.

"நடுக்கமுணரா-உடற்கொண்-டென்-பயன்" என்னும் பதத்தைக் கரடுமுரடாக நாதநாமக்கிரியையில் பாட வாரம்பித்தான். அது மயங்கிபிலஹரியிற் பாய்ந்து ஸாவேரியில் முடிந்தது. இருளும் முடிந்தது பொழுதும் விடிந்தது சிறுவன் உடனே கைகால் கழுவிக்கொண்டு அரசனிடம்போய் "நான் இவ்வூருக்கு வெளியிலிருக்கும் அரண்மனையில் படுத்து நித்திரைசெய்ய விரும்புகிறேன். தயவு செய்யவேண்டும்" என்றான். அரசனும் சிறுவனது அழகைக்கண்டு மனமிசைந்து "நீ போகலாம். உனக்கேதேனும் பொருள் வேண்டுமானல் கேள்; அவை மூன்று பொருள் தான் கொடுக்கப்படும். அவை ஆனல் உயிரில்லாதவாயிருக்கவேண்டும்" என்றான். "உடனே சிறுவன் மட்டமாகிய கைவாள் கூடிய ஆயுதம் நிறைந்த தச்சனது ஆயுதப்பெட்டி, படுக்கும் நாற்காற் பலகை ஒன்று, நெருப்பு ஆகிய இவை மூன்றும் கொடுத்தால் போதும்" என்று கேட்டு அவைகளைப் பெற்றுக்கொண்டு அந்தப் பாழ் அரண்மனை வாயிலை அடைந்தான்.

சாயுங்காலம் குளிர்ச்சி அதிகமாக இருந்தது. சிறுவனும் குளிர் தாங்காது பெரும் அனலில் குளிர் காய்ந்துக் கொண்டிருந்தான். இரவு நடு ஜாமத்தில் அனலை ஊதிக்கொண்டிருக்கும்போது ஓர் மூலையில் "மி—யாவ், ம்யூ, மி—யாவ், என்ன குளிர்கிறது" என்னுமொரு சப்தம் அவன் காதிற் பட்டது. "சீ மடையர்களே! குளிராயிருந்தால் நெருப்பண்டை உட்கார்ந்து குளிர் காயுங்கள்" என்றான். என்றதும் இருண்ட இரண்டு பூனைகள் அங்கு அவன் இருபக்கத்திலும் உட்கார்ந்து குளிர்காய ஆரம்பித்தன. பின் அவை அவனை நோக்கி "நேசா உனக்கு எங்களோடு சதுரங்கமாட விருப்பமுண்டா" என்றன.

"உண்டு. ஆனால் உமது பாதத்தின் நகங்களைக் காட்டின பிந்தி தான் பதில்சொல்வேன்" என்றான். அவைகளும் பாதங்களைக் காட்ட "ஹோ! அப்பாடா! இவ்வளவு வளர்ந்திருக்கின்றனவே. அவைகளை உமக்காக நான் செதுக்கிவிடுகிறேன். அசைபாது காட்டுங்கள். பின் நான் உங்களுடன் ஆடுவேன்" என்று சிறுவன் சொன்னான். அவைகளும் காட்ட அவற்றின் பாதங்களைத் தச்சனது பலகையில் பதித்து ஆணி அடித்து அப்பூனைகளை அசைவில்லாமலிருக்கும்படிச் செய்தான். பின் சிறுவாளை எடுத்து அவற்றைக்கொன்று அருகிலிருந்த நீர் ஓடையில் சுழற்றி எறிந்து, 'உம்முடன் நான் ஆட்ட மிவ்வாறுதான் ஆடுவது' என்று உரத்துக் கூவினான்.

அவ்வாறு செய்ததும் கூட்டம் கூட்டமாய்ப் பூனைகளும் நாய்களும் கூவிக்கொண்டும் குரைத்துக்கொண்டு சிறுவனை எதிர்க்க வந்தன. அவன் அனலை எல்லாம் கிளரி அவனைத் தொந்தரை செய்யவும் ஆரம்பித்தன. 'வௌ-வௌ-வௌ—வௌ—வௌ' என்னும் சப்தமும், 'ம்யூஉ—மிப்யாஅவ்—மிய்யாஅவ்' என்னும் இரைச்சலும் அவனைக் கொஞ்சநேரம் பிரமையுள் ஆழ்த்தியதாயினும், பொறுமை அவனைச் சும்மா இருக்கும்படி செய்தது. அவனுலும் பொறுக்க முடியாது போகவே மிகுந்த ஆத்ரத்தோடு எதிர்த்தவைகளை எல்லாம் குத்தியும் வெட்டியும் கொன்று எறிய செத்தவை தவிர மற்றைபவை எல்லாம் பயந்தோடின. மரித்தவைகளை அருகிலிருந்த ஓடையிலெறிந்தான்.

பின் நெடுநேரம் விழித்திருந்ததால் கண் மூடிக்கொண்டு வந்து, அவிந்த அனலைத் தூண்டி மூட்டிவிட்டு, அதனருகு உட்கார அவன் இமைவிழிக்க முடியாமையால் தூங்க வேண்டுமென்ற எண்ண முண்டாகியது. சுற்று முற்றும் திரும்பிப் பார்க்க அடுத்த மூலையில் ஓர் பெருங் கட்டிலில் படுக்கை விரித்திருந்ததை கண்டான். மிக்க ஆநந்தத்துடன் அவன் அதில் படுத்ததும் அக்கட்டில் நகர ஆரம்பித்தது. அதிக வேகமாகவும் நகர ஆரம்பித்தது. வீடுமுழுதும் சுற்ற ஆரம்பித்தது. சிறுவனும் மஹா குதூஹலத்தோடு 'அப்படித்தான் ஓடு; நன்றாக ஓடு' என்று கூவிக்கொண்டே இருந்தான். 'சரசர,' 'தடதட' 'படபட' 'கடுபுடு' என்னும் சப்தங்களோடு அக்கட்டில் வீடு, மெத்தை, படிக்கட்டு எங்கும் சுற்ற ஆரம்பித்தது. கடைசியாக ஓர் மூலையில் குப்புற வீழ்ந்து, ஓர் மலைபோலிருந்தது. படுக்கை முதலியவைகளை எல்லாம் உதரிக்கொண்டு மேற்கிளம்பி "யார் வேண்டுமானாலும் இப்படுக்கையில் ஸவாரி செய்யட்டும்" என்று சொல்லிக்கொண்டு அனலருகு வந்து படுத்து அயர்ந்து நித்திரைபோனான்.

காலையானதும் அரசன் அங்குவந்து சிறுவன் கால் நீண்டு விழுந்திருப்பதைப் பார்த்து "அநியாயமாய் சிறுவன் பிசாசுகளால் கொலையுண்டான்" என்று நெட்டுயிர்ப்பு விட்டான். அதைக்கேட்ட சிறுவன் "அப்படி ஒன்றுமில்லை. நாங்கள் ஸுகமாகத்தான் இருக்கிறோம்" என்றான். அரசன் "ஸரி. ஒன்றாகியது. இன்னமிரண்டு நாளிருக்கின்றது" என்றான். "நேற்று கடந்ததுபோலவே அடுத்த இரண்டு நாளும் கடந்து விடும் ஆயினும் இன்னமும் நடுக்க மின்னதென்று அறிய முடியவில்லை" என்று சிறுவனும் சொல்ல அரசன் தன்னூர்ப் புகுந்தான்.

மறுநாள் இரவு மெல்லென வந்தது. சுற்று முற்றும் காற்றுமசையாது ஸ்தம்பித்து நின்றது. மரத்திலிருந்த இலையும் ஆடவில்லை, அருகிலிருந்த ஓடையிலிருந்து விழும் நீர்த்தாரைகள் ஜர்ஜல சப்தத்துடன் வந்தாலும் அந்நள்ளிரவில் பயத்தையே யூட்டும். ஊர்க்கு வெளியிலெங்கும் இருள். பயம் கொண்டவன் மனம்போல் வீடும்அவ்விரவில் பிரமையிலேயே ஆழ்ந்திருந்தது. அச்சம், பெரும்பயம், மனக்குழப்பம் இவையெல்லாம் ஒருவனைக் கைக்குள் கொள்ளும்படியான வேளை. அவ்வேளை நமது சிறுவனும் அனலை மூட்டி அதனருகு முக்காட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான். இதற்குள் இரண்டு மூன்றல்லது நான்கு ஜாமப் பொழுதாயிருக்கலாம். அப்பொழுது சாளரத்தின் வழியாக ஓர் முண்டமாகிய மனிதனது அறையுடல் வீழ்ந்தது. "ஹெஹஹே! பலே! அது எப்படி முடியும்" என்று கூவினான். உடனே மறுபாதியுடல் வீழ்ந்தது. பின் இரண்டு பாகங்களும் கூடி ஓர் மனிதவுருவங்கொண்டது. அது பார்ப்பதற்கு மஹா கோரமாயிருந்தது. அச்சிறுமனிதன் பலகையின்மேல் படுத்தான். சிறுவனும் அவனைப்பார்த்து "அது முடியாது அது முடியாது! பலகை என்னுடையது" என்று கூவிக்கொண்டு தன்னை எதிர்த்த மனிதனைக் கீழ்த்தள்ளிவிட்டு அதன்மேல் உட்கார்ந்தான்.

இதற்குள் இன்னமநேகம் மனிதர்கள் அவனைப் போலவே வந்தார்கள். இவர்கள் எல்லாம் கைகளில் மண்டையோடும் எலும்பும் கொண்டு வந்து மண்டையோட்டை பந்தாட ஆரம்பித்தனர். சிறுவனும் பொழுது போகாமையால் ஆடவேண்டும் என்றாசைகொண்டு "நானும் ஆடலாமோ" என்றான். உடனே 'பணம் தந்தால் ஆடலாம்' என்றார்கள். சிறுவனும் அம்மண்டையோட்டை பந்தய வாட்டமாகப் பந்தாடிக் கொண்டிருந்து தான் கொண்டு வந்த செல்வத்திற் பாதி தொலைத்தான். நடுஜாமம் ஆனதும் யாரையும் கண்ணெதிரில் காணமுடி

யாமையால் பலகைமேல் படுத்து அயர்ந்து நித்திரை செய்தான்.

மூன்ருவது இரவில் ஓர் பெருங்கிழவன் அங்கு வந்து நின்ருன். அவனுடைய நீண்ட தாடியும், சடைத்த மயிரும், எலும்பைப் போன்ற கைகால்களும், உள்ளடங்கிய கண்ணும், வளைந்த மூக்கும், வெளிவந்த பல்லும், சிரிப்புக்குட்பட்ட குதூஹலத்தையும் பறக்கச் செய்யும். அவன் வந்ததும் சிறுவனை நோக்கி "யாரடா நீ. இங்கெப்படி வந்தாய். ஜாக்கிரதை. இங்கு ஏன் வரவேண்டும்" என்று உரத்துக் கூவினன். கொஞ்சமும் அஞ்சாது "நடுக்கம் இன்னதென்று கற்க இங்கு வந்தேன்" என்ருன். இதோ "உன்னைக் கொன்று கசக்கி நடுக்கம் இப்படி இருக்கும் என்ருனக்குக் கற்பிக்கிறேன். உன்னைச் சும்மா விடேன், என்னேடுவா. உன்பாடு இனித் தெரியும்" என்று சொல்லிக்கொண்டு அச்சிறுவன் கையைச் சரசரவென் றிழுத்தான். சிறுவன் கோபத்தோடு "ஏன் வீண்அகந்தை. அஹங்காரம் வேண்டாம். அதிகப் பேச்சு வேண்டாம்.உம்முடைய வீண்வியவஹாரங்கள் எல்லாம் எனக்கென்ன செய்யும். யாரிடத்து நீர் பேசுகிறீர் என்று ஆலோசித்துப் பேசும். மிதமிஞ்சி பேசவேண்டாம். எல்லார்க்கும் ஒவ்வொன்றெளிது. தாடியும் மீசையும் நரை கொண்டு பூமியிற் றவழ இருக்கும்பொழுதும் உனக்கு அகந்தை என்பது போகாமலிருக்கிறது. சீ! உன் ஜன்மம் எதற்கு உதவும். பயனற்றதாயன்றே—" என்று கடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது அக்கிழவன் மிகச் சிடுசிடுத்து "அவ்வளவோடு பேச்சை நிறுத்து; போதும். நீ என்னை ஜயித்து விட்டால் உன்னை விடுவதேயன்றிச் சும்மா விடேன்" என்று கூவிக்கொண்டு சிறுவனை, மனத்திருளையும் இருளடிக்கும் படியான அந்தகாரக் கொடுவழியின் வாயிலாக ஓர் கொல்லன் உலைக்களத்திற்கு வந்து சம்மட்டியைக் கொண்டு பட்டடையையும் பூமியில் பாயும்படி மோதினன். அதைக்கண்டு சிறுவன் "இவ்வளவுதானு? நான் இதைக் காட்டிலும் விசித்திரமாகச் செய்யக்கூடியவன். உன்னையும் ப்ரமிக்கச் செய்யும் திறமை என்னிடத்துள்ளது" என்று சொல்லிக்கொண்டு அவன் கையிலிருந்த சம்மட்டியைப் பிடுங்கிக் கொண்டு அப்பட்டடை விரிந்து அப்பிளவையின் இடுக்கில் கிழவனுடைய தாடியானது புதையும்படி மோதினன். கிழவன் மேல் நிமிரமுடியாது கவிழ்ந்த தலை நிமிராது வெருண்டிருந்தான். "இனி சாவடைவது உன் முறை" என்று கூவிக்கொண்டு கிழவனது முதுகெலும்பு முறிய அருகிலிருந்த ஓர் உலக்கையால் சாடினன். கிழவன் கெஞ்சினன். அப்பொழுதுஞ் சாடினன். "அப்போதும் நீ நல்லவன். உனக்கு வேண்டிய பொருளும் ஸௌபாக்கியமும் தருவேன். என்னை விட்டு விடு. நான் சொல்வது நிஜம்" என்று மிக வணக்கமாகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

பின்னச்சிறுவன் அச்சம்மட்டியை அழுந்திய விரிவிலிருந்தெடுத்து தாடியை வெளியேவிட்டான். கிழவனும் சிறுவனை அரண்மனை முற்றும் அழைத்துச் சென்று ஓர் அறையுள் அவனை அழைத்துப்போய் "இதோ எதிரில் உள்ளது மூன்றுபைகள். ஒவ்வொன்றும் பொன்னுடையது. ஒன்றை ஏழைகளுக்குக் கொடு. மற்றொன்று அரசனைச் சேர்ந்தது. மூன்ருவதுன்னுடையதே" என்று சொல்லி விட்டு மறைந்தான்.

காலையானதும் அரசன் வந்து சிறுவனை நோக்கி மஹாஸந்தோஷங்கொண்டு அவனை மார்போடணைந்து "இம்மனை மந்திரக்கட்டிலிருந்து விடுபட்டது. இனி என்னுடைய குழந்தையை மணந்து இந்நாட்டை ஸுகமாக ஆள்வாய்" என்ருன். "அதற்கொன்றும் தடையில்லை,

என்தாய் தந்தையர்களை அழைத்து அவர் நேராகக்காணும்படி ஓர்மாத காலத்திற்குள் மணந்து கொள்வேன்" என்றார். அரசனு மதற்கு ஒப்பினன்.

இதற்குள் சிறுவனது தகப்பனாரை யாரோ ஒரு வேதியன் தோன்றி இவ்வண்டியிலேறும் என்றான். அதில் அவன், அவனுடைய மனைவி, மூத்தமகன் மூவரும் ஒன்றும் சொல்லாது திப்பிரமைகொண்டேறினார்கள். வழியில்தமது சிறுவனுடைய பிரதாபமும் வீரமும் கொடி கட்டிப் பறப்பதைக்கேட்டு ப்ரமைப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது ஓர் பெரிய பூந் தோட்டத்தில் அவர்கள் கொண்டு சேர்க்கப் பட்டனர். அங்கு அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோர் தனி விடுதியில் விடப்பட்டனர். அங்கு உடை எல்லாம் மாற்றப்பட்டுப் பார்ப் பதற்கு மஹாஉன்னதபதவியிலிருப்பவர்போல் செய்யப்பட்டனர். பின் சில நாளானதும் மூவ ரும் தனி வண்டியில் குதூகலத்தோடு கூடிய நகரத்தில் ஓர் பெரிய மண்டபத்திற்கு மஹா மரியாதையோடு அழைத்துக்கொண்டு போகப் பட்டனர். அதே ஸமயத்தில் அங்கு மற் றோர் இராஜவண்டியில் மந்திரவாதியும் அவன் மனைவியும் ப்ரமையோடு வந்திறங்கினர்.

இவர்களையெல்லாம் சிறுவன் இன்னாரின்னா ரென்று சொல்லிச் சபையில் அவரது பேருதவி யால்தான் இந்நிலைமைக்கு வந்ததாகவும் கூறித் தன் தமையன் மணஞ்செய்யா திருப்பதால் தான் மணஞ்செய்துகொள்வதும் தகுதியல்ல என்றான். என்றதும் அரசன் தனது தம்பியின் குமாரத்தியை அவனுக்களித்துத் தன்மகளைச் சிறுவனுக்களித்து ராஜ்ய பட்டாபிஷேகத் தையும் சிறுவனுக்குச் செய்து ஆனந்தமடைந் தான்.

மந்திரவாதிக்குக் கால் கூடி விட்டது. அவர்க்கு ஓர் நாடளிக்கப்பட்டது. சிறுவன் தன் தாய்தந்தை தமையனோடு ராஜாங்கத்தை மஹா ஸந்தோஷத்தோடும் ஆண்டு வந்தானா யினும் நடுக்கமின்னதென்று தெரியவில்லையே யென்று கவலையுற்றிருந்தான்.

இப்படி இருக்குநாளில் சிறுவன் மனைவி "ஏனோ இவர் மனம் இன்னம் நடுக்கம் தெரியவில்லை என்று அலைகின்றது" என்று வியஸனமுற்றிருந்தாள். பின் தன்கணவனோடு ஒரு நாள் இனிது வீற்றிருக்கும்போது அவன் அயர்ந்து நித்திரை செய்ய நாலு பக்கங் களிலும் சாமரை வீசுகையில் பக்கத்திலிரு ந்த தீர்த்தபாத்திரம் தவறி கீழே வீழ்ந்ததில் நீர்த்திவலைகள் இவன்மேல் ஜில்லென வீழ்தலும் "ஹா ஹா ஹா என்றலறி என் உடம்பு நடுங்கு கிறது" என்று தனக்கும் தெரியாது குழறினன். அருகிலிருந்த நாயகி கண்விழித்துக் கொண்டு நீங்கள் நடுக்கம் தெரியாதென்றீர்களே கற்றுக் கொண்டாய் விட்டதோ என்றாள். ஹா அப் படிக் குளிர்கிறது, இன்றுதான் நடுக்கம் இன்ன தென்றறிந்தேன் என்று சொல்லிக்கொண்டே ஸுகமாகத் தூங்கினன்.

பின்அவன் பல நாள் ராஜ்யத்தை ஆண்டு ஸுகமாகவிருந்தான்.

---

நீ கற்றவித்தையைச் சங்கத்திற் காட்டாதே.—சில விசேஷ சந்தர்ப்பங்களில் மாத்திரமன்றி வேறு சமயங்களில் நீ கற்றவித்தையை ஒருபொழுதும் காட்டிக்கொள்ளாதே. அதைவித்வான்களுக்கென்று எப்பொழுதும் அடக்கி வைத்துக்கொள். அவர் கள்கூட உன்னிடத்திலிருந்து அதைத் தாங்களே முயன்று அறிந்துகொள்ள வேண்டுமேயல்லாது நீ அவர்களுக்குப் பலவந்தமாய்க் காட்டாதே. இப்ப டிச் செய்யும்பக்ஷத்தில் நீ மரியாதை பெறுவதுடன் உனக்கு எவ்வளவு தெரியுமோ அதைவிட நீ அதிக மாய் அறிந்திருப்பதாக ஜனங்கள் எண்ணிக்கொள் வார்கள். ஒரு சங்கத்தின் மத்தியில் உட்காரும் பொழுது அந்தச் சங்கத்தைவிட உனக்கு அதிக மாய்த் தெரிந்திருப்பதாக நீ எண்ணவே எண்ணாதே. அப்படி நீ எண்ணிக்கொண்டு உன் வித்தையை வெளியில் காட்ட ஆரம்பித்தால், உன்னை நோக்கி ஜனங்கள் பல கேள்விகள் கேட்பார்கள். அவை களுக்குத் தகுந்த மறுமொழிகள் சொல்ல ஒருக்கால் உன்னால் முடியாமற்போனால், "சீ, இவன் இவ்வ ளவுதானா" என்று எல்லாரும் உன்னை இகழ்ச்சி யாய் எண்ணிவிடுவார்கள். நம்மிடத்தில் உண்மை யான சரக்கு இருக்குமாகில் அதை எப்பொழுதானா லும் உபயோகப்படுத்திக்கொள்ளலாம். எவனிடத் தில் சரியான சரக்கு இல்லையோ அவன் தனக்குத் தெரிந்த கொஞ்சத்தை வெகுவாய்ப் பாடாடோபத்துடன் வெளியில் காட்டிக் கடைசி யாய் அவமானப்படுகின்றவனாவான்.

## சட்டதிட்டங்களை மீறி நடக்கலாகாது.

### THE LAW SHOULD NOT BE BROKEN

ஏன்? என்றைக்காவது ஒருநாள் அகப்பட்டுக் கொள்ளவே வேண்டும் என்பது திண்ணம். அநியாயம் எப்பொழுதும் செய்துகொண்டே வந்து வாழ்ந்தவர்களை இதுவரையில் நாம் கண்டதில்லை. இராஜாங்கத்தார் ஏற்படுத்தியிருக்கும் சட்டங்களைப்பற்றி மட்டும் நாமிங்குச் சொல்லப் புகவில்லை. எல்லாவிதச் சட்டதிட்டங்களையும் பற்றிச் சொல்லுகின்றோம். சூரியன் காலை உதித்து மாலை அஸ்தமிப்பது போல சில சட்டதிட்டங்கள் எப்பொழுதும் இயல்பாகவே நடக்கும்படி ஈசுவரனால் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்வண்ணம் ஈசுவரனால் அமைக்கப்பட்டிருக்கும் திட்டங்களில் ஒரு மயிரிழையேனும் வழுவு என்பது இருக்காது. இம்மாதிரிதான் நாம் இவ்வளவுநேரம் தூங்கவேண்டும், இவ்வளவு பிரமாணம் சரீரத்தைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளவேண்டும், என்ற பல திட்டங்களும். இவைகள் எல்லாம் இயற்கையான திட்டங்கள். ஒரு பொழுதும் நாமிவைகளுக்கு விரோதமாய் நடக்கவே முடியாது. அவ்வாறு விரோதமாய் நடந்துவாழ்ந்தவன் ஒருவனுமில்லை. முதல்முதல் தூக்கம் விழிப்பதால் ஒன்றுமில்லைபோல நமக்குத்தோன்றும்; கடைசியாய் நாம் இவ்வழுவால் படாத அவஸ்தைப் படவேண்டும். என்ன பட்டும் தேசத்துக்கும் மனத்துக்கும் சுகமேயில்லாமல் வியாதிக்காரனாய், கைப்பொருளை வைத்தியம் செய்துகொள்ளுவதில் இழக்கலாகும்.

இராஜாங்கத்தார் ஏற்படுத்தியிருக்கும் சட்டங்களை விட்டு நாம் வழுவி நடப்பதாலும் இவ்வாறுதான் நமக்குத்துக்கம் விளையும். திருடப் புத்திசொல்லிக்கொடுத்த பாட்டியை ஒரு இளைஞன் நம்பி அவ்வாறு திருட்டு வித்தையில் தேறிப் "பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான்" என்ற சித்தாந்தப்படி அகப்பட்டுக்கொண்டு இராஜாங்கத்தாரால் சிறைச்சாலைக்கு அழைக்கப்படும் பொழுது தன் பாட்டியையும் அழைத்துப் போக விண்ணப்பம் செய்துகொண்ட கதையை நாம் கேட்டிருக்கின்றோமல்லவா? துர்ப்புத்தி, துர்நடத்தை, சட்டத்துக்கு அடங்காத குணம், இவைகளை எல்லாம் நாம் இளமைப்பருவத்திலேயே நம்மை விட்டு நீக்கவேண்டும். முதல் முதல் நம்மை அடக்கி ஆளப்பட்டவர்கள் நம்மைப் பெற்றெடுத்து வளர்த்த தாய் தந்தைகள். அவர்களுக்கு அடங்கி நடக்கும் குணம் நமக்குச் சிறுவயதிலேயே அமையவேண்டும். அவ்வண்ணம் அமைந்தால் நாம் பெரியவர்களாய் உலகத்தாரோடு ஒத்துநடக்கும்பொழுதுஎல்லாவிதச் சட்டதிட்டங்களின்படியே நாம் நடக்க அதுஒரு பெரும் காரணமாகும். "விளையும்பயிர் முளையிலே தெரியும்" என்னும் மூதுரை பொய்யல்ல. சிறு வயதில் சட்ட திட்டங்களின்படி நாம் நடப்பது பெரிய வயதிலும் அப்படியே செய்வோம் என்பதற்குப் பெரும் அத்தாட்சி.

---

"செய்வன திருந்தச்செய்".—நாம் ஆரம்பிக்கும் காரியத்தைத் திருந்தச் செய்யவேண்டும். இது முதலில் வெகு கஷ்டமாயிருக்கும், பழகப்பழக வெகுசுலபமாய் நமக்குஇக்குணம் வந்துவிடும். அதன் பிறகு யாராவது ஒருவன் அரை குறையாய் ஒரு காரியத்தைச் செய்வதை நாம் பார்ப்போமேயானால் அது நமதுமனத்திற்கே அருவருப்பை உண்டாக்கும். அரைகுறையான வேலைஎவ்வளவுவெட்கமானவேலை! ஒன்றைஅரைக்கால்செய்து, மற்றொன்றைக்கால் செய்து, எல்லாவற்றையும் குறைவாகவைத்து விட்டு, இன்று ஒரு காரியமாவது முடியவில்லையே, ஈசுவரா! என்று ஏங்கிநிற்பதைக்காட்டிலும், குரங்குப் பிடியாய் ஒரு காரியத்தைப் பிடித்து முடிப்பது எவ்வளவு மேன்மை. இக்குணம் நம்மிடமிருப்பதைமற்றவர்கள் கண்டால் நம்மிடம் அதிக மரியாதை பாராட்டுவார்கள். ஒருவிஷயத்தில் இப்பிடிவாதமும், இவ்வுறுதியும் நம்மிடமுண்டாய் விட்டால், அது மற்ற எல்லா விஷயங்களிலும் நம்முடன் கூடவே நின்று இருந்து நமக்குப் பெருங்கௌரவத்தை விளைவிக்கும். பல்லுத்தேய்ப்பதைச் சரியாய்த்தேய்ப்பவன் நன்றாய்த் தேய்த்தும் குளிப்பான். நன்றாய்த் துணிகளைத் தோய்த்து வைத்துக்கொள்வான். தான் உபயோகப்படுத்தும் பாத்திரங்களையும் நன்றாய்த் துலக்கி வைத்துக்கொள்வான். வெளி விஷயங்களிலிருப்பதுபோல புத்தி சாத்தியமான விஷயங்களிலும் வெகு சட்டதிட்டமாயிருக்க ஒவ்வொரு கருமத்தையும்திருத்தமாகச்செய்வான். இக்குணம் வெகுமேன்மையானதாகையால் நாம் சிறு வயதிலேயே இதைப் பயிலல்வேண்டும்.

## பதிவிரதைகளின் சிறப்பு

**THE DIVINITY OF CHASTITY**

முக்கணார்தன் டலைநாட்டில் கற்புடைமங்
 கையர்பெருமை மொழியப் போமோ?
ஒக்குமெரி குளிரவைத்தா ளொருத்தி; வில்வே
 டனையெரித்தா ளொருத்தி; மூவர்
பக்கமுற வமுதளித்தா ளொருத்தி; யெழு
 பரிதடுத்தா ளொருத்தி; பண்டு
கொக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா
 வென்றொருத்திக் கூறி னாளே.

இந்தப் பாட்டு பதிவிரதைகளின் விசேடத்தை யெடுத்துக் கூறுகிறது. இதில்,—

1. எரிகுளிர வைத்தவள்:—ஹரிச்சந்திர மஹாராஜனுடைய மனைவி சந்திரமதி. நாட்டைத் துறந்து காட்டுமார்க்கமாய் நட்சத்திரேயனால் நடத்தப் பட்டுப் போகும்பொழுது விஸ்வாமித்திர முனியின் ஆக்கினையால் தோன்றிய அக்கினிப் பிரவாகத்தைத் தன் கற்பென்னும் தண்ணீரினால் அவித்தாள்.

2. வில்வேடனை யெரித்தவள்.—நளமஹாராஜனுடைய மனைவி தமயந்தி. சூதாட்டத்தில் நாட்டை யிழந்து தன் பத்தினி சமேதராய் காட்டையடைந்து அங்கு அவள் படும் துயரம் கண்டு சகிக்க முடியாமல் இரவே யெழுந்து நளமஹாராஜன் போய்விட, மறுநாள் சூரியன் உதயமானதும் கண்விழித்துப் பார்க்க, தன் கணவன் பக்கலில் இல்லாமையைக் கண்டு காடெங்கும் அழுது திரியும் சமயத்தில் ஒரு மலைப்பாம்பால் விழுங்கப்பட்டாள். அந்த வேளையில் அங்குற்ற வேடனொருவன் அந்தப் பாம்பைக்கொன்று, தன்னைச் சேரும்படி அவளை வேண்டினான். தான் எடுத்துச் சொல்லிய நியாயங்களைக் கேளாமல் பலாத்கரப் படுத்தவே தன் கண்கள் இரண்டையும் அவன்பேரில் சாய்த்து அந்த க்ஷணமே அவ்வேடனைச் சாம்பலாக்கினாள்.

3. மூவர் பக்கமுற அமுதளித்தவள்:—அத்திரி மஹாரிஷியின் மனைவி அனுசூயை. ஒரு காலத்தில் நாரதமுனிவர் பெரு மணல்களைப் பார்வதியினிடம் கொண்டுபோய் கடலைப் பதமாய் வறுத்துத் தரும்படி கேட்க, அவள் சிரித்து அவரைப் போகச் சொல்லிவிட்டாள். பிறகு முறையே, மஹாலட்சிமியினிடமும், சரஸ்வதியினிடமும் போக, பார்வதி செய்தது போலவே அவர்களும் நகைத்து அவரைப் போகச்சொல்லிவிட்டார்கள். நாரதர் கோபங்கொண்டு தான் பூலோகத்திற்குச்சென்று ஒரு பதிவிரதையைக்கொண்டு அவைகளை வறுத்துவருவதாய் வந்துவிட்டார். பூலோகத்தில் மேற்கண்ட அனுசூயையினிடம் போக அவள் நாரதர் வேண்டிய வண்ணமே செய்து கொடுத்தாள். இவ்வற்புதத்தை மும்மூர்த்திகளின் மனைவிகளுக்கும் சொல்ல அவர்கள் பொறாமைகொண்டு அனுசூயையின் கற்பையழிக்க வெண்ணி தங்கள் பர்த்தாக்களை ஏவினார்கள். அவர்கள் பிச்சைவாங்குபவர்கள்போல் ஜாடையாய்ப்போய் பிச்சைகேட்க, அனுசூயை பிச்சையிட வந்தாள். ஆனால், அவர்கள் நிர்வாணமாய்ப்பிச்சையிட்டால் மாத்திரம் வாங்குவோமென்று சொல்ல, உடனே அவர்கள் மூன்று பேரையும் பாலகர்களாக்கி நிர்வாணமாய்த் தன் பக்கலில் இட்டுப் பால் ஊட்டி வைத்திருந்தாள்.

4. எழுபரி தடுத்தவள்:—நளாயினி யென்னு மாது. குஷ்டரோகத்தினால் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கும் தன்கொழுநன் வேசைவீடு போக இச்சைகொள்ள, அதைப் பூர்த்தி செய்வதற்காகவேண்டிப் பலநாள் ஒரு வேசைக்கு அவளறியாமல் ஊழியம்செய்துவர, ஒருதினம் இதைக் கண்ட அப்பொதுமகள், கருத்தையறிந்து அவள் ஒரு பதிவிரதையென்று பயப்பட்டு அவள் கொழுநனைக் கொண்டு வரும்படிச்சொன்னாள். இவ்வாறே அவள் தன்கொழுநனை ஒரு கூடையில் வைத்தெடுத்துக்கொண்டு வந்து, பொழுது விடியுமுன் திரும்பிப் போகை

யில் வழியில் கழுவிலேற்றப்பட்டிருந்த மாண்டவ்யனென்னும் ரிஷியின் காலில் அந்தக்கூடை பட்டு அதனால் மாண்டவ்ய ரிஷிக்கு நோயதிகரித்தது. நோயுண்டாக்கக் காரணம் யாரென்று பார்க்கக் கூடையில் எதையோ தூக்கிக் கொண்டு போகும் ஒரு பெண்ணைக்கண்டார். உடனே அவள்பொழுது விடியுமுன் அமங்கலியாய்ப் போகக் கடவதென்று சபித்தார். இந்தச் சாபம் காதில் விழுந்ததும், பொழுது விடியாமற் போகக் கடவதென்று அந்தக்கற்பாசி மறு சாபமிட்டாள். அவ்வாறே பொழுது விடியாமலிருக்க, தேவர்களின் வேண்டுகோளால் தனக்கிட்ட சாபத்தைப் போக்கிக் கொண்டு பொழுது விடியும்படி உத்தரவளித்தாள்.

5. பண்டு கோக்கெனவே நினைந்தனையோ கோங்கணவா என்றவள்.—திருவள்ளுவ நாயனாரின் மனைவி வாஸுகியம்மை. கொங்கணரென்னும் ரிஷி ஒருவர், தன் வழியேவந்து கொண்டிருந்தபொழுது, மேற் பறந்து போய்க் கொண்டிருந்த கொக்கொன்று எச்சமிட அது அவர் தலையின் பேரில் விழுந்தது. முனிவர் வெகுண்டு அந்தக் கொக்கை உற்று நோக்கலும் அவர் தபோ மகிமையால் அது எரிந்து போய்விட்டது. பிறகு அவர் ஓர் ஸமயம் திருவள்ளுவர் மனைக்கு வந்து பிச்சை கேட்டார். அந்தச்சமயம் வாசுகியம்மை தன் கணவருக்கு அமுது படைத்துக்கொண்டிருந்தாள். ஆகையினால் பிச்சையிடுவதற்குச்சற்றுத் தாமதித்து வந்தாள். அதைப்பொறாராகி அவளைக்கொங்கணர் உற்று நோக்கினார். உடனே தன் பதிவிரதா சக்தியினால் அறிந்த அவள் "முன் தாங்களெரித்த கொக்கென்று அடியாளையும் நினைத்தீரோ" என்று சொன்னாள். வழியில் நடந்த விருத்தாந்தத்தை அறிந்தது அவளுடைய கற்பினுடைய சக்தியென்றறிந்து உடனே அவளை வணங்கிச் சென்றுவிட்டார்.

இவ்விதமாகிய பதிவிரதைகள் சரித்திரம் நம்முடைய புராணங்களில் ஏராளமாய்க் கிடக்கின்றன. இந்தக் காலத்தும் அப்பேர்ப்பட்டவர்கள் இல்லாமற் போகவில்லை. ஒருத்தியாகிலும் இருப்பாள். அவள் பொருட்டுத்தான் உலகம் உய்கின்றது.

"நல்லா ரொருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யு மழை"—

T. S. மூர்த்தி முதலியார்.

---

வேலைக்கள்ளனாய்த் திரியாதே.—உன்னை ஒரு யஜமானன் ஒரு தொழிலில் நியமித்திருந்தானேயானால் நீ எப்பொழுதும் அத்தொழிலைச் செய்ய உனக்குக் குறிப்பிட்டிருக்கும் இடத்தில் ஸ்திரமாயிருந்து அத்தொழிலைச் செய்யவேண்டும். இக்குணந்தான் சிலரிடம் இருக்கின்றதேயில்லை. அவ்விடத்தை விட்டு அடிக்கடி மறைந்துபோகும் குணம் அவர்களிடத்தில் அதிகமாயிருக்குமேயானால் அது அவர்களுடையக்ஷேமத்திற்கு மிகவும் குறைவு. தாம் இல்லாத சமயத்தில் தமது யஜமானன் அவ்விடம் வந்து தம்மை விசாரிக்கும்பொழுது தமக்கு அடுத்தபதவியிலிருந்து வேலைசெய்யும் மற்றொரு வேலைக்காரன் இப்பொழுது தான் நீருந்தப் போனார் அல்லது குளத்தங்கரைக்குப் போனார் என்று ஒரு நாளைப்போல் சொல்லி வருவானேயானால் அதை அடிக்கடிக்கேட்டுக்கொண்டுவரும் யஜமானனுக்குத் தம்மிடத்தில் என்னமாய் நம்பிக்கை இருக்கும்? மேலும் இக்கொடியகுணம் நம்மிடமதிகமாக ஊன்றிவிட்டால் நாம் ஒரேவிதமான சாக்குப்போக்குகள் சொல்லுவதற்குப் பதிலாகப் புதியவைகளையும் இல்லாதவைகளையும் சொல்லத் தொடங்கிப் பொய்யும் சொல்லப் பழகி விடுவோம். ஆகையால் வேலைக்கள்ளனாயிருக்கும் ஸ்வபாவத்தை நாம் முற்றிலும் அகற்ற வேண்டும். கஜானாவில் சிப்பாய் பாராகொடுப்பது போல் நாம் ஒரு நிமிஷங்கூடத் தவறாமல் தமக்குக் குறிப்பிட்ட இடத்திலிருந்து கொண்டு வேலை செய்ய வேண்டும்.

## சிறுவர்களுக்கான பக்கங்கள்

### CHILDREN'S PAGES

ஓநாயும் கொக்கும்

காட்டின் வழியாய்க் களைத்து ஓடியபோர்
வாட்ட மடைந்த ஓநாய் வல்பசி
சேட்டைக் குடைய திரிந்தலைந் திடையே
எதிர்த்தவோ ராட்டின்மேல் குதித்துயிர் குடித்து
மதிய தெண்ணது மாமிச முண்ட
ஆத்திரமதனொடு வாய்த்திறந் திடையே
புலாலிடைச் செறிந்த என்பு தைத்து
அலாவழி யாக நெஞ்சிடைப் பட்டிட
நெடுமூச்சு வாங்கி நீங்கலாத் துயரில்
அடுத்திட ஓநா யந்தோர் நொடியுள்
கழுத்தது நீண்ட கொழுத்ததோர் கொக்கை
"நண்ப! என் நெஞ்சிடை நாடிய வென்பினை
கண்டெடுத் திடுவையேல் கொண்டிடத் தருகுவன்
உண்டியுஞ் சீரும் உறுஞ்செல் வமுமே"
எனநோக்கி யுரைத்து, தன் மனநோக்கி ஆழ்ந்து
வாயாங் காத்து வகையுடன் காட்ட,
சாய்ந்த கழுத்தை வாயுள் தந்து
என்பை எடுத்து எறிந்துடன் கீழே—எறிந்து,
"என்றெனக் கியைந்த செல்வம் ஈட்டுதி"
என்றுரை விளிக்க "வாயுட் பொதிந்த
தொண்டையைத் துண்டாய்க் கண்டஞ் செய்யா
துண்ணது விடுத்தது ஒன்றே
பலநாட் செல்வங் குலவி யொருநாள்
கிடைத்தது போலென முடிந்த தவன்றே
உயிரைக் காட்டினும் உயரது முண்டே"
என்றுரை நாட்ட எண்ணிய மனத்துள்
'தீயதோர் தமக்குச் செய்திடு நன்மைக்
கேதிரது நோக்கலு மதிவழிறு' என
பற்பல வெண்ணி அற்புத முற்று
நற்குணந் தேட நடந்ததக் கொக்கே.

***

உனக்கென்ன ஒரு கொம்பு முளைந்திருக்கிறதோ?—இந்த வசனம் ஸாதாரணமாக உபயோகித்துவரும் பழமொழிகளில் ஒன்று. உலகில் ஒவ்வொருவனிடத்திலும் ஒவ்வொரு அற்புத சக்தி அமைந்திருப்பது ஸஹஜமே. அப்படி இருப்பவருள் சிலரைப் பெரும்பாலார் பொதுவாக மிகச்சிறந்தவர்கள் எனக் கொண்டாடுவது வழக்கம். இதைக் கேட்குங்கால் பொறாமையாலாவது, அல்லது ஒன்றில் சிறந்தவன் மற்றெல்லா விஷயங்களிலும் சிறந்தவனாக இருத்தல் அவசியமன்று என்ற நுண்ணறிவாலாவது தூண்டப்பட்டு வேறு சிலர் ஒன்றிற் சிறந்தவரது பெருமை அவ்வளவு சிறந்ததன்று என்பதைக் காட்ட 'அவனுக்கு என்ன ஒருகொம்போ? அவன்நெற்றியில் ஒருகொம்பு முளைத்திருக்கிறதோ? அவன் கொம்பு முளைத்தவனோ?' என்று இவ்வாறு பலவிதமாக எடுத்துரைப்பது வழக்கம். மனிதனுக்குக் கொம்பு இல்லை. அவ்வாறில்லாத வஸ்து ஒருவனிடம் இருக்குமாயின் அது எல்லோருக்கும் மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கும். எல்லோரையும் அவனைப் பற்றியே பேசும்படி செய்யும். ஆகவே அவனுக்குக் 'கொம்பு முளைத்திருக்கிறதா?' என்ற தொடருக்கு மனிதனிடம் இதுவரையில் இல்லாத வஸ்து அவனிடம் என்ன இருக்கிறது? அவனைப்பற்றி இவ்வளவு சிறப்பித்து வாயோயாது நீங்கள் ஸதா பேசிக்கொண்டிருக்கத் தலைப்பட்டீர்கள், என்பது பொருள்.

கம்பனது கவித்திறத்தைப் பற்றி எல்லோரும் அவன் காலத்தில் புகழ்ந்துபேசி அவனை ஓர் தேவதையாக மதித்து அவனைப்பற்றிப் பேசுவதிலேயே வீண் காலம் கழித்துவர அவர்களை நோக்கி, இப்பழமொழியின்கருத்தமைந்த ஓர்பாடல்கூறி ஔவை அவர்கள் வீண்காலப்போக்கைத் தடுத்தாள். அந்தப் பாட்டு வருமாறு:—

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யார்க்கும் செயலரிதால்-யாம்பெரிதும்
வல்லோமே என்று வலிமைசொல வேண்டாம்காண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது.

இதனால் ஒருவன் சிறப்பைக்கண்டு அடிக்கடிப் பேசுவதால் மாத்திரம் பயனில்லை. அவ்வாறு மாத்திரம் செய்துவிட்டு விடுவதால் பேசுபவர்களுக்கு வீண்காலம் கழிவதேதவிர யாதொரு நன்மையும் வாராது; சிறப்பு உடையவர்களுக்கு வீண் கர்வமும் அதனால் பெரும் கேடுகளுமே உண்டாகும். ஆதலால் ஓர் சிறப்பை எங்காவது கண்டால் அதைப் பற்றிச் சற்றுப்பேசி நிறுத்திவிட வேண்டும். மேலும் அது மிகச்சிறந்ததென்று நம்மனத்திற்கு அடிக்கடிப் பட்டால் அதை மனத்திற்குள் வைத்துக்கொண்டு, நம்மால் முடியுமாகில் நாமும் அதை அடைய வெளிப்படையாய் முயற்சிக்கவேண்டும். அவ்வாறின்றி வீணாக அதைப்பற்றிப் பேசும் பேச்சோடுமாத்திரம்

திருத்திவிடலாகாது என்பது இப்பழமொழியின் கருத்து.

இப்பழமொழி இராமாயணத்தில் வரும் ரிசிய சிருங்கர் அதாவது கலைக்கோட்டு மாமுனியின் கதையோடு ஸம்பந்தப்பட்டது போலக் காணப்படும். காசிபர் பிள்ளையாகிய விபண்டக ரிஷிக்கு ஓர் பிள்ளை இருந்தார். அவருக்கு நெற்றி உச்சியில் ஓர் மான்கொம்பு முளைத்திருந்தது. அவரைக் கண்டு ரிஷிகள் எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். அவர் சிறுவயதிலேயே தகப்பனார் ஆச்சிரமத்தில் வளர்ந்து வருங்கால் மிகுந்த பரிசுத்த சித்தராக இருந்தார். அவருக்குப் பிரபஞ்ச விஷயமே தெரியாது; ஸ்திரீகள் இன்ன குணமுடையவர் என்பதே அவர் மனத்தில் தோன்றவில்லை. இந்தச் சுத்தாத்மாவை உள்ளபடி அறிந்த ரிஷிகள் இவருக்கு ஞானம்தான் முதிர்ந்து சிரஸுள் தங்க இடமின்றி நெற்றியில் கொம்பாகி வெளி எழுந்ததோ என்று மதித்து வியந்தனர். இப்படி இருக்கையில் மஹா சுத்தாத்மாவான ரிசிய சிருங்கருக்கு விஷய ஸுகம் அனுபவிக்கும் பிராரப்த விசேஷம் வந்துவிட்டது.

அப்பொழுது சில வருஷங்களாக மழையே இல்லாது வருந்திய அங்கதேசத்தில், அதன் அரசனாகிய ரோமபாதன் ஓர் மஹாஜனஸபை கூட்டி மழையை உண்டாக்க வழிதேடினான். அந்தஸபையிலிருந்த பிராஹ்மணர்கள் சிலர் 'காட்டில் விபண்டகர் பிள்ளையாகிய ரிசியசிருங்கர் இருக்கிறார். அவரது நெற்றியிலிருக்கும் கொம்பால் அவரைக் கண்டுபிடிக்கலாம். அவர் மஹாதர்மாத்மா. உலக விஷயமென்பதே அவருக்குத் தெரியாது. அவரை மெதுவாக உமது ஊருள் அழைத்து வந்தால், அவர் அடிவைப்பது முதல் நல்ல மழை பொழிந்து உமது ராஜ்யம் செழிக்கும். வந்தவரை வீணாக விட்டுவிடாது உமது பெண் சாந்தையை அவருக்கு விவாஹம் செய்து கொடுத்து நீர் கிருதார்த்தர் ஆகவேண்டும்' என்றனர். திசை தப்பித் தத்தளிக்கும் மாலுமி கரையைக் கண்டு ஸந்தோஷிப்பது போல அரசன் ஸந்தோஷப்பட்டு சில ஸ்திரீகளை ரிசிய சிருங்கரிடம் அனுப்பி அவர் தகப்பனார் இல்லாத ஸமயம் பார்த்து ரிசியசிருங்கரை வனத்திலிருந்து தமது நாட்டிற்குக் கொண்டுவந்து விட்டான். மஹான் அங்கதேச எல்லையில் அடி வைத்ததும் மழை தாரை தாரையாகப் பொழிந்தது. மழையால் ரிஷிவரவை உணர்ந்த ரோமபாதர் எதிர்கொண்டு ரிஷியை அரண்மனை கொண்டுபோய் தனது பெண் சாந்தையை விவாகம் செய்து கொடுத்தார். விபண்டகர் இதை ஞானதிருஷ்டியால் அறிந்து தன் மகன் பிராப்தம் இத்தகையது என்றுமதித்து கோபியாதிருந்தார். ரிசியசிருங்கரும் உலக விஷயங்களில் மூழ்காது தமது காலத்தை நல்ல வழியில் கழித்து முடிவில் அழியாப்பதவி பெற்றார். கொம்பு முளைத்த இவர் சிறப்பிலிருந்தே 'அவனுக்கு ஒரு கொம்போ?' என்ற பழமொழி வந்திருக்கலாம்.

***

வேஷந்தீன் திறம்.—இராவணன் ஸீதையை இலங்கைக்குக் கொண்டுவந்து அசோகவனத்துள் வைத்து அநேகவிதமாக நயவழியாலும், பயவழியாலும், பலவிதமான மாறு வேஷங்கள் தரித்து அவளை வசப்படுத்த முயன்றான். எல்லாம் முடிவில் பயன் படாதது கண்டு திகைத்து நிற்கையில் அவனுக்குத் தன்தம்பி கும்பகர்ணன் ஞாபகம் வந்தது. உடனே அவனை எழுப்பியாவது ஸீதையைப் பயமுறுத்தி அவளைத் தன் வசப்படுத்தி விடலாம் என்று அவனுக்குத் தோன்றியது. தன் தம்பி இடம் சென்று அவனை எழுப்பி அவன் தீர்க்க நித்திரைக்காரனாதலால் அவனிடம் சுருக்கமாக விஷயங்களைச் சொல்லத் தொடங்கினான்.

இராவணன்.—ஸீதை என்ற ஓர் அழகிய ஸ்திரீ இருக்கிறாள்.

கும்பகர்ணன்.—அவளை உடனே தூக்கி வந்துவிடேன்.

இரா.—தூக்கிவந்து அசோகவனத்தில் வைத்தாய் விட்டது.

கு.—அப்படியானால் அவளை வசப்படுத்திக்கொள்ளேன்.

இரா.—என்ன முயன்றும், எவ்வித ரூபங்கள் தரித்தும் அவளை வசம் பண்ணமுடியவில்லை. ஆதலால் தான் உன் ஸஹாயத்தைத் தேடிவந்தேன்.

கு.—நீ முயற்சி செய்த காலங்களில் எல்லாம் ஸீதை எவ்வாறு நடந்து கொண்டாள்?

இரா.—நான்எந்த உருவம் தரித்து எவ்வளவு விதமாகப் பேசியபோதிலும் அவள் என்னை ஓர் துரும்பாக எண்ணி 'என் நாதன் ஸ்ரீராமரைத் தவிர மற்றவரை ஓர் துரும்பாகக்கூட மதிக்கேன்! கண்ணெடுத்தும் பாரேன்!' என்று தலைகுனிந்து கொண்டு அச்சமின்றிக் கூறுகிறாள்.

கு.—ஆனால் இராமர் உருவமெடுத்து அவளை வசப்படுத்த முயன்றாயா?

இரா.—அப்படியும் செய்ய முயன்றேன். இராமர் உருவத்தை நான் தரித்ததும் எனக்கு ஸீதையிடம் இருந்த துர் ஆக்கிரஹம் எங்கேயோ மறைந்து போய் விடுகிறது. அந்த உருவத்தைத் தரித்துக் கொண்டு ஸீதையிடம் போனால் எனக்குமேல் ஒன்றும் செய்ய ஓடவில்லை. நிராபராதியான ஓர் ஸ்திரீயை நாம் ஏன் வருத்தவேண்டும் என்று எனக்குத்தோற்றுகிறது. எனக்கு மேல்யோசனை தோற்றவில்லை.

கு.—நான் வந்து அதிகமாக அவளை எவ்விதத்தில் பயமுறுத்தப் போகிறேன். நீ இவ்வளவு முயன்றும் உன்னால் முடியாமற் போய்விட்டபடியால் ஸீதை மஹா பதிவிரதையாய் இருத்தல் வேண்டும். அவள் புருஷனாகிய ராமன் உருத்தரித்தால் உன் கெட்ட எண்ணங்கள் அக்காலத்தில் மாறி உன் மனத்தில் நல்ல எண்ணங்கள் ஊறுவதால் அவரும் சிறந்த மஹானாய் இருத்தல் வேண்டும். ஆதலால் ஸீதையை இங்குப் பலாத்காரமாக நீ வைத்திருப்பது உனக்குக் கெடுதியாகவே முடியும். இப்பொழுதே இராமரிடம் ஸீதையைக் கொண்டுபோய் விட்டுச் சரணமடைந்துவிடு என்று புத்திமதி கூறினான்.

கும்பகர்ணன் வார்த்தை இராவணன் காதில் ஏறவே இல்லை. கும்பகர்ணனும் உறங்கத் தொடங்கினான்.

இக்கதையிலிருந்து வேஷத்தின் திறம் வெளியாகிறது. கெட்டவழி எளிதாகையால் அதற்குத் தகுந்த வேஷத்தின் பலன் சீக்கிரத்தில் தெரியும், சற்று நீடித்தும் நிற்கும். நல்லவழி மிகக் கடினமாக இருப்பினும் அவ்வழிக்குரிய பெரியோரைப்போல வேஷம் போடுவதின் பலன் அந்த ஸமயத்தில் இராமல் போகாது. அது நீடித்து நிற்பதும் நிற்காததும் வேஷம் போடுபவனது நோக்கம், மனதின்நிலை இவைகளைப் பொறுத்தது. ஆகவே நல்லோரைப் போல் ஒருவன் வெகுகாலம் மனப் பூர்வமாக நடித்து வந்தால் அவர்கள் எண்ணம் முடிவில் அவனிடம் குடி கொள்ளாமல் போகமாட்டாது.



# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

## த்ரௌபதி அல்லது மனத்தினிலை

### 4. அவைநடுவேற்ற காதை

(தொடர்ச்சி)

உண்டாடுதல், விளையாடுதல், வெறியாடுதல் முதலிய பல ஆடல்களுமாயின. சேவலாடல், காளையாடல், குரவையாடல் முதலிய ஆடல்களுமாயின. வேட்டை முதலிய ஆட்டங்களுமாகி வீட்டையடைந்த பாண்டவகௌரவர்கள் மலைநாட்டு அழகிற்கும் நகரத்தினழகிற்கு முள்ள வேற்றுமைகளை ஆராய்ந்தனுபவியாநின்றனர். பிறகிவ்வாறு ஆய்ந்தோய்ந்தானதும் நீர் விளையாடல் முதலிய ஆடி பழகினர். அதற்குப் பிந்தித் தம்நகரத்துட் புகுந்து செய்குன்று, தலை வீழ்அருவி முதலிய நோக்கிக் காலங் கழித்தனர். உய்யான வனத்தில் சிலநேரம் பொழுது போக்கினர். மண்டபத்தைப் பின் அடைந்தனர். அங்குச் சகுனி பொழுது போகாமையால் விளையாட்டாக வட்டாடியேனும் பொழுது போக்கலாமென்றனன். அரங்கத்துட்சார்ந்து இளஞ்சூதில் காலத்தைச் செலவிட்டனர். பித்து தலைக்கேறியதும் தருமர் தனக்கும் தெரியாது பந்தயமாகச் சிறு ஊரிலிருந்து நாடு நகரங்களெல்லாமிழந்தனர். பின் தன் உடன்பிறந்தார் நால்வரையும் தோற்றனர். அதன்பின் தன்னையும் தோற்றார். பின் என்செய்வது என்று தோன்றாது நிற்க சகுனி த்ரௌபதியைப் பந்தயமாக வைக்கலாமென்றான். ஆலோசியாது ஆகட்டும் என்று ஒத்துக் கொண்டனர். ஆட்டம் முழுதும் ஆகிவிட்டது. இவருக்கும் பந்தயத்திற்கு ஒன்றுமில்லை. சகுனிவேலையு முடிந்து விட்டது. விளையாட்டே வினையாகி முடியுமென்பதற்குப் படிப்பினை வேறுமுண்டோ?

துரியோதனன் விதுரரை அனுப்பித் தருமன்முதலியோரை அழைத்து வருகவென்று சொல்ல, அவரும் அவ்வாறே சென்று சூது ஆடுவதற்காக வஞ்சனையினால் உங்களைக் கெடுக்கத் துரியோதனன் முயல்கிறான் என, தம்பிமார் தடுக்கவும் நாமே சூதாடுவது தகுதியன்று. அது கொடிது. அழைத்தால் வரமாட்டேன் என்பது அரசர்க்கு அழகன்று. எந்தக் கஷ்டம் வந்தாலும் வரட்டும் என்னும் மனத்துணிவோடு “எல்லாமவன் செயலே” என்னும்

# விவேக போதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி III } ஸாதாரணஹு மாசிமீ 1911–ஹு மார்ச்சுமீ { பகுதி 9


## இருவகை ஸ்ருஷ்டி

### THE TWO CREATIONS

மோக்ஷம் அடையவேண்டும் என்ற ஆவலுடைய வன், தான் ஸம்பந்தப்பட்டவரையில் இரண்டுவித ஸ்ருஷ்டிகளின் விஷயங்களை நன்ருய் உணர்ந்து, அவைகள் விஷயத்தில் நடந்துகொள்ளவேண்டிய மாதிரியை நன்ருக அறிந்து, தெளிந்து, அதன்படியே நடக்கவேண்டும். இவ்விருவித ஸ்ருஷ்டிகளாவன: ஈச்வர ஸ்ருஷ்டி, ஜீவ ஸ்ருஷ்டி ஆகிய இவைகளே.

ஈச்வர ஸ்ருஷ்டி.—பிரபஞ்சம் முழுவதும் ஈச்வர ஸ்ருஷ்டியே. ஆயினும் பொதுவாக மனிதனல் உண்டாக்கமுடியாமலும், அவனல் முற்றிலும் மாற்றமுடியாமலும், அவன் பிறப்பதற்கு முன்னும், இறப்பதற்குப் பின்னும் நடுவிலும் விடாது இருப்பதாயும், அவன் கார்யங்களுக்கு ஆதாரமாயும் உள்ள தேஹம் முதலிய வெளிப் பிரபஞ்சமே ஈச்வர ஸ்ருஷ்டி. மண், கல், விதைகளின் சக்தி முதலியனவே இதற்கு உதாரணம். இவ்வஸ்துக்கள் ஒரே ஸமயத்தில் ஒருவனுக்கு ஸுகமாயும், வேருெருவனுக்குத் துக்கமாயும், ஒருவனுக்கே ஓர் ஸமயத்தில் ஸுகமாயும் வேறு ஒரு ஸமயத்தில் துக்கமாயும் தோன்றும் திறனுடையன. இதற்கு உதாரணமாக, நெருப்பு, உணவுகளைச் சமைக்குங்கால் ஸுகவஸ்துவாயும், கையைச் சுட்டுவிடுங்கால் துக்கவஸ்துவாயும்; குளிர்ஜ்வரம் அடிப்பவனுக்கு நெருப்பு ஸுகமாயும், அதே ஸமயத்தில் ஸாதாரணமான ஒருவனுக்கு அது துக்ககரமாயும் இருக்கின்றது. ஆகவே ஈச்வர ஸ்ருஷ்டி பொதுப்படையானது. மேலும் அதில் காணப்படும் ஒழுங்குகள் முதலியன கூர்மையான புத்தியுடையவரை மோக்ஷமார்க்கத்தில் நடக்கும்படி தூண்டும் திறனுடையன. ஆதலால் கைவல்லிய நூலாசிரியர் 'ஜகந்தனில் பொது ஈசனர் ஸ்ருஷ்டி சராசரப் பொருளெல்லாம்' என்றும், 'மூவராம் பரன்ஸ்ருஷ்டிகள் உயிர்க்கெலாம் முத்தி ஸாதனமாகும்' என்றும் கூறுகிருர்.

ஜீவ ஸ்ருஷ்டி.—ஈச்வர ஸ்ருஷ்டி விஷயத்தில் ஒவ்வொருவனுக்கும் ஸமயங்களுக்கேற்ப அஞ்ஞானம், மனேபாவம், இவைகளால் ஏற்படும் அபிமானம், இஷ்டம், த்வேஷம், கோபம், துக்கம் முதலியவைகளே ஜீவ ஸ்ருஷ்டி என்னப்படும். முன்கூறிய மண், கல் முதலியவற்றைப் பானை, உருவம் முதலியவைகளாகச் செய்துகொண்டு 'அவைகள் நம்மவை, அவைகளை இழக்காது வைத்துக்கொள்ளவேண்டும்,' என்றுஎண்ணுதல், அவைகளை இழந்தால் துக்கித்தல், அவைகளை எடுத்துச் சென்றவனிடம் த்வேஷம் பாராட்டல் ஆகிய இவ்வபிமான காரியங்களே ஜீவஸ்ருஷ்டிக்கு நல்ல உதாரணங்கள். இந்த ஜீவஸ்ருஷ்டி இரண்டு விதம். அவைகள் சாஸ்திரீயம், அசாஸ்திரீயம் என்பவைகளே. வேதாந்தம் கூறுகிறபடி பாவித்து த்யானுதிகள் செய்து நன்னடக்கை முதலியவைகளால் ஏற்படுத்திக் கொள்ளப்படும் உள் பிரபஞ்சமே சாஸ்திரீய ஜீவ ஸ்ருஷ்டி. சாஸ்திர ஒழுங்கு தவறி வெளி ப்ரபஞ்சத்தையே உண்மையெனக்கருதி அஞ்ஞான காரணமாக எழும் ப்ரபஞ்சமே அசாஸ்திரீய ஜீவஸ்ருஷ்டி. இது மனத்தோடு இருந்து வெளியில் வந்து தொழிற்படாதவரையில் மந்தம் என்றும், வாக்கு தொழில் முதலியவைகளில் வந்து விட்டால் தீவ்ரம் என்றும் மதிக்கப்படும். அறிவுடையோர் இவ்விரண்டு அசாஸ்த்ரீய ஜீவஸ்ருஷ்டிகளையும் சாஸ்திரீய ஸ்ருஷ்டிகளால் நீக்கிவந்தால் நாளடைவில், பிணம் சுடும் தடி, பிணத்தை எரிக்க ஸஹாயமாக இருந்து, தானும் முடிவில் எரிந்துபோவதுபோல, அந்த சாஸ்திரீய ஜீவஸ்ருஷ்டியும் தானே அடங்கிவிடும். ஆகவே உலகில் பந்தப்படுத்துவது அசாஸ்திரீய ஜீவஸ்ருஷ்டி, அதை நீக்கத்தகுந்த ஸாதனங்கள் சாஸ்திரீய ஜீவஸ்ருஷ்டியும் ஈச்வர ஸ்ருஷ்டியுமே.

ஈச்வரஸ்ருஷ்டி ஒடுங்கிய ப்ரளயத்தில் ஜீவர்களுக்கு மோக்ஷம் வருவதில்லை, ஈச்வர ஸ்ருஷ்டி இருக்கையிலேயே ஜீவர்கள் தம் ஸ்ருஷ்டி ஒடுங்க ஜீவன் முக்தர்கள் ஆகிருர்கள். தம் ஸ்ருஷ்டிமாறுவதால் ஸுகதுக்கங்களை அடைகிருர்கள். ஆதலால் எல்லாம் 'ஈசன்செயல்' என்றுகூறிவிட்டு நாம் மனதைச் சுத்தப்படுத்த வேண்டிய முயற்சி செய்யாமலிருந்தால் நமக்குப் பந்தம் நீங்காது. அசாஸ்திரீய ஜீவஸ்ருஷ்டியை சாஸ்திரீய ஜீவஸ்ருஷ்டியால் ஒழிக்க நாம் தான் முயலவேண்டும். அப்பொழுது கடவுள் கிருபையால், ஈச்வர ஸ்ருஷ்டி நம்மைவிடுவிக்க ஸஹாயமாக வந்து உதவும்

விவேக போதினி

தொகுதி 3] ஸாதாரணஹு மாசிமீ [பகுதி 9

# முக்கிய உபநிஷத்துக்கள்

## THE PRINCIPAL UPANISHADS

## IX. சாந்தோக்ய உபநிஷத்து (2)

## THE CHANDOGYA UPANISHAD

அத்யாயம் 4 (தொடர்ச்சி):—

ஜபாலே என்பவளுக்கு **ஸத்யகாமன்** என்ற ஓர் பிள்ளை இருந்தான். அவன் தாயை நோக்கி 'நான் பிரஹ்மசாரியாக விரும்புகிறேன். என் குலகோத்ரம் என்ன?' என்று கேட்டான். அதற்கு அவள் 'நான் சிறு பெண்ணாக இருந்த பொழுது நீ உண்டானாய். அந்தக் காலங்களில் நான் அதிதிகளை ஆராதிப்பதில் வெகு ஆவலாக இருந்து விட்டேன். நீ பிறப்பதற்குள் உன் தகப்பனார் இறந்துவிட்டார். உன் குல கோத்ரங்களை விசாரித்துத் தெரிந்துகொள்ள எனக்கு முடியாமல் போய்விட்டது. எனக்கு ஜபாலே என்று பெயர். உனக்கோ ஸத்யகாமன் என்ற பெயர் இருக்கிறது. ஆதலால் உன்னைக் கேட்கும்பொழுது நீ ஸத்யகாம ஜாபாலன் என்று சொல்லிக்கொள். இதுவே போதும்' என்றாள். தாயின் உத்தரவைச்சிரமேல் தாங்கி, ஹரித்ருமர் பிள்ளை **கௌதமரிஷியிடம்** சென்று தன் கருத்தைத் தெரிவித்தான். 'உன் குலகோத்ரம் என்ன?' என்று அவர்கேட்டதற்கு ஸத்யகாமன்ஒளிக்காது தன் தாய்க்கும் தனக்கும் நடந்த ஸம்பாஷணையைக் கூறிவிட்டான். இம்மாதிரி உண்மையை ஒளியாது கூறவல்லவன் பிராஹ்மணனாகத் தானிருக்கவேண்டும் என்று மதித்துக் கௌதமர் அவனை ஸமித்து எடுத்து வந்து விநயமாகத் தம் மருகில் நிற்கச் செய்து உபதேசம் செய்தார். உடனே அவனிடம், மெலிந்து பலஹீனமான 400-பசுக்களைக் கொடுத்து 'இவைகளை மேய்த்துக் கொண்டுவா' என்றார். குருவின் குறிப்பை அறிந்த சிஷ்யன், 'இவை குட்டிபோட்டு அநேகமான பின்புதான் நான் திரும்பி வருவேன்' என்று கூறிவிட்டுப் போனான். இம்மாதிரியான குருபக்தியும் தபஸும் இவனிடம் இருந்ததனால் இவனுக்கு எல்லா வஸ்துக்களிலிருந்தும் நல்லுபதேசங்கள் வெளியாயின.

கொஞ்சகால மான பிறகு, ஒருநாள் மந்தையிலிருந்த ஓர் பசு 'ஸத்யகாம! நாங்கள் அநேகமாகி விட்டோம். எங்களைக் குரு வீட்டில் கொண்டு போய்ச்சேர்த்து ஸுகமாயிரு. நீ அவ்வாறு செய்வதற்குமுன் பிரஹ்மத்தின் ஓர்பாதத்தை உனக்குக் கூறுகிறேன். நான்கு திக்குகளும் பிரஹ்மத்தின்பாதம். இந்த அவஸரத்தில்பிரஹ்மத்திற்குப் **பிரகாசவான்** என்று பெயர். இவ்வாறு த்யானிப்பவன் புண்ய லோகங்களை அடைவன். அக்னி வேறொரு பாதத்தை உனக்கு உணர்த்தும்' என்றது. ஸத்யகாமன் குருவீடு நோக்கிப்புறப்பட்டுப் போகையில் ஸாயங்கால ஸமயத்தில் ஓரிடத்தில் பசுக்களை மந்தையாகச் சேர்த்து நிறுத்திவிட்டு அக்னி மூட்டி ஸமித்திட்டுப் பசு கூறிய வாக்யத்தை மனத்தில் வைத்துக்கொண்டு உபதேசத்தை எதிர்பார்த்திருந்தான். அப்பொழுது அக்னியிலிருந்து ஓர் சப்தம் உண்டாகி, 'ப்ருதிவி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம், ஸமுத்ரம் ஆகிய இவைகளாலாகியது பிர்ஹ்மத்தின் மற்றொரு பாதம். இந்த அவஸரத்தில் பிரஹ்மத்திற்கு **அனந்தன்** என்று பெயர். இவ்வாறு த்யானிப்பவன் இங்கே அனந்தமாகி விடுவன். உனக்கு மற்றொரு பாதத்தை ஹம்ஸம் உபதேசிக்கும்' என்று கூறியது. மறுநாள் இரவில் பசுக்களை வழியில் மடக்கிவிட்டு அக்னி வளர்த்து ஸமித்தை இட்டுக் கிழக்கு நோக்கி ஸத்யகாமன் மஹாபக்தியோடு உட்கார்ந்திருக்கையில் ஓர் ஹம்ஸம் பறந்து வந்து, 'அக்னி, ஸூர்யன், சந்திரன், மின்னல் ஆகிய இவைகளாலாகியது பிரஹ்மத்தின் மூன்றுவது பாதம். இந்த அவஸரத்தில் அதற்கு **ஜ்யோதிஷ்மான்** என்று பெயர். இவ்வாறு உணர்பவன்

தேஜோவானுவான். உனக்கு ஓர் நீர்ப்பறவை பிரஹ்மத்தின் நான்காம் பாதத்தைக் கூறும்,' என்று உபதேசித்தது. மறுநாள் இதே ஸமயத்தில் ஓர் நீர்ப்பறவை ஸத்யகாமனிடம் வந்து, 'ப்ராணன், கண், காது, மனம் ஆகிய இவைகளாலாகியதே ப்ரஹ்மத்தின் நான்காம்பாதம். இந்த அவஸரத்தில் ப்ரஹ்மத்திற்கு ஆயதனவான் என்று பெயர். இவ்வாறு த்யானிப்பவனுக்கு இவ்வுலகில் நல்ல தங்கும் இடங்கள் ஏற்படும்' என்று சொல்லிப்போயிற்று. ஸத்யகாமன் குருவீடு சென்றான். அவன் தேஜஸைக் கண்டு 'உன் முகத்தைப் பார்த்தால் நீ பிரஹ்மத்தை உணர்ந்தவன்போல எனக்குத் தோற்றுகிறது. எவ்வாறு உணர்ந்தாய்?' என்று குருகேட்டார். 'மனிதர் ஒழிந்த மற்றைய ஜந்துக்களிடமிருந்து அறிந்தேன். இப்பொழுது உம்மிடம் உபதேசம் பெற ஆவல்கொண்டிருக்கிறேன்' என்றான். குருவில்லா வித்தை பாழ் என்று உணர்ந்து கேட்ட சிஷ்யன் விநயத்திற்கு மெச்சிக்கொண்டு, கௌதமர் பசு முதலியன கூறிய உபதேசங்களை மறுபடி நல்ல த்ருஷ்டாந்த மூலமாக எடுத்துக்கூறி வற்புறுத்தினர். இக்கதையால் சிரத்தையும் தபஸுமே பிரஹ்மத்யானத்திற்குத் தகுந்த ஸாதனங்கள் என்பது வெளியாகிறது.

கமலைபிள்ளை உபச்லோகன் என்பவன் ஸத்யகாமனுக்குச் சிஷ்யனாக அமர்ந்து 12-வருஷம் அவன் அக்னியைப் பாதுகாத்து வந்தான். அப்பொழுது ஸத்யகாமன் மனைவி, 'உபச்லோகன் வெகுநாளாக நம்மிடம் காத்திருக்கிறான். அவனுக்கு ப்ரஹ்மோபதேசம் செய்யும். இல்லாவிடில் வீண்பழி நமக்கு வரும்' என்று சிபார்சைச் செய்தாள். ஸத்யகாமன், பெண்சாதி பேச்சை அசட்டை செய்துவிட்டு முன்போலவே இருந்துவிட்டான். 'நமக்கு இன்னும் உபதேசம் பெறுங்காலம் வரவில்லையே'என்ற ஏக்கத்தால் உபச்லோகன் ஆஹாரம் உட்கொள்ளாது இருந்து விடுவதாகத் தீர்மானித்தான். இந்த விஷயம் குருபத்னிக்குத் தெரிந்தது. அவளுக்கு இன்னது செய்வது என்று தோற்றவில்லை. அப்பொழுது அக்னிகள் ஒன்றோடு ஒன்று ஏற்பாடு செய்துகொண்டு உபச்லோகனுக்கு உபதேசிக்கத் தொடங்கின. 'ப்ராணன் பிரஹ்மம். உலக இன்பங்களுக்கு அப்பாற்பட்டதாயும் எங்கும்பரவியதாயும் உள்ள இன்பமே ப்ரஹ்மம்' என்று எல்லாம் கூற, கார்ஹபத்யாக்னி அவனை நோக்கி, 'ப்ருதிவி, அக்னி, அன்னம், ஸூர்யன் இவைகள் என் தேஹம். ஸூர்யனுள்ளிருக்கும் புருஷன் நானே. இவ்வாறு த்யானிப்பவன் விருப்பங்கள் எல்லாம் பூர்த்தியாகும்' என்றது. உடனே அன்வ ஹார்யபசனஅக்னி, 'அப்பு, திக்குக்கள், நக்ஷத்ரம், சந்திரன் ஆகிய இவைகள் என் ரூபங்கள். சந்திரன் உள்ளிருக்கும் புருஷனே நான்' என்றது. அப்பொழுது ஆஹவனீயாக்னி, 'ப்ராணன், ஆகாசம், ஸ்வர்க்கம், மின்னல் ஆகிய இவைகள் என் உருவங்கள். மின்னலுள் இருக்கும் புருஷன் நானே' என்றது. அப்பொழுது அக்னிகள் ஒன்றுசேர்ந்து 'இந்த த்யானங்கள் எல்லாவற்றிற்கும் பலன் ஒன்றே. இதற்கு ஆத்மவித்தை என்று பெயர். இதை அடையும் வழியை உனக்குக் குரு உபதேசிப்பார்' என்றது.

ஸத்யகாமன் வந்தான். உபச்லோகனைக் கண்டான். தன்னிடம் தன்குருவாகிய கௌதமர் இதைப்போன்ற ஸமயத்தில் கூறியதுபோல, தன் சிஷ்யனுக்கும் பிரஹ்மவித்தை தெரிந்துவிட்டதாகக் கூறிமகிழ்ந்தான். 'உனக்கு யார் உபதேசித்தது' என்று ஸத்யகாமன் கேட்க, உபச்லோகன் 'எனக்கு யார் உபதேசிக்கப் போகிறார்கள்' என்று கூறி, அக்னிகளைக் காட்டினான். அப்பொழுது ஸத்யகாமன் சிஷ்யனை நோக்கி 'அவைகள் உனக்கு லோகங்களை மாத்திரம் கூறிவிட்டன. நான் கூறப்போவதை உணர்ந்தால் தாமரைஇலையில் தண்ணீர் ஒட்டாததுபோல்உன்

னிடம் யாதொரு தோஷமும் ஒட்டாது,' என்று பீடிகை போட்டுக்கொண்டு 'கண்ணுள் இருக்கும் புருஷனே ஆத்மா. அவன் அழிவற்றவன். நிர்ப்பயன். அவனே ப்ரஹ்மம். இதன் இடமாகிய கண்ணில் எதைவிட்டாலும் பக்கத்தில் வழிந்தோடுவதே இதைக்குறிப்பிக்கும். எல்லா ஆசாவிஷயங்களும் இதைச் சென்றடைவதால் இதற்கு ஸம்யத்வாமா என்றும், அவைகளைக் கொண்டுசெல்லுவதால்இதற்கு வாமனிஎன்றும், எல்லா உலகங்களிலும் விளங்குவதால் இதற்குப் பாமனி என்றும், பெயர். இவ்வாறு த்யானிப்பவர் முறையே ஆசை வஸ்துக்களைப் பெறுவர், கொண்டு செல்லுவர், எங்கும் விளங்குவர். இம்மாதிரி சிறப்பை அடைந்தவனுக்கு ஈமக்கடன்கள் செய்தாலும், செய்யாவிட்டாலும், அவன் (ஒளி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸூர்யன், சந்த்ரன், மின்னல் இவைகள் வழியாக முறையே போய், முடிவில் அமானுஷமான ஒருவனை ஸந்தித்து அவன் மூலமாக ப்ரஹ்மத்தை அடைவது ஆகிய) தேய்வயான மார்க்கத்தின் வழி சென்று மீளாநெறி எய்துவன்' என்று உபதேசித்தான்.

பின்னர் யஞ்ஞத்யான விஷயமாகச் சில விஷயங்கள் கூறித் தம் உபதேசத்தை முடித்தான்.

அத்யாயம் 5:—முன்னர் கூறிய ஸத்யகாமன் தன்னை அடுத்த வ்யாக்ரபாதர் பிள்ளை ஜோச்ருதியை நோக்கி, 'ச்ரேஷ்டமாயும் (சிறந்தது) ஜ்யேஷ்டமாயும் (பழமையானது) உள்ள பிராணனை உணர்ந்தால் மேன்மையுண்டு. வாக்குவஸிஷ்டமானது (ஐச்வர்யமானது) கண் ப்ரதிஷ்டமானது (உறுதியானது). காது ஸம்பத்தானது (ஸுகமானது). மனம் ஆயதனமானது (தங்குமிடமானது). இவ்வாறு உள்ள இவ்வைந்தையும் த்யானிப்பவர்களுக்கு இவைகளின் ஸம்பந்தமான மேன்மை உண்டாகும். இவைகளுள் தமது மேன்மையைக் குறித்துச் சண்டை வர இவைகள் பிரஜாபதியிடம் சென்று தமது வழக்கைச் சொல்லிக் கொண்டன. 'எது தேஹத்தை விட்டுப் போவதால் தேஹத்திற்குக்கெடுதியுண்டாகுமோ அதுவே சிறந்தது என்றார்.' பிரஜாபதி அவ்வாறு பரீக்ஷை பார்த்ததில் ப்ராணனே சிரேஷ்டமானதும் பழமையானதுமான வஸ்து என்று விளங்கியது. இதுதான் எல்லா ஆஹாரங்களையும் உட்கொள்ளுவது. இதற்குத் தண்ணீரே வஸ்திரத்திற்கு ஸமானம்' என்று உபதேசித்து இந்த ப்ராணனை உபாஸிக்கும் வழிகளையும் அதனால்அடையக் கூடிய ஸித்திகளையும் எடுத்து விவரித்தான்.

அருணன் பேரன் சுவேதகேது மிகுந்த வித்யா கர்வத்துடன் பாஞ்சால தேசம் சென்று ப்ரவாஹன ஜைவலி ராஜன் ஸபையை அடைந்தான். அவனை நோக்கி அரசன் 'உன் தகப்பனாரிடம் உபதேசம் பெற்றிருக்கிறாயா?' என்று கேட்க அதற்கு அவன் 'ஆம்' என்றான். 'மனிதன் இறந்தபின் எங்குப்போகிறான்? அவன் எவ்வாறு இங்குத் திரும்புகிறான்? தேவயான பிதிர்யான மார்க்கங்கள் என்றால் என்ன? இவ்வுலகம் ஏன் நிறையாது முன்போலவே இருக்கிறது? ஐந்தாவதாஹுதியில் மனிதன் எவ்வாறு வெளியாகிறான்? என்று ஒழுங்காக அரசன் கேள்விகள் கேட்டான். தன்னால் ஒருகேள்விக்குக்கூட பதில் கூறமுடியாதது கண்டு வெட்கிக் கர்வம் அடங்கி தன் தகப்பனாகிய கௌதமரிடம் சென்று, நடந்ததைக்கூறச், சாந்தரான கௌதமர் இவைகளின் ரஹஸ்யங்களை அறிந்துகொள்ள விரும்பி உடனே பாஞ்சால ராஜனிடம் சென்று, அவன் கொடுத்த வெகுமதிமுதலியவைகளைக்கவனியாது தமக்குப் பிள்ளையிடம் கேட்ட கேள்விகளின் ரஹஸ்யங்களை வெளியிடவேண்டும் என்று வேண்டிக் கொண்டார். கொஞ்சநாள் அரசன் அவரைத் தன் அரண்மனையில் இருக்கும்படி செய்து முடிவில், 'இப்பொழுது நான் கூறப்புகும் ஞானம் இன்றுதான் ப்ராஹ்மணரிடம் போகிறது. இதுவரையில் இது க்ஷத்ரியரிடமே இருந்தது.' என்று பீடிகை போட்டுக்கொண்டு உபதேசிக்கலானான்.

முதலில் ஆகாயம், பர்ஜன்யன், ப்ருதிவி, மனிதன், ஸ்திரீ இவைகளை அக்னியாக உருவகப்படுத்தி முறையே, அதில் தேவதைகளின் ச்ரத்தை, ஸோமன், மழை, அன்னம், வீர்யம், ஆகிய இந்த ஆஹுதிகளைக் கொடுப்பதால் முறையே ஸோமன், மழை, வீர்யம், கர்பம் இவைகள் உண்டாகி ஐந்தாவதாகிய முடிவில் மனிதன் உண்டாகும் விதத்தைக் கூறி, அவன் இறந்து மறுபடியும் அக்னியில் எரிபடுவதைக் கூறினுன். பின்னர், 'இதை உணர்ந்து, சிரத்தை தபஸ் இவைகளால் த்யானம் செய்பவர்கள் தேய்வயான மார்க்கம் வழியாகச் செல்வர் (முன் கதையைப் பார்க்க). க்ராமத்திலிருப்பவர்கள் யஞ்ஞம் செய்தல், பொது நன்மைக்கு உழைத்தல், தர்மம் செய்தல் ஆகிய ஸன்மார்க்கத்தில் பழகி, புகை, இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணயனம், பிதிர்லோகம், ஆகாசம், சந்த்ரன் ஆகிய இதுவரை போவார்கள். இந்த ஸோமனே தேவதைகள் அன்னம். இந்த மார்க்கத்திற்குப் பிதிர்யான மார்க்கம் என்று பெயர். தமது கர்மபலன் க்ஷீணமானபிறகு இங்கிருந்து நழுவி அவர்கள் ஆகாசம் வந்து, வாயு, புகை, புகைப்பனி, மேகம், மழை, செடிகொடிகள், இவைகள்மூலமாகத் தமது கர்மானுஸாரம் புருஷன் தேஹத்துள் புகுந்துகொண்டு தகுந்த ஜன்மங்களை அடைகின்றனர். ஸாதாரண பாமரர்கள் இவ்விரு மார்க்கங்களிலும் செல்லாது அடிக்கடிப் பிறந்து இறக்கின்றனர். இவர்கள் சுழன்று வருவது மூன்றாவதான மார்க்கம். இம்மாதிரி மூன்றுவிதமாக மரணத்தின் பின் மனிதர்கள் போவதால் உலகம் எப்பொழுதும் நிறைவதில்லை. இதை உணர்ந்து ஒருவனுக்கு வைராக்யம் வரவேண்டும். இது வந்துவிட்டால் எவ்வித பாபங்கள் மத்தியில் இருக்கும்படி நேர்ந்த போதிலும் அவன் பரிசுத்தனுகவே இருப்பன். முடிவில் புண்யலோகங்களையும் பெறுவன்.' இக்கதையால் ஞானம் எவரிடம் இருந்து வந்தபோதிலும் அதை அங்கீகரிக்க வேண்டும் என்று சுருதி குறிக்கின்றது.

உபமன்யு பிள்ளை ப்ராசீனசாலர், புலுஸர் பிள்ளை ஸத்யயக்ஞர், பல்லவிபிள்ளை இந்திரத்யும்னர், சரகராக்ஷர் பிள்ளை ஜனர், அச்வதரைவர் பிள்ளை புதிலர், இவ்வைந்து க்ருஹஸ்தர்களும் கூடி ஆத்ம, ப்ரஹ்மவிசாரம் செய்யத் தொடங்கினர், இந்தவிஷயமாக இவர்கள் அருணர் பிள்ளை உத்தாலகரிடம் சென்று அவருக்குத் தெரிந்த வைச்வானர வித்தையைக் கேட்கப் போயினர். அதற்கு அவர் இவர்கள் எல்லோரையும் கூட்டிக்கொண்டு அச்வபதிகேயரிடம் சென்ருர். இவர்களைக் கண்டதும் அவர் தகுந்த மர்யாதை செய்து தான் செய்யப்போகும் யாகத்திற்கு இவர்களை இருக்கும்படி செய்ய உத்தேசித்தார். இவர்கள் தாம்வந்த கார்யத்தைச் சொல்ல, மறுநாள் வரும்படி ஏவினர். மறுநாள் காலையில் இவர்கள் எல்லோரும் ஸமித்பாணிகளாக அரசனிடம் வர, அவர் ஒவ்வொருவரையும் அவர்கள் த்யானிக்கும் வஸ்துக்களை வெளியிடும்படி கேட்டார். அப்பொழுது அவர்கள் முறையே, ஸ்வர்க்கம், ஸூர்யன், வாயு, ஆகாயம், அப்பு, ப்ருதிவி இவைகளையே ஆத்மாவாக த்யானிக்கிறோம் என்றனர். அதற்கு அரசன், 'இவைகள் முறையே வைச்வானரரது தலை, கண், மூச்சு, தேஹம், மூத்ரம், பாதம் முதலியனவே ஒழிய வேறல்ல. இவைகளைத் தனிமையாக உபாஸித்ததால் உங்களுக்கு ஸகல ஸுகங்களும் பிரஹ்ம தேஜஸும் ஏற்பட்டன. இதோடு நின்றுவிட்டு பாகங்களை த்யானம் செய்ததால் உங்களுக்கு ஏதாவது கஷ்டங்கள் உண்டாயிருக்கும். நல்ல வேளை இங்கு வந்தீர்கள். இந்த வைச்வானரரது ரோமங்களே தர்பங்கள்; ஹ்ருதயம், கார்ஹபத்யாக்னி; மனம், தக்ஷிணாக்னி; வாய், ஆஹவனீயாக்னி; ஆதலால் முதலில் கிடைக்கும் ஆஹாரத்தை இத்தகையது என்று கவனியாது ப்ராணயஸ்வாஹ என்று ஏற்பட்டுள்ள ஐந்து ஆஹுதிமந்திரங்களால் அக்னிஹோத்ரம் செய்ய வேண்டும். இதனுல் ஸகல இந்திரியங்களும் அதிஷ்டான தேவதைகளும் த்ருப்தி பெறும். இதை உணராது செய்யும் அக்னிஹோத்ரம் சாம்பலில் பெய்த ஆஹுதிக்கு ஸமம். இதை உணர்ந்து செய்தால் உலகம் ஸுகிக்கும். செய்பவன் பாபங்கள் பஸ்மமாகும். இதன் சேஷத்தை எவன் உண்டபோதிலும் வைச்வானரன் உண்டதாகும். இதை உணர்ந்து செய்யும் அக்னிஹோத்ரமே சிறந்தது' என்று கூறி முடித்தார். இதனுல் பகவான் எங்கும் பாவி ஸகலத்தையும் அங்கீகரிக்கும் தன்மையை உடையவர் என்பதை சுருதி நன்கு விளக்கிற்று.

# இராஜாங்க முறை ஸம்பந்த மானவிஷயங்களைப்பற்றிய பிரதம கொள்கைகள்.

## CIVICS : ELEMENTARY PRINCIPLES

## III. பெற்றோர்களின் சுதந்தரங்களும் அவற்றால் விளையும் நன்மைகளும்

## Parental Control and its Advantages



**உ**ங்கள் தகப்பனார் குடும்பத் தலைவர். அவர் கஷ்டப்பட்டு வேலைசெய்து உங்களையும் உங்களுக்கு நெருங்கிய அருமையானவர்களையும் சுகமாக ஜீவிக்கச் செய்கிறார். உங்கள் குடும்பத்திற்கு க்ஷேமக் குறைவாவது மானபங்கமாவது நேரிடுவதாக விருந்தால் அக்காலத்தில் அவ்விபத்துக்களினின்றும் உங்கள் குடும்பத்தைக்காத்து இரக்ஷிப்பவரும் அவரே. சுருங்கச்சொல்லின், குடும்பத்தின் சமாதானமும், க்ஷேமமும், வாழ்வும் அவரைப் பொறுத்திருக்கின்றன.

ஆனால் அவர் தாமாகவே குடும்பபாரத்தை வகிக்க முடியாது. அவருக்குக் கொஞ்சம் துணை வேண்டும். அதுவே உன்தாயின் மார்க்கமாம். அவளும் காரியத்திலேயே கண்ணாயிருக்கிறாள். ஆனால் வீட்டில் அதிகமாக இருக்கிறாள். ஏனெனில் அங்குதான் அவளுடைய வேலை.

இதைக் கவனித்துக் கேளுங்கள். உங்களைச் சுற்றிலும் உள்ளவைகளைப்பற்றிக் கவனியுங்கள். முதலில் உங்களுக்குச் செவ்வையாகத் தெரிந்த ஒரு குடும்பத்தாரைப் பற்றிக் கவனிக்கத் தொடங்குங்கள். நீங்கள் அறிந்துகொள்வது என்ன? உங்கள் தகப்பனார் பயிரிடுபவராயிருந்தால் கழனிகளில் காலை முதல் இரவு வரையில் கஷ்டப்பட்டுவேலை செய்கிறார். தொழிலாளி அல்லது கூலிவேலை செய்பவராயிருந்தால் இயந்திரசாலையிலும் தொழிற்சாலையிலும் கஷ்டப்பட்டு வேலை செய்கிறார். இக்காலமெல்லாம் உங்கள் தாயும் கொஞ்சங்கூட தாழ்வின்றி வீட்டில் உழைக்கின்றாள். உங்களையும், உங்கள் சிறிய சகோதரர்களையும், சகோதரிகளையும் பற்றி ஜாக்கிரதை யெடுத்துக்கொள்பவள் அவளே. வீட்டு வேலைகளையெல்லாம் செய்வதும், எல்லாருடைய உடுப்புக்களைச் சீர்பண்ணுவதும், சமையல் செய்வதும், உன்தகப்பனார் வீட்டுக்கு வந்ததும் ஆகாரம் தயாராய் அவருக்குக் கிடைக்கும்படி செய்வதும் அவளே. குடும்பச் செலவுகளையெல்லாம் சீராய்ச் செலவழிப்பதும், புத்திசாலித் தனமாயும் ஜாக்கிரதையாயும் பைசாகூட வீண்செலவு செய்யாமலும், சாப்பாட்டுக்கு ஒருபோதும் முட்டுப்படாமலும், தேவையான காலங்களில் வைத்தியச் செலவுகள் செய்வதற்கும், பண்டிகை காலங்களில் புதிய உடுப்புகள் வாங்குவதற்கும் கொஞ்சம் பணமாவது வீட்டில் ஓர் மூலையில் எப்போதும் வைத்து முன் ஜாக்கிரதையோடு பார்த்து வருவதும், உங்கள் தாயே. இடைவிடாமல் வீட்டுக்கு வெளியே போய் தொழில் நடத்தவேண்டியிருப்பதால் உங்கள் தகப்பனார் இவையெல்லாவற்றையும் குறைவற எவ்வாறு கவனித்து நடத்தக்கூடும்?

அருமைக் குழந்தைகளே, உங்கள் இளமைப் பருவத்தில் நிகழ்ந்தவைகளைப்பற்றி யோஜித்துப் பாருங்கள். உங்கள் வீட்டில் உள்ளபடி நடப்பவைகளை உள்ளவாறே மறுபடியும் யோஜித்துப் பாருங்கள். அப்போது இதை எழுதியவர், நிஜஸ்திதியைவிட விசேஷித்துச் சொல்லவில்லையென்று உங்களுக்குத் தெரியவரும்.

சாயுங்காலம் நீங்கள் வீட்டுக்குவந்ததும் ஓடிப்போய் உங்கள் தகப்பனாரைச் சந்தித்துக் கட்டிக்கொள்ளும்போது ஆனந்தமடைகிறீர்கள். ஏனெனில் கஷ்டப்பட்டு வேலைசெய்து, அதற்காக அவர் எதிர்பார்க்கும் பிரதிபலன் உங்கள் நேசந்தான் என்பது உங்களுக்குத் தெரியும். உங்கள் தாய்மாரோ! வியாதியினால் நீங்கள் வருந்தினபோது எத்தனையோ அநேக சமயங்

களில் உங்களை ஆதரித்திருக்கிருள். துக்கம் அனுபவித்தபோது உங்களைத் தேற்றியிருக்கிருள். இவற்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். உங்களுக்குத் தெரியாமலே உங்கள் சரீர சௌக்கியத்தைப்பற்றியோ அல்லது நீங்கள் அடையப்போகிற க்ஷேமலாபங்களைப்பற்றியோ அதிக கவலையுள்ளவர்களாயும் உங்களைப் பற்றியே பேசிக்கொண்டும் எத்தனையோ இராப் பகல்கள் உங்கள் பெற்ருேர்கள் கழித்திருக்கிருர்கள் என்பது ஒருகால் உங்களுக்குத் தெரியாதிருக்கலாம்.

குழந்தைகளே, உங்கள் பெற்ருேர்களால் நீங்கள் அடைந்திருக்கும் நன்மைகளை யோஜித்துப் பாருங்கள். ஆனல் அவர்கள் கடமையும் இன்னமும் முற்றுப்பெறவில்லை. உங்களை யோக்கியமுள்ள நேர்மையான மனிதர்களாகச் செய்யும் பொறுப்பும் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. உங்கள் பெற்ருேர்கள் உங்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் சரிவர செய்து முடிப்பதற்கு உங்களை அடக்கியாளச் சில அதிகாரங்கள் அவர்களுக்கு அவசியம். அவற்றை, இயற்கை விதிகளுக்கு இணங்க நியாயஸ்தலங்களில் வழங்கும் சட்டங்களும், அவர்களுக்குக் கொடுக்கின்றன. தாய் தகப்பன்மார்களுடைய அதிகாரங்கள் சமத்துவமாகவே சட்ட சம்மதமானவைகள்தாம். ஆனல் அவர்கள் தத்தம் அதிகாரத்தை ஒரே விதமாய்ச்செலுத்துவதில்லை. இது உங்களுக்குச் செவ்வையாய்த்தெரியும். சில வேளைகளில் உங்கள் தகப்பனர் கண்டிப்பாயிருக்க வேண்டியிருக்கிறது, அப்போது உங்கள் தாய் கொஞ்சம் அதிக இளக்கமான மனத்துடன் இருக்கலாம். ஆனல் அவர்கள் இருவரும் எப்போதும் உங்கள் நன்மையையே கருதி நிற்பார்கள். அவர்கள் செய்த நன்மைகளின் ஏதுவினலேயே நீங்கள் எக்காலும் வசிக்கிறீர்கள்.

C. S. சுந்தரம் அய்யர், பீ. ஏ. எல். டி.

# ஏவாமக்கள் மூவாமருந்து

## FILIAL ANTICIPATION IS PARENT'S NECTAR

ஓங்கொளி வெளியென வுறைபவ னடிபணிந்
தீங்கிளை யவர்பொருட் டியம்புவன் சிலவே.

இப்பூவுலகின்கண்ணே அடைதற்கருமையான மானுடயாக்கையைப் பெற்ற மாந்தரால் உயிர்க்குறுதி பயப்பதெனத் தேடற்குரிய பொருள், அறம் பொருள் இன்பம் வீடு என நான்கு வகைப்படும். அவற்றை விரித்துக் கூறுவன, வேதம் ஆகமம் இதிகாசம் புராணம் முதலிய கலைகளாம். அக்கலைகள், எல்லையின்றிப் பரந்த கடல்போல விரிந்து கிடத்தலின், சிலவாழ் நாளையும் பலவகைப்பட்ட பிணிகளையுமுடைய நாம், நமது சிற்றறிவைக்கொண்டு எத்துணை முயன்ருலும், ஆழ ஆழ அமுக்கி அமுக்கி முகந்தபோதினும் ஆழ்ந்த கடலின் கண்ணுள்ள நீரை நாழிமுகக்கும் கருவியானது நானுழி முகக்காதவாறுபோல, ஐயம் திரிபு அறியாமையோடு கூடிய ஒரு சிறிதேயன்றி முற்றுமுணர்ந்துகொள்ளுதல் செல்லாது.

இத்தகைய அளவிலாக் கலைகளின் பெருமையையும் நம்மைப்போன்றவர்களின் அறிவின் சிறுமையையும் நன்குணர்ந்த **ஔவைப்பிராட்டியார்**, கலைகளையெல்லாம் ஒருங்கே திரட்டி, அவற்றின் சாரத்தை வடித்தெடுத்துத் தமிழ் மொழியாகிய அமிழ்திடைப் பெய்து யாவரும் வருத்தஞ் சிறிதுமறக்கற்று மறவாதுளங்கொள வருக்கக் கோவைப்பட்ட விழுமிய பொருளும் இனியவோசையுமுடைய சுருங்கிய சொற்களால் விளங்க இயற்றிய நூல்கள், **ஆத்திசூடி, கோன்றை வேந்தன்** என்பன.

இவைகள் யாவரும், இளமைப் பருவத்தே கற்கும் வழக்குடைய நூல்களாயினும் நுணுகி ஆராயும் பருவம் வந்த பின்னரே சொற்சுவையும் பொருள் நுட்பமும் தோற்றி இன்பம் பயப்பன. இத்தன்மை வாய்ந்த இவ்விரண்டினுள் ஒன்ருகிய கொன்றைவேந்தனிலுள்ளது நான் இங்குச்

சொல்ல எடுத்துக்கொண்ட "ஏவாமக்கள் மூவா மருந்து" என்னும் இச்சொற்றொடர். இதனை, முன்னர்க்கற்ற சிறு வாக்கியந்தானே யெனக் கருதி அலட்சியமாக இராமல் கருத்துடன் கேட்க விரும்புகின்றேன்.

"ஏவாமக்கள் மூவாமருந்து"=பெற்றவர் இதனைச்செய்க என ஏவுதற்கு முன் அவர் கருதிய தொன்றைக் குறிப்பானறிந்து செய்து முடிக்க வல்லமக்கள் அப்பெற்றோர்க்கு மூவாமைக் கேதுவாகிய மருந்தாவர் என்பது இதன் பொழிப்பாகும்.

குறிப்பறிந்து செய்யுமக்களே, பெற்றவரது மூப்பொழிப்பவர் என்பது கருத்துரை.

இப்பாவினுள், 'மக்கள் மூவாமருந்து' என்றமையாது ஏவா என்னும் அடைகொடுத்தோதினார், பாலெல்லாம் நல்லாவின் பாலாகாதவாறு போலவும், கல்லெல்லாம் மாணிக்க மாகாதவாறு போலவும், பிறந்த பிள்ளைகளெல்லாம் மக்களாக மாட்டார். பெற்றோர் குறிப்பறிந்தொழுகுவோரே மக்கள் என, விளக்குதற்கென்க. குழவி, குழந்தை பிள்ளை, மகவு என இளமைப்பருவத்தை யுணர்த்துஞ் சொற்கள் பலவிருப்பினும் அவற்றாற் கூறாது மக்களெனக் கூறினார், மெய் வாய் கண் மூக்கு செவி யென்னும் ஐம்பொறிகளின் வழியாக உணரும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை யென்னும் ஐவகை உணர்ச்சியேயுடைய மாக்கள் போலாது அவற்றோடு மனவுணர்ச்சியுமுடையவரே மக்கள். அவரே பகுத்தறிவுடையாராய்ப்பிறர் கருதியவற்றைக் குறிப்பானறியுந் தன்மையர் எனச் சுட்டுதற்கென்க. ஆறறிவுடையாரே மக்களெனற்குரியார் என்பதை "மக்கடாமே யாறறியுயிரே" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுமாற்றானுமுணர்க. ஏனை மருந்திற்கும் இதற்கும் வேற்றுமை காட்டுவார் மருந்தென்னாது மூவா மருந்தென்றார். மூப்புக் காரணமாக வரும் சாக்காடாகிய காரியத்தை மூவாமை என உபசரித்தார். மருந்து—அமுதம், அமுதமுண்டார் சாக்காடு நீங்கி நிலைபெறுதலின், பெற்றோரை முதுமை நீக்கி நிலைபெறுத்துகின்ற மக்களை அமுதமென்றார்.

இனி பெற்றோர் தமக்குச் செய்த நன்றி இவையெனப் பிள்ளைகட்குத் தெரிந்தாலன்றி அவர்கள்பால் அன்பும் அவர் குறிப்பறிந்து முடிக்கும் ஊக்கமும் உண்டாகா. ஆகையால் அவற்றைச் சிறிதாராய்வோம்.

நம்மைப் பெற்று வளர்த்த அன்னை தந்தை யென்னும் இருவரில், அன்னையார், ஒருநாளல்ல முந்நூறு நாளும் ஒரு மாதமல்ல பத்துமாதமும் தொந்திசரிய நொந்து சுமந்து வருந்திப் பெற்றெடுத்துப் பசியறிந்து பாலூட்டி நம்பிணிக்குத் தாம் மருந்துண்டு நமக்குத் துயில் வந்தபோது நம்மைத் தொட்டிலிலும் கட்டிலிலும் தோள் மீதும் மார்மேலும் வைத்துத் தாராட்டிச் சீராட்டி வளர்த்தவர். அன்புக்கு உதாரணம் கூறுமிடத்தெல்லாம் 'தாயொக்குமன்பில்' 'தாயிலன்புடையான்' என உவமிக்கத்தக்க பேரன்புடையவர். நமக்கு வரும் கேடும் ஆக்கமும் தமக்கு வந்ததுபோலக் கருதுந்தன்மையர். தந்தையாரோ வென்றால், நமக்கு அறிவும் ஆற்றலும் விளக்கமுறாத இளமைப்பருவத்தே உண்டி உடை முதலிய இன்றியமையாதன கொடுத்தளித்தவர். கண்ணுடையவரென யாவரும் மதிக்கும் கல்வியறிவுண்டாக்கினவர். தீயவழியிற் செல்லாமற் கடிந்து நம்மை நன்னெறியிற் செலுத்திய பரமவுபகாரி. இவை யிவ்வாறாக இவ்விருவரும் நம் பொருட்டாகச் செய்த நன்றிகளை எல்லாம் இத்துணையென எண்ணுற்கூறி அறியலுற்றால் அளவுபடா. எழுதினும் ஏட்டிலடங்கா. ஆகவே நாம் மனவமைதிபெற இருந்து சற்றுச் சீர்தூக்கிப் பார்ப்போமாயின் அவர்கள் செய்த உதவி கடலினும் பெரிதென நன்கு விளங்கும்; விளங்கவே, பயன்கருதாமல் அவர்கள் செய்த உதவிக்கு நம்மாற் செய்யத்தகும் கைம்மாறு என்னையுளதெனத் தோன்றும்; தோன்றவே, அவர்

ளது அன்புடைமையை நினைக்குந்தோறும் நமக்கும் அவர்களிடத்து இடையருத அன்பு பெருகும்; பெருகவே கடமைப்பட்ட நாம் நமது கடனை இறுக்குமாறெது என மனவாராய்ச்சி உண்டாம்; உண்டாகவே, அவர்கள் செய்கைகளைக் குறிக்கொண்டு காக்கும் ஊக்கம் பிறக்கும்; அவ்வூக்கமே, நம்மை ஏவாமக்களாக்கி அவர்களுக்கு மூவாமருந்தளிக்கும்.

இவற்றை நாம்மறவாது மனங்கொள்ள வேண்டிய தவசியம். மறந்தோமாயின் செய்ந்நன்றி கொன்றவராவோம். உலகில், பசுக்கொலை சிசுக்கொலை பெண்கொலை பார்ப்பாற்கொலை முதலிய மகா பாதகங்களைச் செய்தோர்க்கும் அவற்றைப் போக்கும் வழியுண்டு; ஒருவர் செய்த நன்றியை மறந்தவர்க்கு எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்வளவும் உய்யும் வழி இல்லையாகும். இதனை

"எந்நன்றி கொன்ருர்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்னும் திருவள்ளுவரும்,

"ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்ருேர்க் குய்தி யில்லென
வறம்பா டிற்று."

என்னும் புறநானூற்றுச் செய்யுளும் வலியுறுத்தும். இவற்ருல் செய்ந்நன்றி மறப்பது உய்தியில்லாத பாதகத்திற்காளாக்கும் என விளங்குதலால், நாமும் நம்முடைய பெற்ருேர் நமக்குச் செய்த நன்றியை மறவாது கடைப்பிடித் தொழுகுதல் முறைமையாகும்.

"தாய் தந்தையர் ஏவியவற்றைச்செய்யாதவர்களல்லவா அவர்களுக்குத் தீராத நோயாக நினைக்கப்படுகின்றனர், அப்படியிருக்க அவர்கள் ஏவியவற்றைச் செய்தலமையாதா? குறிப்பறிந்து செய்யவேண்டிய அவசியம் என்னை?" எனச் சிலர் வினவலாம். ஆனல் பிறர் ஏவியவற்றை ஐம்புலவுணர்ச்சிமாத்திரமுள்ளமாக்களும் செய்யக்காண்கின்ருேம். மனவுணர்ச்சியுடையார்க்கு ஏவுமுன் குறிப்பறிந்து செய்தல் சிறப்புடைத்தல்லது ஏவிய பின்னர்ச் செய்தல் அத்துணைச் சிறப்பின்ரும். ஏவு முன்னர்ச் செய்யாத விலங்கிற்கும் இவர்க்கும் வேற்றுமை யில்லையாகும். இல்லையாகவே இவர் மனவுணர்ச்சி பெற்றும் பெற்றிலராய் அவற்ருேடு ஒருங்குவைத்தெண்ணப்படுவர். அதுவுமன்றிப் பெற்ருேர்கள், தம்மக்கள் வருத்தஞ் சிறிதுமின்றி ஆக்கமுறுதலையே நோக்கியவர். தாம் கருதியவைகளைத் தம்மக்களிடத் துரைப்பின் அவற்ருல் அவர்களுக்குத் தேகசிரமமும் பொருட்செலவும் நேருமென்னுங் கருத்துடையவராய்த் தம் விருப்பத்தை வெளியிட்டுரைக்க மாட்டார்கள். உரையாராகவே வெளியிடாதடக்கிய இச்சையும் மக்கள்மேல் வைத்த காதலுமாகிய இரண்டினிடை அகப்பட்ட அவர் மனம், இருதலைக்கொள்ளியின் எறும்புபோல, அங்குமிங்கும் அலைந்து சலிக்க, மனத்திற்கும் தேகத்திற்கும் பெரிதும் ஒற்றுமை யுண்மையால், நோயுற்று வருந்துவர். ஆகவே பெற்ருேர்கள் தம்மனத்துள்ளவற்றை வெளிப்படுத்துரைப்பதும் அவற்றைக்கேட்டு மக்கள் செய்துமுடிப்பதும் கூடாத காரியம். இதுநிற்க, குறிப்பறிந்து செய்யாத மக்களும் ஏவியவற்றைச் செய்யாத மக்களேபோலத் தாய்தந்தையர்க்குச் சாமளவும் தீராத நோயாவர். இதற்கு,

"ஏவவுஞ் செய்கலான் ருன்றேரா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்"

என்னும் தமிழ்மறையே சான்று பகரும்.

ஆகையால் பெற்ருேர்க்கு மனக்கவலையையும் அதை முன்னிட்டுவரும் மூப்பையும் போக்கக் கருதும் மக்கள் அவர்களுக்கு ஏவாமக்களாக இருத்தலே இன்றியமையாதது.

மனக்கவலையே மூப்பின் சின்னமாகிய நரைதிரைகளை விரைவில் விளைவிக்கும் நஞ்சாகும். அஃதின்மையே மூப்புவாராமறறடுக்கும் அமுதமாகும். இதனை, முன்னெருகாலத்தில் பிசிர் என்னும் ஊரில் வசித்த ஆதன் என்பவரின் தந்

தையாகிய பிசிராந்தையார் என்பவர், வடக்கிருந்த கோப்பெருஞ் சோழனிடத்துச் சென்றபோது அங்கிருந்த சான்றோர் புலவரை நோக்கி, 'நுமக்குச் சென்ற யாண்டுகள் பலவாயிருக்க நரையில்லையாகுதல் எப்படியாயினீர்?' என்று வினவியபொழுது அப்புலவர் பெருமகன் அவர்களை நோக்கி,

"யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனு
மல்லவை செய்யான் காக்கு மதன்றலை
யான்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே."

எனக்கூறிய வாற்றானும் உணர்க.

முடிவுரை.—பெற்றோர், தம் மக்களுக்குச் செய்த நன்றிகள் எண்ணிறந்தன வென்பதூஉம், மக்கள், அவற்றை மறத்தல் செய்ந்நன்றி கோறலாகும் என்பதூஉம், பெற்றோர் ஏவியவற்றை மாத்திரம் செய்பவர் மனவுணர்ச்சியுடைய மக்களென்னுஞ் சொற்கு உரியரல்லர் என்பதூஉம், ஏவியவற்றைச் செய்யாதாரும் குறிப்பறிந்து செய்யாதாரும் பெற்றோர்க்குச் சாகுமளவும் தீராதநோயாவ ரென்பதூஉம், பெற்றோர், இதனைச்செய்க என ஏவுதற்குமுன் அவர் கருதியவைகளைக் குறிப்பானறிந்து செய்து முடிக்க வல்ல ஏவாமக்களே அவர்க்கு மூவாமருந்தாவ ரென்பதூஉம் இதுகாறும் கூறியவற்றின் சுருக்கமாகும்.

தம் பெற்றோர்க்கு மூவாமருந்தாகும் ஏவாமக்களின் பெருமையைக் கூறப்புகின் வரம்பின்றிப் பெருகும்; ஆகலின் விரிவஞ்சி இம்மட்டே நிறுத்துகின்றேன்.

எல்லாம்வல்ல இறைவன் திருவருள் பெருகுக.

சுபம். சுபம். சுபம்.

லோகநாதப் பிள்ளை

## மஹா ஸமுத்ரம்

### THE OCEAN

உலகிற்கு ஒப்பற்ற நன்மையைச் செய்து மாந்தரை முன்னுக்குக் கொண்டு வருவதற்கு ஹேதுவாயிருக்கிற ஸமுத்ரம், எல்லை யில்லாத உருவத்துடன் அகன்று விரிந்து பரந்து, உலகைச் சூழ்ந்து கிடத்தலினால் "பரவை" என்னும் பெயர் பெற்றிருக்கிறது. ஆய்ந்து அறிய முடியாத அகாதமான ஆழமுள்ளதாயிருப்பதனாலும், ப்ரசண்ட மாருதங்கள் பலவற்றினுடனும், சாந்தமுள்ள நன்மை செய்யும் நற்காற்றுக்களுடனும் கூடி, மனிதர்க்கு முறையே திகைப்பும், ப்ரமிப்பும், திகிலும், ஸுகங்களும் செய்தலினாலும் இதனை, ஸர்வேச்வரனே என்று சொல்லினும் தகும். கடல் தன்னைச் சேர்ந்துள்ள ஸமீப நாடுகளின் சீதோஷ்ண நிலைமைகளைச் சீர்படுத்தி அந்நாட்டினரைச் சுகசரீரிகளாக்கிச் சுகப்படுத்தலினால், தேசக்ஷேமத்திற்குற்ற தன்வந்த்ரி போன்ற தெய்வாம்சமான வைத்யர் எனினும், நானாவித ப்ராணிகளுக்கும் உபயோகமான தாதுவர்க்கங்களின் வளர்ச்சியைத் தன்னிடமிருந்து செல்லும் காற்று, வர்ஷங்களினால் பராமரித்துக் காப்பாற்றலினால் மஹா காருண்யம் பொருந்திய அரசனெனினும் பொருந்தும். மிக்க தூர தேசங்களுக்கு உபயோகமுள்ள பலவிதச் சரக்குகளை ஸுலபமாகவும், சீக்ரமாகவும் கொண்டுபோவதற்கு ஸாதனமா யிருந்து, நானா தேசத்தவர்களை ஒன்றுசேர்த்து ஒருமித்து வாழச்செய்யும் தன்மையுடைமையால் உலகிற்கு ஒப்பற்ற நண்பனே ஸமுத்ரம் எனக் கூறுதலில் சிறிதேனும் தவறில்லை.

நிலங்களை நினைத்த மாத்ரத்தில் ஆக்குவதற்கும், இச்சாமாத்திரத்தினால் தன்னுள் அலைகளை எழுப்பி அவற்றை அழிப்பதற்கும், தன்னிடத்தில் சரக்குகளைக்கொண்டு செல்லும் கப்பல்களைத் தாய்போல் தன் மடிமீது சுமந்து அபயங்கொடுத்து, ரக்ஷிப்பதற்கும் வல்லதாயிருப்பதனாலும்,

பழையகாலம் தொட்டுத் தானிருந்த ஸ்திதிக்குக் குறைவில்லாதிருப்பதனுலும், ஸர்வஜ்ஞத்வம், ஸர்வசக்தித்வம், ஸர்வவ்யாபகத்வம் முதலிய அபூர்வசக்திகளைத் தம்மிடம் கொண்டு விளங்கும் நித்யத்வத்தின் பிம்பம் என்றும், மூல காரணமாகிய பரப்ரஹ்மஸ்வரூபங்களை நிதர்சன மாகக் காட்டும் கண்ணுடி யென்றும், ஸமுத்ரத்தினைக் கூறுதலும் மிகவும் தகுதியுடையதே.

ஸம்ஸார வாழ்க்கையிலுள்ள ஆசாபாசங்கள் இன்ப துன்பங்கள், காமக்ரோதங்கள், லோப மோகங்கள், துக்கங்கள் போன்ற ப்ரசண்டமாருதங்களும், நற்காற்றுகளும் ஸமுத்ரத்திலும் இருப்பதனுல் ஸம்ஸாரம் ஸாகரமென்று வழங்கி வருகிறது. சேனையில் ரதகஜதுரகபதாதி, ஆலவட்டம், குடை, கொடி, சாமரம்,வாள்,வேல் வில் இருப்பதுபோன்று நீர்ப்பரப்பின் மீது ஆகாயத்தில் அன்ன பக்ஷிகளாகிய குடைகளும் நீர்யானை திமிங்கிலம், முதலிய யானைகளும், உருக்கள் கொண்ட மத்ஸ்யங்களாம் வேல், வாள்களும், மலிந்து, அலைகள் குதிரைப் பந்திபோல் வரிசை வரிசையாய் வருவதனுல், சேனைத் தொகுதியினை மஹா ஸமுத்ரத்திற்கும் ஒப்பிட்டிருக்கிறுர்கள். விசேஷமான கம்பீரமுடையவனு யிருக்கிறுன் ஸ்ரீராமன் என்று சொல்லவந்த ஸ்ரீ வால்மீகர், **ஸமுத்திர இவ காம்பீர்யே** என்று இராமாயணத்தில் எழுதுவதிலிருந்தும் கம்பீர முடைமைக்கும் கௌரவ முடைமைக்கும் ஸமுத்ரம் ஸாம்ய மாக்கப்பட்டமைதெரிகிறது. உலகிற்கு உபகாரமான உப்புக்களஞ்சியமாயிருந்து வரும் கடல், தன் நீரைப் பருக வந்தவருக்குத் தன் உவர்த்தன்மையால் அருவருப்புண்டாக்கித் தன்னிடம் அணுகாது வெருட்டியடிக்கும் தன்மை யுடையவர் போலிருந்தாலும்,பிறருக்கு உதவி செய்யாதிருக்கும் தனவந்தர் பணம் எவ்விதமாகவோ, பிறர்க்குதவி செய்பவர்கையிற் சிக்கிப்பயன்படுகிறதுபோல மேகம் தன் நீரைச் சென்று உறிஞ்சி அதனை மழையாகப் பெய்ய, பூமியிலுள்ள பயிர் பச்சைகளை வளர்வித்து, உலகத்து மாந்தரை ஆநந்த மூட்டும். அகாதமான ஆழமுள்ள கடல் கூட, நரேந்திரரின் கீழ்ப்படியு மென்று சிலர் முகஸ்துதி செய்ய, **கானியூட்** அரசன் ஸமுத்ரக்கரையில் நாற்காலி போடச் சொல்லி, அலைகளை நிறுத்தென்று ஆஞ்ஞாபிக்க, அலை தம் மீதும், தம்மருகேயுள்ள முகஸ்துதிக்காரர்கள் மீதும் நீரை வீசி யிறைக்க,நித்யராகிய ஸர்வஞ்ஞத்வமுள்ள பரப்ரஹ்ம ஸ்வரூபியின் ஆணைக்கல்லாது வேறெவருக்காயினும், உட்படாதென்றும், ஏரி,குளங்கள்போல் கடல்கரையில்லாதிருப்பது, ஆதியந்தமில்லாத ஸர்வேச்வரன் பெருமையைக் காட்டுவதாகுமென்றும், முகஸ்துதிக் காரருக்குப் புத்தி புகட்டிய கதையும் கடலின் பெருமையை விரிவாய் எடுத்துரைக்கிறது.

நீலமேகச்யாமள மூர்த்தியாகிய ஸ்ரீமந் நாராயணனைக் கடல்வண்ணன் என்றது ஸமுத்ர ஜலத்தின் நீலநிறத்தின் ஒற்றுமைபற்றியே என்க. எப்போதுண்டானதென்றும், விசால மிவ்வளவென்றும் அளவிட்டறியக்கூடாமல் எல்லையற்றதாய்க் காண்பவர் மனத்தையும் நேத்ரங்களையும், ஆநந்திக்கச் செய்வதாயுள்ள கடலினை அநாதி முக்த ரஹிதராய், காலத்தாலும் இடத்தாலும் பந்தப்படாத ஸர்வேச்வரனுடைய அறிகுறியே என்னலாம். கங்கா, காவேரி போன்ற மஹா ஜல ப்ரவாகங்களனைவற்றையும் தன் அலைகளால் எதிர்சென்றழைத்து அவற்றை அணைத்துத் தன்னுள் அடக்கிக்கொள்ளுதலினுல், **நதிபதி** என்று கடலினைக் கூறலும் தகுதியானதே. பொன்னும், பொருளும், பவளமும், முத்தும், ரத்நமும் கலந்து வேண்டிய மாந்தர்க்கு வேண்டியாங்குக் கொடுத்து மகிழ்வித்தலால்,கடலினை உலகின் பொக்கிஷசாலை எனக் கூறினும் பொருந்தும். கல்வியறிவு விசேஷத்தை உயர்த்திச்சொல்லக் கடலின் பரப்பை உவமித்துக்கூறியதிலிருந்தும் கடலின் விசாலம் சொல்லவேண்டியதில்லை. ஆக்கல், அழித்தல், அருளல், என்ற முக்குணங்களும் பொருந்தியிருத்தலினுல், ஸமுத்திரத்தினை ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்கின்ற த்ரிமூர்த்தி ஸ்வரூபமே என்னலாம். ஸர்வ ஸ்ருஷ்டி காரணரான பரப்ரஹ்ம ஸ்வரூபியாகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் இருப்பிடமாகிய மஹோததி என்று சொல்லப்படும் மஹா ஸமுத்ரத்தின் பெருமையும், உயர்வும், கருணையும், சோம்பலில்லா தொலிக்கும் தன்மையும், பரிசுத்தமுடைமையும் நாவினுல் சொல்லும் தரத்ததன்று அல்ல.—

வீ. சுப்பிரமணிய ஐயர்.

# தமிழ்மொழி

## TAMIL LITERATURE

**தமிழ் மக்களின் ஏற்றம்.**—பண்டைக்காலத்திலிருந்த தமிழ் மக்களின் நாகரீக நிலை மிகவும் வியக்கத்தக்கது. இவர் ஜனங்களின் அபிவிருத்திக்கும் நாகரீகத்திற்கும் இன்றியமையாததாகியபலவகைத்தொழிலாளிகளேயும் உடையாயிருந்தனர். துறைமுகப் பட்டணங்களில் காணப்படும் கலங்கரை விளக்கமும் (Light house) அவ்விடங்களில் நடைபெறும் ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கட்கு அரச இலைச்சினை இடுதலும், சுங்கம் (Customs duty) கோடலும், கால் நடையாய் ஒரு நாட்டினின்றும் மற்றொரு நாட்டிற்குக் கொண்டுசெல்லும் பொதிப்பண்டங்கட்கு ஆயம் (Toll) கோடலும் பூர்வகாலத்துவழக்கமே. அதிகாரம் செலுத்து முறையில் தமிழர்கள் கைதேர்ந்தவர்கள் என்பது, இக்காலத்தே ஆங்கில அரசாட்சியில்குடிகள் இடம்பெற்றிருப்பதேபோல் (House of Commons) பண்டைக்காலத்தும் உண்மை நன்கு விளங்கும். அரசர்கட்கு மெய் காப்பாளர்களும் (Body guards) உண்டு. அழியாப் புகழை நாடி உயிரைத் துரும்பெனமதிக்கும் சுத்த வீரர்களும் தமிழர்க்குள் புதியரல்லர். பொதுஜன நன்மையைக் குறித்து ஏற்படுத்தப்பட்டிருக்கும் வைத்தியசாலையும் (Hospitals) ஆதிகாலத்ததேயாம். மற்றும் இயந்திரங்களும் உண்டு. இன்னும் நாகரீகத்தின் ஏற்றத்தைக் குறிக்கும் எல்லா அறிகுறிகளும் அநேகம் உளவெனினும் விரிவஞ்சிக் கூறாது விடுத்தாம். மேற்கூறியவைகட்கெல்லாம் பண்டை நூலின் கண் ஆதாரம் காணப்படுமோ எனின் காட்டுதும்:—

### (i) கைத்தொழிலாளிகள்

"வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையும் மேவிய விரையும்
பகர்வனர் திரிதரு நகர வீதியும்
பட்டினு மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்
ஆரமும் அகிலுந் தூசும் துகிரும்
மாசறு முத்தும் மணியும் பொன்னும்
அருங்கல வெறுக்கையொ டளந்துகடை யறியா
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியும்
காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்
மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர்
பாசவர் வாசவர் பன்னிண விலைஞரோடு
ஓசுநர் செறிந்த ஊன்மலி யிருக்கையும்
கஞ்ச காரரும் செம்பு செய்குநரும்
மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும்
கண்ணுள் வினை ஞரு மண்ணீட் டாளரும்
பொன்செய் கொல்லரு நன்கலந் தருநரும்
துன்ன காரருந் தோலின் றுன்னருங்
கிழியினுங் கிடையினுந் தொழில்பல பெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களும்."

மேற்காட்டிய சிலப்பதிகாரக் கூற்றால் கைத்தொழிலால் வேறுபட்ட தொழிலாளிகள் பலர் பண்டைக் காலத்தரே என்பது பெறப்படும்.

### (ii) கலங்கரை விளக்கமிருந்தமை

"நொடைநவின் மகடூஉக் கடைகெழு விளக்கும்
இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்
இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்"

என்பதனால் விளங்குகின்றது

சிலப்பதிகாரம்

### (iii) ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கட்கு இலைச்சினையிடுதலும் சுங்கங்கோடலும்

"வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன் றெருவின்
நல்லிறைவன் பொருள்காக்கும்
தொல்லிசைத் தொழின்மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
தேர்பூண்ட மாஅபோல
வைகறொறு மசைவின்றி
யுல்குசெயக் குறைபடாது
வான்முகந்தநீர் மலைப்பொழியவு
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவும்
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேற்றவு
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி."

என்பதனால் விளங்கும்.

பட்டினப்பாலை

(iv) கால்நடையாய்ச் செல்லும் பண்டங்கட்கு வழியில் ஆயங்கோடலுண்மை

"புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்."

என்பது அறிவிக்கும்.

பெரும்பாணாற்றுப்படை

(v) அரசரவைக்களத்தில் ஜனங்கள் இடம் பெற்றமையும் அரசர் மெய் காப்பாளரை யடைந்திருந்தமையும்.—

"ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமும்
அரச குமரரும் பரத குமரரும்
கவர்பரிப் புரவியர் களிற்றின் றொகுதியர்
இவர்பரித் தேரின ரியைந்தொருங் கீண்டி"

என்னுஞ் சிலப்பதிகாரச் செய்யுளுரையின் அரும்பதவுரையாசிரியர் மேற்கோளாகக்காட்டிய

"சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெய்
ஆய்ந்த இவர்எண்மார் ஆயத்தோர்—வேந்தர்க்கு
மாசனம்பார்ப்பார்மருத்தர் வாழ்நிமித்த ரோடமைச்சர்
ஆசில் அவைக்களத்தா ரைந்து."

என்னும் செய்யுள் விளக்கும்.

**எண்பேராயம்.**—(1) வாசம் கொடுப்போர் (2) மாலை தொடுப்போர் (3) கவசமிடுவோர் (4) உடை உடுப்போர் (5) அடைகாய் நல்குவோர் (6) வெற்றிலை கொடுப்போர் (7) மெய்காப்பாளர் (8) விளக்குத் தூக்குவோர் ஆகிய இவர்களாம்.

**ஐம்பெருங்குழு.**—(1) மாசனம் (பொது ஜன பிரதிநிதிகள்) (2) பார்ப்பார் (அறிவர்) (3) மருத்தர் (ஆயுள் வேதங்கற்ற மருத்துவர்) (4) நிமித்தர் (சகுனங் கூறுவோர்) (5) அமைச்சர் (மந்திரிகள்) ஆகிய இவர்களாம்.

(vi) **வீரர்கள்.**—போர்க்குச்சென்ற தன்மகன் படைக்கு வலியழிந்து புறங்கொடுத்தோடினன் என்று பலர் கூறக்கேட்ட ஒருத்தி 'அவ்வாறு போருக்கு உடைந்தனன் ஆயின், அவன், பாலுண்டு வளர்ந்ததற்குக் காரணமான என்முலைகளை அறுத்தெறிவேன்' என்று வாள்கைக்கொண்டு படுகளம் புகுந்துதேடி இருதுணிபட்டுக்கிடந்த மகனுடலங் கண்டு அவனை ஈன்றநாளினும் பெரிது வந்தாள் எனின்தமிழர் வீரத்தை என்னென்றுரைப்பது. இதனை

"நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயின் உண்ட என்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே."

என்னும் புறநானூறு விளக்கும்

(vii) வைத்தியசாலைகள்

"உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்
அப்பால்நாற் கூற்றே மருந்து." [என்று

என்னுங் குறள் விளக்கும்

(1) உற்றவன் = நோயாளி (Patient) (2) தீர்ப்பான் = மருத்துவன் (Doctor) (3) மருந்து = கருவியாகிய மருந்து (Medicine) (4) உழைச் செல்வான் = மருந்தைப் பிழையாமல் இயற்றுவோன் (Compounder).

(viii) இயந்திரமிருந்தமை

"பல்கிழி யும்பயி னும்துகில் நூலோடு
நல்லரக் கும்மெழுகும் நலஞ் சான்றன
வல்லன வும்அமைத் தாங்கெழு நாளினுள்
செல்வதோர் மாமயில் செய்தனனன்றே."

என்பதனாலறியலாம். சீவகசிந்தாமணி

**தமிழும், சைவசமயமும்.**—எம்மொழியினும் இனிய தமிழ் மொழியானது சைவசமயத்து முழுமுதற் கடவுளாம் சிவபெருமானாலே மிகுதியும் விரும்பப் பெறுவது. இம்மொழி தலைச் சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் என்னும் மூன்று சங்கங்களினும் நன்காராயப்பட்டது. தலைச்சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தார் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும் குன்றமெறிந்த முருகவேளும் எனின் தமிழர்க்கு இதனினும் ஏற்றம் வேண்டுமோ? "நிலநீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன், புலனாயமைந்தனோடெண்வகையாயமைந்து நின்றான்" என்று ஆன்றோர் சிறப்பித்துக் கூறும் சிவபரஞ்சுடரும், எழுபெரும்புவன முழுதொருங்கீன்ற உமையம்மையும், முருகவேளும் முறையே சோமசுந்தர பாண்டியன், தடாதகைப் பிராட்டியார், உக்கிர குமரனாக அவதரித்தமை தமிழ் காரணமாக என்னின் யாம் பகர்வது யாது? இதனைக் குமரகுருபர சுவாமிகளும்

"தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்றாள் தடாதகா
தேவி யென் றொருபேர்—தரிக்கவந்ததுவும் தனிமுத

வொருநீ சவுந்தர மாறனு னதுவும், குமரவேள் வழுதி யுக்கிரனெனப்பேர் கொண்டதும் தண்டமிழ் மதுரங்—கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக் கொழி தமிழ்ப் பெருமை யாரறிவார்"

என்று கூறியுள்ளார்.

தமிழ்ச் சைவ சமயாசாரியர்களாய் விளங்கும் நால்வர்கள் தமிழில் திருவாய்மலர்ந்தருளிய தேவார திருவாசகங்களின்மீது எல்லாம் வல்ல இறைவனும் சோமசுந்தரப் பெருமானுக்குள தாம் விருப்பம் இவ்வளவென்றியம்பவல்லேம் அல்லேம். ஞான சம்பந்தப்பெருமான் காரைக் காலம்மையார் திருத்தலையாலே நடந்த திருப் பதியாம் திருவாலங்காட்டினுள் பிரவேசித்தற் கஞ்சி அப்பதிக்கு வெளியே தங்கியிருந்தபோது

"மாலையிடை யாமத்துப் பள்ளி கொள்ளும்
மறையவனுர் தம்முன்பு கனவி லேவந்
தாலவனத் தமர்ந்தருளு மப்பர் நம்மை
யயர்த்தனையோ பாடுதற்கென் றருளிச் செய்ய
ஞாலமிரு ணீங்கவரும் புகலி வேந்தர்
நடுவிடையா மத்தினிடைத் தொழுது ணர்ந்து
வேலைவிட முண்டவர்தங் கருணை போற்றி
மெய்யுருகித் திருப்பதிகம் விளம்ப லுற்றார்."

என்றபடி தாமே வலியப்போந்து பாடலை ஏற்றதும்,

நேச நிறைந்த உள்ளத்தால்
நீல நிறைந்த மணிகண்டத்
தீச னடியார் பெருமையினை
எல்லா வுயிரும் தொழவெடுத்துத்
தேச முய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளராம்.

சுந்தரமூர்த்தி நாயனுரை வலிய ஆண்டவள் ளல் அவரை நோக்கி

"மற்றுநீ வன்மைபேசி வன்றெண்ட னென்னு நாமம்
பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே யாகு மாதலால் மண்மே னம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்."

என்று தமிழ்மாலை சாத்தக் கட்டளையிட்டதும்,

திருமுது குன்றில் ஆரூராருக்குக் கொடுத்த பொன்னை அவர் மணிமுத்தா நதியிலிட்டுத் திருவாரூர்க் குளத்தில் எம்பெருமான் அருளைப் படி தேடியபோது,

"நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினினின்று
மாற்றறுசெம் பொன்குளத்து வருவியாதொழிந்தருள"

எனப் பாட்டுக்காக முதலில் பொன் காட்டா தொழிந்ததும்,

மணிவாசகப் பெருமானைத் திருப்பெருந் துறையில்குருந்த மூலத்தில் ஆண்டபெருந்தகை

"தித்திக்கும் மணிவார்த்தை இன்னஞ் சின்னாட்
டிருச்செவியிலிருத்தவுங்கைச்செம்பொனெல்லாம்
பத்திப்பே ரன்பளித்துக் கவர்ந்து வேண்டும்
பணிகொடுபாண் டியனையிவர் பண்பு தேற்றி
முத்திக்கே விடுத்திடவும் புத்தை வாது
முடித்திடவுந் திருவுள்ள முன்ன மெய்தி
எத்தித்தொண் டரைக்கருமஞ் சிறிதுண் டிங்கே
யிருத்தி யென உருக்கரந்து"

சென்றதுமாகிய இவையெல்லாம் ஏகநாயகனும் சிவபெருமான் தமிழ்மொழியின்மீது வைத் துள்ள விருப்பத்தாலன்றோ? இன்னும் தமிழ் காரணமாக எம்பெருமான் செய்த திருவிளையாடலை யறியாதார் யாவர்? இவைகளால் தமிழிற் கும் சைவசமயத்திற்கும் உள்ள ஒற்றுமை வெள் ளிடை மலைபோல் விளக்கமுறுகின்றதன்றோ.

முடிவுரை.—இத்தகைய தமிழ்மொழியைத் தமிழ்நாட்டு மூவேந்தரும் பண்டைக்காலத்தில் பாராட்டி வந்தனர் என்பதை மேலே காட்டினும். மூவேந்தருள்ளும் இம்மொழியின் மேன்மையைப் பெரிதும் பாராட்டினோர் பாண்டியரே யாவார். இதனை மூன்று சங்கங்கள் அவர் நாட்டில் தங்கினமையே வலியுறுத்தும். இதுவுமன்றி

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்தும் என்
சிந்தை யுள்ளும்
உறைவா னுயர்மதிற் கூடலினுய்ந்த வொண்
டீந் தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ அன்றி யேழிசைச்
சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென் கொலாம்புகுந்
தெய் தியதே.

என்பதும் எடுத்துக்காட்டும். இத்தகைய தமிழ் மொழியானது முச்சங்கங்களும் அழிந்தபிறகு ஆதரிப்பாரின்றிச்சீர்குலைந்து நிற்பதையோர்ந்து நாம் செய்த தவப்பயனுகி இன்று சபாநாயகம் வகித்திருக்கும் ஸ்ரீமான்-பாண்டித்துரைசாமித் தேவர்அவர்கள்தமிழ்ச் சங்கம் நாட்டி உலகிற் குச்செய்துவரும்பெருநன்மையை அறியாதார்யாவர். அவரும் அச்சங்கமும் இன்று நாம் ஒன்று கூடிப் பேசிக்களித்ததற்குக் காரணமாய சைவ சமயாபிவிர்த்தி சபையும் பல்லூழிகாலம் வாழ எம்பெருமான் திருவருள் புரிவாராக.

சே. சிவஞானம் பிள்ளை.

# தேகதத்வ சாஸ்த்ரம்

## PHYSIOLOGY

மனித சரீரம் வெளிக்காரியங்களை நடத்த வேண்டிய சலன சக்தி சுலபமாய் உண்டாகும் பொருட்டு, சிறிதும் பெறிதுமான எலும்புகள் சேர்த்து ஜவைக்கட்டுகளால் கட்டப்பட்டும், தசைகளினுல் சேர்க்கப்பட்டும் இருக்கிறது. ஒரு எலும்பையும் மற்றொன்றையும் சேர்த்திருக்கும் தசை சுருங்குவதனுல் சரீரத்தின் சலனம் உண்டாகிறது. இப்படி எப்பொழுதும் வேலைசெய்து கொண்டிருக்கிற தசைகள் அவ்வேலையினுல் குறைபடுவதைத்தடுக்க ஆகாரத்தை ரக்தமானது சில குழாய்கள் மூலமாகப் பாய்ந்துவந்து கொடுப்பதோடு அப்படி வேலை செய்வதினுல் கழிவுபடும் பதார்த்தங்களையும் எடுத்துக்கொண்டு வேறு குழாய்கள்மார்க்கமாகத் திரும்பிச் செல்கிறது. இந்த அசுத்தமான ரக்தம் ஹிருதயத்தில் செல்லவும், அந்த அவயவம் அதைச் சுவாசாசயத் (நுரையீரல்) திற்கு அனுப்பிச் சுத்தப்படுத்தித் திரும்பி வரும் ரக்தத்தை மறுபடியும் சரீரம் முழுவதும் அனுப்புவதுடன், அதின் ஒரு முக்கிய பாகத்தைக் கிட்னிக்கும். (Kidney குண்டிக்காய்) தோலிற்கும் அனுப்பி இன்னும் சுத்தப்படும்படியாக ஏற்பாடு செய்கிறது. இவ்விடங்களில் இரத்தத்திலிருக்கும் இன்னும் சில அசுத்த பதார்த்தங்கள் மூத்திரமாகவும், வேர்வையாகவும் வெளியே தள்ளப்படுகின்றன. இப்படி ரக்தம் குறைந்துகொண்டுவர, பசியுண்டாய், மனிதன் சாப்பிடும் ஆகாரமானது ஜீரணிக்கப்பட்டு ரக்தத்தில் கலந்து ஈரலில் சென்று அங்குச் சுத்தம் செய்யப்பட்டு மறுபடியும் ரக்தத்தில் சேர்ந்து அதை விர்த்திபண்ணுகிறது. மூளையானது இக்காரியங்களை யெல்லாம் மேற்பார்வை பார்ப்பதுடன், வெளியிலுள்ள விஷயங்களை எல்லாம் பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் பதிவித்தும், அவ்விஷயங்களுக்குத் தகுந்தபடி சரீரம் சலனத்தையடைய, வேண்டிய தசைகளுக்குத் தாக்கிது கொடுத்துக் கொண்டும் வருகிறது. இச்சரீரத்துக்கு மூளையை ராஜாவாகச் சொல்லலாம்; அல்லது மனதை ராஜாவாக வைத்துக் கொண்டால் மூளையை மந்திரியாக வைத்துக் கொள்ளலாம். நன்ருய் அமைத்த அரசாக்ஷியில் அநேக பிரிவினைகள் ஏற்பட்டு, ஒவ்வொரு பிரிவுகளிலும் வழக்கமாக நடக்கவேண்டிய தினஸரி காரியங்கள் எப்படி அரசனுக்குத் தெரியாமலே அப்பிரிவினைகளுக்கு மேலுள்ள அதிகாரிகளால் சரிவர நடக்கின்றனவோ அப்படியே, மூளையானது சரீரத்தின் ஒவ்வொரு இடத்திற்கும் நரம்புகளினுல் சேர்க்கப்பட்டிருந்தும், எல்லா அவயவங்களின் வழக்கமான தொழில்களும், அவைகளில் நரம்புகளுக்கு மேலிருக்கும் நரம்பு முடிச்சுகளினுல் நடத்தப்பட்டு வருகின்றன.

இவ்விடத்தில் நரம்பு என்கிற வார்த்தையைப் பற்றிக் கொஞ்சம் சொல்லவேண்டும். தமிழில் சாதாரணப் பேச்சில் நரம்பு என்பது சரீரத்தில் கயிறுபோலிருக்கும் எல்லாவற்றிற்கும் சொல்கிறது. உதாரணமாக, கைகளில் படர்ந்து பச்சையாக வெளியில் தோற்றப்படும், ரக்தக்குழாய்களுக்குப் பச்சை நரம்பென்று சொல்கிருர்கள். அப்படியே, தசைகளை எலும்போடு சேர்க்கும் ஜவைக் கயிறுகளையும் (Tendon) நரம்புகளென்று சொல்லுகிருர்கள். நாம் இவ்விடத்தில் ஒரேவிதமான அமைப்புக்குத்தான் நரம்பு என்கிற பெயரைக் கொடுப்போம்; அதாவது மூளையைச் சரீரத்தின் மற்றெல்லா இடங்களுக்கும் சேர்த்து, சரீரத்தில் தாக்கும் விஷயங்களை யெல்லாம் மூளைக்குத் தெரிவிப்பதும், அப்படியே மூளையின் அபிப்பிராயத்தை மற்ற அவயவங்களுக்குத் தெரிவிப்பதுமான தொழிலைச் செய்யும் நேர்வ்ஸ் (Nerves) என்று சொல்லும் கயிறு போன்ற அமைப்புக்கு.

இவ்வவயவங்களெல்லாம் ஒன்றிற்கொன்று ஒத்தாசையுடனிருக்கின்றன. ரக்தாசயமாகிற ஹிருதயத்தில் ஏதாவது பிசகிருந்து அதினுல் ரக்த ஓட்டத்திற்குத் தடையுண்டாகும்பொழுது சரீ

ரத்தின் வலு குறைந்து மற்ற அவயவங்களெல்லாம் க்ஷீணதசையடைகின்றன. ஹ்ருதயம் முற்றிலும் நின்று விட்டாலோ உடனே மரணம் ஸம்பவிக்கிறது. சுவாசாசயம் வேலை செய்யாமல் நின்றுவிட்டால் ரக்தத்தில் அசுத்தங்கள் நிறைந்து சில நிமிஷங்களில் மரணம் உண்டாகிறது. மூளைக்கு அபாயத்தினால் சேதம் உண்டாகும்பொழுது சில மணி நேரங்களில் மரணம் நேரிடுகிறது. மனிதன் ஆகாரம் எடுக்காமல் இருந்துவிட்டால் சில நாட்களில் இறந்து போகிறான்.

இவ்விதமாகப் பார்க்கும்பொழுது முக்கியமானது ரக்த ஓட்டமென்று ஏற்படுகிறது. அது உயிர் நிலைத்திருப்பதற்கு முதற்காரணமும், முக்கிய அடைபாளமும் ஆகிறது. மற்ற அவயவங்களில் வேலையெல்லாம் நின்றபொழுதும் ரக்தம் ஓடிக்கொண்டிருந்தால், உயிர் இருக்கிறதென்று தீர்மானித்து மற்றத் தேகவியாபாரங்களும் திரும்ப நடக்கும் பொருட்டு வேண்டியதை வைத்தியர்கள் செய்கிறார்கள். இந்த ரக்த ஓட்டத்தைக் குறித்து முதலில் சொல்லுவோம்.

### ரக்த ஓட்டம்.

ரக்தமானது சரீரத்தில் வளைய வந்துகொண்டேயிருக்கிறது. பம்பு (Pump) போல் வேலை செய்யும் ஹிருதயத்தினால் தள்ளப்பட்ட ரக்தம் 'ஆர்டேரிகள்' (Artaries) என்ற ஒருவிதமான குழாய்கள் மூலமாகச்சென்று சரீரம் முழுவதும் பாவி, வெயின்கள் (Veins) என்னும் வேறு குழாய்கள் மூலமாய்த் திரும்பி ஹிருதயத்திற்கு வந்து சேருகிறது. ஹிருதயத்தினால் மறுபடியும் தள்ளப்பட்டுச் சுவாசாசயம் (நுரையீரல்), முழுவதும் வியாபித்து மறுபடியும் ஹிருதயம் வந்து சேருகிறது. இதுபின்வரும் அடையாளபடத்தில் காட்டப்பட்டிருக்கிறது. (படம் 1)

இப்படி ரக்தமானது உடல் முழுவதும் வளைய வந்து கொண்டிருப்பதற்கு முக்கிய காரணம் ஹிருதயம் செய்யும்வேலை. அது பம்புபோல் ரக்தத்தை ஆர்டெரிகளில் தள்ள, முதலில் தன்னுண்ட சக்தியினால் ரக்தம் உடல் முழுவதும் வியாபிக்கிறது. இவ்விதம் வேலை செய்யும் ஹிருதயத்தின் அமைப்பைச் சற்று கவனிப்போம்.

ஹிருதயம்(படம் 3)தசையினால் செய்யப்பட்ட பொள்ளலான அவயவம்.அது நாலு அறைகளாக வகுக்கப்பட்டிருக்கிறது; அந்நாலு பாகத்தையும் இரண்டிரண்டாகச் சேர்த்து, அமைப்பைக் குறித்து மேற்பாகம், கீழ்ப்பாகம் என்றும், அல்லது ஒவ்வொரு பாகத்திலும் உள்ள அறைகளின் சம்பந்தத்தை உத்தேசித்து வலபாகம் இடபாகம் என்றும் சொல்லலாம். (படம் 2) அதாவது மேற்பாகம்இரண்டும் மெல்லிய சுவர்களையுடையனவாயும், கீழ்ப்பாக மிரண்டும் கனமான சுவர்களை யுடையனவாயும் இருக்கின்றன. வலது பக்கத்திலுள்ள மேலறைக்கும் கீழறைக்கும் வழியுண்டு. அப்படியே இடப்பக்கத்திலும் இருக்கிறது. ஆனால்,கருப்பிராயத்தில்தவிர,வலப்பக்கத்துக்கும் இடப்பக்கத்துக்கும் வழியில்லை. மேலுள்ள அறைக்கு ஆரிகிள் (Auricle) என்று பெயர். கீழுள்ள அறைக்கு வேண்ட்ரிகிள் (Ventricle) என்று பெயர்.

சரீர்முழுவதும் வியாபித்துமலினமான ரக்தம் மறுபடியும் ஒருங்குசேர்ந்து இரண்டு குழாய்கள் மூலமாக ஹிருதயத்தின் வலதுமேலறையில்புகுகிறது. இரண்டு கைகளுக்கும் தோள்களுக்கும், தலைக்கும் வியாபித்திருந்த ரக்தம் மேற்குழாய் மூலமாகவும், வயிற்றுக்கும் கால்களுக்கும் பாவியிருந்த ரக்தம் கீழ்க்குழாய் வழியாகவும் திரும்புகிறது. ஹிருதயத்தின் சுவர்களுக்குள் பாவியிருக்கும் ரக்தம் தனியாகவேறொரு குழாய் மூலமாக வலது மேலறைக்குள் செல்கிறது. இப்படி வந்து சேர்ந்த ரக்தத்தை வலது மேலறை—ஆரிகிள்—சுருங்கி வலது கீழறை---வெண்டிரிகிள்—க்குள் செலுத்துகிறது. வலது கீழறையிலிருந்து ஒரு ரக்தக் குழாய் (பல்மோனரி ஆர்டேரி Pulmonary artery) ரக்தத்தைச் சுவாசாசயத்திற்குக் கொண்டுபோகிறது. சுவாசாசயத்தில் இந்தக் குழாய் வெகுமெல்லிய குழாய்களாகப் பிரிகின்றது. இம்மெல்லிய குழாய்களில் ரத்தம் ஓடும்போது காற்றுப் படுவதினால் சுத்தம் செய்யப்பட்டு இம்மெல்லிய குழாய்கள் சேருவதினால் உண்டாகும் நான்கு பெரிய குழாய்கள் (Pulmonary veins) பல்மோனரி வெயின்கள் மூலியமாக ஹிருதயத்தின் இடது மேலறைக்குள் செல்கிறது. அங்கிருந்து இடது கீழறைக்குவந்து அவ்வறையின் சுருக்கத்


சுவாசாசயம் அல்லது நுரையீரல்
2 ஹிருதயத்
தின் வலபக்
கம்
2
1 ஹிருதயத்
தின் இடபக்
கம்
உடல்
படம் 1.


ஹிருதயம்
படம் 3




படம் 2.



படம் 6.

வரித்தசை நார்

படம் 5

லாதாத்தசை நார்



படம் 4.

தசை சுருங்குவதினால் உண்டாகும் சலனம்

தினுல் அயோர்டா என்ற ஒரு பெரிய குழாய்க்குள் தள்ளப்பட்டு, அக்குழாயிலிருந்து பிரியும் ஆர்டெரிகளால் உடல் முழுவதும் வியாபிக்கிறது.

ஹிருதயத்தின் அறைகள்சுருங்குவதினுல் ரக்தம் அறைகளினின்று தள்ளப்படுகிறதென்று சொன்னேம். நெடுகவரிந்த வரைகள் அவயவம் சாதாரணமாயிருக்கிற ஸ்திதியையும், புள்ளிகளால் வரிந்த வரைகள், அதே அவயவம் சுருங்கும்போது அடையும் ஸ்திதியையும் காண்பிக்கிறது. இவ்விதமான மாறுதலை யடையும்போது அவ்வவயவத்தில் இருந்த வஸ்துக்கள் வெளியே தள்ளப்பட வேண்டுமென்று தெளிவாகும்.

ஹிருதயத்தின் சுவர்கள் எப்படிச் சுருங்குகின்றன? இந்தக் கேள்விக்கு உத்தரம் அவைகளின் அமைப்பில் இருக்கிறது.

ஹிருதயம் தசையினுல் செய்யப்பட்ட ஒரு பொள்ளலான அவயவமென்று முன் சொன்னேம். இத்தசையின் முக்கியகுணம் சுருங்கக்கூடிய சக்தி. இந்தச் சக்தியினுலேயே சரீரத்தின் சலனசக்தி யுண்டாகிறபடியால், எங்கெல்லாம் சலனம் வேண்டுமோ அங்கெல்லாம் தசை அவசியமாக வேண்டியிருக்கிறது. அப்படியே அமைந்தும் இருக்கிறது. (படம் 4)

ஷை படத்தில் மேற்கையில் முன் இருக்கும் **பைஸெப்ஸ்** என்னும் தசையின் சுருங்குதலினுல் முன்னங்கையானது மேற்கையின் மேல் மடிகிறது காண்பித்திருக்கிறது. இந்தத் தசைகளெல்லாம் மெல்லிய நார்கள் சேர்ந்துண்டானவை. இந்நார்கள் பூதக்கண்ணுடியில் தோற்றும் உருவத்திற்கேற்ப வரித்தசை நாரென்றும், ஸாதா தசை நாரென்றும் வகுக்கப்படுகின்றன. இவைகளின் உருவம் பின்வரும் படத்தில் காண்பித்திருக்கிறது. (படம் 5, 6)

இவைகள் தொழிலிலும் வித்தியாசப்படுகின்றன. இச்சாசக்திக்குக் கீழ்ப்பட்ட தசைகளெல்லாம் வரித்தசை நாரால் அமைந்திருக்கின்றன. இச்சையினுல்கட்டுப்படாத அவயவங்களெல்லாம் ஸாதாத்தசைநாரினுல் அமைக்கப் பட்டிருக்கின்றன. இரைப்பை, குடல், இரக்தக்குழாய்கள் இவைகளெல்லாம் இந்த நாரினுல் செய்யப்பட்டவை.

கே. நாராயணய்யர், M.B. & C.M.



# ரிச்சார்டு ப்ரின்ஸ்லி ஷெரிடன்

## RICHARD BRINSLEY SHERIDAN



"ஷெரிடன்" என்னும் பெயர், மேல் நாட்டினருக்கும், ஆங்கிலமறிந்த கீழ் நாட்டினருக்கும் ஸர்வ ஸாதாரணமாய்த் தெரிந்ததோர் பெயரேயாயினும் ஆங்கிலமறியாத தமிழ்மக்களுக்கு இப்பெயர் புதுமையாகவே தோன்றும். மேல்நாட்டிலிருந்த அநேக கல்விமான்களுடைய சரித்திரங்களுள் இவருடைய சரித்திரத்தை மட்டும், முதலில் எழுத முன்வந்ததற்கு ஒரு முக்கிய காரணமுளது. உலகத்தில் ஒவ்வொரு விஷயத்தில் நல்ல தேர்ச்சியடைந்திருக்கும் விற்பன்னர்கள் பலரை நாம் பார்ப்பது ஸகஜமேயாம். ஆனுல் பல துறைகளில் பூர்ணபாண்டித்யமடைந்த ஒருவரைப்பற்றிக் கேட்பதோ அல்லது பார்ப்பதோ மஹாதுர்லபம். ஷெரிடன் பல துறைகளில் நல்ல தேர்ச்சியடைந்த சிறந்த அறிவாளராவர். பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் இங்கிலாந்தில் சிறந்த நாடககர்த்தர் யார்? சிறந்த கவிவாணர் யார்? சிறந்த மொழிபெயர்ப்புக்காரர் யார்? சிறந்த பிரசங்கியார் யார்? சிறந்த ராஜதந்திர நிபுணர் யார்? விகடமாய்ப் பேசுவதில் பேர்

போனவர் யார்? என்று யாராவது நம்மைக்கேட்டால் இத்தனை கேள்விகளுக்கும் ஒரே பதிலாக ஒரு வார்த்தையில் "ஷேரிடன்" என்று சொல்லிவிடலாம்.

### ஷேரிடனுடைய முன்னோர்கள்

ஷெரிடனுடைய பாட்டனர் பெயர் டாக்டர் தாமஸ் ஷேரிடன். இவர் டப்ளின் நகரத்திலுள்ள டிரினிடி காலேஜில் படித்து இலக்கிய இலக்கணங்களில் நல்ல பாண்டித்யம் பெற்றார். இவருக்கு வருஷமொன்றுக்கு ஆயிரம் பவுனுக்குமேல் வரும்படியிருந்தும், பணத்தை அலட்சியமாயும் கவலையின்றியும் கண்டபடி செலவு செய்துவந்தார். இதனால் பிற்காலத்தில் தம்முடைய குடும்பத்தை நிர்வகிப்பது மிகவும் கடினமாக இவருக்குத் தோன்றிற்று. ஆனால் எவ்வளவு கஷ்டம் வந்தபோதிலும் அதைப்பற்றி இவர் கவலைப்படுவதாவது வருத்தப்படுவதாவது கிடையாது. மிகுந்த கஷ்டமான நிலைமையிலும் இவர் சந்தோஷமாகப் 'பிடில்' வாசித்துக்கொண்டும், நூல்கள் எழுதிக்கொண்டும் கவலையற்றிருப்பாராம். இவருக்கு 1721-ம் வருஷத்தில் அயர்லாந்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குத் தாமஸ் ஷேரிடன் என்று நாமம் சூட்டினார்கள். டாக்டர் ஷெரிடன் அக்குழந்தைக்குத் தகுந்த வயது வந்தவுடன் வெஸ்ட் மினிஸ்டர் ஸ்கூலிலும், ட்ரினிடி காலேஜிலும் வித்தியாப்பியாஸம் செய்துவைத்தார். தாமஸ் ஷெரிடன் எம். ஏ. பரிட்சையில் தேறிப் பட்டம்பெற்ற பின்பு உபாத்தியாயர் வேலையில் அமர்ந்தார். இவருக்கு இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள். மூத்தவர் பெயர் சார்லஸ் பிரான்ஸிஸ் என்பது. இளையவர் பெயர்தான் இங்குப் பிரஸ்தாபிக்கப்போகிற ரிச்சர்டு ப்ரின்ஸ்லி ஷேரிடன் என்பது.

### ஷேரிடனுடைய பிறப்பும் இளமைப் பருவமும்

ரிச்சர்டு ஷெரிடன் 1751-ம் வருஷம் செப்டம்பர் மாதம் டப்ளின் நகரத்தில் பிறந்தார். அக்டோபர் மாதம் 4-ம் தேதி ஸெயிண்ட் மேரி சர்ச்சில் அந்த ஒரு மாதக் குழந்தைக்கு ஞானஸ்நானம் செய்துவைத்தார்கள். இவருக்கு ஏழு வயதானவுடன் இவரையும் இவருடைய மூத்த ஸகோதரராகிய சார்லஸ் பிரான்ஸிஸையும், தாமஸ் ஷெரிடன் மிஸ்டர் சாமுயெல் வொயிட் என்னும் கல்விமானிடம் கல்விகற்றுக் கொள்ளும்படி விட்டார். ஒரு வருஷம் இவரிடம் கல்வி பயின்ற பின்பு இருவரும் இங்கிலாந்துக்குச் சென்று கலாசாலையில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தார்கள். 1762-ம் வருஷத்தில் ரிச்சர்டை, தாமஸ் ஷெரிடன் ஹாரோ என்னும் இடத்துக்குக் கல்விபயில அனுப்பிவிட்டு மூத்த குமாரனைமட்டும் தம்முடன் வைத்துக்கொண்டார். இந்த இரண்டு புத்திரர்களுள் மூத்தவரே அதிக பிரகாசத்துடன் விளங்குவார் என்பது தாமஸ் ஷெரிடனுடைய கருத்தாதலால் அவர் இவ்விதம் செய்தார். ரிச்சர்டு ஷெரிடன், ஹாரோ என்னுமிடத்தில் படித்து வந்தபோது மாணாக்கர்களுடைய சிநேகத்தையும் உபாத்தியாயர்களுடைய அன்பையும் தம்முடைய நன் நடத்தையாலும், புத்திசாலித்தனத்தினாலும் வெகு சுலபமாகப் பெற்றுவிட்டார். ஆனாலும் கலாசாலைப் படிப்புக்கும் இவருக்கும் வெகு தூரமே. மற்ற மாணாக்கர்களைப்போல் படித்து யூனிவர்ஸிடி பட்டம் பெறுவது ரிச்சர்டு ஷெரிடனுக்கு முடியாத விஷயமாயிருந்தது.

இதற்குக் காரணம் யாதெனில் கஷ்டப்பட்டுக் கலாசாலைப் பாடங்களைப் படிக்கிற வழக்கம் இவருக்கு இல்லை. பொதுவானதும், இயற்கை யறிவைக்கொண்டு பதில் சொல்லக் கூடியதுமான கேள்வியை உபாத்தியாயர் கேட்டால் அந்தக் கேள்வி எவ்வளவு கஷ்டமானதாயிருந்தபோதிலும் உடனே பொருத்தமாகப் பதில் சொல்லிவிடுவார். அவருடைய பதில் சரியாயும், நியாயமாயும் இருப்பதைக் கண்டு உபாத்தியாயர்கள் ஆச்சரியமடைவார்கள். புஸ்தகத்தில் ஒரு பாடத்தைக் குறித்துக்கொடுத்துப் பாராயணம் செய்து ஒப்புவிக்க வேண்டுமென்று உபாத்தியாயர் சொன்னால், அதை மாத்திரம் நிறைவேற்றும் வழக்கம் ஷெரிடனுக்குக் கிடையாது. இவர் கலாசாலையில் துஷ்டத்தனமும் அகடவிகடமும் எப்போது பார்த்தாலும் செய்துகொண்டேயிருப்பார். இவருடைய குறும்புத் தனத்தைக் கண்டு உபாத்தியாயர்கள் கோபங் கொள்ளப் பிரயத்தனப்பட்டால் அவர்களால் முடிகிறதில்லை. அவர்களுக்குச் சிரிப்பும் சந்தோஷமும் உண்டாகுமே தவிர கோபம் உண்டாகாது. ஒரு சமயம் கோபம் உண்டானாலும் ஷெரிடனை நெருங்கி வந்தவுடன் உபாத்தியாயர் கோபம் இருந்த இடம் தெரியாமல் பறந்துபோய் விடும். ஷெரிடனுக்கு நுட்பமான ஆராய்ச்சி செய்யும் சக்தியும், விசாலமான அறிவும் இருந்தபோதிலும் அவர் அவைகளைச் சரியான வழிகளில் உபயோகிக்காமல் வீணுக்குகிறாரென்று அவருடைய உபாத்தியாயராகிய மிஸ்டர் சம்மர் அடிக்கடி வருத்தப்பட்டு உரைப்பதுண்டாம்,

ஷெரிடனுக்கும் கணித சாஸ்திரத்துக்கும் வெகு தூரம். யூனிவர்ஸிடி பரிக்ஷையில் அவர் தேற முடியாமற் போனதற்கு இதுவே முக்ய காரணம். ஷெரிடன் ஹாரோ என்னுமிடத்தில் படித்துக் கொண்டிருந்த போது அவருடைய தகப்பனார், குடும்பத்துடன் சில லௌகீக தொந்தரவுகளை முன்னிட்டுப் பிரான்ஸ் தேசத்தில் வசிக்கும்படி நேரிட்டது. அங்கே, 1766-ம் வருஷம் செப்டம்பர்மாதம் ஷெரிடனுடைய அருமைத் தாயார் மரணமடைந்தார். அதன்பிறகு தாமஸ் ஷெரிடன் தம்முடைய மூத்தகுமாரன் சார்லஸ் பிரான்ஸிஸையும், தம்முடைய புத்திரியாகிய மிஸஸ் லீபானு என்பவளையும் அழைத்துக்கொண்டு இங்கிலாந்துக்குத் திரும்பிவிட்டார். இங்கிலாந்துக்கு வந்ததும் இளைய குமாரனாகிய ரிச்சார்டு ஷெரிடனை ஹாரோவிலிருந்து வந்துவிடும்படி ஏற்பாடுசெய்து, இரண்டு குமாரர்களையும் லண்டனிலிருந்த மிஸ்டர் லூயி கெர் என்னும் ஐரிஷ்போதகாசிரியரிடம் வித்தை கற்றுக்கொள்ளும்படி விட்டுவைத்தார். ஹாரோவிலிருந்தபோது ஷெரிடனுக்குக் கல்வி பயிலுவதில் அதிகமான கவலையில்லாமலிருந்த போதிலுங்கூட, லண்டன் வந்ததும் அவருடைய கல்வியறிவு வெகு விரைவாக முதிர்ச்சியடையத் தலைப்பட்டது. ஸ்வயமாகவே கவிகளியற்றவும், நாடகங்கள் எழுதவும் ஆரம்பித்தார். இவர் பாலியத்தில் இயற்றிய கவிகளைப் பார்த்துப் பெரிய விற்பன்னர்களும் ஆச்சரியமடைந்தார்கள். ஹாரோவிலிருந்து லண்டனுக்கு வந்தபோது ரிச்சர்டுக்கு வயது பதினெட்டு இருக்கலாம். இந்தச் சமயத்தில் இவருடைய வாழ்க்கைநிலை ஒரு அழகிய பெண்மணியால் மாறுதலடைய ஆரம்பித்தது.

### அழகிற்சிறந்த மிஸ் லின்லி

ரிச்சார்டு ஷெரிடன் லண்டனில் கல்வி பயின்று வந்த காலத்தில், பாத் (Bath) என்னும் நகரத்தில் மிஸ் லின்லி என்னும் பெயருடைய ஒரு குலமகளிருந்தாள். அக்காலத்தில் அச்சமயத்தில் இவளைப்போல் அழகில் சிறந்த பெண் இங்கிலாந்தில் இருந்ததில்லையாம். இவளுக்கு இயற்கையாகவே ஸங்கீத ஞானம் வாய்ந்திருந்தபடியால் இவள் ஸங்கீதம் பாடுவதைத் தனக்குத் தொழிலாகக் கொண்டிருந்தாள். சங்கீதக் கச்சேரியை முன்னிட்டு இவள் பெரிய கனவான்கள் வீட்டுக்கும், பொதுவிடங்களுக்கும் அடிக்கடி போகும்படி நேரிட்டதால் இவளுடைய பெயரும் கீர்த்தியும் இங்கிலாந்து முழுவதும் பரவியிருந்தன. இவள் இயற்கையிலேயே பேரழகு வாய்ந்தவளாய் இருந்ததினாலும், இனிய குரலோடு இன்னிசைபாடும் சங்கீத ஞானமுடைய பெண்களின்மீது புருஷர்களுக்குக் காதலுண்டாவது இயற்கையானதினாலும், தேன் நிறைந்த தாமரைப் புஷ்பத்தை வண்டினங்கள் மொய்ப்பது போல இக்கட்டழகியின் காதலைப் பெறுவதற்கு அநேக புருஷர்கள் முயற்சி செய்தார்கள். இதனால் பலருடைய பூஷணைக்கும், பலருடைய தூஷணைக்கும் மிஸ் லின்லி பாத்திரமாயினாள். இவளை முன்னிட்டுப் பல புருஷர்கள் ஒருவரோடொருவர் பகைமை பாராட்டிச் சண்டையிட ஆரம்பித்தார்கள். மிஸ் லின்லிக்குப் பதினாறு வயதான சமயத்தில் மிஸ்டர் லாங் என்னும் ஒரு பெரிய கனவான் அவளை விவாகஞ் செய்து கொள்ள அவளுடைய தகப்பனாரிடத்தில் பேசி முடிவு செய்துகொண்டார். இவர் மிகவும் வயது சென்ற வயோதிகக் குழந்தையானதால் இவரை மணம் புரிந்துகொள்ள மிஸ் லின்லிக்குக் கொஞ்சமும் இஷ்டமில்லை. மிஸ்டர் லாங் என்பவரை மிஸ் லின்லி நேரில் போய்ப்பார்த்து "நீரோ வயோதிகராகிவிட்டீர். நீர் என்னை விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்று நினைப்பது நியாயமல்ல. உம்மை மணம்புரிந்து கொள்ளுவதில் எனக்குச் சிறிதேனும் இஷ்டமில்லை. கட்டாயத்தின்மேல் நீர் செய்துகொண்ட போதிலும் உம்மை உண்மையாய் நேசிக்க என்னால் முடியாது" என்று தன் மனதிலுள்ள எண்ணத்தை வெளிப்படையாகச் சொன்னாள். மிஸ்டர் லாங் மிகவும் நல்லவரானபடியாலும், புத்திமானானபடியாலும், வயோதிகப் பருவமுடைய தாம் யௌவன யுவதியை இச்சித்தது மூடத்தனமாகு மென்பதையுணர்ந்து, மிஸ் லின்லியின் தைரியத்தையும், உண்மையை வெளியிட்ட தீரத்தையும், மிகவும் பாராட்டி அவளுக்குப் பெருந்தொகையான பொருளை இனாமாகக் கொடுத்தார். இச்சமயத்தில் தாமஸ் ஷெரிடன் தம்முடைய குடும்பத்தோடு பாத் நகரத்தில் வசிக்கும்படியான சந்தர்ப்பம் நேரிட்டது. அவர் மிஸ் லின்லியின் குடும்பத்தார் வசித்துவந்த வீட்டுக்குச் சமீபத்திலேயே ஒரு வீடு பார்த்துக்கொண்டு அதில் குடியிருந்து வந்தார். இவருடைய வீட்டார் அடிக்கடி மிஸ்டர் லின்லியின் வீட்டுக்குப் போவதும், அவ்வீட்டார் இவருடைய வீட்டில் வந்து பேசிக்கொண்டிருப்பதும், சகஜந்தானே? இப்படியாக இவ்விரு குடும்பத்தாருக்குள்ளும் சிநேகபாவம் வர வர முதிர்ந்துவந்தது. இதனால் ரிச்சார்டு ஷெரிடன் அடிக்கடி மிஸ் லின்லியைக் கண்டு பேச

வும், மிஸ் லின்லி அடிக்கடி ரிச்சார்ட்டு ஷெரிடனைக் கண்டு பேசவும் தகுந்த சந்தர்ப்பங்கள் நேரிட்டன. இப்படி இவ்விருவர்களையும் நெருங்கிப் பழகும் படி விடுவது சரியல்லவென்று சாதாரணமாய் மற்றக் குடும்பத்தாருக்குத் தோன்றக் கூடியதேயாயினும், இவ்விரு குடும்பத்தாருக்கும் தோன்றவில்லை. கவிகளியற்றுவதில் சாமர்த்தியமுள்ள ஒரு அழகிய வாலிபனையும், சங்கீதம் பாடுவதில் சாமர்த்தியமுள்ள ஒரு அழகிய மங்கையையும் நெருங்கிப் பழகும்படி விடுவது காந்தத்தையும் இரும்பையும் ஒன்றன் பக்கத்திலொன்ருய் வைப்பதைப் போலாகுமென்பதை இவர்களுடைய பெற்ருேர்கள் உணரவில்லை. ஆகவே மிஸ் லின்லிக்கும், ரிச்சார்டு ஷெரிடனுக்கும் உள்ள சிநேகபாவமானது, விருத்தியாக அன்பாயும், அது முதிர்ந்து காதலாயும் வெகு சீக்கிரத்தில் முதிர்ந்து விட்டது. இவருடைய முழுமனமும் மிஸ் லின்லியின் அழகிலும் குணத்திலும் ஐக்கியமாகி விட்டது. மிஸ் லின்லியோ கற்பிற் சிறந்த உத்தமபத்தினியாவள். பிற புருஷர்களுடைய அழகையும், பெருஞ் செல்வத்தையும், இயல்பையும் திரணமாக மதித்து, ரிச்சார்டு ஷெரிடனையே விவாகஞ் செய்து கொள்ளுகிறதென்னும் மன உறுதியைக் கொண்டிருந்தாள். ஆனல் அவளுடைய பிதா பண ஆசைபிடித்தவரானதால் அவளைப் பெரிய பணக்காரனுக்கு விவாகஞ் செய்து கொடுக்க வேண்டுமென்று நினைத்தார். ரிச்சார்டுடைய மூத்த சகோதரனுகிய சார்லஸ் ஷெரிடனும் மிஸ் லின்லியைக் காதலித்தான். அவளுடைய பேரழகு தன்னை வருத்திய போதிலும் அவள் ரிச்சார்டு ஷெரிடனையே உண்மையாய்க் காதலிக்கிருள் என்று தெரிந்தபின்பு, தன்னுடைய சகோதரனின் சுகத்தைக் கெடுக்க மனமில்லாதவராய், சார்லஸ் விலகிக்கொண்டார். பாத் நகரத்தில் இருப்பதுகூட சரியல்லவென்று நினைத்து அந்நகரத்துக்கு எழெட்டு மைல் தூரத்திலுள்ள ஓரிடத்துக்குச் சென்று அங்கே தனியாகச் சார்லஸ் வசித்து வந்தார். மிஸ்டர் லின்லியின் குடும்பத்துக்கு மிகவும் வேண்டியவரும் எற்கெனவே விவாகமானவருமான காப்டன் மாத்யூஸ் என்பவர் மிஸ் லின்லியின் அழகைக்கண்டு அவளை மணம்புரிய விரும்பினர். இவர் மிஸ் லின்லியைத் தனியாகச் சந்தித்துத் தன்னுடைய விருப்பத்தை வெளியிட்டு, நயத்தாலும் பயத்தாலும் தன்னை விவாகஞ் செய்துகொள்ளும்படி அவளைக் கட்டாயப் படுத்தினர். இவருடைய பிடிவாதத்தையும், முரட்டுத்தனத்தையும் கண்டு, மிஸ் லின்லி பயமடைந்து, விஷயத்தை ரிச்சார்டு ஷெரிடனுக்குச் சொன்னுள். தன்னுடைய அழகும், தான் செய்துவரும் வேலையும், தன்மீது கண்போடும்படிப் பலரையும் செய்யும் இயல்புடையவா யிருக்கின்றன என்பதையும் உணர்ந்துகொண்ட மிஸ் லின்லி சங்கீதக் கச்சேரிக்குப் போவதில்லை என்று உறுதிசெய்துகொண்டு வீட்டுக்குள்ளேயே இருந்துவிடத் தீர்மானித்தாள். காப்ட்டன் மாத்யூஸ் என்பவர் மட்டும் இடைவிடாமல் மிஸ் லின்லியை ஹிம்ஸித்துவந்தபடியால் அவருடைய ஹிம்ஸை பொறுக்கமுடியாமல், எங்கேயாவது ஓடிவிடுவதுநலமென்று அவள் நினைத்து, ரிச்சார்டு ஷெரிடனைக் கலந்து யோசனை செய்தாள். ஷெரிடனும் அவள் சொல்லுவது நியாயமெனக் கருதி இருவரும் ஒருவருக்கும் தெரியாமல் வெளிப்புறப்பட்டு விடுதலே சரியென்று தீர்மானித்தார். ஷெரிடனுடைய சகோதரி இவர்களுக்கு வேண்டிய உதவியை ரகசியமாகச்செய்து இருவரையும் வெளியேற்றி விடுவதில் கண்ணுங் கருத்துமா யிருந்தாள். ஏனெனில், இவ்விருவர்களுக்குள்ளும் ஏற்பட்டிருக்கும் காதலின் பெருக்கு, இத்தகையதென்பதை அவள் நன்ருய் அறிந்தவள். ஆகவே இவளுடைய உதவியைக்கொண்டு ரிச்சார்டு ஷெரிடனும், மிஸ் லின்லியும் 1772-ஆம் வருஷ ஆரம்பத்தில் ஒருவருக்கும் தெரியாமல் லண்டனைவிட்டுப் புறப்பட்டு டன்கிர்க் என்னுமிடத்துக்கு ஓடிப்போய் விட்டார்கள்

### ஷெரிடனும் மாத்யூஸும்

ஷெரிடனும், மிஸ் லின்லியும், டன்கிர்க் என்னுமிடத்துக்குப் போனதும், அங்கேயுள்ள ஒரு சிறு தேவாலயத்தின் பாதிரியிடம், தங்களுடைய உண்மைக் கருத்துக்களைச் சொல்லி அந்தரங்கத்திலேயே விவாகம் செய்துகொண்டார்கள். இவர்களிருவரும் லண்டனைவிட்டு வெளிப்பட்டபின்பு காப்ட்டன் மாத்யூஸ் "பாத் கிரானிகில்" என்னும் பத்திரிகையில் மிஸ் லின்லியைப்பற்றியும், ஷெரிடனைப்பற்றியும் தூஷித்தும், பரிகசித்தும், அவமதித்தும் பல வியாஸங்கள் எழுதிப் பகிரங்கப்படுத்தினர். இந்த விஷயம் ரிச்சார்டு ஷெரிடனுக்குத் தெரிந்ததும், அவர் மாத்யூவின் கெட்ட எண்ணத்தைக் கண்டு அருவருப்பும் கோபமும் கொண்டார். தன்னுடைய அருமை மனைவியாகிய மிஸ் லின்லியைப்பற்றிப் பகிரங்கமாகப் பத்திரிகையில் எழுதும்படிக் காப்ட்டன் மாத்யூஸுக்கு இடங்கொடுப்பது கூடாதென்று கருதி உடனே மிஸ்

லின்லி சகிதம் புறப்பட்டு மறுபடியும் லண்டன் வந்து சேர்ந்தார். லண்டனுக்கு வந்ததும், காப்ட்டன் மாத்யூஸ் பத்திரிகையில் எழுதிய விஷயங்கள் சரியல்லவென்று கண்டித்து அதே பத்திரிகையில் இவர் பல கண்டனங்கள் எழுதினர். இப்படியாக இவர்களிருவருக்குள்ளும் விரோதபாவம் அதிகப்பட்டது. கடைசியில் தாம் எழுதியது பிழைதான் என்பதையும், பொறாமை காரணமாக அவ்விதம் எழுத நேரிட்டதென்பதையும் ஒப்புக்கொண்டு, காப்ட்டன் மாத்யூஸ் அந்தப் பத்திரிகையில் தாமே ஒரு பகிரங்கக் கடிதம் எழுதி மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

காப்ட்டன் மாத்யூஸ் பலராலும் அவமதிக்கப்பட்டுக் கடைசியில் தம்முடைய சொந்த ஊராகிய வேல்ஸுக்குப் போய்விட்டார். இந்தச் சந்தர்ப்பத்தில் மிஸ்டர் பார்னெட் என்பவர் ஒருவர் வந்து சேர்ந்தார். காப்ட்டன் மாத்யூஸ் என்பவருக்கும், ரிச்சார்டு ஷெரிடனுக்கும் உள்ள விரோதபாவத்தை அதிகப்படுத்த வேண்டுமென்பது இவருடைய விருப்பம். இப்படி இவர் விரும்பினதற்கு நியாயமான காரணம் எதுவுமில்லை. அவ்விருவர்களுடைய விரோதத்தால் இவருக்கு விளையும் நன்மையுமில்லை. அப்படியிருந்தும் இருவருக்குள்ளும் சண்டை மூட்டிவிட்டு வேடிக்கை பார்க்க நினைத்துக் காப்ட்டன் மாத்யூஸைக் கண்டு பலவிதமாக வார்த்தையாடி ரிச்சார்மீது அவருக்குள்ள கோபத்தை அதிகப் படுத்திவிட்டார். அப்படியே ரிச்சார்டையும் கண்டு பேசி அவருக்குக் காப்ட்டன்மீது கோபமுண்டாகும்படிச் செய்துவிட்டார். இவருடைய முயற்சியினல், ரிச்சார்டும் மாத்யூஸும் ஒருவரோடொருவர் கரத்தில் கத்தியேந்தி சண்டை போடுவதென்றும், வெற்றி பெறுகிறவர் மிஸ் லின்லியை மணம்புரிந்து கொள்ளுகிறதென்றும் ஏற்பாடாயிற்று. ரிச்சார்டு ஷெரிடன் கத்திச் சண்டையில் பெயர் போனவராதலால் இந்த ஏற்பாட்டுக்குப் பின் வாங்கவில்லை. இரண்டுமுறை ஷெரிடனுக்கும், காப்ட்டன் மாத்யூஸுக்கும் யுத்தம் நடந்தது. இருவருடைய கத்திகளும் சண்டையில் முறிந்துவிட்டன. ஷெரிடனுக்குப் பலமான காயம் ஏற்பட்டது. ஆனாலும் அவர் தோல்வியடையவில்லை. காப்ட்டன் சொற்ப காயங்களுடன் தம்முடைய ஊருக்குத் திரும்பிவிட்டார். மிஸ்டர் லின்லியும், தாமஸ் ஷெரிடனும், மிஸ் லின்லிக்கும், ரிச்சார்டு ஷெரிடனுக்கும் ஏற்பட்டிருக்கும் உண்மையன்பை உணர்ந்து 1773-ம் வருஷம் ஏப்ரல் மாதம் பதிமூன்றாம் தேதி இருவருக்கும் பகிரங்கமாய் விவாகம் செய்துவைத்தார்கள்.

### ஷெரிடனும் அவருடைய நாடகங்களும்

இந்தச் சமயத்தில்தான் "விரோதிகள்" (Rivals) என்னும் பெயருடைய நாடகம் இவரால் 1774-ம் வருஷத்தில் எழுதப்பட்டது. இது ஶ்ரிங்காரபாகமாய் முடிவுபெறும் ஒரு சிறந்த நாடகமாகும். 1775-ஆம் வருஷம் ஜனவரிமாதம் 17-ஆம் தேதி இரவு, முதல் முதல் "கவன்ட் கார்டன்" என்னுமிடத்தில் இது நாடக ரூபமாய் நடித்துக் காட்டப்பட்டது. நாடக பாத்திரர்கள் அச்சமயம் சரிவர இல்லாததினல் ஷெரிடன் எதிர்பார்த்தபடி அவ்வளவு நல்ல பெயர் அதற்கு வராமற் போயிற்று. (1) The School for Scandal (2) The Duenna (3) The Critic (4) A Trip to Scarborough என்னும் பெயர்களையுடைய நாடகங்கள் இவரியற்றிய நாடகங்களுள் முக்கியமானவையாகும். இவைகளைத் தவிர சில்லரை நாடகங்கள் பல இயற்றியிருக்கின்றார். இவருடைய நாடகங்களில் ஹாஸ்யரஸமும், இருபொருள் படும்படியான பதப் பிரயோகங்களும் நிறைந்திருக்கின்றன. இவர் நாடக நூல்கள் இயற்றும் நூலாசிரியராக இருந்ததோடு கூட, நாடக சாலையில் வேடம் பூண்டு நடிக்கக்கூடிய திறமை வாய்ந்தவராயுமிருந்தார். கவிகளியற்றுவதில் இவருக்கிருந்த சாமர்த்தியம் ஆச்சரியப்படத்தக்கதாகும். அதிலும் இன்பச்சுவை நிறைந்த வரிப்பாட்டுகள் எழுதுவதில் இவருக்கு நிகர் எவருமில்லையென்பது பிற்காலத்து விற்பன்னர்களின் அபிப்பிராயம். இவர் தமது மனைவியாகிய மிஸ் லின்லியின்மீது பாடிய காதற்பாட்டுக்கள் ஆனந்தமாகும். இவருடைய நாடகங்களும், கவிகளுமே, இவருடைய கீர்த்தியை முதன் முதல் உலகில் நிலை நாட்டியவையாகும்.

### ஷெரிடனும் பார்லிமெண்டும்

இதுவரையில் ஷெரிடன் நாடககர்த்தாகவும், கவிவாணராகவுமிருந்தாரே தவிர பெரிய பிரசங்கியாராக இல்லை. லார்டு ஜான் டௌன்ஸென்டு என்பவர் மூலமாய், ஷெரிடனுக்கு மிஸ்டர் பாக்ஸின் (Fox) நட்புரிமை கிடைத்தது. அவர் இவரைப் பர்க்குக்கு (Burke) சிநேகம் செய்துவைத்தார். இவ்விதமாக ஷெரிடன் பார்லிமெண்டு மெம்பர்களுடைய சிநேகத்தைப் பெற்றார். 1780-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் இவர் காமன்ஸ் சபையில் மெம்பரானர். அச்சம

யத்தில் அமெரிக்கன் சண்டையால் இங்கிலாந்து திகிலடைந்திருந்தது. ஸ்டாபர்டு நகரத்து எலக்ஷன் விஷயமாக இவர் முதல் முதல் காமன்ஸ் சபையில் பேசும்படி நேரிட்டது. அச்சமயத்திலேயே இவருக்கிருக்கும் பிரசங்கசக்தி புலப்பட்டுவிட்டது. லார்டு நார்த் என்பவருடைய மந்திரித்துவம் சரியாயில்லை என்று ஷெரிடன் கண்டித்துப் பேசினர். 1782-ஆம் வருஷம் மார்ச்சுமாதம் லார்டு நார்த் நீக்கப்பட்டு அவருடைய ஸ்தானத்தில் மார்க்விஸ்-ஆப் ராக்கிங்ஹாம் நியமிக்கப்பட்டார். உடனே ஷெரிடன் அண்டர் செக்ரிடரிகளுள் ஒருவராக நியமிக்கப்பட்டார். இந்தப் பதவியில் இவர் நான்கு மாதகாலமிருந்து வந்தார். ராக்கிங்ஹாம் இறந்துபோகவே இரண்டு கட்சிகள் உண்டாயின. லார்டு ஷெல்போர்ன் பிரதம மந்திரியாக நியமிக்கப்பட்டார். பாக்ஸ் (Fox), பர்க் முதலானவர்கள் தங்கள் ஸ்தானத்தை ராஜீனாமா செய்துவிட்டார்கள். இதுவே ஷெரிடன் தம்முடைய அண்டர் செக்ரிடரி வேலையைவிட்டு விடுவதற்கு முக்கிய காரணமாயிற்று. இருந்தபோதிலும் கவர்ன்மெண்டு ட்ரஷரிக்கு அவரைச் செக்ரிடரியாக நியமித்தார்கள். மிஸ்டர் பாக்ஸ் "ஈஸ்டு இந்தியா மசோதா" வைக் கொண்டு வரவே இந்தவேலையும் ஷெரிடனுக்கு நிலைப்பதாயில்லை. பாக்ஸ் கொண்டுவந்த மசோதா, காமன்ஸ் சபையாரால் அங்கீகரிக்கப்பட்ட போதிலும், லார்ட்ஸ் சபையார் அதை அங்கீகரிக்காமல் நிராகரித்துவிட்டார்கள். மூன்ருவது ஜியார்ஜ் சக்கரவர்த்தியார் மிஸ்டர் பாக்ஸை வேலையிலிருந்து நீக்கிவிட்டு மிஸ்டர் பிட்டை (Pitt) பிரதம மந்திரியாக நியமித்துக்கொண்டார். ஷெரிடன் 1780-ம் வருஷம் முதல் 1787-ம் வருஷம் வரையில் பார்லிமெண்டு மெம்பராயிருந்தார். இந்த ஏழு வருஷகாலத்தில் அவர் பார்லிமெண்டில் எத்தனையோ விஷயங்களைப்பற்றிப் பேசியிருந்தபோதிலும், அவருடைய நாவன்மையையும், பேசும் ஆற்றலையும், ராஜதந்திர தேர்ச்சியையும் விளக்கிய பேச்சு ஒன்றுதான். அது யாதெனின்; இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனராலாயிருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் என்பவர் மீது கொண்டுவரப்பட்ட குற்றம் சம்பந்தமாகப் பேசியதுதான். மிஸ்டர் பாக்ஸுக்கு உதவியாக ஷெரிடன் பேசினர். சுமார் நான்குநாள் அவுட் (Oudh) தேசத்து பீகம் விஷயமாக ஷெரிடன் வாதித்தார். அச்சமயம் இவர்பேசிய மாதிரியைப் பார்த்து எல்லோரும் பிரமித்துவிட்டார்கள்.

ஷெரிடன் பேசிய சாமர்த்தியத்தை வியந்து இரண்டொரு ராஜதந்திர நிபுணர்கள் வெளியிட்ட அபிப்பிராயத்தை இங்குக் குறிப்பிடுதலே அவருடைய பேச்சு எப்படிப்பட்ட தென்பதை விளக்கும்.

"தாக்ஷிடகமாயும், தருக்க நெறியுடையதாயும், சிரிப்பு வரக்கூடியதாயும், இருந்த ஷெரிடனுடைய பேச்சு எல்லோரையும் ஆச்சரியப்படும்படிச் செய்துவிட்டது. இட்படிப் பேசியவர்கள் இதற்குமுன் இருந்ததாக நூல்கள் மூலமாயும் அறியேன்; கர்ண பரம்பரையாயும் கேட்டதில்லை"—மிஸ்டர் பர்க்.

"நான் இதுவரையில் கேட்டதும், படித்ததும் ஷெரிடனுடைய பேச்சொடு ஒப்பிட்டபடியோனல் அவை சூரியன் முன்பு பனிபோல் மறைந்துபோம்"—மிஸ்டர் பாக்ஸ்.

"ஷெரிடனுடைய பேச்சு, முற்காலத்திலும் தற்காலத்திலும், பேசிய பெரிய பேச்சாளிகளின் பேச்சுக்களை யெல்லாம் கடந்து அப்பாற் சென்றதாகும். மனிதர்களுடைய மனத்தை அடக்கியாளவும், கிளறிவிடவும் ஆற்றலுடைய சக்தியை அவருடைய பேச்சு உடையதாயிருக்கிறது"—மிஸ்டர் பிட்.

ஷெரிடனுடைய தகப்பனர் 1788-ஆம் வருஷம் இறந்து போனர். 1792-ஆம் வருஷத்தில் அவருடைய அருமை மனைவியாகிய லின்லி தம்முடைய 38-வது வயதில் பிரிஸ்டலில் மரணமடைந்தார். அதுமுதல் ஷெரிடனுக்குக் கவலையும் வருத்தமும் அதிகரித்தபடியால் பொதுவிஷயங்களை அவர் அதிகம் கவனிக்கவில்லை. 1816-ஆம் வருஷம் ஜூலைமாதம் ஏழாம்தேதி இந்த மேதாவி, இம்மண்ணுலகத்தை விட்டு நீங்கினர். இவருடைய நண்பரான லார்டு பைரன் இவருடைய அறிவின் வன்மையை வியந்து கவிபாடி யிருக்கிருரென்ருல், நாம் வேறு என்ன சொல்லவேண்டும்?

நாகை—ஸி—கோபாலகிருஷ்ணன்.



# தேனீ

## THE BEE

இதை அனேகம்பேர் பார்த்திருக்கமாட்டார்கள். ஏனெனில் இது ஸாதாரணமாய் வீட்டில் இருக்கும்படியான பூச்சிகளில் ஒன்றல்ல. இது ரிஷிகளைப்போல் காட்டில் ஸஞ்சரித்து நந்தவனங்களில் வீடுகட்டிக் கொண்டு புஷ்பங்களின் தேனையுண்டு ஜீவிக்கின்றது. இது பின்னுக்கு வேண்டுமென்று சேர்த்துவைக்கும் தேனையும், விசித்ரமான கூண்டைக் கட்டுவதற்கு வேண்டிய மெழுகையும், மனிதன் திருடனைப்போல் அபகரித்து உபயோகித்துக்கொள்ளுகிருன். தேனை ஒவ்வொருவரும் பார்த்திருக்கலாம். நாவுக்கு அருவருப்பான மருந்துக்கு இனிப்புத் தர வேண்டுமென்று தேனில் குழைத்துச் சாப்பிடுவதுண்டு. தேன் சர்க்கரைப்பாகை ஒத்திருக்கும். தேனின் குணம் வேறுபட்டிருக்கும். சில, கசத்திருக்கும். சில புளிப்புத்தட்டும். இவ்விதமாய் வித்தியாசப்பட்டிருப்பது அந்தந்தக் காலங்களில் கிடைக்கும் வெவ்வேறு புஷ்பங்களினுலேயே. புஷ்பங்களே தேனீக்களுக்கும் ஆதாரமானதாலும் தேன் விலை அதிகமாய் விற்கிறதினுலும் ஐரோப்பா முதலிய நாட்டார், தேன் அதிகமுள்ள புஷ்பங்களைப் பயிரிட்டுத் தமது வீடுகளில் ஆடு மாடு கோழிவளர்ப்பதுபோல் தேனீக்களை வளர்த்து லாபமடைகிருர்கள். நாம் வேலியிலாவது மலையிலாவது தேன்கூண்டைக் கண்டால் புகைச்சல்போட்டு ஈக்களை விரட்டி கூண்டை எடுத்துவந்து தேனைப் பிழிந்து கொள்ளுகிரோம். ஈக்கள் ஏமாந்து கூண்டை இழந்து வேறு இடங்களுக்குப் போகின்றன. ஐரோப்பியர் முதலியவர்கள் ஷ ஈக்களின் குணகுணங்களை நன்ருய்க் கவனித்து இக்கூடுகளை சேதப் படுத்தாமல் எடுத்து, அதற்கென்றே வைத்திருக்கும் பெட்டிகளில் நாஸூக்காய்வைத்துப் பெட்டிக்குள் அமைத்திருக்கும் ஸூத்ரத்தினுல் கூண்டின் ஒரு அறையாவது பின்னப்படாமல் 'தோலிருக்கச் சுளைமுழுங்கி' என்ருற்போல் தேனைமாத்திரம் பிரித்துக்கொள்ளுகிருர்கள்.

தேனீக்களில் அநேக வகைகளுண்டு. சில மலைகளிலேயே இருக்கும். சில புதர்களில் கூடுகட்டிக்கொண்டும் சிலகல்பொந்துகளிலும் பாழ்கிராம குட்டிச்சுவர் மத்தியிலேயும் கூண்டுகட்டும். மலைத்தேனெடுப்பதற்கு குறவர் முதலியவர்களே தகுந்தவர்கள். செங்குத்தான பாறைகளிலுள்ள, மனிதர்கள் ஏறக்கூடாத இடங்களில், கட்டிய கூண்டை அவர்கள் சில காட்டுக்கொடிகளை அங்கங்கே விட்டு முடிச்சுப்போட்டு அப்பாறைக் குறுக்கே விட்டு அவற்றின் மூலமாய் ஏறிப் புகைச்சல்போட்டு ஈக்களைத் துரத்தித் தேனெடுப்பார்கள். இது மிக கஷ்டமானதும் பிராணபாயமுண்டாக்கத் தக்கதுமான உத்யோகம். கொடிக்கயிற்றை நம்பியே ஆள் ஏறுவதால் கொடி பிடிப்பவன் ஏறுபவனுக்கு மைத்துனனுகவே ஏற்பாடு செய்வது வழக்கம். அவர்களுக்கு மற்ற உறவினரிடத்தில் நம்பிக்கை இல்லை. தேன் கூண்டுகளில் சுக்லபக்ஷத்தில் இல்லாமல் அமாவாஸை காலங்களிலேயே தேனிருப்பதாக அனுபோகம். ஆடையை வெந்நீரில் காய்ச்சி அதை உருட்டி மஞ்சள் சாயத்தோடு கலந்து சேர்க்கப்படுகிறது. மிருகங்களில் பசுமாடு எப்படியோ பூச்சிகளில் தேனீ ஐரோப்பா முதலிய நாட்டில் வளர்க்கப்படுகின்றது. இதற்கு இரு ஜோடி இறகும் மூன்றுஜோடிக் கால்களும் உண்டு கால்கள் வெவ்வேறுபட்டிருக்கின்றன. இதன் தேகம் மூன்று பிரிவுகளாக இருக்கின்றது. அவையாவன, தலை, மார்பு, வயிறு.

ஸுமார் 200 வருஷங்களுக்கு முன் ஒரு இத்தாலியர் தேன் கூண்டை ஒரு கண்ணுடியில் அமைத்து ஈக்களின் குணகுணங்களைக் கவனித்து எழுதியதுபோலவே அநேகர் கவனித்து எழுதுவதில் பின் குறித்த விஷயங்கள் வெளிப்பட்டன. இவைகளுக்குப் புத்தி விசேஷப்பட்டு இருப்பதாக அனேகர் கவனித்து எழுதி யிருக்கிருர்கள். இவைகளின் இராஜ்யபரிபாலனம் முதலியவற்றைக்கவனிக்க ஆயுஸ்காலம் வெகு கொஞ்சமென்று தெரிகிறது. ஒரு தேன் கூண்டில் சுமார் 20 ஆயிரம் பூச்சிகள் இருக்கின்றனவாம். நாம் 10 பேர் ஒன்று சேர்ந்து ஒருவேலையை நடப்பிக்க யத்தனித்தால் யாதாமொருவன் முன்னின்று இவ்விதமாய் செய்யென்று நடப்பிக்காவிட்டால் தலைக்குத்தலை பெரியதனமாக வேலை முடியாமல் வீண் பேச்சாகவே இருக்கிறது. இப்படியிருக்க ஆயிரக்கணக்கான பூச்சிகள் ஏகோபித்து ஒரு வீட்டில் இருந்து காரியத்தை நடப்பிக்கிறதைப் பார்ப்போம். இவைகளுக்கு ஆலோசனை ஸபையும் பிரதானிகள் ஒத்துவாழ்வதற்கு அவசியமான நிர்ப்பந்தங்கள் சட்டங்கள் முதலியன உண்டு. இவை அனேக வகுப்புகளாகவே இருந்து வெவ்வேறு அலுவல் செய்கின்றன. சில கூட்டங்களாகவே இருக்கும். சில தனித்து வேலை செய்யும். வேறு சில விருந்தாளிகளாக வேலை செய்யாமல் மற்றவர்களிடத்தில் ஜீவனம்செய்யும். தேன்கூண்டு ஒருபட்டணம்போலவும்

அதனுள்ளிருக்கும் ஈக்கள் அப்பட்டணத்து ஜனங் களைப்போலவும் பாவிக்கவேண்டியது. அப்பட்டணத் தாரின் க்ஷேமத்தை நாடி காரியம் எப்படி நடப்பிக்கப் படுகின்றதோ அதுபோலவே கூண்டிலும் நடக்கிறது.

ஒரு கிராமத்தில் குடி இருப்பவர்களுக்குச் சாதாரண மாய் உண்டாகும் சிநேகிதம் சமாதானம் ஒற்றுமை முதலியவற்றுடன் பொறாமை கோபம் சண்டை சச் சரவு முதலியனவும் இன்றியமையாததுபோல் தேனீக் களுக்கும் உண்டு. இக்குணங்களால் ஒருத்தருக்கொரு வர் கெடுதி உண்டாகாதபடி கவர்னர் முதலிய சிப்பந்தி கள் இருப்பதுபோல் தேன் கூண்டிலுமுண்டு. தேன் கூண்டுகளில் ஒருபூச்சி மிகப்பெருத்தும் மற்றவை சிறுத்தும் இருக்கும். பெருத்திருப்பது பெண்ஈ. அது ஒன்றே முட்டையிட்டுக் குடும்பவிருத்தி செய்யத்தக் கது. இதற்குத் தாய் ஈ அல்லது இராணி (Queen) என்று பெயர். அது வெளியில் போவதில்லை. வேறு எந்தவேலையும் செய்வதில்லை. அதனைப் போஷிப்பிக்க அனேக சிப்பந்திகளும் ஏவலாட்களும் காத்துக்கொண் டிருக்கின்றன. ஒவ்வொரு கூண்டிலும் ஆண் ஈக்கள் சிலஉண்டு. இவை வேலைசெய்வதில்லையாகையால் மற் றவைகள் இவைகளைநிந்திக்கும். இவை இராணியுடன் இருந்து காலங்கழிக்கின்றன. இது மற்றப்பூச்சிகளை விட பெரிதாயும் தேகத்தில் மயிர் நிறைந்தும் கொடுக் கில்லாமலும் இருக்கும். இவை புதுக் கூட்டமுண் டானவுடனே ஸாதாரணமாய் வேலையாட்களால் கொல் லப்படுகின்றன. கூண்டிலிருப்பவை அனேகமாய் வேலையாட்களே. அவை தேன், மகரந்தம், பசைமுத லியவற்றைச் சேர்ப்பதுடன் மெழுகையும் உண்டாக்கு கின்றன. அவை வீடுகட்டி குஞ்சுகளைப் பாதுகாத்துப் பகையாளிகள் உள்ளே வராதபடி காவல்செய்யும். இராணிக்கு எவ்வித ஆபத்துவராமல் காப்பாற்றி எதிரி களைக்கொன்று அவற்றின் பிரேதங்கள் கூண்டைத்தீட் டுப் படுத்துகின்றனவென்று அவைகளை வெளியே தள்ளிவிடுகின்றன. இவ்வாறு வெவ்வேறு வேலைகள் ஒவ்வொருவராலும் நடத்தப்பட்டால்யாதொரு ஒழுங்கு மில்லாமல் வேலை தக்கபடி நடப்பதில்லை யென்று ஒவ்வொரு வேலைக்கும் சில ஈக்கள் நியமிக்கப்பட்டு கூண்டுகட்டும் தச்சரும் சாப்பாட்டைச் சேகரிக்கும் குடி களும் பட்டணங்களைக் காப்பாற்றும் சிப்பாய்களும் இராணியினிடம் பணிவிடைசெய்யும் ஏவலாட்களும் உண்டு. இவ்வாறு வேலைசெய்பவர் பேடிகள். அவற் றிற்கு முட்டையிட வாய்ப்பதில்லை. வயிற்றடியில் கொடுக்கு மறைந்திருக்கும். இராணிக்கும் பெரிய கொடுக்குண்டு. அது மற்ற இராணி ஈக்களோடு சண்டையிடும்போது மாத்திரமே தன்கொடுக்கை உப யோகப்படுத்தும். தேனீக்களுக்கு வேலைசெய்யும் கருவி, வாயும் கால்களுமே. வாயானது ஒரு நீண்ட தும் பிக்கை போலிருந்தாலும் வீட்டு ஈக்களுக்கு இருப்பது போலல்ல. வாயில் இரண்டு ஊசிகளைப்போல் இரண்டு தாடையுண்டு. இவற்றின் முனையில் நுண்ணிய மயிர் முளைத்திருக்கும். இதுகளின் மத்தியில் ஊசிகளைவிட அதிகமாகவே நீண்டிருக்கும் நாக்குண்டு. தேன் இத னால் நக்கப்பட்டு முதலில் வயிற்றில் சேர்க்கப்படுகின் றது. இந்த வயிறு நிறைவதும் தேனீ கூண்டுக்குப் போய் தன் வயிற்றில் சேர்த்த தேனைக் கக்கும். ஊசி போன்ற தாடை புஷ்பங்களில் வழிசெய்ய உதவுகிறது. பின்னங்கால்களைக் கவனித்தால் அகன்று ஓரங்களில் சுரசுரத்து இருக்கும். இவை கூடைபோல் உதவி மகரந்தம் கொண்டுவர உதவுகின்றன. ஓர் தேனீ, புஷ் பத்துக்குள் சென்றால் தன் தேகமுழுதும் படிந்த மக ரந்தத்தைக் கால்களால் சேர்த்துப் பின்னங்கால்களி லுள்ள கூடைகளில் சேர்க்கின்றன. சில பூச்சிகள் மஞ்சள் தூசியைக் காலில் கொண்டுபோவது இதுதான். 'ஆயிரம்பேர் கூடி அழகான மண்டபம் கட்ட, ஒருவன் கண்பட உடைந்ததாம் மண்டபம்' என்று சொல்லப் பட்ட சிறுவர்களின் விடுகதையாகிய தேன்கூண்டு எவ்வாறு கட்டப்படுகிறது என்று பார்ப்போம். பூவ ரசு, தேன்புஷ்பம் முதலிய மரங்களிலும் மற்றச் செடி களிலுமிருந்து வரும் தேனீக்கள் மேற்படி செடிபுஷ் பத்தின் அடியிலிருக்கும் ஒருவித பசையை வாயில் கொண்டுவந்து கூண்டிலுள்ள தச்சர்க்குக் கொடுக்க அவை சந்துபொந்துக்களை அடைத்து ஒவ்வொரு குழிக்கு ஒரேவாசல் இருக்கும்படி கட்டுகின்றன. தேன் கூண்டு ஒரேவிதமான அனேககுழிகள் விசித்ரமாய் கட்டப்பட்டிருக்கிறது. இப்பசையால் குழியின் உட் புறமெல்லாம் பூசப்படுகின்றது. பின்னும் யாதா மொரு பூச்சி இறந்துவிடுமானால் அதன் பிரேதம் அழுகி நாற்றமாகாதபடி இப்பசையை மேல் பூசி வைப் பது வழக்கம். இன்னும் கூண்டின் பக்கத்தில் நத்தை முதலியன இறந்துவிட்டால் ஓட்டைவிட்டு அதன் வழியை மாத்திரம் அடைக்கும். இவ்வாறு தன் கூண்டைச் சுத்தமாய்வைத்துகொண்டிருக்கும். மெழுகு என்னமாய் உண்டாகிறதென்பதை விசாரிக்கலாம். தே னீக்கள் மஞ்சள் மகரந்தத்தைக் காலில் உருட்டிப்போ வது மெழுகு செய்வதற்கென்றே அனேகர் கொண்ட எண்ணம் பிசகு. கூண்டின் அறைகளைக் கட்டுவதற்கு இவைகளின் கூண்டின் கூரையிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாகத் தொங்கும் தேனீக்களின் காலின்முனை

கொக்கிபோலிருப்பதால் அவைகள் சங்கிலிபோல் கோத்துத் தொங்க ஸாத்யமாகும். முதல் ஒரு ஈ முன்னங்கால் கொண்டு கூரையில் ஒட்டித்தொங்கும், மற்றொரு ஈ அதின் பின்னங்காலைத் தன் முன்னங்காலால் பிடித்துத்தொங்கி இவ்வாறே நீண்ட ஸரமாகும். இம்மாதிரி 24-மணிநேரம் தொங்கும் அவைகளின் வயிற்றிலிருந்து மெழுகு உண்டாகிறது. கட்டடக்காராகிய தச்சர் மெழுகு உண்டானவுடனே எடுத்துப்போய் கூண்டைக் கட்டிக்கொள்ளும். 1-வீசை மெழுகுண்டாக்க 2-வீசை தேன் செலவழிக்க வேண்டியிருக்கிறது. இவ்வாறு உண்டாகும் மெழுகு மிக அருமையாகையால் கூடியவரையிலும் எவ்வளவுக்குச் சிக்கனமாக உபயோகிக்கலாமோ அவ்வளவே கூண்டுகளில் உபயோகப்படுகின்றது.

இப்போது அவைகளின் புத்திசாலித்தனத்தைச் சிறிது கவனிப்போம். தேன்கூண்டு அனேக அறைகள் உருட்சியாய் இல்லாமல் ஆறு பக்கங்களுடையதாய் இருப்பதே மெழுகை வெகு கொஞ்சமாக உபயோகிக்கும் வழி. உருட்சியாய் இருந்தால் ஒன்றுக்கொன்று சந்துவிடும். அதனால் மெழுகு அதிகமாய் சேதப்படும். பின்னும் 4-பக்கங்கள் கொண்டு கட்டும் அறைகள் 6-பக்கங்கள் உள்ள அறைகளைப்போல அவ்வளவு பலமல்லவென்பதைக் கட்டடவேலைக்காரராகிய இஞ்ஜினியர்க்குக் கண்டிதமாய்த் தெரிந்த விஷயம். கூண்டு கட்டுவது கூரையிலிருந்து கீழ்நோக்கி நடக்கும் இரண்டு வீதியில் அகப்பட்ட இரண்டு வரிசை வீடுகளும் புறக்கடையில் ஒன்றுடன் ஒன்று கலப்பது போல் கூண்டின் இருபக்கமும் அறைகள் ஏற்பட்டு நடுவில் இருக்கும் இடத்தை சாத்தியமாகும் வரையில் உபயோகிக்கும் வழியாகத் தேனீக்கள் காலதாமதப்படாமல் வெகு சீக்கிரம் கூடுகட்டும். இந்த அறைகள் மூன்றுவித அளவாய்க் கட்டப்படுகின்றன. சிறியவை வேலை செய்பவர்களுக்கும், மத்திய அளவுள்ளவை ஆண்மக்களுக்கும், பெரிய அறை இராணிகளுக்குமே. வேலைக்காரருக்கோ அனேக அறைகளுண்டு. இராணி ஈயினுடைய அறை மாளிகை என்று ஆங்கிலேய பாஷையில் சொல்லப்படும். இவை சாதாரணமாய் 10, 20-உண்டு. இராணியம்மா இவ்வறைகளில் ஒவ்வொருமுட்டை இட்டு கூண்டின் வாயைக்கெட்டியாக மூடும். இவ்வேலையில் அனேக வேலைக்காரர்கள் உதவிசெய்வார்கள். தப்பிதமாய் ஒரு அறையில் இரண்டுமுட்டைக்கு அதிகமிட்டிருந்தாலோ வேலையாள்கள் அதிகமான முட்டைகளை நீக்கிக் கெடுத்துவிடுகின்றன. அறைகள் எவ்வளவு சீக்கிரம் செய்யப்படுகின்றனவோ அவ்வளவு விரைவாகவே முட்டை குளிர்க்காலம் முதல் மழைக்காலம் வரையில் ஒருநாளைக்கு 200-முட்டை விழுக்காடு ஒரு மாதத்திற்கு 6000-முட்டையிடும். முட்டை யிட்டவுடனே தாதிமார் (வேலை செய்யும்படியான ஈக்கள்) அம்முட்டைகளைத் தங்கள் ஆதீனத்தில் எடுத்துக்கொள்ளுகின்றன. சிறிய ஈக்கள் மெழுகு செய்வதாயும் பெரியவை தேனை சேர்ப்பதாகவும் சொல்லப்படுகின்றன. இப்போது தாதிமார்கள் அடிக்கடி வந்து ஆகாரம் ஊட்டும். இச்சமயத்தில் மகரந்தம் தீனியாக உதவுகிறது. 5-நாளில் புழுவளர்ச்சி முடிகிறது. பின்பு தீனி தின்னாமல் அறைக்குள்ளேயே இருந்து தன்னைச்சுற்றிலும் ஒரு கூண்டு பின்னிக்கொள்ளும். தாதிப் பூச்சிகள் கடைசியாக வந்து அறைகளின் வாயை மெழுகால் மூடிவிடும். 8-நாள்சென்றபின்பு உருவம்மாறி இறகுடன் வெளிவரும் ஸமயத்தில் தாதி பூச்சிகள் அதை நக்கித் தாஜாப்படுத்தி கொஞ்சம் தேனைக்கொடுக்கும். வெளியே வந்த 24-மணி நேரத்தில் மற்றவைகளோடு வேலைசெய்யச் சேர்ந்துவிடும். இவ்வாறு முட்டை, வேலைசெய்யும் ஈயாவதற்கு 20-நாளும், ஆண் ஈ ஆவதற்கு 24-நாளும் கொள்ளும். இராணி ஈ உண்டாவது சற்று வேறுபடுகிறது. மாளிகை அறைகளில் முட்டை இடும் புழு வளர அறைகளும் அகலப்படுகின்றன. ஸாதாரணப் புழுக்களுக்கு ஊட்டும் மகரந்தம் தீனியைவிட மேலான தீனி, அரசு பூச்சிகளுக்குக் கொடுக்கப்படுகின்றது. இராணியே கூண்டுக்கு அவசியமாதலால் அது இறந்துவிட வேறு குஞ்சுகளைக் கொண்டுவந்து மாளிகையில் வைத்து அதற்குக் கொடுக்கும்படியான தீனியைக்கொடுக்க அது இராணியாகிறது. இராணி உண்டாக 13-நாள் செல்லும். இவ்வாறுவிருத்தியாவதால் தினம் 100-புது ஈ கூண்டுக்குச் சேரும். புது இராணி வளர்வது பழைய இராணிக்கு மிகப்பொறாமை. ஆகையால் சிறு இராணியைக் கொல்ல யத்தனிக்கிறது. ஆனால் வேலையாட்கள் சிறு இராணியைக் காப்பாற்ற முயல்கின்றன. அவ்வாறு சிறு இராணி காப்பாற்றப்பட்டால் கிழ இராணி தன் ஸ்னேகிதரை அழைத்து, தான் மாளிகைக்கு வெளியே போக எண்ணங்கொண்ட விஷயத்தைத் தெரிவிக்கின்றது. இச்சமயத்தில் கூண்டில் ஒருபெரிய கலவரமுண்டாய் ஈக்கள் பித்துப்பிடித்தாற்போல் இங்குமங்கும் ஓடித்திரியும். கிழ இராணி கண்ட இடத்தில் முட்டை இடுவதுடன், வெளிவரும் இளம் ஈக்களைக் கொல்ல எத்தனிக்கும். ஆனால் சிப்பந்திகள் வெகு ஜாக்கிரதையாய் சிறு பூச்சிகளை காப்பாற்றும். உடனே இராணி வெளியேறும். அதனோடு அனேக ஈக்கள் போய் ஒரு கூட்டமாகி யாதாமொரு கிளையில் சேரும். மறுபடியும் சாந்தமடையும். இச்சமயத்தில் பிடித்துக்கொள்ளலாம். ஈக்கள் 2-அல்லது 3-வருஷம் சாகாமல் உழல்கின்றன. ஒவ்வொரு கூண்டும் 12-அல்லது 20-ராத்தல் தேன் ஒரு வருஷத்தில் தருகின்றது. ஈக்கள் 9-மைல் தூரத்துக்குள்ளே போய் தேனைச் சேர்க்கின்றன. சில வேளைகளில் 4-அல்லது 5-மைல் தூரம் செல்வதுமுண்டு. ஒரு நிமிஷத்திற்கு இரண்டுமைல் தூரம் போவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

ஜி. ராஜகோபால் நாயுடு.

## எழுத்து ஞானமில்லாத சிறுவர்க்கு போதிக்கும் வழி *

## METHOD OF IMPARTING INSTRUCTION TO ELEMENTARY PUPILS

பாஷை.—தப்பில்லாமலும் மரியாதையாயும் ஒருவர் மனதிலிருக்கும் எண்ணங்களை, அருகிலும் தூரத்திலுமிருக்கிற மற்றவர்களுக்கு, அல்லது லிகித ரூபமாய் வெளிப்படுத்துவதும்; அதே மாதிரியாகப் பிறர் எண்ணங்களை நாம் தெரிந்துகொள்வதற்கும்; முன்னோரின் புத்திசாதுரியத்தால் கண்டு பிடிக்கப்பட்ட யுக்திகளையும், பரிசீலனுபலிதங்களையும் என்று மறவாமலிருக்கும்படிக்கு ஓலை, அச்சுமூலமாய்க் காப்பாற்றி வைப்பதற்கும் பாஷை அத்தியாவசியம். ஆகையினால் வாசா பாஷை முதல் முதலில் விருத்திசெய்ய வேண்டும்.

4,5 வயதுள்ளவர்களில் அனேகர் பாடசாலைக்கு வரும்பொழுது பேசும் திறமை அற்றவர்களல்லவா? அவர்களுக்கு அ, ஆ, இ, ஈ, என்றும் அல்லது ஹரி, நாரா வென்றும் அர்த்த ஞானமில்லாமல் வாயால் சொல்லிக்கொண்டு பல தடவைகளில் எழுதும்படிச் சொல்லுவதில் பயனென்ன? அவர்கள் பேசும் திறமையை விருத்திசெய்ய இதுதானா வழி? அபிருசி உண்டாக்கக்கூடிய கட்டுக்கதை, சரித்திரக் கதைகளினின்று சிறு கதைகளைச் சொல்லி சொல்லும்படி செய்தால் பாஷையின் அனேக பதங்களைக்கற்க எவ்வளவு சுலபம். அவர்களுக்கும் அ, ஆ என்று எழுதுவதைவிட எவ்வளவு மனோரம்மியமாய் இருக்கும். அக்கதைகளை அவர்களையே நடித்துக் காண்பிக்கும்படிச் செய்தால் இன்னும் எவ்வளவு மனோரஞ்சகமாக விருக்கும். அல்லது, இராமாயண படங்கள் எத்தனை கோவில் களில் எழுதப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பார்த்து வயது சென்ற எழுத்தறியாதவர்கள் கூட இராமாயணம் தெரிந்துகொள்ள வில்லையா? அப்படியிருக்க என் சித்திரங்களினின்றும் கதைகளைச் சொல்லக் கூடாது? அதாவது, விவாத நஷ்டம் என்பதைத் தெளிவாக்கப் போடப்பட்டிருக்கும் படத்தைக் காண்பித்து அக்கதையை வாசிக்கும்படிச் செய்வதரிதா? அல்லது பொருள்பாடம்போல் பொருளையே பாலர் கையிற் கொடுத்து ஆராய்ச்சி செய்யும்படிச் செய்து, கண்டுபிடித்த விஷயங்களை வாசா வெளிப்படுத்தும்படி செய்யக் கூடாதா? அல்லது ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றித் தான் பாலர்களோடு பேசிப் பின் அதே ரீதியாய்த் தங்கள் சொந்த வார்த்தைகளில் தமக்குத் தாமே பேசிக்கொள்ளும்படி செய்யக்கூடாதா? இந்தக் கதைகளையே பாட்டு ரூபமாய் அபிநயசகிதமாய் ஆட்ட தாளத்துடன் அருத்தமாகும் தெளிவு நடையில் பாடும்படிச் செய்யக் கூடாதா? இவர்களுக்குக் குருட்டுப்பாடமாய் 'அறஞ் செயவிரும்பு' என்று சொல்லிக்கொடுத்து "அஞ்சயவிம்பு" என்று சொல்லும்படிச் செய்வதனால் பயனென்ன? கதைகளிலும், பாட்டுக்களிலும் வரும் பொருள்களைக் கையில் கொடுத்து அவைகளைப்போல் மண்ணினால் செய்யும்படி செய்தால் நாளாவட்டத்தில் எழுத்து வேலைக்கும் இதரவேலைகளுக்கும் கை திரும்பாதா?

இத்துடன் அப்பொருள்களைப் போல் சித்திரம் வரையும்படிச் செய்வது எவ்வளவு நலம்.

இவர்களுக்குச் சொல்லும் கதைகளைக் கொண்டே "கந்தையானாலும் கசக்கிக்கட்டு, அதிகாலையில் எழுந்திரு, கூழானாலும் குளித்துக்குடி, அதிக ஆசை அதிக நஷ்டம், விவாத நஷ்டம், பலநாளைத்திருடன் ஒருநாள் அகப்படுவான்," என்பனபோன்ற சுகாதார வழிகளையும், நீதி மார்க்கங்களையும் கற்பித்து, பொது அறிவு விருத்தி செய்யக்கூடாதா? அவர்களை, தபாலாபீஸ், தந்தி ஆபீஸ், சாவடி, சத்திரம், கோவில், உலைக்களம், ஆறு, செக்கு, கரும்பாலை,நீலச்சரக்குசெய்யுந் தொட்டி, ஆட்டுமந்தை, கடை முதலானவைகள் இருக்கு மிடங்களுக்கு அழைத்துக்கொண்டுபோய் ஆராயவேண்டிய விஷயங்களை ஆராயும்படி செய்து பொதுஅறிவு அல்லது பிரபஞ்ச ஞானத்தை விருத்திசெய்யக் கூடாதா? அதுவுமன்றி என் குருட்டுப்பாடமாய்

இரண்டு பழம் எடு என்றால் எடுக்கத் தெரியாதவனுக்கு 1, 2, 3, 4-என்று 20-வரையில் கீழுக்கும் மேலுக்கும் எண்ணுவதற்கும் எழுதுவதற்கும் கற்பிப்பது? பாலர்கள் புத்தியில்லாதவும் மூளை யில்லாதவும் ஆன கிராமபோன்போன்ற இயந்திரங்களோ?

கணிதத்தின் உபயோக மென்னவென்று ஆராய்ந்தீர்களா? முக்கியமாய் வியாபாரத்திற்கே யென்று ஏற்படவில்லையா? அப்படியிருக்க வியாபாரமூலமாய்க் கணக்குகளைப் போதிப்பதைவிட்டு என் எண்களோடும், மனோபாடத்தோடும் பிராஹ்மணர்கள் சந்தை சொல்வதுபோல் சண்டைபோடுவது? உதாரணம்-9, 8 என்னும் எண்களைக் கூட்டினால் என்ன, கழித்தால் என்ன,

* இது சிதம்பரம் உபாத்திமைச் சங்கத்து மீட்டிங்கில் டி ரேஞ்சு ஸப் அஸிஸ்டெண்டவர்களால் உபந்யஸிக்கப்பட்டது.

பெருக்கினல் என்ன, வகுத்தால் என்ன, பாலர்களுக்கு என்ன பிரயோசனம். அந்த எண்களினல் கசரத்து அல்லது குஸ்தி பழக்கினல் என்ன. இச்சமயத்தில் கூட்டவேண்டும், அல்லது கழிக்கவேண்டும், அல்லது பெருக்கவேண்டும், அல்லது வகுக்கவேண்டும் என்று மனத்துக்கு அருமல் மனேபாடம் செய்வதின் பயனென்ன? ஒருவன் ஒரு ஆடு வாங்கினன். மறுநாள் இன்னெரு ஆடு வாங்கினன். ஆதலால் இரண்டு ஆடுகள் ஆயின. அவைகளில் ஒன்று சிலநாள் காணமல் போயிருந்தது. அப்பொழுது வீட்டில் ஒரே ஆடிருக்க, தெய்வாதீனமாய்க் கெட்டுப்போன ஆடு வந்து சேர, இரண்டாயின. சில நாட்களுக்குப்பின் அவைகளில் ஒன்று சினையாயிருந்து ஒரு குட்டிபோட மூன்ருயின. கொஞ்சகாலம் கழிந்ததும் கடா ஆட்டை விற்றுவிட வீட்டில் பெட்டை ஆடும் குட்டியுமாக இரண்டேயிருக்க சிறிது நாட்களுக்குப் பிறகு வீட்டுக்காரன் இன்னெரு சினை ஆடு வாங்க வீட்டில் மூன்ருயின. அவைகளைச் சம்ரட்சணை செய்ய வீட்டிலிருக்கும் தாய், தகப்பன், பிள்ளை என்ற மூவரும் முறையே ஒவ்வொரு ஆட்டின் பொறுப்பை எடுத்துக்கொண்டார்கள். இப்படியாக, கதாரூபமாகவாவது அல்லது ஒரு சிறு கடையைப்போல் வகுப்பை மாற்றி ஒருவனை அல்லது தானே கடைக்காரனுகவும் மற்றவர்களை வாங்குபவர்களாகவும் நியமனம் செய்துகொண்டு பலப்பம், பட்டாணி, பெப்பர்மிண்டு பழங்கள் முதலானவைகளுக்குப் பதிலாய் களிமண்ணினல் செய்தவைகளையோ எவைகளையோ கடைபோல அலங்காரம் செய்து வைத்துக்கொண்டு அட்டை நாணயங்களைப் பங்கிட்டுக்கொடுத்து வாங்குதல் விற்றல்என்னும் முறையை அனுசரித்து ஒன்று முதல் 20 வரையில் உள்ள எண்களை எழுதக் கற்பிக்காமல் எவ்வளவு கணக்குகளைச் சொல்லிக் கொடுக்கக் கூடாது? எத்தனை பேர்கள் வயது முதிர்ந்தாலும் கணக்கு (எழுத்து மூலமாய்ப் போடத் தெரியாவிட்டாலும்) பெருத்த வியாபாரங்கள் செய்யவில்லை. எத்தனை பெண்பிள்ளைகள் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் புளி, மிளகாய்,மொச்சைக்கொட்டை,உப்பு,எண்ணெய், நெய், கிழங்கு, கறிகாய் முதலானவைகளைப் பேரம் செய்யவில்லை. இவர்களுக்குக் கணிதம் கற்பித்த குரு யார்? குருவில்லாமல் இவர்களுக்கு எப்படித் தெரிந்தது? சற்று ஆலோசித்தால் அநுபவம் என்று அறியலாம். இன்னும் என் பள்ளிக்கூடத்திலிருக்கும் பிள்ளையை விட பள்ளியில் வாசிக்காத பிள்ளை பேரத்தில் சாமர்த்தியன்? பள்ளிக்கூடத்தில் வைப்பது, பள்ளிக்கூடம் கணக்கு வேருகவும் வியவகாரத்திற்கு உபயோகிக்காமலு மிருக்கவா? இது ஏட்டுச்சுரக்காய் என்றது போல் இல்லையா? ஆதலின் அநுபவம் என்பதை நன்ருய்க் கவனியுங்கள். பாலர் அனுபவிக்கவேண்டும். அல்லது, இதோ சில பழங்கள் கொண்டுவந்திருக்கிறேன். இப்பொழுது உங்களுக்குப் பங்கிடுகிறேன் என்று சொல்லி நாம் எந்த எண்ணைக் கற்பிக்க உத்தேசித்திருக்கிருேமோ அதற்குத் தக்கபடி தின் பண்டத்தையோ எதாவது கொண்டுவந்து ஒவ்வொன்ருகவும், இரண்டாகவும், மூன்ருகவும், நான்காகவும் பங்கிட்டு எத்தனை பேருக்குக் கொடுத்தேன். எத்தனை வீதம் கொடுத்தேன். ஆகையினல் எவ்வளவு கொண்டுவந்தேன் என்று பிரத்தியட்ச ரீதியாய் என் சொல்லிப் பாலர் தங்கள் சுய அனுபவத்தால் கற்றுக்கொள்ளும்படி செய்யாமல் குருட்டுப்பாடமாய் எண்கால் மூன்று என்று சொன்னலும் நம்பி குருவுக்குப் பயந்து அதையே மனேபாடம் பண்ணும்படி செய்வது? ஒருவன் சொல்வதை நம்பிச் செய்வதைவிட தான் அனுபவத்தால் தெரிந்து கொள்வது சிரேஷ்டம் என்று இன்னும் தெரியவில்லையா? தெரிந்திருந்தால் என் எல்லா வாய்ப்பாடுகளையும் குருட்டுவழியாய்மனேபாடம்செய்து வைக்கிறீர்கள். பிள்ளைகளை உங்களிடம் ஒப்பித்தது மந்திகளாக்கவோ? பாலர்கள் கிராமபோன்களல்லவே! மூளையுள்ளவர்களாச்சுதே? நாகரீக மில்லாதவர்களும், நம்பிக்கையே பிரதானமாயுள்ளவர்களும் ஆகிய அனேக குடிகள் இன்னமுஞ் சரியான விலைக்கு நமக்குச் சரக்குகளைக்கொடுக்க இஷ்டமில்லாமல் கோமுட்டிகளுக்குத் தங்கள் வீட்டுச் சரக்குகளை ஈனகிரயத்திற்குக் கொடுத்தும் திருப்தியாய்ப் போகிருர்களே! அவர்கள் என் இப்படி மோசம் போவது. சரியான அனுபவமில்லாததால் என்பது ஸ்திரமாகவில்லையா? ஆகையினல் மூட நம்பிக்கையைவிட அனுபவம் சிரேஷ்டமல்லவா? குடிகள் வீட்டில்கூட காசு கொடுத்தும் அல்லது தானியம் கொடுத்தும் கறிகாய்கள், ஊசி,பழங்கள் முதலானவைகள் வாங்கவில்லையா? அந்தப் பேரங்களைச் சிறுவர்கள் பார்க்கவில்லையா? அப்படியிருக்க என் தம்பிடி, காலணு, அரையணு, ஓரணு, அரைக்கால்ரூபா, கால்ரூபா, அரைரூபா என்பவைகளையும், தூக்கு, அரைத்தூக்கு, கால்தூக்கு, ஒருகை, இருகை என்பவற்றையும், ஒருசாண், ஒருமுழம் என்பனவற்றையும், இன்றைக்கு ஞாயிறு அல்லது திங்கள் என்னும் வாரத்தின் நாட்களின் பெயர்களையும், பாதிபங்கு, நாலில் ஒரு

பங்கு என்பதையும் பாலர்கள் மூன்றாவது நான்காவது வகுப்புகளுக்குவருகிறவரையில் சொல்லாமல்மறைத்து வைக்கிறீர்கள்.

அந்த மேல் வகுப்புகளுக்கு வந்தபின் நீங்கள் சொல் லிக்கொடுக்க என்ன இருக்கிறது. இதற்குள்ளாகவே வீட்டிலும் வெளியிலும் நடக்கும் விஷயங்களின் அனு பவத்தால் மேற்கண்டவைகளின் பாவத்தையும், லாப நஷ்டம் என்னும் சங்கதிகளையும் இன்னும் அனேக வியாபார விஷயங்களையும், அறிகிறார்களே? ஒரு எண் ணின் பூர்ண ஞானத்தைக் கற்பிப்பதற்குமுன் ஏன் அடுத்த எண்ணைக் கற்பிக்கிறீர்கள். இரண்டு என்னும் பொழுது ஒரு பழத்தொடு இன்னொன்று சேர்ந்தால் இரண்டாகும். இரண்டில் ஒன்று சாப்பிட்டால் ஒன் றிருக்கும். தடவைக்கு ஒன்றுவீதம் எடுத்தால் இரண்டு தடவைக்கு இரண்டெடுக்கலாம். இரண்டுபேர் பங்கிட் டுக்கொண்டால் ஆளுக்கு ஒன்றுவரும். இரண்டில் பாதி ஒன்று என்றும், இரண்டுகாசு, இரண்டுபடி, இரண்டுதூக்கு, இரண்டுசாண், இரண்டுமுழம், காசு ஒன்றுக்கு ஒருபழம் வீதம் இரண்டு காசுக்கு இரண்டு பழம் என்றும், ஒரு காசுக்கு இரண்டுபழம் வாங்கிப் பழம் ஒரு காசுவீதம் விற்றால் ஒருகாசு லாபம் என்றும், இரண்டு காசுக்கு வாங்கி நாள் சென்றதனால் பழம் கெட்டுப்போக ஒரு காசுக்கே இரண்டையும் விற்றால் ஒருகாசு நஷ்டம் என்றும் அனுபவ ரீதியாய்க் கற்பிப்ப தற்கு முன் 3-என்னும் எண்ணைக் கற்பிக்க ஏன் முயலுகிறீர்கள்.

மேற்கண்ட முறைப்படி எழுதவும் படிக்கவும் சக்தி யுண்டாகாத 4,5-வயதுள்ள சிறுவர்களுக்குக் கதை ரூபமாயும், கடை ரூபமாயும், பாட்டு ரூபமாயும் ஒன்று முதல் 10-வரையில் சொன்னால் போதாதா? இதற்குள்

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 111111111 | 2222 | 33 | 4 | 5 |
| 111111111 | 2222 | 33 | 4 | 5 |
| 11111111 | 222 | 3 | – | — |
| 1111111 | 22 | — | 8 | 10 |
| 111111 | 2 | 69 | – | — |
| 11111 | 46810 | — | | |
| 1111 | | | | |
| 111 | | | | |
| 11 | | | | |
| 1 | | | | |
| 2345678910 | | | | |

இரண்டு 1 இரண்டு
மூன்று 1 மூன்று
10 1 10

என்றும், $2 \times 2 = 4$; $3 \times 2 = 6$; $4 \times 2 = 8$; $5 \times 2 = 10$; $2 \times 3 = 6$; $3 \times 3 = 9$; $2 \times 4 = 8$; $2 \times 5 = 10$; என்றும், இரண்டில்பாதி 1, மூன்றில்பாதி ஒன் றும் இன்னொன்றில் பாதியும், 4-ல் பாதி 2, 5-ல் பாதி இரண்டும் மற்றொன்றில் பாதியும், இப்படிக்கே 10-ல் பாதி 5-என்றும்,

ஈரரை ஒன்று, மூவரை ஒன்றரை, நாலரை இரண்டு, ஐந்தரை இரண்டும் அரையும், 6-அரை 3, ஏழரை மூன்றும் அரையும், 8-அரை 4, 9-அரை நான்கும் அரையும், 10-அரை 5-என்றும், அனுபவ ரீதியாய்ப் பழங்களை அறுத்துக் காண்பித்து இரண்டு அரை சேர்ந் தால் ஒரு பழம் என்றும் விளக்கிக்காட்டி பாலர் தமக் குத் தாமே வாய்ப்பாடுகள் ஏற்படுத்தி மனப்பாடம் செய் யும்படி ஏற்பாடு செய்யக்கூடாதா? ஏன் பாட்டுப்பாடி பின் பாட்டுப் பாடுகிறீர்கள், பாடஞ்செய்கிறீர்கள்? சீக்கிரம் குருட்டுவழியை விட்டு அனுபவ ரீதியை அப்பியாசம் செய்யுங்கள்.

மேற்கண்ட கதைகளையே அல்ல கணக்குகளையும், பாட்டுக்களையும், சம்பாஷணைகளையும், ஸதா ஸர்வ காலம் பாடசாலையிலேயே வைத்துக் கற்றுக்கொடுத் தால் மூளைக்கு ஆயாசம் உண்டாகாதா? ஒரே இடத்தி லிருந்து உட்கார்ந்த வண்ணம் கற்றுக்கொள்வதை விட தமாஷாவாய் மேற்கண்ட பாடங்களையே விகாரார்த்தமாய் வெளியிற் சென்றும், பாடசாலைக்கு அருகில் வளர்க்கும் தோட்டத்தில் சென்றும், பராக் காய் அப்பொழுதைக் கப்பொழுது கற்பிக்கக் கூடாதா? கற்பிக்கிறோம் என்கிற சங்கதி தெரியாமலே எத்தனை விஷயங்களைக் கற்றுக்கொள்ளக்கூடும். இதற் கெல்லாம் உபாத்தியாயர்கள், நமக்கு எல்லாம் தெரி யும். நாம் படித்தகாலம் ஆய்விட்டது. இனிப்படித்தா கற்றுக்கொள்ளப் போகிறோம். இத்தனைகாலம் இப் படியாகவா கற்றுக்கொடுத்துக் கொண்டுவந்தார்கள். முன்போல கற்றுக் கொண்டவர்களும் கற்பித்தவர் களும் புத்தியீனர்களா? கவர்ன்மெண்டார் படிப்பைஎன் னமோ கெடுத்து விட்டார்கள். தோட்டவேலை நமக் குத் தெரியாதா? சொல்லிக் கொடுத்தால்தானா வரும். சாப்பிட சொல்லிக்கொடுத்தா வந்தது. இன்னும் இது முதலான விபரீத எண்ணங்களை வைத்துக்கொண்டால் அவர்கள்என்றைக்கும் விருத்திக்குவராமலிருப்பதுடன் அவர்களிடத்தில் படிக்கும் பாலர்களையும் அவர்கள் புத்திர பௌத்திரர்களையும் விருத்தியடைய மாட்டா மல் செய்கிறவர்களாவார்கள். ஆகையினால் இந்த விப ரீத குணங்களைவிட்டுக் காலத்தை யனுசரித்து மூட பக்தியைவிட்டு நிஜபக்தியைத் தெரிந்து அவலம்பித்து அனுபவ ஜன்மஞானம் சிரேஷ்டமென்பதை யறிந்து உபாத்தியாயர் தாம் முன்னுக்கு வருவதுடன் தம் மிடத்தில் ஒப்புக்கொடுக்கப்பட்ட பாலர்களை, கசாப் புக்கடைக்காரன் கையில் ஒப்புக்கொடுத்த ஆடுகளைப் போலன்றி இடையன் கையில் கொடுக்கப்பட்ட ஆடு களைப்போல் போஷித்துவந்து நம்தேயத்தை உன்னத ஸ்திதிக்கு கொண்டுவர மனப்பூர்த்தியாய்ப் பிரயத் தனம் செய்யவேண்டும் என்பது என் உத்தேசம். இப் படிக்கன்றி விபரீத குணங்களையுடைய, உபாத்தியாயன் என்னும் பெயரை வகித்தவர்கள் அந்த உபாத்திமைத் தொழிலுக்கு ஒரு சலாம்செய்து அத்தொழிலை விட் டாலும் தேசம் க்ஷேமத்தை அடையும்.

வி. ஏ. வேங்கடசுப்பய்யா, பி. ஏ. எல். டி.

# மாணவர் பக்கம்

## STUDENTS' PAGES

## வியாஸ விதானம்

## Essay writing

### 1. வர்ணனை வியாஸங்கள்

### DESCRIPTIVE ESSAYS

### 8. ஸம்பவங்கள்—வீடு நெருப்புப்பற்றி எரிதல்

### Events—A house on fire

குறிப்பு.—முகவுரை—வர்ணனை—ஏற்பாடுகளும் பயனும்—காரணங்கள்—முடிவு: பொது அபிப்பிராயங்கள்.

இரவு நிச்சப்தமாக இருந்தது. உலகமே ஓய்ந்து அயர்ந்து செயலற்றுச் சாய்ந்து விட்டதுபோலக்காணப்பட்டது. பகலில், கஷ்டப்படும் தேஹம்போல படபடப்பாக இருந்த ஊரானது இரவில் இவ்வாறு மாறிவிட்டதைக் கண்டு சுற்றும் உள்ள சாந்தத்திற்கு ஈடுபட்டு மெய்ம்மறந்து நான் நின்றுகொண்டிருக்கையில் திடீரென்று 'ஐயோ!' என்ற சப்தம் என் காதில் விழுந்தது. இதென்ன விபரீதம் என்று நான் எண்ணும் முன்னரே, இம்மாதிரியே அநேகர் கூடி, 'ஐயோ தீ! தீ! சீக்கிரம் தண்ணீர் எடுங்கள்! பரவிவிடும்! சீக்கிரம்! சீக்கிரம்!' என்று இட்ட கூக்குரல்கள் அநேகம் கேட்கத் தொடங்கின. இந்தச் சப்தம்கேட்டவிடம் நோக்கி நான் போக யத்தனிப்பதற்குள் எனக்கு எதிரே ஆகாயத்தில் தீப்பற்றி எரியும் வெளிச்சம் தெரிந்தது. 'ஏது காரியம் மிஞ்சிவிட்டது போலிருக்கிறது!' என்று எண்ணி வெறி பிடித்தவன்போல் அவ்விடம் நோக்கி ஓடினேன்.

போய்ப் பார்ப்பேனே! அங்கு எப்படி இருந்ததென்று எண்ணுகிறீர்கள்! செக்கச் சிவேலென்று பிரகாசித்துக்கொண்டிருக்கும் அக்னியின் கொழுந்துகள் ஸுமார் பத்தடி உயரத்தின்மேலுள்ள கீற்றுப் பந்தலின்மேலிருந்து அரைப்பனை உயரம்வரையில் கிளம்பி எரிந்துகொண்டிருந்தன. இந்தநள்ளிரவில் அந்த வர்ணமே மிகுந்தபயத்தை உண்டாக்கியது. இது அநேக நாள்என் ஸ்வப்நத்தைவிட்டு அகலாதுபோலத் தோற்றியது. வரவர சப்தம் அதிகரித்து விட்டது. வந்து கூடிய ஜனங்களிற் பெரும்பாலாரும், 'இதென்ன அநியாயம்!' 'இது யாது காரணத்தால் உண்டாயிருக்கலாம்?' 'தீ வைத்தவன் அகப்பட்டால் நன்றாக உதைக்கலாம்!' 'எரிகிறவீட்டில் பிடுங்கினது லாபமடா' என்று பலவாறாக வீண்பேச்சு பேசிக்கொண்டும் கொடியவர்கள் பின் கூறிய தொழிலை நடத்திக்கொண்டும் இருந்தார்களே ஒழிய, நெருப்பை அணைப்பதற்கு வேண்டிய ஸஹாயம் செய்திலர். மனித ஜன்மம் இப்படியும் இருக்கிறதே என்று பரிதவித்து, ஓடோடியும் வந்து நெருப்பை அணைக்கத் தண்ணீரெடுத்து வரும் சிலரோடு சேர்ந்து கொண்டு, அவர்களுள் ஒருவரை நெருப்பவிக்கும் யந்திரம் இருக்குமிடத்திற்கு அவஸரமாகப் போய் அதைக்கொண்டுவர ஏற்பாடு செய்துவிட்டு, என்னால் கூடியவரையில் தீயை அணைக்கவேண்டிய முயற்சிகள் செய்தேன். எங்கள் முயற்சிகள் வீணாயின. வரவர நெருப்பு அதிகமாகப் பரவத்தொடங்கியது. முடிவில், அருகாமையிலிருந்த ஓட்டுக் கட்டடத்திலும் பிடித்துவிட்டது. கழிக்கோல் வரிச்சல்கள் முதலியவைகள் பிடித்தெரியுங்கால் அவைகளைச் சேர்க்கும் ஆணிகள் படீர் படீர் என்று வெடித்து நாற்புறமும் சிதறிஓட, கிட்டே ஒருவரும் அணுகமுடியாமல் போய் விட்டது. வீட்டிலுள்ளோர் எல்லோரும் வெறிகொண்டவர்கள் போல மற்றவர்களைக்கவனியாது தாம் பிழைத்தாற் போதும் என்று வெளியில் ஓடிவந்து விட்டனர். நெருப்பு இவ்வாறு ஓங்கி எரியுங்கால் நாங்கள் பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதாயிற்றே ஒழிய வேறெதையும் செய்யமுடியாமல் போய்விட்டது. இப்படி இருக்கையில் காற்று சற்று வீசத்தொடங்க எல்லோருக்கும் பயம் அதிகரித்துவிட்டது. கஷ்டகாலத்திற்குக் காற்றும் தீயும் சேர்ந்துவிட்டால் என்ன செய்வது என்ற பயம் வந்துவிட்டது. நல்ல வேளையாக வீடுகளில் இருந்த ஜனங்கள் எல்லோரும் தீ அரவம் தொடங்கும் காலத்திலேயே வெளியே வந்து விட்டதாகக் கேள்விப்பட்டபடியால் உயிர்ச்சேதம் இல்லாதிருக்கும் என்ற எண்ணம் எங்களுக்குச் சற்று திருப்தியைக் கொடுத்தது. இந்த ஸமயத்தில் சில பெண்டுகள் தலைவிரி கோலமாகத் தமது உறவினர்களிற் சிலர் அந்தத்தீயில் அகப்பட்டு இறந்துவிட்டதாக எண்ணி, அலறிக்கொண்டு வந்தனர். எல்லோரும் அவர்களைத் தேற்றிக்கொண்டிருக்கையில், அவர்கள் உறவினர்களே அவர்கள் அழுகைச்சப்தத்தைக்கேட்டுக் கூட்டத்திலிருந்து ஓடிவந்து, அவர்கள் துக்கத்தைத் தீர்த்துத், தாங்கள் தப்பிவந்த விதங்களைப்பற்றி மிகுந்த பரபரப்புடன் கூறிக்கொண்டிருந்தனர் ஒருசாரார். இப்படி இருக்க வரவரக் காற்று அதிகரிப்பதையும் அக்னிக் கொழுந்து எல்லாப் பக்கங்களிலும் அலைபாய்வதையும்

கண்ட 'எல்லோரும் இன்று அக்னிபகவான் காண்டவ வனத்தைத் தீர பக்ஷித்ததுபோல நமது ஊரையே பக்ஷித்து விடுவார்போல இருக்கிறது' என்று கூறி மயங்கினர். 'மனிதன் முயற்சி பகவத் ஸ்ருஷ்டியில் எவ்வளவு சிறியதாக இருக்கிறது' என்று எண்ணி நான் அழுங்கிக் கொண்டிருந்தேன். அப்பொழுது திடீரென்று ஒரு புகைவண்டி கூவுவது போன்ற சப்தம், ஒன்றுகேட்டது. 'வந்துவிட்டது தீயணைக்கும் யந்திரம்!' என்று சப்தம் கேட்டதிக்கை நோக்கி எல்லோரும் திரும்பினர். பகவத்கிருபையால் என் முயற்சி சற்றுப் பயன்படுமோ என்று சங்கித்தது என் உள்ளம்.

அநேக ஆட்களால் இழுக்கப்பட்டு அந்த நீராவி யந்திரம் அங்குவந்து சேர்ந்தது. உடனே அந்த யந்திரக்காரர்கள் அதன் ரெட்டுக் குழாய்களை எல்லாம் அருகிலிருந்த தெருக்கிணற்றில் நீரில் மூழ்கும்படி போட்டுவிட்டு யந்திரத்தை முடுக்கி விட்டனர். அது பக்பக் என்று வெகுவேகமாகக் கிணற்றுத் தண்ணீரை இறைக்கத்தொடங்கியது. ரெட்டுக்குழாய்களின் வெளி நுனியை வேலைக்காரர்கள் நெருப்புப்பற்றி எரியும் வீடுகளை நோக்கிப் பிடித்தனர். இவ்வாறு ஸுமார் 10-க் குழாய்கள் பிடிக்கப்படவே நெருப்பு வரவர அடங்கத் தொடங்கியது. ஒருமணி நேரத்திற்குள் நெருப்பை நன்றாக அணைத்துவிட்டு யந்த்ரம் ஓய்ந்தது. கிணற்று நீரும் ஒழிந்தது. காற்றும் அப்பொழுது மிகவும் அதிகமாகி விட்டது. ஓட்டடுக்குவீட்டுக்காரர் மற்றய அந்தத் தெருவுக்காரர் முதலியோரிடம் இருந்து யந்திரக்காரர்கள் பரிசுபெற்று யந்திரத்தை இருப்பிடம் கொண்டுசேர்த்தனர். கூட்டமும் கலையத்தொடங்கியது.

உயிர்ச் சேதம் ஒன்றும் இல்லை என்று கேள்விப்பட்டிருந்ததும் அதை நன்றாய் உணரும்பொருட்டும், இந்தத்தீ உண்டான காரணம் இன்னது என்பதை விசாரித்தறியும் பொருட்டும், நான் மாத்திரம் அங்குத் தங்கினேன். ஓட்டடுக்கு வீட்டுக்காரர்தான் அந்தத் தெருவில் பெரியவர்போலக் காணப்பட்டது. எல்லோரும் அவரை வந்து லாப நஷ்டங்களைப்பற்றி மிகுந்த பரிவுடன் விசாரித்தனர். அங்கு நடந்த ஸம்பாஷணையால் உயிர்ச்சேதம் ஒன்றும் இல்லை என்பது ஏற்பட்டது. 'தெய்வாதீனம்' என்று மனம் தேறி நான் நின்றுகொண்டிருக்கையில், பிச்சைக்காரிபோன்ற ஒரு கிழவி அலறிப்புடைத்துக்கொண்டு அந்தப்பிரபு காலில் வந்து விழுந்து 'எல்லாம் என்னால் தான் விளைந்தது! இந்த விஷயத்தில் யான்தான் பாபியாகிவிட்டேன்!' என்று லம்பினள். என்ன விஷயம் என்று விசாரித்ததில், 'நான் இந்தக் கோடியிலிருக்கும் என் குடிசையில் சமைத்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது அடுப்பில் கொஞ்சம் எண்ணெயை வைத்துவிட்டு வேறுகாரியமாக இருந்தேன். நாழிகையாகிவிட அடுப்பண்டை வந்து பார்த்தேன். என் கையிலிருந்து ஒரு பொட்டு ஜலம் அந்தக் காய்ந்தஎண்ணெயில் விழுந்தது. உடனே அது பற்றிக்கொண்டது. அதை அணைக்க எவ்வளவு முயன்றும் முடியாமல் போக அது என் கூரையில் பற்றிவிட்டது. அப்பொழுது என்னால் இன்று எவ்வளவு கேடு விளையுமோ என்று எண்ணி 'ஐயோ' என்று கதறினேன். என்ன சொல்லி என்ன! என்னால் இன்று எவ்வளவுபேர் மாண்டார்களோ? எவ்வளவு பொருள் சேதமாகிவிட்டதோ? எல்லாவற்றிற்கும் பஞ்சையாகிய நான் காரணமானேனே!' என்று வெகுவாகப் பிரலாபித்தாள். அதற்குப் பிரபு 'அம்மா! நீ துக்கிப்பதில் என்ன பலன்? நீ வேண்டுமென்றா நெருப்பு வைத்தாய்? உனக்கும் எவ்வளவோ சேதம் ஏற்பட்டிருக்குமே! எங்களுக்கு வந்தால் நாங்கள் மற்றைய ஸொத்துக்களைக்கொண்டு ஜீவிப்போம். நீ என்ன செய்வாய்! அதற்காக உன் குடிசையைக் கட்டிக்கொடுக்க ஏற்பாடு செய்து, நஷ்டமான உன் பொருள்களையும் வாங்கிக் கொடுக்கத் தக்க முயற்சி செய்கிறேன்' என்று மிகுந்த அன்புடன் பதில் உரைத்தார்.

பிரபுவின் நற்குணத்தை மெச்சிக்கொண்டு வீட்டிற்குப் புறப்பட்டேன். போகும்வழியில் 'உலகில் அற்பமான காரணங்களால் எவ்வளவு பெரிய காரியங்கள் நடந்துவிடுகின்றன. அற்பமான அடுப்பில் எரியும்நெருப்பு எண்ணெயில்பற்றிக் குடிசையைச் சாம்பலாக்கி ஸுமார் 10 வீடுகளைக் கொளுத்தி விட்டதே! இவ்வாறு தானே காட்டில் மூங்கிலோடு மூங்கில் உரைந்து உண்டாகும் பொறி காட்டையே எரித்துவிடுகிறது. ஆதலால் கெட்ட விஷயங்களைச் சிறியவை என்று மதித்து அஜாக்ரதையாக இருக்கலாகாது. அவைகளுக்கு இடங்கொடுத்தால் வரவரக் கிளம்பி அதிகரித்து நம்மை முற்றிலும் அவைகள் கெடுத்துவிடும்,' என்று எண்ணமிட்டுக்கொண்டு வீடு வந்தேன். அருணோதயம் ஆயிற்று. இரவு நடந்த விஷயங்கள் என் மனத்தில் மறுநாள் முழுவதும் ஊறிக்கொண்டு மாறி மாறி ஆனந்தத்தையும் பயத்தையும் உண்டாக்கின.

### இம்மாதிரியே விவரிக்கக்கூடிய விஷயங்கள்

| | |
|---|---|
| 1. பூகம்பம் | 6. உத்ஸவங்கள் |
| 2. அதிக மழை | 7. நோன்புகள் |
| 3. வெள்ளம் | 8. மஹாநாடு கூடுவது |
| 4. சூரைக்காற்று | 9. பாட்டுக்கச்சேரி |
| 5. கொள்ளை நோய் | 10. ஊர்கோலம் |
| இவைகளால் உண்டாகும் கஷ்டம். | இவைகளின் வைபவங்கள். |

போதக் குறிப்புக்கள்

இக்குறிப்புக்கள் எல்லா வியாஸ விஷயங்களிலும் விஸ்தரிக்க முடியாமலும் இருக்கலாம்.

1. முகவுரை
2. வர்ணனை
3. ஏற்பாடுகளும், பயனும்
4. காரணங்கள், கதைகள் முதலியன
5. முடிவு. பொது அபிப்பிராயங்கள்

## மொழிபெயர்ப்பு விளக்கம்

## TRANSLATION MODELS

A landscape will lose none of its beauty in your eyes, though you inquire how the rocks of its hills were formed, how ridge and valley came into existence, why a crag should rise in one part and a wide plain stretch away for miles in another. When you stand by the brink of a foaming river, there will be no lessoning of your pleasure in its rush and roar, if you think of the river as one of nature's most powerful engines, busy day and night in digging out its channel in the rocks, and carrying the waste of the mountains down to the plains and to the depths of the ocean. The shores of the sea will wear a new charm, when you trace along their cliffs and caves, the progress of decay, and on their breaches of sand and shingle, the counterpart of those sedimentary deposits out of which whole mountains are built up.

*Gieke's Geology Primer, Page* 149.

குறிப்பு:—How and why (in the indirect) =இப்படி, இன்ன காரணம்.

If and when (conditional)=கால் அல்லது ஆல்.

### 1. சிறுவாக்யரூபமான மொழி பெயர்ப்பு

குன்றுகள் அனேக விதமான பாறைகளால் ஆக்கப்பட்டிருக்கின்றன. மேடுபள்ளங்கள் எவ்விடங்களிலும் இருக்கின்றன. ஒருபுறம் செங்குத்தான பாறைகள் கிளம்பி நிற்க, மற்றொருபுறம் அகன்ற ஸமவெளி பரந்து கிடக்கின்றது. இவைகள் இவ்வாறு அமைவதற்கு இன்ன காரணம் என்று ஆராய்வதால் சுற்றுமுற்றும் உள்ள தோற்றங்கள் அழகில் குறைந்ததாகத் தோற்றமாட்டா. நுரைத்துக்கொண்டு ஓடும் ஆற்றங்கரையில் நிற்குங்கால், அது இரைந்துகொண்டு வேகமாகப் புரண்டு ஓடுவது நமக்கு மிகுந்த ஸந்தோஷம் உண்டாக்கும். இந்த ஆறு, இரவுபகல் இடைவிடாது தான் செல்லும் வழியைப் பாறைகளுக்கு இடையில் பறித்து, மலைகளின் சிதைவை ஸமவெளிகளின் வழியாக ஸமுத்ரத்தின் அடிவாரம் கொண்டுபோய்ச் சேர்க்கும் சக்தியை உடைய ஓர் இயற்கை யந்திரம். இந்த ஆற்றை இவ்வாறு கருதுவதால் முற்கூறிய ஸந்தோஷம் சற்றேனும் குன்றாது. கடற்கரையில் இருக்கும் பாறைகளும் குஹைகளும் சிதைவு இவ்வாறு விருத்தியாகின்றது என்பதைக் குறிப்பிக்கும். கடல் ஓரமாக இருக்கும் மணற்கள் கூழாங்கற்கள் முதலியன வண்டற்படிவால் வளர்மலைகளின் மாறுபாடுகளே. இவைகளின் நிலைகளை இவ்வாறு ஊகித்தறிவதால் கடற்கரையே ஓர் புதிய அழகு பூண்டு விளங்கும்.

### II நேர் மொழி பெயர்ப்பு

குன்றுகளில் காணப்படும் பாறைகள் இவ்வாறு ஆக்கப்பட்டன; மேடுபள்ளங்கள் இவ்வாறு உண்டாயின; ஒருபுறம் செங்குத்தான பாறைகள் கிளம்பிநிற்க, மற்றொரு புறம் அகன்ற ஸமவெளி பரந்து கிடப்பதற்கு இன்ன காரணம் என்று ஆராய்வதால் சுற்றுமுற்றும் உள்ள தோற்றங்கள் அழகில் குறைந்ததாகத் தோற்றமாட்டா. நுரைத்துக்கொண்டோடும் ஆற்றங்கரையில் நிற்குங்கால், அது இரைந்துகொண்டு வேகமாகப் புரண்டு ஓடி நமக்கு உண்டாக்கும் ஸந்தோஷமானது, இரவு பகல் இடைவிடாது தான் செல்லும் வழியைப் பாறைகளுக்கிடையில் பறித்து, மலைகளின் சிதைவுகளை ஸமவெளிகளின் வழியாக ஸமுத்திரத்தின் அடிவாரம் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு ஏற்பட்ட சிறந்த சக்தி உடைய ஓர் இயற்கையந்திரம் என்று அதை மதிப்பதால், சற்றேனும் குன்றாது. கடலோரமாக இருக்கும் செங்குத்தான பாறைகள், குஹைகள் ஆகிய இவைகளில் சிதைவு வரவர விருத்தியாவதையும், மணல் கூழாங்கற்கள் ஆகிய இவைகளில் வண்டற்படிவால் வளர்மலைகளின் மாறுபாடுகளையும் ஊஹித்தறியுங்கால், கடற்கரையே ஒரு புதிய அழகு பூண்டு விளங்கும்.

# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

ஸ்ரீராம வாலி ஸம்வாதம்.—தன் தம்பியாகிய ஸுக்ரீவனால் இரண்டாம் முறை சண்டைக்கழைக்கப் பட்ட வாலி, தன் பெண்சாதி எவ்வளவு தடுத்தும், 'இருவர் சண்டையிடுங்கால் அகாரணமாகத் திடீ ரென்று என்னைக் கொல்லும்படியான அவ்வளவு துராத்மாவா ராமர்?' என்று ஸமாதானம் கூறி அவளை மீறிக்கொண்டு சண்டைக்கு வந்தான். அப்பொழுது நடந்த சண்டையில் ஸுக்ரீவன் மிகச்சோர்ந்து இன்னது செய்வது என்று தோன்றாது திகைத்து நிற்கும் தரு ணத்தில் செடிமறைவிலிருந்த ஸ்ரீராமர் ஓர் பாணத்தை வாலி மார்பைநோக்கி எய்ய, அது லக்ஷ்யம் தவறாது பாய்ந்து வாலியை வீழ்த்தியது. மிகுந்த கஷ்டப்பட் டுக்கொண்டிருக்கையில் தனது அருகில் வந்த ராமரை நோக்கி வாலி கேட்கத்தொடங்கினான்:—

வாலி.—நீர் நல்லகுலத்தில் பிறந்தவராச்சுதே! என்னைக் காரணமின்றி இப்பொழுது என் வதை செய்து இந்த அதர்மத்திற்கு ஆளானீர்? நீரே அதர் மம் செய்துவிட்டால் உலகத்தவர் நிலை என்னவாகும்? என்னைக்கொலீல உமக்கு என்ன அதிகாரம்?

ஸ்ரீராமர்.—உன்னை நான் அகாரணமாகக் கொல்ல வில்லை. உன் கொடிய குணங்களை ஸுக்ரீவன் மூல மாகக் கேள்விப்பட்டு உன்னைக் கொல்வேன் என்று அவ னுக்கு அபயப்ரதானம் செய்திருந்தேன். அவ்வாறே செய்தேனே ஒழிய வேறில்லை. மேலும் இந்த ப்ரதேசங் களை ஆளும் ராஜா பரதனது ஆள்கள் நாங்கள். அதர் மத்தை அடக்கவேண்டியது எங்கள் பொறுப்பு.

வாலி.—இரண்டு பேர்கள் விரோதிகளிருந்தால் ஒரு வன் சொல்வதையே கேட்டுக்கொண்டு, மற்றவன் கூறு வதைக்கேட்காது, அவனுக்கு அவஸரமாகத் தண்டனை விதிப்பது மனுநீதிக்குத் தவறாகாதா? உம்போன்ற வர் இவ்வாறு செய்யலாமா?

ஸ்ரீராமர்.—நான் உன்னைக் கேட்காவிட்டாலும் அவன் உன்னைப்பற்றிக் கூறிய கொடிய விஷயங்க ளுக்கு ஹனுமார் முதலிய தர்மாத்மாக்கள் அப்பொ ழுது ஸாக்ஷியாக இருந்து ஸுக்ரீவன் கூறிய விஷயங் கள் ஒன்றையும் ஆக்ஷேபிக்கவில்லை. இப்பொழுது தான் உன்னைக் கேட்கிறேன். நீ உன் குற்றத்தை மறுத்துவிடேன் பார்ப்போம்! நீ உன் தம்பியின் பெண்சாதியாகிய ருமையை அபஹரித்து அவனுக்கு பெருங் கேட்டை விளைக்கவில்லையா?

வாலி.—ஆம். அவன் என் ராஜ்யத்தை நானில்லாத ஸமயத்தில் கைப்பற்றிக்கொண்டு என் பெண்சாதி தாரை முதலியவர்களைத் தன் வசப்படுத்திக்கொள்ள வில்லையா? அதனால் எனக்கு ஆத்ரம் அதிகமாகிவிட் டது. நானும் அவ்வாறே செய்தேன்.

ஸ்ரீராமர்.—ஸுக்ரீவனிடம் நீ எடுத்துக் காட்டிய குற்றம் உண்மையே. குற்றம்பார்க்கில் சுற்றமில்லை. அவன் குணகுணங்களை நீ கவனிக்காமல் ஏன் கொடிய செயல்களை அவன் விஷயத்தில் செய்தாய்? அவன் காவலாக இருந்த குஹையின் வாயிலில் ஒரு வருஷம் முடிந்ததும் இரக்தம் பெருக உன் ஏற்பாட்டின்படி நீ மாண்டதாக மதித்து ஸுக்ரீவனும் மறிக்க யத்த னித்தான். அப்பொழுது பெரியோர்களது வேண்டு கோளால் அவன் ராஜ்யத்தை ஒப்புக்கொண்டானே ஒழிய ராஜ்யத்தைக்கைப்பற்றி உன்னைப் பறக்கவிட வேண்டும் என்ற கெட்ட எண்ணத்தால் அவ் வாறு செய்யவில்லை. நீ வந்ததும் அவன் உன்னிடம் ராஜ்யத்தைக்கொடுத்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வில்லையா? அப்படி இருக்க நீ அவனை இவ்வாறு வருத்தலாமா? நீ வரக்கூடாத ரிச்யமூக பர்வதம் போனதனால் அல்லவா நான் வரும்வரையிலாவது ஸுக்ரீவன் உயிர் தரித்திருந்தான்!

வாலி.—நீர் கூறுவது நியாயமே. என் பெண் சாதி முதலிய எல்லாவற்றையும் முன்னர் அபஹரித் துக்கொண்டு விட்டதால் என் கோபம் அடக்க முடியா மல் போய்விட்டது. நானும் அவன் செய்ததற்கு ப்ரதிசெய்தேன்.

ஸ்ரீராமர்.—ஒருவர் செய்த கெடுதிக்குப் பதிலாகக் கெடுதிசெய்வது உன்போன்ற புத்திசாலிகளுக்கு அழகன்று. மேலும் குரங்குகள் தர்மப்படி ஸஹோதரர் கள் பெண்சாதிகளை அவர்கள் இறந்தபின்னர்மற்றைய ஸஹோதரர்களில் ஒருவன் பெண்சாதியாக்கிக்கொள்ள லாம். இதன்படி நீ இறந்ததாக எல்லோரும் மதிக்க ஸுக்ரீவனும் அதை நம்பியல்லவோ உன் பெண் சாதியை அங்கீகரித்தான். அப்படி இருக்க அவன் உயிரோடிருப்பதைத் தெரிந்துகொண்டு நீ அவன் பெண்சாதியை அபஹரித்தது மஹா பாபம்அல்லவா?

வாலி.—பெண்சாதி விஷயத்தைப்பற்றி இவ்வளவு நீர் பேசுவானேன்? மனிதர்களுக்குள் கல்யாணம் முதலிய வரம்புகள் இருக்கின்றன. இந்த வரம்புகள் தவறினால் உங்களுக்கு மிகுந்த துக்கங்கள் ஏற்பட லாம். எங்களுக்கோ அப்படியல்ல. நாங்கள் கேவ லம் குரங்குகள். எங்கள் ஸ்திரீ புருஷ விஷயங்களை நீங்கள் உங்களுக்கு ஏற்பட்ட நீதிப்படி தர்மாதர்மம் என்று மதிக்கலாகாது. ஆதலால் என்பேரில் இதை ஒருபெரிய குற்றமாகச் சுமத்த நியாயம் இல்லை.

ஸ்ரீராமர்.—நீயா கேவலம் குரங்கு! குரங்கு இவ் வளவு நியாயம் பேசுமா? முதலையின் வாயில் அகப்பட்டு ஆதிமூலமே என்று கதறியகளிறு கேவலம் மிருக மாகுமா? என்தேவிக்காக ராவணனைத் தடுத்துப் போர் செய்து உயிரைவிட்ட எங்கள் தந்தையாகிய ஜடாயு என்ற கழுகு கேவலம் பக்ஷியா? பகுத்தறிவுடையது எந்த ஜந்துவாகிலும் தேவதைகளுக்கு ஸமமே. மேலும் நீ சிவபக்தனல்லவா? இப்படியிருக்க நீ குரங்கு என்று கூறி தப்புவித்துக்கொள்ளவா பார்க்கிறாய்? நீ குரங் கென்று சொல்லுவாயாகில் காட்டில் மிருகங்களை

வேட்டையாடுவதுபோல உன்னை வேறொருவனோடு போர்செய்து கொண்டிருந்த காலத்தில் மறைந்து அடித்ததால் என்ன அதர்மம் வந்துவிட்டது? மேலும் உங்களுள் ஸ்திரீ தர்மம் இல்லை என்றால் ஸுக்ரீவன் செய்ததில் அவ்வளவு கோபம் உனக்கு வருவானேன்?

வாலி.—நீர் சொல்வதுபோலக் கொண்டாலும் தர்மாத்மாவான வேடர்கள் தமக்கு ஆஹாரம் முதலியவைகளுக்கு உபயோகமாகும் ஜந்துக்களையேகொல்வார்கள். குரங்குகளின் மாம்ஸம் எந்தப்ராணிக்கும் ஆஹாரமாகாதே! எங்கள் தோல்முதலியன ஒன்றிற்கும் உபயோகப்படமாட்டாவே! அப்படியிருக்க என்னை ஏன் இப்பொழுதுகொன்றீர்? நீர் ஸுக்ரீவனுடன் ஸ்நேஹம்செய்துகொண்டபிறகு நான் அவனுக்கு ஏதாவது அபராதம் செய்திருந்தால் நீர் என்னைக் கொல்லலாம். அப்படி ஒன்றும் இல்லையே. தாரை சொல்லியபடி கேளாது அநியாயமாய் உயிரிழக்க போகிறேன்! விதி, யாரை விட்டது?

ஸ்ரீராமர்:—ஸுக்ரீவன் முதல்தரம் சண்டைக்கு வந்தான். அவனைத் தோற்க அடித்துத் துரத்திவிட்டாய். இரண்டாம்தரம் வருங்கால் தாரை எவ்வளவு சொல்லியும் கேளாது சண்டைக்கு வந்ததே எனக்குப் போதாதா? முதல்தரம் ஸுக்ரீவனுக்குச் செய்த தீங்கே உன்னைக்கொல்வதற்குத் தகுந்த குற்றமல்லவா?

வாலி:—சிங்கமிருக்க யாராவது முயலை, ஸ்நேஹம் செய்து கொள்ளுவார்களா? என்னுடன் ஸ்நேஹம் பாராட்டி உமது விஷயத்தைக் கூறியிருப்பீராயின் என்வாலை விட்டு ராவணனை இங்கு இழுத்துவந்து உமது ஸீதையைக்கொண்டுவந்து விடும்படி செய்ய மாட்டேனா? அநியாயமாய் என் தம்பியுடன் ஸ்நேஹம் செய்து என்னைக் கொன்றீரே!

ஸ்ரீராமர்.—நான் காட்டில் வருங்கால் ஸுக்ரீவனை முதலில் கண்டேன். அவன் விஷயங்களைக் கேட்டதும் அவன் தர்மாத்மாவென்றும் நீ கொடியவனென்றும் தெரியவந்தது. அவனோடு ஸ்நேஹம் செய்துகொண்டு உன்னைக் கொல்லும்படி நேரிட்டது. ராவணன் செய்த குற்றத்தைச் செய்த உன்னுடன் ஸ்நேஹம் செய்துகொண்டு ஸீதையை எளிதில் அடைவதைவிட தர்மாத்மாவான ஸுக்ரீவனுடன் அன்பு பாராட்டி கஷ்டப்பட்டு ஸீதையை அடைவது மேல்.

வாலி.—எல்லா விஷயங்களிலும் எனக்குத் திருப்தி வந்துவிட்டது. நான் கேவலக் குரங்கல்ல. நான் என் தம்பி விஷயத்தில் செய்ததெல்லாம் அதர்மமே. நான் உமது ஸ்நேஹத்திற்குத் தகுந்தவனல்ல. ஆயினும் உம்மால் தேவனாகக் கருதப்பட்ட நான் இன்னொருவனுடன் கருத்தூன்றி சண்டை செய்துகொண்டிருந்த காலத்தில் மறைந்திருந்து என்னைத் திடீரென்று ஒரே பாணத்தால் அடித்துச் சாய்ப்பது என்ன யுத்த தர்மம்? இது தான் உம்மிடத்தில் எனக்கு அடங்காத கோபத்தை உண்டாக்குகிறது. பெரிய குலத்தில் பிறந்து மாறா அபகீர்த்தியைப் பெறும்படி உமக்கு நேரிட்டதே என்ற துக்கம் என் மனத்தில் ஒருபக்கம் கிளம்புகிறது. இந்த விஷயத்தில் அதர்மத்தில் முயன்றவரல்லவா நீர்!

லக்ஷ்மணர்.—அப்பா! நீ இந்தப் பாகத்தை எண்ணி மனங்கலையாதே. என் தமயனார் உன்பாபம் உன் தம்பியின் கஷ்டம் இவைகளைக் கருதி உன்னைக்கொல்வதாக ஸுக்ரீவனுக்கு வாக்களித்துவிட்டார். மேலும் ராவணன் உன்னுடன் ஸ்நேஹம் செய்துகொண்டிருக்கிறான். ஆகவே இந்த விஷயத்தில் உன்னைக்கொல்ல வேண்டியது அவசியமே. என் அண்ணா உன் எதிரில் வந்து தனுஷ்டங்காரம் செய்திருப்பாராயின் தாரையின் புத்திமதிகள் ஞாபகம் வர நீ அவரைச் சரணம் அடைந்திருப்பாய். உன்னைக் கொல்லாதிருக்க வேண்டி வரும். அதனால் தமயன் வாக்குத்தவறும், விரோதியின் தோழனைக் காக்கவேண்டி வரும், கொடியவனுக்கு இடங்கொடுத்ததாகும். ஆகையால்தான் அவர் இவ்வாறு செய்யும்படி நேர்ந்தது.

ஸ்ரீராமர்.— ராஜதர்மத்தில் சில பாகங்கள் பிறருக்குக் கஷ்டத்தை உண்டாக்க ஏற்பட்டவைகள்தான். ஆனால் ரணவைத்யன் கட்டியால் வருந்துபவரைக் கருவியிட்டு ஹிம்ஸித்தாலும் முடிவில் அவன் செய்வது ரோகிக்கு ஸௌக்யத்தையும் பலத்தையும் கொடுக்கும். அதுபோல ராஜாக்கள் தாம் நடந்துகொள்ளும் மாதிரியால் கஷ்டத்தை உண்டாக்கி முடிவில் ப்ரஜைகளுக்கு நற்கதி கொடுக்கிறார்கள். ராஜாக்கள் அநேக தேவர்களுடைய அம்சங்களைத் தம்முள் அடக்கியிருப்பதால் அவர்கள் மனுஷ்ய சரீரமுடைய தேவதைகளைப் போல உலகில் உலாவி வருகிறார்கள். அவர்களை வருத்துவதும் அவர்கள் கெடுதலைச் செய்கிறார்கள் என்று மதிப்பதும், நிந்திப்பதும், தடுத்துப் பேசுவதும், அவர்களிடம் அப்ரியமான வார்த்தைகளைச் சொல்வதும் ஸரியல்ல. நீயோ ராஜதர்ம ஸூக்ஷ்மம் அறியாமல் பிதற்றுகிறாய். இந்தவிஷயத்தில் உண்டாகும் கோபம் வீணே! இது பயனற்றதும் அல்லாமல் நீ செல்லும் வழிக்குத் தடையாகவும் ஏற்படும்.

ஆதலால் இதைப்பற்றிநினையாது ஒழிந்துஸுகம்பெறு.

வாலி.—என்மனம் திருப்தி அடைந்தது.வேறு வழி யாதொன்றும் இல்லாததால் அல்லவா நீர் இவ்வாறு செய்யும்படி நேரிட்டது ! இப்படிச்செய்தும் மறைந்து ஓடிவிடாது என்முன்னே வந்து நின்று தர்மஸூக்ஷ்மம் அறியாது நான் சுமத்திய பழியை வெகு தைர்ய மாயும் சாந்தமாயும் ஏற்றீரே ! தம்மேல் கொஞ்சம் பழி வந்தாலும் வரட்டும். நடத்தவேண்டிய காரியத்தைக் கூடியவரையில் தர்மவழியில் நடத்தி சரணாகதனை எப்படியாவது ரக்ஷிக்கவேண்டும் என்ற கருணை கூர்ந்த கிருபாநிதியே! இந்த ரஹஸ்யம் உணராது கோபாவே சத்தால் உம்மை வாயில் வந்தபடி எல்லாம் திட்டிவிட் டேன். இவ்வளவையும் பொறுத்துக்கொண்டு உமது ஸம்பாஷணை மூலமாக என் கொடிய நிலையை நிரூ பித்து நான் செய்த பாபத்தை எண்ணித் துக்கித்து புனிதனாகும்படியாகவும்,என் மனதில் முடிவில் எழுந்த வீண் கோபத்தையும் ஆபத் தர்ம ரஹஸ்யத்தை உபதே சித்து அடக்கி சாந்தனாகும்படியாகவும், உமது சிறப்பில் ஈடுபட்டுப் பிழைக்கும் படியாகவும் செய்தீர். நீர் நினைத்தி ருந்தால் என்னை ஒரே பாணத்தால் உயிரற்று விழும்படி செய்திருப்பீர்! அவ்வாறு செய்யாது என்னைக் கீழே விழும்படி செய்து என்னுடன் வாதாடி என் மனதை நேர்மைப் படுத்திய கருணையங் கடலே ! ஸுக்ரீவனை விட என்னிடத்தில்தான் உமக்கு அதிக ப்ரீதி. நீர் என்னைக் குற்றுயிராய் இங்குத் தள்ளியதே இந்தப்ரீதியைக் காட்டுகின்றது. என்னைப்போன்ற கொடியவனை ஆட்கொள்ளும் விதம் இதுவே. இப்படி இல்லாவிடில் நான் எவ்வளவு ஜன்மம் எடுத்துப் படாதபாடெல்லாம் பட்டு என்பாபங் களைத் தீர்த்துக்கொண்டு இந்நிலையை அடைய வேண் டும். இப்பொழுது எனக்கு வந்திருக்கும் சாந்தம் என் போன்ற கொடியவர்களுக்கு உமது கருணை யின்றி இவ்வளவு எளிதில் வருமா? நீர் என்னை உட னே கொல்லாது என் வாயைப் பிடுங்கி மனதைக் குவித்து அனேக ஜன்ம காரியத்தைக் கொஞ்ச நாழிகை யில் நடத்திவிட்டீரே! ஸர்வவல்லமையுள்ள நீர் நினைத் தால் எதுதான் முடியாது? நீர் என் விஷயத்தில் செய்த தொழில் எல்லாவற்றையும், இப்பொழுது பார்த்தால் தான் எனக்கு மிகுந்த திருப்தி உண்டாகிறது. இனி நான் மிகுந்த சாந்தமாக மரணத்தை எதிர்கொண்ட ழைப்பேன். ஸுக்ரீவன் அங்கதன் உள்பட எல்லோ ரும் உமக்கு அடைக்கலம். அவர்கள் என்னைப்போலக் கொடியவர்கள் அல்ல.ஆகையால் எந்தக் கஷ்ட ஸமயத் திலும் என்னை ஆட்கொண்டபடி அவர்களை ஆட் கொள்ளவேண்டுமென்றுஉமதுதிருஉள்ளத்தில் உதிக்க இடமே இராது. உம்மிடத்தில் என் கர்மங்கள் எல்லா வற்றையும் அர்ப்பித்து விட்டேன். எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டுஎன்னை விடுவியும்,விருஞ்சிநாராயண சங்கரஸ்வரூபா! ஹே ராமா ராமா ராமா!' என்று கூறி வாலி மிகுந்த சாந்தமாகத் தேகம் நீக்கினன்.

ஓம் தத்ஸத்

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

### த்ரௌபதி அல்லது மனத்தினிலே மனனிலே நின்ற காதை

"அவள் யார்? எங்கிருந்து இங்கு வந்தனள்? ஏன் இங்கு வந்தனள்? இக்காட்டில் வந்து வஸிப்பதற்குக் காரணமென்ன?—என்பதை எல்லாம் தாங்கள் தயவு செய்து விசாரித்து வந்து சொல்லும்" என்று ஸிந்து நாட்டரசன் கோடிகாச்வன் என்பவனை ஏவினன். அவனும் பெண்புலியிடம் செல்லும் ஓநாய்போல் தேரி லிருந்து இறங்கி நடந்து சென்றான்.

"காற்றால் படர்ந்து எரியும் நெருப்பின் கொழுந்து போல் ப்ரகாசமாக விளங்கு முகத்தை யுடையாய்! இக் கடம்பமரத்தின் பக்கத்தின் ஒதுங்கி நிற்கின்றாய்! அழகிற் சிறந்த நீ இக்காட்டில் வரக் காரணமென்ன? நீ தேவியா? அல்லது யக்ஷரது பெண்ணா? அல்லது தானவியா? அல்லது தைத்யரது மனைவியா? ஸர்ப்ப ராஜனது மகளா? அல்லது மனித உருவங்கொண்டு காட்டில் வாழவந்த அஷ்டவஸுக்களது மனைவியா? இந்த்ரப்பட்டினம் விட்டு வந்த இந்த்ராணியோ? நீங்க ளும் எங்களை யார் என்று கேட்கவில்லை. நீங்கள் யாவரது தலைவி என்றும் எங்களுக்கும் விளங்கவில்லை. ஆர்யே! உமக்கு வந்தனம். உமது புகழ்ப்பெற்ற தந்தை யார்? உமது கணவர் யார்? உற்றார் யார்? உறவி னர் யார்? நீங்கள் இங்கு என்ன செய்கின்றீர்கள். யான் அரசன் ஸுரதனுடைய மகன். என்னைக்கோடிகாச்வன் என்னும் பெயரால் கூப்பிடுவர். அதோ ! அங்குத் தயவு செய்து பாரும்: அவர், செந்தாமரை போன்ற கண்களை யுடையவர், த்ரிகர்த்த நாட்டரசன்; அவ்வீரன் க்ஷேம ங்கரன்; அவன் பின்னிருப்பது குளிந்தன். அவர்கள் கிடக்க; நடுவில் இருப்பது யார் உமக்குத் தெரியுமோ? ஜயத்ரதன் என்னும் பெயரைக் கேட்ட தில்லையா? அம்மன்னன் அநேகஸௌஹ்ருத பரி வாரங்களுடன் சூழப்பட்டு நிற்கின்றனன். அது நிற்க. தாங்கள் யார் என்றதாவது, தாங்கள் புகுந்த இடம், பிறந்த இடம் இவையாவது, எதும் எமக்கு விளக்கும் படிக் கேட்டுக்கொள்கிறேன்" என்றான் கோடிகாச்வன்.

"மற்றொரு மனிதனாவது ஸ்த்ரீயாவது இல்லாத காலத்து நான் உம்முடன் இவ்வாறு பேசுவது முறைமையல்ல. அன்றி வேறு யாராவது ஆணாவது பெண்ணாவது உம்முடனும் இங்குக்கிடையாது. நானே

தனித்து இங்கு இருக்கிறேன். ஆகையால் நான் பேச வேண்டியதாயிற்று. ஆனல் பெண்கள் முறைமைப் படி நான் உம்முடன் பேசுதல் ந்யாயமல்ல. ஆயினும் தாங்களிங்குவந்து எனது பெரியோர்களைப்பற்றிக் கேட்பதால் சொல்லுகின்றேன். கேளும். நான் த்ருபத ராஜனுடைய மகள். பாண்டவரது தர்மபத்நி. குந்தி மக்களாகிய அம்மூவரும், மாத்ரிமைந்தர்கள் இருவரும் நான்கு திக்குகளிலும் வேட்டையாடச் சென்றிருக்கிறார்கள். நாழி ஆயிற்று. அவர்களும் வந்துவிடுவோர்கள். எனது கணவருக்கு விருந்தாளியை எதிர்கொள்வதென்ருல் மஹா ஸந்தோஷம். தாங்கள் குதிரை தேர் முதலியவைகளை அனுப்பிவிட்டு இங்கு இரும். நாங்கள் வந்தனமளிக்கிறோம். அவர்களும் காண விரும்புவார்கள்" என்று த்ரௌபதி தனது கணவர்களுடைய தருமசிந்தனையை நினைத்துக் கூறினள்.

"ஹே! பெருமை வாய்ந்தவளே. நீ க்ஷேமமாக இருக்கின்றனையா? உனது கணவர்கள் ஸௌக்யமாக இருக்கின்றார்களா? அவருடைய ஸுகத்தை நீ நாடுகின்றனையே. அவர் ஸுகமாக இருக்கின்றனர்களா" என்றனன் ஜயத்ரதன்.

"உமது நாடுகள் எல்லாம் வளப்பமாக இருக்கின்றனவா? நீர் ராஜ்யத்தை நியாயமாக அரசாட்சி செய்கின்றீர்களா? குந்திமைந்தர்களும் யானும் ஸுகமாக இருக்கிறோம். நீங்கள் இந்நீரைக்கொண்டு கால்சமுவி இவ்வுணவைக் கொள்ளும். இவற்றை உமது துணைவர்களுக்கும் கொடும். பாண்டவர் வந்தால் வேட்டையாடிய பல மிருகங்களின் இறைச்சி கிடைக்கும்" என்றாள் த்ரௌபதி.

"நீங்கள் கொடுத்ததே போதும். எனது நாடு செழித்து ஸுகமாக இருக்கின்றது. நாங்கள் எல்லோரும் சௌக்கியமாக இருக்கிறோம். இப்பொழுது உன்னைக் காணவந்தேன். நீ இக்காட்டிலிருப்பது அழகன்று. இத்தேர் ஏறிவா. நீ ஸுகமாக வாழலாம். கீழ்மையடைந்து, நாடெல்லாம் தோற்று செல்வம் இல்லாது தவிக்கும் அந்தப் பாழும் பாண்டவர்களோடு வாழ்தல் உன் பெருமைக்கு அழகாகாது. புத்தியில் சிறந்த பெண் எவளும் ஏழ்மைகொண்ட கணவனேடு வாழ்விரும்பாள். செல்வத்தில் அவனைக்கூடி, ஏழ்மையில் அவனை நாடாமையே பெண்கள் ஸ்வபாவம். பாண்டு மைந்தர்கள் நாடையுமிழந்தனர். மானத்தையு மிழந்தனர். உன்னத பதவியிலிருந்து மறுபடியும் அடையமுடியாத விதம் தாழ்ந்து விட்டார்கள். உன்மேல் அபிமானங்கொண்டு அவர்களுடைய கஷ்டத்தில் பாத்யப்படாமல் இருப்பதே உனக்கு அழகு. அவரைத் துறந்து எனது மனைவியாக வா. உன்னை என் தலைவியாக்கி ஸிந்து ஸௌவீர நாடுகளிற்கு ராணி ஆக்குவேன்" என்றான்.

கோடிகாச்வனல் த்ரௌபதியின் நிலையை அறிந்து அவள்மேல் மோஹம் மிகுந்து, எவ்வாறேனும் அவளைக் கொள்ளவேண்டும் என்னும் ஆவல்கொண்டு வந்த ஜயத்ரதன் கூறிய மொழிகளை த்ரௌபதி கேட்டாள். மனந் துடித்தது. ஆனாலும் தன்னெதிரில் நின்றவனுடைய எண்ணத்தை மாற்றவேண்டும் என்னும் எண்ணம்கொண்டு என்னசெய்வதென்றெண்ணினள். இடையே தன் கணவர்கள் வருவார்களா என்று நாற்புறமும் பார்த்தாள். பின் என்னவந்தாலும் தன் மனத்தை நிலையில் நிறுத்தவேண்டும் என்று எண்ணினள். தன்னுடைய மனம் நிலைத்து இருக்கும் வரையும் தனக்கொன்றும் கெடுதியே வராது என்று நிஸ்சயம் செய்துகொண்டு, ஜயத்ரதனைப் பார்க்க வெறுப்புற்று அவனைப் பாராது "மறுபடியும் இம்மாதிரிப் பேசாதிரும். உமக்கு இவ்வாறு பேச நாவெழும்புமா? கூச்சம் கொஞ்சமேனு மில்லையா? வெட்கமில்லையா" என்று கூறினள். பின் பலவிதமாக அவனுக்குப் பொருள் படாத மொழிகளைச் சொல்லி அவனை மயக்கமடையும்படி செய்ய வாரம்பித்து தன் கணவர்களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்.

ஆனாலும் ஜயத்ரதன் கூறிய மொழிகள் அவள் மனதைக் குடைந்தது. தன்னுடைய மனத்தில் பலவாறு எண்ணி மறுபடியும் அவனை நோக்கிக் கீழ்வருமாறு கூறினள்:—

"புத்தியற்றவனே. இந்திரனைப்போல தோள்வலி மிகுந்த அவர்களைப்பற்றி அவ்வளவு இகழ்ச்சியான மொழிகள் கூறுதல் நியாயமா? யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் கொன்று வீர முயர்ந்தவர்களைப்பற்றி நீ அவ்வாரு பேசுவது? தமது தருமங்களையும், நடத்தைகளையும் ஸரியாக நடத்திவரும் அவர்களைப்பற்றிப் பேசியது தவறன்ரு? படித்து ஞான மிகுந்தவர்கள் பிறர்களை நிந்தனை செய்வார்களா? எவர்களாயிருந்தாலென்ன, நாட்டிலிருந்து அரசாண்டாலும் ஸரி, அல்லது காட்டிலிருந்து தவம்செய்தால் தான் என்ன,—அவர்களைப் பற்றி நிந்தனை மொழிகளைக் கூறுவது ஞானிகளின் குணமாகுமா? உண்ணத்தகாதவைகளை உண்ண விரும்பும் நாய் போன்றவர்கள்

அல்லவா அவ்வாறு செய்வார்கள்? உனக்கென்றே நீ செய்துஅமைத்துக்கொண்ட படுகுழியில் நீ விழாதிருக்க உனக்கு உதவிசெய்ய இவ்வுலகத்தில் யார் இருக்கிறார்? எனக்கு இருப்பதாகவே தோன்றவில்லை. தருமரைத் தோற்கடிக்க நீ கொண்ட எண்ணம், ஹிமயமலைச் சாரலில் வாழும் யானைக்கூட்டத்திலிருந்து ஓர் யானையை ஒரு சிறுகழியால் பிரிக்க முயல்வதுபோல் இருக்கின்றது. சிறு பிள்ளைத்தனம், உனக்கு ஒன்றும் தெரியவில்லை. விளையாட்டாக, தூங்கிக்கொண்டிருக்கும் ஸிம்ஹத்தின் முகத்தில் இருக்கும் மயிரை இழுக்க அது விழித்துக்கொள்ளும் என்று உனக்குத் தெரியவில்லை. அந்த வீரமும்பலமும் மிகுந்த பீமஸேனரைக் கண்டால் உயிர்தப்பி ஓடவேண்டிவரும். அவரை எதிற்பவர் யார். மாத்ரிமைந்தர்களோடு சண்டைசெய்ய நீகொண்ட எண்ணம், தெரியாது கால ஸர்ப்பத்தை மிதித்தவன் கதியை அடையும். மூங்கில், நாணல், வாழை இவை பலன் அடைந்ததும் அழிவதேபோல, என்னை அடைய விரும்பும் உன் கதியும் அதுதான் ஆகும். நண்டு கருவடைவதே அழிவுக்குக் குறிப்பாகும். நீ இந்த கெட்ட எண்ணம் கொண்டது மதற்குத்தானே.''

''போதும்! போதும்! இது எல்லாம் எனக்குத் தெரியும். உன் கணவர்கள் யார் என்றும் எனக்குத் தெரியும். உன்னுடைய மொழிகள் என் மனத்தை இருளடையக் குரங்கு செய்யா. வெருட்ட வெருண்ட பூனையென்று என்னை எண்ணவேண்டாம். நாங்களும், த்ரௌபதி, நாங்களும் அரசர்கள்தான். அரச குணங்கள் ஆறும் எமக்கும் உண்டு. நாங்களும் நல்ல வம்சத்தில் பிறந்தவர்கள்தான். பாண்டவர் எங்களைவிட எளியவர்களே யன்றி உயர்ந்தவரல்ல. வீண்வாதம் செய்யாமல் உடன்வா. இத்தேர் ஏறி என்னுடன்வா. அஹங்காரத்தை விட்டுவிட்டு ஸௌவீர நாட்டரசனுடைய கருணைக்கு ஆள்ஆகி விடு'' என்றான் ஜயத்ரதன்.

''அவ்வளவு பெருமை வாய்ந்தவனாகில், வலியற்றவன்போல் என்னை ஏன் எடுத்துச் செல்கிறாய். நான் எனக்குத் துன்பமுண்டாகும்படி இருந்தாலும் என் நாதர்கள் முன் தவறான வழியில் நடக்கமாட்டேன். இந்த்ரனும் என்னைக் கவர்ந்து செல்ல எண்ணமாட்டான். அர்ஜுனரும் ஸ்ரீக்ருஷ்ணரும் ஒன்றாக தேரேறிவந்து தன்னை எதிர்ப்பார்கள் என்னும் பயம அவனுக்குண்டு. மற்றைய எளியவர்களைப்பற்றிப் பேசுவது என் வேண்டும்? பாண்டவர்கள் தமது வில்லை எடுத்து நாண் த்வனித்துப் புங்காநு புங்கமாக இடைவிடாதுசரமாரியாகப் பெய்தால் உமது ஸைன்யமெங்கு நிற்கும்? காற்றில் தூசுபோல் பறந்திடுமல்லவா? காண்டீவத்தின் டங்காரமொன்றே உனது படையைக் கலக்கிடாதா? வேறு சொல்வதேன். இதுவரையும் நான் மனமொழி எவையாலும் கணவர்களது இஷ்டத்திற்கு விரோதமாக நடந்தவளில்லை. அந்த நடத்தையே இன்று உன்னைப் பாண்டவர்கள் கையில் சிக்கிக் கீழ்மைப்படஉதவி செய்யும். கருணையற்றநெஞ்சமுடையவனே! நீ என்னைக் க்ரூரமாகப் பிடித்திட்டால் நான் வெருண்டுவிடமாட்டேன். பாண்டவர்கள் என்னைத் தடையின்றி காம்யக வனத்திற்கு அழைத்துச்செல்வார்கள்'' என்றாள்.

இதற்குள் தன்னை அவன் பிடித்திழுப்பான் என்று தோன்ற ''உன் பாபமே உருவங்கொண்ட கரங்களால் என்னைத் தொட்டு பாபத்திற்காளாக்க வேண்டாம்'' என்றாள். மறுபடியும் பயந்து தமது ஆசார்யனாகிய தௌம்யரைக் கூப்பிட்டாள். இதற்குள் ஜயத்ரதன் அவளது மேல் போர்வையைப் பிடித்திழுத்து அவளைக் கவர முயன்றான். த்ரௌபதி அவனைத்தடுத்து முடியவில்லை. தௌம்யரைத் தன்னைக் காக்கும்படிக் கதறினாள். அவள் வேறு என்னசெய்ய முடியும்?

''த்ரௌபதியின் கணவர்களை யுத்தத்தில் ஜயித்துப் பின்பல்லவா நீ த்ரௌபதியைக் கொள்ளளாம்? ஹே ஜயத்ரதா! நீ க்ஷத்ரியதர்மத்தை மறந்துவிட்டாயே!? விதிவலிது? இந்தக் கொடிய செயலுக்காக நீ கஷ்டமடையாமல் இருக்கமுடியாது'' என்று தௌம்யர் கூறினார். அம்மொழிகளின் எல்லையைக் கடந்து தேரையும் கடத்தினான்.

வேட்டையாடச் சென்றிருந்த பாண்டவர்களும் வீடு நோக்கி வரலானார்கள். வழிமுழுதும் அபசகுனங்களன்றி வேறொன்றும் அவர் காணவில்லை. தருமர் கௌரவர்கள் தங்களைப்பற்றிக் கொடிய மொழிகளை உபயோகித்திருக்கிறார் என்று அவைகளின் மூலமாக ஊஹித்து எண்ணினார். அப்பொழுது தலைவிரிகோலமாக ஓர் பெண்வந்து கண்ணீர் சோர த்ரௌபதியைக் கவர்ந்து சென்ற செய்தி முழுதும் உரைத்தாள்.

''நீ அழவேண்டாம்! இந்த்ரஸேனா த்ரௌபதி இன்றே வந்துவிடுவள். தேர் போனவழி நன்றாகத் தெரிகின்றது. ஜயத்ரதன் இன்னம் வெகுதூரம் சென்றிருக்க முடியாது. நீங்கள் தேரைத் திருப்புங்கள். யாகத்திற்கே உரியதாகிய ஸோம பானத்தை

நாய்கள் நக்க விடலாகாது. குரங்கின் கையில் பூமாலை யிடலாகாது. சீக்ரம் செலுத்துங்கள். சுத்தமாகிய நெய் யானது சாம்பலில்விழப் பார்ப்பதாகாது. வலிமை யாலும் கீழ்மையாலும் நிலைதவறும்படி விடலாகாது. ஹோமத்தீயில் பூனை பதுங்கும்படி பாராதிருத்தல் நமது கடமை. நமது மனைவியை மற்றொருவர் கவர்ந்து செல்லப்பார்த்திருப்பது நமக்கழகன்று. காலத்தைப் போக்காது நடவுங்கள்" என்று கூறிக்கொண்டு இந்த்ர ஸேனைக்கு ஸமாதானங் கூறிவிட்டுப் புறப்பட்டு ஜயத் ரதனை நாடிச் செல்லலானார்.

இதற்குள் பாண்டவர்கள் தன்னை எதிர்த்து வரு வதைக்கண்ட ஜயத்ரதன் பாஞ்சாலியை நோக்கி "அதோ வருகிறார்களே அவர்கள் தானே பாண்டவர் கள். அவ்வைவர்களும் உன்னுடைய கணவர்கள் அல் லவா? அவர்களில் யார் யார் எந்தத் தேரில் வருகிறார் கொஞ்சம் காட்டு பார்ப்போம்" என்றான்.

"இந்தக் கொடிய செயலைச் செய்தும், அதனால் உன் உயிர் குறைவதற்கு ஹேது இருக்க, அடா, புத்தியற்ற வனே, இப்பொழுது அவர்களைத் தெரிந்துகொண்டு என்னசெய்யப் போகிறாய், போனால் போகிறது. நீ சாகும் தருணம் இது. அவர் இங்குவந்து விட்டார்கள். இனி உன்னை உயிரோடு விடமாட்டார்கள். உன்னை யும் உன் தேர் குதிரை முதலியன எல்லாம் நாசமாய் விடும். இந்த நிலைமையில் நீ இருப்பதால் நான் சொல்ல வேண்டியது என்கடமை. தருமரும் அவர் இளையவர் களுமெதிரில் இருக்க உன்னிடம் எனக்குக் கொஞ்ச மாகிலும் பயமே கிடையாது. கேள். நந்தா, உபநந்தா என்னும் இரண்டு பேரிகைகளின் உருவத்தைக் கொடி யிடத்தே கொண்டுவரும் மன்னன் தருமத்தைக் கடக் காத மன்னன். மனத்தை ஜயித்தவர்கள் அவரோடே கூடுவார்கள். அவர்தான் என் தருமர் கணவர். தன் னை அடைக்கலம் அடைந்த பகைவர்க்கும் இடம் கொடுக்கும் அன்பின் உருவமே அவர். உன் ஆயுதங் களை எல்லாம் உதிர்த்துவிட்டு அவர் காலில் விழுந்தால் நீ பிழைத்து விடுவாய். உன்னை நிஸ்சயமாகக் காப் பாற்றுவார். சாலமரம்போல் உயர்ந்து மலைபோல் திரண்டு ஆஜானு பாஹுவாய், புருவத்தை நெறித்து உதட்டைக் கடித்து உட்கார்ந்திருப்பவரே என் கண வர் பீமஸேனர். அவரை எதிர்த்தவர் பிழைத்ததில்லை. தனக்குத் தீங்குசெய்தவரை மறப்பதுமில்லை. ஏதேனும் ஒருவழிகொண்டு அவர்களைத் தொலைக்கப் பார்ப்பர். அவ்வாறு செய்தும் அவர் கோபமாறுதல் கிடையாது. இராமர்போல் காண்டீவத்தை வளைத்து இடையறா மல் அம்புகளை மழைபோல் எய்துவரும் அம்மன் னனே எனது கணவர் அர்ஜுனர். அவர் தவறான வழியில் செல்வதே கிடையாது. அவரே தருமபுத்திர ருடைய சிஷ்யர்போல் விளங்குகின்றவர். அவரருகே வரும் உயர்ந்து நிமிர்ந்து நிற்கும் மன்னன் ஞானத்திற் சிறந்து வலிமையில் உயர்ந்து வாழ்பவர். அவர்தான் என் கணவர் நகுலர். அவரை முன்சொல்லிய மூவ ரும் தம்முடைய உயிர்போல் பாவித்து வருகிறார். என்னுடைய மாமியார் அவர்களும் மாத்ரியின் மைந் தர்களை ஜாக்ரதையாகப் பாதுகாக்க உத்தரவு செய்திருக் கிறார். மற்றங்கு விளங்குவது எனது கணவர் ஸஹ தேவர். அவர் ஞானபண்டிதர். கைதேர்ந்த வில்லாளி. அவருக்கு ஸமானமானவர் இம்மூவுலகிலும் கிடை யாது. நெருப்பிலும் வீழ்வார் உயிரையும் விடுவர்: நடத்தை குன்றியதென்று கேட்க அவர் விரும்பார். தர்ம விரோதமான காரியங்கள் அவருக்கு பகையாளி யாக விளங்குகின்றன. இவ்வைவர்களும் தமது க்ஷத் ரிய தருமத்தை தவறார். குந்தியம்மாளுக்கு தன்னுயிரு னும் சிறந்தவர். உத்தமவீரர்கள். அவர்களை நீ எதிர்த் தாய். அவர்கள் உன்னுடைய சேனையை சின்னபின்ன மாக நாசம்செய்வதைப் பார்த்தால், திமிங்கலத்தால் அடிக்கப்பட்ட மரக்கலம், அதனுடைய பொன் பொருள் யாவையையும் திமிங்கலத்தின் முதுகிற்கு காணிக்கையிட்டு, கோபங்கொண்ட கடலின் அலை மோத தத்தளிக்கக் கண்டு ஓடத் தலைவன்போல் மதி மயங்கி உயிர் பிழைப்பதரிது. உன்னுடைய புத்தி இல்லாமையால் இந்நிலைமையை நீயாக உனக்குண்டா கச் செய்துக் கொண்டாய். யானைத் தன் தலைமேல் தானே மண்ணைவாரி இறைத்துக்கொள்ளும். யார் என்ன செய்வது. தான் வெட்டிய படுகுழியில் தானே விழுவதுமுண்டா? இனி அவர் கையிலிருந்து தப்பிப் பிழைத்தால் அதுவே புனர்ஜன்மம்—" என்று சொல் லிக்கொண்டு இருந்தாள்.

போர் முந்தியது. நாம் அதை இங்கு விவரிக்க வேண்டியதில்லை. முடிவில் ஜயத்ரதன் சேனை முழு

தும் அழிந்தது. த்ரௌபதியைத் தனியாகவிட்டு விட்டு அவன் ஓட ஆரம்பித்து விட்டான். த்ரௌபதி தௌம்யரை முன்னிட்டுக்கொண்டு தருமர் முன் வந்தாள்.

அர்ஜுனன் ஜயத்ரதன் ஓடிவிட்டபடியால் சேனையை அழிக்கலாகாதென்றான். "ஆனால் ஜயத்ரதனை இக்களத்தில் காணமுடியவில்லை. அவனை நீ கண்டுபிடி" என்று சொல்லப் பீமஸேனன் அவனைத் தேடச் சென்றான்.

இதற்குள் ஸஹாதேவனோடு த்ரௌபதி காம்யக வனத்தை அடைந்தாள். பீமனும் ஜயத்ரதனை ஒரே கட்டாகக்கட்டி எடுத்து வந்தான். அவனைக் கொல்ல வேண்டும் என்று அவன் எண்ணம். ஆனால் தருமர் "ஜயத்ரதன் கொடியவன் ஆகிலும் காந்தாரியம்மாளுடைய மகளும் நமது தங்கையும் ஆகிய துச்சலையின் பொருட்டு நாம் அவனைக் கொல்லக்கூடா" தென்று தடுத்தார். ஆனாலும் பீமன் அவனை பாண்டவரது அடிமை என்று ஒப்புக்கொள்ளும்வரை விடவில்லை. பின் அவனுக்குப் பல உபதேசம் செய்து தருமர் விடுவித்தார். "உன் ஹ்ருதயம் சுத்தமாகட்டும். இந்தமாதிரியாகிய எண்ணங்கள் உண்டாகாதிருக்கட்டும்" என்று ஆசிர்வசனங்களும் கூறினர். *

* பின் மார்க்கண்டேயன் முன், தன்னைப்போல் கஷ்டமடைந்தவர் உண்டா என்று தருமர் சொல்ல, இராவணன் சீதையைக்கவர்ந்த கதையைக் கூறினர். பின் த்ரௌபதிக்காக வருத்தப்படுகிறேன் என, ஸாவித்ரியின் கதையை விரித்துக்கூறினர். இவ்விரண்டு கதைகளாலும் அவர் எண்ணிய எண்ணம் தவறு என்றதைக் காட்டினர். இவ்விரண்டு கதைகளும் விவேகபோதினியில் முன்னமே எழுதப்பட்டிருக்கின்றன.

---

லோகோபகாரி. விவேகபோதினி.—இஃது ஒரு மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை. இதன் ஜனவரி மாதத்திய பிரதி ஒன்று நமது பார்வைக்கனுப்பப்பட்டது. இதில் இகபர சாதகமான இலௌகிக விஷயங்கள் யாவரும் படித்தற்கு யோக்கியமான செவ்விய நடையிலெழுதப்பட்டுள்ளன. இதில் முக்கியமாய் வேதாந்த விஷயங்களும், கல்வி, கைத்தொழில், வியவசாய முதலிய அரிய விஷயங்களும் புத்திமான்களா லெழுதப்பட்டு வருவதால் நந்தேசாபிவிர்த்தியை நாடும் ஒவ்வொருவர் கரத்திலும் இஃது அத்தியாவசிகமாக விருக்கத்தக்கதாம். மேலும், நம் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் வேண்டிய பல விஷயங்களிதிலடங்கி இருக்கின்றன. இஃது இதன் பெயருக்கேற்றவாறு விவேகத்தை விளைவிக்கக்கூடியதாக இருந்ததால் மதாபிமானிகளும் பாஷாபிமானிகளும் இதனை ஆதரித்தல் அத்தியாவசிகமாம். இதில் விஷய விளக்கப்படங்களுமிருந்ததால் இப்பத்திரிகை மிக பொருட் செலவாலும் விடாமுயற்சியாலும் நடைபெறுவதாகக் காணப்படுகிறது.

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

இந்த மாதம் 10ந்தேதி எடுக்கப்பட்ட சென்ஸஸ் கணக்கின்படி சென்னை ராஜதானியில் மொத்த ஜனத்தொகை 41,401,839-என்றும், இதில் ஆண்களின் தொகை 20,386,175. பெண்களின் தொகை 21,015,664 என்றும் தெரிகிறது. இவர்கள் வசிக்கும் வீடுகளின் மொத்தத்தொகை 7,820,266. வழக்கம் போலவே சென்னைராஜதானியில் ஆண்களின்தொகையைவிடப் பெண்களின் தொகை அதிகமாயிருக்கிறது. ஆனால் கடந்த இரண்டு சென்ஸஸ்களில் காணப்பட்டதுபோலவே இந்த சென்ஸஸிலும் குன்டூர், நெல்லூர், கடப்பை, கர்நூல், பெல்லாரி, அனந்தப்பூர், செங்கற்பட்டு ஆகிய இந்த ஏழு ஜில்லாக்களில் மட்டும் ஆண்களின் தொகையே அதிகமாயிருக்கிறது. கடந்த சென்ஸஸைவிட இந்த சென்ஸஸில் ஜனத்தொகை சற்றேறக்குறைய நூற்றுக்கு எட்டு வீதம் அதிகமாயிருக்கிறது. சென்ற சென்ஸஸில் நூற்றுக்கு ஏழு வீதம் அதிகமாயிருந்தது. ஆதலால் ஜனத்தொகை விருத்தி படிப்படியாய்த் திருப்தி கொடுக்கும் விதமாகவே அதிகமாகி வந்திருக்கிறதென்று சொல்லலாம். திருவாங்கூரில் நூற்றுக்குப் பதினாறு வீதம் ஜனத்தொகை அதிகமாயிருக்கிறது.

*
* *

கொழும்பில் சென்ஸஸ் கணக்கு.—இவ்வருஷம் கொழும்பில் எடுக்கப்பட்ட சென்ஸஸ் கணக்குப்படி மொத்த ஜனத்தொகை 211,184 என்று தெரிகிறது. 1901-ஆம் வருஷத்து சென்ஸஸில் 159,385 பேர் தான் மொத்தத்தில் இருந்தார்கள். ஆகவே நூற்றுக்கு $32\frac{1}{2}$-க்குக் குறையாமல் கடந்த பத்து வருஷத்துக்குள் கொழும்பில் ஜனத்தொகை அதிகமாகி இருக்கிறது.

*
* *

டெல்லி தர்பாரும் ஜ்யார்ஜ் சக்ரவர்த்தியின் முடிசூட்டு வைபவமும்.—டெல்லி தர்பாரின்போது, சக்ரவர்த்தி இந்தியாவுக்கு விஜயம் செய்வதில் ஏற்படும்

செலவுகளைக் குறித்து மிஸ்டர் ராம்ஸே மெக்டானல்டு காமன்ஸ் சபையில் கேட்ட கேள்விகளுக்கு மிஸ்டர் மாண்டேகுபதில்சொன்னர். டெல்லிதர்பாரில்நடக்கும் செலவும், சக்ரவர்த்தி இந்தியாவின் மற்றயப்பாகங்க ளுக்கு விஜயம் செய்யும்போது ஏற்படும் செலவுமாகச் சேர்ந்து பத்துலட்சம் பவுன் வரையில் ஆகுமென உத்தேசமாய் மதிப்புப் போடப்பட்டிருக்கிறதென்றும், ஆனல் பட்ஜட்டில் போடப்பட்டிருக்குந் தொகை 9,40,000 பவுன்தான் என்றும், இதில் 6,33,000, வீவில் பாபத்திலும், 3,06,700 மிலிட்டரி பாபத்திலும் செலவு செய்யப்படுமென்றும் மிஸ்டர் மாண்டேகு சொன்னர். இந்தச்செலவு இந்தியா கவர்ன்மெண்டைச் சேர்ந்ததாகும். மாகாணக் கவர்ன்மெண்டார் போட்டிருக்கும் செலவு ஜாப்தா இன்னும் தாக்கல் செய்யப் படவில்லை என்று தெரிகிறது. அவர்கள் போட்டிருக்கும் செலவு ஜாப்தாவின் மதிப்பு சாங்கிஷன் செய்யப் பட்டால் அது இந்தியாக்கவர்ன்மெண்டின் செலவுக்கு வேருகத் தனித்ததாகவே இருக்குமெனப்படுகிறது.

***

வைரம் கண்டுபிடிந்தல்.—பின்லீடன் என்னுமிடத்தில் டுலாமீன் என்னும் ஆற்றுக்குச் சமீபத்தில் வைரக்கற்கள் கிடைக்கின்றன என்று "டெயிலி கிரானிகல்" பத்திரிகையின் நிரூபர் ஒருவர் தெரிவிக்கிருர்.

***

தென்னிந்திய விவசாயம்.—இப்பெயர் பூண்ட பத்திரிகை நாலு வருஷகாலமாய் பென்ஷன் விவசாய இன்ஸ்பெக்டர் ஜி. இராஜகோபால் நாயடு அவர்களால் தேசத்துக்குத் தகுந்தவண்ணம் உதவும்படியான விஷயங்கள் அமைக்கப்பட்டு நடந்தேறிவருகின்றது. இது மிராசுதார் பட்டாதார் முதலியவர்களுக்கு சிறந்த உபகாரியாகயிருந்தும் சென்ற தைமாத சஞ்சிகையில் குறிப்பிட்ட விளம்பரத்தைப் பார்க்க நமக்கு வியாகூலமுண்டாகிறது. பொருளுதவி இல்லாததால் பத்திரிகையை நடத்துவது மிகக் கஷ்டமாக இருக்கிறது என்பதை நமது சந்தாதாரர்களும் மற்றவர்களும் கவனித்துச் சஞ்சிகையை ஆதரித்து ஷை பத்திராதிபருக்கு ஊக்கத்தை உண்டுபண்ணுவார்களென்று பிரார்த்திக்கிறேம். விவசாயமே முக்கிய தொழிலாயிருக்கும் இந்நாட்டில் ஒவ்வொரு தாலூக்காவுக்குப் பத்து சந்தாதார் இல்லாதிருப்பது தேச க்ஷேமத்துக்குக் குறைவு. நம் தேசம் விவசாயஞானம் அடைந்தால் தான் விருத்தி யடையும். பத்திராதிபர் விஷயத்தில் நமக்கு இருக்கும் அனுபவத்தால் ஷை விஷயங்கள் தேசக்ஷேமத்தை உண்டாக்குமென்பதை நாம் சந்தேகமின்றிக் கூறலாம்.

***

ஆர்ய சகோதரிகள் சங்கம், பெங்களூர்த்தண்டு.—இந்தச் சங்கத்து மூன்ருவதுவருடோற்சவம் சென்ற மாதம் இராவ் பஹதூர் ஆற்காடு நாராயணசாமிமுதலியார் அவர்கள் ஐஸ்கூல் ஹாலில், மைசூர் சமஸ்தானம் மாட்சிமை மிகுந்த மகாராஜா அவர்களின் ஆலோசனை சபை அங்கத்தினரு ளொருவராகிய ஸ்ரீமான் புட்டண்ணு செட்டியார் அவர்கள் தருமபத்னியாகிய ஸ்ரீமதி பார்வதி அம்மாள் அவர்களின் அக்கிராசனத்தின் கீழ் நடந்தேறியது. அப்போது அரிய பெரிய ஞான விஷயங்களடங்கிய சம்பாஷணை நடத்தப்பட்டது. காரியதரிசி ரிபோர்ட்டு வாசித்து சபையாருடைய அங்கீகாரம் பெற்ருர்கள். பிறகு அக்கிராசனம் வகித்த ஸ்ரீமதி பார்வதி அம்மாள் அவர்கள், சபையின் நன்னேக்கங்களைப் பற்றியும் நன்னெறிகளைப் பற்றியும் வியந்து பேசி, சர்வேச்சுரர் இந்தச்சபைக்கு நீடூழி ஆயுள் அருள் சுரப்பாரென்று பிரார்த்தித்துத் தனது அபிப்ராயத்தைச் சொல்லி முடித்தார்கள். ஸ்ரீமதி மு. விஜயம்மாள், (காரியதரிசி) ஸ்ரீமதி சு. கோகிலாம்பா அம்மாள் ஆகிய இருவர்களது விடாமுயற்சியினலேயே யிந்த சங்கம் மென்மேலும் அபிவிருத்திறடைந்து வருகிறதென்று கேழ்விப்பட்டுச் சந்தோஷமடைகிறேம். இந்த சங்கத்தார் பாலிகைகளுக்குக் கிரமேணகல்விப் பயிற்சி செய்விக்க என்ன காரணத்தினலோ வருடம் முழுவதும் பாராமுகமாயிருந்து வருடோற்சவ சமீபத்தில், சிறு குழந்தைகளாகிய பாலிகைகளுக்கு அபாரமான சம்பாஷணைப்பாடந் தந்து ஞாபக சக்தியைச் சிதறச்செய்கிற விஷயம் கவனிக்கத்தக்கது.

# சென்னை ராஜதானியின் ஜனத்தொகை கணக்கு

(இந்த மாதம் 10௳ எடுக்கப்பட்ட சென்ஸஸ் கணக்கின்படி)

| ஜில்லா அல்லது சமஸ்தானத்தின் பெயர். | 1911-ம் ஞூ இல் வாசம் செய்து வரும் வீடுகளின் தொகை. | 1911-ம் வருஷத்தின் ஜனத்தொகை. | | | 100-க்கு வித்தியாசம் | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | மொத்தம். | புருஷர்கள். | ஸ்திரீகள். | 1911-க்கும் 1901-க்கும் | 1901-க்கும் 1891-க்கும் | 1911-க்கும் 1891-க்கும் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| ஆங்கிலேய நாடுகள் | | | | | | | |
| 1. கஞ்சம் ... | 455,404 | 2,220,745 | 1,044,062 | 1,176,683 | 10·4 | 6·0 | 17·0 |
| 2. விசாகப்பட்டணம் ... | 691,918 | 3,190,940 | 1,563,157 | 1,627,783 | 8·8 | 4·7 | 13·9 |
| 3. கோதாவரி ... | 317,872 | 1,651,490 | 811,548 | 839,942 | 12·6 | 10·2 | 24·2 |
| 4. கிருஷ்ணு ... | 360,926 | 1,996,538 | 995,102 | 1,001,436 | 14·5 | 14·2 | 30·7 |
| 5. குண்டூர் ... | 316,780 | 1,697,786 | 857,501 | 840,285 | 13·9 | 13·3 | 29·0 |
| 6. நெல்லூர் ... | 263,174 | 1,328,487 | 665,944 | 662,543 | 4·2 | 2·8 | 7·1 |
| 7. கடப்பை ... | 238,108 | 1,158,532 | 589,713 | 588,819 | 1·1 | 0·7 | 1·9 |
| 8. கர்நூல் ... | 187,167 | 935,689 | 471,754 | 463,935 | 7·3 | 6·6 | 14·4 |
| 9. பல்லாரி ... | 183,952 | 969,267 | 491,031 | 478,236 | 2·3 | 7·5 | 10·0 |
| 10. அனந்தப்பூர் ... | 189,890 | 963,322 | 494,712 | 468,610 | 3·2 | 8·2 | 11·7 |
| 11. சென்னை ... | 59,595 | 517,335 | 265,456 | 251,879 | 1.6 | 12·6 | 14·3 |
| 12. செங்கல்பட்டு ... | 226,626 | 1,405,746 | 705,654 | 700,092 | 7·3 | 9·1 | 17·0 |
| 13. வட ஆற்காடு ... | 385,274 | 2,443,200 | 1,220,696 | 1,222,504 | 10·7 | 4·4 | 15·5 |
| 14. சேலம் ... | 387,078 | 1,973,323 | 977,560 | 995,763 | 3.6 | 13·7 | 17·8 |
| 15. கோயமுத்தூர் ... | 434,042 | 2,116,725 | 1,044,760 | 1,071,965 | 6·9 | 10·5 | 18·1 |
| 16. தென் ஆற்காடு ... | 408,574 | 2,648,252 | 1,316,225 | 1,332,027 | 12·7 | 8·6 | 22·4 |
| 17. தஞ்சாவூர் ... | 450,696 | 2,360,435 | 1,121,282 | 1,239,153 | 5·1 | 0·8 | 5·9 |
| 18. திருச்சிளுப்பள்ளி ... | 414,677 | 2,106,389 | 1,023,249 | 1,083,590 | 7·2 | 5·0 | 12·6 |
| 19. மதுரை ... | 348,196 | 1,932,680 | 946,384 | 986,296 | 12·8 | 11·1 | 25·3 |
| 20. இராமனுதபுரம் ... | 325,153 | 1,658,753 | 786,438 | 872,315 | 9·2 | 4·7 | 14·3 |
| 21. திருநெல்வேலி ... | 398,286 | 1,791,226 | 866,021 | 925,205 | 8·0 | 8·3 | 17·0 |
| 22. நீலகிரி ... | 26,740 | 118,638 | 63,570 | 55,068 | 5·1 | 11·6 | 17·3 |
| 23. மலையாளம் ... | 536,186 | 3,015,510 | 1,483,728 | 1,531,782 | 7·9 | 5·6 | 13·9 |
| 24. தென் கன்னடம் ... | 213,010 | 1,194,809 | 577,936 | 616,873 | 5·3 | 7·4 | 13·1 |
| 25. அஞ்ஜீகோ ... | 942 | 5,572 | 2,692 | 2,880 | 15·7 | 9·7 | 26·8 |
| ஆங்கில நாடுகளின் மொத்தம். | 7,820,266 | 41,401,839 | 20,386,175 | 21,015,664 | 8·3 | 7·3 | 16·2 |
| சமஸ்தானங்கள் | | | | | | | |
| 1. திருவாங்கூர் ... | 662,885 | 3,430,254 | 1,731,955 | 1,698,299 | 16·2 | 15·4 | 34·1 |
| 2. கொச்சின் ... | 164,008 | 918,639 | 458,103 | 460,536 | 13·1 | 12·3 | 27·1 |
| 3. புதுக்கோட்டை ... | 76,573 | 411,878 | 196,699 | 215,179 | 8·3 | 2·0 | 10·4 |
| 4. பங்கனப்பள்ளி ... | 7,659 | 39,336 | 19,777 | 19,579 | 22·0 | —9·1 | 10·9 |
| 5. சாந்தூர் ... | 2,848 | 13,517 | 6,729 | 6,788 | 20·7 | —1·7 | 18·7 |
| சமஸ்தானங்களின் மொத்தம் | 913,973 | 4,813,644 | 2,413,263 | 2,400,381 | 14.9 | 13·2 | 30·1 |
| ஆக மொத்தம் | 8,734,239 | 46,215,483 | 22,799,438 | 23,416,045 | 9.0 | 7·8 | 17·5 |

# விவேகபோதினி

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி III } ஸாதாரணஸ்ரீ பங்குனிமீ 1911-ஸ்ரீ ஏப்பிரல்மீ { பகுதி 10


## இஹபரம்

### HERE AND HERE-AFTER

பாபம், புண்யம், மிச்ரகர்மங்களுக்கு ஏற்ப, ஜீவாத்மா, இஹத்தில் முறையே கீழான ஜன்மம் மேலான ஜன்மம் மனித ஜன்மம் ஆகிய இவைகளை அடைகின்றது என்பது சாஸ்திரங்கள் துணிபு. ஜீவாத்மா பரத்தில் (மரணத்திற்குப்பின்) அடையும் நிலைகளைக் கூறும் விதங்களுள் பின் வருவன முக்யமானவை.

(1). 'ஜீவாத்மா இஹத்தில் செய்யும் பாபங்களால் நரகில் மூழ்கி அங்கிருந்து பாபக்ஷயமாக வாககிரமமாக வெகு காலத்தில் மனித ஜன்மத்தை அடையும். அம்மாதிரியே புண்ய கர்மாக்களால் ஜீவாத்மா ஸ்வர்க்கம் அடைந்து புண்யபலன் தீர்ந்ததும் மனித ஜன்மத்தை அடையும்.' (சாந்திபர்வம்—அத். 104—சுலோ. 41—43 அனு.-அத்.–111-&-112-அசுவ.-அத்.-17-&-18-ஆகவே மரணத்திற்குப்பின்னர் ஜீவாத்மா தனது பாப புண்யத்திற்கேற்ப நரகஸ்வர்க்க வாஸங்கள் கொஞ்சகாலம் செய்து பின்னர் மனித ஜன்மத்தை அடையும் என்பதாயிற்று.

(2). 'கிராமத்திலிருப்பவர்கள், யஞ்ஞம், தர்மம் இவைகளைச் செய்து பொதுநன்மைக்கு உழைத்து இஹத்தில் ஸன்மார்க்க நெறியில் நடந்து பரத்தில் புகை, இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணயனம், பிதிர் லோகம், ஆகாசம், சந்திரன் என்ற பிதிர்யானமார்க்கமாகப்போய் கர்மபலன் தீர்ந்ததும் அங்கிருந்து நழுவி, வாயு, புகைப்பனி, மேகம், மழை, செடி கொடிகள், ஆகிய இவைகள் மூலமாகக் கர்மானுஸாரம் புருஷர்கள் தேஹத்துள் ஆகாரமாகப் புகுந்து பின்னர் தகுந்த ஜன்மம் பெறுவர்' (சாந்தோக்யம்-அத். 5—கண். 10-சுலோ-3-7.) இங்குப் புண்யகர்மாக்கள் செய்யும் புண்யாத்மாக்கள் ஸ்வர்க்கம் அடைந்து மனித ஜன்மத்திற்குத் திரும்பும் விதம் கூறப்பட்டது.

(3) 'ஸாதாரண பாமரர்கள் இவ்வாறு செல்லாது அடிக்கடி இறந்து பிறந்து, பிறந்திறந்து சுழன்று வருந்துவர்' (சாந்தோக்யம்—அத். 5—கண். 10—சுலோ. 8). ஆகவே ஓர் விதஜீவர்கள் இறந்தபின் லோகாந்தரவக்ஸம் இன்றி உடனே பிறக்கும் தன்மையை உடையவர்கள் என்பதாயிற்று. இத்தகைய ஜீவர்களைப்பற்றியே, 'புல் தரையில் ஊர்ந்து செல்லும் ஓர் புழுமுன் உள்ள புல்லைப் பிடித்துக்கொண்டபின் தான் பின்னுள்ள புல்லை விடும்; அதுபோல மரணமடையும் ஜீவன் புதிய தேஹம் ஒன்றைப்பற்றிக் கொண்டு தான் பழைய தேஹத்தை விடும்'என்று கூறப்பட்டிருக்கிறது (பிரஹ உப:—அத்-4. பிராஹ்மம்-4. பாகம்-4)

(4) உண்மையை உள்ளபடி உணர்ந்த ஞானி,' ஒளி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸூர்யன், சந்திரன், மின்னல், இவைகளின் வழியே போய் முடிவில் அமானுஷமான ஒருவனை ஸந்தித்து அவன் மூலமாக மோக்ஷத்தை அடைவதாகிய தேவ்யான மார்க்கந்தின் வழியே சென்று மறுபடி திரும்புவதே இல்லை.' (சாந்தோக்யம்—அத். 4—கண். 15—சுலோ. 5 ; அத். 5, கண். 10 சுலோ. 1, 2.) இவ்வாறு எவ்விதப் பந்தங்களிலிருந்தும் விடுபடுபவர்களே ஜீவன் முக்தர்கள். இந்நிலையை அடைய பரிபாகமாகி வருங்கால் ஜடபாதருக்கு ஏற்பட்டதுபோல ஜீவர்களுக்குத் தடைகள் ஏற்பட அவர்கள் தாழ்ந்த ஜன்மங்களை அடையலாம். ஆனால் இவர்களுக்கு அந்த ஜன்மத்தில்விட்ட குறை வந்து தொட்டுக்கொள்ள கூடியசீக்கிரத்தில் மனிதராகி எளிதில் மீளா நெறி சேர்வார்.

இவ்வாறு ஜீவாத்மாவினது பரகதி நான்குவிதமாகச் சாஸ்திரங்களில் கூறப்படுகின்றன. இவைகளிலிருந்து (1) பகுத்தறிவே இல்லாத பாமரர்கள் லோகாந்தரங்கள் செல்லாது இப்பிரபஞ்சத்தில் மாறிமாறி பிறந்திறந்து உலகில் மொத்துண்டு பகுத்தறிவை அடைவர் (2) பகுத்தறிவு அடைந்தும் நன்னெறி நடக்கமாட்டாதவர் நரகம் சென்று கர்மபலனை அனுபவித்துத் தீர்த்துக் கிரமமாக மனித ஜன்மத்தை அடைவர். (3) பகுத்தறிவோடு அனுஷ்டானமும் ஏற்பட்டுக் காம்ய கர்மங்கள் செய்வோர் ஸ்வர்க்கம் பெற்றுக் கர்மபலனை அனுபவித்துத் தீர்த்து உடனே மனிதராவார். (4) இந்த ரஹஸ்யம் உணர்ந்து நிஷ்காமிகளாகக் கடமைகளைச் செய்யும் உண்மை ஞானிகள் முற்கூறிய பிறப்பிறப்பென்னும் சுழலிலிருந்து விடுபட்டு மீளாநெறி எய்துவர். இவர்கள் தான் 'இஹபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிராகி எங்கு நிறைகின்ற பொருளே;' ஆகின்றனர்.

விவேக போதினி

தொகுதி 3] ஸாதாரணஹூ பங்குனிமீ [பகுதி 10

# முக்கிய உபநிஷத்துக்கள்

## THE PRINCIPAL UPANISHADS

### IX. சாந்தோக்ய உபநிஷத்து (3)

### THE CHANDOGYA UPANISHAD.

அத்யாயம் 6.—அருணர் என்ற ரிஷிக்குச் சுவேதகேது என்ற ஒரு பேரப்பிள்ளை இருந்தான். அவனை நோக்கி அவன் தகப்பனுர் பிரஹ்மசாரியாக இருந்து வேதம் கற்றுவரும்படி உத்தரவு செய்தார். அதன்படியே அவன் 12-வருஷம் குருகுலவாஸம் செய்துவிட்டு 24-வது வயதில் தன் வீடுவந்து சேர்ந்தான். வரும்பொழுது அவனிடம் இருந்த கர்வம் வித்யாமதம் முதலியவைகளை முகத்தின் குறிகளால் உணர்ந்து தகப்பனுர் 'கேட்க முடியாததும், உணர முடியாததும், அறிய முடியாததுமான வஸ்துவை விளக்கும் ஞானமாகிய விஷயத்தைக் கற்றுணர்ந்தாயா ?' என்று கேட்டார்.

சுவேதகேது.—இந்த விஷயம் யாது ?

தகப்பனுர்.—ஒரு உருண்டை களிமண்ணை அறிந்து விட்டால் அதனுலாகிய பாண்டம் முதலிய வஸ்துக்கள் எல்லாம் உணர்ந்ததாகும், தங்கக்கட்டி ஒன்றை உணர்ந்தக்கால் அதனுலாகிய ஆபரணங்களை எல்லாவற்றையும் உணர்ந்ததாகும், ஓர் கத்தரிக்கோலை உணர்ந்தால் இரும்பாலாகிய வஸ்துக்களை உணர்ந்ததாகும் ; அதுபோல அந்த வஸ்துவை உணர்ந்தால் அதன் ஸம்பந்தமாகக் கேவலம் நாம ரூபமாத்திரமாகவே இருக்கும் இப்பிரபஞ்சம் முழுவதையுமே உணர்ந்ததாகும். இத்தன்மையது நான் கூறிய விஷயம்.

சு.—ஒருவேளை என்குருவுக்கு இவ்விஷயம் தெரிந்திருக்காது. இல்லாவிடில் அவர் எனக்கு இதை உபதேசித்திருக்கமாட்டாரா? தாங்கள் தயவுசெய்து எனக்குச் சொல்லவேண்டும்.

த.—(1) ஆதியில் எல்லாம் இரண்டற்ற ஒன்ருகிய ஸத்தாகவே இருந்தது. சிலர் சூன்யமே ஆதியிலிருந்து; அதிலிருந்து ஸத்தும் அஸத்தும் வெளிவந்தன என்பர். ஸத் சூன்யத்திலிருந்து வந்ததென்பது யுக்திக்குப் பொருந்தாது. இந்த ஸத்தில்தான் பலவாகி வளரவேண்டும் என்ற இச்சையால் தேஜஸும்; அதில் உண்டான இச்சையால் அப்பும்; அதில் உண்டான இச்சையால் அன்னமும் முறையே உண்டாயின. இதற்கேற்பவே ஜீவஜந்துக்களும் அண்டஜம் (முட்டையிலிருந்து உண்டாவது) ஜீவஜம் (கர்ப்பப்பையில் உண்டாவது) உத்பிஜம் (பூமியைப் பிளந்துகொண்டு வேர்களிலிருந்து உண்டாவது) ஆகிய மூவகைப்படும். ஆதி ஸத் வஸ்துவானது தேஜஸ், அப்பு, அன்னம் இவைகளுள் பிரவேசித்துவிசித்ரநாம ரூபங்களோடு வெளியாகவேண்டும் என்றுஇச்சிக்க அவ்வாறே ஆயிற்று. இவைகள் ஒவ்வொன்றையும் மும்மூன்று அம்சங்களையும் உடையதாக மாற்றிற்று. தேஜஸ், சந்திரன், மின்னல் முதலிய ஸகல தேஜஸ்களிலும் சிவந்த பாகம் தேஜஸ்அம்சம் என்றும், வெளுத்த பாகம் அப்பின் அம்சம் என்றும், கருத்த பாகம் அன்னத்தின் அம்சம் என்றும் கண்டு பழமையான கிருஹஸ்தர்கள் நாமரூபமாக இருக்கும் எல்லாவற்றையும் முற்கூறிய மூன்று தேவதைகளின் ரூபபேதமே ஒழிய வேறில்லை என்று கண்டு எல்லாவற்றையும் உணர்ந்து திருப்தி, அடைந்தார்கள்.

அண்டத்திலுள்ளது போலப் பிண்டத்திலும். உண்ணும் ஆஹாரம் மூன்று கூருகப் பிரிய ஸ்தூலமான பாகம் மலமாயும், மத்யபாகம் மாம்ஸமாயும், ஸூக்ஷ்ம பாகம் மனமாயும் மாறுகிறது. குடிக்கும் தண்ணீரும் இவ்வாறே பிரிய ஸ்தூல பாகம் மூத்ரமாயும், மத்ய பாகம் ரக்தமாயும், ஸூக்ஷ்ம பாகம் பிராணனுயும் மாறுகிறது தேஜஸ் (உஷ்ணம் உண்டாக்கும் வஸ்துக்கள்)

உட்கொள்ளப் படுங்கால் முற்கூறியது போலப் பிரிய அதன் ஸ்தூலபாகம் எனும்பாயும், மத்யம பாகம் அதனுள்ளிருக்கும் மூளையாயும், ஸூக்ஷ்ம பாகம் வாக்காயும் மாறுகின்றது. தயிர் கடையுங்கால் அதன் ஸூக்ஷ்ம பாகம் எவ்வாறு மேலே மிதந்து வெண்ணெயாகிறதோ அதுபோல உண்ணும் ஆகாரம் குடிக்கும் தண்ணீர் உட்கொள்ளும் உஷ்ணம் உண்டாக்கும் வஸ்துக்கள் ஆகிய இவைகளின் ஸூக்ஷ்ம பாகங்கள் சேர்ந்து முறையே மனம், பிராணன், வாக்கு ஆகத் தோன்றுகின்றன.

[இதன் பின்னர் சுவேத கேதுவை 15 நாள் தீர்த்தபானமாத்திரம் செய்துகொண்டிருக்கும்படி செய்து ஞாபக சக்தி முதலியன ஒடுங்கி நிற்பதை அனுபவித்தறியும்படி செய்து முற்கூறிய உண்மையை நன்கு விளங்கிப் பின்னர் ஆஹாரம் உட்கொள்ளும்படி செய்து ஞாபகசக்தி விருத்தியானதையும் காட்டினர்.]

தூங்குங்கால் ஒவ்வொருவனும் தன்னுள்ளிருக்கும் ஸத்தை நெருங்கி அதனோடு லயித்து நிற்கிறான். ஓரிடத்தில் கட்டப்பட்டிருக்கும்கயிற்றின் மறு நுனியில் கட்டப்பட்ட பறவை எங்கு ஓடிப் பறந்தபோதிலும் நிலை பெறாது முடிவில் கயிறுகட்டியிருக்கும்இடத்தில்வந்து தங்குங்கால் எவ்வாறு நிலைபெறுமோ, அதுபோல எங்கும் ஓடி ஆடித்திரிந்து மொத்துண்ட மனம் அதன் மூலமாகிய பிராணனில் (பரம்பொருளில்) அடங்கி நிலைபெறும். மரணகாலத்தில் வாக்குமனத்திலும்; மனம், பிராணனிலும்; பிராணன் தேஜஸிலும் முறையே அடங்க இதுவும் முடிவில் பரம்பொருளில் அடங்கும். ஆகவே அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம் ஸத் வஸ்துவிலிருந்து பிறந்து அதில் நிலைத்து அதிலேயேஅடங்குகின்றன. இவ்வாறு ஸகலத்திற்கும் ஸூக்ஷ்மஸாரமாக விளங்கும்வஸ்து எதுவோ அதுவேஆத்மா, அது ஸ்தயம், அது நீ ஆனாய் (தத்வமஸி).

[இவ்வாறு உபதேசித்ததும் தத்வமஸி மஹாவாக்யத்தின் உண்மைப்பொருள் விளங்காததால் சுவேத கேதுவுக்கு அவன் தகப்பனர் இதை இன்னும் எட்டுவித திருஷ்டாந்த பூர்வகமாகப் பின்வருமாறு உபதேசிக்கிறார்.]

(2) தேனீக்கள் அநேக மரங்களிலிருந்து ரஸங்களை எடுத்துச் சேர்த்துத் தேன் உண்டாக்குகின்றன. இதில் பின்னர் ரஸங்கள் வேறுபட்டுத்தாம் உண்டான விதத்தையும் வஸ்துவையும் விளக்கா. இதுபோலத் தூங்குங்கால் ஸூக்ஷ்மமாயும், ஸாரமாயும் உள்ள வஸ்துவோடு தமது பேதங்கள் உணராது கலந்து நிற்பதாலும், பின்னர் விழிக்குங்கால் தம்தம் மாறுபாடுகளோடு வெளிவருவதாலும், தூக்கரஹஸ்யம் பிராணிகளுக்கு விளங்குவதில்லை.

(3) அநேகம் ஆறுகள் ஸமுத்ரத்திலிருந்து மேக முதலிய ரூபமாக மாறிப் பிரிந்து முடிவில் ஸமுத்திரத்திலேயே விழுகின்றன. அங்கு அவைகள் மாறுபாடு விளங்காது. இம்மாதிரியே தூக்கத்தில் ஸத்வஸ்துவோடு கலந்திருப்பது விழிக்குங்கால் விளங்காது நிற்கின்றது.

(4) ஒரு மரத்தின் பாகங்களைத் தனித் தனியாக வெட்டிப் பார்த்தால் அது பால் சொரிந்து நின்று மேலும் வளரும். அதனுள்ளிருக்கும் ஆதாரவஸ்து பிரிந்துவிட்டால் அது வெட்டாமலே பட்டுக்கொண்டுவரும். ஆகவே ஓர் வஸ்துவின் சேர்க்கையால் மரம் வளருவதும், அதன் பிரிவால் அது அழிவதுமாக இருக்க, அந்த வஸ்துவுக்கு இவ்வித மாறுதலே இல்லை. இது போன்றதுதான் ஸூக்ஷ்மமாயும் ஸாரமாயும் உள்ளவஸ்து.

(5) ஆலின் பழம் சிறியதாக இருக்கிறது. அதனுள் அநேக சிறுவிதைகள் இருக்கின்றன. அவைகளுள் ஒன்றை உடைத்துப் பாத்தால் உள்ளே ஒன்றும் காணப்படவில்லை. அதனுள் ஓர்வித ஸூக்ஷ்ம ஸத் இருந்துகொண்டே இப்பெரிய மரத்தை அதிலிருந்து ஒழுங்காக வளர்ந்து ஓங்கும்படி செய்கின்றது. இதுபோன்றதே ஸூக்ஷ்மமாயும் ஸாரமாயும் உள்ள வஸ்து.

(6) உப்பைதண்ணீரில் போட்டுவிட்டு வெகு

நாழிகை கழித்துப்பார்த்தால் அதை வேறாகப் பிரிக்க முடியாது. மறைந்து விடும். ஆனால் தண்ணீரை எந்தவிடத்தில் ருசிபார்த்தாலும் ஸரி உப்பிருக்கிறது விளங்கும். இதுபோல நமக்கு வெளிப்படையாக விளங்காத போதிலும் ஸூக்ஷ்மமாயும் ஸாரமாயும் உள்ள ஸத்வஸ்து இருக்கவே இருக்கின்றது. (அதை உணரும் மார்க்கம் வேறு.)

7. காந்தார தேசத்தான் ஒருவன், கண்ணைக் கட்டிஓர்நிர்ஜனமானகாட்டில்திருடர்களால்விடப்பட்டால், அவன் நாற்புறமும் திரும்பித் திரும்பி தன்கஷ்டத்தைச் சொல்லிக் கதறுவான். இதைக் கேட்டுக் காலக்கிரமத்தில் அங்கு வருபவன் ஒருவன் அவன் கண்ணைத்திறந்து காந்தார தேசத்தின், வழியைக்காட்ட அவன் கிராமம் கிராமமாக விசாரித்துக்கொண்டு காந்தாரதேசம் போய்ச் சேருவான். அதுபோல ஆசார்யனைத்தேடி அடைபவன் இந்த ஸூக்ஷ்மமாயும் ஸாரமாயும் உள்ள வஸ்துவை உணருவான். அவனுக்கு கிரமமாக மோக்ஷம் ஸித்திக்கும்.

(8). மரணகாலம் ஸமீபித்திருப்பவனைச் சுற்றி அவன் உறவினர்கள் கூடிக்கொண்டு 'நான் யார் தெரிகிறதா?' என்று அடிக்கடி கேட்பார்கள். முன்னர் கூறியபடி வாக்கு, மனம், பிராணன் பரம்பொருள் ஆகிய இவைகளில் முறையே லயம் உண்டாவதற்கு முன் அவனுக்கு வெளி விஷயங்கள் விளங்கும். பின்னர் விளங்கா. இந்த முடிவான வஸ்துவாகிய பரம்பொருளே ஸூக்ஷ்ம ஸாரமான வஸ்து.

(9) திருடிவிட்டதாகஒருவன்மேல்பழிசுமத்திக் கொண்டுவந்து காய்ச்சின இரும்பைக் கையிலெடுக்கும்படி அவனைத் தூண்டுவார்கள். உண்மையில் திருடாதவனாகிய அவன் கையில் சூடு உறைக்காதது கண்டு அவனை விட்டுவிடுவார்கள். அவனுக்குச் சுடவொட்டாது தடுத்த ஸத்யமே அந்த ஸூக்ஷ்ம ஸாரமான ஸத்வஸ்து.

'இவ்வாறு ஒன்பது விதமாக விளக்கப்பட்ட ஸத்வஸ்துவே ஸகலத்திற்கும் ஆதாரம். அதுவே ஸத்யம், அதுவே ஆத்மா. அது நீ யானாய் (தத்வமஸி) என்று தகப்பனார் உபதேசிக்கத் தேரித் தெளிந்தான் சுவேதகேது.'

அத்யாயம் 7.—முன்னொரு காலத்தில் நாரதர் ஸனத்குமாரரை அடுத்துத் தமக்கு உபதேசம் செய்யவேண்டுமென்று மஹா வினயத்துடன் கேட்டார். அதற்கு அவர் 'உனக்குத் தெரிந்ததைக் கூறு. மேல் விஷயங்களை நான் உபதேசிக்கிறேன்' என்றார். அதற்கு நாரதர் 'நான்கு வேதம் இதிஹாஸ புராணங்கள், வ்யாகரணம், சிராத்தகாண்டம்,கணிதம்,சகுனசாஸ்த்ரம், கால சாஸ்த்ரம், தர்க்கம், தர்மசாஸ்த்ரம், ராஜ்யதந்த்ரம், நிருக்தம், சிக்ஷை, பூதசாஸ்திரம், தனுர் வித்தை, வானசாஸ்திரம், ஜ்யோதிஷம், பாம்பாட்டி வித்தை, கானம் முதலிய ரஸிக சாஸ்திரம், ஆகிய அநேக சாஸ்திரங்களை நான் பயின்றிருக்கிறேன். இப்படி இருந்தும் எனக்கு அநேகவித வாக்குஞானமும்பேசும் திறமும் ஏற்பட்டிருக்கிறதே ஒழிய ஆத்மஞானம்வந்ததாகத் தோற்றவில்லை. இது வந்தால் துக்க நிவிர்த்தி என்று கூறப்பட்டிருக்கிறது. எனக்கு இன்னம் துக்கம் தீரவில்லை. என்னைக் கிருபை கூர்ந்து காக்கவேண்டும்' என்று வேண்டினார்.

ஸனத்குமாரர் 'உனக்கு நாம ஞானம் ஏற்பட்டிருக்கிறது. நீ பயின்றிருப்பதெல்லாம் வெறும் நாமத்துள் அடங்கும். ஆதலால் இவைகளின் ஸாரமாகிய நாமத்தைப் பிரஹ்மமாக த்யானித்து அதன் ஸ்வரூபத்தைமுதலில்உணர வேண்டும். அவ்வாறு செய்தால் நாமம் ஸம்பந்தப் பட்டவரையில் உனக்குப் பந்தநிவிர்த்தி ஏற்படும்'என்று கூறினார்.

இதைக்கேட்டதும் கேவலம் நாமம் எப்படி பிரஹ்மமாகும்? அதைவிட மேலானது ஒன்றும் இல்லையா? என்றசங்கை பிறக்க அடுத்த படியை ஸநத்குமார் எடுத்து விஸ்தரித்தார். அங்கும் சங்கை நாரதர் மனதில் உண்டானதைக் கண்டு

அவர் நாரதருக்குக் கிரமமாக மேலான விஷயங்களைப் புகட்டத் தொடங்கினர்.

அப்பொழுது, நாமம், வாக்கு, மனம், ஸங்கல்பம், சித்தம், த்யானம், விக்ஞானம், பலம், அன்னம், அப்பு,தேஜஸ், ஆகாசம், ஸ்மரணம்,ஆசை, பிராணன், முதலியவைகளின் ஸ்வரூபத்தை எடுத்துக்கூறி முறையே முன்னதை விடப் பின்னது சிறந்தது என்றும் பிராணனே மிகச் சிறந்தது என்றும் கூறினர். 'இவைகளை முறையே பிரஹ்மமாக த்யானித்து வருபவர் கிரமமாக அவ்வவ்வைகள் ஸம்பந்தப்பட்டவரையில் விடுபட்டு ஆனந்தம் அடைவார்கள் என்பதை குறிப்பித்தார். இந்த ப்ராணன் தேஹத்தோடு ஸம்பந்தப்பட்டிருந்தால்தான் அதற்கு மரியாதை முதலியன உண்டு. பிரிந்ததும் அவைகள் ஒன்றிற்கும் யோக்யதையில்லாக் கட்டையின் நிலையைத் தேஹம் அடையும். இந்த ப்ராணன் மிக ஸாரமான வஸ்து. இதுதான் எல்லாமாகி நிற்பதும். இவ்வாறு உணருபவன் அதிவாதியாவான்.என்றூர்

இதன் பின்னர் 'ப்ராணரஹஸ்யத்தை உணர்ந்தவன் ஆதியில் கூறிய நாமவிஷயத்தைப் பார்க்குங்கால் அதிவாதியே ஒழிய உண்மையானஅதிவாதியல்ல' என்று உண்மையான அதிவாதி லக்ஷணத்தைக் கூறத் தொடங்கி 'ஸத்யத்தை உள்ளபடி உணர்ந்தவனே உண்மையான அதிவாதி' என்றூர். அந்த உண்மையை உணரத் தமக்கு மிகுந்த ஆவலிருக்கிறதென்று நாரதர் கூற அதற்கு அவர் 'இதை உணர இதை முதலில் அறிதல்வேண்டும். இந்த விக்ஞானத்தின் (அறிவின்) ஸ்வரூபம் முதலில் விளங்க வேண்டும், என்று கூறி, ஸத்யம், விக்ஞானம், (அறிவு) மதி (எண்ணம்), சிரத்தை, நிஷ்டை, கிருதி (கடமை), ஸுகம், பூமா (அகண்டம்) ஆகிய இவைகளில் பின்னதை உணர்ந்தால் தான் முன்னது நன்ருக விளங்கும் என்று கிரமமாக நாரதரை அழைத்துச் சென்று அகண்ட வஸ்துவரையில் கொண்டுவந்து விட்டு 'எந்நிலையில் ஒருவன் பார்ப்பதற்கும் கேட்பதற்கும் உணருவதற்கும் வேருன ஓர் வஸ்து எதிர்ப்படாதோ அதுவே அகண்டநிலை, அழிவற்றது. எங்கு இவைகள் காணப்படுமோ அது கண்டம், அழியக் கூடியது. அகண்டவஸ்து தானகவே தனித்து தன் சிறப்பாலேயே நிராதாரமாய் நிற்கும்.' என்று அத்யத்புதமாக அதை விளக்கி 'விஷயச் சிறப்புக்கும் இதற்கும் இந்த நிராதாரமாகத் தானே தனித்து நிற்பதே முக்யபேதம். இந்த அகண்டமே எங்கும் இருப்பது, இதுவே நான் என்பதும், ஆத்மா என்பதும். இவ்வாறு உணருபவருக்கு முற்கூறிய பிராணன் முதலியனவும், விக்ஞானம் முதலியனவும் இந்த ஆத்மாவிலிருந்தே உண்டாவதாக வெளியாகும். இவனுக்குத் துக்கம் வ்யாதி மரணம் முதலியவைகள் தோற்றவேமாட்டா. இவன் எல்லாம் உணர்ந்தவனுவான். தானே எல்லாமாயிருப்பதையும், எல்லாம் தன்னுள் அடக்கி நிற்பதையும் இவன் காண்பான்.' என்று விஸ்தரித்தார்.

இதன் பின்பு, 'ஆஹாரம் (இந்திரியங்களால் உட்கொள்ளுவது) சுத்தமானதும் (ராகம் துவேஷம் மோஹம் முதலியன அற்றதாக ஆனதும்) மனம் சுத்தமாகும், பின்னர் ஞாபகம்திடப்படும், இதனுல் பந்தம் நீங்கும்' என்ற அகண்டத்வம் அடையும் வழியையும் காட்டினர். அப்பொழுது நாரதர் தோஷம் நீங்க ஸநத்குமாரர் அவருக்கு அஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்ட வஸ்துவைத் தர்சனம் செய்துவைத்தார்.

அத்யாயம், 8.—இதில் முதலில் பரம்பொருள் ஹிருத ஆகாசத்தில் இருப்பதையும், அவரை உணருவதற்கு ஏற்பட்டுள்ள யோகமார்க்க வழிகளையும்,அவைகளின்விஸ்தாரங்களையும்கர்மத்தால் விளையும் பலன் நீடித்து நிற்காமலிருக்க, யோகத்தின் பலன் நீடித்து நிற்பதையும், பரம்பொருளோடு ஸம்பந்தப்பட்டதால் யோகிக்கு அவன் எண்ணங்கள் நிறைவேறுவதையும், ஆயினும் அவன் ஆசா பூர்த்தி அக்ஞான ஸம்பந்தமுடையதாலும், மரணத்தைத் தாண்டும் திறனைக்கொடுக்காததாலும், தாழ்ந்த தென்பதையும்' எடுத்து

விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. 'இவைகளைத் தவிர்த்து ஹிருதயத்திலுள்ள ஆத்மாவை உணருபவன் தேஹபாவம் நீங்கித் தன் உண்மை ஸ்வரூபத்தை உணர்ந்து ஆனந்த ரூபனுவான். இது தான் ஆத்மா, அழிவற்றது. பயமற்றது, பிரஹ்மம், ஸத்யவஸ்து. இதுதான் அஞ்ஞானுந்தகாரத்திற்கு அப்பாற்பட்டது. தோஷரஹிதமானது. எல்லாவற்றிற்கும் ஆதாரமானது. இதை அடைந்தவர்களுக்குத் துக்கமே இல்லாமல்போய் விடும். பிரஹ்மசரியமே இதை அடைவதற்கு வழி, யஞ்ஞம், இஷ்டம், ஸத்ராயணம், மௌனம் முதலிய ஸகல ஸத்கர்மங்கள் குணவிசேஷங்கள் எல்லாம் பிரஹ்மசரியமே.' என்று கூறி இதன் பின்னர் பின்வரும் கதாரூபமாக ரஹஸ்ய விஷயங்களை இவ்வுபநிஷத்து உபதேசிக்கின்றது.

'தேஹரஹிதம்,அழிவற்றது, மாறுதது, துக்கம் மற்றது, பசிதாகமற்றது, ஆசை அற்றது, ஆகிய ஆத்மா எல்லோராலும் தேடி உணரத் தக்கது. அவ்வாறு செய்பவர் ஸகல லோகங்களிலும் அசை நீங்கப் பெற்றவராவார்' என்று பிரஹ்மா முன்னெருகால் கூறியதைத் தேவாஸுரர்கள் கேட்டுக்கொண்டிருந்தார்கள். உடனே அவர்களுக்கு ஆத்மாவைத் தேடி அடைய வேண்டும் என்ற ஆவலுண்டாயிற்று. அப்பொழுது தேவர்கள் இந்திரனையும், அஸுரர்கள் விரோசனனையும் அனுப்பி இந்த விஷயத்தை பிரஹ்மாவிடம் இருந்து கற்று வந்து தமக்கு உபதேசிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டனர். இவர்கள் பிரஹ்மசாரிகளாக 32 வருஷம் பிரஜாபதியிடம்இருக்க அதன் முடிவில் இவர்கள் நோக்கத்தை விசாரித்து'கண்ணுள் இருப்பவனே நான் முற்கூறிய ஆத்மா' என்முர். 'கண்ணுடி தண்ணீர் இவைகளுள் முகத்தைப் பார்க்குங்கால் காணப்படுவதா ஆத்மா?' என்று அவர்கள் வினவினர். அதற்கு அவர், 'தண்ணீர் நிறைந்த பாத்திரத்துள் பாருங்கள். பின்னர் அலங்காரம்(ஸாதஸம்பாத்யம்)செய்து கொண்டுபாருங்கள்' என்ன. அவர்கள் அவ்வாறே செய்து 'எப்பொழுதும் நாம் இருப்பது போலவே அதனுள்ளும் காணப் படுகிறது' என்றனர். 'அதுதான் ஆத்மா, பிரஹ்மம்' என்முர் பிரஜாபதி. இருவரும் திருப்தி அடைந்துபோவதைக்கண்டு 'உண்மையை முற்றிலும் உணராது போய்விடுகிருர்களே' என்று பிரஜாபதி வருந்தினுர். விரோசனன் ஒரே போக்காகப் போய் அஸுரர்களுக்கு 'நாமே ஆத்மா, நம்மை நன்முகக் கவனித்து வாழ்ந்தால் மேலான நிலை நமக்கு வரும்' என்று உபதேசிக்க அவர்களுக்கு தேஹாத்மஞானம் நன்முக நிலைபெற்றது.

இந்திரனுலோ அவ்வாறு செய்யமுடியாமல் போய்விட்டது. வழியிலேயே 'நமது தேஹத்தை போல் அல்லவா அந்தநிழல் இருந்தது. தேதம்தின் மாறுபாடுகள் எல்லாம் அங்கும் காணப்படுமே. அப்படி இருக்க அதை அழிவற்ற ஆத்மா என்று எப்படி மதிப்பது' என்ற சங்கை பிறந்துவிட, மறுபடியும் பிரஜாபதியிடம் வந்து தன் சஞ்சலத்தை வெளியிட்டான். அப்பொழுது அவனை 32 வருஷம் பிரஹ்மசாரியத்திலிருத்தி முடிவில் ஸ்வப்நத்திலும் இருப்பவன் எவனோ அவனே ஆத்மா பிரஹ்மம்' என்முர். 'இது தேஹதர்மத்தோடு ஸம்பந்தப்படாவிடினும் ஸ்வப்நத்தில் ஸுக துக்கங்களுக்கு ஆளாகிறது. ஆதலால் இதை மாறுபடாப் பிரஹ்மம் என்று கூறுவது எப்படித்தகும்' என்று மறுபடி இந்திரன்சங்கித்து திரும்பினுன். அவனை மேலும் 32-வருஷம் பிரஹ்மசரியத்திலிருத்தி முடிவில், 'நல்ல காடநித்ரையிலும் (ஸ்வப்நமற்ற தூக்கத்திலும்) இருப்பவனே ஆத்மா, பிரஹ்மம்' என்முர். இதிலும் அவனுக்குத் திருப்திவரவில்லை. 'இந்தநிலையிலும் தான் இன்னுர் என்று விளங்காமையால் அஞ்ஞான ஸம்பந்தமிருக்கிறது. இதை அஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்ட ஆத்மாஎன்று எப்படி மதிப்பது' என்றசங்கை வந்துவிட்டது. மறுபடியும் 5-வருஷம் பிரஹ்மசரியம் அனுஷ்டிக்க ப்ரஜாபதி, 'தேஹஸம்பந்தமே ஸகல துவந்துவத்திற்கும், துக்கத்திற்கும், காரணம் தேஹ

ஸம்பந்தம் (பாவனை) விடுபட்டால்தான் துக்க நிவிருத்தி. ஆகாயத்தில் மழை, மின்னல், இடி முதலியன மறைந்திருந்து ஸூர்ய வெப்பத்தால் எவ்வாறு ஸ்வந்த ரூபத்தோடு வெளியாகின்றனவோ அப்படியே பரஞ்ஜோதியோடு ஸம்பந்தப்பட்டதும் ஆத்மா தேஹபந்தத்திலிருந்து விடுபட்டு ஸ்வந்தரூபத்துடன் விளங்கும். இதுதான் உத்தம புருஷன். வண்டியில் பூட்டப்பட்ட குதிரை வண்டியைவிட்டு, வேருக இருப்பதுபோல இதை உணர்ந்தவன் தேஹத்தோடிருக்குங்கால் எங்கிலையி விருந்தபோதிலும் (மனம் எப்படி இருந்தபோதிலும்) பற்றற்றே நிற்பான். இந்த ஆத்மாதான் ஸகல தொழில்களுக்கும் ஆதாரமாக இருப்பது. இதன் ஸந்நிதான மன்றியில் ஒன்றும் நடவாது, மனமே விஷயங்களை நோக்கி உணரும் தன்மையான ஓர் கண்போன்றது. இதன் மூலமாகவே எல்லாவற்றோடும் ஆத்மாவுக்கு ஸம்பந்தம் ஏற்படுகிறது' என்று பிரஜாபதி இந்திரனுக்கு உபதேசித்தார்.

இவ்வாறு 101 வருஷம் இந்திரன் பிரஜாபதியிடம் குருகுலவாஸம் செய்து அறிந்துகொண்ட ஆத்ம ரஹஸ்யத்தைத் தேவதைகளுக்கு உபதேசிக்க அவர்கள் இதை நன்கு உணர்ந்துமேன்மையை அடைந்தனர்.

இதன் பின்னர் இவ்வுபநிஷத்தில் இரண்டு மந்திரங்கள் காணப்படுகின்றன. இவைகள் ஜபிக்கவும், த்யானம்செய்யவும் யோக்கியமானவை. இவ்வுபநிஷத்தின் சுருக்கமாக இருப்பவை இந்த ஞானம் வந்த குருபரம்பரையையும், ஆசார்யனிடம் இதை உணர்ந்து க்ருஹஸ்தனகி ஆத்மத்யானம் செய்து, கூடியவரையில் அஹிம்ஸையில் பழகி நாட்கழிப்பவன் மீளாநெறியாகிய பிரஹ்மத்தை எய்துவன் என்பதையும்கூறி இவ்வுபநிஷத் முடிவு பெறுகிறது.

ஓம் தத் ஸத்.

# பாட்டினியல்பு

## THE NATURE OF POETRY

பிற்காலத்துத் தமிழ்ப்புலவர் பாட்டென்பது இன்னதென்றே அறியாமல் விநோத விநோதமாகச் சொற்களைக் கோத்துப் பொருள் ஆழமின்றிச் செய்யுள் இயற்றுகின்றார். முற்காலத்துத் தமிழ்ப்புலவரோ பாட்டு என்பதன் இயல்பை இனிதறிந்து நலமுடைய செய்யுட்கள் பலப்பல இயற்றினர். இங்ஙனம் முற்காலத்தாராற் செய்யப்பட்ட பாட்டின் இயல்போடு மாறுபட்டுப் பிற்காலத்தார் பிறழப் பாடிய செய்யுட்களைக் கண்டு மாணுக்கர் பாட்டினியல்பு அறியாது மயங்குவாராகலின் பாட்டு என்பது இன்னதென்று ஒரு சிறிது விளக்குவாம்.

உலக இயற்கையிற் கண் முதலான புலன்களுக்கு விளங்கத்தோன்றும் அழகினை யெல்லாம் தன்னுள்ளே நெருங்கப்பொதிந்து வைத்துப் பின் அவற்றை நம் அறிவினிடத்தே புலப்படும் வண்ணம் தோற்றுவித்து, மாறுதல் இல்லா இனிய ஓசையுடன் ஒற்றுமைப்பட்டு நடைபெறும் இயல்பினையுடையதுதான் பாட்டு என்றுஅறிதல் வேண்டும். இன்னும் எங்கெங்கு நம் அறிவைத் தம் வயப்படுத்துகின்ற பேரழகும் பேரொளியும் பெருங்குணமும் விளங்கித்தோன்றுகின்றனவோ அங்கெல்லாம் பாட்டு உண்டென்றே அறிதல் வேண்டும். இதனை விரித்துக் காட்டுமிடத்து பேர் அழகாற் சிறந்த ஓர் அரசி தான் மேற்போர்த்திருந்த நீலப்பட்டு ஆடையினைச் சிறிது சிறிதாக நீக்கிப், பின்பு அதனைக் கீழே சுருட்டி எறிந்து விட்டுத்துயில் ஒழிந்து ஒளி விளங்குநளிமுகங் காட்டி எழுந்ததுபோல, இருட்கூட்டம் குவிந்து மழுங்கி அலைகடலிற் சென்று அடங்கும்படி இளையஞாயிறு உருக்கித் திரட்டிய பசும் பொற்கோளம் போலத் தளதளவெனக் கீழ்த் திசையில் தோன்றவும், அத்திசையின் பரப்பெல்லாம் பொன் உரைத்த கற்போற்ப் பொலிந்து பிரகாசிப்பவும், பசுமை

பொன்மை நீலம் சிவப்பு வெண்மை முதலான நிறவேறுபாடு உள்ள உலோகங்கள் உருகி ஓடுகின்ற நிலம்போல வான் இடமெல்லாம் பல வண்ணமாய் விரிந்து விளங்கவும், கரிய மேகங்களெல்லாம் செவ்வரக்கு வழித்த அகன்ற திரைச் சீலைகள் எனவும், வெளிய மேகங்களெல்லாம் பொற்பட்டுப்படாம் போலவும் ஆங்காங்குச் சொல்லுதற்கு அரிய பெரும் பிரகாசத்துடன் திகழவும் உலகமங்கை நகைத்தாற்போலப் புதுமையுற்றுத் தோன்றும் விடியற்கால அழகெல்லாம் பாட்டென்றே அறிதல் வேண்டும். ஆ! இங்ஙனந்தோன்றும் அவ்விடியற்கால அழகினைக்கண்டு வியந்த வண்ணமாய் மீன்வலையோடு கடற்கரையில் நிற்குஞ் செம்படவனைக்காட்டினுஞ் சிறந்த புலவன் யார் ?

அவ்விடியற் காலையிலே முல்லைநிலத்துக் கோவலர் ஆன் கன்றுகளைக் கொட்டிலிலே தாம் பிணைற் கட்டிவைத்து, ஆன் நிரைகளை அடுத்துள்ள மலைச்சாரலிற் கொண்டுபோய்ப் பசிய புல் மேயவிட்டுத் தாம் மரநிழலிற் சாய்ந்திருந்து கொண்டு, தமக்கெதிரே பச்சிலைப்போர்வை மேற்கொண்டு கரியமேகங்கள் நெற்றி தழுவிக்கிடப்பப் பெருந்தன்மையோடு வான் அளாவித் தோன்றும் மலையினை அண்ணாந்து பார்த்து அவர்கள் அச்சமும் மகிழ்ச்சியும் அடையும்போது அங்கும் பாட்டு உண்டென்றே அறிதல்வேண்டும். காதலினாற் கட்டுண்ட இளைஞரும் மகளிரும்நெகிழாத அன்பின் மிகுதியால் தோளோடு தோள் பிணையத் தழுவிக்கொண்டு மலையடிவாரத்தில் உள்ள பூஞ்சோலைகளிற் களிப்பாய் உலவுந்தோறும், தூங்கணங்குருவிகள் மரங்களில் விசித்திரமான கூடு கட்டுதலையும், மரப்பொந்துகளில் மணிப்புறாக்கள் கூவுதலையும், ஆண்மயில்கள் தம் அரிய கலாபத்தினை விரித்துப் பெடைமயில் கண்களிப்ப ஒருபுறம் ஆடுதலையும், மலையருவி நீர் கூழாங்கற் படையின்மேற் சிலுசிலுவென்று ஓடிவந்து அச்சோலையின் ஒரு பக்கத்துள்ள ஆழ்ந்த குட்டையில் நிரம்பித் தளும்ப அதிலுள்ள செந்தாமரை முகிழ்கள் அகன்ற இலைகளின்மேல் மிகச் சிவப்பாய் அலர்தலையும் விரும்பிக்கண்டு, நறுமணங்கமழும் பூக்களை மரங்களினின்றுந் தாவிப் பறித்துக் கரியகூந்தலில் மாறி மாறி அணிந்தும், சிவக்கப்பழுத்த கொவ்வைக் கனிபோன்ற தம் இதழ்கள் அழுந்த முத்தம் வைத்துக்கொண்டும், தேன் ஒழுகினாற்போல மதுரமான நேசமொழிகள் பேசிக்கொண்டும் அவர்கள் செல்லுமிடத்து அங்கும் பாட்டு உண்டென்றே அறிதல் வெண்டும்.

சுருங்கச் சொல்லுங்கால் எங்கெல்லாம் நமதுணர்வை வசீகரிக்கின்ற பேரழகு உலக இயற்கையில் காணப்படுமோ அங்கெல்லாம் பாட்டு உண்டென்பது தெளியப்படும். ஆயினும், ஒரு நல்லிசைப்புலவனால் இயற்றப்படுகின்ற பாட்டுப் போல அது நூலினிடத்தே காணபபடுவதில்லையேயெனின் ; ஒரு நூலின்கண் எழுதப்பட்டு உலக இயற்கையின் அழகை நமதுள்ளத்திற் பொருத்திக் காட்டி நமக்கு உணர்வு பெருக்குஞ் சொல்லின் தொகுதியான பாட்டு நூலின்கண் எழுதப்படுகின்ற வடிவுடைய பருப்பொருளாகும் ; உலக இயற்கையின் அழகோடு ஒற்றுமைப்பட்டுக் கண்முதலான புலன்வழிப் புகுந்து நமக்கு உணர்வு மிகுதியினை வருவிக்கும் பாட்டு வடிவு இல்லாத நுண்பொருளாகும். இங்ஙனமாகலின் உலக இயற்கையிலெல்லாம் பாட்டு உண்டென்பது துணிபேயா மென்க.

அல்லாமலும், உயிர் வாழ்நாளில் ஒவ்வொரு நாளும் நம்முடைய நினைவுகளெல்லாம் உணவு தேடுதலினும், பொருள் தொகுப்பதினும்,மனைவி மக்கட்கு வேண்டுவன திரட்டிக்கொடுத்தலினும், பிறர் இட்ட ஊழியஞ் செய்தலினுமாகப் பலவாறு சிதறி அருமை பெருமையின்றி அவலமாய்க்கழிந்து போகின்றன. இவ்வாறு கழிந்து போகும் மக்களுடைய நினைவுகளுஞ் சொற்களுஞ் செயல்களும் நமக்கு இன்பந்தாராவாகலின் அவற்றை அறிய வேண்டுமென விரும்புவார் உலகில் யாருமிலர். இனி, இவ்வாறு கழியும் நாட்களில்

ஓரோவொருகால் அவர் அறிவு அவல நினைவு களின் வேருகப்பிரிந்து, உலக இயற்கை யழகிற் படிந்து அதன் வண்ணமாய்த்திரிந்து தெளி வுற்று விளங்கும்போது, அவ்வறிவிற் சுரந்து பெருகும் அரிய பெரிய கருத்துக்களையே நாம் அறிவதற்கு மிக விரும்புகின்ருேம். இங்ஙனந் தோன்றும் அரிய பெரிய கருத்துக்களின் கோவை ஒழுங்கினையே பாட்டென்றும் அறிதல் வேண்டும். இன்னும் மக்கள் வாழ்நாள் என்கின்ற நீரோடையிலே அவல நினைவுகளான கலங்கல் நீர் பெருகிச் செல்லும்போது, உலக இயற்கை யென்னும் மலைக்குகைகளிலே அரித்து எடுத்து வந்த அருங்கருத்துக்களான பொற்றுகள் இடையிடையே ஆழ்ந்து அவ்வோடையின் அடிநிலத்திற் சிதர்ந்து மின்னிக்கிடப்ப, நல்லிசைப் புலவன் என்கின்ற அரிப்புக்காரன் மிக வருந்தி முயன்று அப்பொற் சிதர்களையெல்லாம் ஒன்ருகப்பொறுக்கி எடுத்துத் தன் மதிநுட்ப நெருப்பிலிட்டு உருக்கிப் பசும் பொற்பிண்டமாகத் திரட்டித் தருவதே பாட்டுஎன்றும் அறிதல் வேண்டும். இன்னும் மக்கள் அறிவு என்கின்ற தித்திப்பான அரிய அமிழ்தம் பலவகையான குற்றங்களானுங் கலப்புற்று அசுத்தமாய்ப் போக, நல்லிசைப் புலவன் தன் பேறிவிஞல் அதனைத் தெள்ளி வடித்து அதன் இன்சுவையினை மிகுதிப்படுத்தி நாமெல்லாம் பருகிப் பெரியதோர் ஆறுதல் அடையக் கொடுப்பன்; அங்ஙனங் கொடுக்கப்படுஞ் சுத்த அறிவின் விளக்கமும் பாட்டு என்றே அறிதல்வேண்டும். இக்கருத்துப்பற்றியே மில்ட்டன் என்னும் ஆங்கில மொழிவல்ல நல்லிசைப்புலவரும், "பாட்டென்பது மக்கள் மன அறிவின் சாரமாய் இறக்கப்பட்ட பரிசுத்தமான அமிழ்தம்" * என்று உரை கூறினர். இது நிற்க.

இனி இங்ஙனம் இயற்றப்படுகின்ற பாட்டு உலக இயற்கை யழகுடன் பெரிதும் பொருந்தி நடத்தல் வேண்டும். இன்னும் இதனை நுணுகி நோக்கு மிடத்துப் பாட்டுப் பாடுதலில் வல்லவனுன நல்லிசைப் புலவனுக்கும், உலக இயற்கையினைப் பலவகை வண்ணங்களாற் சித்திரித்துக் காட்டுகின்ற ஓவியக்காரனுக்கும் ஒற்றுமை மிக உண்டென்பது தெளிதிற் புலப்படும். ஆயினும், ஓவியக்காரன் சித்திரிக்கின்ற படம் கட்புலனுக்கு மாத்திரம் தோன்றும்; நல்லிசைப் புலவன் சித்திரிக்கின்ற பாட்டோ கண்முதலான புலன்களின் சாரமாய் விளங்கும் உள்ளத்திலே தோன்றும். ஓவியக்காரன் தான் எழுத எடுத்துக்கொண்ட பொருளைப் பன்முறையும் நுண்ணிதாக அளந்தளந்து பார்த்துப் பின் அதனைத் திறம்படச் சித்திரித்தால் மாத்திரம் அப்படத்தைக் கண்டு வியக்கின்ருேம்; தான் விரித்து விளக்கமாய் எழுதவேண்டும் பகுதிகளில் அவன் ஒரு சிறிது வழுவி விட்டானுயினும் அப்படத்தின் கண் நமக்கு வியப்புத் தோன்ருது ஒழிகின்றது. நல்லிசைப் புலவனே அங்ஙனம் அவனைப் போல் ஒவ்வொன்றனையும் விரிவாக விளக்கிச் சொல்ல வேண்டும் பிரயாசை உடையான் அல்லன். ஓவியக்காரன் புலன் அறிவைப் பற்றி நிற்பவன்; புலவனே மன அறிவைப் பற்றி நிற்பவன். புலனறிவோ பருப்பொருள்களை விரித்தறியும் இயல்பினுள்ளது; மனவறிவோ அப்புலனறிவின் சாரமாய் நின்று நுண்ணிதாம் பொருளையும் தானே ஒரு நொடியில் விரித்தறியும் ஆற்றல் வாய்ந்தது. அம்மம்ம! மனேபாவகத்தின் ஆற்றலை யாம் என்னென்றுசொல்லுவோம்! அணுவை ஒரு நொடியில் மலைபோற் பருக்கச் செய்யும், மலையை மறுநொடியில் ஓர் அணுவினுங் குறுகச்செய்யும். இங்ஙனம் விசித்திர இயல்புடைய மனேபாவகத்தினை நல்லிசைப் புலவன் என்னும் மந்திரகாரன் தன் மதி நுட்பமாகிய மாத்திரைக்கோலால் தொடுதல் மாத்திரையானே அது திடுக்கென்றெழுந்து அவன் விரும்பிய வண்ணமெல்லாஞ் சுழன்று சுழன்ருடும். இன்னும் இதனைச் சிறிது விளக்குவாம். ஓவியக்

*Areopagitica

காரன் பயங்கரமாக அகன்றதோர் கரிய பெரிய காட்டினை எழுதல் வேண்டுமாயின் பலநாளும் பல காலும் அதன் இயற்கையினை அறிந்தறிந்து பார்த்துப் பரியமரங்கள் அடர்ந்து ஓங்கி ஒன்றோடொன்று பிணைந்து வெளிச்சம் புகுதாமல் தடை செய்து நிற்றலையும், அக்காட்டின் வெளித்தோற்ற அமைப்பினையும், மரங்களின் இடையிலுள்ள சந்து வெளிகளில் நமது பார்வை நுழையுங்கால் அவை தோன்றுந் தன்மையினையும், உள்ளே இருள் தடிப்பாய்ப் பரவியிருத்தலையும் அங்குள்ளவாறே சிறந்த பல வண்ணங்களைக் குழைத்து இரட்டுத் துணியின்மேல் மிகவருந்தி எழுதிக் காட்டல் வேண்டும்; இஃது அவனுக்குப் பலநாள் வேலையாக முடியும். நல்லிசைப் புலவனோ, 'பரிய மரங்கள் அடர்ந்தோங்கிப் பிணைந்து நிற்குங் கரிய காடு' என்று சில சொற்களைத் திறம் படச் சேர்த்துக் கூறுதல் ஒன்றானே ஒருநொடிப் பொழுதில் அவ்வோவியக்காரனாலுங் காட்டமுடியாத ஒரு பேரற்புத வுணர்வினை நம்மனத்தகத்தே விளைவிக்கும் ஆற்றலுடையனாவான். இஃது அவனுக்கு மிக இலேசிலே முடிவதொன்றும். இங்ஙனம் மனோபாவகத்தை எழுப்புதல் மிக எளிதிலே செய்யக்கூடியதொன்றாயினும், அம்மனவியல்பின் நுட்பம் உணர்ந்து அவ்வாறு செய்ய வல்லரான நற்பெரும் புலவர் உலகிற் சிலரேயாவர். புலவனுடைய திறமையெல்லாம் "சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளைக்" காட்டுகின்ற அரும் பெருஞ்செய்கையினாலேதான் அறியப்படும். இங்ஙனம் பாட்டு வழக்கின் நுட்பம் உணர்ந்து பிறமொழிகளிற் புகழ்பெற்று விளங்கிய நல்லிசைப் புலவர்கள் ஓமர், தாந்தே, செகப்பிரியர், மிலிட்டனார், கீதே, காளிதாசர் முதலியோரும், நஞ்செந்தமிழில் திருவள்ளுவர், நக்கீரனார், இளங்கோவடிகள், கூலவாணிகன் சாத்தனார், மாங்குடி மருதனார், கபிலர், சேக்கிழார் முதலானோரும் பண்டைக் காலத்துப் பழந்தமிழ்ப் புலவருமேயாம். இன்னும் இதனை விரிப்பிற் பெருமாதலின், யாம் எழுதிய திருக்குறளாராய்ச்சி, பட்டினப்பாலை ஆராய்ச்சி, முல்லைப்பாட்டு ஆராய்ச்சி முதலிய வற்றினும், எமது ஞானசாகரப்பத்திரிகையினும் மிக விரிந்த பகுதிகளிற் கண்டுகொள்க.

பண்டிதர். நாகை வேதாசலம் பிள்ளை,

# ஆரியர்களின் ஸங்கீதமுறை

## SCIENCE OF ARYAN MUSIC

### முகவுரை

ஆதிகாலம் தொட்டு மனிதர்கள் ஸங்கீத விஷயத்தை ஏதோ ஒரு மாதிரியாக வைத்திருந்தார்கள் என்பது யாவர்க்கும் தெரிந்தததுதான். தேம்மாங்கு என்று வழங்கும் வண்டிக்காரர்களின் கானம் ராமேச்வரம் பயணம் போனவர்களும் வேறு இரவில் பயணம் அல்லது ரோட்டு மார்க்கமாய்ப் போகிறவர்களும் கேட்டிருக்கலாம். பெரிய கட்டிடங்கள் கட்டும்போது சுண்ணாம்பு இடிக்கிற கீழ்ஜாதிப் பெண்களின் கானத்தையும் நாம் கேட்டிருக்கிறோம் அல்லவா? இம்மாதிரிப்பாட்டு முதல் ஸங்கீத வித்வான்கள் பாடும் ராகம், பல்லவி வரையில் இந்தத் தேசத்தில் வழங்குங் கானத்தின் எல்லையென்று சொல்லலாம்.

ஆனால், இந்த வித்தை யாவரும் எளிதில் தெரிந்துகொள்ளக் கூடியதாக விருந்தாலும், இந்தக் காலத்தில் வேறு வித்தைகள் எப்படிச் சரியாய் ஆராய்ந்து அறியப்படுகிறதில்லையோ, அதே மாதிரி இதுவும் அறிந்துகொள்ள சிரமம் எடுப்பாரில்லாமல் இருக்கிறது. திருஷ்டாந்தமாக, வாரத்தில் உள்ள ஏழு கிழமைகளின் பெயர்களையறிந்தவன் ஜோதிஷ சாஸ்திரம் முழுதும் அறிந்ததாக வெண்ணுகிறான். அதுபோலவே, காம்போதி, சங்கராபரணம் என்ற இரண்டு ராகங்களின் பெயர்களை யறிந்தவன் ஸங்கீத சாஸ்திரத்தின் கரைகண்டதாக நினைத்துக்கொண்டு "நஹிவந்த்யா விஜாநாதி குர்வீம் ப்ரஸவவேதநாம்" "பிள்ளை பெறும் சிரமத்தை மலடியா அறிவாள்?" என்னும் பழமொழிக்கிணங்க, வெகு சிரமப்பட்டு ஊழியம் செய்து இந்த அருமையான வித்தையை அப்பியஸித்தவர்களைப்பற்றி குணதோஷம் கூறுவது வழக்கமாக இருக்கிறது. இந்த வித்தையோ, மனிதனுக்கு ஈசன் தந்தருளியிருக்கும் அதி நுட்பமான ஞானேந்திரியமாகிய காதின் மூலமாய் அடையும் சுகத்துக்குக் காரணமானது. வைராக்கிய ஸம்பத்தோடு கூடிய க்ஷேத்

திரஞ்ஞருடைய தெவிட்டா ஆநந்தத்தைத் தரும் பதங்களைக் கேட்டு ஸந்தோஷப் படாதவரில்லை. ஸ்ரீமான் ராமபக்த சிரோமணியாகிய திருவை யாறு தியாகராஜய்யர் அவர்கள் கீர்த்தனங்களைக் கேட்டு ஆநந்திக்காதவர் யார்?

மேலே சொல்லியவாறு, கானாமிருதத்தை அனுபவிப்போர் இருந்தும், நாம் பேசிவழங்கும் பாஷையில் கானவித்தையின் ஸ்வரூபத்தை யாவருக்கும் நன்ருய் விளக்கும்படியான நூல்களே இல்லை. புஸ்தகம் இல்லாதபோது வித்தையை அறிந்துகொள்ள இடமில்லாமல் போகிறது. என்ருலும், யாராவது கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொண்டு இந்தவித்தையின் சிலபாகங்களையாவது எடுத்தெழுதி யிருந்தால், அதை வாசிக்கநேரிடும். தெரிந்தவித்துவான்கள் அதிலுள்ள குறைகளை எடுத்துரைத்து அதுமூலமாய் இந்தசாஸ்திரம் ஒன்று ஏற்படுத்த இடமுண்டாகும் என்ற எண்ணத்தை மேற்கொண்டு, நான் என் சிற்றறிவிற் கெட்டியவரையில் ஸங்கித விஷயங்களை எழுத ஆரம்பிக்கிறேன்.

### ஸ்வரங்கள்

மனிதராகிய நாம் வார்த்தை சொல்வதாகிய ஒருவித சப்தத்தைச் செய்கிருேம். அதேமாதிரி யாகப் பிராணிகளும் அவை அவை வெவ்வேறு விதமான சப்தத்தைச் செய்கின்றன. இன்னமும், ஒரு மெல்லிய மூங்கில்கழியால் ஒருபலகையில் தட்டினல் ஒருவித சத்தம் நம் காதில் விழுகிறது. பறையர்கள் தம் தமுக்கில் உண்டாக்கும் சத்தத்தையும் நாம் கேட்கிருேம்.

இவ்விதமாய் உண்டாகும் சத்தத்தின் விஷயங்களை நாம் அறியவேண்டுமானல் ஐரோப்பிய சாஸ்திரிகள் அநுபோகஸித்தமாய் எழுதியிருக்கும் சுருதிசாஸ்திர (Acoustics) த்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ளவேண்டும்.

நாம் கவனிக்குமளவில் மேலே கண்டெழுதிய சத்தமெல்லாம் சப்திக்கும் வஸ்து எதுவோ அதன் வேபநம் (Vibration), அதாவது நடுக்கத்தால் உண்டாகிறது என்று காணலாம். உதாரணமாக, ஒருபிட்டில் வாத்தியத்தின் ஒருதந்தியை நமது ஒருவிரலால் பிடித்து இழுத்துத்தள்ளி விட்டால் அந்தத்தந்தி கொஞ்சநேரம் சத்தித்துக்கொண்டு அப்படியும் இப்படியும் அசைகிறதைக் கண்ணல் பார்க்கிருேம்.

இப்படி உண்டாகும் சத்தங்களில் உச்சமானவை சில, நீசமானவை சில. சாதாரணமாய், வளர்ந்த மனிதர்களின் பேச்சைக் கவனித்தால் அந்தச்சப்தம், அதேவயதுள்ள ஒரு ஸ்திரீ பேசும் பேச்சினல் ஏற்படும் சத்தத்தைவிட நீசமாயிருக்கிறது என்பதை நம்காதால் கேட்டு உணரக்கூடியது தான்.

இந்த உச்சம், நீசம் என்னும் வித்தியாஸம் என்ன? எவ்விதம் உண்டாகிறது? என்று கவனித்தால், உச்சமான சப்தம் அந்தச்சப்தத்துக்கு ஆதாரமான வஸ்து எதுவோ அது எவ்விதமாக வேபநம் செய்கிறதோ அதினலே தான் உண்டாகிறது. ஒரு குறிப்பிட்ட அவகாசத்தில் கொஞ்சம் தடவை வேபநம் செய்தால் நீசமான சப்தத்தை உண்டாக்கும். அதே அவகாசத்தில் அநேகம் தடவை வேபநம் செய்தால் உச்சமான சப்தத்தை உண்டாக்கும். ஒரு ஸெக்கண்டு நேரத்தில் ஒரு பிட்டில் தந்தி 120 தடவை வேபநம் செய்தால் அப்போது உண்டாகும் சப்தம் அதேதந்தி அதே அவகாசத்தில் 240 தடவை வேபநம் செய்வதால் உண்டாகும் சப்தத்தைவிட நீசமானதா யிருக்கும் (உச்சநீசம் என்னும் வித்தியாஸம் காதே அறியக் கூடியது. அந்த வித்தியாஸத்திற்குக் காரணம் மேலே சொன்னதாம்.

மேலே சொன்னமாதிரி காதால் கேட்டறியும் சப்தங்களை ஊஹத்தோடு அறியவல்லவர்கள் ஸங்கீதத்தில் வழங்கிவரும் சப்த ரூபங்களின் நிலையைப் பின்வருமாறு இருப்பதாகச் சொல்லுகிருர்கள். என்னவென்ருல், ஸ்வரம் என்னும் ஸங்கீத சாஸ்திரத்தின் லிபியானது உச்சம் நீசம் என வித்தியாஸத்தோடு அமைந்திருக்கிறதாகச் சொல்லுகிருர்கள். ஸ ரி க ம ப த நி

என்று ஏழுவிதப் பெயர்களைச் சொல்லும்போது, நாம் பேசும் குரலை ஸ வென்னும் அளவுள்ளதாக வைத்துக்கொண்டால், அதாவது பேசும் காலத்தில் உண்டாகும் சத்தம் எவ்வளவு தரம் வேபநம் செய்வதால் உண்டாகுமோ அந்த அளவுள்ள படிக்கே ஸ என்று வாயால் சொன்னால், ரி என்பது அதைவிட உச்சமாகச் சொல்லப்படும். எனவே ரி என்பது ஸ வைவிட அதிகமான வேபநத்தினல் உண்டாக்கப்பட்டது. அதேமாதிரி க, ம, ப, த, நி, என்னும் ஸ்வரங்களும் முன்னே சொல்லப்பட்ட ஸ்வரத்தைவிட முறையே உச்சமானதாகும்.

இந்த ஏழு பெயர்களையும் கவனித்த பிறகு எட்டாவது ஒரு உச்சமான சத்தம் சொல்லும்போது ஸ' (மேல் குறிப்பிட்ட ஸ) என்னும் பெயரைத் திரும்பவும் சொல்லுகிறார்கள். அதற்குக் காரணம் என்னவென்றால் ஸ என்று முதலில் சொன்ன மாதிரியும், இரண்டாவது தரம் சொன்னமாதிரியும் வேறாக இருந்தாலும், இரண்டு மனிதர்களை விட்டு ஒருவரை முதல் ஸ வைச் சொல்லச் செய்து, மற்றொருவரை இரண்டாவது ஸ வை அவருடன் சேர்ந்து சொல்லும்படி செய்தால், காதில் விழும் காலத்தில் இரண்டு ஸ்வரங்களும் ஒத்திருப்பதாகத் தெரிகிறது. அது மாத்திரமல்ல ; வேறுதான் என்று சொல்லமுடியாத ஸ்திதியில் இருப்பதாகச் சொல்லலாம்.

மேலும், முதல் ஸ 120 வேபநங்களால் உண்டாக்கப்பட்டால் இரண்டாவது ஸ அதற்குச் சரியாய் இரண்டுமடங்கு, அதாவது 240 வேபநங்களால் உண்டாகிறது.

இந்த யுக்தியை உபயோகித்தே, நாம் பேசும் பேச்சு என்ன அளவுள்ளதோ அதற்குச் சரிபாதி அளவுள்ளதாக, அதாவது, 60 வேபநங்களால் உண்டாகும் ஒரு ஸ வும் இருக்கலாமல்லவா? அந்தமாதிரி உண்டாகும் ஸ்வரத்துக்கு ஸ, (கீழ்க் குறிப்பிட்ட ஸ,) என்றுஸௌகரியார்த்தமாகஸங்கேதம் வைத்துக்கொள்வோம்.

ஆகவே, மூன்று வரிசை ஸ்வரங்கள் உண்டாகின்றன:—

(1) ஸ, ரி, க, ம, ப, த, நி,
(2) ஸ ரி க ம ப த நி
(3) ஸ' ரி' க' ம' ப' த' நி'

என்று மூன்றுவிதமான ஸ்வரங்கள் உண்டாகும். இரண்டாவது வரிசை ஸ்வரங்கள் ஒருமடங்கு வேபநத்தால் உண்டானல், முதல் வரிசை ஸ்வரங்கள் அதற்குச் சரிபாதிமடங்கு வேபநத்தாலும், மூன்றாவது வரிசை ஸ்வரங்கள் அதற்கு இரண்டு மடங்கு வேபநத்தாலும் உண்டாகின்றன.

இதையே மூன்று ஸ்தாயி என்று வழங்குகிறார்கள். முதல் வரிசை ஸ்வரங்களுக்கு மந்த்ர ஸ்தாயி ஸ்வரங்களென்றும், நடுவரிசை ஸ்வரங்களுக்கு மத்தியஸ்தாயி ஸ்வரங்களென்றும், மூன்றாவது வரிசை ஸ்வரங்களுக்குத் தாரஸ்தாயி ஸ்வரங்களென்றும் பெயரிட்டு வழங்குகிறார்கள். (குறிப்பு.—ஒரு மனிதன் சாதாரணமாய்ப்பேசும்போது அவனது முகம் ஒரு பலானநிலையில் நிற்கிறதல்லவா ? அப்போது உச்சரிப்பதை * ஷட்ஜம் என்று நாம் நினைத்துக்கொண்டால், அந்த மனிதனை தாரஸ்தாயிஷட்ஜம் உச்சரிக்கும்படி செய்தால், அவன் முகம் கொஞ்சம் மேல் நோக்குவதை நாம் பார்க்கலாம். அதேமாதிரியாய், அம்மனிதனை மந்த்ரஸ்தாயிஷட்ஜம் உச்சரிக்கும்படி செய்தால் அவன் முகம் கொஞ்சம் கீழ் நோக்குவதைக் கண்டுகொள்ளலாம்.)

ஸ்வரங்களில் வேபநங்கள் ஜாஸ்தியாவதினல் உச்சமாகவிருக்கும் தன்மை ஏற்படுகிறது என்று சொன்னோமல்லவா ? அதுமாத்திரமல்ல. வேறு இரண்டு காரணங்களாலும் முன் சொன்னமாதிரி ஸ்வரம் உச்சமாகும்.

ஒரு வீணை வாத்தியத்தை வாசிக்கும்போது கவனித்தால், ஸாரிணி(ஸாரணை என்னும் வலது கைவிரல் மட்டும் மீட்டுவதால் ஷட்ஜத்தைத்

* ஷட்ஜம்=ஸ.

தரும் தந்தியை வலதுகைவிரலால்மீட்ட ஸ என்னும் ஸ்வரத்தைத்தருகிறது. ரி என்னும்அதற்கு அடுத்த உச்சமான ஸ்வரத்தை வாசிக்கவேணுமானல் அந்த வாத்தியத்தில் ஏற்பட்டிருக்கும் கிருஹம் (Fret) என்றும் வீடு என்றும் சொல்லப்பட்ட அடுத்த இடத்தில் இடதுகை விரலை வைத்துத் தந்தியை அமர்த்திக்கொண்டு வலதுகைவிரலால் மீட்ட, அந்த ஸ்வரத்தை நாம் கேட்கிருேம். இதிலிருந்து நாம் அறியவேண்டியது யாதெனில்—ஒரு தந்தியின் நீளம்குறையக் குறைய அது தரும் ஸ்வரம் வரவர உச்சமாகும்.

மேலும், ஒரு தம்புரா வாத்தியத்தின் தந்தி சப்திக்கும் சப்தத்தை உச்சமாகச் செய்ய விரும்பினல், அதாவது, சுருதியை ஜாஸ்தி செய்ய வேணுமானல், அதன் பிரிடையை முடுக்குகிருர்களல்லவா? அதாவது, அதன் தந்தியை இழுக்கிருர்கள். அப்படி இழுப்பதினல் ஸ்வரம் உச்சமாய் விடுகிறது. ஒரு தந்தியை இழுத்தால்—நீளத்தைக் கொஞ்சம் குறைத்து இழுத்துக்கட்டினல் அதுதரும் ஸ்வரம் உச்சமாகிறது. முன் சொன்னபோது தந்தி இழுக்கப்படவில்லை. இப்பொழுது இழுக்கப்படுவதனல் ஸ்வரம் உச்சமாய் மாறுகிறது: அதாவது தந்தியை இழுத்தல் (Tension) ஸ்வரத்தை உச்சமாக மாற்றிவிடும்.

மேலே சொல்லிய ஸ்வரங்களுக்கு ஸங்கீத சாஸ்திரங்களில் இட்டிருக்கும்பெயர்களாவன:—

| | | |
|---|---|---|
| ஷட்ஜம்—ஸ | என்று ஸங்கேதமுள்ளது | |
| ரிஷபம்—ரி | ஷை | |
| காந்தாரம்—க | ஷை | |
| மத்தியமம்—ம | ஷை | |
| பஞ்சமம்—ப | ஷை | |
| தைவதம்—த | ஷை | |
| நிஷாதம்—நி | ஷை | |

ஆகேவே, ஸ என்பது முதல் ஸ′ வரைக்கும் பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்கள் இருக்கின்றன வென்று வீணைமுதலிய வாத்தியங்களைக் கொண்டும் காதினலும் அறிந்துகொள்ளலாம். அந்தப்பன்னிரண்டு ஸ்தானங்களிலும் உள்ள ஸ்வரங்கள் பின்வருமாறு:—

ரி′ ரி க′ க ம ம₂ ப த′ த நி′ நி ஸ′

ஸ

க₀ ரி₂ [சித்திரம் 1.] நி₀ த₂

(1) ஸ—ஷட்ஜம்
(2) ரி′—சுத்தரிஷபம்—
(3) ரி—சதுச்சுருதிரிஷபம்
(4) க′—ஸாதாரண காந்தாரம்
(5) க—அந்தரகாந்தாரம்
(6) ம—சுத்தமத்தியமம்
(7) ம₂—பிரதிமத்தியமம்
(8) ப—பஞ்சமம்
(9) த′—சுத்த தைவதம்
(10) த₂—சதுச்சுருதிதைவதம்.
(11) நி′—கைசிகநிஷாதம்.
(12) நி—காகலிநிஷாதம்.

3-வது, 4-வது, 10-வது, 11-வது வீடுகளில் உண்டாகும் ஸ்வரங்களுக்கு இரண்டு பெயர்கள் வழக்கத்திலிருக்கின்றன. (சித்திரம் பார்க்க) அவை முறையே:—

க₀—சுத்தகாந்தாரம்
ரி₂—ஷட்சுருதிதைவதம்
நி₀—சுத்தநிஷாதம்
த₂—ஷட்சுருதிதைவதம்

என்ற இரண்டாம் பெயர்களைப் பெறுகின்றன.

இந்தப்பன்னிரண்டு ஸ்வரங்களுக்கும் சாஸ்திரீயமாக ஏற்படும் வேபநங்கள் பின்வருமாறிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| * ஸ—வுக்கு | 120 வேபநமிருந்தால் | |
| ரி′— க்கு | 128 வேபநமாகிறது. | |
| ரி — க்கு | 135 | ஷை |
| க′— க்கு | 144 | ஷை |
| க — வுக்கு | 150 | ஷை |
| ம — வுக்கு | 160 | ஷை |
| ம₂—வுக்கு | 169 | ஷை |
| ப.—வுக்கு | 180 | ஷை |
| த′— க்கு | 192 | ஷை |
| த —வுக்கு | 202 | ஷை |
| நி′— க்கு | 216 | ஷை |
| நி — க்கு | 225 | ஷை |

பி. எஸ். சுந்தரமய்யர் பி.ஏ., எல்.டி.

* இந்த ஸங்கேதங்களை நான் மகா-ள-ள-ஸ்ரீ ராவ்பகதூர் நாகோஜிராயர் அவர்களது புஸ்தகத்திலிருந்து இரவல் வாங்கியிருக்கிறேன்.

## மலைகளும் அவைகளின் வகுப்புகளும்

### ROCKS AND THEIR CLASSIFICATION

மேற்கூறிய பூமியின் மேற்பரப்பின் நில பாகம் என்ன வஸ்துக்களால் ஆனவை? அப் பாகத்திற்தான் மலைகளும், குன்றுகளும், பாறைகளும், கற்களும், மணலும், அதில் அதிகப்படும் நிலக்கரி, இரும்பு, செம்பு, பொன், வெள்ளியாகிய உலோகங்களும், அதில் வசிக்கும் பிராணிகளும், செடிமரங்களு மிருக் கின்றன. இவ்வஸ்துக்களெல்லாம் இப்பொழு திருக்கிறபடியே ஆதி முதல் இருந்து வருகின் றன வென்றும், இப்படியே கடவுள் உலகத்தை சிருஷ்டித்தாரென்றும் சிலர் எண்ணக்கூடும். நமது வாழ்நாட்களில் நடக்கின்ற காரியங்களை யும், அவைகளின் காரணங்களையும், ஊக்கத் துடன் கவனித்து ஆராய்ந்தால் உண்மை விளங் கும். இவ்வஸ்துக்கள் பல காரணங்களால் அடிக் கடி மாறுபாடடைந்து வேறு புதிய உருவங்கள் தரித்துக் கொள்கின்றன. இன்று நாம் பார்க்கும் பெரும்பாறைகள் கொஞ்ச காலத்திற்கெல்லாம் சிறு கற்களாக உடைந்து போகின்றன முன் பாறையிலிருந்து வந்த கற்கள் அநேக காரணங்களால் சிறிது காலத்திற்கெல்லாம் சிறு மணலாகின்றன. இவ்விஷயம் நமக்கு நன்றுய்த் தெரியும். இம்மாறுபாடுகளை உண்டாக்கும் கார ணங்களைப் பற்றி பிறகு கவனிப்போம்.

இவ்விடத்தில் 'மலைகள்' என்னும் பதத்தை, சாதாரணமாய் உலகவழக்கத்திலிருப்பதுபோல் உபயோகிக்காமல், பூமியின் நிலப்பரப்பிலுள்ள பல உலோகங்கள் சேர்ந்த ஒரு திடமானதொகுதி க்கே உபயோகிப்போம். அதாவது, களிமண் ணுலாகிய ஒரு இறுகிய சேர்க்கையும்,மணல்மேடு களும், நிலக்கரித் தொகுதியும், சீமைச்சுண் ணும்புக் குன்றுகளும் மலைகளே. ஆகையால், சில மலைகள் திடமாயும் கடினமாயுமிருக்கின்றன. சில தளர்ச்சியாயும் உதிராயுமிருக்கின்றன. சில மலைகள் மிகவும் உயரமாயிருக்கின்றன. நமது தேசத்தின் வட எல்லையாய் இருக்கின்ற இமா லய மலையிலுள்ள 'எவரெஸ்த்து சிகரம்' 29,000 அடி உயரமுள்ளது.

இப்படிப் பூமியிலுள்ள மலைகளைச் சில வகுப் புகளாகப் பிரிக்கலாம்.இவைகளில் அடங்கி யிருக் கும் உலோகங்களிலிருந்தும், அல்லது, இவைக ளின் உற்பத்தியைக் கொண்டும், இவைகளை வகுப்புகளாகப் பிரிக்கக்கூடும்.

இம்மலைகளின் உற்பத்தி ஸ்தானத்தை நோக் குங்கால், இவைகளை இரண்டு வகுப்புகளாகப் பிரிக்கலாம். அவையாவன.

(1) பூமியின் மேற்புறத்தில் உண்டாகிற மலைகள்

(2) பூமியின் கீழ்ப்புறத்தில் உண்டாகிறமலைகள்

இவைகளுள் முதலாவது, சமுத்திரம், ஏரி கள், ஆறுகள் முதலியவைகளிலுள்ள நீரின் செயல்களாலும், எப்பொழுதும் இடைவிடாது அடித்துக்கொண்டிருக்கும் காற்றின் செயல்களா லும் உண்டாகிற மலைகளையும், பூமியின்மேலுண் டாகிற எரிமலைகளையும், இவைகளின் செயல்களா லுண்டாகிற மலைகளையும் குறிக்கும். பூமியின்கீழ் ப்புறத்தில் உண்டாகிற மலைகள் இன்னவென்று பார்க்கச் சிறிது ஆச்சரியமாயிருக்கக்கூடும். நாம் பார்க்கும் மலைகளெல்லாம் பூமியின் மேற்புறத்தி லேயே பார்க்கிறோமே? அம்மலைகளின் அடி பாகங்கள் பூமியின் கீழ்ப்புறத்திலிருக்கின்றன. ஆனால் இப்பொழுது மலைகள் எங்கு இருக்கின் றனவோ, அதிலிருந்து அவைகள் அங்கு உண் டானவையென்று நாம் சொல்லுதல் கூடாது. பூமியின் கீழ்ப்புறத்தில் அநேக விடங்களிலிருக் கும் நிலக்கரிக் குவியல்களெல்லாம் ஒரு காலத் தில் பூமியின் மேற்புறத்திலிருந்தவையே. மேற் புறத்திலிருக்கும் பலவிதமான்கருங்கல்மலைகளும் முதலில் கீழ்ப்புறத்திலுண்டானவை.

இப்பூமியினுட்பக்கத்திலுண்டாகிறமலைகளுள். கருங்கல் மலைகளைத்தவிர, வேற்றுருவம் தரித்த மலைகளும் அநேக மிருக்கின்றன. இம்மலைகள்

பல காரணங்களால் தங்கள் உருவம் மாறி வேற்றுருவம் தரிக்கின்றன. இவ்வுருவம் மாறினமலைகளிற்தான் சாதாரணமாய், அநேகவித உலோகங்கள் அகப்படுகின்றன. இப்படி மலைகளைச் சாதாரணமாய் பின்வருமாறு பிரிப்பது இயல்பு.

(1) நீர் சம்பந்தத்தாலுண்டாகிய மலைகள்

(2) அக்கினிப் பர்வதங்களும், அவை சம்பந்தமான மலைகளும்.

(3) கருங்கல் மலைகள்.

(4) வேற்றுருவம் தரித்த மலைகள்.

இம்மலைகளையும், அவைகளிலுள்ள கற்களையும் நாம் கவனிப்பதினால், அவைகளின் சரித்திரங்களைத் தெரிந்துகொள்வதுமல்லாமல், அவைகளிருக்கும் பூமியின் சரித்திரத்தையும் அறிவோம். இம்மலைகளும், கற்களும் பூமியின் சரித்திரம் எழுதப்பட்டுள்ள புத்தகங்களாகின்றன. ஆனால் இச்சரித்திரம் எழுதப்பட்டுள்ள பாஷையைத் தெரிந்துகொண்டாலல்லவோ, மலைகளாகிய புத்தகங்களை நாம் படிக்கக்கூடும்? அப்பாஷையை இங்குக் கற்றுக்கொள்வதே நம்முடைய கருத்தாகும். உதாரணமாக, நீர் சம்பந்தத்தாலாகிய மலைகளை யெடுத்துக்கொண்டு, இம்மலைகள் பூமியின் சரித்திரத்தை எவ்வாறு தெரிவிக்கின்றனவென்று பார்ப்போம். இம்மலைகள் சமுத்திரம், ஆறுகள், ஏரிகள் முதலியவையின் வண்டல்களாகிய பளிங்குக் கற்கள், பருக்கைக் கற்கள், மணல், களிமண், ஆகிய இவைகள் திரட்டப்பட்ட சேர்க்கையாலாகிய மலைகளென்று இவைகளின் பெயராலே விளங்கும்.

இப்பொழுது ஒரு ஆற்றிலுள்ள மணலையும், கற்களையும், அவ்வாற்றின் உற்பத்தியிலிருந்து முடிவுவரையில் கவனித்துப் பார்ப்போம். ஆற்றின் தலைப்பக்கங்களிலெல்லாம், மிகப் பெரியவும், உருண்டையான மழமழப்புள்ள கற்கள் மிகுந்திருக்கக் காண்கிறோம். மறுபடி ஆற்றின் கீழ்ப் போகப்போக, கற்கள் சிறியதாகின்றன. பிறகு நுட்பமான மணலைப் பார்க்கிறோம். இம்மணல் சற்றேறக் குறைய உருண்டைவடிவமாயிருப்பதை, ஒரு பூதக்கண்ணாடியைக் கொண்டு நன்றாய்ப் பார்க்கலாம். நமது காவிரி நதியைப் பார்த்தால், மைசூர் இராஜ்ஜியப் பக்கத்திலெல்லாம் நதி நிறைய பெரும்பாறைத்துண்டுகளாயிருக்கின்றது.

இன்னும் சிற்சில விடங்களில் நதி பாறைகளின்மீதே விழுந்து ஓடுகின்றது. அக்காவிரி நதியை கோயம்பத்தூர் ஜில்லாவில் பார்த்தால், பெரிய பளிங்குக்கற்களும், கற்கள் என்றே சொல்லக்கூடிய பெரும்மணல்களும் நிறைந்திருக்கக் காணலாம். பிறகு திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் ஜில்லாக்களில் பார்த்தால் கற்கள் குறைந்து மணல் வரவா அதிகரிப்பதுமல்லாமல், பொடியாகவும் காணப்படுகின்றது. இம்மாறுபாடுகளைப்பற்றிச் சற்று யோசிக்கும்போது, இவைகள் நதியின் நீரால் உண்டானவையென்று தெரிகிறது. முதலில் பாறைகளுடைவதற்கும், பெரும் கற்கள் சிறியவையாவதற்கும், மறுபடி இவைகள் மணலாவதற்கும் இந்நதியின் நீரோட்டமே காரணம். அல்லாமலும், நீரோடும்போது, கற்களையும் பெரும்மணலையும் உருட்டி, ஒன்றோடொன்று தேய்த்துக்கொண்டே போவதால், இவைகளுக்கு ஒருருண்டை வடிவமும், மழமழப்பும் உண்டாகிறது. ஆகையால் ஒரு மலையில் உருண்டையான பளிங்குக்கற்களும், கூழாங்கற்களும் அதிகமாயிருந்தால், இவை ஓட்டமுள்ள நீரின் செயல்களால் இம்மாதிரி செய்யப்பட்டு, இங்குச் சேர்ந்து இருத்தல் வேண்டுமல்லவா?

இப்பொழுது அம்மலைக்குச் சமீபத்தில் பெரும் ஆறுகள் ஒன்றுமில்லாவிட்டாலும், இது அங்குண்டாவதற்கு முன்னவது அப்பக்கம் நதிகள் ஓடியிருக்க வேண்டும். அல்லது, ஒரு ஆறு வண்டல்களை அடித்துக்கொண்டு ஒரு ஏரியில் தள்ளியிருக்கக்கூடும். அப்படி ஏராளமான வண்டல்களும், கற்களும் தள்ளப்பட்ட பிறகு, ஏரி வற்றிப்போய், பூமி உயர்ந்து இம்மலை உண்டாயிருத்தல் கூடும். அப்பொழுது

இம்மலையில் அநேகப்படைகள் அல்லது வரிசைகள் காணப்படும். மலையின் கீழ்ப்படை அநேகமாய்ப் பெருங்கற்களாலாகியதா யிருக்கும். அதற்குமேல் மணலாலாகிய படையைக் காணலாம். மேற்படை மிக ஸன்னமான களிமண்ணு யிருக்கும். இது எப்படி? ஒருபெரிய ஆழமான பாத்திரத்தில் கொஞ்சம் கற்களையும், மணலையும், களிமண்ணையும் போட்டு, பாத்திரம் நிறைய ஜலம் விட்டு அவைகளை நன்ருய்க் கலக்கவும். பிறகு சற்று நேரத்திற்கெல்லாம் அப்பாத்திரத்தைப் பார்த்தால், கற்களெல்லாம் கீழே போய் படிந்திருக்கும். மணல் கீழே படிவதற்கு மெல்ல போய்க்கொண்டிருக்கும். மண் ஜலத்தில் இன்னம் மிதந்துகொண்டிருக்கும். மறுபடி கால் மணி நேரத்திற்கெல்லாம் திரும்பப் பார்க்கவும். இப்பொழுது மணலும் மண்ணும்கூட நீரில் படிந்திருக்கும். இப்படிக் கீழே படிந்திருக்கும் வண்டலை கவனித்தால் ஒன்றின்மேல் ஒன்ருகப் படைப்படையாக அடுக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். நாம் முதலில் எடுத்துக் கொண்ட பாத்திரம் கண்ணுடி பாத்திரமாயிருக்கக் கூடுமாயின் இது மிக நன்ருய் விளங்கும். கனமான கற்கள் சீக்கிரம் போய்ப் படிகின்றன. இலேசாயும், பொடியாயுமுள்ள மணலும், மண்ணும் மெதுவாய் ஒன்றின்பின் ஒன்ருய்ப் படிகின்றது. இதே காரணத்தால் சில நீராலாகிய மலைகளும் படைகளாகக் காணப்படுகின்றன. ஆகையால், இப்படையுள்ள மலைகள் இருக்குமிடத்தில் ஏராளமான நீர் இருந்திருக்கவேண்டுமென்னும் சரித்திரத்தை இவைகள் விளக்குகின்றன. இப்படைகளாக அடுக்கப்படுவது வேறு காரணங்களாலும் உண்டாவதுண்டு. ஒருதரம் முதல்படை உண்டாக, பிறகு அது காய்ந்து இறுக, மறுபடி அதன்மேல் மற்ருெருபடை புதிதாகச் சேர்க்கப்படலாம். இப்படைகள் ஒரே வஸ்துக்களாலான போதிலும், அவைகள் உண்டாகிய காலவித்தியாசத்தால் இவ்விரண்டும் ஒரே படையாகக் காணப்படாமல், வெவ்வேருகக் காணப்படுகின்றன. இப்படிப் பூமி சரித்திரத்தைத் தெரிவிப்பதில் முக்கியமானவை சில ரூபங்களையுடையமலைகளே.

எம், ஆர். சுப்பிரமண்ய அய்யர் பீ. ஏ.

# தேகதத்வ சாஸ்த்ரம்

**PHYSIOLOGY**

(தொடர்ச்சி)

ஹிருதயமாத்திரம் இவ்விரண்டு வகுப்பிலும் சேராமலிருக்கிறது. இச்சைக்குக் கட்டுப்படாமலிருந்தபோதிலும் வரித்தசை நாரினுற் செய்யப்பட்டிருக்கிறது. ஆனல் ஹிருதயத்தின் தசை நார்கள், சரீரத்தில் மற்ற இச்சைக்குட்பட்ட தசை நார்களைப் போல் ஒரே குழலாக இராமல் கிளைகளை யுடையனவாய் இருக்கின்றன.

இவ்விதத் தசை நார்க் கூட்டங்கள் சேர்ந்து பின்னி யுண்டாயிருக்கும் ஹிருதயத்தின் சுவர்கள், அந்நார்கள் சுருங்கும்பொழுது, கனம் அதிகப்பட்டு விஸ்தீரணம் குறையவும், ஒன்ருேடொன்று சேரவே அவைகளுக்கு நடுவிலிருக்கும் இரத்தம் வெளியே தள்ளப்படுகிறது. இப்படித் தள்ளப்படுகிற ரத்தம் ஒரே வழியாகச் செல்ல சில உபாயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. முதவில் ஆரிகிள் (மேலறை) களை யெடுத்துக் கொள்வோம். வலது பக்கத்தில் இவ்வறையில், மேல்வீனுகாவா, கீழ்வீனுகாவா என்ற இரண்டு பெரிய கறுப்பு ரத்தக் குழாய்களும், கரோனரிவேயின் என்ற ஹிருதயத்தின் சுவர்களிலிருந்து வரும் ஒரு சிறு கறுப்பு ரத்தக்குழாயும் வந்து சேருகின்றன. இவைகளில் கரோனரிவெயின் த்வாரத்தில் மாத்திரம் ஒரு அடைப்பு இருக்கிறது. மற்றப் பெரிய குழாய்களில் ரத்தம் ஆரிகிள் சுருங்கும்போது திரும்பாமலிருக்க அவைகளில் மேலும் மேலும் வந்துகொண்டிருக்கும் ரத்தத்தின் எதிர்ச்சியும், கீழே தளர்ச்சியாயும் காலியாயும் இருக்கும் கீழறைக்குள் செல்ல ஒரு தடையும் இல்லாமலிருப்பதுமே. மேலும் ஆரிகிளின் சுருக்கம் இக்குழாய்களின் துவாரத்தில் முதல் முதல் ஆரம்பித்துக் கீழ் நோக்கிச் செல்வதினுல் ரத்தத்துக்குக் கீழறை நோக்கிய ஓட்டமே உண்டாகிறது. இப்படியே தான் இடது பக்கத்திலும்,

கீழறை சுருங்கும்பொழுது அதின் ரக்தம் மேலறைக்குள் திரும்பாமலிருக்க மூன்றிலைகள் சேர்ந்த ஒருமூடி வலதுபக்கத்தின் இரண்டறைக்கும் நடுவில் உள்ள துவாரத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. இதைப் போலவே இடது பக்கத்தில் இரண்டிலைகளுள்ள மூடியிருக்கிறது. இவைகள் முக்கோண ரூபமாய், அடியில் மேலறைக்கும் கீழறைக்கும் உள்ள துவாரத்தின் பக்கங்களில் ஒட்டியும், நுனியில் மெலிதாயும் பலமாயுமுள்ள சவைக்கயிறுகளால் கீழறையின் உட்புறத்தில் நுழைத்துக் கொண்டிருக்கும் தசைநார்க்கூட்டங்களின் நுனிகளில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ரக்தம் மேலறையிலிருந்து கீழறைக்கு வந்ததும், இம்மூடிகளுக்கும் கீழறையின் சுவர்களுக்கும் நடுவில் சென்று அவற்றை மேலே தள்ளுகின்றன. இப்படி மேல் தள்ளப்பட்ட மூடிகள் துவாரத்து மட்டத்தில் வரும்போது ஒன்றோடொன்று சேர்ந்து துவாரத்தை யடைக்கின்றன. துவார மட்டத்திற்குமேல் செல்லாமல், அவற்றின் நுனிகளைச் சுவரில் சேர்த்திருக்கும் சவைக்கயிறுகள் தடுக்கின்றன. அறை சுருங்கும்பொழுது இக்கயிறுகள் தளர்ந்துபோவதைத் தடுக்கவே, இவைகள் நேரே சுவரில் சேர்க்கப்படாமல், நீட்டிக்கொண்டிருக்கும் தசைநார்க் கூட்டங்களின் நுனியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அறையானது சுருங்கும்பொழுது, இத்தசை யெழுச்சிகளும் சுருங்கி மட்டமாவதால், சவைக்கயிறுகள் தளராமல், மூடிகளைப் பலமாக இழுத்துப் பிடிக்கின்றன.

இப்படி மேலறைக்குத் திரும்பமுடியாமல் தடுக்கப்பட்ட ரக்தமானது, வலது பக்கத்தில் பல்மொனரி ஆர்டெரியிலும், இடது பக்கத்தில் அயோர்டியிலும் தள்ளப்படுகிறது. இப்படித் தள்ளப்பட்ட ரக்தத்தை யேற்றுக்கொள்ள, அந்தக் குழாய்கள் விரியக்கூடிய பதார்த்தத்தினால் செய்யப்பட்டிருப்பதினால், முன்னமேயே ரக்தம் நிரம்பியிருந்த போதிலும், விரிந்துகொண்டிருக்கின்றன. மறுபடியும் வென்றிகிள் தளரும்பொழுது இக்குழாய்களிலிருக்கும் ரக்தம்திரும்பி அதற்குள் வராதபடி சில ஏற்பாடுகள் அமைந்திருக்கின்றன. பிறைவடிவான மூன்று ஜேப்புகள் ஒவ்வொரு குழாயின் வாயிலும் அமைந்திருக்கின்றன. ரக்தம் திரும்புவதற்காகப் பார்க்கும்பொழுது, அந்த ஜேப்புகளுக்குள் சென்று அவற்றின் உள் மடிப்புகளை விரிக்கவும், அம்மடிப்புகள் ஒன்றோடொன்று சேர குழாயின் வாய் கெட்டியாக மூடப்படுகிறது.

ஹிருதயத்தின் அறைகள் தாங்கள் செய்ய வேண்டிய வேலைக்குத் தகுந்தபடி பலமுள்ளனவாக அமையப்பட்டிருக்கின்றன. இடது பக்கத்துக்கீழறை சரீரம்முழுவதிற்கும் ரக்தத்தைச் செலுத்தவேண்டியிருப்பதினால்எல்லாவற்றிலும் கனமுள்ளதாயிருக்கிறது. மேலறைகளிரண்டும் கீழறைக்கு ரக்தத்தைச் செலுத்த வேண்டிய வேலைமாத்திரம் உள்ளனவாதலால் ஒன்றுபோல் சமமாக மெல்லியதாயிருக்கின்றன. வலது கீழறை சுவாசாசயம் முழுவதுக்கும் இரக்தத் தசை செலுத்தவேண்டியதானதால் மேலறைகளை விட அதிக கனமாயிருக்கிறது; ஆனால் சரீரம் முழுவதும் செலுத்தவேண்டிய இடது கீழறைக்கு மூன்றில் ஒருபங்குதான் இருக்கிறது. எல்லா அறைகளும் சமமாக மூன்று அவுன்ஸ் பிடிக்கத் தக்கவை.

ஹிருதயத்தின் வேலை ஒருவரிசைக் கிரமமாய் நடந்துகொண்டு வருகிறது. முதலில் இரண்டு ஆரிகிள்களும் சுருங்குகின்றன. பிறகு இரண்டு வென்றிகிள்களும் சுருங்குகின்றன. பிறகு கொஞ்சம் அமைதியுண்டாகிறது. அதில் இரண்டு ஆரிகிள்களும் ரக்தத்தால் நிறைகின்றன. வென்றிகிள்களும் தளர்ச்சி யடைய, அவைகளுக்குள் ஆரிகிளிலிருந்துரக்தம்தடையில்லாததினால் மெதுவாக இறங்குகிறது. உடனே ஆரிகிள்கள் மறுபடியும் சுருங்கி பாக்கியிரக்தத்தையும் வென்றிகிள்களுக்குள் செலுத்துகின்றன. இவ்விதமாக ஹிருதயம் ஒரு நிமிஷத்து (மினிட்டு) க்கு

75 தரம் சுருங்குகிறது. இப்படி இடது வென்றிகிள் சுருங்கும்பொழுது முன்னமேயே நிறைந்திருக்கிற அயோர்டிவில் அதின் ரக்தம் தள்ளப்படுகிறது. அதினால் அயோர்டா விரிந்து கொடுக்க அதின் வளைவு கொஞ்சம் நிமிர்கிறது ; அப்பொழுது ஹிருதயம் கொஞ்சம் முன்னால் கொண்டு போகப்பட்டு மார்பின் முன்சுவரில் தாக்குகிறது; இப்படித் தாக்குவதின் அதிர்ச்சியை, இடது பக்கத்து மார்பில், முலைக்காம்புக்கு ஒன்றரை அங்குலத்திற்குக் கீழாகவும் அரை அங்குலத்திற்கு உட்புறமாகவும் கைவைத்துப் பார்த்தால் உணரலாம்.

அதே இடத்தில் காது கொடுத்துக் கேட்போமானால், இரண்டு சப்தங்கள் கேட்கும். அவைகளில் முதல் சப்தம் நெடியதாயும் மிருதுவாயும் இருக்கும். இரண்டாவது, குறியதாயும் கடினமாயும் இருக்கும் அவைகளை "லூம்ப்," "டப்" என்ற சப்தங்களுக்கு ஒப்பிடுவது வழக்கம்.

இவைகளில் முதல் சப்தம் ஆரிகிளுக்கும் வென்றிகிள்களுக்கும் நடுவில் உள்ள மூடிகள், வென்றிகிள் சுருங்கும் பொழுது, இழுத்துச் சேர்க்கப்படுவதால் பெரும்பான்மையும் உண்டாகின்றது. இரண்டாவது சப்தம் பல்மொனரி ஆர்டெரி அயோர்டா இவைகளின் துவாரங்களில் இருக்கும் பிறைவடிவ மூடிகள், வென்றிகிள்கள் சுருங்கிய பிறகு, திடீரென்று மூடுவதால் உண்டாகின்றது. ஆகையால் இந்தச் சப்தங்களில் உண்டாகும் வித்தியாசங்களிலிருந்து எந்த மூடிகளில் வியாதியிருக்கிற தென்பதை நிர்ணயிக்கக்கூடும்.

கே. நாராயண அய்யர், M. B. & C. M.

---

குளிர்ந்த தண்ணீர் குடித்தல்.— உடம்பு சத கத வென்று இருக்கும்பொழுதாவது, வீட்டுக்காரியங்கள் அதிகமாகச்செய்து உடம்புக்கு ஆயாஸம் அல்லது களைப்பு ஏற்பட்டிருக்கும்பொழுதாவது குளிர்ந்த ஜலத்தைக் குடிக்கக்கூடாது. தேகத்தில் உஷ்ணதிகங் கொண்டிருக்கும் போது குளிர்ந்த தண்ணீரை ஏராளமாக உட்கொண்டால் திடீரென்று சோர்பு, சோகம் ஏற்பட்டு மரணம் ஸம்பவிக்கும்.

## கடவுளின் கருணையைக் கனவிலும் மறவாதே

### NEVER FORGET GODS, GRACE

ஓ! மனமே! உனக்கேன் இச்சோர்வு! இவ்வச் சமும்கவலையும் உனக்கேன்! முன்பு நீஇன்புற்று மகிழ்ந்து வந்தனையே! காரணம் என்ன வென்று எண்ணிப் பார்த்தனையோ? ஈசனது அனுக்ரகம் அல்லவா? அது அவ்வாறாக: நீதுன்புற்று அல்லற் படுங்கால், "கருப்பைக்குள் முட்டைக்கும்கல்லினுள்தேரைக்கும்விருப்புற்று அமுது அளிக்கும் மெய்யனு"ம் வாரானோ? "அத்தி முதல் எறும்பு ஈறான உயிர் அத்தனைக்கும் சித்தம் மகிழ்ந்து அளிக்கும் தேசிகனு"க்கு நின்னைக் காத்தலும் கடன் இலையோ? உன்னிப்பார்த்துச் சஞ்சலத்தை விடுத்து,ஓ நெஞ்சமே! நாதனிடத்து நின் சலியா நன்னம்பிக்கையைச் செலுத்து !

"பட்டகாலிலே படும் கெட்டகுடியே கெடும்" என்னுமாறு, இடுக்கண் உற்றுழி அல்லல் பல அடுக்கி வந்துநின்னைச் சூழ்ந்து எழுந்து நெறுக்கிய காலத்து, தளர்ந்து நீ வீழாது நின்னை ஏந்தித்தாங்கி கைகொடுத்து நின்றது கடவுளின் கருணை அல்லவா? சிக்குச்சுழல்கள் உள்ள இம் மண்ணுலகில் திக்குத் திசை தெரியாது தவித்த காலத்து நின்னைச் செந்நெறிசெலுத்தி நடாத்தியது ஆதிபகவன் அருள் அல்லவா? இன்னணம் மூல முதல்வனது முறை அறிந்தும் ஓ! மனமே! வாட்டம் உனக்கேன் ?

சம்ஸாரம் என்பது துக்க ஸாகாம் அன்றோ? மலைபோல் அலைகள் அடுத்து அடுத்துப் புரண்டு எழுந்து கோஷித்துவரும் புயல் மோதப்பட்ட ஆழ்கடல் அதுவென நீ அறியாயோ ? துயாழியின் ஒய்விலா உயரலைகள் பொங்கி எழுந்து கரை புரண்டு நின்மீது உருண்டு ஓடிவந்தாலுமென்? ஊக்கமொடு காக்க ஒருநாதன் நின்னுள் நிற்பதை நினக்கு நினைப்பூட்டவும் வேண்டுமோ ?

அண்டம் புரளும்படி சண்ட மாருதத்தை வீசி மோதி அடிக்கச் செய்த எல்லாம் வல்ல ஈச னுக்கு அதை அடக்கி அமைதியாக்குவதும் அரிதாமோ? சர்வ சக்தனும் இமைப்பொழுதில் நின் இடும்பைக்கு இடும்பை புரிந்து உனக்கு அமைதி எய்துவிக்கத் திருவுளம் பற்றினும் பற்றலாமன்றோ ?

ஆனதுபற்றி, ஓமனமே! அந்தகாரம் நிறைந்த நள்ளிரவிலும் அப்பனது அநுக்ரகங்களை எண்ணி எண்ணி, நினைந்து நினைந்து, நெக்கு விட்டு நெகிழ்ந்து உருகி, நின்னிடத்தே அன்பு வெள்ளம் தேக்குவாயாக! கடவுளின் திருவடி களைக் கடைப்பிடியாய்ப் பற்றிப் பிடித்து நின் னிடத்தே நாட்டிக்கொள்வாயாக! அவ்வாறு செய்யின்,அல்லல் அற்று, அருள்பெற்று, பொய் யாப் புலமைத் திருவள்ளுவர்

" மலர்மிசை ஏகினான் மாணடிசேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார் "

என அருளிய வண்ணம்,நீ உலப்பிலா ஆன ந்தம் பெறுவாய்! ஐயம் சற்றுமின்று! .சத்தியம் என்று எண்ணித்,திண்ணமாய்க் கொள்.

எஸ். ராமஸாமி அய்யர், பி.ஏ., எல்.டி.

---

125 வயதுக்கிழவர்.—இந்தக் கலியுகத்தில் ஸா தாரணமாக ஒருவன் நூறுவருஷம் பிழைத்திருப்பது அபூர்வம். ஆனால் ஒருவித எல்லயை அனுசரித்து 'சத்மானம் பவதி' என்று பெரியோர்கள் சொல்லு வார்கள். அதாவது ஒருவனை வாழ்த்தவேண்டுமானால் நூறுவருஷம் நீ தீர்க்காயுஸாய் இருக்கக்கடவாய் என்று சொல்வது ஸகஜம். இப்படியிருந்தும் ஹஜாரா ஜில்லாவில் பைராம்கான் என்னும் பெயர் கொண்ட மகமதிய ஜாகீர்தார் ஒருவர் ஸமீபத்தில் இறந்துபோன தாகவும், அப்பொழுது அவருக்கு 125-வயதென்றும் தெரியவருகிறது. 1831-ம் வருஷத்தில் மகாராஜா ரஞ்சித் சிங் ஆப்கானியரோடு சண்டைபோட்டபோது ஆப்கானியர் பக்கத்தில் இந்த பைராம்கான் சண்டை போட்டுக் குண்டுக்காயம் பட்டவரென்று தெரியவரு கிறது.

# பொன்

## GOLD

பொன்னென்பது பூமியினின்று வெட்டியெடு க்கப்படும் ஒருவகை உயர்ந்த உலோகம். அது உலகிலுள்ள பொருள்கள் எல்லாவற்றிலும் மிக்க விலையுள்ளது. மஞ்சளும், பசுமையுமான நிறம் வாய்ந்து, பார்ப்பவர் கண்ணையுங் கருத்தையுங் களிக்கச்செய்து, ஒளி குன்றாது பிரகாசிக்கும் குணமுடையபது.

பொன்னின் மேன்மைக் குணத்தை விரும்பி யன்றோ, செந்தாமரையில் உற்பவித்த திருமக ளும் "பொன்னி" யென்னும் திருநாமந் தரித் திருக்கின்றனள். கல்வி, கேள்விகள் நிறைந்த புமான்களை "பொன்" போன்றவர்களென்றும், அன்னவர் மொழிகளைப் பொன்னே போற் போற் றுவம் என்றும் நன்குணர்ந்த புலவர் திலகர் பலர் வர்ணித்துக் கூறியிருப்பதை அறியாதார் எவர்?

இப்பொன்னே எப்பொருட்குந்தாய். பொன், பெண், மண், என்னும் முப்பொருள்களில் முதன் மையானது இதுவென்றும், இதனை அடைந்த வர்கள் மற்றைய இரண்டையும் எளிதில் பெற லாகும் என்றும் வழங்கிவருவது உலகப் பிர சித்தம். இது, எக்காலும் எங்கும் பெருமையை விளைவித்து, ஊக்கம், மனவலி, கடவுள் வழிபாடு, அறிவு, கோபமின்மை, பொறுமை, ஆகிய இத்தி யாதி நற்குணங்கள் நிறைந்த ஆடவர், பெண்டிர் வசிக்கும் ஒவ்வொரு வீட்டிலும் கொஞ்சிக் குலாவி நிலைபெற்றிருக்கும். இதன் துணையில் லாதவர் என்றும் பொல்லாதவர்.

"பொன்னம்பலம் உண்டானால் என் அம்பலம் உண்டாகாது?" என்னும் பழமொழியை வெள் ளிடை மலைபோல் தெள்ளிதில் விளக்கத் தில்லைக் கணுள்ள ஸ்ரீ நடராஜப்பெருமானும் பொன்னால் சபை ஏற்படுத்தியுள்ளது எவரும் அறிந்ததே. அவர் பொன் மலையை அடியோடு பெயர்த்தெடு த்து வில்லாக்கிக்கொண்டதும், திரிபுரத்தை,

பொன்மதில் வேண்டிசிரித்து எரித்ததும், பொன்னிறந்தாங்கியதும் எவர்க்கும் கண்கூடாக விளங்குகிறது. பொன்னியை மகாவிஷ்ணு மார்பில் தரித்ததும், இரண்யன் என்னும் பெயர் வாய்ந்த அரக்கனைக் கொன்றதும், இதுகாரணம் பற்றியேயாம். உலோபிமீதாசி (Midas) சரித்திரத்தாலும் பொன்னின்மேல் மனிதர்க்குள்ள பேராசை நன்கு விளங்குகின்றது. தேவர்களும் தங்கள் நாட்டிற்கும், குருவிற்கும் இதன் பெயரையே யிட்டு வழங்கி வருகின்றனர். மண்ணுலகிலும் மானுடர்கள் தாங்கள் அருமையாகப்பெற்று வளர்த்தெடுத்தமக்களுக்கு, பொன்னம்மை, பொன்னப்பன், பொன்னுசாமி என வழங்குவதோடு, தாங்களிருக்கும் ஊர், நதி, ஏரி, முதலிய பற்பல நிலையியற்பொருள்களுக்கும், ஏர் உழுதல் முதலிய செய்தொழின் முறைக்கும் இப்பெயரிட்டு அழைப்பது யாவரும் அறிந்ததே.

இப்பொன் ஏகச்சக்ரேஸ்வரமாக மண் முதல் சிவம் ஈருக உள்ள எல்லாப் பொருட்கட்கும் அரசாகி, மகுடஞ்சூட்டி, துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனஞ் செய்து, தன்னை நம்பிய ஒவ்வொரு ஆத்மாவையும் களிப்படையுமாறு தன்னாணையைச் செலுத்தி, அரசாட்சி செய்துவருவது அறியாதார் எவர்? இதன் கிருபை யடைந்த எப்படிப்பட்ட ஏழையும் முகவிலாசமாகி, உள்ளங்களித்து ஊக்கங்கொண்டு எப்படிப்பட்ட செய்முயற்சியையும் செய்து முடிப்பான். இப்பொன்னே மேகம்போல் கைம்மாறு வேண்டாமல்எவரையும் உன்னத நிலையில் வைப்பது. இதனாலன்றே "பொன்னாற் பிரயோஜனம் பொன்படைத்தாற்குண்டு" என்றும் "பொன்னுடையரேனும்" என்றுங் கூறுவர். அரும்பெரும் நன்மங்கலத்தைச் செய்வித்துப் புத்திரப்பேற்றைக் கொடுத்து, வழுவாது இல்லறம் நடாத்தி இன்பத்தை அடையச்செய்வது இதுவேயாகும். முற்றத்துறந்து முழுத்தவம் எய்திய முனிவர்களும் ரசவாத வித்தையினால் பொன்னின் கிருபையை யடைய படும்பாட்டை எவர்தாம் எடுத்துச் சொல்ல வல்லவராவர்? இப்பொன் சில சமயங்களில் கம்மியன் என்னும் பகைவன் கையில் அகப்பட்டுப் பணையிற்கிடத்தி, அடிமேலடியடித்து, மூசைக்குள்ளடக்கி, உலைவாயிலின்கண் வைத்து, அக்னிமயமான த்ராவக ரூபமாகி, ஆற்றி, கம்பியுருவாய்த் திரட்டி, பின்னும் உலையில் வைத்து அடியடித்து வருத்தப்படுத்துங் காலத்தும் தன் இயற்கை குணமும் நிறமும் குன்றாது ஒளிவிட்டு நிற்கப் பெறுகின்றது. பின்னும் இப்பொன் விரோதிகள் கொடுமையைச் சகிக்காது அவர்கள் கரத்தினின்று விடுபட்டுப் பெரும்பாலும் பெண்கள்பால் சரண்புகுந்து, பல்லாகிய வொளியைக்காட்டி, அடைக்கல ஸ்தானந் தந்து காப்பாற்ற வேண்டுமென்று நின்று, தனக்குரிய இயற்கைக்குணமும் பெயருங் கூறி, அவரவர்கள் உள்ளக் கருத்தின்படி காப்பு, கொலுசு, சரப்பளி, சங்கிலி முதலிய ரூபங்களுடன் தன் இயற்கை நாமத்தை முற்றிலும் மறைத்து நிற்பதோடு, தன் நண்பினமாகிய இரத்தினம், கெம்பு, கோமேதகம், நீலம், புஷ்பராகம், மாணிக்கம், பச்சை, வைடூர்யம் முதலிய இவ்வொன்பதின்மரோடு கட்டுப்பட்டு, அடங்கியிருந்து "பொன்மலையைச் சேர்ந்த காகமும் தன்னிறமாகும்" என்றபடி, சேர்ந்தவரையும் அழகு செய்து தன் இயற்கைக் குணம் விளங்க, கம்மல், கடுக்கன், கணையாழி, வங்கி, பொட்டு, பதக்கம், சடைபில்லை, அாதனமாலை முதலிய பற்பல பூஷணங்கள் பெயர் தாங்கி, அணிவோரது உடலையும் உள்ளத்தையும் அலங்கரிக்கின்றது.

இம்மட்டோ! இது அரசன் உருவத்தையுந் தாங்கி மோஹரா என்றும், பவுன் என்றும், கினி என்றும் பெயர் பெற்று உலகமெங்கணும் நிலவி வருவதாலன்றே இதற்கு 'ஆசை' யென வொரு பெயர் காரணவிடுகுறியாக அமைந்துள்ளது. ஒருவன் எப்படிப்பட்ட கொடுமையைச் செய்த

போதினும், தன்னை அடைந்தவர்பால் நின்று மாறுவல்லமை பூண்டு நாளும் புகழுங்கீர்த்தியு முண்டாக, யோக்கியனென நியாயசபையில் நிரூபிக்க முன்னிற்கின்றது. இம்மையில் அடைய வேண்டிய அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால் நலங்களைப்பெருக்கி இறுதியில் அடைய வேண்டிய ஈடும் எடுப்பும் இல்லா வீட்டைப் பொருந்துதற்கு இன்றியமையாப் பொருளாகவும் இருக்கின்றது.

'திரைகடலோடியுந் திரவியந்தேடு ! என்றபடி மனிதர்களிற் பலர் தங்கள் தங்கள் இல்லிடம் விட்டுப் பெயர்ந்து மரக்கலமேறி நெடுந்தூரஞ் சென்று எவ்விதத்தினும் இப்பொன்னைத் தேடும் முயற்சியையே கொண்டிருக்கின்றனர். எவ்வளவு கட்டையை அக்னிக்குக் கொடுத்த போதிலும் அவ்வக்னி திருப்தி யடையாமல் இருப்பதுபோல, ஆத்மாக்கள் உள்ளத்தைத் திருப்திசெய்து வைக்காது மேலும் மேலும் தன்னையே விரும்பும்படி செய்துவைக்கின்றது. ஆண் பெண் இருபாலாரிலும், பிரிந்தாரைக் கூட்டிவைத்து, இன்பம் அனுபவிக்கச் செய்து வைக்கும் இப்பொன்னின் உயர்வாகிய அருங்குணத்தைத் தெரிந்துகொள்ளாதவர் உலகில் மிகவும் சொற்பமே.

மேலே கூறியவாற்றால், "முனிவரும் மன்னரும் முன்னுவபொன்னால் முடியும்" என்பதற்கேற்ப, புருஷார்த்தங்களுக்கு ஏதுவாய் இருப்பது பொன்—என்னும் உண்மை நன்கு விளங்குவதன்றோ ?

பண்டித. S. வேலாயுத முதலியார்.

---

**ஸ்ரீ** சங்கராச்சாரியார் பிறந்தநாள்.—கொச்சி ராஜ்யத்தில் ஜோஸ்யரான வித்வான் சி. வி. பிச்சு அய்யர் ஸ்ரீ சங்கராசாரியார் பிறந்த காலத்தைத் திட்டமாய்க் குறித்திருக்கிறார் கலியில் செல்லா நின்ற 3007. அல்லது கி. பி. 805ல் மேஷமாதம் 18ந் தேதி திங்கட்கிழமை நாழிகை 17,25 அல்லது மணி 12,58-ல், காலடி என்னுமிடத்தில் ஜனனமானரென்று நிச்சயித்திருக்கிறார்.

## சூரியன் : அதன் தூரமும், பருமனும்

### SUN: ITS SIZE AND DISTANCE

முன்னர் இப்பத்திரிகையில் நமக்கும் ஸூரியனுக்குமுள்ள தூரம் சுமார் 9 கோடி மைலுக்கு அதிகமென்று சொன்னோமல்லவா? அவ்வளவு அதிக தூரத்தை எப்படிக் கணக்கிடுகிறதென்பதை இப்பொழுது விவரிப்போம்.

நம்மைச் சுற்றியிருக்கும் ஸாதாரணமான வஸ்துக்களை விட பருமனிலும் உயரத்திலும் அதிகமான வஸ்துக்களைப் பற்றிய அளவை சரியாய்ச் சொல்வது கஷ்டமாயிருக்கிறது. ஒரு தெருவின் நீளத்தையும், மரங்கள், கட்டிடங்கள் முதலியவைகளின் உயரத்தையும், ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குள்ள தூரத்தையும் தகுந்த அளவுகோல்களைக்கொண்டு அளந்துவிடலாம். இம்மாதிரி பற்பல தடவைகளில் ஏற்படும் அநுபவத்தைக்கொண்டு, நாமிருக்குமிடத்திலிருந்து வெகுதூரத்தில் தோற்றும் மலை,மரம், கோபுரம் முதலியவைகளின் தூரத்தை அவைகளின் சமீபத்தில் போகாமலேயே சற்றேறக்குறையச் சொல்லலாம். ஆனால் அவைகளின் உயரத்தை ஊகிப்பது அவ்வளவு சுலபமல்ல. ஏனென்றால் சமதரையில் நாமடையும் அனுபவத்தைப்போல், உயர்ந்த வஸ்துக்களின் மேலேறிச்சென்று அவைகளின் உயரத்தை அடிக்கடி நினைத்துப் பார்த்தலாலுண்டாகு மனுபவம் குறைவானதும் தவிர, வஸ்துக்களின் தூரமதிகப்பட, அவைகளின் பருமனும் குறைவாகக் கண்ணுக்குப் புலப்படும். புகைக்கூடு, ஆகாசவிமானம் (Aeroplane),பக்ஷிகள் முதலியன உயரப்பறந்து செல்லும்போது, அவைகள் இவ்வளவு உயரத்தில் பறக்கின்றனவென்று சுமாராய்ச் சொல்வது கூடப் பிரயாஸம். இதிலிருக்கும் சிரமத்துக்கு மேல் சொன்ன வஸ்துக்களுக்கும் பூமிக்கும் கண்ணால் பார்க்கக்கூடிய ஒருவிதமான சம்பந்தமில்லாதிருத்தல்தான் காரணம். பூமியைச் சேர்ந்த

அளவுகளிலேயே இவ்வளவு கஷ்டமிருக்க, சூரியன், நக்ஷத்திரங்கள், கிரகங்கள், போன்ற மனதினால் கூடக் கிரகிக்கக்கூடாத தூரத்திலிருக்கும் வஸ்துக்களின் தூரத்தை எவ்வாறறிவது? முதலில் அஸாத்தியமாகத்தான் தோன்றுகிறது. ஆனாலது பின்வரும் விஷயங்களைக் கவனித்தால், வெகு சுலபமாய் விடும்.

"சுவாமி நமக்கு இரண்டு கண்கள் எதற்காகக் கொடுத்திருக்கிறார்; ஒரே கண் போதாதோ?" என்று ஒரு பையன் தன் தோழனைக் கேட்க, அவன், "ஒரு கண்ணுக்கேதாவது சேதம் நேரிட்டால், மற்றொரு கண்ணாவது உபயோகப்படட்டும்: ஒரே கண்ணாயிருந்தால் அந்தக்கண் போனதும் முழுக்குருடனாகவேண்டுமல்லவா?." என்று பதிலுரைத்தான்; கேட்டவனும் திருப்தி யடைந்தான். சிறுவர்களானதால், அதற்கு மேல் யுக்தி தோன்றவில்லை. நம்மில் வயது முதிர்ந்தவர்களுக்குக் கூட வெகு பேருக்கு, கண்கள் இரட்டையாயிருப்பதின் அவசியம் தெரியாது. இரட்டைக் கண்ணன் தூரத்தையும் வஸ்துக்களின் ரூபத்தையும் உணர்வது போல் அவ்வளவு தெளிவாய் ஒற்றைக் கண்ணன் அறிய முடியாது. முதலில் இருகண்ணிருந்து அதிலொன்று நஷ்டமானவர்களின் அனுபவமிது. நாமே ஒற்றைக் கண்ணைக் கையால் மூடிக்கொண்டு பார்த்தால் இவ்விஷயம் தெளிவாகும்.



நாம் பார்க்கும் வஸ்துக்களின் உருவமும் தூரமும் அவ்வஸ்துவிலிருந்து நமது கண்ணுக்கு வந்து சேரும் ஒளியின் கிரணங்களால் புத்தியில் கிரகிக்கப்படுகின்றன. மேல் காட்டிய படத்தில் A. என்னுமிடத்திலிருக்கும் வஸ்துவிலிருந்து வரும் ஒளி கிரணங்களின் மத்தியிலுள்ள விரிவு (கோணம், Angle), B என்னுமிடத்தி லிருந்து வரும் கிரணங்கள் மத்தியிலுள்ள (Y) கோணத்தைவிட அகண்டது. அதாவது, ஒரு வஸ்துவானது நமது சமீபத்தில் வர வர, அதை நமது கண்களுக்குப் புலப்படுத்தும் கிரணங்களின் மத்தியிலுள்ள கோணம் அதிகமாகிக்கொண்டே வரும். தூரமதிகரிக்க, மேற்படி கோணத்தின் விரிவு குறையும். ஒருவஸ்து நம்மைச் சமீபிக்கும் போது அதைப்பார்க்க இருகண்களும் தங்களைக் கட்டியிருக்கும் தசை நார்களின்(Muscles)உதவியால் உட்புறமாய் சாய்க்கப்பட்டு, அவ்வஸ்துவினின்று வரும்கிரணங்களை உட்கொள்ளுகின்றன. அதேமாதிரி அந்த வஸ்து தூரத்தில் விலக விலக,கண்களின் உட்புறத்துச் சாய்வு குறைந்து, எப்போதும் அந்த வஸ்துவிருக்கும் இடத்தை நோக்கியே செலுத்தப்படுகின்றன. இம்மாதிரியாய்க் கண்ணுருண்டைகள் தசை நார்களால் சாய்க்கப்படும் உணர்ச்சி மூளைக்கெட்டி அதனால் வஸ்துவுள்ள தூரம் இவ்வளவென்றும் உணர்ச்சி ஏற்படுகிறது. ஒரு வஸ்து நமது கண்களுக்கு அதிக சமீபத்தில் கொண்டுபோகப்பட்டால், அதைப் பார்ப்பதற்காக கண்கள் உள் பக்கம் அதிகமாய்ச் சாய்க்கப்படுவதாலுண்டாகும் வலியைக்கூட நாமுணர்கிறோமல்லவா? ஆகவே, ஒரு வஸ்துவிலிருந்து நம் கண்ணுக்கு எட்டும் கிரணங்களின் விரிவைக் கொண்டு நமக்குமவ்வஸ்துவுக்கு மிருக்கும் தூரமிவ்வளவென்று நாமறிகிறோமென்பது தெளிவாகிறது.

இந்த அநுபவத்தை ஒட்டியே, வான சாஸ்திரிகள்(Astronomers)சூரியன் முதலான ஆகாயத்தில் மிதக்கும் வஸ்துக்களின் தூரத்தைக் கணக்கிடுகிறார்கள்.




அவ்வளவு பெரியதூரத்தைக் கணக்கிடுவத

ற்கு நம்மிரு கண்களின் மத்தியிலிருக்கும் தூரம் போதாது. ஆகையால், இப்பூதலத்தில், நடுவில் அநேகமாயிர மைல்தூர மிருக்கும்படி, A, B என்ற ஸௌகரியமான இரண்டு இடங்களில் சென்று, சூர்யனிருக்கும் திக்கை (அதன் சாய்வை) இரண்டிடங்களில் ஒரே சமயத்தில் அதி நுட்பமான அளவு கருவிகளைக் கொண்டு கணக்கிடுகிறார்கள். சூரியனின்று A B, இடங்களுக்கு வரும் கிரணங்களின் (M) விரிவை அதிலிருந்து (Angle M) கணக்கிடலாம். அந்த விரிவின் பரிமாணத்தையும், A B, என்ற தூரத்தையும் கொண்டு பூமிக்கும் சூரியனுக்குமுள்ள தூரம் சுமார் 9கோடி மைலுக்கதிகமானதென்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

ஒரு கோல் முழ நீளமென்றால் நமக்கு நம் கையின் பரிசயத்தினால், அந்தக் கோலைக் கண்ணால் பார்க்காவிட்டாலும், இவ்வளவு நீளமானதென்று மனத்தில்கிரகிக்கலாம். அடுத்த கிராமம் 2 மைல் தூரத்திலிருக்கிறதென்றால், அந்தத் தூரமும், இவ்வளவு தான்; அவ்வூருக்குப் போக இவ்வளவு நேரம் பிடிக்குமென்று மனதில் தோன்றுகிறது. ஆனால் சூரியனுக்கும் நமக்கும் 9 கோடி மைல் என்று சொன்னால், அவ்வளவு பெருந்தூரத்தை நினைத்தால் புத்தி மயங்குகிறது. தெளிவாய் இவ்வளவு நீளமென்று கிரகிப்பது அசாத்தியம்.

சூரியனுக்கும் நமக்கும் ஒருநேரான இருப்புப் பாதையிருந்து, மணிக்கு 40-மைல் வீதம் புகைவண்டியொன்று கிளம்பிச் செல்வதானால், அந்தவண்டி சூரியனிடம் போய்ச் சேர சுமார் 260 வருஷங்களுக்கு மேலாகும். ஒருவன் பிறந்த உடனே அந்த வண்டியில் தன் ஜனங்களுடன் ஏறிச்செல்ல ஆரம்பித்தால், கால் வழிப் பிரயாணம் முடிவதற்குள்ளேயே 65-வயது கிழவனாய் விடுவான். அவனைச் சேர்ந்தவர்கள் அநேகமாய், இறந்திருப்பார்கள். அவன் காலமும், அவன் குழந்தை காலமும், பாதிவழி கடப்பதற்கு முன் முடிந்துவிடும். அவ்வண்டி சூரியனைப்போய்ச் சேரும்போது, ஆதியில் கிளம்பின சிசுவின் "கொள்பேரன்" மார்கள்கூட கிழவர்களாய் விடுவார்கள்.

தூரந்தான் இவ்வளவு பெரியதாயிற்றே, பருமனைப் பற்றிப் பார்த்தாலோ, அதுவும் பிரும்மாண்டமானதாக இருக்கிறது.ஒரு நாட்டுப்புறத்தானை சூரியனெவ்வளவுபெரிதென்று கேட்டால், அவன் "ஒரு தோசைப் பிரமாணம்," "உரிக்காத தேங்காயளவு," "ஒரு சிறு தட்டவ்வளவு அகலம்," என்று பலவாறாகக் கூறுவான். இவ்வளவு அற்பப்பரிமாணமுள்ளவஸ்துக்களை ½மைல் தூரத்தில் வைத்துப்பார்த்தால், அவைகள் நமது கண்ணுக்கு எவ்வளவு பெரிதாகத் தோன்றும்? உயர்ந்த கோபுரங்களின் மீதேறி விளக்கேற்றும் மனிதன் நமது கண்ணுக்குச் சிறு குழந்தைபோல் தோற்றவில்லையா? கழுகுபோன்ற பெரும் பக்ஷிகள் ஆகாயத்தில் 2-மைலுக்கதிகப்படாத உயரத்தில் பறந்தால் ஒருசிறு புள்ளியளவுதானிருப்பதாக நமக்குத் தோன்றுகிறது. இது இப்படியிருக்க 9-கோடி மைலுக்கதிகரித்த தூரத்தில் ஒருதேங்காயவ்வளவு பெரிதாய்தோன்றும்வஸ்து எவ்வளவு பெரியதாய் இருக்கவேண்டும்? இந்தக் கேள்வியை இன்னொரு விதமாய் மாற்றிக் கேட்போம். நம்மைப்போலொரு மனிதன் சூரியனிடத்திலிருந்து நமது பூமியைப் பார்ப்பதாக நினைத்துக்கொண்டால், ஆயிரக்கணக்கான அகல நீளமுள்ள பல கண்டங்களும் சமுத்திரங்களும் கூடிய இப்பூமி அவன் கண்ணுக்கு எவ்வளவு பெரியதாய் புலப்படுமென்று நினைக்கிறீர்கள்? ஒருஎலுமிச்சம்பழத்தைச் சுமார் ½-மைல் தூரத்திலிருந்து பார்த்தால் அது எவ்வளவு பெரியதாய்க் காணப்படுமோ அவ்வளவு தான் இப்பூமியும் சூரியன் மனிதனின் கண்ணுக்குப்புலப்படும். அதாவது, 9 கோடி மைலுக்கதிகமான தூரத்தில் இப்பூமியளவு பெரிதான கோளமிருந்தால், அது இப்பூலோக வாசிகளான நமக்கு சுக்கிரன், குரு, நக்ஷத்திரங்கள், இவைகளைப்

போல ஒரு சிறு புள்ளியளவுதான் தோன்றும். இவ்வளவு பெரிய பூமியைப் புள்ளியளவாக்கும் அகாத தூரத்தில், தேங்காயவ்வளவு பெரிதாகத் தோன்றும் சூரியன் இப்பூமியை விட எவ்வளவு பெரியதாயிருக்கவேண்டும்! இப்பூமியைப்போல் 10-லக்ஷம் பூமியை ஒன்றுய்த் திரட்டி பெரும் பந்து ஒன்று செய்தாலும், அது சூரியனைவிட சிறியதாகவே யிருக்கும். சூரியனை ஒரு பெரும் யானைக்கு ஒப்பிட்டால், இப்பூமியை ஒரு சிறு சுண்டெலியளவென்று சொல்வதுகூடப் பிரயாஸம். பல சூரியன்கள் சேர்ந்தும் அதை விடப் பெரிதான நக்ஷத்திரங்கள் எண்ணப்படும் மகா சூரியன்கள் கோடிக்கணக்கால் ஆகாயத்தில் உலாவித் திரிந்துகொண்டிருக்கின்றன. வாக்குக் கும் மனதுக்குமெட்டாத இப்பிரம்மாண்டத்தை உண்டுபண்ணி, அவைகளில் அனந்த கோடி ஜீவராசிகளையும் சிருஷ்டித்து விளையாடும் பரப் பிரம்மமான கடவுளின் மகிமையே மகிமை!!

எஸ். பாலகிருஷ்ணய்யர், பீ.ஏ., எல்.டி.

பருத்திக்கொட்டை மனிதன் உணவு.—இதுவரை யில் பருத்திக்கொட்டை கால்நடைகளுக்கு (ஆமோடு கள்), உணவு என்று அறிந்திருக்கிறோம். மனிதனு க்கு உணவாகவும் ஆகிறதென்று இப்போது அறிகி றோம். அமெரிக்கா தேசத்தில் பருத்திக்கொட்டையை உடைத்து, மேல் தோலைவிலக்கி உட்பருப்பை மாவாக அரைத்து ரொட்டி முதலியவைகளாகச் செய்வித்து ருசியான உணவாகக் கொள்ளப்படுகிறது. கோது மையைவிட அதிக தாதுபுஷ்டியை உண்டுபண்ணக் கூடியதா யிருக்கிறது. தனியாக உண்ணுவதைப்பார் க்கிலும் கோதுமை முதலிய தானியங்களின் மாக்களு டன் சேர்த்து ரொட்டி முதலியவைசெய்து உண்டால் அதிக நலமென்று தெரியவருகிறது. 4-பங்கு கோது மைமாவுக்கு 1-பங்கு பருத்திவிதைமாவும் சேர்த்து பக்கு வங்கள் செய்து அவைகளைச் சாப்பிட்டால் ருசியாக வும் தேகத்திற்கு ஆரோக்கியமாகவுமிருக்கிறது. நம் தேசத்தில் ஏராளமாய்ப் பருத்திவிதை இருக்கின்றமை யால் மேற்கண்ட விதமான உணவு அனுஷ்டானத் துக்கு வருல்பக்ஷத்தில் அது மிகவும் பயன்படும்.

## ராஜம் அய்யர் அபிப்பிராயங்களும் குறிப்புகளும்

## RAJAM IYER'S OPINIONS AND REVIEWS

### VIII. ஆத்ம ஆராய்ச்சி

எவ்விதத்திலாவது புஸ்தகங்களைச்சீக்கிரத்தில் உண் டாக்கி லாபம் பெற வேண்டும் என்ற வீண் ஆவல் மிகுந்த இக்காலத்தில், ஹேச். டிரெஸ்ஸரால்செய்யப் பட்ட ஆத்ம ஆராய்ச்சி என்ற இப்புத்தகம் ஆங்காங்கு தவறி வெளிவரும் அற்புதப் புத்தகங்களில் ஒன்று. இக் காலத்தின் கொடுமை பணத்தாசையாலும், ஸ்வய நயங் கருதுதலாலும் ஏற்படுவதாகக் கூற இடமில்லை. ஆனல் முக்கியமாக ஆத்ம நஷ்டத்தால் ஏற்படுவதே; இக்கொடுமையை நீக்கத் தகுந்ததாயும், மனிதனுக்கு முக்கியமாக ஸம்பந்தப்பட்டதாயும் உள்ள விஷயங் களை அடக்கியுள்ளது இப்புத்தகம். ஆத்ம ஸ்தானம் இது, இதை உணர்ந்து சீர்திருந்துவது இப்படி, இத ஞல் பிரபஞ்சஸம்பந்தமாக ஆத்மாவிற்கு உள்ள நிலையும், உள்ள ஆனந்தமும் வெளியாகி இவ்வாறு நித்ய திருப்தியையும் சாந்தத்தையும் உண்டாக்கும் என்பதை குறிப்பதே டிரஸ்ஸர் புஸ்தகத்தின்நோக்கம். இதில் ஒவ்வொரு பக்கத்தில் காணப்படும் விஷயங் களைப் பார்த்தால் அவருக்கு இவ்விஷயமாக எடுத் துரைக்கத் தகுந்த அதிகாரமிருக்கிறது என்பது நன் ருக வெளியாகும். இவர், தர்க்க நுட்பங்களையும், யுக்திவாதங்களையும் மாத்திரம் கண்டு பிரமித்து ஆனந் திக்கும் கேவலம் வாசாஞானியல்லர்; உண்மை அனுப வித்தறிய முயல்பவர்; இவர் சிரத்தைக்குத் தகுந்த வித்தியும் இவருக்கு ஏற்பட்டிருக்கிறது; தமது ஆராய்ச்சியால் தமக்கு வந்திருக்கும் சாந்தியை, வழிதெ ரியாது வருந்தும் உலகத்தவர்களுக்கு வெளியிட்டு உத வவேண்டும் என்ற பக்தியால் இவர் உள்ளம் பூரித் திருக்கிறது. சுருங்கச்சொல்லில், இவர் உலகத்தவ ருக்கு ஓர் அரிய பெரிய விஷயத்தைக்கூறுகிறார்.நன்கு மதித்துக் கேட்பதற்கு வேண்டிய சிறப்பும் இவரிடம் இருக்கிறது. சிற்சில மதஸ்தாபகர்கள்போல 'என் வேதத்தைக் கைக்கொள்ளாதவர் நரகம் புகுவது திண் ணம்' என்ற அகங்காரத்துடன் இவர் கூற வருபவர் அல்லர்; தம் அகங்காரத்தை அப்புறப்படுத்தி மிகுந்த விநயத்துடனும், தாம்காண முயன்ற பரம்பொரு ளின் அகண்ட தேஜஸ்ஸின் ஓர் சிறுபாகம் தன் புத்த கத்தின் வழியாகப்பிரகாசித்து உண்மையில் விஷய

அதிருப்தி அடைந்து வருந்துகிற சில முமூக்ஷுக்களுக்கு சற்றுப்பயன்படலாம் என்றநோக்கத்துடனும் தமதுஆராய்ச்சியின் முடிவை வெளியிடுகிறார்.

இப்புத்தகத்தில் ஆங்காங்கு சில குற்றங்கள் காணப்படினும், பொதுவாக இப்புத்தகம் அநேக முமூக்ஷுக்களுக்குத் திருப்தியையும் சாந்தியையும் கொடுத்து, சென்றவிடமெல்லாம் ஸுகமுண்டாக்கும் என்பதற்கு ஐயமில்லை. வாசிப்பவரைச் சீர்திருத்தி நல்லவராக்கும் புஸ்தகமே நல்ல புஸ்தகம் என்று ஸிஸரோ என்பவர் கூறியதற்கேற்ப இப்புத்தகத்தை நல்லபுஸ்தகம் என்று தடையின்றி நாம் கூறலாம். இப்புத்தகத்தின் சிற்சில பாகங்கள் (முதல் இரண்டு அத்யாயங்களில் சிற்சில பாகம், கடைசி மூன்று அத்யாயங்கள், **தாமஸ்-ஏ-கேம்பிஸ்** என்பவரால் எழுதப்பட்ட **கிறிஸ்துவைப்போல் பழகல்** என்னும் அரிய புஸ்தக விஷயத்தைவிட மிகக் காம்பீர்யமாக அமைந்திருக்கின்றன. இப்பாகங்களை ஒவ்வொருவரும் அடிக்கடி வாசித்து மனனம் செய்து இவைகளில் பழகிவரவேண்டும். தாம்சற்று உணர்விழந்துஅப்பாற்பட்டு ஞானநிஷ்டையில் ஆத்மாவாகி நின்று,'அக்காலத்திலாவது சக்தி, ஸத்வம், அன்பு, அழகு இவைகளாலாகிய அழியா பிதிர்த்வ' (பரம்பொருளைப் பிதாவாக எண்ணும்) அவஸரத்திலிருக்க, அப்பொழுது தமக்கு ஏற்பட்ட அனுபவத்தால் டிரஸ்ஸர் தாம் கண்ட கண்கொள்ளாக் காட்சியையும், தெய்வஸாந்த்யத்தின் அழகையும் அடிக்கடி இப்புத்தகத்தில் வெளியிடுகிறார். எவ்விதத்திலாவது மனத்தினது தெய்வத்தன்மையை வெளிப்படுத்தும் இத்தகைய அனுபவவாக்கியங்களே இப்புத்தகத்தைச் சிறப்புடையதாகச் செய்கின்றன. டிரஸ்ஸரைப்போன்றவர்களுக்குக் குரு ஸஹாயமின்றி மனோதர்மப்படி உண்டாகும் அனுபவவிசேஷங்களும், மனம் பரவசமாக்கப்படுங்காலத்தில் கீடே, வேர்ட்ஸ்வர்த், டென்னிஸன் முதலிய கவிராயர்களுக்கு உண்டாயிருக்கும் அறைகுறையான உண்மை உணர்வும், ஏமியல் என்பவர் தமது தினக்குறிப்பில் அனுபவத்தால்கண்டுஎழுதியிருக்கும் நிர்விஷய ஆனந்தவர்ணனையும், பரமபதம் நம்முள்ளேயே இருக்கிறது என்றும் உபநிஷத்துக்கள் கோஷிக்கும் 'நீ அது ஆனாய்' (தத்வமஸி )என்றமஹாவாக்யத்தின் பொருள் வீண் பிராந்தியல்ல வென்றும், ஈசுவராபாத மல்லவென்றும் நன்றாக விளக்குகின்றன.

இப்படி யிருப்பினும், ஸ்வந்தப் பிரயத்னத்தாலும் மனோதர்ம விசேஷத்தாலும் ஏற்பட்டுள்ள அனுபவ லேசத்தை வைத்துக்கொண்டு யுக்தி வாதங்களை ஆத்திரப்பட்டுச் செய்யத் தொடங்குவதே டிரஸ்ஸரிடம் இருக்கும் முக்கியமான தவறு என்பதைக்காண என்போலியருக்கு மிகுந்த துக்கம் உண்டாகின்றது. டிரஸ்ஸர் பரமபதம் அடைய உண்மையாகப் பாடுபட்டார் என்பதும்,அவருக்கு அதற்கு ஏற்றப்பலன்கொஞ்சம் கிடைத்திருக்கிறது என்பதும் உண்மையே. ஆயினும் அவருக்கு அனுபவம் பூர்ணமாகஏற்பட்டுவிட்டது என்பது நம்பக்கூடியதா? 'நம்முள்இருக்கும் உண்மைப் பரம்பொருளாயின், எப்படி ஸ்ருஷ்டி முதலியன ஏற்படும்? இவ்வனுபவங்களைப்பற்றி யான் வர்ணிப்பது பிறர் வர்ணனைகளைப்போல இல்லாதிருப்பானேன்? ஆத்மவே பிரஹ்மமாகில், அது பூர்ணமாயும், மாறுததாயும், எங்கும் நிறைந்ததாயும், சக்திகளுக்கும் யுக்திகளுக்கும் ஆதாரமாயும் இருப்பதல்லவா?' என்று அவர் கூறும் ஸந்தேஹ வாக்யங்களிலிருந்து டிரஸ்ஸர் பஞ்சகோசத்திறைகளுக்கு அப்பாற்பட்டதாயும், விஷய ஸம்பந்தம் அற்றதாயும்,உள்ள அதி சுத்தவஸ்துவை உணர்ந்தவரைப்போலப் பேசவில்லை என்பது நன்றாக வெளியாகும். வேதாந்தம் ஸ்ருஷ்டியை மறுக்கவில்லை. ஆனால்ஸ்ருஷ்டி எல்லாம் தோற்றமாத்திரமாக இருப்பதால் முடிவான அனுபவமாகிய பரப்பிரஹ்மத்தில் நிலைக்க இடமில்லை என்று கூறுகிறது. (இதையே கைவல்ய நவனீத ஆசிரியர்

'கற்பனை வந்தவாறு காட்டினேம்காண்ப வெல்லாம் சொற்பனம் போலவெண்ணித் துணிந்தவன் ஞானியாவான்' என்றார்.)

பரம்பொருள் நம்மைப்போல வளர்கின்றது என்று ஒருதமும் கூறுகிறதில்லை. நமக்குள் இருக்கும் ஆத்மா, பரம்பொருள் இவைகளுள் ஒன்றையாயினும் அறைகுறையாயில்லாது முற்றிலும் உள்ளபடி கண்டு உணர்ந்தால் அல்லது ஆத்மா பரம்பொருள் அல்ல என்று யாரால்கூறமுடியும்? மேலும் ஆத்மாவை உணர்ந்தவர்கள் எவ்விதமாக பேதப்பட்டிருந்த போதிலும், உபநிஷத்ரிஷிகள் முதல் இக்காலத்திய பிரஹ்ம ஞானிவரையில் உள்ள ஐயம்திரிபற உணர்ந்த நிஷ்டாபரர்கள் எல்லோரும் அந்த ஆத்மாவை ஒரேமாதிரியாகத்தான் வர்ணித்திருக்கின்றனர் என்பது நன்றாகக் கவனிக்கவேண்டிய விஷயம். இவர்கள் எல்லோரும் ஒன்றையே அனுபவித்து அதையே தான் வர்ணித்திருக்கின்றனர் என்பதற்கு ஐயமில்லை. ஆகையால்,

இந்த ஆத்மா பரம்பொருளாகில் அது பூர்ணமானதும், மாறாததும் அல்லவா?* * * என்ற முற்கூறிய டிரஸ்ஸர் கேள்விகளுக்கு 'அநுபவித்துணர்ந்த மஹான்களால் அது அவ்வாறு தான் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது, என்பதேதகுந்த உத்தரமாகும்.

உபநிஷத் ரிஷிகள் தமது அநுபவத்தை மாத்திரம் தான் வெளியிட்டனர். பின்னர் வந்தவர்கள் அவ்வநுபவங்களைத் தாமும் அநுபவித்தறிந்து அதிலிருந்து வேதாந்தம் என்னும் சிறந்த யுக்திவாதமாகிய சாஸ்திரத்தைப் பிரகடனம் செய்தனர். இந்த யுக்திவாதம் பின்னர் வந்த முமுக்ஷுக்கள் அநுபவங்களால் உறுதிப்படுத்தப்பட்டு எக்காலத்தும் மாறாத உண்மையென்றே மதிக்கத்தக்கதாக விளங்கி வருகின்றது. இந்தச் சாஸ்திரத்தில் கூறும் முடிவான அநுபவத்தை அங்கீகரியாதவர்கள் தம்மால் இச்சிறந்த அநுபவத்தை முற்றிலும் பெறமுடியாது, தயங்கி, உபநிஷத் வாக்யங்களைத் தமக்கு ஏற்பட்டிருக்கும் அநுபவத்தை ஒட்டிப் பொருள்படுத்தித்தங்கள்அநுபவமே முடிவென்று கொண்டு புதிய யுக்திவாதங்கள் ஏற்படுத்திச் சிஷ்யர்கள் ஸம்பாதித்தனரே ஒழிய வேறல்ல. உண்மையான வேதாந்தம் ஸாதாரண ஜனங்கள்புத்திக்குப் பிடிபடாமலிருந்து குழப்பத்தை உண்டாக்குவதால் இப்புதிய யுக்திவாதங்களைப் பின்பற்ற சிஷ்யர்கள் ஏற்பட்டனர். இம்மாதிரி சில நுட்ப புத்திமான்கள் வேத ஸம்மதமான புதிய வழிகளை வெளிப்படுத்த ஆவல் கொண்டு ஆசார்ய ஸ்தானமாகித் தம் அநுபவத்திற்கு மேலான அநுபவம் இல்லை என்றுஉறுதி மொழி கூறி வெளிவந்தது முற்கூறிய ஜனங்களுக்கு ஓர் பெரிய நன்மையே. இவ்வாசாரியர்கள் தம் நிலையைவிட மேலான நிலைக்குப் போகமுடியாததால் மேலான நிலையே இல்லை என்று மதித்தனர்; தமக்கு அஸாத்யமாக இருப்பவைகளை எவருக்கும் அஸாத்யம் என்றே மாறாக எண்ணிவிட்டனர். முடிவான அநுபவம் இன்னும் வாராததால், டிரஸ்ஸர் தமது அநுபவத்தைக் கொண்டுமூட்டுத்தனமாக யுக்திவாதம்விடாது செய்து வருவாரயின், இவ்வாசாரியர்கள் செய்தகுற்றத்தையே செய்தவராவார். பேதபுத்தி முற்றிலும் போய், ஸமுத்திரத்தில் சேர்ந்த ஆறுபோல நமது அகங்காரம் முற்றிலும் மறைந்து, பிரபஞ்சவாசனையே அற்று, மனம் முற்றிலும் நாசமாகும் ஓர் அநுபவம் இருக்கின்றது என்று அநேக மஹான்கள் ஐயம் திரிபற வெளியிட்டிருக்கின்றனர். இந்நிலையை அடையும் வரையில் ஒருவனுக்குத் திருப்தி வந்துவிடக்கூடாது. இந்நிலையை அடைவதென்றால் உலகம் பிரக்ஞை மறுபடி வாராதிருக்கும் என்பதல்ல. இந்நிலையை அடைந்து உலகத்தில் நடமாடும் பரமாத்மாவுக்கும் ஸாதாரண பாமரனுக்கும் முக்யவித்யாஸம் யாதெனில் முன்னவனுக்கு எங்கும் பரம்பொருளே தோன்றும், பின்னவனுக்கு எங்கும் ஸுகதுக்கம்முதலியது துவந்துவங்களே தோன்றும். உபநிஷத்து வாக்கியப்படி முன்னவன் 'தன்னை எல்லாவற்றிலும், எல்லாவற்றையும் தன்னுள்ளும் காண்பான்.' அவன் பிரபஞ்ச நிலைக்கு வருங்கால் தன் அநுபவத்தால் ஏற்பட்ட சாந்தியுடன் இருந்து, தன்னைச் சுற்றிலும் பரிசுத்தம் சாந்தம் முதலியவைகள் குடிகொண்டிருக்கத், தன்னோடு ஸம்பந்தப்படுபவர்கள் எல்லோரையும் மேன்மை அடையும்படி செய்வான்.

'எங்கே தன்னம் தனியாக விருக்கும் பரம்பொருள், எனக்கு தனித்து ஓர் இருப்பில்லாதபடி என்னை விழுங்கிவிடுமோ?' என்று டிரஸ்ஸர் அநுவசியமாகப் பயப்படுகிறார். இந்தப் பயத்தினாலேயே ஹிந்து சாஸ்திரமுடிவை ஓர் விளங்கா நிலை என்று கருதி, அதை அடைவதால் அடைபவனுக்கு ஓர் தனியிருப்பு ஏற்பட இடமில்லாமல், அடையும் முடிவாம் கடவுள் தன்னை முழுத்தாவண்ணம்மிகுந்த ஆவலோடுஅதைஅணுகாது ஒதுங்கிநிற்கிறார். ஹிந்துமதமுடிவைபற்றி இவர் முற்றிலும் தவறான அபிப்பிராயம் கொண்டிருக்கின்றனர். இதுபோலவே ஸாதாரணமாக எல்லோரும் மதிக்கின்றனர். பிருகிருதி சாஸ்திரம் எவ்வளவு ஸதாரண ஜனங்களுக்கு விளங்காததாகக் காணப்படுமோ, அதுபோலவேதான் ஆத்மானுபவமும் சாஸ்திரப் பழக்கம் இல்லாதவர்களுக்கு விளங்கா நிலையாகக் காணப்படும். செடி, நிலக்கரி, பூச்சி, நக்ஷத்ரங்கள், பூமியின்காலம், இதுபோன்ற பிரகிருதி சாஸ்திர விஷயங்களின் ரஹஸ்யத்தை உள்ளபடி உணர்தல் ஸாதாரணம், கூடுமானதொழில், என்று கூறும் இக்காலத்து அறிவுடையோர், முன்பின் யோசிக்காது, இவைகளை உணரவல்ல அறிவின் ஸ்வரூபம் இத்தன்மையது என்று உணருவது விளங்கா நிலைஎன்று ஒரே அடியாய் கூறுவது மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்குகின்றது! தன்னைத்தான் உணர்தல் விளங்கா நிலையாம்; ஆனால் தன்னை நீங்கலாக மற்றையவைகளை உணருவது சாஸ்திரிக நிலையாம்! இதென்ன விபரீதம் நாம் பிறந்தது முதல் வெளி நோக்கமுடையவர்கள் நமது இந்திரியாதிகளை வெளியே செலவிட்டே பழ

கியவர்கள். அவைகளை உள்புறம்திருப்பித் தம்மைஉண ரச்செய்வது என்பதை நாம் நடுநடுங்கி விளங்காதிலே என்று கூறுவது நமது யுக்திக்கு விரோதமன்று. ஆனல் மனப்பூர்வமாகப் பாடுபடும் முமூக்ஷுக்கள், மின்சாரம் முதலிய நுட்பவிஷயங்களை உணருவது எவ்வளவு ஸாதாரண விஷயமோ அதுபோலவேதான் தன்னைத்தான் உணருவதும் என்று உணர்ந்து, ஸாதாரண அறிவுடையோர்கள் இம்முடிவைப் பற்றிக் கொண்டிருக்கும் பயம் முதலியன எல்லாம் வெறும் மூட நம்பிக்கை, யுக்திக்குப் பொருந்தா, என்று மதித்து தேறி நிற்கவேண்டும்.

மேலும் டிரஸ்ஸர் நடுங்குவதுபோல நடுங்க இடமேஇல்லை. ஆராதிக்கப்படும் கடவுள்பக்தனை விழுங்கி விடுவதே இல்லை. பக்தனது இருப்பு ஸ்திரப்படுகிறது. அவன் பாசுத்தனுகவும் மேன்மை உடையவனுகவும் ஆகிருன். ஆத்மானுபவத்தால் தன்னுள் இருக்கும் பரமாத்ம ஸம்பந்த உணர்ச்சி உண்டாக அவன் உருவின்றி உடனே கரைந்து போகாது, எல்லாவித நன்மைகளுக்கும் நிலயமாகி அற்புதச் செயல்களை செய்யும் திறனுடையவன் ஆவான். வியாஸர், சுகர், வஸிஷ்டர், சங்கரர் முதலிய மஹான்கள் ஆத்மானுபவ விஷயத்தில் ஒரே நிலையிலிருந்தபோதிலும், உலக நடவடிக்கையில் ஒரே மாதிரியாக இல்லாது அவரவர்கள் தத்தமக்கு எற்றப்படி சிறந்த நன்மைகளேயே செய்திருக்கின்றனர் பரம்பொருளே அவர்கள் மூலமாகத் தொழிற்பட்டபோதிலும், ஒரே மாதிரியாக வெளிவராது வெவ்வேறு விதமாகவே அவர்களைத் தூண்டிற்று. எண்ணரும் திசைகளோடிப் பரந்திருக்கும் ஹிமாலயத்திற்கு நிகர் என்று கூறத்தக்க மிகப் பெரிதான மஹாபாரத மூலமாக ஒருவர் உலகை சிர்படுத்தினர். அளவு ஒழுங்கு முதலியவைகளில் ஹிமாலயத்தைஒத்திருந்தபோதிலும் அதைவிட உலகில் வெகுகாலம் நிலைபெற்று இந்நூல் மனிதர்களை மேன்மைப்படுத்தும் விஷயத்தில் ஹிமாலயத்தை மிஞ்சிவிட்டது.மற்ருெருவர் மனிதன் வர்ணனை சக்தியுள் அகப்படாத அற்புதமான பரம் பொருளைக் கிருஷ்ணனுக வர்ணித்து உலகை உய்யும்படிசெய்தார். இவர் வர்ணித்த கிருஷ்ண பகவானே அழகு, சிறப்பு, ஆழ்ந்த நிலை இவைகளில் மிகச்சிறந்தவர். இவரை உள்ளபடி உணரவேண்டுமாகில் பிரபஞ்சம் முழுவதையும் அதற்கு அப்பாற்பட்டதையும் உணரவேண்டும். மூன்ருவதவரோ மஹரிஷிகளுள் மிகச்சிறந்தவர், பரம் பொருள் அவதாரமாகிய ஸ்ரீராமசந்த்ரம் ஆசாரியனுக இருந்து உபதேசம் செய்து நம்மைக்காத்தவர். நான் காமவரோ அற்புதச் சிறுவர். இளமையிலேயே ஸந்யாஸம்கொண்டு பாதகண்டம் முழுமையும் யாத்ரை செய்து தமது இனிய குரலால் சிறந்த உண்மைகளை வெகு எளிய நடையில் எடுத்துக்கூறி விமர்சித்தார். உலகமே கண்டு வியக்கும்படி அற்புத நூல்கள் செய்தார். பின்காலத்தில் இவராலேயே வேதாந்த சாஸ்திரம் நிலைபெற்றது என்று கூறவேண்டும். ஆகவே ஒவ்வொருவரும் தத்தமக்கு எற்றபடி உலகநன்மைக்குப் பாடுபட்டுத்தாம் அனுபவித்த கடவுளின் பெருமையை வெளிப்படுத்தினர். இவர்கள் உலகில் பழகுங்காலத்தில் தாம் தனித்திருப்பதாக எண்ணுது, அகங்காரத்தை அறவே அடக்கி, எல்லாவற்றிலும்பராதீனமாகவே நின்று நிலைபெற்றனர். ஆகவே முற்காலத்தில் கூடகற்பனு சக்தி உண்டு; அது மனித ஸம்பந்தமில்லாது தெய்வ ஸம்பந்தமுடையதாக இருந்தமையால் மிகச்சிறந்ததாக இருந்தது.

டிரஸ்ஸர் நூலில் இருக்கும் சிற்சில யுக்திவாதங்கள் எங்களுக்குப் பொருத்தமாகப் படவில்லை அவைகள் எல்லாவற்றையும் இங்கு எடுத்து ஆண்டால் மிகப்பெருகுமாதலின், சிலவற்றை மாத்திரம் எடுத்துக் கொள்ளுவோம். 'பரம்பொருளுக்குப் பாத்வம், அபரப்பொருள்கள் இருத்தலாலேயே எற்பட்டது. இவ்வாறு இல்லாவிடில் வாழ்க்கை ஸாரமற்றதாகவும், பெரும் அகங்கார ஸம்பந்தமுடையதாக எற்படும்?' என்று கூறுகிருர் டிரஸ்ஸர். யாருக்கு ஸாரமற்றதாக இருக்கும்? பரம்பொருளுக்கு என்றே கூறவேண்டும். இம்மாதிரி யுக்திவாதம் செய்வதைவிட மௌனம் மிகவும் நன்ருக விருக்கும். இம்மாதிரி கூறுவதால், 'நாம் இல்லாது கடவுளுக்கு ஓர் இருப்பு இல்லை. அவர் செயலுக்கு அனுகூலங்கள் அல்லது பிரதிகூலங்கள் செய்யும் திறம் நமக்கு உண்டு' என்று யுக்திக்குப் பொருந்தா அஸம்பாவிதங்கள் விளையும். பாபி அல்லது புண்யாத்மாவாவது நமது தொழிலால் முடியக் கூடியது. ஆனல் நமது கர்திருத்வத்தைக் கடவுள் பரமாக விட்டுவிடுவதால் அவருக்கு நாம் உதவி புரிந்து அவர் ஆளுகைக்கு அனுகூலம் செய்கிருேம் என்பது தோன்றும். உடனே இதென்ன ஸ்வாமி! நமது கையில் அகப்பட்டுக்கொண்டு விழிக்கிருரே! என்று யார் தான் கூறமாட்டார்கள். மேலும் 'ஆத்மானுபவ ஸமயத்தில் நமது ஆத்மா கடவுளோடு கலக்கிறது. இப்படியாயினும் அதனேடு இரண்டறக் கலப்பதில்லை' என்று கூறி இயேசுகிறிஸ்துநாதர் தான் கடவுள் மகன் என்று கூறுவது இந்த அனுபவத்தைத் தான் வெளியிடுவது என்று ஸாதிக்கிருர். இக்காலத்தில் 'நானும் என் தகப்பனும் ஒன்றே' என்ற இயேசுகிறிஸ்து நாதரின் உபதேசமொழிக்கு

வேதாந்த பரமாகப் பொருள் கூறுவதால் இந்த விஷயத்தில் டிரஸ்ஸர் ஸாதிப்பதை முற்றிலும் அங்கீகரிக்க முடியவில்லை. இயேசுகிறிஸ்து நாதர் எப்படிக் கூறியிருந்தபோதிலும், 'நான் தேஹமல்ல பரம்பொருளே !' என்று அநேக மஹான்களது அனுபவாக்கியங்கள் இருப்பதால் பரமநிலை ஒன்று உண்டு என்பதை மறுக்கமுடியாது. இந்தப் பேதமற்றபரிசுத்தநிலை ஆவலோடு அடைய முயலுபவருக்குக் குருவருளால் விதிக்கும். குருஸஹாயமின்றி வெகுகாலம் இம்மார்க்கத்தில் நிலைத்து நிற்க முடியாது. இரண்டாம் அத்யாயத்தில் டிரஸ்ஸர் ஆத்மாவைபற்றி விஸ்தரிக்கிறார். இதில்பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் அடிக்கடி பேதமின்றிக் கூறுவதால், ஆத்மஸ்வரூப விஷயத்தைப்பற்றி இவருக்கு நிச்சய ஞானமில்லை என்பது நன்கு வளங்கும். தேஹத்துக்கு வெளியில் கடவுள் தனித்திருக்கிறார் என்ற எண்ணத்தை இவரால் மாற்றவேமுடியவில்லை; ஆத்மா அறிபவன் அவஸ்தாத்ரய ஸாக்ஷி, அவைகளுக்கு அப்பாற்பட்டதால் பிரஞ்ஞாரூபன் என்பதை இவரால் நன்றாக உணரமுடியவில்லை. டிரஸ்ஸர் மறுபிறப்பு விஷயத்தைப்பற்றிக் கூறுங்கால்; 'ஒரே ஆத்மா தேஹம்விட்டு தேஹம்போய் அநேக ஜன்மங்கள் எடுக்கிறது என்று கொள்ளாது, தேஹ அணுக்களின் கூட்டமேஆத்மா; அவ்வணுக்கள் ஒழுங்காக புல்பூண்டு முதலிய வைகள் தேஹங்களாகி, முடிவில் மனிதன் தேஹத்தின் அணுக்களாகின்றன என்று கொண்டால் பிரபஞ்சத் தோற்றத்தில் எல்லா விஷயங்களுக்கும் யுக்திக்குப்பொருந்தும்படி காரணம் கூறிவிடலாம்' என்று அபிப்பிராயப்படுகிறார். ஜந்துக்கள்தம்முள் உள்ள பரஸ்பரபேதத்திற்குத் தகுந்த முகாந்திரம் காட்டாததாலும், ஆத்மா அணுக்களின் சேர்க்கையே ஒழிய வேறல்ல என்ற கொள்கையைப் பின்பற்றுவதாலும் இந்த அபிப்பிராயம் யுக்திக்குப் பொருத்தமாயிருப்பதல்ல. ஆத்மஸ்வரூபத்தை ஊன்றி விசாரித்தால் இந்த யுக்திவாதம் நிலைக்காது.

இம்மாதிரியான யுக்திக்குப் பொருந்தா விஷயம் இப்புத்தகத்துள் காணப்படினும்; இது இக்காலத்தியப் புத்தகங்களுள் மிகச்சிறந்தது. இதுபற்றியேதான் நாம் இம்புத்தகத்தைப்பற்றி இவ்வுளவு விஸ்தாரமாகக் குறிப்பெழுதத்தொடங்கியது. ஆகவே முடிக்குமுன் 'இவ்வனுபவம் வரவர முதிர்ச்சியடைந்து டிரஸ்ஸர் ஆத்மாவேஸத்யம் என்றஅனுபவத்தில்நிலைபெறட்டும்' என்று கடவுளை மனப்பூர்வமாக பிரார்த்தனை செய்து கொள்ளுகிறோம். இந்த ஆத்மாவே உண்மையாக நோக்கில், பிரபஞ்ச சிருஷ்டியாதிகளுக்குக் காரணமென்று அக்ஞான திசையில் மதிக்கப்படும் பொருளாகிய கடவுள். உண்மையில் இக்கடவுள் இரண்டற்ற ஒன்றே இதற்கு ஒப்புயர்வானது ஒன்றுமில்லை. இப்பரம்பொருளை உள்ளபடி உணருங்கால் பிரபஞ்சத் தோற்றமும் மறையும், மனப்பற்றுகள் ஒழிய மனிதன் அழிவற்றவனாவான்

# ஷேக்ஸ்பியரது பிறப்பு, வளர்ப்பு, கவிமாண்பு



ஷேக்ஸ்பியர் என்னும் மகாகவி, இங்கிலாந்து தேசத்தில், வாரிக் என்னும் மாகாணத்தில், ஆவன் நதிக்கரையிலுள்ள ஸ்டராட்வட் என்னும் பட்டணத்தில் 1564-ம் ஆண்டில் பிறந்தார். எப்ரல் மாதம் இன்ன தேதியில் பிறந்தாரென்பது குறிப்பாகக் காணப்படவில்லை. ஆகையால் 22-வது அல்லது 23-வது தேதி என்று இன்னும் ஒரு விவாதம் உண்டு. ஆனல் அவர் தனது ஜன்மதினத்திலேயே, 1616-ம் வருஷத்தில் இறந்தாரென்று சொல்லப்படுவதால், அவர் பிறந்ததும் இறந்தது போலவே, எப்ரல் மாதம், 23-வது தேதி என்று கணிக்கப்படுகிறது. (அதுபற்றியே அவர் சரிதையும் அவர் பிறந்த மாதமாகிய எப்ரல் மாதத்தில் வெளியிடப்பட்டது). இவ்விஷயத்தின் முக்கியம் என்னவென்றால், ஸர்தாமஸ் ப்ரௌன் என்னும் ஆங்கில நூலாசிரியர் ஒருவர், இங்ஙனம் அனேகம் பெரியோர், பிறந்த நக்ஷத்திரங்களிலேயே இறந்திருக்கிறார்களென்று ஓர் குறிப்பு கண்டிருப்பதுபற்றியாகும். இவ்வாறு ஒருவரது வாழ்நாள், ஒரு முழுச் சுழல் வந்து, கொக்குவில் முதலிய அலங்கார அமைப்புகள் போல் முடிவு பெறுவது, ஒரு ஆச்சரியமான விஷயம் என்று நாம் சொல்லலாம்.

இனி இவர் பிறந்தது, அச்சமயத்தில் இங்கிலாந்து

தேசத்தில் முக்கிய குடிகளாயும் தேசத்திற் கோராதரவாயுமிருந்த குடியானவர் வம்சமாகும். இவரது முன்னோர் நிலத்தை யுழுது பயிர் செய்பவர்களாயும், பின் ஐசுவரியம்வந்தபிறகு நிலங்களினின்று கிடைக்கும் வருமானத்தில் ஜீவனஞ் செய்பவர்களாயு மிருந்தார்கள். இவரது தகப்பனார் ஜான் ஷேக்ஸ்பியர் என்பவர், தானியம், கம்பளி முதலியவற்றில் வியாபாரம் செய்து வந்தார். இவரது கைக்கீழ் ஒரு கசாப்புக்கடையு மிருந்ததாகத் தெரிகிறது. இவர் சிலகாலம் வெள்ளாட்டுத் தோலாலும், நீர் நாய்த் தோலாலும் செய்யப்பட்ட கையுறைகளைச் செய்து மிகுந்த இலாபம் அடைந்துவந்தார். இவர் அவ்வூரிலுள்ள முனிசிபாலிட்டி போன்ற சபையொன்றில் வெகுகாலம் தலைவராய் இருந்ததோடு வேறுவிதமான வேலைகளையும் பார்த்து வந்தார். அப்படியிருக்கையில் இவருக்கு எவ்விதமாக நஷ்டம் வந்தது என்று தெளிவாகத் தெரியவில்லை. அப்படி நஷ்டம் வந்தபோது தன் மகன் படிப்பை நிறுத்திவிட வேண்டியிருந்தது.

ஸேக்ஸ்பியரது தாயார் ராபர்ட் ஆர்டன் என்பவரது குமாரத்தியாகிய மேரி என்பவள். ஜான் ஷேக்ஸ்பியருக்கு வாழ்க்கைப்படும்போது இவள் ஸ்திரீதனமாக அதிக நிலங்கள் கொண்டுவந்தாள். ஆனால் முன் கூறியவாறு நஷ்டமுற்றபோது அந்நிலங்களை லாம்பர்ட் என்பவருக்கு 1578-ம் வருஷத்தில் அடமானம் செய்ய வேண்டிவந்தது. இந்நிலத்தை ஷேக்ஸ்பியர் எங்ஙனம் மீட்டுக்கொண்டாரென்று இனிக் காண்போம். நமதுகவி, ஜான் ஷேக்ஸ்பியரது முதற் பிள்ளை. இவரன்றி மூன்று பிள்ளைகளும், ஒரு பெண்ணும் பிறந்தார்கள்.

ஷேக்ஸ்பியர் 1571-ம் வருஷத்தில், அதாவது தனது ஏழாவது வயதில் பள்ளிக்கூடஞ் சேர்ந்து படித்து வந்தார். 1577-ம் வருஷத்தில் தனது தகப்பனாருக்கு நஷ்டம்வரவே, அவ்வருஷத்தில் படிப்பை நிறுத்திவிட்டு கசாப்புக் கடையிலிருந்ததாக டௌடால் என்பவரும் ஆபீர் என்பவரும் சொல்லுகிறார்கள். இப்படிச் சிறு வயதிலேயே படிப்பை நிறுத்திவிட்டதால், இவர் லத்தீன், கிரீக் முதலிய பாஷைகளைச் சிறிதும் சரிவரக் கற்றதில்லை யென்றும், கல்வியில் அதிக தேர்ச்சி யில்லாமல் தனது இயற்புத்தி மேன்மையால் சிறப்படைந்தாரென்றும் சொல்லுதல் உண்டு. ஆனால் இவ்விஷயத்தைத் தீர விசாரித்த ஸ்பென்ஸர் பெயின்ஸ் என்பவர் ஷேக்ஸ்பியர், பென் ஜான்ஸன், மார்லோ முதலிய கலாசாலைக் கல்வி பெற்றவர் கற்ற அளவு கற்காவிட்டாலும், லத்தீன் பாஷையிலுள்ள அரும் பெரும் புத்தகங்களை யறிந்துகொள்ளுமாறு வேண்டியபடி, படித்திருந்தா ரென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை என்று வெகு திண்ணமாய்க் கூறியுள்ளார்.

1582-ம் வருஷத்தில் தன்னிலும் எட்டு வயதிற்கு மூத்த ஆன்ஹாத்வே என்பவளை மணம் புரிந்தார். இங்ஙனம் வயதுக்கு மூத்தவளை மணம்புரிதல் நன்றன்றென்று நமது சாஸ்திரங்களும் வைத்திய சாஸ்திரங்களு மெடுத்துரைக்கின்றன. என்றாலும் அது எக்காலத்திலும் உண்மையான தல்லவென்று, சென்ற நூற்றாண்டில் ப்ரௌனிங் என்னும் கவியினது சரித்திரத்தினால் நமக்குத் தெரியவருகிறது. ப்ரௌனிங்கினது மனைவியும் ஒருகவி! அவரினும் அவள் ஆறு வயதுக்கு மூத்தவள். என்றாலும் அவரது மன ஐக்கியமும் பெருமையும் மாட்சிமையும் எளிதினுரைக்கற்பாலதன்று. ஆனால் ஷேக்ஸ்பியர் விஷயத்தில் இப்படித் தன் வயதின் மூத்த மங்கைதனை மணந்ததினால் அதிக வேற்றுமையும், கணவனுக்கும் மனைவிக்கு மிணக்க மில்லாமையும் இருந்ததாகத் தெரிகிறது. இதுபற்றியே பன்னிரண்டாம்இரவு என்னும் நாடகத்தில், வயோலாவுக்கு ஆர்சினோ பிரபு புத்திமதி யளிக்கும்பொழுது ஒருமனிதன் எப்பொழுதும் தன்னிலும் இளைய பெண்ணையே மணத்தல் தகுதியென்று சொன்னார் என்பதுண்டு. கலியாணமாகிச் சிலமாதத்தில் ஒரு குழந்தையும் 1585-ம் வருஷத்தில் இவருக்கு இரட்டைக் குழந்தைகளும் பிறந்தன.

இப்படிக் குடும்பம் அதிகரிக்கவே தன் ஜீவனத்திற்கு ஒருவழி தேடவேண்டியது முக்கியமாக ஏற்பட்டது. ஸ்டிராட்வோட் என்னும் பட்டணத்தை விட்டுவிட்டு பதினொரு வருஷகாலமாக வேறே இடங்களிலிருக்க நேரிட்டது.

இது விஷயமாக ஒரு கதையுண்டு. அதாவது ஸர் தாமஸ் லூஸி என்பவர்க்கு மான்கள் யதேச்சையாய் திரியக்கூடிய பெரியவனம் ஒன்றுண்டு. அவர் காட்டில் துஷ்டச்சிறுவர்களும் பாலியரும் அடிக்கடி அவருக்குத் தெரியாமல் மான் வேட்டையாடி, மான்களைக் கொன்று கொண்டுபோய் விடுவதுண்டு. ஷேக்ஸ்பியரும் கெட்ட சகவாசத்தின் வழியாய் மற்றவர்களோடு மான்களைக் கொல்லுவதும் அதற்காக அடிபடுவதும், அபராதம் கொடுப்பதுமாக விருந்தார் என்று சிலர் சொல்லுகிறார்கள். இதனுண்மை இத்தகையது என்று விளங்க வில்லை. என்றாலும் 1585-ம் வருஷத்தில், அப்

படிமானைக் கொன்றதாகவும், அதற்காகத் தண்டனைக் குட்பட்டதாகவும், ரோ என்பவர் எழுதியவற்றாலும், ஸாபெர்டன் என்னுமூரில் பாதிரியாராயிருந்த டேவிஸ் என்பவர் எழுதியவற்றாலுந் தெளிவாகத் தெரிகிறது. ஷேக்ஸ்பியர் இவ்விஷயத்தில் மிகவும் மனவுறுத்துதல் கொண்டு, ஸர் தாமஸ் லூஸிக்கெதிராக ஓர் கவி செய்ததாகச் சொல்லுகிறார்கள். ஆனால் அந்தப் பாட்டு இதுவரை நிலையாமையால் அது விஷயம் அவ்வளவாக நிச்சயிக்கமுடியாது. என்றாலும் மற்றத்தடவைகளைப்போல் சும்மா விட்டுவிடாமல் அதிகமாய்த் தொந்தரவு லூஸி என்பவர் உண்டாக்கின படியால் அதன் மும்முரம் இப்பாட்டினா லுண்டாயிருக்கலாம். அங்ஙனம் கடினமாகத் தண்டனைக்கு ஏற்பாடு செய்யவே, ஷேக்ஸ்பியர் ஊரைவிட்டு ஓடிப்போனார். இவர் 1586-ம் வருஷத்தில் தான் லண்டன் நகருக்குப் போனார் என்று தெரிகிறபடியால் 1585-ம் வருஷம் முழுவதும் என்னசெய்து கொண்டிருந்தாரென்று விசாரிக்கப்புகின், கிராமாந்தரங்களில் ஒரு வாத்தியாரா யிருந்தாரென்று வில்யம் பீஸ்டன் என்பவர் சொல்லுகிறார். பிறகு கடைசியில் உபாத்திமை சரிக்கட்டி வாராததினால் லண்டனுக்குப் போக நேர்ந்தது. இவ்விஷயத்தைவிட்டுப் போமுன்னர் இந்த மான் திருடின விஷயத்தின் உண்மையை வற்புறுத்துவன சில கூறுவாம். இவர் அப்படிப் பாட்டு எழுதியது உண்மையா யிருந்தாலும் இல்லாவிட்டாலும், ஸர் தாமஸ் லூஸி என்பவரை ஷாலோ என்னும் ஜட்ஜியாகவும், அவர் பெயர் குறிப்பிடுவதுபோல நிறைந்த கல்வியில்லாதவர் என்றும், மூடன் என்றும், ஒரு சிறு விஷயத்தையும் அரசன்வரை கொண்டுவந்து வீண் அமக்களம் பண்ணுகிறவன் என்றும், அவர் குடும்பக் கொடி வழியிலுள்ள, லில்லி நள் எனப்படும் Luces என்ற வார்த்தையை, பேன்கள் என்று பொருள்படும், Luses என்று மாற்றியும் பலவிதமாகக் கேலியும் கோரணியுஞ் செய்திருப்பதால், இவ்விஷய முண்மையாகவே நடந்திருத்தல் வேண்டுமென்று தெரிகிறது.

லண்டன் நகரத்தில் இவருக்கு வேண்டியவர், ஸ்டராட்வட்டிலிருந்து முன்னமேயே போயிருந்த அச்சுபதிப்பவரான ரிச்சர்ட் வீல்டு (Richardfield). இதுவரை கிராமங்களிலிருந்தபோதும், ஸ்டராட் வட்டிலிருந்தபோதும் பறவைகள், புஷ்பங்கள் மரங்களிவைகளைப்பற்றியும் முக்கியமாகக் குதிரைகளைப்பற்றியும் நாய்களைப்பற்றியும் மிகுதியாகத் தெரிந்திருந்தார். வல்லூறு கொண்டு பறவை வேட்டையாடுதல், முயல், நரி, மான் முதலியவற்றை நாய்கொண்டு வேட்டையாடுதல், மீன் பிடித்தல், பந்தயம் ஓட்டுதல், முதலியவற்றிலெல்லாம் அதிக ஊக்கமாகப் பழகி வந்தார். லண்டனுக்கு வந்தபொழுது, சட்டங்களைப்பற்றி இவருக்குத் தெரிந்ததுகொண்டு, இவர் ஒரு வக்கீல் குமாஸ்தாவாக விருந்திருக்க வேண்டுமென்று லார்ட் காம்பெல் என்பவர் சொல்லுகிறார். ஆனால் டிப்பர் என்பவர், அக்காலத்தில் குதிரை யேறி நாடகங்களுக்கு வருபவர்கள் குதிரைகளைப் பிடித்துக் கொண்டிருந்தாரென்று சில சாதனங்கள் மூலமாய்ச் சொல்லுகிறார். பிறகு வெகு சீக்கிரமாய் 1587-ம் வருஷத்தில், நாடகமாடுபவர்களுக்கு மறந்து போனவற்றை ஞாபகப்படுத்துபவனுக்கு வேலையாளாய், அவனிட்ட ஏவல்களைச் செய்துவந்தார். லாம்பர்ட் என்பவருக்குக் கொடுத்திருந்த அடமானம் அவருக்குச் சந்ததியின்மையால் பலவழி தாண்டி ஷேக்ஸ்பியர் கைக்கு வந்தது. இதை முடித்துத் தக்க ஏற்பாடு செய்ய ஸ்டராட்வட்டிற்கு வந்ததே தவிர மற்றப்படி 1585-ம் வருஷத்தில் போனவர், 1596-ம் வருஷம்வரை, அதாவது பதினொரு வருஷகாலமாகத் தன்னூருக்கே வரவில்லை. இவ்வருஷங்களிலிவர் முதலில் நாடகமாடுபவரிலொருவராயும், பிறகு நாடக மாடுபவரிலெல்லாம் சிறந்தவராயுமானார். இவருடன்சேர்ந்து நாடகமாடினவருள் இவருக்கத்தியந்த சிநேமுள்ளவர்கள், ரிச்சர்ட் பர்பேஜ், ஜான், ஹெமிங், ஹென்றி கன்டேல், அர்நர் பிலிப்ஸ் என்பவர்களாம். இவர்களிவிடையே கூறப்பட்ட இருவர், ஷேக்ஸ்பியர் நாடகங்களையொன்று சேர்த்துப் பதிப்பித்ததால் மட்டுமே, இன்றைக்கு மிவரது நாடகங்களை நாம் படித்து வருகிறோம். ஏனென்றால், அந்தக்காலத்தில் நாடகங்களை நாடகக் கம்பெனிகளுக்கு விற்றுவிடுவது வழக்கமாயிருந்தது. அதன்பின் சமயத்திற்கேற்ற மாறுதல்களை அப்போதைக் கப்போது செய்துவருவதால் முதற் கிரந்த கர்த்தா எழுதியதற்கும், முடிவுபெற்று நின்ற நாடகத்திற்கும் வித்தியாசம் அதிகம் ஏற்பட்டது. ஷேக்ஸ்பியர் நாடகங்களைப் பதினேழாவது நூற்றாண்டில் டிரைடன் என்னும் கவியும், பதினெட்டாவது நூற்றாண்டில் டேட் என்னும் ஆட்டக்காரரும் அதிகமாக மாற்ற முயற்சி செய்தார்கள். சென்ற நூற்றாண்டில் ஸர் ஹென்ரி இர்விங் என்ற ஆட்டக்காரர் அநேக பாகங்களைத் துண்டித்து எடுத்து விடவேண்டும் என்று சொல்லி அவ்விதமாகத் துண்டித்த பிரதியொன்றைப் பிரசுரம் செய்திருக்கிறார். இவ்வாறிருக்க இவர் கையிலகப்படாமல் ஷேக்ஸ்பியர் எழு

தியவாறே முற்றிலும் முழுமையாய் நமக்கு இந்த நாடகங்கள் கிடைத்திருப்பது ஹெமிங், காண்டெல் என்றமிருவர் நட்பின் விஷயமாக ஷேக்ஸ்பியருக்குச் செய்ததுபோல உலகத்திற்கே செய்த பேருதவியாலேயே. உலகில் நன்மை செய்தோரை நினைக்கும் பொழுது இவரிருவரும் நம்மால் நினைக்கப்படவேண்டியவர்களே.

இனி, இவர் தனதுகம்பேனியோடு, நாடகமாடவேண்டிய இடத்திற்கெல்லாம் போனுரென்று தெரிய வருகிறது. ஆனல் அதிகமாகப் பிரயாணவிஷயமாக வைத்தியங்கொண்டு திரிபவர்களை அனேகஇடங்களில் இவர் கேலி பண்ணுவதினல் இவர் வெகுதூரம் பயணம் சென்றிருக்க மாட்டாரென்று தெரிகிறது. உம் முடைய மனம்போலே என்ற நாடகத்தில், ஐரோப்பாவில் அதிகமாகப் பிரயாணம் பண்ணுகிறவர்களைக் குறித்துக் கேலியாகச்சொல்வதைக் காணலாம். மேலும் வெரோனு நகரத்திருவர் கனவான்கள் என்னும் நாடகத்தில் வெரோனுவிலிருந்து மிலான் பட்டணத்திற்குக் கடல்வழி வந்ததாகச் சொல்வதினலும், (I. I. 71.) பெருப்புயல் என்னும் நாடகத்தில் கப்பல் மிலான் பட்டணத்துக்கோட்டை வாசல்வரை கப்பல் வந்தது என்று சொல்வதினலும் (I. 2. (129-44) இவர் அவ்வூர்களைச்சிறிதும் பார்த்திருப்பதில்லை, அவைகளைப் பற்றிச் சரியாகத் தெரிந்திருப்பதுமில்லை யென்று தெளிவாகத் தெரிகிறது.

ஷேக்பியரது நாடகங்கள் முழுமையும் 1591-ம் வருஷத்திலிருந்து 1611-ம் வருஷத்திற்குள், அதாவது 20-வருஷத்தில் முடிவுபெற்றன. ஆகவே வருஷம் ஒன்றிற்குச் சராசரி இரண்டு நாடகங்களாகின்றன. இதுபோகத் தனது நாடகங்களையும் மற்றவரது நாடகங்களையும் அடிக்கடி திருத்தி வருவதையும், நாடகமன்றிக் கவிகளை எழுதி வந்ததையும் சேர்த்துப் பார்த்தால் அவரது மாண்பு இத்தகையது என்று கணிக்கத் தக்கச் சாதனங்களாகும். இதை யெடுத்துரைக்கு முன்னர், இனி எஞ்சி நிற்குஞ் சரித்திரக்குறிப்பைத் தொடர்ந்து முடிக்கலாம்.

1596-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் ஷேக்ஸ்பியரது தகப்பனர் தனது குடும்பத்திற்குக் குடும்பக் கொடிமுடி ஒன்று ஏற்படுத்த முயற்சி செய்தார். 1597-ம் வருஷத்தில் ஸ்ட்ராட்வட் பட்டணத்தில் இருப்பனவற்றுள் பெரிய வீட்டைத் தனக்கு விலைக்கு வாங்கிக்கொண்டார். என்ருலும், 1611-ம் வருஷம் வரையில் லண்டனிலிருந்து சம்பாதித்துக் கொண்டிருந்தாரேயன்றி, ஸ்ட்ராட்வட்டிலேயே குடிவந்திருக்கவில்லை. 1599-ம் வருஷம் முதல் அவருக்கு வரும்படி மிகவும் அதிகமாயிருந்தது. அக்காலத்திய நாணயத்தின்படி அவருக்கு வருஷவரும்படி 70-பவுன் என்று கணிக்கப்படுகிறது. அக்காலத்தில் பவுன் இன்றைய விலையினும் பதின்மடங்கதிகம். ஒருபவுன் இன்றையவிலை 15 ரூபாய் என்று கணக்கிட்டால் அவர் வரும்படி எவ்வளவு என்பதைக் கணக்கிடலாம்.

1511-ம் வருஷத்திற்கப்பால் குளோப், பிளாக்பிரயர் என்னு மிரண்டு நாடகசாலையிலுமுள்ள கூட்டுப் பங்குகளை விற்றுவிட்டு ஸ்டாராட்வட்டிலேயே அதிகமாயிருந்தார். ஆனல்அடிக்கடி லண்டனுக்குப் போகவேண்டிருப்பதால், ப்ளாக்பிரயர் நாடகசாலைக்கருகாமையில் லண்டனிலும் ஒருவீடு 1613-ம் வருஷம் வாங்கினர். அவ்வீட்டிலும் ஸ்டாராட்வட்டிலுமாகத் தனது அந்திய காலத்தைப் போக்கி 1616-ம் வருஷத்தில், ஏப்ரல்மீ 23-ம் தேதியன்று இவர் உயிர் துறந்தார். அவர் பிறந்த ஊர்க்கோயில் கல்லறையில் இவரைப்புதைத்து, அவ்விடத்திலேயே சிலையொன்று மிவருக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இங்கிலாந்தில் அரசர்களும், பெரிய கவிகளும், கிரந்தகர்த்தாக்களும், போர்வீரர் முதலியவர்களும் அடக்கம் செய்யப்படும் வெஸ்ட்மின்ஸ்டர் ஆபியிலும் இவருக்கு ஞாபகக்குறியாக ஓர் சிலை செய்திருக்கிருர்கள். இவ்விரண்டிடங்களுக்கும்வருஷா வருஷம் எக்காலத்திலும், முக்கியமாக ஏப்ரல் மாதசமயத்தில் அனேகர்கூட்டங் கூட்டமாகத்திருவிழா கொண்டாடுவதுபோல் அவ்விடங்களைப் போய்ப்பார்த்தும், பலவித வேடிக்கை ஏற்படுத்தி இத்தகைய மாண்புள்ள சிறந்த கவி பிறந்த மாதத்தைக் கொண்டாடுவதுமுண்டு.

இனி ஷேக்ஸ்பியரது கவி மாண்பை எடுத்துரைத்தல்வேண்டும். இதுவரை கூறியது,—பிறப்பு வளர்ப்பு —இவை இவர்போல் மற்ற யாவர்க்கும் நடக்கக் கூடிய விஷயமே. இன்னும் ஆராய்ந்து பார்க்குமிடத்து இவரினும் செல்வமுடைய குடும்பங்களில் பிறந்து, இவரைப்போல் கஷ்டமில்லாமல் சுகமாக வாழ்ந்தவர்கள் எத்தனையோ வாயிரம்பேர் என்ருலும் இவர் பட்ட கஷ்டம், இவருக்கு நேர்ந்த இடுக்கண், இடையூறு எல்லாமிவரது மனேமாட்சிமையை மேன்மைப்படுத்தியதால், அவைகளை நாம் இவ்வளவு விஸ்தாரமாய்ப் பார்க்க வேண்டி யிருந்தது. அவரெவ்விதத் தொழில் செய்யவேண்டி யிருப்பினும் அதனைத் தெரிந்து கொள்ளக்கூடிய உலக நடவடிக்கையையும், மனித இயற்கையையும், மற்றுமெல்லா விஷயங்களையுங் குறிப்பாகவும், நுண்ணறிவினேடும் பயின்று தான் எழுதியநாடகங்களில் தக்கவாறு பிரயோகித்தாரென்று நாம் குறிப்பாக அறிந்துகொள்ளவேண்டியது. நாடகத்திற்சிறந்த குணங்களும் தாழ்ந்தவையும், அரசர்களும் பிச்சைக்காரரும் மற்றெல்லோரும் உலகில் ஒருங்கே உழல்வதால், அவரது முக்கிய இயற்கைகளைத் தெளிவாக வுணர்ந்து, தக்கவாறு கவியில் பயன் படுத்துவது கவிச் சிரேஷ்டருடைய முக்கிய கடமையாகும். இத்தகைய அனுபவத்திற்கேற்றபடி அனேகந் தொழில் புரிந்து தன் அனுபவத்திலும் மற்றப்படியும் இவர் தெரிந்துகொள்ளத்தக்கசாதனங்களிலிருந்தனவென்று இதுவரை அவரது பிறப்பு வளர்ப்பு சரிதத்தினின்று தெரிந்துகொள்ளலானேம்.

இவர் கவிமாண்பைக் குறித்துப் பேசுமிடத்து, அதை எவ்விதமாகப் புகழ்ந்து பேசினலும் பேசலாம். எவ்

விதஸ்துதியும் இவர் கவித்திறமை தெரிந்தவர்களுக்கு இவரைப்பற்றி பேசுங்கால், இந்நாடகங்களுக்குத் தக்கனவே யென்றுரைப்பாரேயன்றி மற்றக்கவிகளைப் போல் அதிகமெனவே தோற்றுது.எங்ஙனம்அரசனுய்ப் பிறந்து ராஜகளை அமைந்த ஒருவனுக்கு எத்தகைய துணி, மணி, ஆடை, ஆபரண அலங்காரங்கள் செய்த போதிலும், அவை யவனுக்குத் தக்கனவாகவும், அவன் அழகு அதனினுஞ் சிறப்பு வாய்ந்ததாகவு மிருக்குமோ, அப்படியே இவர் மாட்சிமையும் எவ்வளவு புகழ்ச்சியை யும் எளிதிற் தாங்கக்கூடியது. கோல்ரிட்ஜ் என்னுங் கவிஞர் இவரது உலக நடவடிக்கையின் நுண்ணறி வைப் புகழ்ந்து பேசுகையில் இவரை ஆயிரமியற்கை யமைந்தவரென்று இவரது உலக நடவடிக்கையின் நுண்ணறிவைப் புகழ்ந்து பேசியிருக்கிறார். மாத்யூ ஆர் னல்ட் என்பவர் ஷேக்ஸ்பியர் கவிமாண்பிற்குப் பெரிய தோர் மலையே உவமமாகும். எங்ஙனம் அதை யேறிச் செல்லச் செல்ல அதன் சிகரம் கிட்டாமல் இன்னும் மேலும் மேலும் போய்க்கொண்டிருக்குமோ அஃதே போல் இவரது அறிவின் அளவும் எட்டுதல் முடியாது என்று சொல்லுகிறார். சுவின்பர்ன் என்னும் கவி ஷேகஸ்பியரைப் பற்றிப் பேசுபவர் அவர் அறிவைக் கடலுக்கொப்பிடுவது சகஜம் என்று சொல்லிப் பின் னேர் இடத்தில், உலகில் எல்லா புத்தகங்களிருந்தும் ஷேக்ஸ்பியரது நாடகங்களில்லையாயின் என்ன பயன்? இவை யிருந்து மற்றெல்லாப் புத்தகங் களுமழிந்துபோயினு முண்டாம் நஷ்டமென்ன? என்று தைரியமாகக் கேட்கிறார். இங்ஙனம் சொல்வன்மை யமைந்த கவிவாணர் மூவர், தமது ஆச்சரியத்தையும், பேருவப்பையுந் தெரி விக்கக் கடல், மலை முதலிய உவமை யெடுத்துரைத் தல் வேண்டி வந்தது. என்றாலும் இதுபோலவே மற்றக் கவிகளைச் சொல்லியிருப்பாரேல் அது வீண் வார்த்தையாக நமக்குத் தோன்றும். ஷேக்ஸ்பியரைக் குறிப்பிட்ட போது மட்டுமே அவ்வார்த்தையின் அளவை அளவிட முடியாமையைப் பார்க்கையில் இவர் ஒருவருக்கே இத்தகைய மேன்மை யமையும் என்ன லாம்.

என்றாலும் இவ்விதமாய் மட்டில்லாமற் புகழ்வது ஷேக்ஸ்பியர் மாண்பிற்கு வாய்ந்ததேயாயினும் அவரது இயற்கையையும், அவர் நாடகங்களின் சிறப்பையும் நாம் நன்குணருவதற்கு ஒரு இடையூறுகிறது. அவற்றின் உயர்வு தாழ்வு,நன்மை தீமையை ஆராய்ந்து பார்ப்பதினல் மட்டுமே நாம் அந்நாடகங்களினருமை பெருமை யறிதல் கூடும். இல்லையாயின் அவரை ஒரு விக்கிரகமாகத் தொழுவதில் அவரது உண்மையும் புலப்படாமல் இருவருக்கும் பயனின்றிப் போகும். ஷேக்ஸ்பியரோடு பழகினவர்கள் அவரை அவ்வளவு அதிகமாக மதித்தாரில்லை. அவர்களுக்குத் தம்முள் ஒருவராகவும் வெகு சாதுர்யமாய் பேசக்கூடியவராக வும், நல்ல நண்பராகவும் தோன்றினர். இவர் நாட கங்கள் அதிகமாக ஆடப்படுவதையும், அதனல் அதிகப் பணம் இவர்அடைவதையுந் தவிர மற்றப்படி உலகிலே மிகச்சிறந்த கவிஎன்று நினைக்கவில்லை. ஆட்டம் நன் ருய் ஆடி, நாடகசாலையை நடத்தும் திறம் அதிகமா யுடையவராய் யாவரோடும் கலந்து பேசிக்கொண்டு இருந்தது மட்டுமே யவர்களுக்குத் தெரியும். 1623-ம் வருஷத்தில் நாம் முன்சொல்லியவாறு ஹெமிஸ்,கான் டெல் என்னுமிருவருஞ் சேர்ந்து இவர் நாடகங்களைப் பதிப்பித்த பிறகுதான், அனேகர் இவரது நாட கங்களைக் கருத்தாய்ப்படித்து இவரது கவித்திறமையை ஆராய்தல் முடிந்தது. அக்காலத்திலே பென்ஜான் ஸன் என்பவரும், அவருக்குப் பின் மில்டன் என்னுங் கவிஞரும் இவரைக்குறித்து மேன்மையாக வெடுத் துரைத்தார்கள். பின்பு இரண்டு நூற்றாண்டுகள் அல்லது இருநூறு வருஷங்களாக வெவ்வேறு பதிப்பு களும் ஷேக்ஸ்பியரைப்பற்றிய புத்தகங்களும் ஒன் றின்பின் ஒன்றாய்த் தொடர்ந்து பிடித்து வர வாரம் பித்தன. ஆகவே தற்காலத்தில் அவரைச் சேர்ந்தவ ரனைவரினின்றும் பிரிக்கப்பட்டு, இதுவரை எக்காலத் திலும் எத்தேசத்திலுமுள்ள கவிகளின் சிரேஷ்ட ரென்று எல்லோராலும் நிச்சயிக்கப்படுகிறார். எங்ஙன மெனில் இவர் மனிதவியற்கையைப்பற்றிஎல்லோராலு மதிகமாயும்,எல்லோரிலுமதிக நன்றாயுஞ் சொல்லியிருக் கிறார். தத்துவ சாஸ்திரிகளும் போர்வீரர்களும் அரசாங்கத்தினர்களும் மற்றுமனேகரும் இவரது நாட கங்களை அதிக ஊக்கமாகப்படித்து வருகிறார்கள். இவர் நாடகங்கள் ஆடிப்பயன்படுவது மட்டுமல்ல; படித்தும் மிகப்பயன் படுகின்றன. ஆகவே அவரிறந்து சென்ற மூன்று நூற்றாண்டிலும், மன உற்சாகத்திற்கும், அறிவின் விர்த்திக்கும் புண்பட்ட நெஞ்சுகளின் ஆறுத லுக்கும் மற்றும் அனேகவித நன்மைக்கும் அனேகர் இந்நாடகங்களை இன்றும் படித்துவருகிறார்கள்.

ஷேக்ஸ்பியரது மாட்சிமையைத்தீர விசாரிக்கவேண் டின் அவரெண்ணிய எண்ணங்களை நம்மனதில் நாம் திரும்பவும் எண்ணிப் பார்க்கவேண்டியிருக்கிறது. அவர்செய்த நாடகத்துள் புருஷர்களையும் அவரது இன் பந்துன்பம் முதலியவற்றையும் அதிகமாக ஊன்றி ஊன்றிப்பார்க்க நாமுமவருள் ஒருவராக ஷேக்ஸ்பியர் எப்படி ஆட்டுகிறாரோ அப்படி ஆடுகிறோம். ஆகவே ஆட்டப்படும் பொம்மை எங்ஙனம் ஆட்டுகிறவனை யெத்தகையன் என்று காணல்கூடும்? கூடாது. ஷேக்ஸ் பியர் ஒரு மனிதரே. அவரும் நம்மைப்போல பலவிஷ யங்களையும் பார்த்துக் குறிப்பாக வுணர்ந்து தக்கவாறு யோஜித்து நாடகம் எழுதினவர். அவர் சொல்வன்மை யின் சிறப்பு, வண்மை, மேன்மை முதலியவற்றால் அவர் குறிப்பிட்ட விஷயங்களைப்பற்றி மேலுமேலும் நினைத்துப்பார்க்க,அவரறிவை அளவிட முடியாததென் பது தெரியவருகிறது. இதுபற்றியே ஷேக்ஸ்பியர் இன்னவிதமான மனுஷர், அவருக்கு இன்னது பிடிக் கும்,இன்னது பிடிக்காது என்பதும் நாம் நமது அன்னி யோன்னிய சிநேகரைப்பற்றி ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும் விஷயங்கள் போன்ற விஷயங்களுள் ஒன்

ருவது அவருக்கு இருந்ததென்று நமக்கு அவர் எழுதிய வற்றினின்றும் சிறிதும் புலப்படா. இவை எல்லாவற் றையு மொருங்கே புணர்த்தித் தன் மனதாகிய கொல் லுலேயில் காய்ச்சி வார்த்த சுத்தமான உலோகம் நமக்கு நிலேத்திருக்கிறது. அதுபோக ஏனைய தூசி, துரும்பு இருந்தென்ன இல்லாமற்போயென்ன? ஹாம்லெட், வால்ஸ்டாவ்,ஒதெல்லோ,கிளியோ,பேட்ரா,புருட்டஸ், கார்டிலியா முதலிய வெவ்வேறுபட்ட இயற்கையின ரைக் குறிப்பிடக்கூடிய ஷேக்ஸ்பியர், மிக வன்மையாக அவர்கள் நூலே உணர்ந்திருத்தல் வேண்டும். இவர்கள் செய்ததாகச் சொல்லப்பட்டிருப்பதைப் படிக்கவே நமக்கு ஒரு அதிர்ச்சி யுண்டாகிறது. இதுபோன்ற கதைகளேயும், காரிய புருஷர்களேயும் அமைப்பதென் ருல், நம்மினும் பதின்மடங்கு அதிகமாக உணர்ச்சியும் அதிர்ச்சியு முடையவரன்றி மற்றையோரால் எல் லோர் மனத்து விஷயங்களேக் கவரல் முடியாது. இதுபற்றியே ரோஸெட்டி என்னுங் கவிஞர்,"கவிகள் தாமெழுது மொவ்வொன்றினையும் மன முருக, கண்ணீர் வழியத் தம் முழுவுணர்ச்சியாலு முணர்ந்தா லேயன்றி, அவர் கவிகளேயும் நாடகங்களேயும் பார்ப்பவர் படிப்பவர் சிறிதும் அவ்விதமாக என் புருக்கங்கொள்ளல் முடியாது" என்றுஎழுதி யிருக்கிருர். உண்மையாக யோஜிக்குமிடத்து கவி களின் வார்த்தையின் வன்மை எவ்விதமாய் நம்மை யுருக்குகின்றன வென்ருல், அவை யொவ்வொன்றுந் தம்மிலேயே அனுபவத்தினுண்மையை யுடைத்தா யிருக்கின்றன. அதாவது அனுபவமிருந்தாவது, மற் றவ்ரனுபவத்தைப் பார்க்கும்பொழுதாவது, கேட்கும் பொழுதாவது அதைக் கிரகித்து நம்மிலேயே நமக் குற்றபோது எங்ஙனம் படுமோ அப்படியே யுணர்ச்சி யின் நுண்மையால், பழமொன்றைப் பார்த்தவுடன் அதன் உருசி தோற்றுவதுபோல், அனுபவத்தைக் கிர கிப்பதே நுண்ணறிவினறிகுறியாம். இவ்வித நுண் ணறிவை மிகுதியாக வுடைத்தாயிருத்தல் கவித்திறத் திற்கே யோர்சிறந்த அழகாகும். இஃதில்லாவிடின் எவ்வித அனுபவங்களுஞ் சிறிதும் பயனற்றனவாம். ஷேக்ஸ்பியர் இவ்வித சக்தியில் மிகுதியுஞ் சிறந்தவ ரென்றெல்லாராலுஞ் சொல்லப்படுகிருர். அவரெழு தியவற்றி லடங்கியிருக்கு மனுபவக்கடலின் ஆழ்மை யைப் பார்க்குமிடத்து இவ்விதச் சக்தி வெகுவாயிருந் திருத்தல்வேண்டுமென்று மிகுதியுந் தெளிவாகவிளங்கு கிறது. இத்தகைய நுண்ணறிவினரா யிருந்ததால்தான் சிறிதுகால மட்டுமே பள்ளிக்கூடஞ் சென்றிருந்தாராயி னும், எல்லோரும் அதிசயிக்கதக்கவளவு அறிவினை யுடைத்தாயிருத்தல் சாத்தியமாயிற்று. சாதாரண பேச்சுகளும், காபி ஹோட்டல் முதலிய பொது விடங் களில் பேசுகிற பேச்சுங்கூட இவர்கவலேயாகக் கேட்டு எவ்வெவ்விதமாக வுபயோகிக்கலாமோ அவ்வா றெல்லாமுபயோகித்து மனித நடவடிக்கையைப்பற்றி அதிகமாய்த் தெரிந்துகொண்டார். ஆகவே எவ்வித மான கூட்டங்களிருந்தாலும், ஆங்காங்குத் தக்கவாறு அமைத்துக்கொள்ளுந் திறமுடையவரென்று இத ஞல் தெரிகிறது. ஆகவே இதனுல் இவர் நாடகங்களுக் குண்டான நன்மையு மதிகப்பட்டது.

நம்முள் அனேகரில், மற்றவர் கேலிபண்ணும்படி சில குணங்கள் மற்றவைகளினு மதிகமாய் இருப்பதுண்டு. ஆனல் ஷேக்ஸ்பியர் விஷயத்தில் அவர்பெரிய வார்த்தைகளே உபயோகித்து அண்ட பிண்ட சராசரங் களேயுமொன்றுசேர்த்து இடிஇடித்து மின்னல் மின்னி மழை பொழிவதுபோல் வார்த்தைசொல்வதைத்தவிர மற்றென்று மிருந்ததாகத் தெரியவில்லே. ஆகவே மற் றவர்களேக் குறிப்பிடுவதுபோல சிலவார்த்தைகளில் இவர் குணமின்னது நடைவடிக்கைகளிப்படி என்று சொல்லிவிடுதல் முடியாது. என்ருலுமவர் நாடகங்களே படிக்கப்படிக்க அவரோடு பழகி, அவரெண்ணங்களே யெண்ணுவதாக நமக்கோர் உணர்வு தோன்றுகிறது. அவரது வேடிக்கை நாடகங்களேப்படித்து வேடிக்கை யானவிடங்களில் சிரிக்கும்போது அவ்வித விஷயங்க ளில் அவர் சிரித்திருப்பாரென்று அறியலாம். லீயர் என்னுமரசன் கதை அல்லது ஒதெல்லோ என்னுங் கதைகளினிறுதியில் நமக்கு அடக்க முடியாத வருத்த மும் இரக்கமும் தோன்றுகையில்,ஒருஆறுதல்பொருந்த முடித்திருப்பது, பெருந்துன்பத்தினுலும் அன்பினுலும் மனே தைரியத்தினுலும் ஒரு ஆறுதல் கொள்ளுமாறு ஷேக்ஸ்பியர் நமக்குத் தெரிவிப்பது போலிருக்கிறது.

மற்றப்படி இவரைப்பற்றித்தெரிவது இவர் சிறிதும் கஷ்டமின்றி எழுதினரென்பதும், வெகு கெட்டிக்கார ராயும், எல்லாரோடும் பிரியமாய்ப் பேசி சந்தோஷமா யிருந்தார் என்பதுமே. அப்படி யிருந்தது பற்றியே எல்லோரும் இவர் முன் வெகு சாதாரணமாகப் பேசவும் இவர் மனித நடவடிக்கையைத் தெரிந்துகொள்ளவு முடிந்தது.

பலவிதமானவர்களேயும் குறிப்பாகக்கற்று அவ ரோடு மனமிரங்கி அவரெண்ணும் விதமே யெண்ணிய படியால் இவரை நாஸ்திகரென்றும், ரோமான் காத லியர் என்றும், பிராட்டெஸ்டன்ட் என்றும், ப்யூரிட்

டன் என்றும் மதவிஷயமாக வெவ்வேறு விதங்களாகக்
காட்ட வெவ்வேறு புத்தகங்களெழுதப்பட்டுள்ளன.
இதனுண்மையெல்லா மென்னவெனில் நம்மிலனேகர்
ஒருகண் குருடாயிருந்த குதிரை, குருடானகண்
பக்கம் புல்லேயில்லை யென்று எண்ணினதுபோல
நமக்கு விளங்காத விஷயங்களை உடனே தப்பென்று
சொல்லி விடுகிறோம். கார்டினல் நியூமன் என்னு
மாங்கில நூலாசிரியரொருவர், பிராடெஸ்டன்ட கிறிஸ்
தவ மதத்தினின்று ரோமான் காதலிக் ஆனார். அப்பொ
ழுது கிஸ்லி முதலான அனேகர் அவரேதோ சொந்
தப் பிரயோஜனத்திற்காகத் தன் மதக்கொள்கையை
விட்டுவிட்டாரென்று இழிவாகப் பேசினார்கள். ஆனால்
அவர் சிறந்த கல்விமான் ஆகையால் தான் கொண்ட
கோட்பாடுக ளின்னவென ஓர் கிரந்தம் வரைந்தார்.
அது கற்பவர்களனைவருக்கு மவர்செய்த செய்கை
சரியானதென்றும், அப்படிச் செய்யாவிடின் மட்டுமே
தன் மதக்கோட்பாட்டை விற்றதாகு மென்றுந் தெளி
வாக விளங்கிற்று. இதுபோலவே உலகிலொவ்வொரு
வரும் தம் மனதிலுள்ள வெண்ணங்களையும், தாம் நினை
த்த நினைப்பையும் தெளிவாக வுரைக்குந் திறமுடைய
ரேல் நாம் அனேகரைப்பற்றி நினைக்கு மெண்ணங்
களை யதிகமாக மாற்றுதல் வேண்டியிருக்கும். பஞ்ச
காலத்தில் பிராமணனொருவன் வயலை யுழுதுகொண்
டிருந்து கைகழுவாமல் கடவுளை நினையாமல் தன்மனை
யாள் கொண்டுவந்த கஞ்சியை வாங்கிச் சாப்பிடப்
போனதைக்கண்டு 'ஆ இவன் நீசனே' என்று சொல்
லப்போகையில் திடீரென்று அவன் தன்தாயார் தகப்ப
னார் வீட்டில் சௌக்கியமாக விருக்கிறார்களா, அவர்க
ளுணவு அருந்தினார்களாவென்று விசாரித்தசத்தம்காதில்
பட, 'ஆ இவன் பிராமணோத்தமன், இக்கொடிய காலத்
தில் கடினமாக வுழைத்து, கையலம்பாமற்கூட கஞ்சி
யுண்ணு மாத்திரத்திலுங்கூட தன் தாய் தகப்பனாரை
நினைத்தானல்லவா என்று இராமபிரான் சந்தோஷப்
பட்டதாக ஒரு கதை யுண்டு இதுபோலவே,
எவ்வளவு கெட்டவர்களிடத்தும் நற்குணங்கள்
சிறிதேனு முண்டென்பதற் கையமில்லை. மற்றை
யோரதை மறந்து, நல்லவர் கெட்டவர் என்று வீண்
வார்த்தை தைரியமாகப் பேசுகிறார்கள். ஷேக்ஸ்
பியர் அவ்வாறின்றி ஒவ்வொரு மனிதனையும்
எவ்வளவு விதமாக யோஜித்துப் பார்க்கலாமோ
அவ்விதமா யெல்லாம் யோஜித்து நற்குணங்களைத்
தெளிவாகக் கண்டு பிடிக்கும் சக்தியை யுடையவர்.
உதாரணமாக, கார்டினல் உல்ஸி என்னு மந்திரி ஒரு
வர் குணத்தை விவரிக்குங் கால் எல்லோரும் நினைத்த
விதமாய் அவரைச் சயகாரியக்காரனென்று மிக்கவகங்
காரி யென்றும் காண்பித்துவிட்டு, கே. விந் என்ப
வனைக் கொண்டு அவரது நற்குணங்களை யெல்லா
மெடுத்துரைக்கிறார் ஆகவே அவர்நாடகத்தைப் பார்ப்ப
வர்களுக்கு உல்ஸியை பெரிய மனிதராக வெண்ணு
வதா, அற்பமனிதனாக வெண்ணுவதா யென்று தோன்

றாமல் ஐயோ இத்தகையவருக்கு இவ்வளவு கஷ்டம்
நேர்ந்ததே யென்றுபரிதாபமுண்டாவதோடு மனிதர்து
வாழ்க்கையினிலையாமையுந் தோன்றுகிறது. அப்படி
யே, புருட்டஸ் என்பவரைத் 'தன் சினேகிதனையே
கொன்ற கொலை பாதகன்' என்று எண்ணுவோரிருக்க,
எவ்விதமாய் எல்லோருஞ் சிறந்த குணவானென்று
சொல்லப்பட்ட புருட்டஸ் இத்தகைய செய்கை
செய்திருத்தல் கூடும் என்று தீர விசாரித்துத்
'தன் தேசத்துக்கெடுதி செய்பவன் யாவராயினென்?
தனது நண்பனாயினுமென்?' என்று தன் பிரியத்தைக்
கூட எண்ணாமல் தன்னைக் கொன்று கொண்டதுபோல்
தன்னுயிர் நண்பனை, தேச நன்மைக்காகக் கொன்ற
தேசாபிமானி யென்னும் விஷயத்தைத் தெளிவாகக்
கூறியிருக்கிறார்.

இவ்விதமாய் ஒவ்வொரு விஷயத்தையுங் குறிப்பாக,
தீர விசாரித்து, உற்றுநோக்கி உண்மையை யறியுஞ்
சக்தியுடையவராதலால் இவரை யியற்கைக்கே யோரு
வமான மிட்டிருக்கிறார்கள் ஆகையால் இதுவரை
யவர் குணங்களைக் குறிப்பிட்டுப் பார்த்ததில் அநேக
குணங்கள் அடங்கி அமைந்து வாய்ந்த அதிக குணசீல
ரென்று விளங்கும்.

இனி, இவருக்கெக்காலத்தி லெவ்விதமாய்அனுபவங்
கள் வந்திருக்கக் கூடுமென்று விசாரிப்போம். இவர்பிற
ந்த ஸ்ட்ராட்வட் என்னும் பட்டணம் ஆர்பிடன் என்
னுங் காட்டுக்கருகாமையிலிருந்ததால் செடி கொடிகள்
மிகுந்து அபரிமிதமாக வளர்ந்து இருக்கும் பார்வை
யையும், சூரியோதய, சூரியாஸ்தமன அழகையும் அக்
காட்டிலுள்ளமரங்களினூடே கண்டுகளிகூர்ந்து தனது
நாடகங்களில் வேண்டியவாறு பிரயோகித்திருக்கிறார்.
பின்னும் குழந்தைகள்விளையாடும் விளையாட்டுகளைநாட
கங்களில் இவரைப்போலதிகமாகச் சேர்த்திணைத்
திருப்பவரில்லை. நடுவேனிற்கனவு என்ற நாடகத்தில்
வெள்ளமும் புயலுமடித்து நஷ்டமானதைக் குறிப்பித்
தது, இவர்சாதாரணமாகவயல்வழிநடப்பவர்கள்போல
வன்றி, நுண்மையாக ஒவ்வொரு விஷயத்தையுமறிந்
தவர் என்று விளங்குகிறது. நீரோட்டங்களையும், பக்ஷி
கள் பறப்பதையும், புஷ்பங்கள் மலர்வது அழிவதுமுத
லியவற்றையுங் குறிப்பாகப்பார்த்து வெகுசாதுரியமாக
உபயோகித்திருக்கிறார். வேட்டையாடுவதில் அதிக
பிரியமுடையவரென்றுமுன்னமே சொன்னோம். பைரி
களைக்கொண்டு வேட்டையாடுவது அந்தக் காலத்தில்
பிரபுக்களும் ராஜாக்களும் பழகிவந்த ஒருவேடிக்கை.
இதுவிஷயம் ஷேக்ஸ்பியர் ரோமியோ ஜூலியட்
என்னும் நாடகத்தில் முக்கியமாயும் இன்னு மனேக
விடங்களிலும் அவ்விஷயத்தையே எக்காலத்திலும்அறி
ந்தவர்களுடைய திறத்தோடு பிரயோகித்திருக்கிறார்.
பறவைகளின் நடவடிக்கைகளதிக மணிந்தரேனும்
இவை சாதாரணமாக அனேகருந் தெரிந்தவிஷயங்
களே, அவற்றைக்காணுங்குறிப்பிலும்? பிரயோகிக்கும்
திறத்திலுமட்டுமே இவர் திறமை விளங்கிற்று.

டி. பி. கிருஷ்ணஸாமி அய்யர் எம். ஏ.

# மாணவர் பக்கம்

## STUDENTS' PAGES

## வியாஸ விதானம்

## Essay writing

### 2. கதா வியாஸங்கள்

### NARRATIVE ESSAYS

### 1. பெரியோர் சரிதை:—வித்யாரண்யஸ்வாமிகள்

Lives of greatmen:—Sri Vidyaranya.

குறிப்பு:—பிறப்பும் இளமைப்பருவமும்—யௌவன காலம்; ஞானமும், ஒழுக்கமும்—முதுமைப் பருவம்—முடிவு. பொது அபிப்பிராயங்கள்.

துங்கபத்திரா நதிதீரத்தில், பம்பை கிஷ்கிந்தை என்று பழைய பெயர்களை உடையதாயும் இப்பொழுது கோலகொண்டா ஹம்பி என்ற வழங்குவதாயுமுள்ள இடங்களுக்கு அருகாமையில் விரூபாக்ஷர் என்ற பெயர் தாங்கிய பரமசிவன் ஆலயமுண்டு. இந்த விடத்திற் கருகில்தான் வித்யாரண்ய ஸ்வாமிகள் பிறந்தது. இவர் தாய் தந்தையருக்கு முறையே ஸ்ரீமதி, மாயணர் என்றுபெயர். இவருக்கு ஸோமநாதர் என்ற ஒரு ஸஹோதரர் உண்டு. இவர் யஜுர்வேதம் பௌத்தாயின சாகை, பாரத்வாஜ கோத்திரத்தைச் சேர்ந்தவர். இவருக்கு மாதவர் என்றும், ஸாயனர் என்றும் வேறு இரண்டுபெயர்கள் உண்டு. பிறந்த காலம் இன்றைக்குச் சற்றேறக்குறைய 500 வருஷங்களுக்கு முன் இருக்கலாம். இவர் வெகு பால்யத்திலேயே ஸகல சாஸ்திரங்களிலும் தேர்ச்சி அடைந்து, அத்வைத விஷயங்களில் ஆதிசங்காரசார்யருக்கு ஸமமான தேர்ச்சியையும் அடைந்தார்.

இப்படி இருக்கையில் இவர், அக்காலத்தில் விஜயநகர ராஜ்யத்தில் அரசாண்டு வந்த யதுவம்சபரம்பரையில் சேர்ந்தவனான புக்கா என்ற அரசனுக்கு மந்திரியாக அமர்ந்தார். இவர் காலத்தில் அரசனுடைய ஆட்சி மிக ஓங்கியது. தர்மங்கள் தலைதூக்கின. வேற்றரசர்கள் அநேகரை வென்று இவர் ராஜ்யத்தை விஸ்தாரப்படுத்தினர். இக்காலத்தில் இவர் தம் கல்வித்திறனை மாதவ விருத்தி வித்தாந்த கௌமுதி வியாக்யானம், மாதவ வேதார்த்த ப்ரகாசம் (வேதபாஷ்யம்) அதிகரணரத்னமாலை (பிரஹ்மஸூத்ரம் 192-அதிகரணத்தின் விரிவு வியாக்யானம்) ஸர்வதர்சனஸாரஸங்கரஹம் (வேதாந்தமல்லாத, அநேகமதவிஷயங்கள் அடங்கிய நூல்) அனுபூதிப்ரகாசம், (ஸர்வ உபநிஷத் அர்த்த ஸார மனனச்சுருக்கம்) பிரஹ்மகீதை (த்வைத, விசிஷ்டாத்வைத, அத்வைத ஆராய்ச்சிகள்) பஞ்சிதசி, ஜீவன் முக்திவிவேகம், ஆதிசங்கராது சில நூல்களுக்கு வியாக்யானங்கள் முதலிய அநேக நூல்களைச்செய்து வெளியிட்டார். இவைகளில் சிலவிஷயங்களில் ஆதிசங்கரரிடமிருந்து அபிப்பிராயத்தில் தாம் பேதப்பட்டிருப்பதாக தகுந்த முகாந்தரங்கள் மூலமாக ஒளியாது இவர் வெளிப்படுத்துகிறார். அநேக ஏட்டுப்பிரதிகளாக தமது நூல்களைத் தயார்செய்து சில வற்றைமடங்களிலும், சிலவற்றை ஆலயங்களிலும் மிகுதி யிருந்தவைகளை பூமியில் புதைத்தும் வைத்தனர். இவர் நூல்களில் சில கொஞ்ச நாளைக்கு முன் பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்பட்டனவாம். இவர் நூல்களில் மாதவாமாத்யர், மாதவாரியர், மாதவசாரியர் என்று தமது பெயரை அமைத்திருக்கிறார். மூன்றாவது பெயர் ஆங்கிலத்தில் எழுதினால் மத்வாசாரியர் என்றும் உச்சரிக்க இடங்கொடுப்பதால் இவர்செய்த அநேக நூல்களைத் துரைத்தன ஆசாரியர்களில் சிலர் அறியாமையால் த்வைத ப்ரவர்த்தகரான ஸ்ரீமத்வாசாரியர் செய்ததாகக் கூறுவர்.

இவர் வெறும் ஞானத்தில் மாத்திரம் இவ்வாறிருந்ததும் அன்றி நடத்தையிலும் மிகச் சிறந்தவராக இருந்தார். மந்திரி ஸ்தானத்திலிருந்து ஜனங்களது பொது நன்மைக்குத், தம்நிலைதவறாது, வித்யாசாலை அன்ன சத்திரம் தேவாலயம் முதலியவைகள் ஏற்படுத்தி வெகுவாகப் பாடுபட்டிருக்கிறார். ஆத்ம நன்மைக்காக இவர் அநேக தான தர்மங்களைச் செய்திருக்கிறார். பிரஜோத்பத்தி வருஷத்தில் வைகாசிமாஸம் ஸூர்யகிரஹணத்தன்று நச்சரம் என்ற கிராமத்தைச் சீர்திருத்தி மாதவபுரம் என்ற பெயர் கொடுத்து 24 பிராஹ்மணருக்குத் தானம் செய்தார். தமது தாயின் பேரால் அநேக பூதானமும் செய்தார். இதனால் அருகாமையிலிருந்த நதிக்கு மாதவதீர்த்தம் என்ற பெயரும் ஏற்பட்டதாம். சிரௌதஸ் மார்த்த கர்ம விஷயங்களில் இவர் சிறந்த நியாயம் தீர்ப்பவராக விளங்கினர். இதனோடு மாத்திரமன்றி ஸம்ஸாரத்திலிருந்தபடியே இவர் அத்வைத முடிவு விஷயத்தில் நிஷ்டை முதலியவைகளில் பழகி, விவேக வைராக்யம் முதலிய ஆத்ம குணம் நிறைந்தவராகவும் இருந்தார். இவரது சிறப்பைக் கண்டு இவர் ஈசுவரன் அவதாரம் என்று ஜனங்கள் மதிக்க, ராஜஸபையில் எல்லோரும் விழுந்து இவர் முன் நமஸ்கரிப்பது வழக்கமாக இருந்தது.

யைத் தடுக்க க்ரீஸில் முயற்சிகள் செய்யப்பட்டன. இந்த ஸேனை புறண்டுவருகிறது என்று கேள்விப் பட்டஉடன் சில க்ரீஸ் ஜாதியார் ஸெர்க்ஸஸிடம் சரணம் புகுந்தனர். ஸுமார் 7000 பெயர்கள் லியோனிடாஸ் என்னும் ஸ்பார்ட்டா அரசன்கீழ்த் தர்மாபிலேயைக் காக்க அனுப்பப்பட்டனர். இவர்களுள் 300 பெயர்கள்தான் ஸ்பார்டர்கள். மற்றவர்கள் இதர ஜாதியார்கள். தர்மாபிலேயைத் தாண்டிக்கொண்டு தான் கிழக்கே இருக்கும் புத்திமான்கள் நிறைந்த ஆதென்ஸையும், தெற்கே இருக்கும் வீரர்கள் நிறைந்த ஸ்பார்டாவையும் ஸெர்க்ஸஸ் தாக்கவேண்டும். ஆகவே இவ்விரண்டு முக்யமான மாகாணங்களைக் காக்க இந்தத் தர்மாபிலேயைக் காவல் செய்ய வேண்டியது அவச்யமாயிற்று.

தர்மாபிலேயில் ஸ்பார்டர்கள் வந்து சேர்ந்ததும் தமது ஆயுதங்களை மணலில் நட்டுவிட்டு அவர்கள் தமது தலைகளை வாரிக்கொண்டிருந்தனர். ஸெர்க்ஸஸ் ஸேனை நெருங்கி வர அவன் ஒரு வேவுகாரனை அனுப்பி வித்தான். அவன் மூலமாக ஸ்பார்டர்கள் நிலைதெரிய வர அங்குள்ளவர்களிடம் விசாரித்து, ஸ்பார்ட்டர்கள் செய்யும் தொழில் அவர்களுக்கு யுத்தவிஷயத்தில் உள்ள பிடிவாதத்தை வெளிப்படுத்தியது என்று தெரிந்துகொண்டான். அவர்கள் தனது சேனைப் பெருக்கைக் கேட்டு ஓடிவிடுவார்கள் என்று வீண் எண்ணம் கொண்டிருந்தான் ஸெர்க்ஸஸ். "கடல் போன்ற சேனைவருகிறது. அவர்கள் அம்புகள் ஸூர்யனையும் மறைத்துவிடும்" என்று கேள்விப்பட்ட ஸ்பார்டர்கள் "அதற்கென்ன நிழலில் நாம் ஸுகமாகச் சண்டையிடலாம்" என்று அலக்ஷ்யமாகக் கூறினராம். இரண்டொருநாள் கழித்துத் தன்னிடம்இருந்த மீட்ஸ் ஜாதி ஸேனையை ஏவினான் ஸெர்க்ஸஸ். நடந்த சண்டையில் அவர்களால்வடமேற்கு வாயிலில் நுழையவே முடியவில்லை. கொடிய போர் நடந்ததில் பாரஸீகர் பக்கத்தில் அநேகர் மாண்டு விழுந்தனர். மறுநாளும் சண்டை பலமாக நடந்தது. ஸெர்க்ஸஸ் தன் ஸேனைகளுள் அழிவற்றவர்கள் என்று பெயர் பெற்ற பதினாயிரவரை சண்டை யிடும்படி உத்தரவு செய்தான். என்ன செய்தென்ன! ஸ்பார்டர்கள் வீரம், அவர் தங்கியிருந்த இடத்தின் விசேஷம், ஒலிம்பியன் ஆட்டங்கள் என்ற திருவிழாநாள் அன்றைக்காக இருந்ததால் அவர்களுக்கு உண்டானஉத்ஸாஹம், ஆகிய இவைகளுக்கு எதிரே பாரஸீகர் ஸேனையால் என்ன செய்யமுடியும்? அன்று மாலைக்குள் அநேக பாரஸீகர்கள் மாண்டு சாய்ந்தனர். இந்த யுத்தம் நடந்து வந்த காலத்தில் இரண்டுமூன்று தரம்தனதுஆஸனத்திலிருந்து துக்க அதிகத்தால் எழும்பி விழுந்து பரிதவித்தனனும் ஸெர்க்ஸஸ். அப்பொழுது க்ரேக்கனான இபையால்டீஸ் என்ற துரோகி ஒருவன் மலைகளுள்ளே அப்புறம் போக வழியொன் றிருக்கிறது என்று சொன்னான். அவன் பின்னே ஸெர்க்ஸஸ் ஸேனையின் ஓர் பாகத்தை அனுப்பினான். அவன் இதை மலைமார்க்கமாக நடத்திவருகையில் அதைக் காவல்செய்ய வைத்திருந்த ஓர் ஸேனாபாகம் இவர்களை எதிர்த்தது. ஸ்பார்டர்கள் ஸொப்னம் கண்டு வெருண்டு வந்த பாரஸீகர்களுக்கு 'இவர்களும் ஸ்பார்டர்களோ ?' என்ற பிரமை உண்டாயிற்று. கொலைபாதகன் இபையால்டீஸ், 'அல்ல' வென்று அவர்களுக்குத் தைர்யம் கூற, அவர்கள் அம்பெய்து காவல்செய்து வந்தவர்களை ஓட்டினர். இவர்களுள் சிலர்சென்று பாரஸீகர்கள் அவர்களை வளைத்துக்கொள்ளச்செய்திருக்கும் உபாயத்தை லியோனிடாஸுக்கு வெளியிட்டனர். உடனே ஸ்பார்டர்கள் விதிப்படி, லியோனிடாஸ்ஸும் அவன் முன்னூற்று வரும் அந்தக் கணவாய்க்குள்ளேயே இருந்து காவல் செய்வதாகத் தீர்மானித்து விட்டனர். ஒரு சண்டைக்குப்போனால் வெற்றியோடுதிரும்பவேண்டும், அல்லது சண்டைசெய்துகொண்டு மடியவேண்டும் என்பதே அவர்கள் சபதம். இதன்படி இருக்க எண்ணமில்லாத மற்ற ஜாதியாரை லியோனிடாஸ் பிரிந்துபோகும்படி உத்தரவு செய்து, கணவாயின் மறுபுறத்தில் வரும் பாரஸீகர்களை வெளியிலிருந்து தாக்கும்படி வேண்டிக்கொண்டான். இம்மாதிரியானதும் லியோனிடாஸ் சும்மா இராது இயன்றமட்டும் சண்டை செய்தே இறப்பது என்ற தீர்மானத்தோடு வடமேற்கே இருக்கும் பாரஸீகர்களைத் தாக்க உத்தரவு செய்தான். முன்னிலும் பதின்மடங்கு கோரமாகயுத்தம் நடந்தது. ஸெர்க்ஸஸ் இவர்களை வளைந்து கொன்றுவிடலாம் என்ற தைர்யத்தால் நல்ல சண்டைசெய்யும் ஓர் பாகத்தை இவர்களிடம் போர்செய்ய விட்டுவிட்டு மற்றைய பாகங்களை எல்லாம் சும்மாவைத்துக் கொண்டு இபையால்டீஸ் மறுபுறம் வருவதை எதிர்பார்த்திருந்தான். மூன்றாம்நாள் நடுப்பகல் பார்ஸீகர்கள் மறுபுறம்வந்துவிட்டார்கள் என்று தெரிந்தது. உடனே முன்னிலும் அதிகமாகப் போர் தொடங்கியது. என்ன ஸாமர்த்தியம் இருந்தாலும் ஸ்பார்டர்கள் தொகை மிகக்குறைவுதானே! அவர்கள்ஆவேசம் பிடித்தவர்போலச் சண்டையிட்டபோதிலும் அவர் கையிலிருந்த ஈட்டிகள் முறிந்து

போயின. உடனே அவர்கள் கத்திச்சண்டை செய்ய நெருங்கும்படி நேர்ந்தது. பின்னும் முன்னும் பாரவீகர்கள் பாதை ஏற்பட்டு விட்டது. இந்த அபாய காலத்தில் முதலில் லியோனிடாஸ் உயிரிழந்து கீழே விழுந்தான். அவன் பிணத்தைச்சுற்றிக் கொடியபோர் வெகுகாலம் நடக்க அதில் சில ஸ்பார்டர்கள்தான் மிஞ்சினர். மாரதான் யுத்த கீர்த்தியை நாழிகழித்து வந்தால் அடைய முடியாமற் போனது, அவர்களுக்கு ஞாபகம் வர முன்னிலும் பதின்மடங்கு வீர்யத்தோடு அவர் சண்டைசெய்தனர். முடிவில் இவர்களும் அருகே ஓர் சிறு குன்றின்மேல் சற்று இளைப்பாறப் பின்னடைய வேண்டிவந்தது. அங்குச் செத்தபாம்பை அடிப்பதுபோல இவர்களைப் பாரவீகர்கள் கொன்று தீர்த்துவிட்டனர். இங்குப் பாரவீகர்கள் ஜயித்த போதிலும், 300 ஸ்பார்டர்கள் நம்மை இப்பாடு படுத்தி விட்டார்களே! க்ரீஸ் முழுவதும்சேர்ந்து வரப்போகிறதே. நம்மகதி, என்ன? என்ற ஏக்கம் ஸெர்க்ஸஸ்ஸுக்கு வந்துவிட்டது. இதற்கேற்ப ஸ்பார்டர்கள் நடத்தையால் யுத்த ஆவேசம் கொண்ட அதீனியர் முதலிய மற்றைய க்ரீஸ் ஜாதியாரால் பாரவீகர்கள் கொஞ்சநாளில் நன்ருய் முறியடிக்கப்பட பஞ்சாய்ப் பறந்தோடிப் போயினர். லியோனிடாஸும் அவனை முன்னுற்று வந்த வீரர்களும், பின்வாங்காது சண்டையிட்டுத் தம் நாட்டாருக்குத் தைர்யம் ஊட்டிய இடத்தில் இன்றும் ஓர் சிலாரூபமான அறிகுறி அமைந்து காணப்படுகின்றது. அவர்கள் புகழ் உலகுள்ளளவும் எப்படி மாறும்!

இதிலிருந்து ஒரே மனத்துடன் நடப்பவர் சிலராயினும், குழப்பம் மிகுந்த பலரை எளிதில் தடுக்கலாம் என்பதும், வேற்றுடம்பு மாய்ந்தாலும் புகழுடம்பு மாயாது என்பதும், நன்ருக வெளியாகும்.

இம்மாதிரியே விவரிக்கக்கூடிய வியாஸ விஷயங்கள்.

1 மாரதான் யுத்தம்
2 ஸாக்ரேடிஸ் விசாரணை [யும் மரணமும்
3 வீஸரைக் கொலைசெய் [தது
4 ஹொரேஷியஸ் பாலங் [காத்தது
5 மாஸ்கோவை எரித்தது
6 ஹானிபல் ஆல்ப்ஸ்மலை [களைத் தாண்டியது
7 வாடர்லூ யுத்தம்
8 பாங்நாக்பரன் யுத்தம்
9 அமெரிக்கர் ஸ்வதந்தி [ரம் பெற்றது
10 ஆல்ப்ரெட்டும் டானி [யரும்

போதக்குறிப்புகள்

1. முகவுரை.
2. காரணம்.
3. கதை.
4. முடிவுரை—அபிப்ராயம், அல்லது கருத்து.

## மொழிபெயர்ப்பு விளக்கம்

## TRANSLATION MODELS

### 4. Conduction of Heat

We have spoken about thrusting a poker into the fire, and told you that at last the other end of the poker will be too hot to hold. But if, instead of a metal poker or rod, a glass or a stoneware rod were thrust into the fire, the other end of this rod would never get very hot because the stoneware does not conduct heat nearly so well as the metal.

Wool and feathers are still worse conductors, and this is why these substances have been provided by nature as the clothing of animals; for the heat of an animal is generally greater than that of the surrounding substances, and this heat is not readily, conducted off through the garment of wool, feathers or fur with which the animal is clad.

A bad conductor may be used not only to keep in heat but also to keep it out; flannel for instance, may be used to wrap round our bodies in order to keep the heat in, or it may be used to wrap round a block of ice, which we wish to preserve, in order to keep the heat out. In fact, heat cannot readily pass through flannel whether it be going from within outwards or from without inwards.

—*Physics Primer*, *pages* 102-103

### உஷ்ணம் ஊடுருவிப் பரவல்

ஒரு தூண்டுகோலை நெருப்பில் சொருகும் விஷயத்தைப்பற்றிக் கூறுங்கால், முடிவில் அதன் மறுநுனி மிக உஷ்ணமாகிவிடும், அதைத் தொடக்கூட முடியாது என்று எடுத்து விளக்கியிருக்கிறோம். ஆனல் உலோகங்களால்செய்த தூண்டுகோல் அல்லது கம்பிக்குப் பதிலாகக் கண்ணுடி அல்லது சுட்டமண்ணுலாகிய கோலை நெருப்பில் சொருகினல் அதன் மறுநுனி எப்

பொழுதும் மிகச்சூடாகிவிடாது. சுட்டமண், உலோகங் களைப்போல, அவ்வளவு நன்ருக உஷ்ணத்தை ஊடுருவிப் பரவவிடாது.

அடர்ந்த உரோமமும், இறகுகளும் சுட்டமண்ணை விட உஷ்ணத்தை ஊடுருவிப் பரவவிடும் சக்தியில் மிகத் தாழ்ந்தவை. இதனுல்தான் இவைகள் ஸ்வ பாவமாக ஜந்துக்களுக்குப் போர்வைகளாக அமைக்கப் பட்டிருக்கின்றன. சுற்றுமுற்றும் உள்ள வஸ்துக் களைவிட ஒருஜந்துவிடம் அதிக உஷ்ணம் காணப்படும். அவைகளுக்கு மேற்போர்வைகளாக இருக்கும் அடர்ந்த உரோமம், இறகு, மயிர் ஆகிய இவைகள் வழியாக எளிதில் இந்த உஷ்ணம் ஊடுருவிப் பரவுவதில்லே.

எளிதில் உஷ்ணத்தை ஊடுருவிப் பரவவிடாத வஸ்துக்களே, உஷ்ணத்தை உள்ளே அடக்கிவைப் பதற்கு உபயோகப்படுத்துவதும் அல்லாமல், உஷ் ணத்தை உள்ளே புகவொட்டாது தடுப்பதற்கும் உப யோகப்படுத்தலாம். இதற்கு உதாரணமாகக் கம்ப ளியை எடுத்துக்கொள்வோம். தேஹத்து உஷ்ணம் வெளியே சிதறிப் போகாதபடி இதை மேலே சுற்றிக் கொள்ளலாம். இதுவுமன்றி, வெளிஉஷ்ணம் தாக்கி நஷ்டமாகாதபடி தடுப்பதற்காக இதைப் பனிக்கட்டி மேலும் சுற்றிவைக்கலாம். ஆராயுங்கால் உள்ளே இருந்து வெளியேயாவது அல்லது மாருகவாவது உஷ்ணம் கம்பளியின் வழியே ஊடுருவிப்பாவாது.

---

**மாம்ஸ புசிப்பதை விட்டதோர்மாது:**—பெல்ஜ்ஜியம் தேசத்தில் **ப்ரஸல்ஸ்** என்னும் காலேஜில் தேஹதத்வசாஸ்த்ர போதகாசிரியராயிருக்கும் டோ டெய்கோ என்னும் ஓர் மாதரசியார், மாம்ஸம் உண்ப வர், உண்ணுதவரென்று இருதிறத்தவருள், யார் அதிக நாள் பட்டினியாகவிருத்தல் கூடுமென்று பரீ க்ஷித்துப்பார்த்து, மாம்ஸமுண்ணுதவர்களே பலசாலிக ளென்றும், பசி பொறுப்பவரென்றும், தேகாரோக்ய முடையவரென்றும் கண்டு, தாமும் மாம்ஸமுண்பதை விட்டாராம்.

நெடுங்காலமாக மாம்ஸபக்ஷணஞ் செய்து வந்தவரும் மாம்ஸபக்ஷணமே தேஹத்திற்கு வலுவையுண்டாக்கு மென்னும் அபிப்ராயத்தை யுடையவருமாகிய ஐரோப் பியரிற் சில பகுதியார், மாம்ஸபோஜனஞ் செய்வது தவறென்றும், அதனினும் சாகபக்ஷணமே, எல்லா விதத்திலும் மேலானதென்றும் பரீக்ஷித்துப்பார்த்து மாம்ஸபக்ஷணத்தை விலக்கிவருகின்றனர். பிறப்பி லேயே சாகபக்ஷணிகளாக விருக்கும் நம்மவரிற் சிலர் மாம்ஸபக்ஷணஞ்செய்தல் வேண்டுமென்று கூறுவது கலிகாலக் கொடுமையே!

# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

### ஜடபரதர் சரித்ரம் (3) மஹான்கள் நிலே

பரதமான் தேஹம்விட்டதும் ஓர் ஆங்கீரஸப்ராஹ் மணர் குலத்தில் கடைக்குட்டியாக வந்து பிறந்தது. இவருக்குத்தமயன்மார்கள் ஒன்பதுபேர்கள் இருந்தனர். இவர் தகப்பனுர் இவருக்கு அநேக வழிகளால் கல்வி கற்பிக்க முயன்ருர். இவருக்குக் கர்ம பரிபாகத்தால் மனம் பரம்பொருளிடமே சென்று கொண்டிருந்தது. மேலும் சென்ற இரண்டு ஜன்மங்களாக இவர் படாத பாடெல்லாம் பட்டுப் பரமபதம் பெறமுடியாது கிடந்து தத்தளித் திருக்கிருர். இவைகள் எல்லாம் இவருக்கு ஞாபகத்தில் வர பிறந்ததுமுதல் இவர் மனதைப் பரம் பொருளிடம் ஈடுபடுத்தி, எங்கே வாய்திறந்து பேசத் தொடங்கிவிட்டால் இந்த ஜன்மத்திற்குரிய அபிமா னுதிகள் வந்து மூடிக்கொண்டு தம்மை வீழ்த்திவிடுமோ என்று அஞ்சி வாய்கூடத் திறவாதிருந்து விட்டார். ஆதலால் தகப்பனுர் கல்வி கற்பிக்கச்செய்த முயற்சிகள் எல்லாம் வீணுயின. இவருக்கு உபநயனம் நடக்க அப் பொழுது காயத்ரீமந்திரம் சொல்லிக் கொடுத்தும் இவர் மனதில் அது ஏறவில்லே. இவ்வாறு இவர் மந்த ராக இருப்பதைக் கண்டு இவருக்கு எல்லோரும் ஜடர் என்று பெயரிட இவருக்கு **ஜடபரதர்** என்ற பெயர் நின்றுவிட்டது.

தமது கடைக்குட்டி இவ்வாறு உபயோகமற்றிருப் பதைக் கண்டு ஏங்கிக் கொஞ்சநாளில் தகப்பனுர் இறந் தார். பரதர் தாயார் உடன்கட்டை ஏறினுள். இவர் தமயன்மார்கள் தாயாராகிய மூத்தாய் தான் பின் தங்கி னுள். அவள் பிள்ளைகள் மஹா ஸமர்த்தர்கள். தமக் குப் பரதர் உயயோகப்படமாட்டார், என்று கண்டு இவருக்குத் தகுந்தபடி தேஹச்ரமம் உண்டாகத்தக்க வயல் வெளிக்காவலே இவருக்குக் கொடுத்தார்கள். இவரிடம் நல்ல வேலே வாங்கினுர்களே ஒழிய தகுந்த உணவு கொடுக்கவில்லே. கிடைத்ததைக்கொண்டு த்ருப்தி அடைவது ஞானியின் இயல்பாகையால்தான், பரதர் இதைக் கவனியாது தமக்கு இட்டவேலேயை வயல் வெளியில் தம்மால் இயன்றமட்டும் செய்துவந் தார். நல்ல உணவில்லாமலிருந்தபோதிலும், அவரது மனச்சிறப்பால் அவர் தேஹம் வாடாது பருத்தே இருந்தது. இவர் காவல் செய்யுங்கால் வயலில் பரண் மேல் தடியும் கையுமாய் அசையாதிருப்பது வழக்கம்,

இவரைக்கண்டதும், புல்லுருவைக்கண்டு ஓடுவது போலப், பக்ஷிகள் முதலியன கிட்டேஅணுகா. இரவிலும் இவர் இவ்வாறு காவல் செய்வது வழக்கம். இங்கு இவர் விடாது பரம்பொருளிடம் மனதைச் செலுத்திக்கொண்டிருந்தபடியால் வெகுகாலம் மெய்ம் மறந்திருப்பார்.

இவ்வாறு ஜடபரதர் காவல்செய்து வருகையில் ஒரு நாள் இரவில் சில வேலையாள்கள் வந்து இவரைப் பிடித்துக்கொண்டு நரபலிக்காகத் தமது யஜமானனிடம் கொண்டுபோய்விட்டார்கள். இந்த யஜமானன் ஒரு திருடர்ராஜன். அவனுக்குப் பிள்ளையே இல்லாதிருந்தது. இதற்காகக் காளிக்கு இவன் நரபலி கொடுப்பதாகத் தீர்மானித்திருந்தான். 'கழுவுக்கேற்ற கோமுட்டி' என்றபடி ஜடபரதரே பலிக்குத் தகுந்த பசு என்று மதிக்கப்பட்டார். இவரை எண்ணெய் தேய்த்து ஸ்நாநம்செய்து வைத்தார்கள். மாலை மஞ்சள் முதலியவைகளால் அலங்காரம் செய்தார்கள். காளியின் முன்னிலையில், இவரைக் கொண்டுபோய் நிறுத்தினார்கள். ஜடபரதர் அப்பொழுதும் ஞான நிஷ்டையில் இருந்தார். அவருக்கும் ஒன்றும் தெரியவில்லை. அவரை முட்டிபோட்டு உட்காரச்செய்து தலையைக் குனிந்து நிற்கும்படி செய்துவைத்தார்கள். உடனே மஹானான ஜடபரதரை வெட்ட உறையிலிருந்து கத்தியை அந்த ராஜன் உருவி ஓங்கிவிட்டான்.

காளி எவ்வாறு இந்தப் பலியைத் தாங்குவாள்! அவளுக்கு விக்ரஹத்தில் இருப்புக்கொள்ளவில்லை. பலிக்காகக்கொண்டு வந்திருப்பவன் மஹாப்ராஹ்மணன் அல்லவா! காளியைப்போன்ற ஸகல தேவதைகளுள்ளும் இருந்து ப்ரகாசிக்கும் பரம்பொருளாகி நிற்கும் ஞானியாதலால், ஜடபரதரை வெட்டத் தொடங்கிய உடன் ப்ராஹ்மணன் தபோக்னியால் தஹிக்கப்பட்டு, மிகுந்த அட்டஹாஸம் செய்துகொண்டு, காளி, விக்ரஹத்திலிருந்துவெளிவந்து கோபாவேசத்தில் அங்கிருந்தோர் எல்லோரையும் வெட்டிச் சாய்த்துவிட்டாள். நடந்தகாரியம் ஒன்றும் நிஷ்டாபரரான பரதருக்குத் தெரியாது. இதனால் பரம்பொருளை உள்ளபடி பற்றி நிற்பவருக்குத் தாழ்ந்த தேவதைகள் எல்லாம் அடங்கிநிற்கும். எவ்விதமான க்ஷுத்ரதேவதையின் சக்தியும் இந்த ஞானியிடம் பலிக்காது. இவன் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டு இவன் ஆராதிக்கும் தெய்வம்போலவே தாக்கற்று நிற்பான். ஒருவித மனோவ்யாதியும் இவனிடம் அணுகாது. பிசாசு காற்று சங்கை க்ஷுத்ர தேவதை முதலிய பாமரர் நம்பிக்கையில் ஒரு சிறிய பாகம் மாத்திரம் பரம்பொருள் விஷயத்தில் ஒருவனுக்கு மாறுதி ஏற்பட்டுவிட்டால், அவனுக்கு ஸ்வர்க்கக் கதவு திறந்துவிட்டது என்பதற்கு ஸந்தேஹமே இல்லை!

இவ்வாறு பரதர் அறியாமலே வந்த ஆபத்து அவர் அறியாமலே பறந்து ஓடிப்போகக் காளிகோயில் வாயிலில் அவர் வந்து உட்கார்ந்தார். காலையில் அவ்வழியே ஒருராஜன் பல்லக்குப் போய்க்கொண்டிருந்தது. அதில் ரகுகுணன் என்ற ராஜன் கபிலரென்னும் தனது குருவைக்கண்டு உபதேசம்பெற மஹா விநயபயபக்தியுடன் போய்க்கொண்டிருந்தான். அவன் பல்லக்கைச் சுமப்பதற்கு, கூட ஒரு ஆள் வேண்டியிருந்தது. பல்லக்குப் போயிகள் தேடிவருகையில் காளி கோயில் வாயிலில் கொழுத்த பரதரைக்கண்டு, பல்லக்குத்தூக்க இவரே தகுந்தவர் என்று எண்ணி இவரை இழுத்துச்சென்று இவரதுதோளின்மேலும்பல்லக்குத்தாங்கும்படிசெய்துவிட்டனர். இவர், மஹான்கள் வழக்கப்படி, நடக்குங்கால் கீழே பார்த்துக்கொண்டு ஊரும் ஜந்துக்கள் தம் கால்களில் அகப்பட்டு இறந்துவிடாதபடித் தமது காலை எட்டிவைத்து நடந்துவந்தார். மற்றவர் நடையோடு இது இசையாததால் பல்லக்குக் குலுங்கத் தொடங்கியது. ரகுகுணனுக்கு மிகுந்த கஷ்டம் உண்டாக அவன் பல்லக்குப் போயிகளைக் கண்டித்தான். அவர்கள் புதிதாய் வந்த பரதரைக்காட்டி அவரால்தான் பல்லக்குக் குலுங்குவதாக வெளியிட்டனர். கொஞ்சநாழிகைக்கு எல்லாம் பல்லக்கு மறுபடியும் குலுங்கத்தொடங்கியது. அரசனுக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. 'நீ என்ன நடைபிணமா? என் உத்தரவுக்கு விரோதமாகவா நடக்கிறாய்? பார் நான் உனக்குக் கொடிய தண்டனை விதிக்கிறேன்!' என்று கர்ஜித்தான்.

இதைக்கேட்டதும், அரசனது பாக்கிய காலம் வர, ஜடபரதர் வாய் திறந்து குலுங்க நகைத்தார்! இதுவரையிலும் வாயைத் திறவாதிருந்தவர், இப்பொழுது அரசனை நோக்கி, 'எனக்கு தேஹத்தில் அபிமானம் இல்லாததாலும், ஸதா ஆத்மரூபத்திலேயே நான் ஈடுபட்டிருப்பதினாலும், நான் உயிரோடிருந்தும் இறந்தவனுக்கு ஸமம்தான்: நடைபிணம்தான்! எனக்கு உலக விஷயங்கள் ஒருபொருட்டேயல்ல. அவை செத்தவனை எவ்வாறு தாக்குகிறதில்லையோ அவ்வாறே என்னையும் தாக்குகிறதில்லை. ஆகையால் செத்தாரைப் போலே திரிபவனாகிய என்னைத் தண்டிப்பதினால் எனக்கு ஒரு

மாறுபாடும் ஏற்படாது. நீ அப்படிச்செய்வது அரைத்த மாவை மறுபடியும் அரைப்பதுபோல வீணுகுமே ஒழிய வேறல்ல:' என்று திருவாய்மலர்ந்தருளினர்.

கேட்டான் ரகுகுணன்! ஜடபரதர் சிறப்பு விளங்கி விட்டது. நாம் உபதேசம் பெறப் போகையில் இம்மாதிரி மஹானுக்கு அபராதம் செய்யும்படி நேர்ந்து விட்டதே! என்று பதறினன். ஒருவேளை 'கும்பிடப்போன தெய்வம்தான் குறுக்கே வந்தது' என்றபடி கபிலமுனி இவர்தானே என்று ஐயுற்றான். பல்லக்கினின்றும் பரபரப்புடன் கீழே இறங்கினன். பரதருக்கு ஸாஷ்டாங்கத் தண்டனிட்டான்.'நான் அறியாமற் செய்த அபராதத்தைப்பொறுத் தருளல்வேண்டும்' என்று கெஞ்சி மன்றாடினன்.

ஞானிகளுக்கு மானவமானதிகள் ஒருபொருட்டல்ல ஆதலால், முன்னர் கடிந்துகொண்ட காலத்தில் ஜடபரதர் மனம் எந்தச்சாந்தநிலையிலிருந்ததோ அதே சாந்த நிலையில் அரசன் தண்டனிட்ட பொழுதும் இருந்தது. அப்பொழுது மனங்கோணுத ஜடபரதர் ரகுகுணனுக்கு உபதேசம் செய்யத்தொடங்கினர்.மனத்தின் ஸ்வரூபம், குணங்களின் ஸ்வரூபம்; பரம்பொருளின் அந்தர்யாமித்வம், ஹரிஸேவையால் மனதை அடக்க அதனல் வரும் பயன், ஹரிபக்தியில்லாத மற்றை ஸாதனங்களின் பயனில்லாமை, அபிமானத்தால் தாம் பட்டபாடு, அகங்காரம் உண்மையாக உள்ளதல்ல, என்னும் அரிய விஷயங்களைப்பற்றி அவர் எடுத்துப் பிரஸ்தாபித்தார். அதன் பின்பு உலகத்தில் ஜனங்கள் பொதுவாக சிற்றின்பாதிகளில் சிக்கிச் சண்டை சச்சரவுகள் செய்து பணத்தாசையால் பணம் ஸம்பாதிக்க, பலாத்காரமாக மற்றவர், அதைப் பிடிங்கிப் போவதால் வரும் துக்கத்திற்கு ஆளாகி, காமக்ரோதாதிகளுக்கு அடிமையாகி, மோக்ஷவழி அறியாது தத்தளிப்பதை வெகு விசித்திரமாக எடுத்துச்சொல்லி அரசனுக்கு உள்ளத் துறவு வரும்படி செய்தார். உடனே அரசனும் துறவுபூண்டு பரதரது ஸஹாயத்தால் நாளடைவில் பரமபதம்அடைந்தான். பரதரும் பரம்பொருளைத் தியானம் செய்து கொண்டே காலக்கிரமத்தில் தமது தேகத்தை விட்டுப் பரம்பொருளோடு கலந்து ஸமாதி பெற்றார்.

ஓம் தத்ஸத்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

## த்ரௌபதி அல்லது மனத்தினிலே கீழ்மை ஒழிந்த காதை (தொடர்ச்சி)

த்ரௌபதியின் மொழிகளைக்கேட்ட கீசகன் "நீ சொல்லியதே பொருந்தும். நான் தனியே உன்னிடம் வருவேன். கந்தர்வர்கள் நீ என்னேடு வருவதைக் காணமுடியாது"என்று கூறிவிட்டுக் கீசகன்வேடிக்கையாய்ப் பேசிய காமமொழிகள் எல்லாம்,த்ரௌபதிக்குத் துன்பத்தையே தந்தன. ஒவ்வொரு க்ஷணமும் அவளுக்கு யுகமாகப்பட்டது. இதற்குள் மாலைப்பொழுது மிகவாத்திரத்தோடு இரக்தப்பெருக்கத்தைப் பரப்பிக் கொண்டு காமக்கடலில் அழுந்திய மனம் இருளில் பாய்ந்து தாங்காது அழிவதுபோல் அழியவந்தது. கீசகனும் ஸந்தோஷக்கடலில் மூழ்கி தன்னுடலை அலங்கரித்துக்கொள்ள வீடு சென்றான். யாகசேனையும் பீமசேனனை மறுபடியும் தூண்டச்சென்றாள். கீசகன் தன்மனம் கனிய அலங்கரித்து, இன்பச்சுவையில் ஆழ எண்ணி காமமே குடிகொண்ட கருத்தனுய் த்ரௌபதியிடம் செல்லப்புறப்பட்டான்: அவியும் விளக்கின் பிழம்பு விம்முதல்போல் அவன் மனமும் விம்மி விம்மி குதூஹலமடைந்தது.

தன்படுக்கை அறையை அடைந்து "ஸைரந்த்ரி! நீ விரும்பியவற்றை வேண்டிய அளவு கொடுத்தேன். அநேக அழகிய பெண்களை உனக்குப் பாங்கிமாராக்கினேன். உனக்கும் உன் பாங்கிமார்களுக்கும் தக்க அரண்மனை ஒன்று தந்திருக்கிறேன். உனக்குத்தக்க அந்தப்புரமும் ஏற்படுத்தி இருக்கிறேன். கூத்து குரவை முதலிய வேடிக்கைகளுக்குத் தகுந்தபடி ஏற்பாடு செய்தேன். நானும் நன்றாக அலங்கரித்துக் கொண்டுவந்தேன். என்னைப்பார்த்த என்னுடைய அரண்மனைப் பெண்களெல்லாம் என்னைத் துதி செய்து 'உன்னைப்போல் உடுத்து அழகில் சிறந்து விளங்குகிறவர்கள் உலகில் எங்கும்இல்லை' என்றார்கள்" என்றான்.

"அத்ருஷ்டத்தால் நீ அழகாகப் பிறந்தாய். உன்னையே ஸ்தோத்ரம் செய்துகொள்கிறாய். இதைப் போல் ம்ருதுவான ஸ்பர்சம் இதற்குமுன் நீ கண்டிருக்கமாட்டாய். உன்னுடைய ஸ்பர்சம் என்னுடம்பை நெருப்புப்போல் எரிக்கிறது. நீ டம்பத்தில் சிறந்

தவன். பெண்களிடம்தான் உன் பெருமை எல்லாம் சொல்லிக்காட்டுவாய்" என்று சொல்லிக் கொண்டு அங்கு வந்து படுத்திருந்த பீமஸேனன் கோபம் மிகுந்து எழும்பிக் குதித்து "அடா கீசகா! இன்றைக்கு உன் உடன்பிறந்தாள், உன்னுடல் மலைபோல் வீழ்ந்து ரக்தப்ரவாஹத்தில் புரளப்பார்ப்பாள்! உன்னுடல் விட்டு உயிரைத் துலைத்தால் ஸைரந்த்ரி ஸுகமாக வாழலாம். நாங்கள், அவளுடைய கணவர்களும், ஸந்தோஷமாக வாழலாம்" என்றான்.

பீமன், பின் கீசகனுடைய மயிரைப்பிடித்து இழுத்தான். கீசகன் அவனுடைய கையைப்பிடித்துக்கொண்டு யுத்தம் செய்தான். பின் பீமன் கீசகனை உதைத்து மிகு வேகத்தோடு வீசினான். அடியற்ற மரம்போல் கீசகன் கீழ் விழுந்தான். பின் ஒருவர்மேல் ஒருவர் வீழ்ந்து சண்டையிட்டார்கள். பீமசேனன் கீசகனைப் பிடித்துப் பெருங்காற்று மரங்களை அலைமோதுவது போல கீசகனை உலுக்கு உலுக்கென்று உலுக்கினான். இதனால் கீசகனுடைய பலம் மிகக்குறைந்தது. ஆனாலும் தன் பலத்தையெல்லாம் கிளப்பிக்கொண்டு பீமன்மேல் பாய்ந்துக் கீழ்மோதினான். மார்பில் உதைத்து முட்டினான். பீமன்கதையை எடுத்துக்கொண்டு கீசகனுடைய மண்டையை உடைக்கவேண்டும் என்று கிளம்பினான். கீசகனுடைய மார்பில் புடைத்தான். இடைவிடாது பீமன் மோத கீசகன் அசைவற்று நின்றான். பீமன் அவனை மார்போடு மார்பணைந்து தன்னுடைய ஆசை


Droupadi at the Court of Virat.

யைக்காட்ட தனது கைகளால் அவனை அமுக்கினான். அவன் மயிரைப் பிடித்துக்கொண்டு ஸிம்ஹம்போல் கர்ஜித்தான். அவனை இங்கும் அங்கும் அசக்கி அசக்கி வெகுநேரம் அவன் உடம்பைக் குலுக்கினான். பின் உதை உதை யென்று உதைத்தான். அவன் நெஞ்சைப் பிடித்துத் திரிகினான். கீழ்த்தள்ளித் துகைத்தான். நெஞ்சை மிதித்தான். மார்பில் முழங்தாளால் முட்டினான். உடம்பைச் சின்னபின்னமாக்கிக் கீழ்வீசி எறிந்தான். பின், குதூஹலத்துடன் சிதறி விழுந்து கிடந்த கீசகனது உடலைக் காலால் வீசி "ஸைரந்த்ரியின் கற்பை அழிக்க முயன்ற இக்கொடியகீசகன், — த்ரௌபதிக்கு வழியில் முள்ளாக நின்ற இக்கொடியவன் — இவனைக்கொன்றேன். என் தமையனுக்காகச் செய்ய வேண்டிய கடனைச் செய்துவிட்டேன்" என்று உரத்

டான். வாலி ஸுக்ரீவர்கள் முன் சண்டை செய்தது போல் இப்பொழுது இரண்டு யானை ஒன்றன் முன் ஒன்றுவந்து போரிட்டால் போல சண்டை செய்தார்கள். ஐந்துதலை நாகம்போன்ற தமது கைகளால் ஒருவரை யொருவர் தாக்கினார்கள். கோபமிகுதியால் ஒருவரை யொருவர் அடித்தனர். பற்களையும் கடித்தனர். ஜயத்திற்காக இரண்டுபேரும் உழைத்தார்கள். அடிமேல் அடிவைத்து இருவரும் புடைத்துக் கொண்டார்கள். ஒருவரையொருவர் மோதி இடம்வலமாகச் சுற்றி நடுவில் நின்று ஒருவரடியை மற்றவன் விலக்கியும், மாறொமோரும் தோளொடு தோளும் படும்படிக் குத்தி சண்டையிட்டார்கள். பின் வட்டமாகி ஓடுவர். கையைச் சுழற்றி அடிப்பர். கீசகன் மிகு கோபத்தோடு மல்ல

துக் கூவிக்கொண்டு போய் த்ரௌபதிக்குக் கீசக னுடைய நிலையைக்காட்டி ஸந்தோஷப்படுத்தினன்.

உடனே எல்லாரிடமும் 'எனது கணவர் ஆகிய கந்தர்வர் கீசகனை அழித்தார்' என்று மஹாஸந்தோஷத் தோடு ஸைரந்த்ரி "பிறாது மனைவியை விரும்பிய கீசகனுடைய கதி யிது. வாரும். வந்துபாரும்." என்று கூறினள். இதைக் கேட்டதும் சபையிலிருந்த யாவரும் பதினயிரம் தீவத்தியுடன் வந்து பார்த்து நடுங்கினர். ரக்த வெள்ளத்தில் மாம்ஸபிண்டமாக விழுந்திருந்த கீசகனுடைய உடல் அச்சுவேறு ஆணி வேருக விழுந்திருப்பதைக்கண்டு எல்லாரும் கண்டு நடு நடுங்கி பயந்து இது கந்தர்வர்களே செய்திருப்பர் என்று நிச்சயம் செய்துகொண்டு விளங்கினர்.

## முடிவடைந்த காதை

கீசகனழிந்ததும் உபகீசகர் எதிர்க்க அவர்களையும் பீமன் கொன்றுன். இதற்குள் பாண்டவர் ஒளிந்து இருக்கவேண்டிய காலமும் கடந்தது. வெளி வந்து தமக்குச்சேரவேண்டிய நாட்டைக் கேட்டுச்சாந்தமாகப் போகவேண்டு மென்று தருமர் நிற்க த்ரௌபதி தான் தலைவிரித்திருப்பதைக் கண்டும் இவ்வாறு செய்த லாகுமா என்றுள். இதற்குள் பலதூது நடந்தும் "மயிர் முனைக்கும் மண்கொடேன்" என்று துர்யோதனன் தடுத்தான். போர் மூண்டது. இருதிறத்தாருக்கும் வே ண்டிய துணைவரோடு சேர்ந்து பலத்த யுத்தம் குரு க்ஷேத்ரத்தில் நடந்தது. பதினெட்டு நாள் சண்டை நடந்தது. கடைசியாக கௌரவர் வேரோடு நாசமானு ர்கள். துர்யோதனன் குற்றுயிராய்ச் சமந்த பஞ்சகம் என்னும் இடத்தில் விழுந்து கிடப்பதை அச்வத்தா மன் கண்டு "யான் பாண்டவர்களை இன்றிரவு கொ ன்று வருவேன்" என்று துர்யோதனனேடு சொல்லிப் பாண்டவரது பாசறை(படைவீடு)யை அடைந்தான். அங்கு ஓர் பூதம் காத்துக்கொண்டிருப்பதைக் கண்டு சிவனைக்குறித்துப் பூஜைசெய்து ஓர் கத்தி அவரிடமிரு ந்து பெற்று அதனல் யாவரையும் கொன்றுன். த்ரௌ பதியின் குழைந்தைகளாகிய உபபாண்டவர்களைப் பாண்டவர்களென்று எண்ணி அவரையுங்கொன்றுன். பின் அபாண்டவீய அஸ்த்ரத்தை ப்ரயோகித்து யாவரையுங் கொன்றுன்.

இவ்வளவும் நடந்தது. அப்பொழுது த்ரௌபதியும் அங்கு இல்லை. பாண்டவரும் அங்கு இல்லை. பக்கத்தி லிருந்த உபப்லாவ்ய வனத்தில் அன்றிரவு தங்க ஸ்ரீவாஸுதேவன் அவர்களை அழைத்துப் போயிருந் தனர். காலைவந்ததும் தருமர் தனது குழந்தைகள் யாவும் இறந்தனவென்று வ்யஸனமுற்று நகுலனைக் கூவி அப்பாழும் த்ரௌபதியை அழைத்துவா வென, அவனும் வனஞ்சென்று அவளை அழைத்து வந்தான். தர்மர் தலைமேல் அறைந்துகொண்டு உருண்டுபுரண்டு அழுதுக்கொண்டிருந்தார். அவர்முன் காற்றுல் அடி சாய்ந்த மரம்போல் வ்யஸன மிகுதியினல் பூமியில் விழுந்து த்ரௌபதி அழுதாள். புரண்டாள். கதறினள். மேஹம் மறைக்க ஒளி நீங்கின ஸூர்யன்போல் முகம் வாட புத்திமயங்கி கீழ்விழுந்து இருந்தாள். பீமன் ஓடி வந்து அவளை வாரி எடுத்தான். வ்யஸநத்தைத் தணித் துத் தேறுதல் கூற அழ ஆரம்பித்தாள். பின் வ்யஸன மிகுதியால் பாண்டவர்களைப் பார்த்து,

"அத்ருஷ்ட வசத்தால் பூமி முழுதும் உமதாக்கிக் கொண்டீர்கள். (க்ஷத்ரிய தர்மத்தில் உயிரைவிட்ட) உமதுவீரக்குழந்தைகளைப் பலிகொடுத்துவிட்டுஇம்முழு உலகையும் ஆளப்போகிறீர்கள்! ஹே தனஞ்ஜயா! ஸுபத்ரையின் குழந்தையை விட்டுவிட்டு, யமனுக் கிரை யாக்கிவிட்டு, ஏதோ அதிருஷ்டத்தால் பூமி கிடைத்ததென்று ஆளப்போகிறீர்! அப்படிபாவி அச்வத்தாமன், ராத்ரிவேளையில், தூங்கும் குழந் தைகளை, ஒருவரையும் தொந்தரை செய்யாதவர்களைக் கொலை செய்தான், என்று கேட்டதும் என்மனம் அலை கின்றது. என்வயிறு எரிகிறது. வயிற்றில் கலநெருப் பிட்டால்போல எரிகிறது. என்உடல் முழுதும் வேகின்றது. என்மனம் துடிக்கின்றது. அப்பாவி அச்வத்தாமனுக்குத் தக்கவாறு தண்டனை செய்யாது விட்டால் என் உயிர் இராது. என் குழந்தைகளை நாசஞ் செய்தான். நீங்களும் வலிமிகுந்தவர்கள்! உம தாண்மை எங்கே? நான் சொல்லியதைக் கூறுவிடில் ப்ராயத்தில் உட்காருவேன். அச்வத்தாமனைக்கொன்று அவன் தலையிலிருக்கும் மாணிக்கத்தைத் தர்மர் தலை யில் நான் வைத்தாலன்றி உயிரோடிரேன். ப்ராயத்தி லிருப்பேன்" என்றுள்.

பின் பீமஸேனனைப்பார்த்து அழுதாள். அவனும் தனஞ்ஜயனுமாகச் சென்று யுத்தம்செய்து அச்வத்தா மனது சிரோரத்நத்தைக் கொண்டுவந்து கொடுத்தார். அதைத் தர்மர் தலையில் அணிந்து பார்த்தாள். பின் தமது உறவினர்க்குச் செய்யவேண்டியகருமங்களைத்தர் மர் செய்துவிட்டுப் பட்டாபிஷேகம் செய்துகொண்டார். அச்வமேதமொன்றும் செய்து பெருமை அடைந்தார். பின் காந்தாரி முதலிய யாவரும் துறவுபூண்டு காட்டில் வஸித்துமுத்திபெற்றனர். பின்க்ருஷ்ணர் தூர்வாஸரது சாபத்தின் பலனுகக் காலமென்னும் அம்பின்வாய்ப் பட்டுத் தன்ஜோதியைத் தன் வைகுண்டத்தி லடையச் செய்தார். இதைக்கேட்டுப் பாண்டவரும் துறவெய்தி மஹாமேருவை வணங்கிக்கொண்டு உத்திரதிசையாக நாடி ஹிமயபர்வதமார்க்கமாகச் சென்றுர்கள். இவர்க ளோடு த்ரௌபதியும் உடன்வந்தாள். வழியில் வாய் வறண்டு நடைதளர்ந்து அசைவற்று த்ரௌபதி கீழ் விழுந்தாள். விழுந்ததும் ஒரு சுடர்ப்பிழம்பு கிளம்பி வானம் அடைந்து, சிலநாள் நரகத்திலிருந்து இந்த்ரன் விமானத்தில் தர்மர் வந்து தரிசனம் தா இந்திராணி யினிடம் உள்ளுற மருவினள்.—

என்பது முனி ச்ரேஷ்டரான ஸ்ரீவேதவ்யாஸ பகவான் இயற்றிய ஸ்ரீபாரத இதிஹாஸத்தில் இரு ந்து எடுத்து உரைக்கப்பட்ட த்ரௌபதிக்கதையின் ஸாரம்.

# விசேஷ வர்த்தமானங்கள்
## GENERAL NEWS

அசோகவனம்:—இது இலங்கைத்தீவில் நூரளை யென்ற இடத்தில் இப்போது மிருக்கிறதாம். அந்த வனம் இப்போது, இருண்ட சுனையான இடமாயும், கண்களுக்குக் குளிர்மையான காட்சியைக் கொடுக்கக் கூடிய ப்ரதேசமாயுமிருக்கிறது. வீதாப்ராட்டியார், மஞ்சள் அரைத்த கல், குளித்தஇடம், யானையின் பாதம்பட்ட இடம் இப்பொழுதும் காணலாம். இந்தச் சுனை கற்பாறையுள்ளேயிருந்து வெள்ளி, செவ்வாய்க் கிழமையன்று மஞ்சள் கரைத்த தண்ணீருடன் பூக்களும் அப்பாறைச் சுனையிலிருந்து வருகிறதாம். இதை அநேகர் பானமாகவும், தீர்த்தமாகவும் அருந்துகிறார்களாம்.

***

நமது புதிய நுபாய்:—நமது ஜ்யார்ஜ் அரசரின் உருவமைந்த ரூபாய் மாதிரி வடிவம் அனேகமாய் முடிவாகிவிட்டபடியால் சீக்ரம் அரசரின் அங்கீகாரம் பெற்றுவிடும். ராஜ சக்ரவர்த்தியின் உருவம் மகுடந் தாங்கியதாக முன்பக்கத்தில் காணப்படும். இந்தப் பாகம் ஆஸ்த்ரேலியா சிற்ப விற்பன்னராகும் மிஸ்டர் பெர்டிராம் மெக்கென்ஸெல் என்பவரால் அமைக்கப்பட்டது. பின் பக்கத்தில் ஒரு பூங்கொடியும் அதில் ஒரு ரோஜாப்பூ ஒரு திஸல் என்னும் முட்செடியின் பூ, ஒரு ஷாம்ரக் என்னும் பூ, ஒரு தாமரை பூ இந்நான்கும் இணைக்கப்பட்டு மத்தியில் ஆங்கிலத்தில் ஒரு ரூபாய், இந்தியா என்னும் எழுத்தும் இருக்கும். இப்பாகம் இந்தியாவில் மிஸ்டர் பெர்ஸி பிரவுண் தங்கசாலை அதிகாரிகளைக் கலந்து உருவகப்படுத்தியது.

***

மரத்தை அறுக்கும் நூதன வழி:—ஜர்மனி தேசத்திலிருக்கும் ப்ரதான நகராகிய பெர்லினில் பெரிய மரங்களை அறுக்க நூதனமான வழி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. மெலிதான ஸ்டீல் கம்பியை மரத்தைச்சுற்றி, அது மின்சார யந்திரத்தால் கடையப்படுவதால் உண்டாகும் உஷ்ணத்தால் மரம் அது படுமிடங்களில் எரிக்கப்படுகிறது. 20 அங்குலக் குறுக்களவுள்ள ஒரு மரம் இப்படி அறுக்கப்பட 6 நிமிஷங்கள்தான் பிடிக்கிறதாம்,

கல்கத்தாவுக்கு வெளியூர்களிலிருந்து வரும் நெய்.—கல்கத்தாவுக்கு ஒரு வருஷத்தில் 2,70,000 மணங்கு நெய் வெளியூர்களிலிருந்து கொண்டுவரப்பட்டுச் செலவாகிறது. இப்படி வரும் நெய்களில் 700 வகைகளை முனிசிபாலிடியார் சோதித்துப் பரிக்ஷை செய்து பார்த்ததில் அப்பட்டம் நெய் 175 தானிருந்ததென்றும், மற்றவை யெல்லாம் கொழுப்பும் எண்ணெயும் கலந்திருந்ததென்றும் 'இந்தியன் டெயிலி நியூஸ்' பத்திரிகை எழுதுகிறது.

***

மைசூர் பொருட் காட்சி.—மைசூர் சமஸ்தானத்திலே வருஷந்தோறும் பொருட்காட்சிகள் நடந்துவருகின்றனவே. இந்த வருஷத்துக் காட்சி அடுத்த செப்டம்பர் மாதம் 25-ந் தேதி முதல் நடக்கப்போகிறது. அந்தப் பொருட்காட்சிக் கமிட்டியில் ஏற்கெனவே 34 உத்தியோகஸ்தர்கள் மெம்பர்களாக இருக்கிறார்கள். அந்த 34 மெம்பர்களையும் தவிர ஸ்திரீ மெம்பர்கள் 6-பேர் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களில் இருவர் இந்திய ஸ்திரீகள்.

***

திருநெல்வேலி ஹிந்து காலேஜ்.—திருநெல்வேலி ஹிந்து காலேஜின் தங்க ஜுபிலி அடுத்த ஆகஸ்ட் மாதத்தில் நடக்கப்போவதாய்த் தெரிகிறது. அந்த காலேஜில் வாசித்துவிட்டு இப்போது வெளியூர்களில் உத்யோகமா யிருக்கும் பழைய மாணவர்கள் எல்லோரும் அந்த ஜுபிலி கொண்டாட்டத்துக்கு அழைக்கப்படுவார்கள்.

***

சரித்ர பூர்வமான ஒரு மோதிரம் விற்கப்பட்டது.- சென்ற மாதத்தில் சரித்திர பூர்வமான ஒரு மோதிரம் 3250 பவுனுக்கு விற்கப்பட்டது. முன் காலத்தில் எலிஜபத் மகாராணியிடம் இந்த மோதிரத்தைக் கொண்டுபோய்க் காட்டும்படி ஏற்பாடு செய்திருந்தார்களாம். ஆனால், மோதிரம் மகாராணியிடம் போய்ச்சேரவில்லை. அதுமட்டும் மகாராணியிடம் காட்டப்பட்டிருக்கும் பட்சத்தில், லார்டு எஸக்ஸ் மரண தண்டனையிலிருந்து தப்பித்திருப்பாராம். லார்டு மிச்செல்ஹாம் என்பவர் இதை வாங்கினதாகத் தெரிகிறது.

இந்தியாவிலுள்ள பிரஞ்சு நாடுகளுக்குப் புதிய கவர்னர்.— இந்தியாவிலுள்ள பிரஞ்சுநாடுகளுக்குக் கவர்னராக மிஸ்டர் டப்ரட் என்பவரை நியமித்திருக்கிறார்கள்.

*
* *

ஸ்ரீ சங்கராசாரியரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சம்ஸ்கிருதப் பாடசாலை.—ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்களால் பங்களூரில் ஒரு சம்ஸ்கிருத பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டு, அதைச் சென்றமாதம் அவருடைய ஏஜண்டும் மைசூர் பழைய திவான்களும் மற்றப்பெரிய மனுஷர்களும் வந்திருந்து, ஆரம்பித்தார்களென்றறிய சந்தோஷப்படுகிறோம். இந்தப் பாடசாலை நமது பூர்வீக வேதங்களையும் சாஸ்திரங்களையும் தற்காலத்து ஹிந்துக்கள் மறவாமல் அவைகளைக் கற்று நிலை நிறுத்தும் நோக்கத்துடன் ஸ்தாபிக்கப்பட்டது. அந்தச் சமயத்தில் ஸ்ரீ ஜகத்குருவுக்காகப் பேசின பிரம்மஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள், ஹிந்துக்கள் அனாதி காலந்தொட்டு வைதிக லௌகிக சாஸ்திரங்களில் பேர்போனவர்களென்றும், நம் பூர்வீகருடைய நல்ல பேரை இக்காலத்து ஹிந்துக்கள் காக்கவேண்டுமென்றும், அதற்காக ஹிந்துக்களெல்லோரும் ஒரே மனதாய் இப்படிப்பட்ட பாடசாலைகளை ஆதரித்து, உழைக்க வேண்டுமென்றும் சொன்னார்.

*
* *

கல்விக்காக நன்கொடைகள்.—சமீபத்தில் லண்டனில் கூடின பிரிட்டிஷ் ஸயன்ஸ் கில்ட் என்றசங்கத்தின் கூட்டமொன்றில் ப்ரொபெஸர் R. A. க்ரிகோரி மேல்தேசங்கள் சிலவற்றில் கல்விக்காகக் கொடுத்த நன்கொடைகளைச் சொன்னார். இங்கிலாந்தில் கல்வியாராய்ச்சிக்காகக் கொடுக்கப்பட்ட நன்கொடை 1910-ம் வருஷத்தில் 70,000 பவுன். இதைத் தவிர மிஸ்டர் ஆட்டோபேட்ஸ் என்பவர் வைத்திய ஆராய்ச்சியின் பொருட்டு ஸ்காலர்ஷிப்புகளுக்காகக் கொடுத்த தொகை 215,000 பவுன். அமெரிக்காவிலுள்ள யுனைடெட் ஸ்டேட்ஸில் ஆராய்ச்சிக்காகக் கொடுக்கப்பட்ட நன்கொடைகள் 10-லக்ஷம் பவுனாயின. கார்னெகி இன்ஸ்டிடியூஷன் என்கிற ஸ்தாபனத்தால் மட்டும் அந்தப் பேர்போன தர்மப் பிரபுவால் ஆராய்ச்சிக்காகக் கொடுக்கப்பட்ட தொகை 90,000 பவுன். அதாவது, இதுமட்டும் இங்கிலாந்தில்கொடுக்கப்பட்ட நன்கொடைகளின் மொத்தத்துக்கு 20 ஆயிரம் பவுன் அதிகமாகின்றது. பிரான்ஸ் தேசத்தில் சாஸ்திரக்கல்வியை முற்படுத்துவதற்காக ஒரே தர்மப்பிரபு 284,000 பவுன் கொடுத்தார். ஜர்மெனியில் சாஸ்திர ஆராய்ச்சி அபிவிர்த்தியாவதன்பொருட்டுப் புதிதாய் ஸ்தாபிக்கப்பட்ட ஒரு சங்கத்துக்கு 5 லக்ஷம் பவுன் கையொப்பங்களாகக் கொடுக்கப்பட்டது. இங்கிலாந்தில் கல்வியின்பொருட்டு கட்டிடங்களுக்கும் கல்வியின் உபகரணங்களுக்கும் கொடுக்கப்பட்ட நன்கொடைகள் 250,000 பவுன். இதே நோக்கத்துக்காக யுனைடெட் ஸ்டேட்ஸில் 60 லக்ஷம் பவுன் கொடுக்கப்பட்டது. ஜர்மெனியில் ஏற்கனவே பத்து தொழில் சாஸ்த்ரச்சாலைகள் இருக்க, அதில் ஒரு பாகமாகிய பிரஷியாவில் பதினோராவது தொழில் சாஸ்திரச் சாலை ஸ்தாபிக்கப்பட்டது. அங்குள்ள மற்ற யூனிவர்சிடிகளின் சொத்துக்களுக்கு மேல், சென்ற ஐந்து வருஷத்துக்குள்ளாக, லக்ஷம் பவுன் அதிகமாகக் கொடுக்கப்பட்டது. இவ்வாறு மேற்றேசங்களில் உயர்தரக் கல்வி விஷயத்தில் உத்ஸாகம் காட்டப்பட்டதை நாம் கவனிக்கவேண்டும்.

*
* *

ஒரு யானையின் அறிவுடைமை:—இரங்கோனைச் சார்ந்த மித்திராவென்னு மூரில் ஒரு மாவுத்தன் தன் யானையைக் குளிப்பாட்டியிருக்கையில் புலியொன்று திடீரென்று வந்து அவனைப் பிடித்துக்கொண்டது; அம்மாவுத்தன் அப்புலியின் நெற்றியில் தன்னங்குசத்தால் பலமாகக் குத்தினான். அவ்வாறு செய்தும், அஃதவனைவிடாது பலமாகப் பிடித்துக்கொண்டது. யானை தன் யஜமானனுக்கு நேர்ந்த விபத்தை யறிந்து தன் காலால் அப்புலியைப் பலமாக வுதைக்க, அஃது அதைப் பொறுக்கமுடியாது அவனைவிட்டுக் காட்டிற்குள் ஓடிப்போயிற்று. அவன் ஆஸ்பத்ரியில் சிகிச்சையிலிருக்கிறானம்.

*
* *

தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியரது தொகை:—இப்போது தென்னாப்பிரிக்காவிலிருக்கும் இந்தியர் தொகை 8600. போயர் யுத்தத்திற்கு முன்னிருந்த இந்தியர் தொகை 15000. இதில் 7000 பேர் குறைந்ததற்குக் காரணம் அத்தேசத்து முதலாளிகள் செய்த பெருந்தொந்தரவேயாம். இவர்கள் டீ தொந்தரவினின்றும் நீங்கப் பாடுபட்டுவருபவர் மிஸ்டர் காந்தி யென்பது ப்ரஸித்தமான விஷயம்; இது விஷயமாக இவர் மும்முறையும், இவரது புத்ரர் எண்முறையும் ஜெயிலுக்குப் போனார்கள்.

## நமது பத்திரிகைக்கு விஷயதானம் செய்யும் கனவான்களில் சிலர் :—

ம-ா-ா-ஸ்ரீ மஹா மஹோபாத்யாயர் பண்டித-ஸ்ரீ வே. சாமிநாதய்யரவர்கள்.
" மஹா மஹோபாத்யாயர் பண்டித-ஸ்ரீ சந்திரசேகர சாஸ்திரிகளவர்கள்.
" கனம் ஆர். ரகுநாதராவ் அவர்கள், திவான் பஹதூர், ஸி.எஸ்., ஐ.
" பண்டித-ச. ம. நடேச சாஸ்திரியாரவர்கள்.
" டி. செல்வகேசவராய முதலியார் அவர்கள், எம்.ஏ.
" த. கனகஸுந்தரம் பிள்ளை அவர்கள், பி.ஏ.
" டி. ஏ. கோபிநாத ராவ் அவர்கள், எம்.ஏ.
" வ. சு. செங்கல்வராயப் பிள்ளை அவர்கள், எம்.ஏ.
" பி. வி. ஸ்வாமி ராவ் அவர்கள், எம்.ஏ.
" எஸ். குப்புஸாமி சாஸ்திரிகள் அவர்கள், எம்.ஏ.
" டி. எஸ். சுப்பிரமணிய அய்யரவர்கள், எம்.ஏ., எல்.டி.
" ஏ. பஞ்சாபகேசய்யர் அவர்கள், எம்.ஏ., எல்.டி.
" வி. அப்பாஸாமி அய்யர் அவர்கள், எம்.ஏ.
" மஹேச குமார சர்மா அவர்கள்
" ஏ. எஸ். கஸ்தூரிரங்கய்யர் அவர்கள். பி.ஏ., எல்.டி.
" வ. சேஷகிரி சாஸ்திரியார் அவர்கள்,
" வி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், பி.ஏ.
" ஜே.ஆர். ரங்கராஜு அவர்கள்,
" ஏ. மாதவய்யா அவர்கள், பி.ஏ.
" எஸ். சிதம்பர அய்யர் அவர்கள்,
" கே. நாராயண அய்யர் அவர்கள், பி.ஏ., எம்.பி., ஸி.எம்.
" பண்டித-ஸ்ரீ கோபாலகிருஷ்ண அய்யர் அவர்கள்,
" ஐ. வே. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், பி.ஏ.
" ஸி. ராமஸ்வாமி அய்யங்கார் அவர்கள், பி.ஏ.
" வி. ஜி. சுப்பய்யர் அவர்கள், பி.ஏ., எல்.டி.
" ஜீ. சுந்தரேச அய்யரவர்கள். பி.ஏ., எல்.டி.
" ஜீ. தாதாசாரியாரவர்கள், பி.ஏ.
" ப. சம்பந்த முதலியாரவர்கள், பி.ஏ., பி.எல்.
" ஆர். நரஸிம்மய்யங்கார் அவர்கள், பி.ஏ., எம்.எல்.
" ப. கிருஷ்ணஸாமி சாஸ்திரி அவர்கள், பி.ஏ., பி.எல்.
" டி. எஸ். நாராயண சாஸ்திரியாரவர்கள், பி.ஏ., பி.எல்.
" எஸ். ஈ. சங்கர அய்யர் அவர்கள், பி.ஏ., பி.எல்.
" என். ஆர். கே. தாதாசாரியார் அவர்கள், பி.ஏ., பி.எல்.
" ஸி. சுந்தரம் அய்யர் அவர்கள், பி.ஏ.
" ஸி. எஸ். சுந்தரம் அய்யர் அவர்கள், பி.ஏ., எல்.டி.
" த. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் பி.ஏ.
" ஸி. பி. வெங்கிடராமரய்யவர்கள் பி.ஏ.

ம-ா-ா-ஸ்ரீ என். வானமாமலைப்பிள்ளை அவர்கள்,
,, எஸ். ராமஸாமிபிள்ளை அவர்கள், பி.ஏ.
,, பி. என். சீனிவாஸாசாரியார் அவர்கள், பி.ஏ.
,, ஆர். பி. குளந்தஸாமிப்பிள்ளை அவர்கள் பி.ஏ., எல்.டி.
,, எஸ். நீலகண்ட அய்யர் அவர்கள்,
,, டி. எஸ். வெங்கிடரமணஅய்யர் அவர்கள்,
,, எம். வி. மீனாக்ஷிசுந்தர முதலியார் அவர்கள், பி.ஏ.
,, ல. அனந்தஅய்யர் அவர்கள்,
,, பு. து. ரத்தினம்பிள்ளை அவர்கள்,
,, எஸ். டி. மூர்த்தி முதலியார் அவர்கள்

குறிப்பு:—இன்னும் அனேகம் நிபுணர்களும், ஸ்திரீகளும் நமது பத்திரிகைக்கு வியாஸங்கள் எழுதுகிறார்கள். அவர்கள் கேட்டுக்கொண்டபடி, அவர்கள் பெயர்கள் இவ்விடம் அச்சிடப்படவில்லை.

# நமது பத்திரிகைப்பற்றிச் சிலமுக்கிய அபிப்பிராயங்கள்
# Press & Public Opinions

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ மஹாமஹோபாத்யாய வே. சாமிநாதய்யரவர்கள்:—* * மதஸம்பந்தமான விஷயங்களும், நீதிகளை கற்பிக்கும் சிறுகதைகளும் புதிய நாடகங்களும் சில மொழிபெயர்ப்புகளும், தற்காலத்திற்கேற்ற நாகரீக விஷயங்களும் இப்பத்திரிகையில் மிக எளிய நடையில் எழுதப் பெற்றிருக்கின்றன; சிறுவர்களும் பெண்பாலரும் இதனால் பல விஷயங்களையும் வருத்தமின்றித் தெரிந்துகொள்ளலாம்.

தமிழ் பாஷாபிமானிகளாகிய பிரபுக்கள் இதனை ஆதரித்து இதைப்பிரசுரஞ் செய்துவரும் ஜனரல் ஸப்ளேஸ் கம்பெனியாருக்கு ஊக்கம் அளிப்பார்களென்று நம்புகிறேன்.

**M. R. Ry Dewan Bahadur R. Ragoonatha Row Avergal, C. S. I., writes :—**

* * * It is written in good easy Tamil and deals with subjects of importance and usefulness to the general public. Its annual subscription is Rs. 3 so that even the poor can have valuable and useful reading in good Tamil for a small sum. One of the Tamil Pundits to whom some issues were submitted for opinion has been pleased to write to me thus :—

"விவேகபோதினியில் அநேகமாக முழுதும் பார்த்தேன்

1. உபயோகமான அநேகவிஷயங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

2. வியவசாய விஷயம் (its history) வியவசாயிகளுக்கு நல்லறிவை உண்டுபண்ணக்கூடியது.

3. சிலபெரியோர்களுடையசரித்திரங்கள் வெகு நன்றாயிருக்கின்றன. எல்லாம் நம் இந்த தேசத்து பெரியவர்கள் சரித்திரங்களாக இருப்பது கவனிக்கத்தக்கது.

4. பெண்களுக்காக எழுதப்பட்டிருக்கின்ற விஷயங்கள் மிகவும் உபயோகமானவை. நம் தேசத்துப் பெண்களெல்லோரும் அவசியம் இவைகளைப் படிக்க வேண்டும்.

5. யாப்பிலக்கணம் (Tamil prosody) ஆராய்ச்சியுடன் எழுதப்பட்டிருக்கிறது.

6. (a) இயற்கையற்புதம்(Wonders in Nature)
(b) சுகாதார விளக்கம் (Hygiene.)

இவைபோன்ற இன்னும் சிலவிஷயங்கள் இங்கிலீஷ்ப்பழக்கம் இல்லாதவர்களுக்கு நல்ல ஞானத்தை உண்டுபண்ணத்தக்கவை."

இந்தியா.—ஆவலாக வருமென்று காத்திருந்த "விவேக போதினி" யென்னும் பத்திரிகையை இன்று வரப்பெற்றோம். தமிழிற்கு முதல் கடவுளாகிய சுப்பிரமணியக்கடவுளை கண்ணைக் கவரும்படி கிளேஸ் காகிதத்தின்மேல் பதித்து போதினிக்கு

அநுபந்தமாக அனுப்பியிருக்கிறார்கள். போதினியின் தலைப்பே விவேகமூட்டுவதா யிருக்கிறது. ஞானோதயமாகுங் குறியாக ஸூரியோதயத்தைக் காட்டிமேல் ஸரஸ்வதியையும் காட்டி யிருக்கிறார்கள். ஞானம் அடைந்து பொலியவேண்டியதே இதன் நோக்கம். போதினியின் ஒவ்வொருபக்கமும் மனத்தை மேன்மைப்படுத்த நிச்சயமாக பிரயாஸப்பட்டு எழுதப்பட்டிருக்கிறது. மதம், கல்வி, வியவஸாயம், சுகாதாரம் முதலிய பக்கங்கள் சொல்லமுடியா வகையோடு எழுதப்பட்டிருக்கிறது. சாதாரணமான ஜனங்களுக்காக நாவல், கதை, நாடகங்களும் மனதைக்கவரும்படி எழுதப்பட்டிருக்கின்றன. சிறுவர்களுக்கும் பெண்களுக்கும் வேண்டிய பக்கங்களை இப்போதினி ஒன்றுதான் சரியாக பிரசுரம் செய்கின்றது. இப்போதினியை நிலைநிறுத்த தமிழ்நாட்டார் எல்லோரும் உற்சாகங்கொண்டு உழைப்பார்களென்று நாம் விரும்புகிறோம்.

உதயதாரகை.—* * 'விவேகபோதினி' என்னும் பெயர் புனைந்து நவமாய் உற்பவனம் பெற்ற ஓர் உயர்தர தமிழ்ப் பத்திரிகையின் முதலாம், இரண்டாம் சஞ்சிகைகள் வரப்பெற்றோம். இப்பத்திரிகை இது காலம் தமிழ் நாட்டிலே உற்பத்தியான பத்திரிகைகள் யாவுக்கும் சிரேஷ்டமெனத்தக்கதாய் வித்யா விஷயம், கைத்தொழில், சாஸ்திர சம்பந்தமான விஷயங்கள் கல்வியிலும் மதியூகத்திலும் சிறந்த பெரியோரது சரிதம், இதிஹாஸபுராணாதிகளின் ஸாராம்சங்கள், தமிழ் இலக்கண இலக்கிய விஷயங்கள், நீதியும் அறிவும் புகட்டும் நன்னெறிக்கதைகள், ஆசார சீர்திருத்த ஸம்பந்தமான விஷயங்கள், சுகாதார விளக்கம் ஆதியவற்றைத் தாங்கி வெளிவந்திருக்கிறது. பெண் பாலர்க்கும் சிறுவர்க்குபயோகமான சிறந்த போதனு விஷயங்களும் பிரத்தியேகமான வகுப்புகளாய் இதில் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு விஷயமும் அறிவையும் விவேகத்தையும் வளர்ப்பதுஞ் சன்மார்க்கபோதனமமைந்ததும் விசேஷமான கிளர்ச்சியையும் இனிமையையும் பயப்பதுமா யிருக்கின்றது * *

லோகோபகாரி.—* * இதில் ஸ்திரீ புருஷ, பாலக, பாலகிகளுக்கு மிகவும் யுகதமான விஷயங்கள் எழுதப்படுகின்றன. தமிழ்நாட்டு ஜனங்களுக்கு மிகவும் பிரயோசனத்தை விளைவிக்கும் என்பதிற் சந்தேகமில்லை. வியவஸாயம், வித்யாபிவிருத்தி, ஸ்திரீகளின் பாதிவிரத்யம், அனேக கதைகள், தேச விதேசிய விஷயங்கள் வெகு நன்றாய் வெளிவந்திருக்கின்றன. ஜூலை, ஆகஸ்டு மாத சஞ்சிகைகள் வெகு நேர்த்தியாய் அச்சிடப்பட்டுள்ளன. தேசாபிமானிகளும், பாஷாபிமானிகளும், கனதனவான்களும், விவேகபோதினியை வாங்கி ஆதரிக்கவேண்டுமென்பதே எமது கோரிக்கை. * *

தக்ஷிணதீபம், சேலம்.—* * இதற்குச் சிறந்த கல்விமான்கள் வியாஸங்களும் நிரூபங்களும் எழுதி வருகின்றனர். முதல் பகுதியைப்போலவே இரண்டாம் பகுதியில் அநேக சிறந்த வியாஸங்கள் அடங்கியிருக்கின்றன. * * *

ம-ா-ா-ஸ்ரீ பண்டித T. S. ராகவாச்சாரியார் பின் வருமாறு எழுதுகிறார்:—

"விவேகபோதினி" முழுதும் படித்தேன். அதில் வரையப்பட்டிருக்கும் விஷயங்களெல்லாம் படிப்பவர்கட்குக் களிப்பை ஊட்டத்தக்கவைகளாகியும் சொற்சுவை பொருட்சுவை மலிந்தவைகளாகியு மிருக்கின்றன. வாசகநடையும் கடினமற்றதே. "விளையும் பயிர் முளையிற்றெரியும்" என்ற பழமொழிக்கிணங்க ஜனனகாலத்திலேயே நன்கு விளங்காநின்ற "விவேக போதினி" நாளாவர்த்தியிற் பல்லோராலும் நன்குகொண்டாடப்பட்டு தீர்க்காயுசுற்று வாழுமென நம்புகிறேன்.

'திராவிடாபிமானி' * * இதில் கல்வி, வியவஸாயம், கைத்தொழில், மத ஸம்பந்தமான விஷயங்கள், மற்றும் பல சமாசாரங்களும் அடங்கியிருப்பதோடு ஸ்திரீகளுக்கான பக்கங்களும், சிறுவர்களுக்கான பக்கங்களும் நன்றாய் எழுதப்பட்டிருக்கின்றன. * * தன் பேருக்கேற்ப இப்பத்திரிகை அறிவை பரவச்செய்யும் என்பதற்கு ஐயமில்லை.

"சுதேசமித்திரன்"—"பார்த்தமட்டில் அப்பத்திரிகை அதற்கிடப்பட்டிருக்கும் பேருக்கேற்ப அறிவைப் பரவச்செய்யும் சாதனங்களுள் ஒன்றாகுமென்று நாம் சொல்லக்கூடும். அடங்கியுள்ள விஷயங்களில் அப்பத்திரிகை வாங்கிப்படிக்கும் எல்லாருக்கும் அதனிடத்தில் சுவையுண்டாகக் கூடியனவாயிருக்குமென்றும் நாம் எதிர்பார்க்கிறோம். ஸ்திரீகளுக்கான பக்கங்களும், சிறுவர்களுக்கான பக்கங்களும் நன்றாய் எழுதப்பட்டிருப்பனவாக காண்கின்றன."

"ஆபிசர்கன் வர்த்தமானி".—இங்கிலீஷ் பத்திரிகைகளைப்போலொத்த வெகு இனியநடையில் பற்பல

விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. விவசாயம், கைத்தொழில், காவியம், சாஸ்திரம், மதம், தேசச்செல்வர்களின் சரித்திரம், நல்லொழுக்கம், சுகாதாரம் முதலியவைகளைப்பற்றியும் தக்க பண்டிதர்களால் எழுதப்பட்டிருக்கின்றன. மேலும், சிறுவர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் அறிவைக்கொடுக்கக்கூடிய முக்கியஅம்சங்களுமிருக்கிறது. ஆங்கிலேய பாஷையில் கணிக்கப்பட்ட முக்கியமான காவியங்களையும் மொழிபெயர்த்து அச்சிட்டு வருகிறார்கள். இப்பேர்ப்பட்ட அருமையான மாதாந்தர பத்திரிகையை நமது தமிழபிமானிகள் ஆதரிப்பது ஒவ்வொருவரின் கடமையாகும்.

"இந்து நேசன்"—விவேகபோதினி.—"பார்க்கும்போது எத்தகையோனுக்கும் இது விவேகத்தை விளக்கி நற்போதத்தை நாடும் இனிய செந்தமிழ் பத்திரிகையாகு மென்று புலப்படாமலிராது. தமிழர்கள் இத்தகைய பத்திரிகையை ஆதரித்தால் பலனடையாமற் போகாரென்பது திண்ணம்."

"கலாநிதி":—* * * நல்ல தமிழில் எழுதப்பெற்று அழகாக பதிப்பிக்கப் பெற்றிருக்கின்றது. இப்போது தென்னிந்தியாவில் பதிப்பிக்கப்பெறும் பல தமிழ் மாதாந்திரப் பத்திரிகைகளில் இதுவே சிறந்ததென்று சொல்லுவோம்.

**"African Chronicle"** :—* * * Judging from its contents it contains information on various topics commencing from the highest to the lowest. In fact, it is replete with information on social and agricultural subjects, hygiene, religion, drama and a score of other things bring out to light the hidden treasures of India, are endeavouring to translate into vernacular the English classics. And pages are set apart for stimulating knowledge among women and children. We note with pleasure that the contents are full of interesting and absorbing topics, and the style, like English Journals, is simple and majestic. Unlike some of the Vernacular Journals that are disfigured by sheer verbiage of Pundit's ebullition it is refreshing to observe that the Viveka Bodhini, as its name indicates, instructs the Tamil speaking people in a manner befitting a simple people. On the whole we congratulate the publishers for the up-to-date Tamil Journal they have given to their readers and we wish them every success.

**K. S. Gopalaratanam Aiyar, Esq., B.A., B.L. District Munsiff, Sivaganga**, writes * * * "The articles are interesting and written in an attractive style —I wish you every success."

**M. V. Minakshisundra Mudaliar Esq., B.A., Coimbatore** writes:—It is full of interesting and readable matter and the style is chaste—I am sure it really supplies a long-felt want. * *

**The "Madras Mail".**—

This interesting Tamil Monthly contains as usual a number of useful and well-written articles on Nature, Education, Literature, Agriculture and Hygiene and judging from the standard which the publishers have set before themselves, this little monthly is likely to prove more and more popular and useful. The special pages for children and for the enlightenment of Indian women continue to be interesting. The Journal deserves more encouragement and will be found useful for boys' and girls' schools.

**T. S. Subramania Aiyar, Esq., M. A., L. T., of the Presidency College, writes :—**

I am glad to testify to its usefulness to those for whom it is intended. The commendable features of the journal are the *modesty of its aim, the simplicity of its diction and the variety of its topics.* Its articles on religion, aspects of nature and practical life should be especially appealing to young minds and the Magazine has much to present to the general readers also. It will be appreciated more and more by the public.

**Pundit Mr. Thandalam Balasundra Mudaliar, says :—**

The several articles appearing therein are really interesting as well as instructive, and must be highly useful to those for whom they are intended. * *The articles on Hygiene no doubt supply a sad want keenly felt by us in our domestic circles. * * Also the "Ladies' Pages" are indeed edifying in that they set forth most remarkable ideals of chastity and constancy of love, so necessary for conjugal bliss. * It is gratifying to note that some of the articles are so artistically written that to the popular reader new things are made familiar and familiar things are made new, which ought to be the engaging power of every effective writer.

**His Holiness Swami Ramakrishnananda writes :—**

There are many good and intelligent ladies who for lack of their knowledge in English, are deprived of the benefit which the western savants and scholars have brought to the very doors of our homes ; and your Magazine by rendering their thoughts into Tamil has become a source of great benefit to all the Tamil knowing population. Thus its usefulness is immense. May God vouchsafe His blessings upon it, so that for many years to come it may prove itself a great boon to them for whom it has seen the light.

**The United India and Native States** :—We feel it a pleasure to recommend it to our Tamil readers. The Editor has managed to get a numbar of able contributors, who, learned though they are, do not despise

to write in a style easily understood. The articles will satisfy men and women of various tastes.

**The "Hindu."**-The current number of this very useful and interesting Magazine is now before us and it gives us great pleasure to congratulate the publishers, the General Supplies Co., Mylapore, Madras, on the uniform standard of excellence they have been able to maintain and the wide variety and range of useful subjects dealt with in the several articles published. This month's list of articles is no less attractive than the former ones and the following contributions may be mentioned among others.—* * *

**The Hon'ble Mr. P. S. Sivaswami Aiyar** B.A., B.L., C. I. E., says:—

* * * * The articles are written in an easy, readable style and deal with a variety of interesting subjects. Its usefulness and cheapness, will I hope commend it to the Tamil public and secure popularity.

**M. R. Ry. Dewan Bahadur V. Raghavacharlu, Avergal** B. A.,—

I have looked through some of the issues of the monthly Journal *Viveka Bodhini* published from July 1908. As the subjects dealt with are interesting and useful, the articles are written in good style and a few pages are specially devoted for the instruction of children and ladies, I hope this journal will increase in its popularity and meet with the encouragement it deserves from the public. I am glad the journal does not dabble with politics.

**The "South Indian Mail."**—It is an excellent Tamil Monthly Journal. It is for the interest of the vast ulk of our people only conversant with Tamil. Its object is to educate our people along all lines, which aim it will eminently accomplish. Every article is written in easy, elegant style. The paper and print are excellent. The publishers of this valuable journal with a view to bring it within the easy reach of a vast majority have priced it at Rs 3 a year.

The special attraction of the journal is, its ladies' and children's pages replete with didactics and short stories.

**V. R. Sundararaja Aiyangar, Esq., F.T.S. Guntakal**:— * * find it very interesting and, well-suited for the day. As far as my sphere of knowledge goes, I am obliged to say that the Viveka Bodhini stands second to none of any of the Tamil Periodicals. * *

**S. Muthu Aiyar, Esq., B A., Masulipatam**:—" I feel much obliged to you for the specimen copy of your valuable, and *most instructive* Journal Viveka Bodhini."

---

# விவேகபோதினி

## புத்தகம் 1

1907 ஜூலை மீ முதல் 1909 ஜூன் மீ வரை

இப்புத்தகத்தில் சுமார் 400-பக்கங்கள் மிகவும் அருமையான விஷயங்கள் அடங்கியிருக்கின்றன.

இப்புத்தகத்தில் பற்பல விநோதக் கதைகளும், அநேக நூதன உபந்யாஸங்களும், சிறந்த வித்வான்களால் எழுதப்பட்டுள்ளன.

ஒவ்வொரு புத்தகத்திலும் அநேக சித்திரப்படங்கள் வெகு வமைப்புடன் அச்சிடப்பட்டிருக்கின்றன.

பள்ளிக்கூடங்களில் பரிசளிப்பதற்கு இவை இன்றியமையாதவை.

ஒவ்வொரு வீட்டிலும் பெண்டுகளும், பிள்ளைகளும், அவசியம் வாசிக்கவேண்டியவை.

ஒருவிதத்திலாவது இதற்கு நிகராக வேறொரு புஸ்தகத்தைச் சொல்லவொண்ணாது.

வாங்கி வாசித்துப்பார்த்த பின்புதான் இவைகளின் மகிமை தெரியவரும்.

ஒவ்வொரு புத்தகமும் மிகவும் நேர்த்தியாக காலிகோ பயிண்டுசெய்து கில்ட் அக்ஷரங்கள் போடப்பட்டிருக்கிறது.

புத்தகம் 1-க்கு விலை ரூ. 4 0 0
தபால்சார்ஜு பிரத்தியேகம்

சொல்ப பிரதிகள் தான் கையிலிருக்கின்றன. வேண்டியவர்கள் சீக்கிரத்தில் தெரிவித்துக்கொள்ள வேண்டும். * * * * *

## விவேகபோதினி உபதேசமாலை

### ராஜம் அய்யர் சரிதை

இப்புத்தகம் கமலாம்பாள் சரித்திரம் என்னும் அற்புதகதையின் நூலாசிரியராயும், பிரபுத்தபாரதம் என்ற மாதாந்த பத்திரிகை மிகுந்த சிறப்புடன் நடத்தி ஆங்கலம் உணரும் திறனுடையவர்களுக்கு நமது வேதாந்த உண்மைகளை எளியநடையில் ஸ்வலபமாகத் தெரிவித்தவரும் ஆகிய ஸ்ரீமான் பீ. ஆர். ராஜம் அய்யர் அவர்கள், பி. ஏ. என்பவரது சரித்திரத்தை அடக்கியுள்ளது. இதனுடன் இவர் செய்த நூல்களிலிருந்து எடுக்கப்பட்டு உள்ள உபதேச மொழிகளையும், இவர் முதலில் ஆங்கலத்தில் எழுதிய வேதாந்த வியாஸத்தையும் சேர்க்கப்பட்டுள்ளது. விலை அணா 8.

இப்பத்திரிகை சந்தாதார்க்குமாத்திரம் அணா 6